॥ श्रीः ॥

श्री पाञ्चरात्रे

# अहिर्बुध्न्यसंहिता

# அஹிர்புத்ந்யஸம்ஹிதை

(Edited by
Pandit V. Krishnamacharya,
Adyar Library, Chennai-20)

(தமிழாக்கம்)

ஆசிரியர் (Editor)


ந்யாய வேதாந்த வித்வான் ஆஶுகவி
ஸ்ரீமுஷ்ணம் ஸ்ரீ ஸ்ரீநிவாஸாசார்யர்



Publishers :

Sri R. வாஸுதேவன்

(ஸஹோதரர்கள்)

Sri R. தேவராஜன்

(தாநே, மஹாராஷ்ட்ரா)

2006

விலை ரூ. 200/-

யோகித்த புத்தகங்கள் :

A Learner's Sanskrit-Tamil-English Dictionary
(Samskrit Education Society, Chennai - 4)

Introduction to Lakshmi Tanthra
By Pandit V. Krishnamacharya
Published by Adyar Library
and Research Centre, Adyar.

ளக்கம் தந்து உதவியவர்கள் :—

**ஸ்ரீ.உ.வே. மஹாவித்வான்**
**P. M. சக்ரவர்த்யாசார்யர், சென்னை-4**

**வேதபாஷ்ய ரத்னம் ஸ்ரீ ஸுப்புக்ருஷ்ண ஸோமயாஜி,**
திருவான்மியூர்,
சென்னை-41

வித்வான் **அழகிய செய்யூர் ஸ்ரீநிவாஸாசார்யர்,**
சென்னை-4

## நன்றி

மும்பை, தானே (Thane), சரணாகதிபங்களாவில்
வஸிக்கும் ஸ்ரீ **R. வாஸுதேவன்,**
ஸ்ரீ **R. தேவராஜன்**
இவர்கள் இந்த மொழிபெயர்ப்புக்குத் தந்த உதவியும்,
ஊக்கமும் மறக்க இயலாது.
இவர்கள் மகிழ்ச்சியுடன் இருக்க எம்பெருமானைப்
ப்ரார்த்தித்து நன்றி கூறுகிறோம்.

இந்த மொழிபெயர்ப்பை ஆதியோடு அந்தமாகக்
கவனித்துப் பிழை திருத்தம் செய்த வித்வான்
ஸ்ரீ.உ.வே. **S.S. ரங்காசார்ய**ருக்கு மிக்க நன்றி.

உபயோகித்த புத்தகங்கள் :

1) A Learner's Sanskrit-Tamil-English Dictionary
(Samskrit Education Society, Chennai - 4)

2) Introduction to Lakshmi Tanthra
By Pandit V. Krishnamacharya
Published by Adyar Library
and Research Centre, Adyar.

விளக்கம் தந்து உதவியவர்கள் :—

1) ஸ்ரீ.உ.வே. மஹாவித்வான்
**P. M.** சக்ரவர்த்யாசார்யர், சென்னை-4

2) வேதபாஷ்ய ரத்னம் ஸ்ரீ ஸுப்புக்ருஷ்ண ஸோமயாஜி,
திருவான்மியூர்,
சென்னை-41

3) வித்வான் அழகிய செய்யூர் ஸ்ரீநிவாஸாசார்யர்,
சென்னை-4


நன்றி

மும்பை, தாநே (Thane), சரணாகதி பங்களாவில்
வஸிக்கும் ஸ்ரீ **R.** வாஸுதேவன்,
ஸ்ரீ **R. தேவராஜன்**
இவர்கள் இந்த மொழிபெயர்ப்புக்குத் தந்த உதவியும்,
ஊக்கமும் மறக்க இயலாது.
இவர்கள் மகிழ்ச்சியுடன் இருக்க எம்பெருமானைப்
ப்ரார்த்தித்து நன்றி கூறுகிறோம்.

இந்த மொழிபெயர்ப்பை ஆதியோடு அந்தமாகக்
கவனித்துப் பிழை திருத்தம் செய்த வித்வான்
ஸ்ரீ.உ.வே. **S.S.** ரங்காசார்யருக்கு மிக்க நன்றி.

''அஹிர்புத்ந்யஸிம்ஹிதை''
ஒரு கங்கா ப்ரவாஹம்
தெளிந்த புண்ய தீர்த்தம்
இதைத் தாஹமுள்ளவர் அள்ளிப் பருகுவர்.
தாஹமில்லாதவர் பார்த்துக்கொண்டே
சென்று விடுவர்''

முடியாது' என்று சொல்லி 'அந்த ஸுதர்ஶநத்தின் பெருமை விஷ்ணுவுக்குத்தான் சேரும். ஏனென்றால் ஸுதர்ஶநத்தையே தன் ஸங்கல்பத்தினால் ஸ்ருஷ்டி செய்தும், அதை இயக்கிக் கொண்டும் விஷ்ணு இருப்பதால், அந்த ஸுதர்ஶ நத்துக்குக் கூறும் பெருமை விஷ்ணுவையே சாரும்' என்று முடிக்கிறார்.

ஆக இந்த **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை** வைஷ்ணவ ஸித்தாந்தத்துக்கு ஒரு மறு பதிப்பு என்று சொன்னால் மிகையாகாது.

## முன்னுரை

அஸ்மத் குருப்யோ நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
அஹயே புத்ந்யாய நம:

அஹிர்புத்ந்யர் என்கிற பெயர் உதகஶாந்தி மந்த்ர பாடம், அமரகோஶம் போன்ற பல க்ரந்தங்களில் எனக்குக் காதில் பட்டிருந்தாலும், ஸ்வாமி நிகமாந்த மஹாதேஶிகன் அருளிச் செய்த **ஸ்ரீ ஸுதர்ஶநாஷ்டகம்** என்கிற ஸ்தோத்ரத்தில் **பஜதஹிர்புத்ந்ய லக்ஷித** என்கிற சொல்தான் மனதில் நன்றாகப் பதிந்தது. இதன் பொருள் அஹிர்புத்ந்யர் ஸ்ரீ ஸுதர்ஶநத்தை பக்தி செய்து ஸாக்ஷாத்கரித்தார்' என்பதாகும். அடுத்து மற்றொரு ஶ்லோகத்தில் **'ஹரபுரப்லோஷகாரண** என்று அதே அஷ்டகத்திலுள்ளது. அதன் பொருள் ஹரன் என்கிற அஹிர்புத்ந்யர் முப்புரங்களை நெற்றிக் கண்ணின் நெருப்பைக் கொண்டு எரித்தார் என்றால் அதற்கு ஸ்ரீ ஸுதர்ஶநமே காரணமாகும் என்பதாகும். இந்த விஷயங்களை அறிந்திருந்த நான் ஒரு ஸமயம் எனது பரம நண்பரும், ஸோமயாஜியுமான ஸ்ரீ ஸுப்புக்ருஷ்ண ஶ்ரௌதிகளிடம் அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை எங்கு கிடைக்கும் என்று கேட்டேன். அவரும் புதுச்சேரியில் ஸ்ரீR.S. சாரியிடம் உள்ளது என்று உடனே பதில் சொன்னார். **அவ்யாக்ஷேபோ மநுஷ்யாணாம் கார்யஸித்தேர்ஹி லக்ஷணம்** நாம் நினைத்த விஷயம் தாமதம் இன்றிக் கிடைக்குமானால் அது கார்யம்

நல்லபடி முடியும் என்பதற்கு அறிகுறி என்று காளிதாஸன் சொன்னான். உடனே புதுச்சேரிக்குச் சென்று அந்தப் புத்தகத்தை வாங்கி வரச் சொன்னேன். புத்தகமும் வந்து சேர்ந்தது. இப்பொழுது என்னுடன் சேர்ந்து மொழி பெயர்ப்பை எழுதுகின்ற ஸ்ரீ வாஸுதேவாசார்யரைக் கொண்டு அதை முழுமையாக படிக்கச் சொல்லிப் புத்தகத்தை அவருக்குத் திருப்பி அனுப்பினேன். மறுபடியும் ஏதோ காரணத்தினால் அதை வாசிக்கக் வேண்டுமென்று தோன்றிற்று. மீண்டும் வரவழைத்தேன். வாசித்தேன். திருப்பி அனுப்பினேன்.

இந்த நிலையில் நான் ஸ்வாமி தேசிகனின் ஸ்தோத்ரங்களுக்கு **பஞ்சாம்ருதம்** என்று ஒரு உரை எழுதிவந்த போது **ஷோடசாயுத ஸ்தோத்ரத்தைப்** பற்றி எழுதுகையில் **சூலி த்ருஷ்ட மநோர் வாச்ய: யேந சூலயதி த்விஷ:** என்று ஒரு வாக்யம் வந்தது. அப்பொழுது **சூலி** என்றால் சிவன், அவர் கண்டுபிடித்த மந்த்ரத்தின் பொருள் **பகவான்** என்பது புரிந்தது. ஆனால் சிவன் கண்டுபிடித்த மந்த்ரம் எது என்பது புரியாமல் ஒரு நிமிடம் கண்ணை மூடினேன். தலை சுற்றியது. ஆனால் உடனே **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யில் அவர் ஸ்ரீ ந்ருஸிம்ஹனைப் பற்றிய மந்த்ரம் சொல்லியிருப்பதை வாசிக்கக் கேட்டறிந்தது நினைவுக்கு வந்தது. உடனே மகிழ்ச்சியுடன் அங்கு விளக்கம் எழுதிவிட்டேன். படிப்படியாக இதன் பலன் வளர்ந்தது. ஸ்ரீ அஹோபில மடம் ஸ்ரீ ஸந்நிதி ப்ரக்ருதம் ஸ்ரீமத் அழகியசிங்கர் மேற்கு மாம்பலத்தில் எழுந்தருளியிருந்தபோது 5-6 வருடங்களுக்கு முன்பு நேரில் போய் ஸேவித்து அவரிடம் **ஸ்ரீ ந்ருஸிம்ஹ மந்த்ரம்** உபதேசம் பெற்றேன். அன்று முதல் இன்றுவரை அநுஷ்டாநம் ஆன பிறகு **ஸ்ரீ ந்ருஸிம்ஹ மந்த்ரத்தை** ஜபம் செய்து வருகிறேன்.

சென்ற மூன்று வருடங்களாக நான் மும்பையிலேயே தங்கியிருந்தபோது இந்த **அஹிர்புந்த்ந்ய ஸம்ஹிதை**யைத் தமிழில் மொழி பெயர்க்க வேண்டுமென்கிற ஆவல் தீவ்ரமாக ஏற்பட்டது. அங்கு ACC Cement நிறுவனத்தில் உயர் பதவியில்

இருக்கும் ஸ்ரீ R. வாஸுதேவனிடம் இவ்விஷயம் பற்றி விரிவாக எடுத்துரைத்தேன். அவரை எனக்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே தெரியும். ''நீங்கள் சொந்தமாகவோ, உங்கள் நிறுவனம் மூலமாகவோ ஏதாவது கொஞ்சம் த்ரவ்யம் கொடுத்து உதவினால் **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**க்குத் தமிழில் மொழி பெயர்ப்பு எழுதி முடிக்கலாம்'' என்றேன். அவரும் மிக்க மகிழ்ச்சியுடன் ஸம்மதித்தார்.

இந்த ஸமயத்தில் எனக்குச் சென்னையிலும் வெளியூர்களிலும் சில கார்யங்களுக்காக அவச்யமாக நேரில் செல்ல வேண்டியிருந்ததால் நான் என்னுடைய தர்மபத்நியுடன் சென்னைக்கே கட்டாயம் வரும்படி பகவான் அனுக்ரஹம் செய்தார். மேலே குறிப்பிட்ட ஸ்ரீ வாஸுதேவா சார்யருடைய உதவியைக் கொண்டு **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**க்குத் தமிழில் உரையை எழுதிக் கொண்டிருக்கிறேன். சுமார் நான்கு வருடங்களுக்கு முன்பு நான் சென்னையில் இருந்த போது வேறு யாராகிலும் மேற்படி ஸம்ஹிதைக்குத் தமிழில் உரை எழுதியிருக்கிறார்களா என்பதை அறியச் சென்னை பல்கலைக் கழகத்தில் பணிபுரியும் Dr. ஸ்ரீ பத்மநாபன் என்பவரிடம் இது பற்றிக் கேட்டேன். அவரும் இதுவரை யாரும் எழுத வில்லை என்று உறுதியாகச் சொன்னார். மேலும் இவ்விஷயத்தை உறுதி செய்து கொள்ள மேற்படி பல்கலைக்கழகத்திலேயே பணிபுரியும் Dr. ஸ்ரீ வேங்கட க்ருஷ்ணன் என்பவரிடமும் இது பற்றி கவனித்துச் சொல்லும்படிக் கேட்டேன். அவரும் தமிழில் யாரும் எழுதவில்லை எனும் பதிலையே சொன்னார்.

## அஹிர்புத்ந்யன் யார்?

இதுவரை **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யைப் பற்றியே பேசினேன். **அஹிர்புத்ந்யன்** என்பவர் யார் என்பதை வாசகர்களுக்கு விளக்க வேண்டியது அவசியமாகிறது. வேதங்களுக்கெல்லாம் ஸம்ஸ்க்ருதத்தில் பாஷ்யம் எழுதியவர் ஸாயநர் என்கிற ஒரு மஹான். அவர் பின்வருமாறு எழுதியுள்ளார் - **ந ஜாது ஹீயதே இதி அஹி:** (ஒரு

காலத்திலும் அழியாதவர்) **புத்நே மூலே பவ: புத்ந்ய:** (ஆதியில் ஏற்பட்டவர்) ஆக என்றும் அழியாத ஆதி புருஷர் என்பதே இதன் பொருள். இந்தச் சொல் ருத்ரனையே குறிக்கும். ஸம்ஸ்க்ருதத்தில் **நாமலிங்காநுஶாஸநம்** என்கிற ஓர் நிகண்டுவைப் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எழுதியவர் **அமரஸிம்ஹன்** என்கிற ஜைந மதத்தைச் சார்ந்த ஒரு மஹா பண்டிதர். அவரும் ருத்ரனைப் பற்றிய பகுதியில் **அஷ்ட மூர்த்தி: அஹிர்புத்ந்ய: மஹாகாலே மஹாநட:** என்று கூறினர். வேதத்தில் பல இடங்களில் **அஹிர்புத்ந்யர்** பேசப்படுகிறார். இவர் **ப்ரோஷ்டபதா** என்கிற உத்திரட்டாதி நக்ஷத்ரத்தின் அதி தேவதை ஆவார்.

ஸ்ரீ ஸுதர்ஶந சக்ரத்தைப் பற்றி ஸ்வாமி ஸ்ரீ வேதாந்த தேஶிகன் குறிப்பிட்டிருப்பதாக முன்பே சொன்னேன். அது பற்றிச் சிறிது விளக்கமாகவே சொல்ல வேண்டும். ஸ்வாமி தேசிகன் அருளிச் செய்த **ஸுதர்ஶநாஷ்டகம்** என்பது 8 ஶ்லோகங்களை மட்டுமே கொண்டது என்றாலும் அது ஒரு அத்புதமான ப்ரபந்தம். ஒவ்வொரு ஶ்லோகத்தில் 8 பிரிவுகள் உண்டு. ஒவ்வொரு ஶ்லோகத்தின் முடிவிலும் **ஜய ஜய ஸ்ரீ ஸுதர்ஶந** என்று இரண்டு அடிகள் பல்லவி போல் திரும்பத் திரும்ப வரும். இந்த மாதிரி வ்ருத்தம் எனக்குத் தெரிந்தவரை வேறு யாருடைய ஸ்தோத்ரத்திலும் இல்லை. ஸ்ரீமத் பாகவதத்தில் கூட இருப்பதாகத் தெரியவில்லை, இதில் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் ஸுதர்ஶந ஆழ்வான் ப்ரஹ்மாதி தேவர்களால் பூஜிக்கப்படுகிறார் என்றும், **ஶதபதம்** என்கிற வேத பாகத்தில் இவருடைய புகழ் விஶேஷமாகப் பேசப்படுகிறது என்றும், அஸுரர்களின் வளர்ச்சியை அவ்வப்பொழுது வெட்டிச் சாய்க்கின்றார் என்றும் போர்க்களத்தில் இவர் வரும்பொழுது இவருடைய பலவகைச் சுழற்சிகளைக் கண்டு அஸுரர்கள் ஓடோடி விலகி விடுவார்கள் என்றும், உலகத்தின் செயல்பாடு இவராலேயே நடக்கிறது என்றும், அளவில்லாத ஆறுவகை குணங்களுக்குக் கடல் என்றும், உலகத்தில் பெரிய இயற்கை, சீற்றம் முதலிய ஆபத்துகளையும் நோய்களையும் இவர் நீக்கி

॥ श्रीः ॥

# முன்னுரைக்கு ஒரு முன்னுரை

विष्णुभक्तिविजयध्वजं भजे विश्रुताखिलगुणौघभूषितम्।
आदिमस्त्वमहये नमो नमो बुध्नियाय हरिचक्रचेतसे॥

*(ஆசிரியர் இங்கு **அஹிர்புத்ந்ய**ருக்கு **விஷ்ணு** பக்தி **விஜயத்வஜர்** என்று விருது சூட்டுகிறார் (12.3.2005)*

நான் ஸம்ஸ்க்ருத பாடசாலையில் சேருவதற்கு முன்பே ஸம்ஸ்க்ருதத்தைப் பற்றி எதுவும் தெரியாத நிலையில் எங்கள் க்ராமத்திலுள்ள சில பெரியோர்கள் சிலரைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது **அவர் வைஷ்ணவ அக்ரேஸரர்** என்று சொல்லியது நன்கு நினைவில் இருக்கிறது. அதாவது எல்லா வைஷ்ணவர்களுக்கும் மேலான வைஷ்ணவர் என்பது இதன் பொருள். இதை மற்றொரு வகையில் சொல்ல வேண்டுமெனில், ஞாந, அனுஷ்டாந, ஶீலங்களால் மிகவும் சிறந்து விளங்கும் பெரியோர்களைப் **பரமைகாந்தி** என்று பெருமையுடன் பேசுவர். **ஏகாந்தி** என்றால் எப்பொழுதும் ஒருவரையே நினைத்து, ''மறந்தும் புறந்தொழார்'' என்கிறபடி எப்படிப்பட்ட ஶ்ரமமான நிலைகளிலும் வேறு தெய்வத்தைத் தொழாமல் ஸ்ரீமந் நாராயணனையே ஶரணமாகப் பற்றி வாழ்பவர்கள் **ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்ய: நைவ க்ராம-குலாதிபி:** என்று பேசப்படுகிறது. அத்தகைய ஏகாந்திகளுக்குள் மிகவும் சிறந்து விளங்குபவரைப் **பரமைகாந்தி** என்பர். அந்த விருது **அஹிர்புத்ந்ய**ருக்கும் தகும் என்பதை நான் இந்த க்ரந்தத்தை மொழி பெயர்த்தபோது நன்றாகத் தெளிவாகத் தெரிந்து கொண்டேன். இதற்கு அவர் சொன்ன சில விஷயங்களையே எடுத்துக் காட்டுகிறேன்.

1. **அபிகமநம்**, 2. **உபாதாநம்**, 3. **இஜ்யா**, 4. **ஸ்வாத்யாயம்** 5. **யோகம்** என்கிற பஞ்சகால பராயணர்களாக இருக்க வேண்டும் என்கிறார்.

2. ப்ராதஸ்ஸ்நாநம் முடிந்த பிறகு ஊர்த்வ புண்ட்ரம் தரிக்க வேண்டும் என்கிறார்.

3. யோகத்தைப் பற்றி விளக்கும் பொழுது மோக்ஷத்தை விரும்புபவர் 'வேறு எந்த தெய்வத்தையும் தொழலாகாது' என்கிற பொருளில் **அநந்ய யாஜீ**யாக இருக்க வேண்டும் என்கிறார். **அந்ய யாஜீ** என்றால் வேறு தெய்வங்களைத் தொழுபவர். இதற்கு மாறானவர் **அநந்ய யாஜீ.**

4. **ஸுதர்ஶந யந்த்ரம்** அமைத்து மந்த்ரங்களைக் கொண்டு ப்ரதிஷ்டை செய்து ஆராதநம் செய்வதையும், அவ்வாறே குண்டங்களமைத்து அவற்றில் ஹோமம் செய்ய வேண்டும் என்பதையும் சொல்லி, ஆரம்பத்தில் நான்கு ப்ராஹ்மணர்களை வீற்றிருக்கச் செய்து அவர்களிடம் அநுஜ்ஞை (அநுமதி) பெற வேண்டும் என்று சொன்னவர் அந்த ப்ராஹ்மணர்கள் வைஷ்ணவர்களாக இருந்தால் சிறப்பாகும் என்கிறார்.

5. ஆரம்பம் முதல் கடைசி வரை **விஷ்ணு ஸங்கல்ப சோதித:** என்றும், 'விஷ்ணுவின் ஸங்கல்பமே ஸுதர்ஶநம்' என்றும், 'விஷ்ணுவை ஒரு போதும் பிரியாத பத்நியே மஹாலக்ஷ்மி' என்றும் பல இடங்களில் பேசுகிறார்.

6. கடைசியாக, ஒரு மஹாபிஷேக யந்த்ரம், மஹாபிஷேக ஹோமம், என்பதைச் சொல்லி இது எல்லா பலன்களையும் தரவல்லது என்று கூறி அந்தச் சக்ரத்துக்கும், யாக குண்டங்களுக்கும் எட்டு திக்குகளிலும் பல தேவதைகளை ஆவாஹநம் செய்ய வேண்டும் என்று சொன்னவர், ந்ருஸிம்ஹனையும் ஓரிடத்தில் ஆவாஹநம் செய்ய வேண்டும் என்று சொல்லி முடிக்கிறார். இங்கு நாரதர் ஒரு கேள்வி கேட்டார். "ஸ்வாமி! ஸுதர்ஶநத்தை நடுவில் வைத்து அதை ப்ரதாநமாக்கி அதற்குப் பரிவார தேவதையாக ஸ்ரீ ந்ருஸிம்ஹனை ப்ரதிஷ்டை செய்வது பொருந்துமா? ஸுதர்ஶநத்துக்குத்தானே இங்கு பெருமை? விஷ்ணுவின் பெருமை குறையுமன்றோ?' என்று கேட்டார். இதற்கு அஹிர்புத்ந்யர் பதில் கூறுகிறார். 'நல்ல கேள்வி கேட்டீர்! உம்மைத் தவிர இம்மாதிரி வேறு யாரும் கேள்வி கேட்க

அருள்வாரென்றும், பேசுகிறுர். மேலும் ஸ்வாமி தேஶிகன் **ஹரபுரப்லோஷகாரண** என்று ஸாதித்துள்ளார். அதாவது ஹரன், த்ரிபுரங்களை எரித்ததற்கு ஸுதர்ஶநமே காரணம் என்பது கருத்து. இக்கருத்து **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை 44**வது அத்யாயத்தில் கூறப்பட்டுள்ளது. **ஜலந்தர வதம்** என்கிற சரித்ரத்தை ப்ருஹஸ்பதி ஶங்கரனுக்குச் சொல்லி அவனை எப்படியாவது தேவரீர் அழிக்க வேண்டும் என்று ப்ரார்த்தித்த போது ஶங்கரன் சொன்ன பதில் 12முதல் 17வரை உள்ள ஶ்லோகங்களில் உள்ளது. இதன் விளக்கம் ''நான் ஒரு ஸமயம் ஸுதர்ஶநத்தை ஸாக்ஷாத்கரிக்கக் கைலாஸத்துக்குச் சென்று கடும் தவம் செய்தேன். என் மீது க்ருபை கொண்டு நேரில் எனக்கு ஸேவை ஸாதித்தார். மேலும் சொன்னார்- நீ செய்த உபாஸநத்தால் ஸந்தோஷமடைந்தேன். உன் கார்யங்களை நான் என் அம்ஶத்தினால் வந்து முடித்து வைக்கிறேன் என்று சொல்லி மறைந்தார். ஆகையால் அந்த ஸுதர்ஶநத்தின் சக்தியைக் கொண்டே ஜலந்தரனை வதைக்கிறேன் என்றார். ஆகவே த்ரிபுராஸுர ஸம்ஹாரம் செய்ததும் ஸுதர்ஶநத்தின் ஶக்தியைக் கொண்டுதான் என்பது தெள்ளத் தெளிவாகத் தெரிகிறது. இறுதியாக இந்த ஸ்தோத்ரத்தை வாசிப்பவர்களுக்குச் சிக்கலான ஸந்தர்பங்களில் மனதைச் செலுத்தினாலும் அச்சிக்கல்கள் தீர்ந்து நல்லபடியே விரும்பிய ப்லன் கிடைக்கும். **விஷமேபி மநோரத: ப்ரதாவன் ந விஹந்யேத ரதாங்க துர்ய குப்த:** இத்தகைய **ஸ்ரீ ஸுதர்ஶந ஆழ்வானே ! நீர் பல்லாண்டு வாழ்க** என்று ஸ்தோத்ரத்தை நிறைவு செய்கிறார்.

இதே போன்று ஸுதர்ஶ நத்தைப் பற்றி **ஸ்ரீ ஸுதர்ஶந ஶதகம்** என்று ஒரு ப்ரபந்தம் உள்ளது. இதை எழுதியவர் **ஸ்ரீ கூர நாராயண ஜீயர்.** இந்த ப்ரபந்தம் ஸுதர்ஶநத்தின் அரங்கள்(spokes) வட்டை (rim) மற்றும் பல பாகங்களைப் பற்றி ஒவ்வொன்றுக்கும் பத்து ஶ்லோகங்களில் எழுதுகிறார். இதையும் பலர் பக்தி ஶ்ரத்தையுடன் பாராயணம் செய்து பலன் பெற்றிருப்பதைப் பலர் அறிவர்.

இவ்வாறாக மிகப் பெருமை வாய்ந்த ஸ்ரீ ஸுதர்ஶநத்தைப் பற்றிய இந்த **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யை இதுவரை யாரும் தமிழில் மொழி பெயர்க்கவில்லை என்பது ஆச்சர்யமாக உள்ளது. ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பெருமையும் மஹாலக்ஷ்மியின் பெருமையும் பல இடங்களில் பலவாறாக இங்கு பேசப்பட்டுள்ளது என்கிற காரணத்தினால் ஶைவர்களும் அத்வைதிகளும் மொழி பெயர்க்கவில்லை என்றால் அது ஒரு வகையில் புரிந்து கொள்ளக் கூடியதே. ஆனால் ஸ்ரீ வைஷ்ணவர்கள் கூட இதற்கு மொழி பெயர்ப்பு செய்ய முன் வராததற்குக் காரணம் தான் விளங்கவில்லை. அது பற்றி இங்கு ஆராய்ச்சி தேவை இல்லை. இந்த மொழி பெயர்ப்பு கைங்கர்யத்தைச் செய்ய அடியேனுக்கு பாக்யம் கிடைத்தது என்பதை எண்ணி மகிழ்ச்சி அடைகிறேன்.

பல ஆண்டுகளாக எண்ணியிருந்த இந்த ஒரு நல்ல கார்யத்தைச் செய்வதற்கு அநுகூலமான சூழ்நிலையை உருவாக்க என்னையும் மும்பையிலிருந்து சென்னைக்கு வரும்படிச் செய்து அநுக்ரஹம் செய்த பகவானுக்கு அநந்தமான ப்ரணாமங்களை ஸமர்ப்பித்து ஸ்வாமி தேஶிகன் **வரதராஜ பஞ்சாஶத்தில் ஏதாவதீம் கமயிது: பதவீம் தயாளோ: ஶேஷாத்வலேஶநயநே க இவாதிபார:** என்று ஸாதித்தபடி **அப்பனே! இந்தக் கைங்கர்யத்தை நிர்விக்நமாகப் பூர்த்தி செய்து வை** என்று ப்ரார்த்திக்கிறேன்.

இதற்கு உதவியாக எடுத்துக் கொண்ட புத்தகம் அடையார் நூல் நிலையத்தில் வெளியிடப்பட்டது. இங்கு மற்றொரு விஷயம் சொல்லியே ஆக வேண்டும். இது முதலாவது பதிப்பின் மறுபதிப்பு. இந்த க்ரந்தத்தை மூல புத்தகங்களை அடிப்படையாக கொண்டு சரிபார்த்து ஆங்காங்கு பாட பேதங்களையும், ஒவ்வொரு அத்யாயத்தின் தொடக்கத்தில் தலைப்புகளையும், அத்யாயத்தின் உட்பகுதிகளில் ஆங்காங்கு தலைப்புகளையும் எழுதிப் பண்டிதர்களுக்குப் பேருதவி செய்தவர் வேங்கடாத்ரியகரம் மஹாவித்வான் ஸ்ரீ.உ.வே. க்ருஷ்ணமாசார்யர் ஆவர். இந்த ஸ்வாமியை நான் பல வருடங்களுக்கு முன்பு நேரில்

ஸேவிக்கும் பாக்யம் பெற்றேன். ஸ்வாமி தேஶிகன் அருளிச் செய்த **ஸங்கல்ப ஸூர்யோதயம்** என்கிற நாடகத்துக்கு இந்த ஸ்வாமி ஸம்ஸ்க்ருதத்தில் முன்னுரை எழுதியிருப்பதை நான் பார்க்க நேர்ந்தது. அதில் அவர் **ஶாந்தரஸத்**தைப் பற்றி முன்னோர்கள் எழுதியதை எடுத்துக் காட்டி, நாடகத்தில் ஶாந்த ரஸம் முக்யமாகக் கையாளப்பட்டிருப்பது தவறில்லை என்று ஆணித்தரமாக விளக்கியிருப்பதையும் ஸம்ஸ்க்ருதத்தில் இவர் எழுதும் ஶைலி (பாணி)யைப் பார்க்கும் போது இவர் எல்லா ஶாஸ்த்ரங்களையும் வாசித்தறிந்தவர் என்பது புலனாகிறது. இந்தப் பெரியவரின் திருக்குமாரராகிய ஸ்ரீ வாஸுதேவாசார்யர் எனக்கு உதவியாக அமைந்திருப்பதும் மும்பையில் ஊக்கமளித்தவரும் ஸ்ரீ வைஷ்ணவரே என்பதை நினைக்க **ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்** என்று சொல்லியது போல் இந்தக் கைங்கர்யம் ஸ்ரீ வைஷ்ணவர்களாலேயே செய்யப்படுகிறது என்பதை நினைத்து மிகவும் பூரிப்பு அடைகிறேன்.

ஸ்ரீமத் பாகவதத்தில் பின்வரும் ஶ்லோகம் உள்ளது —

स्वपुरुषमभिवीक्ष्य पाशहस्तं
वदति यमः किल तस्य कर्णमूले।
परिहर मधुसूदनप्रपन्नान्
प्रभुरहमन्यनृणां न वैष्णवानाम्॥

யமனுடைய படர்கள் (ஆட்கள்) தங்கள் கைகளில் பாஶக் கயிற்றை வைத்துக் கொண்டு புறப்படத் தயாராக இருந்ததைப் பார்த்த யமன் அவர்கள் காதில் பின்வருமாறு சொல்கிறான் - ''மதுஸூதநனிடம் ஶரணாகதி செய்தவர்கள் பக்கம் போகாதீர்கள். மற்ற பேர்களிடம் தான் என் அதிகாரம் செல்லும். வைஷ்ணவர்களிடம் செல்லாது'' என்பது இதன் பொருள்.

இப்படியெல்லாம் விஷ்ணுவின் பெருமை எல்லா க்ரந்தங்களிலும் பேசப்பட்டிருந்தும் ஒரு சிலர் விஷ்ணுவின் பெருமையை இருட்டடிப்பு செய்ய விரும்புகிறார்கள். அதற்கு ஓர் சிறிய உதாரணம் —

சில ஆண்டுகளுக்கு முன்பு ஸ்ரீ ஆதி ஶங்கர பகவத் பாதரைப் பற்றி ஸம்ஸ்க்ருதத்தில் திரைப்படம் தயாரித்து வெளியிட்டனர். அது எல்லாவகையிலும் நன்றாகத்தான் அமைந்து இருந்தது. ஆயினும் இடையிடையே ''आकाशात् पतितं तोयं यथा गच्छति सागरम्'' என்கிற ஶ்லோகத்தின் பாதியை மட்டும் சொல்லி நிறுத்தி விடுவார்கள். இது விந்தையிலும் விந்தை. இதன் கருத்தை அறிந்தவர்களுக்கு நன்றாகப் புரியும். இதன் பொருள் ''ஆகாயத்திலிருந்து வரும் நீர் எப்படிக் கடலில் போய்ச் சேர்கிறதோ'' என்பதே. இங்கு வாக்யம் முழுமை பெறவில்லை என்பதைக் கவனிக்க வேண்டும். அடுத்த பாதி ஶ்லோகத்தை தருகிறேன் ''सर्वदेवनमस्कारः केशवं प्रति गच्छति'' என்பதே அது. இதன் பொருள் ''அதே போல் எந்த தெய்வத்தை வணங்கினாலும் அது கேஶவனையே சென்றடையும்'' என்பதே. இவ்வாறு பொருத்தமில்லாத வாக்யத்தைச் சொல்லி விஷ்ணுவின் பெருமையை மறைக்க எண்ணிப் பிற்பகுதியைச் சொல்லாமல் விட்டார்கள். இது எப்படி இருக்கிறது என்றால் பூனை கண்ணை மூடிக் கொண்டு இரவு வந்து விட்டது என நினைக்குமாம்! இப்படிப் பட்டவர்களும் அந்தப் பகை உணர்வை விட்டுத் திருந்த வேண்டும் என்பதற்காகவே விஷ்ணுவின் பெருமை **அஹிர்புத்ந்ய**ரால் இந்த க்ரந்தத்தில் பற்பல இடங்களில் பேசப்படுகிறது என்பதை யாவரும் உணர வேண்டும் என்பதற்காகவே இந்த நூலை மொழி பெயர்க்க வேண்டுமென நான் விரும்பினேன்.

### உயர்ந்த தெய்வம் எது ?
### அதை எவ்வாறு தெரிந்து கொள்வது?

ஸநாதந தர்மத்தைப் பின்பற்றிவரும் நமக்கெல்லாம் வேதமே முதல் ப்ரமாணம். அந்த வேதத்திலும் பல பல தெய்வங்களைப் பற்றிப் பேசப்பட்டுள்ளது. உதாஹரணத்துக்கு வாயுவைப் பற்றி **வாயுர்வை க்ஷேபிஷ்டா தேவதா। வாயுமேவ ஸ்வேந பாகதேயேந**

**உபதாவதி. ஸ ஏவைநம் பூதிம் கமயதி.** என்கிற வாக்யங்களால் வாயுவே உயர்ந்த தெய்வம் என்று பேசுகிறது. **ஏகாதஶ ருத்ரம்** என்று சில அநுவாகங்கள் உள்ளன. அவற்றில் ருத்ரனைப் பற்றிப் பல படியாகப் புகழ்மாலை சூட்டப்படுகிறது. இப்படியெல்லாம் இருக்கும் பொழுது எப்படித் தத்வத்தின் உண்மையை அறிவது? இது சிறிது ஶ்ரமம்தான் என்றாலும் ருஷிகளும் மற்ற மற்ற ஆசார்யர்களும் நமக்கு ஒரு வழியைக் காட்டியுள்ளனர். **இதிஹாஸ புராணப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத் । பிபேதி அல்பஶ்ருதாத் வேத: மாமயம் ப்ரதரிஷ்யதி–** இதன் பொருள்:- **ஸ்ரீமத் ராமாயணம், மஹாபாரதம்** என்கிற இதிஹாஸங்களைக் கொண்டும், **ஸ்ரீமத் பாகவதம், விஷ்ணு புராணம்** போன்ற ஸாத்விக புராணங்களைக் கொண்டும் நாம் வேதத்தின் உட்கருத்தை அறியலாம். அதிகம் படிக்காத சிலர் என்னை ஏமாற்றிவிடுவர் என்று வேதம் பயப்படுகிறது. மேலே சொன்ன இதிஹாஸங்களில் கூடச் சிற்சில இடங்களில் அத்வைதத்துக்கு அநுகூலமாக இருக்குமோஎன்று ஸந்தேஹம் தோன்றலாம். அம்மாதிரி இடங்களில் எம்பெருமான் **அந்தர்பஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:** என்கிற ப்ரமாணத்தைக் கொண்டு இந்த உலகத்திலுள்ள ஸகல சராசரங்களையும் ஶரீரமாகக் கொண்ட அந்த எம்பெருமான் ஒருவனே உள்ள, வேறு எதுவுமில்லை என்று ஸூக்ஷ்மமான விஷயத்தைக் கொண்டு தெளியலாம்.

இம்மாதிரியான ஶ்ரமங்களெல்லாம் இல்லாமல் நம் ஆசார்யர்கள் வேறு ஒரு வழி காட்டினர். அதுதான் பின் வருமாறு :- கேள்வி பொதுவாக இருந்தும் பதில் குறிப்பாக இருப்பதைக் கொண்டு நாம் உயர் தெய்வம் எது என்பதைத் தீர்மானிக்க முடியும் என்றனர். இந்தவகையில் பார்க்கும் பொழுது **ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம**மும் **ஸ்ரீ விஷ்ணு புராண**மும் நமக்குக் கைகொடுக்கின்றன.

இதையே எல்லோருக்கும் தெரிந்த விஷயம் ஒன்றைச் சுட்டிக் காட்டிச் சொல்கிறேன். வால்மீகியின் ஆஶ்ரமத்துக்கு நாரதர் வந்தார். வால்மீகி கேட்கிறார் - **கோந்வஸ்மிந்**

**ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கஸ்ச வீர்யவான்?** என்று தொடங்கி 16 வகை குணங்களைச் சொல்லி, **இந்தக் குணங்கள் எல்லாம் நிரம்பப் பெற்றவனான ஒரு மனிதன் இந்த உலகத்தில் இப்பொழுது யார் இருக்கிறான்** என்று பொதுவாகக் கேள்வி கேட்டார். ராமனைப் பற்றிச் சொல்லுங்கள் என்று கேட்கவில்லை. அதுதான் பொதுவான கேள்வி என்பது. அதற்கு நாரதர் சொன்ன பதிலில் **தசரதனுடைய குமாரனான ராமன் இருக்கிறான். நீர் கேட்டதெல்லாம் நிரம்பப் பெற்றவன் என்று பதில் வந்தது.** இதிலிருந்து என்ன தேறுகிறது? அக்காலத்தில் அத்தனை குணங்களும் நிரம்பப் பெற்ற ஒரு மனிதன் ராமனைத் தவிர யாருமில்லை என்பது தானே. இதே வகையில்தான் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் கேள்வியும் பதிலும் உள்ளன.

**கோ தர்ம: ஸர்வதர்மாணாம் பவத: பரமோ மத:? ।**
**கிம் ஜபந் முச்யதே ஜந்து: ஜந்ம ஸம்ஸாரபந்தநாத் ? ॥**

(எந்த தர்மம் உபாயம், வழி) மிகச் சிறந்தது? யாரை ஜபித்தால் இந்த ஸம்ஸாரக் கடலிலிருந்து கரை ஏறலாம்?). இந்தக் கேள்வியை யுதிஷ்டிரர் கேட்டார். அதற்கு பீஷ்மர் கூறிய பதில் -

**யத: ஸர்வாணி பூதாநி பவந்தி ஆதியுகாகமே ।**
**யஸ்மின் ச ப்ரளயம் யாந்தி புநரேவ யுகக்ஷயே ॥**

**தஸ்ய லோகப்ரதாநஸ்ய ஜகந்நாதஸ்ய பூபதே ! ।**
**விஷ்ணோர் நாமஸஹஸ்ரம் மே ஶ்ருணு பாபபயாபஹம் ॥**

(இந்த உலகமெல்லாம் யாரிடமிருந்து தோன்றியதோ? யுகம் முடியும் பொழுது எல்லாம் எவரிடமே ஒடுங்குகிறதோ? உலகங்களுக்கெல்லாம் அதிபதியான அப்படிப்பட்ட நாராயணனுடைய ஆயிரம் திருநாமங்களைக் கொண்ட **ஸஹஸ்ரநாமத்தை** நான் உனக்குச் சொல்கிறேன் கேள்) என்றார்.

இங்கு பாருங்கள் ! கேள்வி பொதுவானது. பதில் குறிப்பாக ஒருவரைப் பற்றியது. இதே வகையில் தான் **ஸ்ரீ விஷ்ணு புராணத்திலும்**-

பராஶரம் முநிவரம் க்ருத பௌர்வாந்ஹிக க்ரியம் ।
மைத்ரேய: பரிபப்ரச்ச ப்ரணிபத்ய அபிவாத்ய ச ॥

''மைத்ரேயர் ஸ்ரீ பராஶரரை நமஸ்கரித்து அபிவாதநம் செய்து சில கேள்விகளைக் கேட்டார்'' என்பது இதன் பொருள். நம் நாட்டில் தற்பொழுது உச்சநீதிமன்றத்தில் சொல்லப்படும் தீர்ப்பே இறுதியானது என நினைக்கிறோம் அல்லவா? அதேபோல் இந்த முறையை ஏற்று நடப்பதுதான் விவேகமான செயலாகும்.

வேதத்திலும் கூடப் புகழ்ச்சியாகச் சொல்லும் இடங்களை விட்டுக் கவனித்தால் நீதிபதியின் தீர்ப்பு போல் சில வாக்யங்கள் வருகின்றன. இதையும் சற்று கேளுங்கள். **அக்நி: அவம: தேவதாநாம் விஷ்ணு:** பரம:- தெய்வங்களில் அக்நியே கடை நிலை. விஷ்ணுவே தன்னிகற்றவர். பரம: என்பதற்கு பர: **மா யஸ்மாத்** (யாரைவிட மேலானவர் யாருமில்லையோ) என்று பொருள். அப்படிப்பட்ட தன்னிகரற்றவர் மஹாவிஷ்ணு என்கிற வாக்யத்தை நன்கு கவனிக்க வேண்டும்.

அடுத்து ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் ஸ்ரீ ராமாநுஜருக்கும் முந்திய ஆசார்யனாக எழுந்தருளியிருந்தவர் ஸ்ரீ ஆளவந்தார் எனப்படும் யாமுநாசார்யர். அவர் ஸ்ரீ வைகுண்டத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமாளையே நினைத்து ஒரு ஸ்தோத்ரம் எழுதினார். அதில் தொடக்கத்தில் **பரதத்வ நிர்ணயம்** செய்கிறார். உலகத்தில் அநாதி காலமாக ப்ரஹ்மன் ருத்ரன் இவர்களை விஷ்ணுவோடு சேர்த்து ஸமமாகப் பேசுகிறார்கள். ஸாதாரண ஜநங்கள் இவ்வாறு பேசுவது ஒரு புறம் இருக்க, **காளிதாஸ**னே இந்தக் குழப்பமான வாதத்தை **ரகுவம்ஶம்** என்கிற காவ்யத்தில் பின் வருமாறு எழுதினான் -

ஏகைவ மூர்த்தி: பிபிதே த்ரிதா ஸா
ஸாமாந்ய மேஷாம் ப்ரதமாபரத்வம் ।
விஷ்ணோர்ஹர: தஸ்ய ஹரி: கதாசித்
வேதா: தயோ: தாவபிதாது: ஆத்யௌ ॥

இதன் கருத்து :— ஒரே மூர்த்தியாக இருந்த ஒன்று மூன்று வகையாக உருவெடுத்தது. ஆகையால் இவர்கள் மூவரும் ஒரே வகைதான். ஒரு ஸமயம் விஷ்ணுவை விடச் சிவன் பெரியவராகவும், வேறு ஸமயம் சிவனே விட விஷ்ணு மேலாகவும், ப்ரஹ்மன் ஒரு காலத்தில் இவ்விருவரை விட மேலாகவும், ப்ரஹ்மனேவிட இவ்விருவரும் ஒரு ஸமயம் மேலாகவும் இருப்பர் என்று குழப்பினான்.

மேலே சொன்ன ஸ்ரீ ஆளவந்தார் கேள்வி கேட்கிறுர், பாருங்கள் ! யாரும் மறுக்கமுடியாதபடி புராணங்களில் இருப்பதை எல்லோரும் அறிந்ததே. அவருடைய ஶ்லோகம் பின் வருமாறு :—

**வேதாபஹார குரு பாதக தைத்யபீடாதி–**
**ஆபத் விமோசந மஹிஷ்ட பலப்ரதாநை: ।**
**கோऽந்ய: ப்ரஜாபஶுபதீ பரிபாதி கஸ்ய?**
**பாதோதகேந ஸ ஶிவ: ஸ்வஶிரோத்ருதேந? ॥**

இதன் கருத்து :– ஒரு காலத்தில் மதுகைடபர்கள் என்கிற அஸுரர்கள் உடல் வலிமை, வரங்களால் பெற்ற வலிமை இவற்ருல் கர்வம் கொண்டு மாயையால் ப்ரஹ்மனிடமிருந்து வேதங்களே அபஹரித்தார்கள். இவ்வாறே ருத்ரன் திமிர் கொண்டு தன் தகப்பனாரான ப்ரஹ்மனின் ஒரு தலையைக் கிள்ளி எறிந்தான். அது ப்ரஹ்மஹத்யா தோஷமாகி அவருடைய கபாலம் ருத்ரன் கையில் அகலாமல் பதிந்து விட்டது. மற்றும் ஒரு காலத்தில் ருத்ரனே ஒரு அஸுரன் தவம் செய்து ஒரு வரம் கேட்டான் ''நான் யார் தலையில் கை வைக்கிறேனே அவன் சாம்பலாகிப் போக வேண்டும்'' என்பதுதான் அந்த வரம். ருத்ரனும் **சரி, கொடுத்தேன்** என்றார். அந்த அஸுரன் அந்த வரம் பலிக்கின்றதா? என்று சோதிக்க ருத்ரன் தலையிலேயே கை வைக்கிறேன் என்றான். ருத்ரன் ஓடினான், ஓடினான், ஓடினான். யாவருக்கும் தஞ்சம் ஸ்ரீமந் நாராயணன் தானே. **பரித்ராணய ஸாதூநாம் விநாஶாய ச துஷ்க்ருதாம் ... ... ஸம்பவாமி யுகே யுகே** என்பது தானே அந்தக் கருணைக் கடலின் வ்ரதம். வந்த இருவரையும் பார்த்து,

**நில்லப்பா** என்றார். அஸுரனைக் கேட்டார் - **என்ன விஷயம்** என்று. அவனும் தான் பெற்ற வரத்தைப் பற்றிச் சொன்னான். **சோதிக்க விரும்பினேன்** என்ருன். "அப்படியா, சரி. வ்ரதத்தைச் சோதிக்கு முன்பு, நீ கை கால்களைச் சுத்தம் செய்து கொண்டு ஆசமநம் செய்ய வேண்டும் என்ருர்." அவனும் அவ்வாறே செய்து, விரல்களால் அங்கங்களைத் தொட வேண்டும் என்று ஶாஸ்த்ரங்களில் சொன்னபடி (தாநிதோபஸ்ப்ருஶேத் மூர்தந்யாநி) தன் தலையில் தாமோதராய நம: என்று கை வைத்தான். அவ்வளவுதான் ! அங்கேயே சாம்பலானான் ! இப்படியெல்லாம் ப்ரஹ்மனையும் ருத்ரனையும் காப்பாற்றியவர் வேறு யார்? நாராயணனைத் தவிர? அவரே மேலான தெய்வம் என்பதில் யாருக்கும் ஸந்தேஹம் இருக்க முடியாது. மேலும் அதே யாமுநாசார்யர் முன் சொன்ன ஶ்லோகத்தின் நான்காம் பாதத்தில் மேலும் ஒரு கேள்வி கேட்டார். யாருடைய திருவடித் தீர்த்தத்தைத் தன்தலையில் தாங்கியதால், அந்த ருத்ரன் சிவன் (மங்களகரமானவன்) என்கிற பெயரைப் பெற்றான்?" என்று- விடை எல்லோருக்கும் தெரிந்ததே. பகீரதன் தன் முன்னோர்கள் ஶாபத்தினால் சபிக்கப்பட்டுச் சாம்பலானதைக் கருதி அவர்களை நற்கதி அடையச் செய்ய கங்கையைப் பூலோகத்துக்குக் கொண்டு வர விரும்பி ப்ரார்த்தித்தான். கங்கையும், என்னைத் தாங்க ருத்ரனைத் தவிர யாராலும் முடியாது. ஆகையால் அவரைக் கேட்டு வா என்றாள். ருத்ரனும் கங்கையைத் தாங்க ஸம்மதித்தான். கங்கை பூலோகத்துக்கு வந்து பாதாளத்துக்குள்ளும் சென்று ஸகரபுத்ரர்களின் சாம்பலை நனைத்தது. சிவன் என்கிற பெயர் வேதத்தில் இல்லை. ருத்ரன் என்பதே உண்டு. அதுவும் அவன் பிறந்த பொழுது மனிதனைப் போலவே அழுதுகொண்டே பிறந்தானாம். வேதம் சொல்கிறது - **ஸ: அரோதீத்; யத் அரோதீத், தத் ருத்ரஸ்ய ருத்ரத்வம்** - அவன் அழுது கொண்டே பிறந்ததால் அவனுக்கு ருத்ரன் என்று பெயர் **(ருத்** to cry). ஆகவே தான் புனிதமாக வேண்டும். தம் தமோகுணம் நீங்க வேண்டும் என்பதற்காகவே ருத்ரன் ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடித் தீர்த்தமான கங்கையைத் தன்

தலையால் தாங்கினான். இதே செய்தியை பாகவதத்திலும் காணலாம்.

யத் பாதபங்கஜ ரஜஸ் ஸ்நபநம் மஹாந்த:
வாஞ்சந்தி உமாபதிரிவ ஆத்மதமோபஹத்யை ।

தன் தமோகுணம் நீங்குவதற்காக உமாபதியான ருத்ரன் ஸ்ரீமந் நாராயணனுடைய பாத தீர்த்தத்தினால் ஸ்நாநம் செய்ய விரும்பியது போல், உலகத்திலுள்ள மற்ற மஹான்களும் விரும்புகிறார்கள் என்பது கருத்து.

## பீஷ்மர் ஒரு மஹாயோகி

அம்புப் படுக்கையிலிருந்த பீஷ்மரை அணுகி அவரிடம் எல்லா தர்மங்களைப் பற்றிக் கேள் என்று கண்ணன் தர்ம புத்ரருக்குப் பணித்தான். தானும் சென்றான். அப்பொழுது கண்ணன் சொன்ன வார்த்தை ''பீஷ்மர் போய் விட்டால் **ஞாநாநி அல்பீபவிஷ்யந்தி** (இந்தப் பூமியிலிருந்து ஞாநமே மறைந்து விடும்)'' என்றார். இது மட்டுமன்று. அவருக்கு ஒரு வரம் கிடைத்தது. **நீ விரும்பும் பொழுது ப்ராணனை விடலாம்** என்பதுதான் அது. இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த மஹாயோகியான பீஷ்மர்தான் **விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தைச்** சொன்னார். அதன் முன் பகுதியை மேலே பார்த்தோம். அடுத்து வருவது த்யாந ப்லோகம். **பூ: பாதௌ யஸ்ய நாபி:** என்கிற ப்லோகத்தில் **விராட்** ஸ்வரூபத்திலிருக்கும் விஷ்ணுவுக்கு பூமிதான் கால்களாம். ஆகாயம் நாபியாம் (தொப்புள்). வாயு அவருடைய ப்ராணன். சந்த்ரனும், ஸூர்யனும் கண்கள். 8 திசைகளும் காதுகள். ஸ்வர்கலோகம் முதலானவை தலை. அக்நியே முகம். இந்தக் கடல் எல்லாம் அவருடைய சிறுநீர். இந்த உலகமெல்லாம் தேவர்கள், மனிதர்கள், பறவை, மாடு, பாதாளத்திலுள்ள ஸர்பங்கள், கந்தர்வர், அஸுரர் என்கிற பலவகைப்பட்டவர்கள் அனைவரும் சேர்ந்து அவருடைய வயிற்றுக்குள்ளிருக்கும் அப்படிப்பட்ட விஷ்ணுவை வணங்குகிறேன்' எனப் படுகிறது. இதில் அடங்காதது எது? என்று சொல்லுங்கள் பார்க்கலாம்!

மேலும் ஸஹஸ்ரநாமத்தின் முடிவில் இதை வாசிப்பவர்களுக்கு என்னென்ன பலன்கள் கிடைக்கும் என்று சொல்ல நினைத்தவர், (த்யௌ: ஸசந்த்ரார்க நக்ஷத்ரா) சந்த்ரன் ஸூர்யன் நக்ஷத்ரங்கள் இவைகளோடு கூடிய விண்வெளியும், ஆகாயமும், திக்குகளும், பூமியும், பெருங்கடலும் இவையெல்லாம் அந்த வாஸுதேவனுடைய சக்தியால் தான் தாங்கப் படுகின்றன என்கிறார்.

அடுத்து ஸஸுராஸுர கந்தர்வம் என்கிற ஶ்லோகத்தில் தேவர்கள், அஸுரர்கள், கந்தர்வர்கள், ராக்ஷஸர்கள், நாகர்கள், யக்ஷர்கள் இவர்களெல்லாம் க்ருஷ்ணன் எனப்படும் விஷ்ணுவின் ஆட்சியில் உள்ளனர் என்கிருர். மேலும் இந்த்ரியாணி மனோ புத்தி: என்கிற ஶ்லோகத்தில் நம் கண், காது முலிய புலன்களும், மநஸ்ஸும் (புத்தியும்) வீர்யம், பலம், தைர்யம், ஶரீரம், அதனுள் இருக்கும் ஜீவன் இவையெல்லாம் வாஸுதேவனையே ஆத்மாவாகக் கொண்டவை என்று பேசப்படுகிறது. **யோகோ ஜ்ஞாநம் ததா ஸாங்க்யம்** என்ற ஶ்லோகத்தில் யோக ஶாஸ்த்ரம், ஜ்ஞாநம், ஸாங்க்யம், கல்விகள், சிற்பம் முதலிய 24 கலைகள், வேதங்கள், ஶாஸ்த்ரங்கள் இவையெல்லாம் **ஜநார்தநன்** என்கிற அந்த விஷ்ணுவினிடமிருந்தே தோன்றின.

இவ்வாறாக **ஸ்ரீ விஷ்ணு நாமத்தின்** தொடக்கத்திலும் மத்தியிலும், இறுதியிலும் கூறப்பட்ட விஷயங்களைக் கவனிக்கும் போது விஷ்ணுவே உயர்ந்த தெய்வம் என்பது உறுதியாகிறது அன்ருே?

கீழே சொன்ன இதே விஷயங்களையும், இந்த உலகங்களுடைய ஸ்ருஷ்டி மற்றும் ப்ரளயம் என்கிற வரிசையில் நடக்கின்றன என்பதையும், விஷ்ணுவே நாராயணன் என்றும், நாராயணன் பத்நி மஹாலக்ஷ்மி என்றும், விஷ்ணுவின் ஸங்கல்பமே ஸுதர்ஶநர் என்றும் இவர்கள் மூலமே இந்த உலகமெல்லாம் இயங்குகிறது என்றும் **அஹிர்புத்ந்யர்** நாரதருக்கு விளக்குகிறார்.

இவ்வாறாக மிகப் பெருமை வாய்ந்த ஸ்ரீ ஸுதர்ஶநத்தைப் பற்றிய இந்த **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யை இதுவரை யாரும் தமிழில் மொழி பெயர்க்கவில்லை என்பது ஆச்சர்யமாக உள்ளது. ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பெருமையும் மஹாலக்ஷ்மியின் பெருமையும் பல இடங்களில் பலவாறாக இங்கு பேசப்பட்டுள்ளது என்கிற காரணத்தினால் ஶைவர்களும் அத்வைதிகளும் மொழி பெயர்க்கவில்லை என்றால் அது ஒரு வகையில் புரிந்து கொள்ளக் கூடியதே. ஆனால் ஸ்ரீ வைஷ்ணவர்கள் கூட இதற்கு மொழி பெயர்ப்பு செய்ய முன் வராததற்குக் காரணம் தான் விளங்கவில்லை. அது பற்றி இங்கு ஆராய்ச்சி தேவை இல்லை. இந்த மொழி பெயர்ப்பு கைங்கர்யத்தைச் செய்ய அடியேனுக்கு பாக்யம் கிடைத்தது என்பதை எண்ணி மகிழ்ச்சி அடைகிறேன்.

பல ஆண்டுகளாக எண்ணியிருந்த இந்த ஒரு நல்ல கார்யத்தைச் செய்வதற்கு அநுகூலமான சூழ்நிலையை உருவாக்க என்னையும் மும்பையிலிருந்து சென்னைக்கு வரும்படிச் செய்து அநுக்ரஹம் செய்த பகவானுக்கு அநந்தமான ப்ரணாமங்களை ஸமர்ப்பித்து ஸ்வாமி தேஶிகன் **வரதராஜ பஞ்சாஶத்தில் ஏதாவதீம் கமயிது: பதவீம் தயாளோ: ஶேஷாத்வலேஶநயநே க இவாதிபார:** என்று ஸாதித்தபடி **அப்பனே! இந்தக் கைங்கர்யத்தை நிர்விக்நமாகப் பூர்த்தி செய்து வை** என்று ப்ரார்த்திக்கிறேன்.

இதற்கு உதவியாக எடுத்துக் கொண்ட புத்தகம் அடையார் நூல் நிலையத்தில் வெளியிடப்பட்டது. இங்கு மற்றொரு விஷயம் சொல்லியே ஆக வேண்டும். இது முதலாவது பதிப்பின் மறுபதிப்பு. இந்த க்ரந்தத்தை மூல புத்தகங்களை அடிப்படையாக கொண்டு சரிபார்த்து ஆங்காங்கு பாட பேதங்களையும், ஒவ்வொரு அத்யாயத்தின் தொடக்கத்தில் தலைப்புகளையும், அத்யாயத்தின் உட்பகுதிகளில் ஆங்காங்கு தலைப்புகளையும் எழுதிப் பண்டிதர்களுக்குப் பேருதவி செய்தவர் வேங்கடாத்ரியகரம் மஹாவித்வான் ஸ்ரீ.உ.வே. க்ருஷ்ணமாசார்யர் ஆவர். இந்த ஸ்வாமியை நான் பல வருடங்களுக்கு முன்பு நேரில்

ஆஸ்போடயந்தி பிதர: ப்ரந்ருத்யந்தி பிதாமஹா: ।
வைஷ்ணவோ ந: குலே ஜாத: ஸ ந: ஸந்தாரயிஷ்யதி ॥

இதன் கருத்து :- ''ஒரு வைஷ்ணவன் நம் குலத்தில் பிறந்திருக்கிறுன். அவன் நம்மைக் கரையேற்றி வைப்பான்'' என்று சொல்லித் தோள் தட்டிக் கொள்கிறுர்கள் பித்ருக்கள். பிதாமஹர்கள் கூத்தாடுகிறார்கள் என்பதே.

ஸ்ரீ சங்கரபகவத் பாதரின் அபாரமான விஷ்ணுபக்தி

ஶ்ருதி ஸ்ம்ருதி புராணாநாம் ஆலயம் கருணுலயம் ।
நமாமி பகவத்பாத ஶங்கரம் லோகஶ ங்கரம் ॥ என்று.

இவரைப் பற்றிய த்யாந ச்லோகம்- ருஷிகள், முன்னோர்களைப் போலவே ஸ்ரீ ஶ ங்கரரும் ஆரம்ப காலத்தில் விஷ்ணு பக்தியிலேயே திளைத்திருந்தார். அவருடைய குருவின் பெயர் **கோவிந்த பகவத் பாதர்** என்பது. அதனால் இவர் **பஜகோவிந்தம்** என்கிற மிகச் சிறந்த ஒரு ஸ்தோத்ரத்தைப் பாடினார். இந்த ஸ்தோத்ரம் தனிச் சிறப்பு உடையது. **எதுகை மோனை** மட்டுமின்றி இந்த உலகத்தின் நிலையற்ற தன்மையையும், நம் ஶரீரம் முதுமையின் தளர்ச்சி பெற்று விழுந்து விடுமென்றும் எல்லோருக்கும் நினைவூட்டி **கதவதி வாயௌ தேஹாபாயே பார்யா பிப்யதி தஸ்மின் காயே**- உடலை விட்டு உயிர் பிரிந்தவுடன் அவ்வுடலைப் பார்த்து மனைவியே பயப்படுகிறுள் என்று பண்டிதர்களும் ஆகா! என்று புகழும் வகையில் இந்த ஸ்தோத்ரம் அமைந்துள்ளது. அது மட்டுமல்ல. அத்வைத ஸந்யாஸிகளும் எப்பொழுதும் **நாராயண ! ! நாராயண** என்று நாராயணனை நினைப்பது மட்டும் அன்றி அவர்கள் கையெழுத்துப் போடுவதிலும் **நாராயண ஸ்ம்ருதி** என்றே குறிக்கிறுர்கள் என்பதை யாவருக்கும் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். இது மட்டுமன்று. **லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ ஸ்தோத்ரம்** ஒன்றையும் இவர் அருளிச் செய்திருக்கிறுர். இதற்கு **கராவலம்ப ஸ்தோத்ரம்** என்று பெயர். சுமார் 10 ஶ்லோகங்கள் கொண்ட இதில் ஒவ்வொரு ஶ்லோகத்தின் இறுதியில் **லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ ! மம தேஹி கராவலம்பம்** (*லக்ஷ்மீ ந்ருஸிம்ஹனே ! எனக்குக் கைகொடு*)

என்று மனமுருகிப் பாடியிருக்கிறார் - வேண்டியிருக்கிறார்.

இது பற்றி ஒரு பரவலான செய்தி உண்டு. ஸ்ரீ ஶங்கர பகவத் பாதருக்கு எல்லாம் தெரியும் என்கிற புகழைக் கேட்டு யாரோ ஒருவர் ''உங்களுக்கு ஶ்ருங்காரம் - காதலைப் பற்றித் தெரியுமா?'' என்று கேட்டதாகவும், அதனால் இவர் 'ஒரு சில நாட்கள் பொறுங்கள்' என்று அவருக்குப் பதில் கூறிவிட்டு இருந்த நிலையில் அந்த ஊரின் அரசன் இறந்ததாகக் கேள்விப்பட்டு இவர் உயிர் நீங்கிய அரசனின் உடலில் பரகாய ப்ரவேஶம் செய்தார் என்று சொல்லப்படுகிறது. அதாவது ஒருவர் தன் உடலை விட்டுப் பிறர் உடலில் புகுந்து கொள்வது என்பது இதன் பொருள். உயிர் பெற்று எழுந்த அரசனுடன் ராணி மகிழ்ச்சியுடன் பேசிய பொழுது ஓரிரு நாட்களில் இவருடைய போக்குப் புதுமையாக உள்ளது என்பதால் இது பரகாய ப்ரவேஶத்தால் ஏற்பட்டது என்று மந்த்ரிகளும் மற்றவர்களும் சொன்னார்கள். உடனே அதிகாரிகள் இந்த ஊரில் எங்காவது உயிர் நீங்கிய உடல் காக்கப்பட்டிருந்தால் அந்த உடலைத் தீயிட்டு எரித்து விடும்படி உத்தரவு இட்டனர். அவ்வாறே ஒற்றர்கள் ஸ்ரீ ஶங்கர பகவத் பாதரின் உயிரற்ற உடலுக்குத் தீயிட்டதாகவும், இதை அறிந்து இவர் அரசன் உடலை விட்டு வெளியேறித் தன் உடலுக்குள் புகுந்ததாகவும், அப்பொழுது தன்னைக் காப்பாற்றும்படி இந்த கராவலம்ப ஸ்தோத்ரத்தை மனமுருகிப் பாடினார் என்றும் கூறப்படுகிறது. லங்கையில் ஆஞ்ஜநேயர் வாலில் தீயிட்டதை அறிந்து ஶீதோ பவ ஹநூமத: என்று ஸீதை ப்ரார்த்திக்க, வாலிலிருந்த அந்தத் தீ ஹநுமானைப் பாதிக்காமல் இருந்தது போல், இவரையும் இந்தத் தீ பாதிக்காமல் இருந்தது என்று பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

## அத்வைதம் பிறந்த கதை

இப்படிப்பட்ட மஹாபுருஷனாகிய ஸ்ரீ ஶங்கரபகவத் பாதர் பிற்காலத்தில் வேதங்கள் முதலியவற்றுக்கு உட்கருத்துகளை மறைத்து ப்ரஹ்ம ஸத்யம் ஜகந்மித்யா ஜீவோ ப்ரஹ்மைவ நாபர: (ப்ரஹ்மன் ஒன்று தான் உண்மையான

பொருள். இந்த உலகம் என்பது பொய். அது தோற்றம், ஜீவர்கள் எனப்படுபவர்களும் ப்ரஹ்மமே) என்கிற அத்வைத வாதத்தைத் தோற்றுவித்தார். இதற்கு ஒரு காரணம் உண்டு. பகவான் ஸ்ரீமந் நாராயணனுக்கும் லீலைகள் செய்வதில் விருப்பம் உண்டு. அதன்படி ஒரு ஸமயம் ஶங்கரனை அழைத்துப் பின் வருமாறு கட்டளையிட்டார்–

த்வம் ஹி ருத்ர மஹாபாஹோ ! மோஹஶாஸ்த்ராணி காரய ।
தர்ஶயித்வாऽல்பமாயாஸம் பலம் ஶீக்ரம் ப்ரதர்ஶய ॥

*(வராஹ புராணம் 10.36)*

இதன் கருத்து :– ''நீண்ட திரண்ட தோள்களையுடைய ருத்ரனே ! உலகத்தில் மக்கள் மயங்கும்படி நீ ஶாஸ்த்ரங்கள் எழுது. அதிக ஶ்ரமம் இல்லாமலேயே மக்களுக்கு நிறைந்த பலன்களை விரைவிலேயே கொடு'' என்பதே. ஆகையால் விஷ்ணுவின் கட்டளைக் கிணங்க இவர் அத்வைதம் என்கிற புதுமையான கருத்தைத் தோற்றுவித்தார். பகவத் கீதைக்கு இவர் உரை எழுதத் தொடங்கும் பொழுது ''முன்னோர்கள் சொன்ன கருத்தைத் தழுவி எழுதுகிறேன்'' என்று சொல்லாமல், நான் 'இதற்கு வ்யாக்யாநம் எழுதுகிறேன்' என்றே சொல்கிறார்.

கடைசியாக ஸ்ரீமத் பாகவதத்தில் தொடக்கத்திலும் இறுதியிலும் உள்ள இரண்டு ஶ்லோகங்களை உங்களுக்கு விருந்தாக்கி நிறைவு செய்ய விரும்புகிறேன்.

யம் ப்ரஹ்மா வருணேந்த்ரருத்ரமருத: ஸ்துந்வந்தி திவ்யை:
ஸ்தவை:
வேதைஸ்ஸாங்க பதக்ரமோபநிஷதை: காயந்தி யம் ஸாமகா: ।
த்யாநாவஸ்திதத்கதேந மநஸா பஶ்யந்தி யம் யோகிந:
யஸ்யாऽந்தம் ந விது: ஸுராஸுரகணா: தேவாய தஸ்மை நம: ॥

இது தொடக்கத்தில் வரும் ஶ்லோகம். அப்படிப்பட்ட தேவர்களுக்கு நமஸ்காரம் என்பது ஸாரம். ''எவரை ப்ரஹ்மன், இந்த்ரன், ருத்ரன், மருத்துக்கள் உத்தமமான ஸ்தோத்ரங்களாலும், ஆறு அங்கங்களுடனும், பதம், க்ரமம், உபநிஷத் இவற்றுடன் கூடிய வேதங்களாலும்

துதிக்கிறார்களோ, ஸாமவேதமறிந்தவர்கள் எவரை காநம் செய்து மகிழ்விக்கிறார்களோ, முனிவர்கள் த்யாநத்தில் நிலைத்த மனத்தால் எவர் ஒருவரையே நினைத்து நேரில் பார்க்கிறார்களோ அந்த தெய்வத்துக்கே நமஸ்காரம் என்றார்கள்'' எனப்படுகிறது. இங்கு நாராயணன் என்று தெளிவாகச் சொல்லப்படவில்லை. ஆனால் துதிப்பவர் பெயர்களை முதலில் கோடிட்ட இடத்தில் உள்ளவர் யாவரையும் விலக்கிப்பார்த்தால் நமஸ்கரிப்பது **நாராயணனை**யே என்பது விளங்கும்.

இனி இறுதியில் உள்ள ச்லோகத்தைக் கவனிப்போம்-

கஸ்மை யேந விபாஸிதோऽயம் அதுலோ ஞாநப்ரதீப: புரா ?
தத்ரூபேண ச நாரதாய முநயே க்ருஷ்ணாய தத்ரூபிணா ।
யோகீந்த்ராய ததாத்மநா அத பகவத்த்ராதாய காருண்யத:
தத் ஶுத்தம் அமலம் விஶோகமம்ருதம் ஸத்யம் பரம்
தீமஹி ॥

**ஸ்ரீமத் பாகவதம்** ஒரு நல்ல ஜ்ஞாந விளக்கம். இதை நாராயணன் முதலில் ப்ரஹ்மனுக்குக் கொடுத்தார். பிறகு கருணையினால் அந்த பரப்ரஹ்ம ரூபத்திலிருந்து கொண்டு நாரதருக்கும், நாரதரூபத்திலிருந்து கொண்டு வ்யாஸருக்கும், வ்யாஸரூபத்திலிருந்து கொண்டு ஸ்ரீ ஶுகருக்கும், ஶுக்ராசார்யர் வடிவத்திலிருந்து கொண்டு பரீக்ஷித்துக்கும் கருணையினால் கொடுத்தாராம். இது தன்னிகரற்ற ஜ்ஞாந தீபம் என்கிறார். அந்த நாராயணனே ப்ரஹ்மன் தொடங்கி பரீக்ஷித் வரை அவரவர் உருவத்தில் இருந்து கருணையினால் கொடுத்தார் என்கிறார். அந்த பகவானே ஸத்யம், தீய குணமற்றவர், ஶோகமற்றவர், அமுதம் போல் ஆனந்தம் நிறைந்தவர். இப்படிப்பட்ட நாராயணனை நாம் எப்போதும் த்யாநம் செய்வோம்.

## ஸாரதமமான விஷயம்

ஸ்ரீமத் வேதாந்த தேஶிகர் ஓர் இடத்தில் அருளிச் செய்கிறார்-

அஸாரம் அல்பஸாரம் ச ஸாரம் ஸாரதரம் த்யஜேத் ।
பஜேத் ஸாரதமம் ஶாஸ்த்ரே ரத்நாகர இவாம்ருதம் ॥

இதன் கருத்து :— ஶாஸ்த்ரங்களில் கூறப்படும் விஷயங்களில் (ஸாரமற்றது), அல்பஸாரம் (குறைந்த ஸாரமுடையது), ஸாரம், ஸாரதரம் இந்த நான்கையும் விலக்கி ஜ்ஞாநிகள் பாற்கடலிலிருந்து அமுதத்தை எடுத்தது போல் ஸாரதமமான விஷயத்தையே எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதாகும். அதன்படி இந்த **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யில் அஸாரம், அல்பஸாரம் இரண்டுமே கிடையாது. மற்ற மூன்றுதான் உண்டு. அவற்றில் மிக மிக ஸாரமான விஷயத்தை இங்கு உங்களுக்கு எடுத்து விளக்க விரும்புகிறேன்.

## முன்னுரை

**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யில் உள்ளடங்கிய விஷயங்களை இனி கவனிப்போம். **அஹிர்புத்ந்யர்** (1) **மஹாலக்ஷ்மி,** (2) **ஸுதர்ஶநம்,** (3) **ஶரணாகதி** இவற்றைப் பற்றி நன்கு விளக்கியிருக்கிறார்.

## மஹாலக்ஷ்மி

இங்கு **மஹாலக்ஷ்மி**யைத் தனிப்பட முதலில் கூறாமல் இரண்டு இடங்களில் **விஷ்ணுவின் ஶக்தி இரண்டு வகைப்படும்** என்றும், அவை (1) **இச்சா ஶக்தி,** (2) **க்ரியா ஶக்தி** என்றும், இச்சா ஶக்தியே **மஹாலக்ஷ்மி,** க்ரியா ஶக்தி என்பதுதான் **ஸுதர்ஶநம்** என்கிறார். 49வது 50வது அத்யாயங்களில் **மஹாலக்ஷ்மி**யைத் தனிப்படவே உள்ளம் உருகி வர்ணிக்கிறார். அதில் விஷ்ணுவின் மார்பில் இருப்பவள் என்றும், விஷ்ணு பத்நி என்றும், விஷ்ணுவை ஆஶ்ரயித்து இருக்கிறாள் என்றும் கூறுகிறார். இந்த விஷயம், ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தத்தில் கூறப்பட்ட ஏகோநம் ஶேஷித்வம் என்பதே போல் உள்ளது. அதாவது, உலகங்களுக்கெல்லாம் அவள் தாய்; ஆனால் விஷ்ணுவுக்கு அடிமை என்கிற கருத்து தெளிவாகிறது.

ஸுதர்ஶநம்

அடுத்து ஸ்ரீ **ஸுதர்ஶநத்**தைக் கொண்டுதான் விஷ்ணு எல்லா கார்யங்களையும் செய்கிறார் என்றும் விஷ்ணுவே **ஸுதர்ஶந** ரூபத்தில் இருக்கிறார் என்றும் பேசுகின்றார். இந்தக் கருத்தை விளக்குவதுதான் அஹிர்புத்ந்யரின் த்யாந ஶ்லோகமாகும். அது பின் வருமாறு-

**பஹிரந்த: தமஶ்சேதி ஜ்யோதிர் வந்தே ஸுதர்ஶநம் ।**
**யேந அவ்யாஹத ஸங்கல்பம் பாதி லக்ஷ்மீதரம் மஹ: ॥**

இந்த ஶ்லோகத்தை அவர் முதல் பாகத்தில் ஒவ்வொரு அத்யாயம் தொடக்கத்திலும், பிறகு **த்யாதம் ஸக்ருத்** என்கிற ஶ்லோகத்தையும் தவறாமல் குறிப்பிடுகிறார். ஸ்வாமி தேஶிகன் **சக்ரரூபஸ்ய சக்ரிண:** என்று சொல்லும் கருத்தை ஒத்திருப்பதை எல்லோரும் காணலாம். இவர் **க்ரியா ஶக்தி** என்பதனால் அவரைக் கொண்டுதான் எம்பெருமான் தன் ஸங்கல்பத்தை நிறைவேற்றிக் கொள்கிறார் என்கிறார். இங்கு அவர் பெருமானைக் குறிப்பிடும்பொழுது **லக்ஷ்மீ தரம் மஹ:** என்று லக்ஷ்மியை மார்பில் தாங்கியிருக்கும் ஜோதி என்றே மிக மிகப் பெரிய ஸ்தாநத்தில் வைத்துத் தன் பக்தியைக் காட்டுகிறார்.

ஶரணாகதி

**ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்**தில் ஸ்வாமி தேஶிகன் ஶரணாகதியை விளக்கும் பொழுது—

**ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம் ।**
**ரக்ஷிஷ்யதீதி விஶ்வாஸ: கோப்த்ருத்வ வரணம் ததா ॥**
**ஆத்ம நிக்ஷேப கார்பண்யே ஷட்விதா ஶரணாகதி: ।**

என்று முடித்தபின், **ஶரணாகதிரித்யுக்தா ஸா தேவேऽஸ்மிந் ப்ரயுஜ்யதாம்** என்கிற ஒரு வாக்யத்தையும் நான் வாசித்திருந்தது இங்கு **அஹிர்புத்ந்ய**ரால் சொல்லப் பட்டிருப்பதைப் பார்த்த பிறகுதான் இந்த ஶ்லோகம்

அனைத்துமே **அஹிர்புத்ந்ய**ரால் எழுதப்பட்டவை என்பதையும், அதைத்தான் **ஸ்வாமி தேஶிகன்** எடுத்துக் காட்டியிருக்கிறார் என்பதையும் உணர்ந்தேன்.

## நாடி ஶுத்தீகரித்தல் விளக்கம்

மனிதர்களுடைய ஶரீரத்தில் கால்கள் முதல் தலைவரை 30 க்கு மேல் நாடிகள் இருப்பதாகச் சொல்கிறார். இவற்றில் கீழிருந்து மேல் வரை செல்லக் கூடிய நாடிகள் சில. மற்றவை இடுப்புவரையிலும், கை விரல்களிலிருந்து இரண்டு புஜங்கள் வரையிலும், கழுத்திலிருந்து இரண்டு மூக்கு த்வாரங்களுக்கும் இரண்டு கால்களுக்கும் மற்றும் இரண்டு கண்களுக்கும், பின் புறம் பிடரியிலிருந்து தலை வரையிலும் துண்டு துண்டாக நாடிகள் இருப்பதாகவும் அஷ்டாங்க யோகம் செய்ய விரும்புபவர்கள் அந்த அந்த அங்கங்களில் யமம், நியமம், ஆஸநம் இவற்றைச் செய்து பிறகு ப்ராணாயாமத்தைச் செய்து பழக வேண்டும் என்றும் எல்லா நாடிகளும் ஶுத்தமாவதற்கு மூன்று மாத காலம் ஆகும் என்றும் ஸ்ரீ அஹிர்புத்ந்யர் நன்கு விளக்குகிறார்.

இது மட்டுமன்று, திருவாராதநம் முடிந்த பிறகு கடைசியாக பர்யங்காஸநம் ஸமர்ப்பித்த பின் **ப்ரக்ருதி வியுக்தமான நம் ஆத்மாவையும் ஸமர்ப்பிக்க வேண்டும்** என்று கூறுகிறார். இதைக் கேட்ட ஸ்ரீ நாரதர் **அது எப்படி ப்ரக்ருதி வியுக்த ஆத்மாவை ஸமர்ப்பிப்பது ?** என்று கேள்வி எழுப்ப அதன் விளக்கமாகவே பற்பல விஷயங்களைப் பல அத்யாயங்களில் சொன்ன பிறகு 40-வது அத்யாயத்தில் ஶரணாகதியை விளக்குகிறார்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் மூன்று மந்த்ரங்களை மூன்று **ரஹஸ்யங்கள்** என்று பேசுவர். ஸ்வாமி தேஶிகன் **ரஹஸ்யத்ரயஸாரம்** என்றே ஸம்ஸ்க்ருதம் அதிகம் தெரியாதவர்களுக்காவே மணிப்ரவாள நடையில் இதை எழுதினார். அந்த மூன்று மந்த்ரங்களில் (1) **அஷ்டாக்ஷரம்,** (2) **த்வயம்,** (3) **சரம ஶ்லோகம்**-இவற்றில் **சரம ஶ்லோகம்**

அனைத்துமே **அஹிர்புத்ந்ய**ரால் எழுதப்பட்டவை என்பதையும், அதைத்தான் **ஸ்வாமி தேஶிகன்** எடுத்துக் காட்டியிருக்கிறார் என்பதையும் உணர்ந்தேன்.

## நாடி ஶுத்தீகரித்தல் விளக்கம்

மனிதர்களுடைய ஶரீரத்தில் கால்கள் முதல் தலைவரை 30 க்கு மேல் நாடிகள் இருப்பதாகச் சொல்கிறார். இவற்றில் கீழிருந்து மேல் வரை செல்லக் கூடிய நாடிகள் சில. மற்றவை இடுப்புவரையிலும், கை விரல்களிலிருந்து இரண்டு புஜங்கள் வரையிலும், கழுத்திலிருந்து இரண்டு மூக்கு த்வாரங்களுக்கும் இரண்டு கால்களுக்கும் மற்றும் இரண்டு கண்களுக்கும், பின் புறம் பிடரியிலிருந்து தலை வரையிலும் துண்டு துண்டாக நாடிகள் இருப்பதாகவும் அஷ்டாங்க யோகம் செய்ய விரும்புபவர்கள் அந்த அந்த அங்கங்களில் யமம், நியமம், ஆஸநம் இவற்றைச் செய்து பிறகு ப்ராணாயாமத்தைச் செய்து பழக வேண்டும் என்றும் எல்லா நாடிகளும் ஶுத்தமாவதற்கு மூன்று மாத காலம் ஆகும் என்றும் ஸ்ரீ அஹிர்புத்ந்யர் நன்கு விளக்குகிறார்.

இது மட்டுமன்று, திருவாராதநம் முடிந்த பிறகு கடைசியாக பர்யங்காஸநம் ஸமர்ப்பித்த பின் **ப்ரக்ருதி வியுக்தமான நம் ஆத்மாவையும் ஸமர்ப்பிக்க வேண்டும்** என்று கூறுகிறார். இதைக் கேட்ட ஸ்ரீ நாரதர் **அது எப்படி ப்ரக்ருதி வியுக்த ஆத்மாவை ஸமர்ப்பிப்பது ?** என்று கேள்வி எழுப்ப அதன் விளக்கமாகவே பற்பல விஷயங்களைப் பல அத்யாயங்களில் சொன்ன பிறகு 40-வது அத்யாயத்தில் ஶரணாகதியை விளக்குகிறார்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் மூன்று மந்த்ரங்களை மூன்று **ரஹஸ்யங்கள்** என்று பேசுவர். ஸ்வாமி தேஶிகன் **ரஹஸ்யத்ரயஸாரம்** என்றே ஸம்ஸ்க்ருதம் அதிகம் தெரியாதவர்களுக்காவே மணிப்ரவாள நடையில் இதை எழுதினார். அந்த மூன்று மந்த்ரங்களில் (1) **அஷ்டாக்ஷரம்,** (2) **த்வயம்,** (3) சரம ஶ்லோகம்-இவற்றில் **சரம ஶ்லோகம்**

என்பது பகவான் அர்ஜுநனுக்குக் கீதையை உபதேஶித்துக் கடைசியாக ஒரு ஶ்லோகத்தைச் சொல்லி முடித்தார். **சரமம்** என்றால் கடைசி. அதனால் அதற்கு இப்பெயர் வந்தது.

**த்வயம்** என்பது இரண்டு அடிகளாக உள்ளது. அதனால் இதை **த்வயம்** என்றார்கள். ஶரணுகதி செய்யும் பொழுது ப்ரார்த்தனை எல்லாம் செய்த பிறகு இந்த மந்த்ரத்தைச் சொல்லி முடிப்பர். அதனால் இதை ஶரணுகதிக்குக் **கரண** மந்த்ரம் என்று சொல்வர்.

இனி முதலாவதான அஷ்டாக்ஷரத்தைக் கவனிப்போம். வேதத்தில் **ஓம்** என்பதை ஒரு எழுத்து என்றும், **நம:** என்பதை இரண்டு அக்ஷரங்கள் என்றும் **நாராயணுய** என்பதை ஐந்து அக்ஷரங்கள் என்றும், ஆக எட்டு அக்ஷரங்கள் கொண்டதால் **ஏதத் வை நாராயணஸ்யாஷ்டாக்ஷரம் பதம்** என்று இதற்கு **அஷ்டாக்ஷரம்** என்ற பெயரை வேதம் சொல்லிற்று. நம் பெரியோர் கூட **அஷ்டாக்ஷரம்** என்றே இதைச் சொல்லி வருகிறுர்கள். ஆனால் **ஸ்ரீ அஹிர்புத்ந்யர்** இதற்கு **மூல மந்த்ரம்** என்று இந்த நூலில் பெயர் சூட்டினார். இதை அனுஸரித்தே **ஸ்வாமி தேஶிகனும் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில்** மூல மந்த்ராதிகாரம் என்றே அதிகாரத்துக்குப் பெயர் சூட்டியதை யாவரும் நன்கு கவனித்தல் தகும்.

இவை எல்லாவற்றையும் நாம் மனத்தில் சேர்த்துப் பார்க்கும் பொழுது இவர் **ஸ்ரீ வைஷ்ணவ அக்ரேஸரர்** என்று கூறிய வார்த்தை எவ்வளவு பொருத்தமானது என்பது யாவருக்கும் விளங்கும்.

## ஸ்ரீ விஷ்ணுவின் தந்நிகரற்ற சிறப்பு

இந்த உலகத்தில் முக்குணங்கள் நிறைந்தவர்களே உள்ளனர். **ஸத்வம்** என்பது மிக மிக உயர்ந்த குணம் என்றாலும், **ரஜஸ்**, **தமஸ்** என்கிற இரண்டும் சிறிதளவாவது மஹான்களிடம் கூடக் கலந்தே இருக்கும். அதனால் மஹான்களையும் முனிவர்களையும் **ஸாத்விகர்** என்கிறேம். இதே போல் ரஜோ குணம் ஓங்கி ஸத்வமும் ரஜஸ்ஸும்

தாழ்ந்து இருப்பவர்களை **ராஜஸர்** என்போம். இவர்கள் சிறந்த வாழ்க்கையைப் பெறவே அல்லும் பகலும் அலைந்து திரிந்து தநம் சேமிப்பதிலும் போக போக்யங்களில் ஈடுபட்டும் இருப்பர். மூன்றாவதாகத் **தமோ குணம்** ஓங்கி **ஸத்வம் ரஜஸ்** இரண்டும் தாழ்ந்து நிற்பவர்கள்- கொலை, கொள்ளை முதலிய தீயச் செயல்களில் இறங்கியிருப்பர். இந்த மூவரையும் கண்ணன் பகவத் கீதையில் விரிவாகவே விளக்கியிருக்கிறார்.

இந்த மூவகைப்பட்ட மனிதர்களில் நடுவில் இருக்கும் ராஜஸர்களே நூற்றுக்கு எண்பது விழுக்காடு இருக்கிறார்கள். ஆகையால் இவர்களிடம் விஷ்ணுவின் பெருமையை யார் சொன்னாலும் எடுபடாது. ஆகையால் இவர்கள் ஶிவனையும், விநாயகர், ஸுப்ரஹ்மண்யர், தேவி, காளி முதலிய தெய்வங்களையே வழிபடுவர். விஷ்ணுவையும் இவர்களுடன் சேர்த்து ஸமமாகவே மதிப்பிடுவர். ஆகையால் **அஹிர்புத்ந்யர்** வாயாலேயே சொல்லப்படும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பெருமையும், மஹாலக்ஷ்மீ, ஸுதர்ஶநம் இவர்களின் பெருமையும் இந்த **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யில் அடங்கி இருப்பதால், இதை வாசிக்கும் ஒரு சிலராவது மனம் திருந்தி விஷ்ணுவின் பெருமையை உணர்ந்து ஶரணாகதி செய்து பேரின்பம் பெறலாமே என்கிற கருத்தில் தான் இந்த மொழி பெயர்ப்பைச் செய்யத் தொடங்கினேன்.

## ஸ்ரீ அஹிர்புத்ந்யரின் நிலை

நான் இப்படிச் சொன்னதால் ருத்ரனைத் தாழ்த்தி விட்டதாக யாரும் நினைக்க வேண்டாம்.. உலகமெல்லாம் அழிந்து பல யுகங்கள் நிஸ்தரங்க இவார்ணவ: (அலையில்லாத கடல் போல்) என்று **அஹிர்புத்ந்ய**ரால் வர்ணிக்கப்பட்ட நிலைபற்றி ஸ்ருஷ்டி (படைப்பு) தொடங்கும் பொழுது முதல் முதலில் விஷ்ணுவின் நாபியிலிருந்து ஓர் தாமரை தோன்றி அந்தத் தாமரையிலிருந்து நான்முகன் தோன்றினான். அந்த நான்முகனிடமிருந்து ருத்ரன் பிறந்தான் என்பது நன்றாக விளக்கப்பட்டது.

ஆகவே 1) மஹாவிஷ்ணு பிராட்டியுடன் கூடியிருக்கிறார் (2) நான்முகன், 3) ருத்ரன் என்பது தான் படைப்பின் வரிசை நிலை. ஆகையால் ருத்ரன் உலகத்தில் எல்லா தேவர்களுக்கும் மேலானவர் என்பதில் ஐயமில்லை. இவ்விஷயத்தை இந்த முன்னுரையிலேயே கேஶவ என்கிற சொல்லின் விளக்கமாக ருத்ரன் சொன்ன விஷயத்தைச் சுட்டிக் காட்டியிருக்கிறேன். **அஹிர்புத்ந்யர்** ப்ரஹ்மனின் தலையைக்கிள்ளிய விஷயம் பற்றி நாரதருக்குத் தன் வாயாலேயே சொல்கிறார். அத்யாயம் 25-ல் ஶ்லோகம் 14-15ல் இது உள்ளது. இந்த வாக்யம் அதில் உள்ளது.

மம நாராயணேநோக்தம் புண்யே பதரிகாஶ்ரமே ।
பிதாமஹ ஶிரஶ்சேத மஹாபாதக ஶாந்தயே ॥

தான் செய்த பெரிய பாபத்தைப் பற்றி நாரதரிடம் வெளிப்படையாகவே இவர் தெரிவித்தது மிக மிகப் பெருந்தன்மை ஆகும். மூடி மறைக்காமல் சொன்னது பெருந்தன்மையே. **அஹிர்புத்ந்யர்** உலகத்துக்கு முன் வரிசையில் மூன்றாவதாக நிற்கிறார் என்பதில் ஐயமில்லை. அதனால்தான் ருத்ரோ மஹர்ஷி: என்று வேதம் கூறுகிறது என்கிற நிலையை யாரும் மறுக்கலாகாது.

ஆகையால் உண்மை நிலையை உணர்ந்து பிராட்டியுடன் கூடிய நாராயணன் திருவடிகளில் ஶரணாகதி செய்து மறு பிறவியற்ற நித்யாநந்தரூபமான ஸ்ரீ வைகுண்ட ப்ராப்தியும், **ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்** என்றபடி ஶேஷி உகந்த கைங்கர்யங்களைச் செய்து எல்லோரும் வாழ வேண்டும் என்கிற ப்ரார்த்தனை செய்து கொண்டு இதைத் தலைக் கட்டுகிறேன்.

**அஹிர்புந்த்ய ஸம்ஹிதையின்** இரண்டாம் பாகத்தில் பற்பல நல்ல விஷயங்கள் உள்ளன. அவற்றில் ஸாரதமமான இரண்டு விஷயங்களை மட்டும் இங்கு குறிப்பிடுகிறேன்-

1. **ஸ்ரீ ந்ருஸிம்ஹ அநுஷ்டுப் மந்த்ரம்** இங்கு இரண்டு மூன்று அத்யாயங்களில் பற்பல கோணங்களில் கருத்து விளக்கப்படுகிறது. மற்றொரு விஷயம் என்னவென்றால் **ஸ்ரீ ந்ருஸிம்ஹ அநுஷ்டுப் மந்த்ரம்** 9 பதங்கள் அடங்கியது. பாருங்கள் ! அது இங்கு 54-வது அத்யாயத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது. **அஹிர்புத்ந்யர்** இதை வேண்டுமென்றே இப்படி அமைத்திருக்கிறார் என்று தோன்றுகிறது. Numerology பற்றிப் பலர் அறிவர். அதன்படி 5 + 4 = 9 என்கிற பொருத்தம் நன்கு கவனிப்பவர்களுக்கு விளங்கும். இதே மந்த்ரத்திற்கு ஸாங்க்யத்திலும், யோகத்திலும், பாஶுபதத்திலும், ஸாத்விகத்திலும் எப்படிக் கருத்து விளக்கம் சொல்கிறார்கள்என்பதையும் குறிப்பிடுகிறார்.

2. **புருஷ ஸூக்தம், ஸ்ரீ ஸூக்தம்** இவற்றைப் பற்றி ருக்குகளின் எண்ணிக்கையில் ஏற்றத் தாழ்வு இருப்பதாகவும் குறிப்பிடுகிறார். ஸ்ரீ என்கிற மஹாலக்ஷ்மியை இவர் விஷ்ணுவின் ஸங்கல்பரூபமான ஶக்தி என்று பல இடங்களில் கூறுகிறார். ஆனால், **அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா** என்று ஸீதாபிராட்டி சொன்னது போல், **அநந்யா** என்கிற சொல்லை வைத்தே பிராட்டியின் பெருமையைப் பேசுகிறார். இது மட்டுமன்று - ஶேஷ ஶேஷிபாவம் பற்றி விளக்கும் பொழுது நம் போன்ற **சித் அசித்** ரூபமான உலகமனைத்துக்கும் பிராட்டி ஶேஷி என்றும், ஆனால் விஷ்ணுவுக்குப் பிராட்டி ஶேஷ பூதை என்றும், தெளிவாகச் சொல்கிறார். ராமாநுஜ ஸித்தாந்தத்தில் பிராட்டிக்கு **ஏகோந ஶேஷித்வம்** என்று சொல்வதையே இவரும் ஏற்றுக் கொள்கிறார்.

**புருஷஸூக்தம், ஸ்ரீஸூக்தம்** இவ்விரண்டையும் நன்கு பயின்று அர்த்தம் புரிந்து பக்தி ஶ்ரத்தையுடன் மிகவும் கவனத்துடனும் பாராயணம் செய்தால் கோரிய பலன்கள் அனைத்தும் கிடைக்கும் என்றும் சொல்கிறார். 60-வது அத்யாயத்தில் இந்த ஶாஸ்த்ரத்தை **அஹிர்புத்ந்யர்** நிறைவு செய்கிறார். அப்பொழுது யாருக்குச் சொல்லலாம், யாருக்குச் சொல்லலாகாது என்று தெளிவாகப் பட்டியலிட்டுக் காட்டியிருக்கிறார்.

இந்த **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையின்** தொடக்கத்தில் ஸ்ரீ பரத்வாஜர் என்கிற முனிவர் தேவகங்கையில் ஸ்நாநம் செய்து விட்டு பகவத் த்யாநம் செய்து கொண்டிருந்த துர்வாஸர் என்கிற முனிவரிடம் சென்றதாகவும், அவரை நமஸ்கரித்து ''சில ஸந்தேஹங்கள் உள்ளன. தேவரீர் தான் அவற்றைத் தீர்த்து வைக்க வேண்டும்'' என்று தொடங்கி ஸுதர்ஶநத்தின் பெருமை வாக்குக்கோ, மனதுக்கோ எட்டாதது என்றும் சொல்லி இந்த ஸுதர்ஶநம் என்பது எது? அதன் ஶக்தி என்ன? அது யாரைச் சார்ந்தது? அந்த ஶக்தி அவருக்கு ஸ்வயமாக ஏற்பட்டதா? அல்லது பிறர் மூலமாகவா? என்றெல்லாம் பற்பல ஸந்தேஹங்களைக் கேட்டார் என்று கூறப்பட்டுள்ளது.

ஸ்ரீ துர்வாஸரும் முன்னொரு காலத்தில் ஸ்ரீ நாரத முனிவர் ஸ்ரீ ஶங்கரரிடம் இதே கேள்விகளைக் கேட்டதாகவும், அதற்கு ஸ்ரீ ஶங்கரர் சொன்ன பதில்களை விளக்கமாகத் தான் கேட்டு அறிந்ததாகவும் சொல்கிறார்.

நாரதருக்கு **அஹிர்புத்ந்யர்** சொன்ன வகையில் இந்த ஶாஸ்த்ரம் நிறைவு பெற்றவுடன் துர்வாஸ முனிவரும் இந்த ஶாஸ்த்ரத்தை யாருக்குச் சொல்லலாம், யாருக்குச் சொல்லலாகாது என்று **அஹிர்புத்ந்யர்** சொன்னது போல் சொல்லும் பொழுது ''ஒரு பெரிய விஷயம், ப்ராத: ஸ்நாநம் செய்யாதவனுக்குச் சொல்லலாகாது'' என்று குறிப்பாகச் சொன்னார். இதையெல்லாம் பார்க்கும் பொழுது பகவான் கீதையில் அர்ஜுநனுக்கு வேதாந்தங்கள் அனைத்தையும் விளக்கிப் பிறகு **இதம் தே** நாऽதபஸ்காய நாऽபக்தாய **கதாசந** என்று தொடங்கி, சொல்லத் தகாதவர்கள் யார் என்று காட்டிய பட்டியல் போலவே இங்குமுள்ளது என்பது நன்கு அறிய முடிகிறது.

ஆக ஸ்ரீ பரத்வாஜர் துர்வாஸர் உரையாடல் தொடங்கி, நாரதர் அஹிர்புந்த்யர் உரையாடல் மூலமாக உள்ள ஶாஸ்த்ரம் நிறைவு பெற்றவுடன் மீண்டும் துர்வாஸர் பரத்வாஜருக்குச் சொல்லிமுடிக்கிறார் என்பது இந்நூலின் சிறப்பான அம்ஶமாகும்.

## முன்னோர் சென்ற வழியில்

ஸ்ரீ கம்ப நாட்டாழ்வார் வால்மீகி ராமாயணம் கதையைத் தமிழில் கவிதையாக எழுத உத்தேஸித்து **ராம காதை** என்கிற பெயரில் பெருமாள் திருக்கோவிலின் பின்புறம் உள்ள **மேட்டு அழகியசிங்கர்** ஸந்நிதியில் பல பெரியோர்களின் முன்னிலையில் அரங்கேற்றம் செய்யச் சென்றார். அப்பொழுது பெருமானே **நம் ஶடகோபனைப் பாடினையோ?** என்று கேட்டதாகவும், அதனால் கம்பர் **ஶடகோப அந்தாதி** என்ற காவ்யத்தை இயற்றியதாகவும் சொல்வர். அதன்படி ஆதியோடு அந்தமாக முழுக்க முழுக்க ஸ்ரீமந் நாராயணனுடைய பெருமையையே **ஸ்ரீ அஹிர்புத்நயர்** இந்நூலில் பலபடியாக விளக்கி இருப்பதனால் அதற்கு முன்பு ஸ்ரீ ஶடகோபன் பற்றி நினைப்பது இந்த மொழிபெயர்ப்புக்கு மகுடம் வைத்தது போல ஆகும் என்கிற எண்ணம் அவன் க்ருபையினாலேயே எனக்கு ஏற்பட்டது.

ஸ்ரீ ஶடகோபனைப் பேசும்பொழுது ஸ்ரீ மதுரகவி ஆழ்வாரை நினைத்தே ஆக வேண்டும். திவ்ய ப்ரபந்த ஸேவை தொடங்கும் இடங்களிலெல்லாம் அவருடைய **கண்ணிநுண் சிறுத்தாம்பு** என்கிற 10 பாசுரங்களையும் ஸேவிப்பதும், அவ்வாறே சாற்றுமுறை காலத்தில் அதே ப்ரபந்தத்தை மீண்டும் ஸேவித்து நிறைவு செய்வதும் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் அமைந்திருக்கும் ஓர் அழகிய ஏற்பாடு.

ஆகையால் ஸ்ரீ மதுரகவியின் ப்ரபந்தத்தை இங்கு அச்சிட்டு விட்டுப் பிறகு இந்த மொழிபெயர்ப்பின் தொடக்கத்தில் **உயர்வற உயர் நலம்** என்கிற முதல் பாசுரத்தையும் மொழிபெயர்ப்பின் நிறைவுப் பகுதியில் **பிறந்தார் உயர்ந்தே** என்று முடியும் பாசுரத்தையும் இங்கு அமைத்திருக்கிறேன்.

வாசகர்கள் இதை மகிழ்ச்சியுடன் வரவேற்பர் என்று நம்புகிறேன்.

**—ஆசிரியர்**

## கண்ணிநுண் சிறுத்தாம்பு (மதுரகவி ஆழ்வார்)

★ ★ ★

அவிதிதவிஷயாந்தரஶ்ஶடாரேருபநிஷதாமுபகாநமாத்ரபோக:।
அபி ச குணவஶாத்ததேகஶேஷீ மதுரகவிர்ஹ்ருதயே மமாऽऽவிரஸ்து॥

வேறொன்றும் நான் அறியேன் வேதம் தமிழ் செய்த
மாறன் சடகோபன் வண்குருகூர் - ஏறு எங்கள்
வாழ்வாமென் றேத்தும் மதுரகவியார் எம்மை
ஆள்வார் அவரேயரண்.

✱ ✱ ✱

கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணிய பெருமாயன் என்னப்பனில்
நண்ணித் தென் குருகூர் நம்பியென்னக்கால்
அண்ணிக்கு மமுதூறும் - என் நாவுக்கே. (1)

நாவினால் நவிற்று இன்பமெய்தினேன்
மேவினேன் அவன் பொன்னடி மெய்ம்மையே
தேவுமற்றறியேன் குருகூர் நம்பி
பாவினின்னிசை பாடித் திரிவனே. (2)

திரிதந்தாகிலும் தேவபிரானுடை
கரியகோலத் திருவுருக் காண்பன் நான்
பெரியவண் குருகூர் நகர் நம்பிக்கு ஆள்
உரியனாய் அடியேன் பெற்ற நன்மையே. (3)

நன்மையால் மிக்க நான்மறையாளர்கள்
புன்மையாகக் கருதுவராதலின்
அன்னையாய் அத்தனாய் என்னையாண்டிடும்
தன்மையான் சடகோபன் என் நம்பியே. (4)

நம்பினேன் பிறர் நன்பொருள் தன்னையும்
நம்பினேன் மடவாரையும் முன்னெலாம்
செம்பொன் மாடத் திருக்குருகூர் நம்பிக்கு
அன்பனாய் அடியேன் சதிர்த்தேன் இன்றே. (5)

இன்று தொட்டும் எழுமையும் எம்பிரான்
நின்று தன் புகழ் ஏத்த அருளினான்
குன்றமாடத் திருக்குருகூர் நம்பி
என்றும் என்னை இகழ்விலன் காண்மினே. (6)

கண்டுகொண்டு என்னைக் காரிமாறப்பிரான்
பண்டை வல்வினை பாற்றியருளினான்
எண்திசையும் அறிய இயம்புகேன்
ஒண்தமிழ்ச் சடகோபனருளையே. (7)

அருள் கொண்டாடும் அடியவர் இன்புற
அருளினான் அவ்வருமறையின் பொருள்
அருள் கொண்டு ஆயிரம் இன் தமிழ் பாடினான்
அருள் கண்டீர் இவ்வுலகில் மிக்கதே. (8)

மிக்கவேதியர் வேதத்தினுட் பொருள்
நிற்கப்பாடி என் நெஞ்சுள் நிறுத்தினான்
தக்கச் சீர் சடகோபன் என் நம்பிக்கு ஆள்
புக்கக் காதல் அடிமைப் பயனன்றே. (9)

பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும்
செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான்
குயில் நின்றார் பொழில் சூழ் குருகூர் நம்பி
முயல்கின்றேன் உன்தன் மொய்கழற்கன்பையே. (10)

அன்பன்தன்னை அடைந்தவர்கட்கெல்லாம்
அன்பன் தென் குருகூர் நகர் நம்பிக்கு
அன்பனாய் மதுரகவி சொன்ன சொல்
நம்புவார் பதி வைகுந்தம் காண்மினே. (11)

*மதுரகவி ஆழ்வார் திருவடிகளே ஶரணம்*

# திருவாய்மொழி (நம்மாழ்வார்)

★ ★ ★

பக்தாம்ருதம் விஶ்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீ ஶடகோபவாங்மயம் ।
ஸஹஸ்ர ஶாகோபநிஷத் ஸமாகமம்
நமாம்யஹம் த்ராவிட வேதஸாகரம் ॥

திருவழுதி நாடென்றும் தென் குருகூரென்றும்
மருவினியவண் பொருநலென்றும் அருமறைகள்
அந்தாதி செய்தானடியிணையே எப்பொழுதும்
சிந்தியாய் நெஞ்சே தெளிந்து.

மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணும்
இனத்தாரையல்லாதிறைஞ்சேன் – தனத்தாலும்
ஏதும் குறைவிலேன் எந்தை சடகோபன்
பாதங்கள் யாமுடைய பற்று.

ஏய்ந்த பெருங்கீர்த்தியிராமாநுசமுனிதன்
வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்- ஆய்ந்த பெருஞ்
சீரார் சடகோபன் செந்தமிழ் வேதம் தரிக்கும்
பேராத வுள்ளம் பெற.

வான் திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ் மேல்
ஆன்ற தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற
முதல்தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த
இதத்தாய் இராமானுசன்.

மிக்கவிறை நிலையும் மெய்யா முயிர்நிலையும்
தக்க நெறியும் தடையாகித் தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்
யாழினிசை வேதத்தியல்.

உயர்வற வுயர்நலம் உடையவன் யவனவன்
மயர்வற மதிநலம் அருளினன் யவனவன்
அயர்வறுமமரர்கள் அதிபதியவனவன்
துயரறு சுடரடி தொழுதெழு என் மனனே.

*நம்மாழ்வார் திருவடிகளே ஶரணம்*

# பொருளடக்கம்

★ ★ ★

|| श्रीः ||

ஸ்ரீ லக்ஷ்மீ ஹயவதந பரப்ரஹ்மணே நம:

அஹயே புத்ந்யாய நம:

अहये बुध्न्याय नमः



அஸ்மத் குருப்யோ நம:

அஸ்மத் பரமகுருப்யோ நம:

அஸ்மத் ஸர்வகுருப்யோ நம:



## முதல் அத்யாயம்

बहिरन्तस्तमश्छेदि ज्योतिर्वन्दे सुदर्शनम् ।
येनाऽव्याहतसङ्कल्पं भाति लक्ष्मीधरं महः ॥

வெளியிலிருக்கும் இருளையும், மனத்துள் இருக்கும் இருளையும் போக்கவல்லதான **ஸுதர்ஶநம்** என்கிற ஜோதியை வணங்குகிறேன். லக்ஷ்மியை மார்பில் தாங்கும் ஜோதியான விஷ்ணுவும் இந்த ஸுதர்ஶநத்தின் மூலமே தன்னுடைய ஸங்கல்பம் அனைத்தையும் தடையில்லாமல் நிறைவேற்றுகிறார். அப்படிப்பட்ட ஸுதர்ஶநத்தை வணங்குகிறேன்.



### **ஶாஸ்த்ரம் பிறந்த வரலாறு** என்கிற **1-வது அத்யாயம்**

அகார, உகார, மகார ரூபமான ப்ரணவத்தின் உருவமாகவும், **அவ்யக்தம்** என்கிற **ப்ரக்ருதி** ரூபமாகவும், அதிலிருந்து பிறந்த தத்வங்கள் இந்த்ரியங்கள் (பலன்கள்) முதலான ரூபத்தை உடையவரும், பரவாஸுதேவன், வ்யூஹம் (வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன் அநிருத்தன்) முதலிய உருவங்களாகவும், சக்ரத்தின் வடிவத்தில் இருக்கும் சக்ரதாரியான ஸ்ரீமந் நாராயணனுக்கு

ப்ரணாமங்கள். சந்த்ரன், ஸூர்யன், அக்நி இவற்றை ஆபரணமாகக் கொண்டவளும், நித்யையும், சந்த்ரனை ஶிரஸில் அணிந்தவளும், ஐந்து பிந்துக்களை உடையவளும், விஷ்ணுவின் ஶக்தியும், ஐந்து கார்யங்களைச் செய்பவளுமான இவளை (மஹாலக்ஷ்மியை)ப் போற்றுவோமாக.

## துர்வாஸர் முநிவரைக் குறித்து ஸுதர்ஶநத்தின் பெருமையின் காரணம் பற்றி பரத்வாஜரின் கேள்வி

தேவலோகத்திலிருக்கும் கங்கையில் ஸ்நாநம் செய்து உயர்ந்த ஆஸநத்தில் அமர்ந்திருக்கும் குற்றமற்ற துர்வாஸரைப் பரத்வாஜர் கேட்டார்-

**பரத்வாஜர் :—** பொறாமை முதலிய தீயகுணங்களற்ற ஆநந்தமயமான மனத்தை உடைய ஸ்வாமிந் ! தவங்களுக்கு இருப்பிடமானவரே ! எனக்கு ஓர் ஸந்தேஹம் உள்ளது. அதைத் தேவரீர் விளக்கி அருள வேண்டும். **அக்நீஷோமம்** என்கிற வேள்வியைச் செய்யும் பொழுது **அதர்வண வேதத்**தின் கருத்தை விளக்குவதிலும், மிகப் பெரிய பலன்களைக் கொடுக்கவல்ல பலவகை அஸ்த்ரங்களை ஏவுவதிலும், ஸம்ஹாரத்திலும் அவரவர்கள் ஸாமர்த்யத்தினால் இயங்கும் எட்டு திக்பாலகர்களின் அஸ்த்ரங்களின் கூட்டத்திலும், அக்நி, ஸூர்யன், சந்த்ரன் இவர்களின் கதி(வழி)களின் மிகப் பெரிய பலனைத் தரவல்ல ஶக்திகளிலும், அஸ்த்ரங்களுக்கு ஆதாரபூதமான ஆயுதங்களின் கூட்டத்திலும், பிரமன், ருத்ரன் முதலியவர்களால் கண்டுபிடிக்கப்பட்ட (படைக்கப்பட்ட) மூன்று உலகங்களையும் காப்பதும், அழிப்பதும், படைப்பதுமாகிய திறமை வாய்ந்த கார்யங்களிலும், பல முநிவர்கள் கண்டு பிடித்த பெரிய பலன்களைத் தரவல்ல பல பல மந்த்ரங்களிலும், **கதை,** சங்கு, சக்ரம், வில் முதலிய விஷ்ணுவைச் சார்ந்த ஆயுதங்களிலும் மஹாலக்ஷ்மியைச் சார்ந்த கலப்பை, தாமரை முதலிய பெரிய பலன்களைத் தரவல்ல அஸ்த்ரங்களிலும் மற்றும் வேறு இடங்களிலும் பெருமையை விளக்கும் விஷயங்கள் அனைத்தும் ஸுதர்ஶநத்தை ஆஶ்ரயித்திருப்பதாக ஆங்காங்கு

கூறப்பட்டுள்ளன. இந்த மஹிமை எல்லாம் ஸுதர்ஶநத்துக்கு எப்படி ஏற்பட்டது? ஸ்வயமாகவா? வேறு ஒருவரை அண்டியிருப்பதாலா?

மேலும் ஸுதர்ஶநம் என்கிற பெயர் எத்தகையது? அதன் பொருளாக யார் கருதப்படுகிறார்? அவரால் என்ன கார்யம் செய்யப்படுகிறது? அந்த ஸுதர்ஶநம் எவ்வாறு உலகத்தை வ்யாபித்து இருக்கிறார்? முநிஶ்ரேஷ்டரே ! வ்யூஹங்கள் எவை? எத்தனை வகைப்படும்? அவை எப்படிப்பட்டவை? அவைகளால் ஏற்படும் பலன்கள் எவை? அவைகளின் **வ்யூஹீ** (ஆதாரமாக உள்ளவர்) எத்தகையவர்? அவருக்கு விஷ்ணுவுடன் தொடர்பு எந்த வகையானது? எந்தச் செயல் செய்யக் கூடியவர் என்று கூறப்படுகிறது? அவரால் நியமிக்கப்படும் பொருள் ஒரே இடத்தில்உள்ளதா? வேறு இடங்களிலும் ஸந்தேஹம் எனக்கு ஏற்பட்டது. ஸ்வாமின் ! இதை எனக்கு நன்கு தீர்த்துவைக்க வேண்டும். முறைப்படி ப்ரணமங்கள் செய்து தேவரீரை அணுகினேன். இதைக் கற்பிக்க வேண்டும்.

## கேள்வியைப் பாராட்டி துர்வாஸர் சொன்ன பதில்

**துர்வாஸர்** :— குழந்தாய் ! பலவாறாக நீ கேட்ட கேள்விகள் பொருத்தமானதே. நல்ல ஒழுக்க முடையவனே! நீ செய்த பலவகையான தவங்களே இந்த ஸந்தேஹங்களைத் தீர்க்கக் கூடியவை.

## தீவினைகள் எல்லாம் தீர்ந்து போனவனுக்கே பரம் பொருளைப் பற்றி அறிய ஆவல் எழும்

மனிதர்களுக்கு மனத்திலிருக்கும் அஶுத்திகள் வகையான உபாயங்கள் மூலம் அழிந்த போதுதான் **பரம்பொருளைப்** பற்றி அறிய ஆவல் பிறக்கும்.

## இவ்விஷயத்தில் பிரமன் முதலியவருக்கும் ஐயமே

கீழே சொன்ன விஷயத்தைப் பற்றி உனக்கு மட்டுமே ஸந்தேஹம் என்பதல்ல. பிரமன் முதலிய ஞாநிகள் கூட ஐயம் கொண்டு இவ்விஷயத்தை அறிய முயற்சி செய்கின்றனர்.

## அவருக்கு அஹிர்புத்ந்யரிடமிருந்து தத்வத்தின் தீர்மானம் கிடைத்தமை

உலகங்களுக்கெல்லாம் நன்மையைச் செய்யும் ஶங்கரரிடம் கேட்டறிந்த நாரதரிடமிருந்து இவ்விஷயம் எனக்குக் கிடைத்தது.

## நாரதரின் பெருமை

தவத்தின் ஸித்தியின் உயர்ந்த நிலையைப் பெற்றவர் நாரதர். ஸகல தேவர்களாலும் போற்றப்படுபவர். ப்ரஹ்ம ருஷிகள், தேவ ருஷிகள் இவர்களிடையே ஸந்தேஹங்களை எல்லாம் தீர்த்து வைப்பவராக இருக்கிறார்.

## அவருக்கே தத்வங்களைப் பற்றி ஐயத்தினால் அஹிர்புத்ந்யரை அணுகுதல்

தனக்கு ஸந்தேஹம் ஏற்பட்டதனால் தேவர்களாலும்அறிய இயலாத கடிநமான விஷயம் பற்றி ஆசை என்கிற நோயினால் ஏற்படும் உபத்ரவங்களற்றவரும், புலன்களை அடக்கியவரும், முநிவரும், வ்யாகரணம், மீமாம்ஸை போன்ற ஶாஸ்த்ரங்களின் உண்மையை அறிந்தவரும், செயல் முறைகளை அறிந்தவரும், ப்ரஹ்மசாரியும், (வேதத்தில் ஈடுபட்டவரும்), மனத்தை அடக்கியவரும், உயர் தெய்வம், தாழ்ந்த தெய்வங்கள் என்கிற வேற்றுமையை உணர்ந்தவரும், பெரியோர்களுக்கு ஶுஶ்ரூஷை செய்பவரும் (பெரியோரிடம் கேட்டறிய ஆசை உள்ளவரும்), தான் என்கிற அஹந்தை அற்றவரும், தத்வத்தைச் சிந்திப்பதிலேயே ஈடுள்ளவரும், முநிவர்களுள் சிறந்தவரான நாரதர் மூன்று உலகங்களிலும் சுற்றி வருபவர். தேவர்ஷிகளாலும் அறிய முடியாத இந்த ஸந்தேஹத்தைத் தீர்ப்பவரான எல்லாவற்றையும் அறிந்த பிறை சந்த்ரனைச் சூடிய தேவனைத் தவிர மற்றவர்களை ஸுலபமாக அணுகமுடியாத, நிலையில் நாரதர்,

### கைலாஸவர்ணனை

தன்னுடைய ஒளியினுல் மற்ற மலைகளைப் பரிஹஸிப்பது போன்றதும், உத்தமமான ஜ்ஞாநத்தைத் தரக்கூடிய ஸத்வகுணத்தின் முதிர்ச்சி போன்றதும், ஸித்தர்கள்,

வித்யாதரர்கள் முதலியவர்களால் வஸிக்கப்படுவதும், தேவர்கள், கந்தர்வர்கள் இவர்களால் எப்பொழுதும் வஸிக்கத் தக்கதும், ஶங்கரன் இருக்கும் கைலாய மலையை ஶங்கரனைப் பார்ப்பதற்காக வந்தடைந்தார்.

## அஹிர்புத்ந்ய வர்ணநம்

பதினொரு ருத்ரர்கள், பன்னிரண்டு ஆதித்யர்கள், எட்டு வஸுக்கள், ஸித்தர்கள், ஸித்தி பெறுவதற்கு முயற்சி செய்பவர்கள், ஏழு மருத்துக்கள், முநிவர்கள், யோகிகள், தேவலோகத்திலுள்ள பல வகையான பூத கணங்கள் இவர்களால் சூழப்பட்டும், உமையுடன் வீற்றிருப்பவரும், முக்கண்ணனுக்கும் வரங்களைத் தருபவரும், பிறை சூடியவரும், பசுக்களுக்கெல்லாம் எப்பொழுதும் தலைவராக இருப்பவரும் (பஶு என்பது உயிரினங்களைக் குறிக்கும்), ஸம்ஸாரத்தில் உள்ள பிணைப்புகளை அறுப்பவரும், எட்டு வகையான தன் மூர்த்திகளால் மூன்று உலகங்களையும் தாங்கி நிற்பவரும் (எட்டு மூர்த்திகள் - பஞ்ச பூதங்கள், ஸூர்யன், சந்த்ரன், யாகம் செய்பவர்கள்) தேவனுமான ஈஶனைப் பார்த்து திவ்ய ஜ்ஞாநம் நிறைந்தவரான நாரதர் ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து அன்புடன் உத்தமமான வார்த்தைகளைச் சொல்லி ஸ்தோத்ரம் செய்தார்.

## நாரதர் செய்த அஹிர்புத்ந்ய ஸ்துதி

**நாரதர் :—** தேவர்களுக்கெல்லாம் தலைவனான தேவனே ! உமக்கு வணக்கம். உத்தமமான எருதைக் கொடியிலும், வாஹநமாகவும் கொண்டவரே! உமக்கு நமஸ்காரம். **விஷ்ணு** என்றும் **வ்ருஷ்ணி** என்றும் பெயர் பெற்றவரே ! மக்களின் கோரிக்கைகளைப் பொழிபவரே! உமக்கு நமஸ்காரம். தேவரீர் மேலான **ஓஜஸ்** (வீர்யம்) உடையவர். நிறைய மழையைப் பொழிய வைப்பவர். தேவரீருக்கு நமஸ்காரம். எல்லாம் அறிந்தவர் நீர். **ஸ்வதந்த்ரர்** (பிறரால் ஆட்டி வைக்க முடியாதவர்) எப்பொழுதும் மன நிறைவு உள்ளவர். உமக்கு நமஸ்காரம். அநாதி காலமாக ஜ்ஞாந ஸ்வரூபி. நிலையான ஶக்தி உள்ளவர். உலகங்களைத் தோற்றுவிப்பவர். அழிப்பவர்.

ஆறு அங்கங்களோடு கூடிய உமக்கு நமஸ்காரம். பால்யம், யௌவநம் போன்ற மாற்றங்கள் ஏதுமில்லாதவர். உமக்கு நமஸ்காரம். தோலை உடுத்தியவர். உமக்கு நமஸ்காரம். கோபமாகவும் கோரமாகவும் இருப்பீர். நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு கோரம் உண்டு. ப்ரஹ்மனின் முகத்திலிருந்து திடீரென அவதரித்தவர். தேவர், வாமதேவர் என்கிற பெயர் உமக்கு உண்டு. உமக்கு நமஸ்காரம். உலகத் துக்கெல்லாம் (ஸ்ருஷ்டியிலேயே) மூத்தவர். ருத்ரன் என்கிற பெயர் உண்டு. இந்த ஸ்ருஷ்டிக்கெல்லாம் காரணமானவர். உமக்கு நமஸ்காரம். பலஶாலிகளெல்லாம் உம்மிடமிருந்து பிறந்தவர்கள். பலஶாலி என்பவரையெல்லாம் அழிப்பவர். தேவரீருக்கு நமஸ்காரம். **(மூல புத்தகத்தில் இவ்வாருக உள்ளது)** த்யாநத்தின் விளைவு நீர். கால ஸ்வரூபி. த்யாந ஸ்வரூபி. ஸகல உயிரினங்களையும் அடக்குபவர். மேலும் **மநோன்மநர்** என்கிற பெயருடைய **உமக்கு நமஸ்காரம். ஶர்வர்** என்கிற திருநாமம் கொண்டவர். ஶாந்த ஸ்வரூபி. க்ஷேமத்திலிருந்து பிறந்தவர். க்ஷேமத்தை அருள்பவர். நமஸ்காரம். ஸகல ப்ராணிகளுக்கும் தலைவர். நமஸ்காரம். **மஹாதேவன்** என்கிற பெயருடைய உமக்கு நமஸ்காரம். **தத்புருஷன்** என்கிற பெயருள்ள உமக்கு நமஸ்காரம். ஐஶ்வர்யம் என்கிற குணம் நிறைந்தவர் (எல்லாவற்றையும் இயக்குபவர்) தவங்களுக் கெல்லாம் இருப்பிடம். நமஸ்காரம். தேவரீர் நித்யர். ஸத்யர். நமஸ்காரம். பொறுமையின் எல்லை, நமஸ்காரம். ஆநந்தத்தின் ஸாரம். உலகங்களைப் படைத்தவர். நமஸ்காரம். மூன்று உலகங்களையும் வ்யாபித்திருப்பவர். ஆத்ம ஜ்ஞாநம் நிறைந்தவர். நமஸ்காரம்.

தஶைகளை எல்லாம் (பால்யம், யௌவநம் முதலியன) கடந்தவர். என்றும் தன் நிலை மாறாதவர். நமஸ்காரம். நிலம், நீர், நெருப்பு, வாயு, ஆகாயம், சந்த்ரன், ஸூர்யன் இந்த உருவங்களிலும் இருப்பவர். நமஸ்காரம். எல்லோருக்கும் உதவி (அருள்) செய்பவர். மூன்று உலகங்களிலும் வ்யாபித்திருப்பவர்.

**தூர்வாஸர் :—** இவ்வாறு உத்தமமான வாக்குகள் மூலம் ஸ்தோத்ரம் செய்த ப்ரஹ்மர்ஷிகளுக்கும் சிறந்தவரான நாரதரை நோக்கி **ருஷபத்வஜர்** (எருதுக் கொடியோன்) க்ருபையினால் இனிய வாக்குகளால் பின் வருமாறு பேசலானர்.

**அஹிர்புத்ந்யர் :—** முனிவர்களின் தலைவனே! நீ செய்த இந்த ஸ்தோத்ரத்தினால் நான் மகிழ்ச்சியடைந்தேன். கிடைப்பதற்கு அரிதாக இருந்தாலும் சொல். இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டும்?

**நாரதர் :—** உலகங்களுக்கு நாதனாகிய தேவரீர் மகிழ்ச்சி அடைந்தால் இங்கு வேறு என்ன சொல்ல வேண்டும்? யோகம் தவம் முதலியன செய்யும் ஜ்ஞாநிகள் இதைத் தானே விரும்புகின்றனர்?

**அஹிர்புத்ந்யர் :—** நான் மகிழ்ச்சியடைந்தேன். என்னுடைய தர்ஶநம் உமக்குப் பயனுள்ளதாக ஆகட்டும்.

நாரதரே! உம் மனதில் என்ன உள்ளதோ அதை உள்ளபடி சொல்லும்.

**காலநேமியுடன் நேர்ந்த போரில் ஸுதர்ஶநத்தின் மஹிமையை நாரதர் கண்டார்.**

**நாரதர் :—** நக்ஷத்ரங்களுக்கு ஒப்பான கால நேமியுடன் உலகங்களைப் படைத்த தேவாதிதேவனை மஹாவிஷ்ணு ராக்ஷஸர்கள் அனைவருக்கும் பயத்தைத் தரக்கூடிய நண்பகல் ஸூர்யனின் ஆயிரம் ஒளி போன்ற அஸ்த்ர ஶஸ்த்ரங்கள் நிறைந்தபொழுது, தேவேந்த்ரனுடைய ஸேனைகளும் அஸுரத் தலைவர்களின் ஸேனைகளும் பெரிய அஸ்த்ரங்கள் மூலம் வெட்டப்பட்ட பொழுது, பயத்தாலும், வியப்பாலும் நிறைந்து ஒன்று சேர்ந்து ஆங்காங்கு மிதக்கும் பிசாசுகள், ப்ரேதம், வேதாளம் மற்றும் பல பூதங்களின் கூட்டங்கள் நிறைந்திருந்த பொழுது, மிகவும் கோரமான சத்தத்துடன் வஜ்ராயுதங்கள் மேலே கிளம்பியபொழுது, தேவர்கள் அஸுரர்களுடைய உடல்களிலிருந்து வேகமாக நாற்புறமும்

ரத்தவெள்ளங்கள் பெருகும் பொழுது, இறந்தவர்களைத் தவிர மற்றும் பலர் தேவர்களாலும், அஸுரர்களாலும் பயந்து ஓடும்படிச் செய்யப்பட்ட பொழுது, பகவான் கருடன் மீது ஆரோஹித்துக் கையில் ஸுதர்ஶநத்தை வைத்துக் கொண்டு வந்தபொழுது, காலநேமி பல பல அஸ்த்ரங்களை ஏராளமாகத் தோற்றுவித்தான். ப்ருஶாஶ்வருடைய புத்ரர்களான இந்த அஸ்த்ர தேவதைகள், மேலும் தேவரீர் முகத்திலிருந்து வெளிவந்தவைகள், ப்ரஹ்மனின் முகத்திலிருந்து பிறந்தவைகள், மற்றும் சில ப்ரளய காலத்தில் தோன்றியவைகள், அஷ்ட திக்பாலர்களிடமிருந்து தோன்றியவைகள், பாதாளத்தில் வஸிப்பவர்கள், பஞ்சபூத ஸ்வரூபிகள், மற்றும் சிலர் கந்தர்வர்களுக்குப் பிறந்தவர்கள், அரக்கர்களுக்கும், யக்ஷர்களுக்கும் பிறந்த சிலர் (வித்யாதரர்கள்) ராஜஸ தாமஸ குணங்கள் நிறைந்தவர்கள், மற்றும் சிலர் ஶக்தியிலிருந்து பிறந்தவர்கள் (அதர்வ ஆங்கிரஸர்கள்) வேறு சிலர் மந்த்ரங்களிலிருந்து பிறந்தவர்கள், எந்தக் கார்யங்களையும் செய்யக் கூடியவர்களாய் சிலர், ஆக்கவும் செய்பவர்கள், அழிக்கவும் செய்பவர்கள், இவர்கள் யஷ்டி ஶக்தி என்கிற வடிவத்திலும் தண்டங்களின் வடிவத்திலும் இருப்பவர்கள், மிகுந்த பலமும் வீர்யமும் பொருந்தியவர்கள். மூன்று உலகங்களையும் அழிப்பதற்கு முயல்பவர்கள், பெரிய மலை போன்ற சிலர், மற்றும் மத்தகஜங்கள் போன்ற சிலர், கடல் போன்ற சிலர், பெருங்காடு போல் சிலர், எரியும் நெருப்பின் ஜ்வாலைகளால் சூழப்பட்டவர்களாய் விண்ணுக்கும், மண்ணுக்கும் இடையிலிருப்பவர்கள் சிலர், ஆடுவர் சிலர், சிரிப்பவர் சிலர், கர்ஜனை செய்பவர் சிலர், மேலிருந்து குதிப்பவர் சிலர், இப்படிப்பட்டவரென்று சொல்ல முடியாதவர்கள் சிலர், தனக்கு நிகரற்றவர் சிலர், சாம்பல் நிறம், வெண்மை நிறம், சிவப்பு நிறம், கருமை நிறம் உடையவர்கள், பல வகையான உடற்கட்டும் நிறமும் உடையவர்களும், பல வகையான மாயாஜாலம் போன்ற தேஹ காந்தியுடையவர்களும், அனைவரும் ஒன்று சேர்ந்து காலநேமியின் உத்தரவுக் கிணங்கத் தயாராக இருந்தனர்.

### எல்லா அஸ்த்ரங்களையும் ஸுதர்ஶநம் அழித்தல்

ப்ரயோகித்தல், திரும்பப் பெறுதல் இவற்றுடன் கூடியவையும், ரஹஸ்யங்களுடன் கூடியவையுமான இவை எல்லாம் ஒன்று சேர்ந்து வந்த அந்த அஸ்த்ரங்களின் கணங்கள், நாராயணனின் திருக்கரங்களால் உயர்த்தப்பட்ட ஸுதர்ஶநம் என்கிற நெருப்பில் விழுந்த ஈசல்களின் நிலையை அடைந்தன. அந்த வேள்வியில் (போரில்) காலநேமி பூர்ணாஹுதியாக அமைந்தான்.

### மிகவும் வியப்பான மேன்மையைக் கண்டதால் ஸந்தேஹம் தோன்றியது

மிகவும் வியப்பைத் தரவல்ல போரைக் கண்டு ஆச்சர்யமடைந்த நான் மறைந்திருப்பவரும் உலகங்களுக்கெல்லாம் குருவுமான க்ருஷ்ணனைக் கண்டு வணங்கி, இந்த மிகப் பெரிய ஸந்தேஹத்தை மனத்தில் வைத்துக் கொண்டு அதைத் தீர்த்துக் கொள்வதற்குத் தேவரீரிடம் வந்தேன். எல்லாமறிந்த ஈஶ்வரனைத் தவிர இதைத் தீர்ப்பவர் வேறு யாருமில்லை.

**அஹிர்புத்ந்யர் :—** தேவர்ஷியே ! உம் மனத்தில் என்ன என்ன உள்ளனவோ அந்த ஸந்தேஹங்களையெல்லாம் கூறும். ஒரு கண நேரத்தில் எல்லாவற்றையும் தீர்த்து வைக்கிறேன்.

**துர்வாஸர்: –** அந்த தேவர்ஷி நாரதரால் வரிசையாகக் வினவப்பட்ட கேள்விகளை மிகவும் மகிழ்ச்சி கொண்ட மனத்துடன் பகவான் ஶங்கரர் விளக்கினார்.

### ஸம்ஹிதை உதித்தது

இது பல பல மந்த்ரங்களைத் தன்னுள்ளே கொண்ட **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை** என்ற பெயரில் **பஞ்சராத்ரம்** என்றே கருதப்படுகிறது. (பகவான் நாராயணன் உபேந்த்ரனாக அவதரித்து ஐந்து நாட்களில் உபதேஶித்த க்ரந்தம் **பஞ்சராத்ரம்** எனப்படுகிறது.)

பிறர் சொன்னதைப் போன்று பல அர்த்தங்களோடும், முன் **கல்பங்களில்** நடந்தவையான விஷயங்களைக் கொண்டதும், பலவகை மந்த்ரங்களால் ப்ரகாஶிக்கின்ற இந்த

**ஸம்ஹிதை** பல ஸித்தாந்தங்களேயும் தன்னுள்ளே கொண்டிருக்கிறது. இதில் 240 அத்யாயங்கள் அமைக்கப்பட்டிருந்தன. பிறகு **த்வாபர யுகம்** நடந்தபோது மனிதர்களின் நன்மையைக் கருதி 120 அத்யாயங்களோடு கூடியதாக ஆயிற்று. அதிக விரிவை விலக்கிச் சுருக்கமான முறையில் விஷயங்களே உள்ளடக்கியதாக ஆயிற்று. அதன் பிறகும் மனிதர்களின் புத்தி சுருங்கி இருப்பதால் அவர்களின் நன்மைக்காக, **த்வாபர யுக**மும், **கலியுக**மும் சேர்ந்த நேரத்தில் வ்யாஸருடைய அநுமதியைப் பெற்று இந்த **ஸம்ஹிதை** என்னால் 60 அத்யாயங்களோடு கூடியதாக மாற்றி அமைக்கப்பட்டது. கேள்விகளே அனுஸரித்து ஶங்கரர் எப்படிச் சொன்னுரோ, அதை நான் சொல்கிறேன் கேளும் என்று பகவான் நாரதர் கூறினர்.

*இவ்வாருக **ஸ்ரீ பாஞ்ச ராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்** அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் ஶாஸ்த்ரம் பிறந்தமை என்கிற*

*முதல் அத்யாயம் முற்றிற்று.*



### ஆறு குணங்களோடு ப்ரஹ்மம் என்கிற

# 2 ஆம் அத்யாயம்

### அஹிர்புத்ந்யரிடம் நாரதர் கேள்வி



நாரதர் :— ஸூர்யனுக்கும், நெருப்புக்கும் ஒப்பான அந்த மந்த்ர கணங்கள் அனைத்தையும் விஷ்ணுவின் சக்ரமான அந்த **ஸுதர்ஶநம்** எளிதாக எடுத்துக் கொண்டது. இது அவருக்கு இருந்த ஸித்தியின் மஹிமையா? அல்லது வேறு சிலவற்றின் சேர்க்கையால் அமைந்ததா? **ஸுதர்ஶநம்** என்பது எத்தகையது? அதன் பொருள் என்ன ?

### தான் ஸங்கர்ஷணரிடமிருந்து ஜ்ஞாநம் பெற்றதை அஹிர்புத்ந்யர் விளக்குதல்

**அஹிர்புத்ந்யர் :—** நாரதரே! கேளும். நான் முன்னொரு காலத்தில் பல லக்ஷம் வருடங்கள் கடும் தவம் செய்து ஜ்ஞாநம் பலம் இவற்றின் கடலான ஸங்கர்ஷணரிடமிருந்து பெற்ற ஜ்ஞாநத்தைப் பற்றி உள்ளபடி சொல்கிறேன். எது ப்ரஹ்மன் முதலான மற்றவர்களிடமும் மஹர்ஷிகளிடமும் இல்லையோ, அதைச் சொல்கிறேன். அந்த ஸுதர்ஶநனுடைய ஸ்வரூபத்தைச் சொல்கிறேன், கேளும். அகிலத்துக்கும் ஆதாரமான இந்த விஷயத்தைக் கேட்டால், எல்லா ஸந்தேஹங்களும் பறந்தே போய்விடும்.

### பரதத்வத்தின் ஸ்வரூபத்தைச் சுருங்கக் கூறுதல்

அந்த **பரப்ரஹ்மம்** என்பது ஆதியும், அந்தமும் இல்லாதது. சிதைவு இல்லாதது. அழிவற்றது. பெயரையோ, உருவத்தையோ சொல்லிப் பிரித்துச் சொல்ல முடியாது. வாக்குக்கோ, மனதுக்கோ எட்டாதது. ஸகலவிதமான ஶக்தியும் ஒன்று சேர்ந்ததாகச் சொல்லலாம். ஆறு குணங்களை உடையது. கிழத்தனம் இல்லாதது. நிலையானது. (ஆறு குணங்களாவன - **ஜ்ஞாநம், ஶக்தி, பலம், ஐஶ்வர்யம், வீர்யம், தேஜஸ்).**

### ஸுதர்ஸநம் என்கிற பெயரின் பொருள் விளக்கம்

அந்த ப்ரஹ்மத்துக்கு **நான் இன்னபடியாக இருக்க வேண்டும்** என்கிற எண்ணம் பாவபதார்த்தமாகவோ, அபாவ பதார்த்தமாகவோ, பிறர் தட்டிக் கேட்க முடியாத ஸ்வதந்த்ரமான வகையால் அமைகிறது. அதன் பார்வை என்று எது சொல்லப்பட்டதோ அது ஜ்ஞாநம் என்பதாகவே கருதப்படுகிறது. பொருள்களைக் கொண்டோ, காலத்தைக் கொண்டோ, இடத்தைக் கொண்டோ குறிப்பிடமுடியாது என்பது **ஸு** என்கிற எழுத்தின் பொருள். அது ஒரு பெருமை. இதுவே **ஸுதர்ஸநம்** எனப்படுகிறது.

### உலகமெல்லாம் ஸுதர்ஸநத்தின் கட்டுப்பாட்டில் இருத்தல்

இந்த உலகத்துக்கெல்லாம் அவர் காரணம். அவரே உலகத்துக்கெல்லாம் ஆதாரம். உலகத்தின் அளவும் அவரே. அளவு என்கிற சொல்லின் பொருளும் அவரே. அவர் விஷயத்தில் பூஜை செய்யத் தகுதி உடையவர்களும், அவருக்குள் இருக்கும் பிரிவுகளும், பூஜையின் முறையும் இவையெல்லாம் எவருக்குச் சொல்லப்பட்டிருக்கிறதோ, அவை அந்த ஸுதர்ஸநத்துக்கு வஸமானது. எல்லாம் ஸுதர்ஸநமயம். இப்படிப்பட்ட அவருடைய ரூபம் தந்நிகரற்றதாகும். ஸகலவித அஸ்த்ரங்களின் கணங்களிலும் மேலோங்கிய திறமை எல்லாம் அவருடையதே. இவ்வாறாக அது தனக்கே சொந்தமாகப் பெறப்பட்டுள்ளது.

### மேலும் நாரதரின் கேள்விகள்

**நாரதர்** :— தேவாதிதேவா ! உலகத்துக்கெல்லாம் அதிபதியே ! மூன்று உலகங்களுக்கும் க்ஷேமத்தைத் தேவரீர் தருபவர். என் மனம் குழம்புகிறது. என் ஸந்தேஹங்களெல்லாம் மேலும் அதிகம் ஆகிவிட்டன. ஆறு குணங்களோடு கூடிய அந்த **பரப்ரஹ்மம்** எது? அதனுடைய வகை எது? அதனுடைய எண்ணம் என்பது எத்தகையது? இதற்கு **தர்ஸநம்** என்கிற பெயர் எதனால் ஏற்பட்டது? அந்த **தர்ஸநத்துக்கு** எல்லா இடங்களிலும் செல்லக் கூடிய தங்கு

தடையில்லாமை எப்படி வந்தது? ஜகத்துக்குக் காரணம் என்பது என்ன? அது எத்தகையது? அதன் விளக்கம் என்ன? இந்த உலகத்துக்கு எது ஆதாரம்? அது எத்தகையது? அதன் பிரிவுகள் எவை? ப்ரமாணம் என்று சொல்லப்பட்டது எது? அது எத்தகையது? அதன் உட்பிரிவுகள் எவை? ப்ரமாணம் என்பதின் பொருள் என்ன? அது எப்படிப்பட்டது? அதன் உட்பிரிவுகள் எவை? அதிகாரிகள் என்பவர் யார்? அவர்கள் எப்படிப்பட்டவர்கள்? அவர்களின் உட்பிரிவுகள் எவை? இதுவரை சொல்லப்பட்ட எல்லாவற்றுக்கும் காவல் எது? அதன் முறை என்ன? அது எத்தகையது? அங்கு அதிகாரி என்பதன் பொருள் என்ன? அது எந்த வகைக் குணமுடையதாகக் கருதப்படுகிறது? ஸ்வாமிந் ! அடியேனுடைய இந்தக் கேள்விகளுக்கெல்லாம் ஒன்று விடாமல் விளக்கம் கூறுங்கள். திருவடிகளைப் பிடித்துக் கொண்டு வணக்கத்துடன் வேண்டுகிறேன். ஸ்வாமிந் ! விளக்கி அருள வேண்டும்.

**துர்வாஸர் :—** தன் தர்ஶநத்தினால் புனிதராக்கப் பட்டவரும், ஸேவித்து ப்ரார்த்திப்பவரும், பணிவுடன் வந்திருப்பவருமான அந்த நாரத முநிவருக்கு ஶங்கரர் எல்லாவற்றையும் விளக்கினர்.

**பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை விரிவாக எடுத்துரைத்தல்**

**அஹிர்புத்ந்யர் :—** மிகவும் முக்யமானதும், து:கமில்லாமல் அளவில்லாத ஆநந்த அநுபவரூபமாக உள்ளதும், ஆதியும் அந்தமும் இல்லாததுமான அந்த **பரப்ரஹ்மம்** என்பது **நாராயணன்.** அது கர்மங்களால் பீடிக்கப்படாதது. எல்லாவற்றிலும் ஊடுருவியிருப்பது. ஸகல உலகங்களிலும் வ்யாபித்து இருக்கிறது. தீய குணங்களற்றது. அலையில்லாத கடல் போன்றது.

**பரப்ரஹ்மத்தின் தீய குணங்களில்லாமையும்**
**நற்குணங்கள் நிறைந்தமையும்**

ப்ராக்ருதமான குணங்கள் ஸம்பந்தமற்றது. ப்ரக்ருதி ஸம்பந்தம் இல்லாத குணங்கள் நிறைந்தது. ஸம்ஸாரம்

என்னும் கடலுக்கு அப்பாற்பட்டது. களங்கமோ, வாஸனைகளோ அற்றது. உருவத்தாலோ, இடத்தாலோ, காலத்தாலோ இவரை அளக்க முடியாமையால் எல்லாம் நிறைந்ததாகவும், எக்காலத்திலும் இருப்பதாகவும், விலக்கவோ ஏற்கவோ தேவையற்றதும், இது என்றோ, இப்படிப்பட்டதென்றோ, இந்த அளவுடையதென்றோ பிரித்துச் சொல்ல முடியாதது.

### பரப்ரஹ்மம், பரமாத்மா முதலிய எல்லா வார்த்தைகளாலும் குறிக்கப்படும் நிலை

மேன்மேல் உண்டாகும் தத்வங்கள், தமக்கு முன்னிருந்த தத்வங்களில் இருந்தவை. ஆகையால் ஆத்மாவாக இருக்கும் எம்பெருமான் பரமாத்மா என்று சொல்லப்படுகிறான். **ஓம்** என்பதையே யோகமாகக் கொண்டு எல்லா தத்வங்களிலும் மூழ்கியிருப்பதால், ஆறு குணங்கள் எனப்படும் மேலான குணங்களின் ஸம்பந்தத்தினால் **பகவான்** என்று சொல்லப்படுகிறது. எல்லாப் பொருள்களிலும் வஸிப்பதால் **வாஸுதேவன்** எனப்படுகிறது. உலகங்களையெல்லாம் தமக்கே உரியதாகப் பெற்றிருப்பதால் **ஆத்மா** எனப்படுகிறது. குணங்களாலோ உருவத்தாலோ தெளிவாகத் தெரியாமையால் **அவ்யக்தம்** எனப்படும். எல்லா ப்ரக்ருதிக்கும் ஶக்தியைக் கொடுப்பதாகையால் **ஸர்வ ப்ரக்ருதி** என்று கூறப்படும். எல்லா உலகங்களும் இவரால் படைக்கப்படுவதால் **ப்ரதாநன்** என்றும் கூறப்படுகிறது. **நேதா**வாகவும் **அநேதா**வாகவும் இருப்பதால் **நித்யர்** எனப்படுகிறது. தேஹத்துக்குள் மூச்சுக் காற்றை நிலை நிறுத்துவதாலும், எல்லாவற்றையும் உட்கொள்வதால் **அநந்தன்** என்றும் கூறப்படுகிறது. நம்மைச் சுற்றிலும் எப்பொழுதும் இருப்பதால் **அபரிமிதர்** என்று சொல்லப்படுகிறார். அழிவில்லாததால் **அக்ஷரன்** என்றும், தீமைகளை நீக்குவதால் **அரிஷ்டர்** என்றும் சொல்லப் படுகிறது. சிதைவு இல்லாத ஸ்வபாவத்தைக் கொண்டிருப்பதாலும்,

**வ்யாப்யன்** அல்லாமையாலும் **அச்யுதன்** என்று சொல்லப்படுகிறார். (ந்யாய ஶாஸ்த்ரத்தில் **வ்யாப்யம் - வ்யாபகம்** என்று இரண்டு சொற்கள் உண்டு. **தூமம்** (புகை) **வ்யாப்யம். அக்நி வ்யாபகம்.** எங்கெல்லாம் புகை இருக்கிறதோ அங்கு நெருப்பிருக்கிறது என்று சொல்லலாம். நெருப்பு எங்கெல்லாம் இருக்கிறதோ அங்கு புகை இருக்க வேண்டும் என்று சொல்ல முடியாது. ஏனெனில் கொல்லன் பட்டரையில் நெருப்பு இருக்கும். அங்கு புகை இருப்பதில்லை. அதனால் **வ்யாபகம்** இருக்கும் இடமெல்லாம் **வ்யாப்யம்** இருக்குமென்று சொல்ல முடியாது.) ஆசை (பற்றுதல்) முதலிய தீய குணங்கள் இல்லாமையாலும், எல்லாவற்றையும் ஸமமாக நோக்கும் முனிவர்களுக்குப் புலப்படுவதாலும், எல்லா பொருள்களுக்கும் **உபாதாந** காரணமாக இருப்பதாலும் **ஸமர்** என்றும் சொல்லப்படுகிறார். (மூலப் பொருளை **உபாதாநம்** என்பர். குயவன் செய்யும் பாண்டங்களுக்கு மண் **உபாதாநம்** - வேஷ்டி, சேலை போன்ற பொருள்களுக்குப் பருத்தி **உபாதாநம்.** நகைகளுக்குப் பொன் **உபாதாநம்**). த்யாநம் செய்யும் மார்கத்துக்கு வெகு தூரத்தில் இருப்பதாலும், இயற்கையிலேயே அவரைத் தட்டிக் கேட்க யாரும் இல்லாமையாலும், இப்படிப்பட்டவர் (இந்த அளவு உள்ளவர்) என்று சிந்திக்க முடியாதவராகையாலும் **அசிந்த்யர்** எனப்படுகிறார். இவரிடமிருந்து இந்த உலகங்கள் உண்டாகின்றன. எல்லா இடங்களிலும் இவர் **நியந்தா**வாக (ஆட்சி செய்பவராக) இருக்கிறார். இவரிடமிருந்து இந்த ஸம்ஸாரம் பிறந்திருக்கிறது. ஆகையால் **ப்ரபவர்** என்று சொல்லப்படுகிறார். எல்லாம் ஒடுங்கும் இடமாக இருப்பதாலும், சிதைவு இல்லாததால் **அவ்யயர்.** தான் மிகப் பெரிதாக இருப்பதாலும் ப்ரக்ருதி முதலிய பொருள்களை விரிவாக்குவதாலும் **ப்ரஹ்மம்** என்று வேதம் எனப்படும் குஹையில் பேசப்படுகிறார். மிகச் சிறந்த ஜ்ஞாநம் உள்ளவராதலால் **கபிலர்** என்றும் மிகச் சிறந்த தேஜஸ்ஸை உடையவராகையால் **காபிலர்** என்றும் பெயர் பெறுகிறார். எல்லோருக்கும் நன்மை அளிப்பதாலும் அழகாக

இருப்பதாலும் **கர்ப்பர்** என்றும் **ஹ்ருதயர்** என்றும் திருநாமம் பெறுகிறார். **ஹிரண்ய கர்ப்பர்** என்று யோகிகளால் கூறப்படுகிறார். அழிவில்லாத தவத்தோடு சேர்ந்திருப்பதால் அவாந்தர தபா: என்றும் வேதத்தில் சொல்லப்படுகிறார். க்ஷேமத்தைத் தருவதால் பஶுபதி மதத்தினரால் **ஶிவன்** எனப்படுகிறார். அருகிலும் தொலைவிலும் இருப்பதால் அறியாதவர்களால் இவ்வாறு அந்த தத்வம் கூறப்படுகிறது.

## தடை நீங்கும் பொழுது ப்ரஹ்மாநந்தம் கிடைக்கிறது

பற்பல பிறவிகளில் ஏற்பட்ட புண்யங்களும், பாபங்களும் அழியும் பொழுது, நல்ல விஜ்ஞாநம் என்கிற ஆயுதத்தினால் வாஸனை முழுமையாக அழிக்கப்படும் பொழுது, மூன்று குணங்களும் **(ஸத்வம், ரஜஸ், தமஸ்)** முற்றிலும் ஒடுங்கும் காலத்தில் ஒவ்வொருவரும் மேலே குறிப்பிட்ட விஷயத்தை அநுபவிக்க இயலும். (நாம் கற்பூரம் கஸ்தூரி, குங்குமப்பூ, பெருங்காயம் போன்ற பொருள்களைச் சிறிய பெட்டியில் வைத்து, அவை முற்றிலும் தீர்ந்த பின்பும், பெட்டியில் அந்த வாஸனை போகாது. அதுபோலப் புண்யம், பாபம் இவை அழிந்தாலும் அவற்றின் வாஸனை நம் மனத்திலிருக்கும். அதுவும் அழிய வேண்டும் என்பது கருத்து). நேரில் தர்ஶித்தால் மட்டுமே இது இப்படி என்று தெளிவாகப் புலப்படும். வார்த்தைகளால் சொல்லமுடியாது.

## ப்ரஹ்மம் நம் முயற்சியால் கிடைப்பது அரிது

ஆயிரம் வருடங்கள் கருடன் போல் பறந்தாலும் காரணப் பொருளுக்கு முடிவே இல்லை என்று மனதில் வேகம் இருந்தாலும் மேலே மேலே சென்று கொண்டு பலவாறாக ஆராய்ந்தும் கூட ஞாநத்துக்காக முயற்சி செய்யும் வேளையில் தெளிவை அதிகம் பெறுவதில்லை. அந்தப் பரமாத்மாவிடம் எல்லா தத்வங்களும் அடங்கியுள்ளன. **பாவப்** பொருளோ, **அபாவப்** பொருளோ ஜ்ஞாநம் என்கிற நூல் போன்ற தன்மையையுடைய பொருளோடு இணைந்திருக்கின்றன. (நாம் புலன்களால் அறியும் பொருள்கள் **பாவப்** பொருள்கள். ஏதும் இல்லை என்பது **அபாவம்**).

## ப்ரஹ்மத்துக்கு மூன்று வகை அளவில்லாமை

அந்தப் **பரதத்வம்** ஆத்மாவாக இருக்கும் எல்லா பொருள்களும் நேரில் காணக் கூடியதாக இருக்கின்றன. நடுவில் சுருக்கி அமைக்கப்பட்ட கடந்த காலம் வரும் காலம் இவற்றில் அந்த ப்ரஹ்மம் இருக்கிறது என்று சொல்ல இயலாது. மறைந்து விட்டது என்று சொல்ல இயலாது. வரப் பொகிறது என்றும் சொல்ல இயலாது. எதிரிலும் பின் புறமும் இல்லை. மேலேயும் இல்லை. இரு பக்கங்களிலும் இல்லை. பல நிறங்கள் கொண்டதுமல்ல. கரு நிறமும் அல்ல; மஞ்சள் நிறமும் அல்ல. சாம்பல் நிறமும் அல்ல. சிவப்பு மல்ல. காராம்பசு நிறமுமல்ல. ஊதா நிறமுமல்ல, ரோஜா நிறமுமல்ல, ஆகாய நீலமுமல்ல, இளம் சிவப்புமல்ல, நீளமுமல்ல, குட்டையுமல்ல, பருத்ததுமல்ல, சிறியதுமல்ல (மெல்லியது), உருண்டையுமல்ல, தட்டையுமல்ல, ஒன்றைச் சார்ந்ததுமல்ல, சாராததுமல்ல, காணும் பொருளுமல்ல, காணுத பொருளுமல்ல, காணும் பொருள்களைக் கொண்டு அர்ச்சிக்க இயலாதது. குளிர்ந்ததுமல்ல, சூடானதுமல்ல, துயரமும் அல்ல, இன்பமுமல்ல, துன்பமற்றதுமல்ல, தீமையற்ற இன்பமும் அல்ல,

முனிவரே ! எதற்கும் அது அடியுமல்ல, இடையுமல்ல, அது படுத்திருப்பது அல்ல, வீற்றிருப்பதுமல்ல, நிற்பதுமல்ல, நடப்பதுமல்ல, எல்லா வகையான இரட்டையுமல்லாதது. (இரட்டை :- லாபம் - நஷ்டம், ஸுகம் - து:கம், வெற்றி - தோல்வி) எந்த விதமான உபகரணங்களுமில்லாதது. அந்த பரப்ரஹ்மம் ஆறு குணங்களோடு கூடியது. காரணம் என்று சொல்லப்படும் அனைத்துக்கும் காரணமானது.

**நாரதர் :—** தேவாதிதேவ ! அது ஆறு குணங்கள் உள்ளது என்று சொல்லப்படுகிறது. குணம் இல்லாதது என்றும் சொல்லப்படுகிறது. அது எப்படி?

## பரப்ரஹ்மத்தின் ஆறு குணங்களின் விவரம்

**அஹிர்புந்த்யர் :—** ப்ரக்ருதி ஸம்பந்தமான குணங்கள் இல்லாமை என்பது குணஹீநம் என்று சொல்லப்பட்டது. நாரத ! அந்த ஆறு குணங்களைச் சொல்கிறேன், கேளும்.

## ஜ்ஞாந ஸ்வரூபன் என்பதன் விளக்கம்

ஜடம் அல்லாதது; தன்னையே தான் உணர்வது; என்றும் அழியாதது; எல்லாவற்றையும் அறிந்திருப்பது? இப்படிப்பட்ட ஜ்ஞாநம் என்கிற குணம் முதன்மையானது என்று குணத்தைப் பற்றிப் பரிஶீலித்த பெரியோர்கள் சொன்னார்கள்.

## ப்ரஹ்மம் ஜ்ஞாநமாகவும் ஜ்ஞாநம் என்கிற குணத்தை உடையதாகவும் இருத்தல்

அந்த ஜ்ஞாநம் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் என்றும், அதன் குணம் என்றும் பேசப்படுகிறது.

## ஶக்தியின் ஸ்வரூப நிரூபணம்

இந்த உலகங்களுக்கெல்லாம் உற்பத்தி ஸ்தாநமாக இருத்தல் எதுவோ அது **ஶக்தி** எனப்படுகிறது.

## ஐஶ்வர்யத்தின் ஸ்வரூப நிரூபணம்

அந்த ப்ரஹ்மத்தினிடம் எல்லா தத்வங்களையும் தோற்றுவித்தல் என்கிற ஸ்வதந்த்ரத்தோடு கூடிய அந்த குணத்தை (குணம் என்கிற தத்வத்தை) பரிஶீலனை செய்த பெரியோர் **ஐஶ்வர்யம்** என்று கூறுவர்.

## பலத்தின் ஸ்வரூபத்தை விவரித்தல்

அந்த பரப்ரஹ்மம் உலகங்களையெல்லாம் படைக்கும் பொழுது சிறிதும் ஶ்ரமமில்லாமல் இருப்பது **பலம்** என்கிற குணம் என்று குணங்களைப் பரிஶீலித்தவர் கூறுவர்.

## வீர்யத்தின் ஸ்வரூபத்தை விவரித்தல்

அந்த ப்ரஹ்மம் என்கிற தத்வம் எல்லா உலகங்களுக்கும் மூலப் பொருளாக இருந்தும் கூட ஸ்வரூபத்தின் மாற்றம்

இல்லாமை என்பதே **வீர்யம்** என்றும் **அச்யுதத்வம்** என்றும் கூறப்படுகிறது.

**தேஜஸ்ஸின் ஸ்வரூபத்தை விவரித்தல்**

படைத்தல் என்கிற பெரிய கார்யத்தில் வேறு யாருடைய உதவியையும் எதிர்பாராமலிருத்தல் **தேஜஸ்** எனப்படுகிறது.

**ஶக்தி முதலிய ஐந்து குணங்கள் ஜ்ஞாந ஸ்வரூபனுக்குக் குணமாயிருத்தல்**

இவ்வாறு சொல்லப்பட்ட ஶக்தி முதலிய ஐந்து குணங்கள் ஜ்ஞாநத்துக்குக் குணங்களாயிருக்கும். பரமாத்மா என்கிற பரப்ரஹ்மத்துக்கு ஜ்ஞாநமே ஸ்வரூபம். ஆறு குணங்களோடு கூடிய அந்த பரப்ரஹ்மம் தன்னுடைய ஶக்தியினால் மிளிர்ந்து நிற்கிறது. **ஸுதர்ஶநம்** என்கிற அந்த மூல தத்வப் பொருள், **நான் பல உருவங்களில் தோற்றமளிக்க வேண்டும்** என்று ஸங்கல்பம் செய்து கொள்கிறது. (**ஸங்கல்பம்** என்பது மனத்தால் ஒன்றைச் செய்ய வேண்டுமென நினைத்தல்).

இவ்வாறுகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்**
ஆறு குணங்களின் விளக்கம் என்கிற
இரண்டாவது அத்யாயம் முற்றிற்று.



விஶ்வருபத் தன்மையின் சுருக்கம் என்கிற

# 3வது அத்யாயம்

**நாரதர் :—** அந்த பரப்ரம்மம் ஆறு குணங்கள் உடையது என்பது எப்படி? தன் ஶக்தியினுல் அது மிளிர்ந்து நிற்கிறது என்பது எப்படி? அவருக்கு எதன் மூலம் மிளிர்ச்சி ஏற்படுகிறது? அந்த ஶக்தி எது?

## எல்லா வஸ்துக்களிலும் உள்ள ஶக்தி எம்பெருமானின் ஶக்தியுடன் இரண்டறக் கலந்தது

**அஹிர்புத்ந்யர் :—** எல்லாப் பொருள்களிலும் இருக்கும் ஶக்திகள் நினைத்துப் பார்க்கக் கூட முடியாத நிலை ஒன்றுதானே என ஒன்றி நிற்கின்றன. இவற்றை நாம் நேரில் காண முடியாது. அவற்றின் செயல்கள் மூலமே அறிய முடியும். அந்தப் பொருள்களிலிருக்கும் ஸூக்ஷ்மமான நிலை எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கிறது. இது உள்ளது என்று சுட்டிக் காட்டவும் முடியாது. இது இல்லை என்று மறுக்கவும் முடியாது.

## ஶக்திகளைப் பற்றிக் கேள்விகள் எதுவும் எழமுடியாது

பொருள்களில் இருக்கும் ஶக்தியைப் பற்றி யாராலும் கேள்வி கேட்க முடியாது.

## ப்ரஹ்மத்தின் ஶக்தி பிரிக்க முடியாத இயல்புடையது

முனிவரே ! அந்த பரப்ரஹ்மத்துக்கு ஸகல பொருள்களிலும் வ்யாபிக்கும் ஶக்தி சந்த்ரனில் நிலவு இருப்பது போல் விளங்குகிறது. அந்த எம்பெருமானுடைய ஶக்தி ஸகல **பாவப்** பொருள்களிலும் **அபாவப்** பொருள்களிலும் ஊடுருவி நிற்கிறது.

விஷ்ணுவின் ஸ்வதந்த்ரத் தன்மை என்கிற அந்த ஶக்தி உலகத்தின் உருவத்தில் தோன்றுகிறது. இமை கொட்டுவதும், மூடுவதும் போல் வெளிப்படையாகத் தெரிந்தும் தெரியாமலும் இருக்கும்.

## பகவானுடைய ஶக்தி என்பது ஆநந்தம் முதலிய சொற்களால் குறிக்கப்படும்

உதவியாக எதையும் நாடாமல் எப்போதும் நிரம்பி இருப்பதால் ஸ்வதந்த்ரமாக இருக்கும் அந்த ஆநந்தம் என்கிற ஶக்தி பகவானுடைய ஶக்தி. தன் ஸ்வரூபம் என்கிற ஆதாரத்திலிருந்து தோற்றமளிப்பதும், உயர்ந்ததும் தாழ்ந்ததுமான உலகத்தை வ்யாபித்து இருக்கிறது. காலத்தினால் அளவிட முடியாமையால் அது **நித்யம்** (ஶாஶ்வதம்) பிரிக்க முடியாமையால் எப்பொழுதும் முழுமையாகவே இருக்கும். தேஶம் எதையும் சிறிதும் விடாமல் வ்யாபித்திருக்கும். எப்பொழுதும் நிறைந்ததாக இருக்கும். உலகம் என்ற பெயரில் காணப்படும் அந்த ஶக்தி **லக்ஷ்மி** என்று சொல்லப்படுகிறது. விஷ்ணுவின் ஸம்பந்தத்தைப் பெற்றதாய் அந்த ஶக்தி **ஸ்ரீ** என்று சொல்லப்படுகிறது. அந்த ஶக்தி **மூலப்ரக்ருதி** என்கிற அவ்யக்தமும், காலமும், புருஷத் தன்மையும் உடையதாய்த் தாமரை மாலே அணிந்து **பத்மா** என்கிற திருநாமத்தைக் கொண்டவளாகிறாள். ஜநங்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்வதாலும் நிறைந்த இன்பத்துடன் கூடியிருக்கையாலும் **கமலா** என்ற பெயரை உடையதாகிறது. இந்த ஶக்தி விஷ்ணுவினுடைய ஸாமர்த்த்யம் என்பதால் **விஷ்ணு ஶக்தி** என்று சொல்லப் படுகிறது. எம்பெருமானுடைய ஸங்கல்ப (திருவுள்ள)த்தைக் காப்பாற்றுவதால் **விஷ்ணு பத்நீ** என்று சொல்லப்படுகிறது. உலகத்தையெல்லாம் வ்யாபிக்கும் உருவத்தைச் சுருக்கிக் கொள்வதால் **குண்டலிநீ** என்று பண்டிதர்களால் கருதப்படுகிறது. மநம் வாக்கு இவைகளால் அறிய முடியாமையால் **அநாஹதா** என்றும் பண்டிதர்களால் அழைக்கப்படுகிருள். அளவு கடந்த ஆநந்தக் கடலாய் இருப்பதாலும், மந்த்ரங்களின் உள்ளே ஸூக்ஷ்மமாக அமைந்திருப்பதாலும், ஶுத்தஸத்வகுணத்தைக் கொண்டிருப்பதாலும் **கௌரீ** என்றும், விஷ்ணுவைச் சாராமலிருக்கும் தஶையில் **அதிதி** என்றும் கருதப்படுகிருள். ஸகல புண்யங்களேயும் தருபவளாய் இருப்பதாலும், பெரிய உருவத்தைக் கொண்டிருப்பதாலும் **மஹீ** என்று

கூறப்படுகிறாள். அநாஹதமான மஹிமைரூபிணியாய் இருப்பதால் **அநாஹத ஶீர்ஷணீ** என்று கருதப்படுகிறாள். தன் ஜ்ஞாநத்தினால் மூச்சுக் காற்றை நிலைநிறுத்தும் காரணத்தால் **ஜகத் ப்ராண** என்று சொல்லப்படுகிறாள். **பராஹதா** என்கிற நல்ல ரூபத்தை உள்ளவளாகையால் **மந்த்ரமாதா** என்றும் கூறப்பட்டிருக்கிறாள். தன்னைக் கீர்த்தநம் செய்யும் அனைவரையும் காப்பாற்றுவதால் **காயத்ரீ** என்று சொல்லப்படுகிறாள். தன்னைக் கொண்டே இவ்வுலகங்களை எல்லாம் படைப்பவளாகையால் **ப்ரக்ருத்** என்று சொல்லப்படுகிறாள். எல்லாவற்றிலும் வ்யாபித்து அளக்கிறாள் என்பதால் **மாதா** என்று கூறப்படுகிறாள். எல்லோருக்கும் எந்தப் பாகுபாடுமின்றி க்ஷேமத்தைத் தருபவளாகையால் **ஶிவா** என்று அழைக்கப்படுகிறாள். எல்லோராலும் விரும்பப்படுவதால் **தருணீ** என்றும், ஸம்ஸாரத்தைத் தாண்டுவிப்பதால் **தாரா** என்றும் பெயர் பெறுகிறாள். மாருத உருவம் கொண்டிருப்பதாலும் இரண்டு வகையான ஸத்யத்தோடு ஸம்பந்தப்பட்டிருப்பதாலும் **ஸத்யா** என்று சொல்லப்படுகிறாள். எல்லா வகையான மாறுதல்கள் இல்லாமையால் **ஶாந்தா** என்று பண்டிதர்களால் பேசப்படுகிறாள். மோஹங்களை (மயக்கத்தை) விலக்குவதால் அவள் மிகச் சிறந்த **மோஹிநீ** ஆகிறாள். யாகங்களில் கொடுக்கப்படும் ஹவிர்பாகத்தில் இருப்பதாலும், எல்லோராலும் விரும்பப்படுவதாலும் **இடா** என்று பெயர் பெறுகிறாள். மகிழ்ச்சியூட்டுவதால் **ரதி** என்றும் கூறப்படுகிறாள். **விஸ்ருதி** என்று ஜ்ஞாநிகளால் போற்றப்படுகிறாள். நினைவு ஶக்தியைத் தருவதால் **ஸரஸ்வதீ** என்று பேசப்படுகிறாள். (இங்கு **ஸாரயந்தி** என்று ஒரு பாடம் உள்ளது) அளவில்லாத தேஜஸ்ஸை உடையவளாகையால் **மஹாபாஸா** என்று சொல்லப்படுகிறாள். பல ஶாஸ்த்ரங்களிலும் சொல்லப்பட்ட பலவகையான அர்த்தமுள்ள பெயர்களால் பரத்வம் பொருந்தியவளாகவும், விஷ்ணுவைச் சார்ந்தவளாகவும் இவள் காணப்படுகிறாள். **கடலில்** இருப்பது போல் காம்பீர்யமும், ஆகாயத்தில் இருப்பது போன்ற மஹத்வமும் பொருந்தியவள்.

ஸூர்யனிடம் இருக்கும் ஒளி போலவும், சந்த்ரனிடம் இருக்கும் நிலவு போலவும் விளங்குகிறாள். **பாவப்** பொருள்களிலும், **அபாவப்** பொருள்களிலும் விஷ்ணுவின் ஸகல அங்கங்களிலும் நிறைந்திருக்கிறாள். இவ்வாறாக **ஶக்தி** யென்றும், **நாராயணீ** என்றும், **திவ்யா** என்றும் ஸகல ஸித்தாந்தங்களிலும் பேசப்படுகிறாள்.

### ஶக்தி என்பவள் ஶக்தியோடு இணைந்தவனுக்கு வேறுபட்டவள்

ஶக்தியுடன் கூடிய **பரமேஷ்டி** என்று சொல்லப்பட்ட பரம் பொருளாகிய பரமபுருஷனைக் காட்டிலும் வேறாக இருக்கிறாள். (குறிப்பு :— **பரமே திஷ்டதீதி - பரமேஷ்டீ** என்று பெரியோர் வைகுண்டத்தில் இருப்பதைக் குறிப்பதாகக் கூறுவர்) இவரும் இவளும் ஶாஸ்த்ரங்களில் **தர்மம்** என்றும் **தர்மி** என்றும் இயல்பாகக் கூறப்படுபவர்கள். ஒரு பொருளில் உள்ள ரூபம், ரஸம் மற்ற குணங்கள் எல்லாம் **தர்மம்** என்றும், இவற்றை உடைய வஸ்து **தர்மி** என்றும் ஶாஸ்த்ரத்தில் கூறப்படுகின்றன. (இதைக் **குணம் - குணி** என்றும் கூறுவர்). இவர்கள் ஒரே தத்வம் போல் இருப்பவர்கள் ஆயினும் தர்மம் தர்மி என்று இணைந்து இருக்கிறார்கள். ஆச்சர்யமான இயல்புகளை உடைய இவள் ஸ்வதந்த்ரமான ஸ்வரூபத்தோடு விஷ்ணு பத்நியாகவும் அமைந்து இருக்கிறாள். உலகமாக, தான் மாற விரும்புவதால் சிற்சில இடங்களில் தன் ப்ரகாஶத்தை வெளிப்படுத்துகிறாள்.

### ஶக்தி இரண்டு வகை; மஹிமை மூன்று வகை

ஆயிரம், லக்ஷம், கோடி, கோடி கோடிகளாக அற்புதமாக இவற்றின் ஸூக்ஷ்ம வடிவில் லக்ஷ்மியைக் காட்டக் கூடிய வெளித் தோற்றம் இரண்டுவகை என்று சொல்லப் பட்டுள்ளது. அவளுடைய மஹிமை என்பது செயல், பூதி, விபேதம் என்று மூன்று வகைப்படும். **அவ்யக்தம்** (ப்ரக்ருதி), காலம், இவை ஆண்பாலாக இருப்பதால் அவற்றின் தன்மை இங்கு காட்டப்படுகிறது.

## க்ரியா ஶக்தி பூத ஶக்தியைத் தோற்றுவித்தல்

**க்ரியை** என்று சொல்லப்பட்ட இந்த வெளித் தோற்றம் பூதியைத் தோற்றுவிக்கும். ப்ராணன் வடிவத்திலிருக்கும் லக்ஷ்மியின் அம்ஶம் விஷ்ணுவின் ஸங்கல்பம் எனப்படுகிறது. ஸ்வாதந்த்ர்யத்துக்கு அடிமையான **இச்சா ஶக்தி கடாக்ஷ** ரூபமாகவும் **க்ரியையைத்** தோற்றுவிப்பதாகவும் இருக்கும். ஸ்ருஷ்டியின்பொழுது எம்பெருமானுடைய ஸங்கல்பம் தங்கு தடையின்றி எல்லாப் பொருள்களிலும் உள்ளது. ப்ரக்ருதி காலம் முதலிய புருஷ வடிவமாகவும், சேதநம் அசேதநம் ஸ்வரூபமாகவும் உள்ள லக்ஷ்மி என்கிற உருவத்திலுள்ள மஹிமை விஷ்ணுவின் ஶக்தியாகும். இந்த ஶக்தியை விஷ்ணுவின் ஸங்கல்பம் உண்டுபண்ணுகிறது. (உயிருள்ள அனைத்தும் சேதநம்; உயிரில்லாத பொருள்கள் அசேதநம் என்று சொல்லப்படுகின்றன.) அவ்யக்தமே சிறிது உரு மாறி காலத்தை க்ரியை என்கிற ஒரு ஶக்தியோடும், ஜீவனை உணவு முதலிய முயற்சிகளோடும் சேர்த்து ஸ்ருஷ்டியில் ஈடுபடுத்துகிறது. மூன்று வகையான திறமையை, தான் எடுத்துக் கொள்வதன் மூலம் (அந்த அவ்யக்தம்) ப்ரளய காலத்தில் பிரித்து விடுகிறது. ஏற்றக் குறைவாக உள்ள மூன்று குணங்களோடு கூடிய ஆத்மாவின் ஸாமர்த்யம் ஸ்ருஷ்டி காலத்தில் சேர்த்து வைக்கிறது. ப்ரளய காலத்தில் பிரித்து வைக்கிறது. அவ்யக்தம், ஜீவன், முயற்சி இவைகளை ஸ்ருஷ்டியின் போது காலத்தில் சேர்க்கிறது. ப்ரளயத்தின் போது இவற்றைத் தனித் தனியாகப் பிரிக்கிறது. (ப்ரளயம் என்பது அழிந்து போவது அல்ல; ப்ரக்ருதி, ஜீவன் காலம் இவைகளில் பின்புள்ளவைகள், முன்புள்ளவைகளில் ஒடுங்குவதே யாகும்.) எம்பெருமானுடைய ஸங்கல்பமே ஜீவனுக்கு புத்தி ஶக்தியையும், ஸுக து:காதிகளில் அநுபவ ஸாமர்த்யமின்மையையும் முறையே ஸ்ருஷ்டி காலத்திலும், ப்ரளய காலத்திலும் செய்கிறது. ஸ்ருஷ்டி காலத்தில் இந்த மூன்றையும் சேர்ப்பதையும், ப்ரளய காலத்தில் பிரிப்பதையும் இந்த ஶக்தி என்கிற குணம் மணிகளைச் சேர்ப்பது போலவும் பிரிப்பது போலவும் செய்கிறது. எம்பெருமானுடைய இந்த

ஸங்கல்பமே அவருடைய கடாக்ஷத்தால் ஸ்ருஷ்டி காலத்தில் காத்தல் என்பதைச் செய்கிறது. எந்தக் கார்யங்களிலும் தங்கு தடையில்லாமல் இருத்தல் என்பது **ஸுதர்ஸநத்தின்** இலக்கணம்.

### க்ரியா ஶக்தி இரண்டு வகைளாக இருத்தலால் பாவப் பொருள்களில் ஊடுருவி இருத்தல்

**ஸுதர்ஸநம்** என்கிற எம்பெருமானுடைய மந அசைவாகிய இந்த ஸங்கல்பம் தன் உருவத்தைப் பலவாருகப் பிரித்துக் கொண்டு ஒவ்வொரு **பாவப்** பொருளிலும் நிற்கிறது.

### பலவாருக என்பதின் விளக்கம்

ஸுதர்ஸநத்தினுடைய இத்தகைய வ்யாப்தியை (பரவி இருத்தலே) நான் விரிவாகச் சொல்கிறேன் கேளும். இதை ஒருவன் (ஆணோ, பெண்ணோ) அறிந்து கொண்டால் ஒரு க்ருதக்ருத்யனாகிறான் (**பாக்யஶாலி** - ஜ்ஞாநி ஆகிருன்). ஆறு குணங்களோடு கூடிய பரப்ரஹ்மம் யோகிகளுக்கு உத்தமமான கதியாக இருக்கிறது. உலகத்தையெல்லாம் தன் ஶரீரமாக உடைய நாராயணனே **பாவம், அபாவம்** என்கிற உலகமாக இருக்கிருர். இவர்தம் ஸ்வயரூபத்தோடு வ்யாபித்து இயக்குகிருர். எப்பொழுதும் இருத்தல் என்பது எல்லாவற்றைப் படைக்கும் திறன் உள்ள நிலேயாகும். ஸகல பொருள்களிலும் இருக்கும் லக்ஷ்மீ தேவி பகவானுடைய அஹந்தையாகி (எல்லா அங்கங்களிலும் நிறைந்தவளாய்) அவருடைய கார்யங்களேத் தன் கார்யங்களாய் ஏற்று இந்த உலகத்தையெல்லாம் தன் ஸ்ரூபத்தோடு இயக்குகிருள். அவளுடைய அம்ஶமான பூதி என்பது உலகமாக மாறுதல் என்ற பெயர் பெறுகிறது. இவ்விஷயத்தில் உண்மையான செயல் உலகத்தை இயக்குதல் என்பதே. லக்ஷ்மியின் பரிபூர்ணமான க்ரியா ஶக்தியே விஷ்ணுவின் ஸுதர்ஸநம் எனும் அம்ஶம். உலகத்துக்கு அதிபதிகளாகிய இவ்விருவரும் மனத்தையும், கண்ணேயும் கவரக் கூடிய உருவத்தை எப்பொழுது ஏற்றுக் கொள்கிருர்களோ, அப்பொழுது அவர்கள் க்ரியை உலக ரக்ஷணத்துக்காகத் தாமரையாகவும், சக்ரமாகவும் அமைகிறது. இவற்றை

அவர்கள் எவ்வளவு காலம் காத்தலுக்கு உபகாரமாக விரும்புகிறார்களோ இந்த ஸுதர்ஸநமே அவ்வளவு காலம் சங்காகவும், ஸார்ங்கமென்னும் வில்லாகவும் இருக்கிறது. ஜ்ஞாநம், ஆநந்தம், இவற்றைக் கொடுப்பதன் மூலம் உதவி செய்ய எப்பொழுது விரும்புகிறார்களோ, அப்பொழுது ஸுதர்ஸநம், ஸூர்யன், சந்த்ரன், அக்நி இந்த ரூபத்தில் செயல்படுகிறார். தேவர்கள், அஸுரர்கள் என்கிற உருவங்களை எப்பொழுது எடுத்துக் கொள்கிறார்களோ அப்பொழுது ஸுதர்ஸநத்தின் செயல் அஸ்த்ரமயமாக இருக்கிறது. உலகத்தின் தன்மைக்காக எப்பொழுது நினைக்கிறார்களோ, அப்பொழுது பலவித பலன்களைத் தரும் ஸாஸ்ரங்களைச் செய்கிறார்கள். அந்தச் செயல் மனத்திலிருக்கும் ஆணையாகிறது. உலகத்துக்கு அதிபதிகளான அவர்கள் உலகத்தின் நன்மைக்காக எப்பொழுது ஸாஸ்த்ரங்கள் செய்கிறார்களோ, அப்பொழுது அந்த ஸாஸ்த்ர தாத்பர்யம் ஸுதர்ஸநத்தின் செயலாகும். நித்யமான தாய் தந்தைகளான இவர்கள் ஸாஸ்ராதிகாரிகள். அவர்களின் அதிகாரம் ஸுதர்ஸநத்தின் க்ரியா ஸக்தியே. எப்பொழுது பலன் உபகரணங்கள் இவைகளோடு ஸாஸ்த்ரத்தின் உட்பொருளாகிறார்களோ, அப்பொழுது பலன் கிடைக்கும்படிச் செய்தல் ஸுதர்ஸநத்தின் க்ரியையே. எப்பொழுது தாங்களே நான்கு வகை புருஷார்த்தங்கள்- **தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம்** (அறம், பொருள், இன்பம், வீடு) ஆகிறார்களோ, அப்பொழுது தன்னைத் த்ருப்தி செய்து கொள்ளும் திறமை எதுவோ அதுவே **ஸுதர்ஸந சக்ரம்.** எப்பொழுது மந்த்ரங்கள் என்கிற ரக்ஷையை உலகத்தின் க்ஷேமத்துக்காக ஏற்கிறார்களோ- (ரக்ஷயாக மாறுகிறார்களோ) அப்பொழுது மந்த்ரம், யந்த்ரம் என்னும் ஸ்வரூபத்தில் இவளே க்ரியா சக்தியாகிறாள். க்ரியா ஸக்தி என்பது விஸ்வரூபம் என்பதின் சுருக்கமாக இதுவரை விளக்கப்பட்டது. ஸுதர்ஸந ஸ்வரூபத்தில் இருக்கும் பிராட்டியின் ஸக்தி இதுவரை உமக்கு விளக்கப்பட்டது. மேலும் என்ன கேட்க விரும்புகிறீர்?

இவ்வாறு ஸ்ரீ பாஞ்சராத்ரம், தந்த்ர ரஹஸ்யம், **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யின் க்ரியா ஸக்தியின் விஸ்வரூப ஸக்தியின் விளக்கம் என்கிற மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

ப்ரளயகால வர்ணனே என்னும்

# 4வது அத்யாயம்

**நாரதர் :—** தேவாதிதேவா ! ஷாட்குண்ய பரிபூர்ண ! எல்லாம் அறிந்தவரே ! எருதுக் கொடியோனே ! ஸ்ருஷ்டிக்கான காரணமாக இயங்குகிறது என்று சொல்லப்பட்டது எது? ஸுதர்ஶநம் தன் ஸ்வரூபத்தாலும், கார்யத்தாலும், ப்ரயோஜநத்தாலும் வ்யாபித்திருப்பது என்பது உலகங்களுக்கு முக்ய காரணமான அந்த விஷயத்தை விரிவாக எனக்குச் சொல்லுங்கள்.

## ப்ரக்ருதி ஸம்பந்தமான ப்ரளய வர்ணனே

**அஹிர்புத்ந்யர் :—** ஜகத் காரணமான வஸ்துவின் தத்வத்தை நான் சொல்கிறேன். கவனமாகக் கேளும். அதில் ப்ரக்ருதி ஸம்பந்தமான இந்த ப்ரளயம் பற்றி நன்ருகத் தெரிந்து கொள்ளும். எல்லாவற்றிக்கும் காரணம் என்று பெயர் கொண்ட ப்ரக்ருதி என்கிற அவித்யை பயிர் முதலியவற்றை வளரச் செய்வதற்காக மேகத்தின் உருவத்தில் பஶுவாகச் செயல்படுகிறது. அப்பொழுது ப்ரளயத்தைச் செய்ய விரும்புவதனால் பஶுவாக இல்லாமல் தண்ணீரில்லாமல் உலர்ந்து அந்த **அவ்யக்தம்** மாறுகிறது.

**நாரதர் :—** பஶு என்று சொல்லப்பட்ட அந்த **அவ்யக்தம்** ஸ்ருஷ்டி காலத்தில் எவ்வளவு நாட்கள் இருக்கிறது? அதே போல் ப்ரளயத்தில் பஶுவாக இல்லாமல் வறண்டதாக எவ்வளவு காலம் இருக்கிறது?

## ப்ரளய காலத்தின் அளவு

**அஹிர்புத்ந்யர் :—** 18 நிமேஷங்கள் ஒரு காஷ்டை. 30 காஷ்டை ஒரு கலே. 30 கலேகள் ஒரு க்ஷணம். 12 க்ஷணங்கள் ஒரு முஹூர்த்தம். 15 முஹூர்த்தங்கள் ஒரு இரவு. 1 பகலும், 1 இரவும் சேர்ந்து ஒரு நாள். 15 நாட்கள் 1 பக்ஷம். இரண்டு பக்ஷங்கள் 1 மாதம். மாதங்கள் 12 சேர்ந்து 1 வருடம். 16 ஆண்டுகள் காம்யம். 16 காம்யங்கள் கொண்டது ............

(இங்கு மூல புத்தகத்திலும் இவ்வாறே புள்ளிகள் தான் உள்ளன) அந்த வித்யை என்பது அத்தனை காலம் பஶுவாகவும், பஶு அல்லாமலும் (வறண்டும்) இருக்கும். அந்தப் பஶு அல்லாத வறட்சி காலத்தில் ப்ரளயம் செய்ய விரும்புகிறது.

### எல்லாப் பொருள்களும் பூமியில் ஒடுங்குதல்

அசையும் பொருள், அசையாப் பொருள் என்கிற இவ்வுலகம் உலர்ந்ததாகவே இருந்தது. மிகப் பெரிய காற்றினால் வறண்டும் மிகப் பெரிய தீயினால் எரிக்கப்பட்டதாகவும் ஆகும். மலைகள் முதல் புல் பூண்டுகள் வரை இந்த உயர்ந்த உலகம், மனிதர்கள் அனைவரும், மநுக்களுள் ஒடுங்குகின்றன. 400 மனிதர்கள் மநுக்குள் ஒடுங்கினர். இவ்வாறு மனிதர்கள் அனைவரும் மநுக்குள் ஒடுங்கியபோது நான்கு தம்பதிகளான மநுக்கள் மட்டுமே முநிவரே ! ஆமையின் முதுகுக்கு நிகரான இந்த பூமியில் இருப்பர்.

### பூமி நீரில் ஒடுங்குதல்

எம்பெருமானுடைய ஸங்கல்ப ரூபமான தடையில்லாத அந்த ஸுதர்ஶநத்திலிருந்து பூமியினுடைய **கந்த தந்மாத்ரத்தை** நீர் விழுங்கிவிடுகிறது. (பஞ்ச பூதங்களுக்கும் உயிர் நாடியான ஒவ்வொரு பொருளையும் பெரியோர் **தந்மாத்ரம்** என்று குறிப்பிட்டனர். உதாரணமாக பூமிக்கு மணம் **தந்மாத்ரம்**, நீருக்குச் சுவை, நெருப்புக்கு உஷ்ணம், காற்றுக்கு ஸ்பர்ஶம், ஆகாயத்துக்கு ஶப்தம் முதலியவை **தந்மாத்ரங்கள்**) இவற்றை ரஸம் என்று குறிப்பிடுகிறார். தனக்குக் காரணமான ஜலத்தினால் பூமியின் ஸாரமான **கந்தம்** (மணம்) எப்பொழுது உறிஞ்சப்படுகிறதோ அப்பொழுது நான்கு தம்பதிகளான மநுக்கள் ஜலத்தில் வஸிக்கிறார்கள். ஸாரம் உறிஞ்சப்பட்ட பூமி அப்பொழுது உருவத்தையும், பெயரையும் விட்டுவிடுகிறது. (உருவமில்லாமலும், பெயரில்லாமலும் இருக்கிறது என்றவாறு.) இந்த ஸமயத்தில் அசையும் பொருள்கள்,

அசையாப் பொருள்கள் அனைத்தும் நீர் என்ற பெயரைக் கொண்டே நிற்கின்றன.

### நீர் நெருப்பில் ஒடுங்குதல்

முன்பு சொன்ன காரணபூதமான விஷ்ணுவின் ஸங்கல்ப ரூபமான தேஜஸ் நீரின் ஸாரத்தை விழுங்குகிறது. நீரிலிருந்து வெளியேறிய அந்த மநு தம்பதிகள் தேஜஸ்ஸிலேயே நிற்கிறார்கள். நீரிலிருந்த (ரஸம் என்கிற) **தந்மாத்ரம்** உறிஞ்சப்பட்ட பொழுது உருவமும் பெயருமில்லாமல் இருக்கிறது. முனிவரே! இப்பொழுது அளவற்ற ஒளியோடு கூடிய ஜோதியே உலகம் என்ற பெயருடன் நிற்கிறது.

### தேஜஸ் வாயுவில் ஒடுங்குதல்

ஜோதியின் ரஸத்தை எம்பெருமானுடைய ஸங்கல்பரூபமான ஸுதர்ஶநத்தின் ஶக்தியால் வாயு உறிஞ்சி விடுகிறது. விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் இயக்கப்பட்ட அந்த மநு தம்பதிகள் இப்பொழுது வாயுவையே பற்றி நிற்கின்றனர். தன் ரஸத்தை இழந்த ஜோதி, உருவத்தையும் பெயரையும் விட்டுவிடுகிறது. இப்பொழுது மனத்தால் நினைக்க முடியாத வேகத்தில் வீசும் வாயுவே உலகம் என்கிற பெயரில் நிற்கிறது.

### வாயு ஆகாயத்தில் ஒடுங்குதல்

எம்பெருமானுடைய ஸங்கல்பத்தால் இயங்கும் காரணமாயிருக்கும் ஆகாயம் வாயுவின் ஸாரமான ஸ்பர்ஶத்தை விழுங்குகிறது. எம்பெருமான் ஸங்கல்பத்தால் உந்தப்பட்ட மநு தம்பதிகள் வாயுவைவிட்டு ஆகாயத்திலேயே இருக்கிறார்கள். தந்மாத்ரத்தை இழந்த வாயு உருவமும், பெயரும் இல்லாமல் இருக்கும்.

### ஆகாயம் அஹங்காரத்தில் ஒடுங்குல்

முனிவரே! விஷ்ணுவின் க்ரியா ஶக்தியால் உந்தப்பட்ட அஹங்காரம் என்பது ஆகாயத்தின் ஸாரமான ஶப்தத்தை விழுங்குகிறது. விஷ்ணுவின் அதே ஶக்தியினால் இயக்கப்பட்ட அந்த பகவத் ஸ்வரூபமாக உள்ள நான்கு மநு

தம்பதிகள் இப்பொழுது அஹங்காரத்தைப் பற்றி நிற்பார்கள். தன் ஸாரம் உறிஞ்சப்பட்ட ஆகாயம் இப்பொழுது உருவமும் பெயரும் இல்லாமல் இருக்கிறது. முனிவரே ! அஹங்காரம் என்று சொல்லப்பட்ட அந்த உலகம் **அஹம்** என்றே சொல்லப்படுகிறது.

### அஹங்காரம் புத்தியில் ஒடுங்குதல்

அஹங்காரத்துக்குக் காரணமான அபிமாநம் என்கிற ஸாரத்தைப் புத்தி விழுங்குகிறது. விஷ்ணுவின் ஸுதர்ஶநத்தால் உந்தப்பட்ட புத்தி என்கிற தத்வத்தையே மநு என்கிற 8 பேர்களும் ஆஶ்ரயித்திருக்கிறார்கள். தன் ஸாரத்தை இழந்த அஹங்காரம் உருவத்தையும், பெயரையும் இழந்து விடுகிறது. முனிவரே! ப்ரயத்நத்தோடு கூடிய இந்த புத்திதான் இப்பொழுது உலகம்.

### புத்தி தமஸ்ஸில் ஒடுங்குதல்

விஷ்ணுவின் ஸுதர்ஶநத்தால் உந்தப்பட்ட தமஸ் என்பது புத்தியின் காரணமான உறுதி என்கிற ஸாரத்தை விழுங்குகிறது. விஷ்ணுவின் ஶக்தியால் ஈர்க்கப்பட்ட அந்த மநு தம்பதிகள் புத்தியை விட்டுத் தமஸ்ஸையே பற்றி நிற்கிறார்கள். இந்த உலகமெல்லாம் இப்பொழுது உருவமில்லாமல் அறியப்படாமல், அநுமாநிக்க முடியாமல், அசைவற்றதாக பலமான மோஹத்தை (மயக்கத்தை)த் தரும் தாமஸமாகவே உள்ளது.

### இந்த்ரியங்கள் (புலன்கள்) பூதங்களோடு கூட தம் தம் காரணங்களில் ஒடுங்குதல்

இந்த்ரியங்களான மூக்கு, நாக்கு, கண், தோல், காது முதலிய ஜ்ஞாநேந்த்ரியங்கள் ஐந்தும், ஆண் குறி, பெண் குறி உட்காரும் பாகம், கால்கள், கைகள், வாய் முதலிய கர்மேந்த்ரியங்கள் ஆக ஐந்து புலன்களும், பூமி ஜலம் முதலிய ஐந்து பூதங்களும் தம் தம் இந்த்ரியங்களான மூக்கு முதலியவைகளோடு சேர்ந்து விடுகின்றன. மனம் அஹங்காரம் என்பது செயல்களோடு கூடிய இரண்டு

வகையான இந்த்ரியங்கள். அறிவைத் தரக் கூடிய இந்த இரண்டும் புத்தியில் ஒடுங்குகின்றன. இப்பொழுது உலகமெல்லாம் தமஸ்ஸாகவே இருக்கிறது.

## தமஸ் ரஜஸ்ஸில் ஒடுங்குதல்

எம்பெருமானுடைய ஸங்கல்பத்தால் இயக்கப்பட்ட அழுத்தம் என்னும் உருவத்திலிருக்கும் தமஸ்ஸின் நிலையை ரஜஸ் விழுங்கிவிடுகிறது. (ரஜஸ், தமஸ் என்பது குணங்கள்). முனிவரே! எம்பெருமானின் ஸங்கல்பத்தால் இயக்கப்பட்ட அந்த மநுக்கள் தமஸ்ஸைவிட்டு விலகி ரஜஸ்ஸிலேயே நிற்பார்கள். தன் ஶக்தியை இழந்த தமஸ் உருவமும், பெயரும் இல்லாமல் இருக்கிறது. அசைதல் என்ற க்ரியா வடிவம் கொண்ட ரஜோகுணம் உலகமாக இருக்கிறது.

## ரஜோகுணம் ஸத்வகுணத்தில் ஒடுங்குதல்

அசைதல் என்கிற ஸ்வரூபத்துடன் கூடிய ரஜோ குணத்தை ஸுதர்ஶநத்தால் உந்தப்பட்ட ஸத்வகுணம் விழுங்குகிறது. ரஜஸ்ஸில் இருந்த மநு தம்பதிகள் விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் உந்தப்பட்டு ரஜஸ்ஸை விட்டு விலகி ஸத்வத்தையே அடைந்திருக்கிறார்கள். தன் ஶக்தியை இழந்த ரஜஸ் இப்பொழுது உருவமும், பெயரும் இல்லாமல் இருக்கிறது. மிகச்சிறிய வெளிச்சத்தை உடைய ஸத்வமாகவே இந்த உலகம் நிற்கிறது.

## ஸத்வம் காலத்தில் ஒடுங்குதல்

விஷ்ணுவின் ஸுதர்ஶந ஶக்தியால் உந்தப்பட்ட காலம் என்கிற குணம் அறிவுக்குக் காரணமான ஶக்தியை ஸத்வ குணத்திலிருந்து விழுங்கி விடுகிறது. இப்பொழுது மநுக்கள் ஸத்வத்தை விட்டு விலகிக் காலத்தையே பற்றி நிற்கிறார்கள். முனிவரே! இந்த உலகம் அப்பொழுது காலமாகவே இருந்தது. தன் ஸாரத்தை இழந்த ஸத்வம் இப்பொழுது உருவமும், பெயருமற்றதாய் இருக்கிறது.

## காலம் நியதியில் ஒடுங்குதல்

எல்லாவற்றையும் அறிந்திருக்கிற அந்தக் காலத்தின் ஶக்தியை பகவானால் உந்தப்பட்ட நியதி என்பது விழுங்கி விடுகிறது. ஸுதர்ஶநத்தால் நியமிக்கப்பட்ட எட்டு மநுக்கள் காலத்தை விட்டு விலகி அந்த நியதியை ஆஶ்ரயித்தார்கள். தன் ஶக்தியை இழந்த காலம் உருவத்தையும் பெயரையும் இழந்து இருக்கிறது. இந்த உலகமெல்லாம் அப்பொழுது நியதி என்கிற பெயரிலேயே இருந்தது.

## நியதி ஶக்தியில் ஒடுங்குதல்

மஹாமுநிவரே! நியதியின் பெரிய அவித்யா ரூபமான ஶக்தியை பகவானுல் உந்தப்பட்ட ஶக்தி என்பது விழுங்கி விடுகிறது. பகவானுடைய ஸங்கல்பத்துக் கிணங்க அந்த மநு தம்பதிகளும் நியதியை விட்டு விலகி மிகவும் பெரியதான விஷ்ணுவின் ஶக்தியில் புகுந்து விடுகிறுர்கள். தன் ஶக்தியை இழந்த அந்த நியதி உருவத்தையும் பெயரையும் இழந்து விடுகிறது. பிறகு இந்த உலகம் முழுவதும் (அசையும் பொருள், அசையாப் பொருள் உள்பட) ஶக்தியாகவே இருக்கிறது.

## ஶக்தி கூடஸ்த புருஷனில் ஒடுங்குதல்

ஶக்தியிலிருக்கும் சேதநர்களை விழிக்கச் செய்யும் ஶக்தி அநாதியானது. அதை ஸுதர்ஶநத்தால் நியமிக்கப்பட்ட கூடஸ்த புருஷன் விழுங்கி விடுகிறுன். மநுக்கள் அந்த ஶக்தியை விட்டு விலகி அந்தக் கூடஸ்த புருஷனை பகவானுடைய கட்டளையாக ஆஶ்ரயிக்கிறுர்கள். தன் ஸாரத்தை இழந்த அந்த ஶக்தி அப்பொழுது உருவத்தையும், பெயரையும் இழந்து விடுகிறது. ஸகலத்துக்கும் ஆத்மாவாகவும், எங்கும் வ்யாபித்திருக்கும் ஶக்தியை உடையவரும், எங்கும் முகத்தை உடையவரும், எல்லாம் அறிந்தவரும், எங்கும் வ்யாபித்திருப்பவரும், ஸர்வ ரூபியானவருமான கூடஸ்த புருஷன் எல்லாவற்றையும் வ்யாபித்திருக்கிறுன். இந்தப் புருஷன் மநுதம்பதிகளுக்குக்

கூடஸ்தன். தேவர்களுக்கெல்லாம் தேவனுன மஹா விஷ்ணுவைச் சேர்ந்த இவன் ஸகல க்ரியைகளைச் செய்பவன். மஹா முநிவரே! பூமி முதல் ஶக்தி வரையிலான 13 தத்வங்கள் தங்கள் செயல்பாட்டை இழந்து காம்யமான 100 வருடங்கள் நிறைந்திருக்கும். இங்கு 13 என்கிறது பஞ்ச மஹா பூதங்களையும் அவற்றின் ஸாரமான தந்மாத்ரங்களையும் அஹங்காரம், மனஸ், புத்தி இவற்றைக் குறிக்கும்.

### கூடஸ்த புருஷன் அநிருத்தனில் ஒடுங்குதல்

இந்தக் கூடஸ்த புருஷன் 300 வகையாக இருப்பான், அவனிடமிருந்து மநு தம்பதிகள் உருவத்திலிருக்கும் புருஷன் தன்னை ப்ராஹ்மணன், க்ஷத்ரியன், வைஶ்யன், ஶூத்ரன் என்கிற முறையில் நான்கு உருவமாக ஆக்கிக் கொண்டு அநிருத்தனுடைய முகம், புஜங்கள், தொடைகள், பாதங்கள் என்கிற அவயவங்களில் பழுக்கக் காய்ச்சின இரும்பில் நீர்த்துளிகள் மறைவது போல் க்ஷண காலத்தில் ஒடுங்கிவிடுகிருன். பிறகு சித் அசித் அனைத்திலும் ஒடுங்கிய பகவான் 1,600 வருடங்கள் இருப்பார் (இது தேவ வருடங்கள் கணக்கு).

### அநிருத்தன் ப்ரத்யும்நனில் ஒடுங்குதல்

பிறகு தன்னுடைய எல்லா வகையான க்ரியைகளையும் ஒடுக்கிக் கொண்டு கிழத்தனமில்லாத பகவன் மூர்த்தியான ப்ரத்யும்நனை அடைந்து அவ்வளவு (1,600 வருடங்கள்) காலம் அங்கு நிற்கிருர்.

### ப்ரத்யும்நன் ஸங்கர்ஷணனில் ஒடுங்குதல்

பிறகு ப்ரத்யும்நன் என்கிற திருநாமத்துடன் கூடிய இந்தத் தாமரைக் கண்ணனாகிய பகவான் எந்தவிதமான தீய குணங்களற்ற ஸங்கர்ஷணனில் ஒடுங்குகிருர். ஸர்வ தேவஸ்வரூபியாக இருக்கும் அச்யுதன் (நாராயணன்) முன் சொன்ன அவ்வளவு (1,600) வருடங்கள் அங்கு இருக்கிருர். சித் அசித் இவைகள் நிறைந்ததும், ஶுத்தமும், அஶுத்தமும் கலந்ததுமான இந்த உலகம் அனைத்தையும், பலன் என்கிற

பெயருள்ள ஸங்கர்ஷணன் என்கிற இந்த பகவன் மூர்த்தி திலகமும், அலகமும் (சுருண்ட கேஶம்) போல், உதயகிரியும், அஸ்தமய கிரியும் போல், தன் ஜ்ஞாந ஸ்வரூபமான திருமேனியுடன் இருக்கிறார். அசித்தை அங்கமாகக் கொண்ட சித் என்னும் சந்த்ரனுக்கு இவருடைய கலைகள் குறைவில்லாமல் முழுமையான ஸங்கர்ஷணமயமாக ஒரு நாள் இருக்கும். இங்கு ஸகல விதமான பொருள்களும் தம் தம் பெயர்களுடன் விளங்கும்.

### ஸங்கர்ஷணன் வாஸுதேவனில் ஒடுங்குதல்

1,600 வருடங்கள் அங் கு இருந்து பிறகு அந்த அச்யுதன் அநாதியான பகவான் வாஸுதேவனில் லயிக்கிறார். முனிவரே! அப்பொழுது அஸத்துமில்லை; ஸத்துமில்லை (ப்ரஹ்ம ஜ்ஞாந முள்ளவன் **ஸத்.** அது இல்லாதவன் **அஸத்.** கல்லுக்கும் அவனுக்கும் வித்யாஸம் இல்லை) பலவகையான ஶக்தி, ஸாமர்த்யங்களோடு கூடிய **பாவப்** பொருள்கள், **அபாவப்** பொருள்கள் இவைகளை உள்ளே அடக்கிக் கொண்டு இருக்கும் வாஸுதேவ மூர்த்தி இவர் இப்படிப்பட்டவர் என்று மனத்தாலும் நினைக்க முடியாத பரப்ரஹ்மமாக இருக்கிறார். அதுவே இரவு என்றும், பரப்ரஹ்மம் என்றும் சொல்லப்படுகிறது. விஜ்ஞாநம் பலம் முதலியவைகளின் மூன்று இரட்டைகள் (ஆறு குணங்கள்) இவரிடத்திலேயே ஒடுங்குவதால் அது இரவு என்று சொல்லப்பட்டது. ஸங்கர்ஷணன் முதல் பூமி வரையிலான மாயை எதிலிருந்து வெளி வந்ததோ அது **அவ்யக்தம்.** எல்லோருக்கும் பொதுவாக இருப்பதால் ஸமம் எனப்படுகிறார். பகவானுடைய ஶக்தியாகிய எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி நிற்கிற **அஹந்தை** (அஹங்காரம்) தனியாக நிற்கும் இயல்பு இல்லாததாகத் தன் ஆத்மாவின் ஆநந்த உருவமாக இருக்கிறது. (**அஹந்தா** என்பதே **ஸத்தா**). ஸங்கர்ஷணன் முதல் பூமி வரை உள்ள எல்லாம் அந்த அஹந்தையின் கோடியில் ஒரு பாகம் என்று சொல்லப்படுகிறது. எந்த உலகமெல்லாம் **ஸத்** என்றும் **அஸத்** என்றும், **சித்** என்றும், **அசித்** என்றும் தோற்றமளிக்கிறதோ அந்த உலகத்திலுள்ள ஸ்ருஷ்டியின்

முயற்சி அடங்கிவிட்ட பிறகு கண்ணால் பார்க்க முடியாததும், தன் செயல்களால் ஏற்படும் வேற்றுமைகளை பகவத் ஸங்கல்பத்தால் விட்டு விட்டும், ஸுதர்ஶநத்தின் இயல்பான ஒடுக்கும் ஶக்தியான க்ரியையை ஒடுக்கிக் கொண்டு, பகவானின் ஸங்கல்பம் என்கிற நிலையை அடைந்து விளங்குகிறது. எரி பொருள் இல்லாமையால் ஜ்வாலை (சுடர்) நெருப்பாக மட்டும் இருக்கும் நிலையை அடைந்து நிற்பது போல், பரப்ரஹ்மம் என்று சொல்லப்பட்ட **நாராயண-நாராயணீ** என்று சொல்லப்பட்ட அந்த மேலான ஶக்தியும் இணைந்திருப்பதால் ஒரு தத்வம் போல் தோற்றம் அளிக்கிறார்கள். ஸங்கர்ஷணன் முதலியவர்கள் எவ்வளவு காலம் இருக்கிறார்களோ, அது புருஷனுடைய பகல் என்றும் அவர்கள் ஒடுங்கும் போது புருஷனுடைய இரவு என்றும் சொல்லப்படுகிறது.

இவ்வாறாகப் பாஞ்சராத்ர ரஹஸ்யம், ஸ்வதந்த்ர ரஹஸ்யம்
அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் ப்ரளய வர்ணனை என்கிற
4-வது அத்யாயம் முற்றிற்று.



## ஶுத்த ஸ்ருஷ்டி என்கிற

# 5வது அத்யாயம்

**அஹிர்புத்ந்யர் :—** முநிவரே! **கார்யங்கள்** காரணங்கள் இவை எல்லாம் ஒடுங்கும் வகையை இதுவரை சொன்னேன். ஸுதர்ஶநத்தின் ஶக்தியால் ஏற்படும் அந்தப் பொருள்களுடைய ஸ்ருஷ்டியை (படைப்பை) இப்பொழுது சொல்கிறேன்.

### ப்ரளய நிலையில் இருக்கும் ப்ரஹ்மத்தின் ஸ்வரூப வர்ணனை

அந்த ப்ரஹ்மம் எல்லாச் செயல்கள் ஒடுங்கியும் எல்லா வகைகளிலும் ஸமநிலையைப் பெற்றதும், பரப்ரஹ்மமுமான நாராயணன் காற்றில்லா ஆகாயம் போலவும், எல்லா வகைகளிலும் ஆறு குணங்கள் அசைவற்றதாகவும், எல்லாவற்றுக்கும் இருப்பிடமாகவும் ஒலி அடங்கிய நிலையிலுள்ளதாக இருக்கும்.

### ஶக்தி உருவத்திலிருக்கும் மஹாலக்ஷ்மி சில ஸமயம் வெளிப்படுதல்

அந்த நாராயணனின் ஶக்தி அசைவற்ற நிலையிலுள்ளதாய் ஶூந்யம் போல் காட்சி தந்து ஒருவகை ஸ்வதந்த்ர உணர்வினால் ஒரு ஸமயம் தன் ப்ரகாஶத்தை வெளிப்படுத்துகிறான். பரப்ரஹ்மம் என்கிற ஸ்ரீமந் நாராயணனுடைய ஆத்மா போன்ற ஶக்தி ஆகாயத்தில் மின்னல் போலவும் சில ஸமயத்தில் ப்ரகாஶிக்கிறது. ஆகாயத்தில் ப்ரகாஶிக்கிற அந்த ஶக்தி **ஶக்தி** எனப்படுகிறாள்.

### ஶக்தி பல பொருள்களை வெளிப்படுத்துதல்

ஶுத்தம் அஶுத்தம் மற்றும் உருவத்தோடு கூடிய பல வகையான பொருள்களைச் ஶக்தி தோற்றுவிக்கும். தன்னுடைய வெளிப்பாட்டை விரும்புகிற அந்த ஶக்திக்கு இந்த ஸ்வதந்த்ரம் என்பது, தானே ஏற்படுத்திக் கொண்டது. எம்பெருமானுடைய அந்தப் பார்வை என்கிற ஸங்கல்பம் ஸுதர்ஶநம் எனப்படுகிறது. அதுவே க்ரியை. அதுவே

எம்பெருமானுடைய வீர்யம். அதுவே தேஜஸ். அதுவே பலம். எந்தெந்தப் பொருள்கள் தோற்றம் பெறுகின்றனவோ, அவை தன் வட்டை மூலம் மாற்றப்பட்ட பொருள்களாகும். அதுவே ஐஶ்வர்யம். அதுவே விஷ்ணு ஶக்தி. விஷ்ணு ஶக்தியின் கோடியின் ஒரு அம்ஶத்தினால் அந்த ஶக்தி ஸகல பூத ஸ்வரூபமாக இருக்கும். (வட்டை என்பது சக்ரத்தின் வட்டமாக உள்ள பாகம் - rim). அந்த ஶக்தி பலவகையான இரட்டைக் கருத்துகளால் இருக்கிறது. ஶுத்தம் அஶுத்தம் என்கிற பிரிவுடனும், ஜீவன் ஜடம் என்கிற உருவத்திலும் காலம், காலத்தினால் ஏற்படும் பொருள்கள் என்கிற பிரிவுடனும் உணரப்படும் பொருள்கள், உணரப்படாத அவ்யக்தம் என்கிற உருவத்திலும், தோன்றுபவை தோற்றுபவை என்கிற பிரிவுடனும், சொல் பொருள் என்கிற பிரிவுடனும், அநுபவிக்கப்படும் பொருள்கள் அநுபவிப்பவர்கள் என்றும், உடல் ஆத்மா என்றும் மற்றும் பல இரட்டைப் பொருள் வடிவமாக அந்த ஶக்தி பிரிந்து காணப்படுகிறது. தேவர்ஷியே ! இவ்வாறுன பலவகை வேறுபாடுகளுடன் எந்த ஶக்தி மூல காரணமாக உள்ளதோ அதுவே ஸுதர்ஶநத்தின் உத்தமமான அம்ஶம் என்று தெரிந்து கொள்ளும். நெருப்பும் மேகமும் காற்றினால் எப்படி உந்தப்படுகின்றனவோ, அதே போல எம்பெருமானுடைய ஐஶ்வர்யம் என்று சொல்லப்படும் விபூதி ஸுதர்ஶநத்தினாலேயே இயக்கப்படுகிறது. ஸ்ருஷ்டி காலத்தில் **அநுலோம**மாகவும் ப்ரளய காலத்தில் **ப்ரதிலோம**மாகவும் ஸுதர்ஶநம் என்கிற காற்றினால் உந்தப்பட்டு இயங்குகிறது. (காரணத்திலிருந்து கார்யம் உண்டாவது **அநுலோமம்.** கார்யமமான பொருள்கள் எல்லாம் தன் தன் காரணங்களில் ஒடுங்குவது **ப்ரதிலோமம்**) இவ்வாறு சொல்லப்பட்ட பல வகையான நிலைகளை அந்த ஶக்தி பெற்றிருப்பது எப்படி என்பதைச் சொல்கிறேன், கேளும்.

### ஶுத்த ஸ்ருஷ்டியின் விரிவு

இவற்றில் எம்பெருமானுடைய ஐஶ்வர்யம், ஶுத்தமான ஸ்ருஷ்டி இவற்றை முதலில்

தெரிந்துகொள்ளும். ஜ்ஞாநம், ஐஶ்வர்யம், பலம், தேஜஸ் முதலிய ஆறு குணங்களின் மூன்று இரட்டைகளால் (ஜோடிகளால்) ஏற்படும் ஸ்ருஷ்டி ஶுத்த ஸ்ருஷ்டி எனப்படுகிறது.

## குணங்களின் மூன்று இரட்டைகளால் ஏற்படுவது வ்யூஹத்ரயம்

ஜ்ஞாநம், பலம் இவ்விரண்டும் ஸங்கர்ஷணனுடைய உருவம். ஐஶ்வர்யம், வீர்யம் இவ்விரண்டாலும் ஏற்பட்டது ப்ரத்யும்நனுடைய உருவம். ஶக்தி, தேஜஸ், இவ்விரண்டும் மேலோங்கியிருப்பது விஷ்ணுவின் - அநிருத்தனுடைய உருவம். இந்த இரட்டை குணங்களாகச் சொல்லப்பட்ட உருவங்கள் அந்த இரண்டு குணங்களை மிகுதியாக வெளிப்படுத்தும்.

## மூன்று வ்யூஹங்களிலும் ஆறு குணங்கள் தொடரும்

இந்த தேவர்கள் ஆறு குணங்கள் நிரம்பிய மூர்த்திகளே. தாமரைக் கண்களை உடையவர்கள். ஒவ்வொரு மூர்த்தியிலும் தெளிவாக வெளிப்படும் இரண்டு குணங்களைத் தவிர மற்ற நான்கு குணங்களும் கூட எல்லா மூர்த்திகளிலும் இருந்து கொண்டே இருக்கும்.

## சாதுராத்ம்யம் என்பது மூன்று நிலையில் உள்ள வகை

குணங்கள் ஆறும் நிறைந்திருப்பதும், இரண்டிரண்டு குணங்கள் வெளிப்படுவதும், திருமேனியில் உள்ள வேறுபாடு என்று மூன்று வகை. விஷ்ணுவின் குணங்களின் சேர்க்கையில் ஏற்படும் மாற்றத்தினால் **சாதுராத்ம்யம்** பேசப்படுகிறது.

## ஸங்கர்ஷணரின் செயல்

ஜ்ஞாநம் அதிகமாகவும், பலம் அதிகமாகவும் உள்ள ஸங்கர்ஷணர் பகவானை அடைய ஸாதநமான சிறப்பான வழியை வெளிப்படுத்துகிறார்.

### ப்ரத்யும்நரின் செயல்

வீர்யம், ஐஶ்வர்யம் அதிகமாக உள்ள ப்ரத்யும்நன் என்கிற புருஷோத்தமர் பகவானை அடையும் மார்க்கமான ஶாஸ்த்ரங்களின் பொருளை விளக்கும் நிலையில் நிற்கிறார்.

### அநிருத்தரின் செயல்

ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படும் பகவானை அடைதல் என்பதின் கருத்துக்களுடைய பலனை புருஷோத்தமனாகிய அநிருத்தன் அதற்கான வழிவகைகளைச் செய்திருக்கிறார். ஶாஸ்த்ரங்கள், அதன் கருத்துகள், அதனால் கிடைக்கும் பலன் இவற்றை நிறைவேற்றித் தரும் இந்தப் புருஷர்கள், புண்டரீகாக்ஷர்களான புருஷர்கள். மஹாவிஷ்ணுவின் ஶக்தி மயமான வ்யூஹாவதாரங்கள். **(புண்டரீகாக்ஷன்** :- தாமரைக் கண்ணன் என்பது பொருள்).

### இந்த வ்யூஹம் பரவாஸுதேவனுடன் சேர்ந்து நான்கு வகையாகும்

**வ்யூஹம்** :— பிரித்தல், போரில் படைகளைப் பிரித்து வைப்பதையும் வ்யூஹம் என்பர்).

நாரத முநிவரே! பகவான் வாஸுதேவனும் இந்த மூன்று வ்யூஹங்களும் புலப்படுவதும், புலப்படாததுமான லக்ஷணங்களோடு கூடிய சாதுராத்ம்யம் ஆகும். (பகவான் நான்கு வகையாக இருப்பார். பரவாஸுதேவரும் வ்யூஹ வாஸுதேவரும் ஒன்றே. மற்ற மூவர் இரண்டிரண்டு குணங்களை ப்ரகாஶப்படுத்திக் கொண்டு இருப்பர் என்று முன்பே சொல்லப்பட்டிருக்கிறது.

### குணங்களின் ப்ரகாஶம் என்பதின் விளக்கம்

ஜ்ஞாந பல ஐஶ்வர்யம் முதலிய ஶக்திமயமான இந்த குணங்களும் இவற்றின் அசைவின்மை என்பதும் எம்பெருமான் ஸ்ரீ ஹரியின் ஸங்கல்பத்துடன் அமைகின்றன. அது அந்த குணங்களின் ப்ரகாஶம் என்று சொல்லப்படும். ஷாட்குண்ய பரிபூர்ணனும் வாஸுதேவன் என்கிற

திருநாமமுடையவரும் **அந்தர்வ்யாப்தி பஹிர் வ்யாப்தி** போலாகும். அந்த மூல ப்ராக்ருதி எனப்படும் பொருளும், உலகங்களுக்கெல்லாம் காரணமாக வ்யாபித்திருக்கும் எம்பெருமானின் அந்தப் பெரிய ஶக்தியும், ஶக்திக்கும் ஶக்தியை உடையவருக்கும் உள்ள வேற்றுமையால் பகவான் வாஸுதேவன் என்று சொல்லப்படுகிறார்.

### படைத்தலை விரும்பும் வாஸுதேவனிடமிருந்து ஸங்கர்ஷணரின் தோற்றம்

ஸர்வஶக்தி நிறைந்த வாஸுதேவன் என்கிற அந்த பகவான் படைத்தலை விரும்பி, தானே தன்னை ஸங்கர்ஷணன் என்கிற உருவத்தில் பிரித்துக் கொள்கிறார்.

### இங்கு உதாஹரணம்

உதயகிரியில் ஸூர்யன் இருக்கும் பொழுது ஒளி எப்படிப் பரவுகிறதோ அவ்வாறு பகவான் அவதரிக்கும்பொழுது ஸங்கர்ஷணன் என்கிற உருவத்தில் ஒளி வெளிப்படுகிறது.

### அவர் 1,600 வருடங்கள் காத்திருத்தல்

1,600 வருடங்கள் ஸங்கர்ஷண ரூபமான ஶக்தி செயல் ஏதுமின்றி நிற்கிறது. ஸாக்ஷாத் புருஷோத்தமன் ஶக்தியோடு கூடியவன். ஜ்ஞானம் **பலம்** இவற்றுக்குக் கடல். அநந்தன். ஆறு குணங்கள் நிறைந்தவன். விஷ்ணு எனப்படுபவன். அசைவற்ற கடலுக்கு ஒப்பானவர். அசைவற்ற ஆறு குணங்களோடு கூடியவர். தன் ஸங்கல்பத்தால் தூண்டப்பட்டு ஆறு குணங்களும் ஒரே ஸமயத்தில் செயல்படத் தொடங்கியதாக பகவான் வாஸுதேவன் அநந்தன் எக்காலத்திலும் இருப்பவர். ஜ்ஞானம், **பலம்** இவற்றின் வெளிப்பாட்டினால் அநந்தனான அந்த பகவானே ஸங்கர்ஷணன் என்னும் அச்சுதன்.

### ப்ரத்யும்நரின் தோற்றம்

ஶக்திமயமான அச்யுதன் 16 வருடங்கள் இருந்து **ஷாட்குண்ய பரிபூர்ணனை** அந்த பகவானே அநந்தனை

புருஷோத்தமனுன **ப்ரத்யும்நன்.** தன் அம்ஸங்களின் ஒரு அம்ஸத்திலிருந்து உண்டான **ப்ரத்யும்நன்** என்கிற பெயருடன் பகவானின் ஒளிமயமாக 1,600 வருடங்கள் செயலற்று மௌநமாக இருக்கிருர்.

## அநிருத்தரின் தோற்றம்

பிறகு ஸக்திவடிவமாக உள்ள **ப்ரத்யும்நன்** என்கிற புருஷோத்தமர் தன்னுடைய ஸங்கல்பத்தால் தூண்டப்பட்டு அநந்தனான அந்த பகவானே அநிருத்தராக அவதரிக்கிருர். தன் அம்ஸங்களின் ஒரு அம்ஸமாக வெளிப்பட்ட அந்த ஒளிமயமானவர், **அநிருத்தன்** என்கிற பெயருடன் செயலற்று 1,600 வருடங்கள் மௌநமாக இருக்கிருர்.

## 1600 வருடங்களுக்குப் பின் வ்யூஹாவதாரங்கள் படைத்தலில் ஈடுபடுதல்

1600 வருடங்கள் அந்த ஸக்தியோடு கூடிய அநிருத்தர், முன் வ்யூஹர்களோடு கூடப் படைத்தலில் இறங்குகிருர். இந்த நான்கு வ்யூஹ புருஷர்கள் புருஷோத்தமர்கள். பரந்த கண்களோடு கூடியவர்.

## வ்யூஹ புருஷர்கள் தீய குணங்கள் அறவே இல்லாதவர்களாய் அநாதியானவர்கள்

மஹா முநிவரே ! எவ்விதக் குற்றமுமற்றவர்களாய், தீமையற்றவர்களாய், எந்தவிதக் குறைபாடுகளும் இல்லாதவர்களான இந்த நான்கு வகை வ்யூஹம் அளவிடமுடியாதது. அசைவற்றது. அசைவற்ற நிலையில் இவர்கள் ஸத்தை இல்லாதவர்கள். ஜ்ஞாந ஸ்வரூபிகள். ஸக்தி ஸ்வரூபமாகவும், குணங்கள் வெளிப்படும் நிலையில் உள்ளவர்கள். எப்பொழுதும் அந்தப் பொதுவான அசைவற்ற நிலையில் தன் நிலையை வெளிப்படுத்தும் நிலையை அடைந்தவர்களாக இருப்பார்கள். ஸத், சித், அநந்த ஸ்வரூபமாக உள்ள இவர்கள் உலகத்துக்கு உதவி செய்வதற்காக இந்த நான்கு வகையான வ்யூஹாவதார நிலை மனத்துக்குப் பிடிப்பு ஏற்படுவதற்காக இருக்கிறது.

### ஒரு வ்யூஹத்திலிருந்து மற்றொன்று தோன்றுதல்

இந்த நிலையில் ரஹஸ்யத்தை வெளிப்படுத்தும் திறமை கொண்டவர்களாக இருப்பர். ஒவ்வொரு வ்யூஹத்துக்கும் ஶக்தி முதலிய வேற்றுமைகளைத் தன் ஸங்கல்பத்தால் ஏற்படுத்திக் கொள்வார்கள்.

### 12 வ்யூஹங்கள் வகை

கேஶவன் முதலிய 12 வ்யூஹங்கள் மற்ற வ்யூஹங்களாகும்.

### வாஸுதேவனிடமிருந்து கேஶவன் முதலிய மூன்று வகைகள்

வாஸுதேவனிடமிருந்து கேஶவன் முதலிய மூன்று வ்யூஹங்கள் அவதரிக்கிறார்கள்.

### ஸங்கர்ஷணரிடமிருந்து கோவிந்தன் முதலிய மூவர் தோற்றம்

கோவிந்தன் முதலிய மூவர் ஸங்கர்ஷணனிடமிருந்தும், த்ரிவிக்ரமன் முதலிய மூவர் ப்ரத்யும்நனிடமிருந்தும், உதிக்கின்றனர். அநிருத்தரிடமிருந்து ஹ்ருஷீகேஶன் முதலிய மூன்று தத்வங்கள் அவதரிக்கின்றன.

### மற்ற வ்யூஹங்களின் மற்ற மூன்று வகைகள்

எல்லோரும் பரம புருஷர்கள். தங்கள் காரண தத்வத்தில் இருப்பவர்கள். ஸூக்ஷ்ம ரூபமுள்ளவர்கள். இரண்டு புஜங்களுடன் கூடியவர்கள். நான்கு புஜங்களோடு கூடியவர்களாய் முன்பு சொன்ன வ்யூஹம் ஸ்தூலர்கள் மூன்று உலகங்களுக்கும் அதிபர்கள். சக்ரம் முதலிய ஆயுதங்களைத் தரித்தவர்கள். இவை யந்த்ர தந்த்ரத்தில் சொல்லப்படுகின்றன.

### விபவாவதாரங்கள் 39

குறிப்பு :— ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் ஸ்ரீமந் நாராயணன் ஐந்து வகைகளில் நமக்கெல்லாம் அநுக்ரஹம் செய்கிறார் என்று கூறப்படுகிறது. 1. **பரம ஸ்ரீ வைகுண்டம்,** 2. வ்யூஹம், 3. **ராம க்ருஷ்ணாதிகள் தஶாவதாரங்களாக**

விபவம் 39, 4. அர்சை, 5. அந்தர்யாமி எல்லா ஜீவர்களுக்கும் உள்ளே ஸாக்ஷியாக இருந்து நம் செயலை அநுமதிக்கிறார்.

**பத்மநாபன் முதலிய (39) விபவாவதாரங்கள்**

1. பத்மநாபன்
2. த்ருவன்
3. அநந்தன்
4. ஶக்த்யாத்மா
5. மதுஸூதநன்
6. வித்யாதிதேவன்
7. காலன்
8. விஶ்வரூபர்
9. விஹங்கமர்
10. க்ரோடாத்மா
11. படவாவக்த்ரன்
12. தர்மன்
13. வாகீஶ்வரன்
14. ஏகாம்போதிஶாயி
15. (பகவான்) கமடேஶ்வரன்
16. வராஹர்
17. நாரஸிம்ஹன் (நரஸிம்மன்)
18. பீயுஷ (அம்ருத) ஹரணர்
19. ஸ்ரீ பதி:
20. காந்தாத்மா (அமிர்ததாரகர்)
21. ராஹுஜித்
22. காலநேமி நிக்நர்
23. பாரிஜாதஹரர்
24. லோகநாதர்
25. ஶாந்தாத்மா
26. தத்தாத்ரேயர் (மஹாப்ரபு)
27. ந்யக்ரோதஶாயி
28. ஏகஶ்ருங்கதநு:
29. வாமநர்
30. த்ரிவிக்ரமன் (ஸர்வவ்யாபி)
30. நரன்
32. நாராயணன்
33. ஹரி
34. க்ருஷ்ணன்
35. (ஜ்வலத்) பரஶுராமர்
36. ராமன்
37. வேதவித்
38. கல்கி
39. பாதாள சலநர்

இவ்வாறு சொல்லப்பட்ட பத்மநாப மூர்த்திகள் 39. இவர்களுக்கெல்லாம் யாரிடமிருந்து உற்பத்தி, என்ன செயல் ஆயுதம் எது, எந்தத் திருஉருவம், அது எத்தகையது, இவர்கள் எங்கு அமர்ந்திருக்கின்றனர், பலவகை ஆபரணங்கள் தரித்தவர், பல வண்ண வஸ்த்ரம் தரித்தவர், உள் இந்த்ரியம் வெளி இந்த்ரியம் இவற்றின் பிரிவுகள், அதன் செயல்பாடுகள். எம்பெருமானின் ஸங்கல்பத்துடன் ஏற்படும் ஶக்தி, அதன் செயல்பாடுகள், இந்த எல்லா விஷயங்களும் மஹாமுநிவரே ! ஸாத்வத ஸம்ஹிதையில்

சொல்லப்பட்டுள்ளன. விஷ்ணுவின் ஸங்கல்பத்தினால் HØ£mh C ¢u **ஶுத்த ஸ்ருஷ்டி** என்பது எம்பெருமானின் விபூதியில் ஒரு அம்ஶமாக உமக்குக் கூறப்பட்டுள்ளது. இனி மற்றொரு ஸ்ருஷ்டி என்பது எம்பெருமானின் விபூதியில் ஒரு அம்ஶமாக உமக்குக் கூறப்பட்டுள்ளது. இனி மற்றொரு ஸ்ருஷ்டியைப் பற்றிக் கேளும்.

(குறிப்பு :— **ஶுத்த ஸ்ருஷ்டி** என்றும், **ஶுத்தேதர ஸ்ருஷ்டி** என்றும் படைப்பில் இருவகைகள் உண்டு. இது முதலாவதாக முழுமையாக ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாமல் ஶுத்த ஸத்வத்தோடு கூடிய ஸ்ருஷ்டியாகையால் **ஶுத்த ஸ்ருஷ்டி** எனப்பட்டது. **ஶுத்தமல்லாத ஸ்ருஷ்டி** என்பது ப்ரக்ருதி கலந்த படைப்பாகும்)

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** ஶுத்த ஸ்ருஷ்டி வர்ணனே
என்கிற ஐந்தாம் அத்யாயம் முற்றிற்று.



## ஶக்தமல்லாத ஸ்ருஷ்டி என்கிற

# 6வது அத்யாயம்

**அஹிர்புத்ந்யர் :—** ஶ்ரீமந் நாராயணன் பரமாத்மா என்றும், ஸநாதநர் (அநாதி காலமாக இருப்பவர்) என்றும், அவருடைய அஹங்காரம் என்னும் ஶக்தி அவருடைய கடமைகளையே தன் கடமைகளாகக் கொண்டது என்றும் இவ்விருவரும் பிரிந்து இருத்தல் பிரிவுக்குக் காரணமாயிருத்தல் என்றும் நிலையில் கருதப்பட்டனர். தனித் தனியாகவும் இந்த உலகத்துக்குக் காரணம் என்றும் ஶாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ளன.

### ஶக்தியும் ஶக்திமானும் தனித் தனி அல்ல

ஶக்தியுள்ள எவரும் தைவ ஶக்தியில்லாமல் காரணமாக இருப்பதில்லை. அதேபோல் ஶக்தியும் ஶக்திமான் இல்லாமல் தனியாக இருப்பதில்லை.

### பகவானுக்கும் லக்ஷ்மிக்கும் ஜகத் காரணத்வம் கூறுவது பற்றி

அவரவர்களுடைய பெருமையை வைத்து ஶாஸ்த்ரங்கள் உபநிஷத்துக்கள் இவைகளில் கரை கண்டவர்களால் இந்த எம்பெருமானும் பிராட்டியும் தனித் தனியாகவே உலகத்துக்குக் காரணம் போல் காண்பிக்கப் பட்டுள்ளனர்.

### ஶக்தமல்லாத ஸ்ருஷ்டியை பற்றிச் சொல்லுதலுக்கு முன்னுரை

இதுவரை சொன்னது இப்படி இருக்க, ஶக்தமல்லாத ஸ்ருஷ்டியைப் பற்றிச் சொல்கிறேன் கேளும். விஷ்ணு ஶக்தியின் பூதி என்கிற பெயரில் சொல்லப்பட்ட வெளிப்பாடு ஸங்கல்ப ரூபமான வெளிப்பாட்டினாலேயே எங்கும் பரவலாக ஆட்டிவைக்கப்படுகிறது. இவர்களுடைய ஶக்தமான வெளிப்பாடு **வ்யூஹம் - விபவம்** என்பதாகச் சொல்லப்பட்டது. இதை ஸாதநமாகப் பற்றிக் கொண்டே

யோகிகள் இந்த ஸம்ஸாரம் என்கிற கடலைத் தாண்டுகிறார்கள். இதன் பிறகு ஶுத்தமல்லாத ஸ்ருஷ்டி, அதை அடிப்படையாகக் கொண்டே அமைகிறது.

### அதன் மூன்று வகைகள்

புருஷன், காலம், குணம் என்று மூன்று வகைகள் கூறப்படுகின்றன. விஷ்ணுவின் ஶுத்தமல்லாத படைப்பு நான்கு இரட்டைகள் கொண்ட புருஷனாகும். ப்ராஹ்மணன், க்ஷத்ரியன், முதலிய பிரிவுகளைக் கொண்ட மநுக்களுக்கு அவர்கள் கூடஸ்தர்கள்.

### ப்ரத்யும்நனிடமிருந்து நான்குவகை தம்பதிகளின் உற்பத்தி

அந்த மநுதம்பதிகள் ப்ராஹ்மணனும் ப்ராஹ்மண ஸ்த்ரீயும் ஆவார்கள். ப்ரத்யும்நனுடைய முகத்திலிருந்து அவருடைய ஸங்கல்பத்தால் பிறக்கிறார்கள். மார்பிலிருந்து க்ஷத்ரிய தம்பதிகள் பிறக்கிறார்கள். தொடையிலிருந்து வைஶ்ய தம்பதிகளும், திருவடிகளிலிருந்து ஶூத்ர தம்பதிகளும் பிறந்தனர். இதுவே நான்கு வகை தம்பதிகள் என்கிற புருஷன் எனப்படுகிறது.

### காலம் ப்ரக்ருதி இவற்றின் படைப்பு

ப்ரத்யும்நனுடைய புருவங்களிலிருந்தும் காதுகளில் இருந்தும் ஸூக்ஷ்மமான காலம், குணம் இவைகள் ஸுதர்ஶநத்தால் தூண்டப்பட்டு வெளிப்படுவதாகச் சொல்லப்படுகிறது.

### அநிருத்தனுக்குக் காத்தல் செயல் செய்ய ஆணையிடுதல்

புருஷன் ஶக்தி என்கிற இரண்டு சேதநம், அசேதநம் நிறைந்த இரண்டையும் நீ வளர்க்க வேண்டும் என்று **ப்ரத்யும்ந**னால் அநிருத்தனுக்குக் கட்டளையிடப்படுகிறது. தன் உருவமாகவே உள்ள புருஷனை உள்ளடக்கிய அந்த ஶக்தியை **அநிருத்தன்** தன் தேஜஸ் என்கிற யோகத்தால் வளர்க்கிறார்.

## நியதி காலம் இவை தோன்றுதல்

ஸங்கல்பத்தினால் தூண்டப்பட்ட நியதி, காலம் என்பது எல்லாம் அநிருத்தனிடமிருந்து கால ஸ்வரூபமாக இருக்கும் திருமேனி இரண்டு வகையாகத் தோற்றமளிக்கிறது.

## மூன்று குணங்களுடன் உள்ள ப்ரக்ருதி மூன்றுவகை

ஶக்தியின் குணங்கள் நிறைந்த உருவம், **ஸத்வம், ரஜஸ் தமஸ்** என்று மூன்று வகைகளாக உற்பத்தியாகின்றன.

## ஸத்வம் முதலியவற்றிலிருந்து ரஜஸ் முதலியவை பிறப்பு

ஸத்வத்திலிருந்து **ரஜஸ்**ஸூம் **தமஸ்**ஸூம் அந்தத் தமஸ்ஸிலிருந்து **புத்தியும்** பிறக்கிறது. **புத்தியி**லிருந்து அஹங்காரமும், அதிலிருந்து **பூதங்களின் தந்மாத்ரங்கள்** ஐந்தும், 11 **இந்த்ரியங்களும், தன் மாத்ரங்களி**லிருந்து ஐந்து **பூதங்களும், ஐந்து பூதங்களிலிருந்து** இந்த உலகமனைத்தும் தோன்றுகிறது என்பது ஸ்ருஷ்டியைப் பற்றிய சுருக்கம். (குறிப்பு :- இந்த்ரியங்கள் 11 என்பதின் விளக்கம். **கண், காது, நாக்கு, மூக்கு, தோல்** என்கிற ஜ்ஞாந இந்த்ரியங்கள் ஐந்து. **கை, கால், நாக்கு, சிறு நீர், மலம் கழிக்கும் த்வாரங்கள்** என்கிற கர்மேந்த்ரியங்கள் ஐந்து, இவற்றுக்கு மேலாக மநம் ஆக மொத்தம் 11 இந்த்ரியங்கள்).

## மேலும் படைப்பின் விரிவைப் பற்றிக் கேள்வி

**நாரதர் :—** பகனுடைய கண்களை அழித்த பகவானே ! தத்வ ஜ்ஞாநக் கடலே ! இந்த ஸ்ருஷ்டியின் ஆஶ்சர்யமான வெளிப்பாட்டை விரிவாகச் சொல்ல வேண்டுகிறேன்.

## அதன் விரிவு

**அஹிர்புந்த்யர் :—** நாரதரே ! விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் தூண்டப்பட்ட விபூதியின் பலவகைப் பரிணாமங்களை, **சித், அசித்** என்கிற கணங்கள் நிறைந்ததை விரிவாகச் சொல்கிறேன், கேளும்.

### பரவாஸுதேவன் நித்யவிபூதியை உடையவராக இருத்தல்

வ்யூஹம் முதலிய பேதங்களை உடையதாகச் சொல்லப்பட்ட ஶுத்த ஸ்ருஷ்டி ஸுதர்ஶநத்தின் ஸங்கல்பத்தினால் உண்டாகிறது. அந்த ஸ்ருஷ்டியின் ப்ரகாஶமான ஒளியே ஜ்ஞாநம் ஆநந்தம் நிரம்பிய தேஶம் என்கிற தன்மையைப் பெறுகிறது. அதுவே **பரம வ்யோமம்** எனப்படும். தூய்மையானது. புருஷனுக்கு மேற்பட்டது. எல்லையற்றது. ஆநந்தம் நிறைந்தது. எந்தக் குறைபாடும் இல்லாதது. குழப்பங்கள் இல்லாதது. அங்கு ஏற்படும் அநுபவங்கள் இன்பம் நிறைந்ததாகும். அங்குள்ள நித்ய முக்தர்கள் ஆநந்தமே நிறைந்தவர்கள். அவர்களின் திருமேனிகள் ஜ்ஞாநம் ஆநந்தம் நிறைந்தவை.

### ஸ்ரீமந் நாராயணன் நித்யர்களாலும் முக்தர்களாலும் அநுபவிக்கப் படுபவராக இருத்தல்

புண்டரீகாக்ஷனான எம்பெருமானை, ஆறு குணங்கள் நிரம்பியவரை, அதே போல் ஸ்வரூப, ரூப, குண, விபவங்கள் உடைய பெரிய பிராட்டியாருடன் கூடியவரை, அங்கு நித்ய முக்தர்கள் எப்பொழுதும் ஸேவித்துக் கொண்டு இருப்பார்கள். தன் ஸங்கல்பத்தினால் அங்குள்ள எல்லா தேஹங்களை, தைஹிகங்களை (ஆத்மா) எம்பெருமான் படைத்திருக்கிறார். எல்லா உலகங்களுக்கும் அதிபதி. ஸ்தாவரம் அனைத்துக்கும் அதிபரே. எல்லாவற்றுக்கும் இருப்பிடம். இவருக்கு இருப்பிடம் வேறு இல்லை. குற்றமற்ற நாராயணன் இவரே.

### முக்தர்களின் ஸ்வரூபம்

தத்வங்களை அறிந்தவர்கள் புண்ய பாபங்கள் அற்றவர்களாய் **த்ர்யஸரேணு** அளவான உருவத்தை உடையவர்களாய் ஜகஜ்ஜ்யோதியான ஒளி நிறைந்தவர்கள். ஸ்ரீ வைகுண்டத்தை அடைந்து பிறப்பு இறப்பு என்கிற நிலை அகன்றவர்களாய் ஸம்ஸாரத்திலிருக்கும் மார்கங்களுக்கு அப்பாற்பட்ட விஷ்ணுவின் அந்த அந்த ஸ்தாநத்தை அடைந்து ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுகிறார்கள்.

குறிப்பு :— (ஜீவர்களுடைய உருவம் அணுபரிமாணம் என்பர். இரண்டு பரமாணுக்கள் சேர்ந்தது ஒரு **த்வ்யணுகம்.** மூன்று **த்வ்யணுகங்கள்** சேர்ந்தது **த்ர்யஸரேணு** என்று ந்யாய ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டது) காலத்தின் அலைகள் நிறைந்த ப்ரக்ருதி மண்டலம் என்கிற வழியில் அவர்கள் மீண்டும் வரமாட்டார்கள்.

## இவர்களுக்கு, தான் செய்த உபாஸநத்துக்கு ஏற்ற வகையில் பலன் கிடைக்கும்

இந்த பக்தர்கள் ஸம்ஸாரத்திலிருக்கும் பொழுது எந்த வகையான உருவத்தை வைத்து உபாஸநம் செய்தார்களோ, அவர்கள் பரமபதம் சென்று அதே உருவத்தில் எம்பெருமானை ஸேவிப்பர். பல பல கோடிகள் காலம் ப்ரளயத்தில் இருந்துவிட்டு ஆறு குணங்கள் நிரம்பிய எம்பெருமானின் விபூதியான (நித்ய விபூதி) ஸ்ரீ வைகுண்டத்தை அடைகிறார்கள். இதுவே **பரம வ்யோமம்** (பரமாகாஶம்) என்று கூறப்படும். இதை உமக்குச் சுருக்கமாகச் சொன்னேன். இதை விரிவாகச் சொல்ல வேண்டுமானால் பல கோடி வருடங்கள் ஆனாலும் இயலாது.

## ஜீவர்களுக்குக் கூடஸ்தர்களாக இருக்கும் புருஷன் இந்த ஸ்ரீ வைகுண்டத்துக்குக் கீழ்ப்பட்ட இடத்திலிருத்தல்

ஸ்ருஷ்டி கார்யத்தில் ஈடுபட்டவராக எவர் முன்பு சொல்லப்பட்டாரோ, அவர் இந்த ஸ்ரீ வைகுண்டத்துக்குக் கீழ் இடத்தில் இருக்கிறார். **ஸமஷ்டி**யாக (லயஸ்தாநமாக) தேனீக்கள் அடை போல் உள்ள எல்லா ஜீவர்களுக்கும் ஶாஸ்த்த ஸ்ருஷ்டி, அஶாஸ்த்த ஸ்ருஷ்டி என்கிற கார்யங்களைச் செய்பவர் நித்ய விபூதியைச் சேர்ந்த அந்தப் புருஷர் ஆவார். இவர் அநாதிகாலமாக ஏற்பட்ட வாஸனை என்கிற அழுக்கு நிறைந்த ஆத்மாக்களின் லயஸ்தாநம்.

## ஶாஸ்த்தாத்மாக்களுக்கு பகவானின் கட்டளை

ஆத்மாவின் விபூதி தேவர்களான, எல்லாமறிந்தவர்களான, எல்லா பக்கங்களிலும் முகம் உடையவர்களான

இவர்கள் ஸ்வயம் தீவ்ரம் முதலிய **பாவ**ங்களை உடைய பகவானின் ஶக்தியுமான ஸுதர்ஶநத்தின் ப்ரகாஶம், ஒளியின்மை போன்ற இவற்றை அநுஸரித்து எல்லாப் பக்கங்களிலும் **க்லேஶ** (கஷ்ட)த்தைக் கொடுக்கும் அஜ்ஞாநத்தினால் அடக்கி ஆளப்படுகிறார்கள்.

**மறைந்த உருவத்தை உடையவர்கள் நான்கு வகை**

இவர்கள் ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைஶ்ய, ஶூத்ரர்கள் என்கிற நான்கு உருவங்களைப் பெறுகிறார்கள். ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைஶ்ய, ஶூத்ரர்கள் என்கிற பிரிவினால், ஆத்மாவுக்கு ஜீவன் என்கிற பெயரை உடையவர்களாய் ஸம்ஸார பந்தம், மோக்ஷம் இவற்றை அடைகின்றார்கள்.

**அவர்கள் கர்மத்துக்கு வஶப்பட்டு பூமியில் பிறத்தல்**

மநு என்கிற பெயருள்ள அந்தக் கூடஸ்தர்கள், அவர்களின் லயஸ்தாநங்கள் இவை கூறப்படுகின்றன. ஸுக து:கங்களை உணரக் கூடிய ஶரீரமற்றவர்கள். எல்லாம் அறிந்தவர்கள். எல்லா பக்கங்களிலும் முகமுடையவர்கள். எப்பொழுதும் ஸித்தர்கள். விபூதியின் அம்ஶமானவர்கள். பகவத் ஸ்வரூபர்கள் என்றும் சொல்லப்பட்டுள்ளார்கள். நாரதரே ! தன்னிடத்தில் தோற்றங்களாலும், தோற்றமற்ற நிலைகளாலும் ஆத்மாக்களை நிலை நிறுத்துபவர்கள். விஷ்ணுவின் அம்ஶம் ஆனவர்கள். **ஆதிவாஹிகர்கள்** எனப்படுபவர்கள் (**குறிப்பு:** மோக்ஷத்துக்குச் செல்லும் ஜீவர்களை அர்ச்சிராதி வழியில் இந்த்ரன், வருணன், வாயு, ப்ரஹ்மா இவர்கள் தங்கள் எல்லைக்கு வரவேற்று அடுத்த எல்லைக்குள் கொண்டு சேர்க்கிறார்கள். இவர்களுக்கு **ஆதிவாஹிகர்கள்** என்று பெயர்) விஷ்ணுவின் ஸங்கல்பத்தினால் இந்தப் புருஷனுடைய இடத்திலிருந்து கொண்டு ஶக்தி விஶேஷத்தைக் கொண்டு பூமிவரை ஸ்ருஷ்டியில் இறங்குகிறார்கள்.

**இறங்கியவர்கள் மக்களைப் படைத்தல்**

ஸ்ருஷ்டியில் **கர்மபூமி** எனப்படும் இந்த நிலத்தில் இவர்கள் (மநுக்கள்) தம்பதிகளாக இருந்து கொண்டு 400

மானவர்களைப் படைக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் கணக்கிலடங்கார். இதன் விரிவைச் சொல்கிறேன்.

## அநிருத்தனிடமிருந்து ஶக்தி பிறத்தல்

அந்த நான்கு வகைப் புருஷர்களிடமிருந்து கீழ்ப் பதவியில் ஸுதர்ஶநத்தினால் தூண்டப்பட்டு ஶக்தி படைக்கப்படுகிறது. முனிவரே! பிறகு படைக்கப்பட்ட அந்த ஶக்தியில் எட்டு மநுக்களும் விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் இறங்கி, ஶக்தி ரூபமான அந்த நிலையில் தனித் தனியாகப் பிரிந்து, துண்டு துண்டுகளாக இருக்கிறார்கள். காலமென்றும் குணமென்றும் இரட்டை ஶக்தியில் கர்பத்தில் இருக்கும்.

## நியதி தோன்றுதல்

ஶக்தியிலிருந்து விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் தூண்டப்பட்டு எல்லாவற்றையும் அடக்கி ஆளும் திறன் படைத்த காலத்தின் **நியதி** என்பது முதலில் உண்டாகிறது.

## மநுக்கள் அதில் இருத்தல்

அந்த மநுக்கள் என்பவர்களும் நியதியிலிருந்து காலத்தை அடைகிறார்கள். விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் தூண்டப்பட்டுக் காலம் பின் வருபவைகளைப் படைக்கிறது. வெள்ளத்தின் வேகம் ஆற்றின் கரையைக் கரைப்பதுபோல் அந்தக் காலம் எல்லாவிதமான **கால்யம்** என்கிற பொருள்களைப் படைக்கிறது.

## காலத்திலிருந்து குணமயமான உருவம் தோன்றுதல்

ஶக்தியுடைய **ஸத்வ-ரஜஸ்-தமோ** குணமயமான வடிவம் முன்பு கூறப்பட்ட காலத்திலிருந்து குணம் என்கிற பெயருடன் படிப்படியாகப் பிறக்கிறது. அவற்றில் ஶுத்தமானதும் தோஷமற்றதுமான ஸத்வகுணம் என்பது காலத்திலிருந்து முதலில் பிறக்கிறது. இதிலிருந்து மநுக்கள் பிறக்கிறார்கள். அநிருத்த மூர்த்தி தன் ஸங்கல்பத்துடன் விஷ்ணு என்கிற பெயருடன் அந்த ஸத்வத்தில் நிற்கிறது.

## ஸத்வத்திலிருந்து ரஜோகுணம் தோன்றுதல்

நாரத முநிவரே! இந்த ஸத்வ குணம் தூய்மையானதும் கலக்க மற்றதுமாய் ஸுகமாக இருந்தது. **அசித்** என்னும் குணத்தைத் தன்னுள் அடக்கிக் கொண்டு **அணுகம்** என்கிற பெயரில் விஷ்ணுவினால் தாங்கப்பட்டது. விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் தூண்டப்பட்டு ஸத்வத்திலிருந்து ரஜஸ் என்கிற குணம் பரிபூர்ணமாகப் பிறக்கிறது.

## அதில் மநுக்கள் இருத்தல்

விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் மநுக்கள் ஸத்வ குணத்திலிருந்து இந்த ரஜஸ்ஸில் பிறக்கிறார்கள்.

## அதற்கு அநிருத்தனுடைய ஶக்தியோடு கூடிய ப்ரஹ்மம் என்கிற நிலை

அந்த ரஜஸ்ஸை அநிருத்தனுடைய மூர்த்தி பற்றி நிற்கிறது. இந்த ரஜோகுணம் என்கிற **ஸத்வம்** ஓயாமல் அசைந்து கொண்டே இருக்கக் கூடியது. ஆடிக் கொண்டே இருக்கும் இந்த ரஜஸ்ஸில் அப்பொழுது உலகமெல்லாம் அடங்கி யிருக்கும்.

## ரஜஸ்ஸிலிருந்து தமஸ் தோன்றுதல்

நாரதரே! தன்னுள்ளிருக்கும் மநுக்களோடு கூடிய அந்த ரஜஸ்ஸிலிருந்து விஷ்ணு ஸங்கல்பத்தால் தூண்டப்பட்டு தமஸ் என்கிற குணம் தோன்றிற்று.

## மநுக்கள் அதில் இருத்தல்

ஸுதர்ஶநத்தினால் ஊக்குவிக்கப்பட்ட அந்த மநுக்கள் இந்தத் தமஸ்ஸை அடைகிறார்கள். அங்கு அநிருத்தனை ருத்ரம் என்கிற குணம் பற்றி நிற்கிறது.

## அவருடைய மயக்கும் உருவம்

எப்பொழுதும் கனமாக அழுத்திக் கொண்டிருப்பதும், செயல் அற்றதும், மயக்குவது (ப்ரமத்தை உண்டு பண்ணுவது) மான இந்த தத்வம் குணக்கடலை அறிந்தவர்களால் **தமஸ்** என்று சொல்லப்பட்டது.

## மூன்று குணங்களும் ஸமத்வத்தைப் பெறுதல்

ஸுதர்ஸநமயமான விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் ஸ்ருஷ்டிக்காக ஊக்குவிக்கப்பட்ட போதிலும், முதலிரண்டு குணங்களான ஸத்வம் ரஜஸ் விஷ்ணு ஸங்கல்பத்தால் ஸமமான நிலையில் நிற்கின்றன. தத்வத்தை அறிந்தவர்களால் அந்தத் தமோகுணம் **த்ரைகுண்யம்** என்று கூறப்படுகிறது.

## ப்ரக்ருதி என்பதற்கு ஸமமான மற்ற பெயர்கள்

குண ஸாம்யம், அவித்யை, ஸ்வபாவம், யோநி, அக்ஷரம், அயோநி, குணயோநி, இது போன்றவை மூலப்ரக்ருதியைக் குறிக்கும் சொற்கள். (யோநி என்பதற்குக் காரணம் என்பது பொருள். **ப்ரக்ருதி** நியதமாகையால் இதற்குக் காரணம் ஏதுமில்லை. குணத்துக்குக் காரணமாய் குணங்களை வெளிப்படுத்துவது **குண யோநி).**

இவ்வாறு பாஞ்சாத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய** ஸம்ஹிதையில்
ஶுத்தமல்லாத படைப்பின் வர்ணனை
என்கிற **ஆறுவது அத்யாயம்** முற்றிற்று.



## ஶாஸ்த்ரமல்லாத ஸ்ருஷ்டி வர்ணனே என்கிற
# 7வது அத்யாயம்

### ப்ரக்ருதி, புருஷன் (ஜீவன்) காலம் இவற்றின் சேர்க்கை

**அஹிர்புத்ந்யர் :—** குறைவில்லாமலும், அதிக மில்லாமலும் உள்ள **தமஸ்** என்கிற குணத்தின் ஸமத்வ நிலே உலகத்துக்கு மூல காரணமாக ப்ரக்ருதி என்று ஸாங்க்யர்களால் சொல்லப்பட்டது. அந்த ப்ரக்ருதியில் முறையாக இறங்கிய நான்கு மநு தம்பதிகளும் **புமான்** என்றும், **ஸமஷ்டி** என்றும், **புருஷன்** என்றும், **யோநி** என்றும் கூடஸ்தராகச் சொல்லப்படுகிறுர்கள். உலகத்தைச் செயலில் இறங்கச் செய்வதான காலம் என்கிற **தத்வம்** அந்த மநு தம்பதிகளின் செயலில் கட்டுப்பட்டதாய்ச் சேர்க்கவும் பிரிக்கவும் செய்யும்.

### பகவத் ஸங்கல்பத்தால் ஊக்குவிக்கப்பட்டு இந்த மூன்றிலிருந்து மஹத் முதலியவை தோன்றுதல்

நாரதரே ! மண் உருண்டை போன்ற **காலம் புருஷன் ப்ரக்ருதி** மூன்றும் விஷ்ணுவின் ஸுதர்ஶநத்தால் தன் தன் கார்யத்தில் ஈடுபடுத்தப்பட்டதாய் **மஹத்** முதல் பூமி வரை உள்ள தத்வங்களேத் தோற்றுவிக்கிறது. நீர் நிலம் முதலியவை போல் அந்த மூன்றில் **ப்ரக்ருதி** என்பது மாற்றங்களே ஏற்படுத்தும். **புருஷன்** என்பவன் மாற்றமில்லாதவனுயினும், இருப்பதனாலேயே காரணம் ஆகிறுன். **ப்ரக்ருதி, புருஷன்** இரண்டு தத்வங்களேயும் காலம் ஊக்குவிக்கும்.

### ப்ரக்ருதியிலிருந்து மஹான் தோன்றுதல்

புருஷனால் கட்டுப்படுத்தப்படுவதும், விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் ஊக்கப்பட்டதும், காலத்தினால் தூண்டப்பட்டதும் குணங்களின் ஸம உருவமான அவ்யக்தத்திலிருந்து மஹான் என்கிற பெரிய தத்வம் தோன்றுகிறது.

### மஹானைக் குறிக்கும் வேறு சில சொற்கள்

முநிவரே ! **வித்யா, கௌ:, யவநீ, ப்ராஹ்மீ, வதூ:, வ்ருத்தி, மதி, மது, அக்யாதி, ஈஶ்வரன், ப்ராஜ்ஞா** என்பவை மஹானைக் குறிக்கும் சொற்கள்.

### மஹான் மூன்று வகைப்படும்

மஹான் என்பது காலம், புத்தி, ப்ராணன் என்று மூன்று வகைகளாகப் பேசப்படுகிறது. முநிவரே! காலமானது த்ருடீ, லவம் முதலிய ஸ்வரூபங்களுடனும், புத்தி தீர்மானிக்கும் ஶக்தியுடனும், முயற்சியில் ஈடுபடும் ப்ராணனும், தமஸ், ஸத்வம் ரஜோ குணங்களின் வேறுபாட்டினால் அவற்றின் வெளிப்பாடு என்கிற பெயருடன் மஹானிலிருந்து வேறுபடும்.

### ஸாத்விக மஹான் நான்கு வகைகள்

தர்மம், ஜ்ஞாநம், வைராக்யம் (பற்றற்ற நிலை), ஐஶ்வர்யம் என்கிற பெயர்களுடன் ஸாத்விகமஹானின் உருவம் நான்கு வகைகளாகப் பிரிக்கப் படுகிறது.

### தாமஸ மஹானின் நான்கு வகைகள்

அதர்மம், அஜ்ஞாநம், அவைராக்யம், அநைஶ்வர்யம், இவை தாமஸமஹாநின் வகைகளாகும்.

### மநுக்கள் மஹாநிலிருத்தல்

எல்லாமறிந்தவர்களும், எல்லாவற்றையும் உபதேஶம் செய்பவர்களுமான அந்த எட்டு மநுக்களும் ஸுதர்ஶநத்தால் ஊக்குவிக்கப்பட்டு வித்தைக்குள் கர்பமாக இருப்பர்.

### அவற்றில் புத்தி தோன்றுதல்

எந்த ஒரு இந்த்ரியத்தினால் **ஸத், அஸத்** என்கிற வேற்றுமையோடு உள்ள விஷயங்களைத் தெரிந்துகொள்ள முடியுமோ அப்படிப்பட்ட போதநம் என்கிற இந்த்ரியம் அவர்களுக்குத் தோன்றுகிறது.

## மஹானிலிருந்து அஹங்காரத்தின் தோற்றம்

விஷ்ணுவின் ஸங்கல்பத்தினால் ஊக்குவிக்கப்பட்டு ஸுதர்ஶநத்தினால் தூண்டப்பட்ட அந்த வித்தையின் வயிற்றில் அஹங்காரம் என்பது தோன்றுகிறது.

## அஹங்காரத்தின் மற்ற பெயர்கள்

அஹங்காரம், அபிமாநம், ப்ரஜாபதி, அபிமந்தா, போக்தா என்பவை இதைக் குறிக்கும் சொற்கள்.

## அஹங்காரம் மூன்று வகை

அஹங்காரத்தின் வைகாரிகம் என்கிற ஒரு உருவம் ஸாத்விகம் எனப்படுகிறது. தேஜஸ், ரஜோ குணத்திலிருந்து பிறந்ததாகக் கூறப்படுகிறது. பூதாதி என்ற உருவம் தாமஸம் எனப்படும். முநிவரே ! இவ்வாறாகக் காமம், க்ரோதம், லோபம், தன்மானம் (தற்பெருமை), அவமாநம், ஆசை ஆகிய அஹங்காரத்தின் உருவங்கள் உமக்குச் சொல்லப்பட்டன.

## அஹங்காரத்தில் மநுக்கள் இருத்தல்

பலவகையான பெருமைகள் வாய்ந்ததாகத் தோன்றிய அஹங்காரத்துக்குள் மநுதம்திகள் ப்ரவேஶிக்கிறார்கள்.

## அஹங்காரத்திலிருந்து மனம் தோற்றம்

விஷ்ணுவின் ஸுதர்ஶநத்தினல் கட்டளையிடப்பட்ட அஹங்காரத்தைச் சேர்ந்த சிந்திக்கக் கூடிய இந்த்ரியம் மநுக்களுக்குத் தோன்றுகிறது. அந்த கர்ப்பம் இப்பொழுது மநுமயமாக, புத்தியுடனும், மநத்துடனும் கூடியதாக இருக்கிறது.

## பூதாதிகளிடமிருந்து ஶப்ததந்மாத்ரத்தின் தோற்றம்

தாமஸமான **பூதாதி** என்கிற அஹங்காரத்திலிருந்து ஶப்த தந்மாத்ரம் தோன்றுகிறது.

## ஆகாயம் அதிலிருந்து தோன்றுதல்

ஶப்த தந்மாத்ரத்திலிருந்து ஶப்தத்தைக் குணமாக உடைய ஆகாயம் தோன்றுகிறது.

## ஆகாயத்தின் குணமும் செயலும்

ஶப்தம் என்கிற ஒரே குணத்தை உடைய ஆகாயம் இடைவெளியைத் தரும்.

## ஆகாயத்தில் மநுக்கள் தங்குதல்

ஸூக்ஷ்ம புத்தி படைத்த நாரதரே ! அப்பொழுது எட்டு மநுக்களும் விஷ்ணுவின் ஸங்கல்பத்தினால் கட்டளையிடப்பட்டு வைகாரிக ஸ்வரூபத்திலிருந்து அந்த ஆகாயத்தில் ப்ரவேஶிக்கிறார்கள்.

## செவியும் வாக்கும் தோன்றுதல்

முநிவரே ! செவியும் வாக்கும் ஜ்ஞாநேந்த்ரியமாகவும், கர்மேந்த்ரியமாகவும் முறையே இருக்கும். எம்பெருமானின் ஸங்கல்பத்தினாலேயே இவ்விரண்டும் மநுக்களிடத்தில் தோன்றுகின்றன. இப்பொழுது அந்த மநு என்கிற கர்ப்பம் செவிகளையுடையதாகவும், வாக்குடையதாகவும் ஆகிறது.

## பிறகு ஸ்பர்ஶ தந்மாத்ரத்தில், வாயுவின் தோற்றம்

எம்பெருமானுடைய ஸுதர்ஶநத்தினால் ஊக்குவிக்கப்பட்டு ஆகாஶத்திலிருந்து **ஸ்பர்ஶ தந்மாத்ரம்** தோன்றுகிறது. மேலும் ஸ்பர்ஶம் என்கிற குணத்தோடு கூடிய வாயு அதிலிருந்து பிறக்கிறது.

## வாயுவின் வேறுபட்ட செயல்கள்

முநிவரே! உலர்த்துதல், உந்துதல், அசைதல், பிரித்தல், சேர்த்தல் முதலிய வேறுபட்ட செயல்கள் வாயுவுக்குத் தோன்றுகின்றன.

## தோல் கைகள் தோன்றுதல்

முநிவரே ! வைகாரிகம் என்கிற அஹங்காரத்திலிருந்து தோல், கை இவ்விரண்டும் ஜ்ஞாநேந்த்ரியம், கர்மேந்த்ரியம்

என்கிற இரட்டையாக விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் தோன்றுகின்றன.

### வாயுவில் மநுக்கள் இருத்தல்

அப்பொழுது மநு என்கிற பெயரை உடைய அந்தப் புருஷன் கர்ப்பத்தில் ப்ரவேஶிக்கிறார்.

### அவர்கள் தோலுக்கும், கைகளுக்கும் இருக்கும் சிறப்பு

விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் ஊக்குவிக்கப்பட்ட அந்த கர்ப்பம் அசைவோடு கூடி, ஸ்பர்ஶம், எடுத்தல் முதலிய செயல்களுக்காக த்வக்குடனும், கைகளுடனும் கூடியதாக ஆயிற்று.

### ரூபதந்மாத்ரம், தேஜஸ் உற்பத்தி

பிறகு ஸுதர்ஶநத்தால் கட்டளையிடப்பட்ட தாமஸ குண பூதாதியிடமிருந்து ரூபதந்மாத்ரம் பிறக்கிறது. இதனால்தான் ஜ்யோதிகள் உருவமுடையனவாகத் தெரிகின்றன.

### தேஜஸ்ஸின் பலவகைச் செயல்கள்

ரூபம் (உருவம்), வ்யக்தி (பொருள்), கனிதல், ஒளி, எரிதல் போன்ற மாறுபட்ட வைகாரிகத்திலிருந்து தேஜஸ்ஸின் (தைஜஸம் என்கிற) வேறுபாடுகள் தோன்றுகின்றன.

### கண் கால்கள் இவைகளின் தோற்றம்

முநிவரே ! ஸுதர்ஶநத்தின் கட்டளையினால் தேஜஸ்ஸிலிருந்து கண்கள் கால்கள் தோன்றின.

### தேஜஸ்ஸில் மநுக்களின் நிலை

உருவத்தோடு கூடியவர்களும், அழகு, ஒளி முதலியவை நிறைந்தவர்களும், கண்ணுள்ளவர்களும், கால்கள் உள்ளவர்களும் பார்வை, ஸஞ்சரித்தல் இவற்றைச் செய்பவர்களுமான அந்த எட்டு மநுக்களும் ஸுதர்ஶநத்தால் கட்டளையிடப்பட்டு தேஜஸ்ஸுக்குள் ப்ரவேஶிக்கின்றனர்.

### ரஸதந்மாத்ரம், ஜலம் இவைகளின் தோற்றம்

பிறகு தாமஸமான பூதாதியிலிருந்து விஷ்ணுவின் ஸங்கல்பத்தின் பலத்தினால் **ரஸதந்மாத்ரமும்** ஜலமும் உண்டாகின்றன.

### அதன் பலவகைச் செயல்கள்

பிறகு அதற்கு ரஸத்தன்மையும், பிசுபிசுப்புத் தன்மையும், பெருகும் தன்மையும் உண்டாகின்றன.

### நாக்கு உபஸ்தம் (ப்ருஷ்டம்) இவைகளின் உற்பத்தி

விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் தூண்டப்பட்ட இரு பொருள்களிலிருந்தும் நாக்கு, ப்ருஷ்டம் இரண்டும் - ஜ்ஞாநம் செயல் இவற்றுடன் கூடியதாகப் பிறக்கின்றன.

### ஜலத்தில் மநுக்கள் தங்குதல்

சிறந்த ஜ்ஞாநியே ! விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் அவர் கார்யத்தை நிறைவேற்றும் அந்த மநுக்கள் ஜலத்தின் கர்ப்பத்தில் ப்ரவேஶிக்கிறார்கள்.

### அவர்களுடைய நாக்கு, ப்ருஷ்டம் இவற்றின் சிறப்பு

இவர்கள் சுவைத்தல் உள்ளவர்களாகவும், பிசு பிசுப்பு உள்ளவர்களாகவும், ரத்தம் முதலிய த்ரவம் உள்ளவர்களாகவும், நாக்குள்ளவர்களாகவும், ஆண், பெண் குறி உள்ளவர்களாகவும் பிறக்கிறார்கள்.

### கந்த தந்மாத்ரம் பூமி தோன்றுதல்

பிறகு ஸ்பர்ஶநத்தால் தூண்டப்பட்ட நாக்கு, ப்ருஷ்டம் இவற்றிலிருந்து **கந்த தந்மாத்ரம்** தோன்றுகிறது. அதிலிருந்து மணமுடைய பூமி தோன்றுகிறது.

### பூமியின் பல வகை இயல்புகள்

அழுத்தம், எடை, உறுதி என்பவை பூமியின் இயல்புகள்.

### மூக்கு ஆண் பெண் குறிகள் தோன்றுதல்

முநிவரே ! ஸுதர்ஶநத்தினால் கட்டளையிடப்பட்டு வைகாரிகன் என்கிற அஹங்காரத்திலிருந்து ஜ்ஞாநம் செயல் இவற்றுடன் கூடிய மூக்கு, ஆண், பெண் குறிகள் தோன்றுகின்றன.

### பூமியில் மநுக்கள் நிலைத்தல்

முநிவரே ! விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் கட்டளையிடப்பட்டு அந்த மநுக்கள் கநமாகவும், உறுதியான உறுப்புகளுடன் கூடியவர்களாகவும், எலும்பு, பற்கள் முதலியவைகள் உடையவர்களாகவும், மூக்குடையவர்க ளாகவும், சிறுநீர் உறுப்பு உள்ளவர்களாகவும், எல்லா உறுப்புகளும் நிறைந்தவர்களாகவும் பூமியின் கர்ப்பத்தில் ப்ரவேஶிக்கிறார்கள்.

### எண்ணங்கள் முதலியவை தோன்றுதல்

எண்ணங்கள், விறுவிறுப்பு, ஐந்து வகை ப்ராணன்கள் மநஸ்ஸிலிருந்தும், அஹங்காரத்திலிருந்தும், புத்தியில் இருந்தும் தோன்றுகின்றன.

### இவ்வாறு மநுக்கள் எல்லா உறுப்புகளுடன் நிறைந்திருத்தல்

முநிவரே ! இவ்வாறாக எல்லா உறுப்புகளும் நிறைந்தவர்களாகவும், ப்ராணன், அபாநன், வ்யாநம், உதாநம், ஸமாநம் இவற்றுடன் கூடியவர்களாகவும், எல்லாப் புலன்களுடன் கூடியவர்களாகவும், மநுக்கள் ஶரீரம் உள்ளவர்களாக இருப்பார்கள்.

### ப்ரளயமும் ஸ்ருஷ்டியும் ஒரே அளவு உள்ளவை

முநிவரே ! காலம் எத்தகையது என்று முன்பு வர்ணிக்கப்பட்டது. அது ப்ரளய காலத்திலும், ஸ்ருஷ்டி காலத்திலும் தத்வங்களைப் பரிஶீலிப்பவர்கள் அறிந்து கொள்ள வேண்டி ஏழுவகை ஸங்கல்பங்களால் ஏற்படும் வித்யையில் மாறுதல், இவற்றை **மஹாபூதங்கள்** முதலிய ஏழு பிரிவுகளாகக் கூறுகிறார்கள்.

**மநுவின் வகைகள்**

ஸுதர்ஶநத்தால் கட்டளேயிடப்பட்டு இந்த மநுக்கள் முதலில் இரண்டிரண்டாகவும் பிறகு ஆண் பெண் வேற்றுமையுடனும் பிரிக்கப்படுகிருர்கள். இவர்கள் இயல்பாகவே ஜ்ஞாநம் நிறைந்தவர்களாகவும், எல்லாம் அறிந்தவர்களாகவும், எல்லாவற்றையும் உபதேஶிப்பவர்களாகவும் இருந்து கொண்டு தமக்குள் ஸாக்ஷிபூதராக இருக்கும் ஈஶ்வரனே (பகவானே) அநிருத்தனேத் தாங்கி நிற்கிறார்கள்.

**மநுக்கள் கர்ப்பத்தைத் தோற்றுவித்தல்**

பிறகு ஸாக்ஷிபூதரான எம்பெருமானுடன் சேர்ந்திருந்த அந்த மநுக்கள் அவருடைய ஸங்கல்பத்தினால் தூண்டப்பட்டுத் தங்கள் ஸ்த்ரீகளிடத்தில் நூறு நூறு கர்ப்பங்களேத் தோற்றுவித்தனர்.

**அவர்களுக்கு ப்ராஹ்மணன் போன்ற பெயர்**

ப்ராஹ்மணர்கள், க்ஷத்ரியர்கள், வைஶ்யர்கள், ஶூத்ரர்கள் என்று நான்கு வகைப்பட்ட மாநவர்கள் மநுக்களின் மனேவிகளிடம் இரட்டையராகப் பிறந்தனர்.

**அந்தக் குழந்தைகளுக்கு மாநவன், மாநவா என்று பெயர்**

மநுக்களால் ஶுத்தீகரிக்கப்பட்ட அந்த மாநவர்கள் தங்கள் மனேவிகளிடம் பல குழந்தைகளேப் பெற்ருர்கள். அவர்களின் பெயர் **மாநவ மாநவாக்கள்.**

**அவர்கள் பகவானுக்குக் கைங்கர்யம் செய்தல்**

அவர்களின் கோத்ரங்கள் பல. இவர்களால் இந்த உலகம் நிறைந்திருந்தது. நான்கு வர்ணங்களேச் சேர்ந்த இவர்கள் பகவானுக்குக் கைங்கர்யம் செய்து வந்தனர்.

**பாகவத கைங்கர்யம் செய்பவர்களுக்கு மோக்ஷம் கிடைக்கும்**

எந்த ஸாதுக்கள் பல வருடங்கள் அவர்களுக்கு (மாநவர்களுக்கு)க் கைங்கர்யம் செய்கிருர்களோ அவர்கள் நல்ல தெளிந்த அறிவைப் பெற்று பரப்ரஹ்மம் என்று சொல்லப்பட்ட ஸ்ரீமந் நாராயணனே அடைகிருர்கள்.

### மற்றவர்கள் இந்த ஸம்ஸாரத்தில் பிறப்பு

ஒரு யுகத்திலிருந்து மற்றொரு யுகத்தில் குறைபாடு ஏற்படுவதில் எவர்கள் வேறு தொழில் செய்கிறார்களோ பலனை எதிர்பார்த்த அவர்கள் அதனால் ஏற்படும் கதியை அடைவார்கள்.

### கர்மத்தைத் காரணமாக வைத்துத்தேவர் முதலியவர்களைப் படைத்தல்

நாரதரே ! மநுக்களின் கர்ப்பத்தோடு கூடியதாக முன்பு சொல்லப்பட்ட வித்யை கர்ப்பமுடையதாய் விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் ஊக்குவிக்கப்பட்டுப் பலவகை குண பேதங்களை உடைய **தைத்ய தாநவர்கள்** (அஸுரர்கள்), அரக்கர்கள், கந்தர்வர்கள், உரகர் (நாகர்கள்), கிந்நரர்கள் என்கிற ஸ்த்ரீகளைப் படைக்கிறது. அவர்கள் மற்றவர்களையும், இவர்கள் வேறு சிலரையும் தோற்றுவித்தனர். மநு கர்ப்பத்தில் இருக்கும் பொழுது பரப்ரஹ்மம் என்கிற நாராயணனான அந்த வித்யையினால் தேவர்ஷிகள், பித்ருக்கள், மாநவர்கள் படைக்கப்பட்டனர். முன்பு சொல்லப்பட்ட கூடஸ்தருடைய படைப்புகளாக மநுக்கள் தேவதைகள் பரமாகாஶத்துக்குக் கீழே தோன்றினர் என்று சொல்லப்பட்டது.

### ஜீவர்களுக்கு பகவானுடைய விபூதி என்ற நிலை

நாரதரே ! எல்லாவகை ஜீவர்களும் விஷ்ணுவின் விபூதியின் அம்ஶத்தால் படைக்கப்பட்டவர்கள்.

### மஹான் மேகமாக உருவெடுத்தல்

பிறகு பிறந்த மநுக்கள் மீண்டும் மீண்டும் பிறந்த பொழுது வித்யையே தன் ஒரு அம்ஶத்தினால் நிலையான பஶுவாகப் பிறக்கிறது. மேகத்தன்மை உடைய அந்த வித்யைதான் பஶுவாகச் சொல்லப்படுகிறது. அது மழை என்கிற பாலைச் சுரக்கிறது. அதுவே அந்நம் முதலிய மாறுதல்களைப் பெறுகிறது.

### ஜீவர்கள் ஜ்ஞாநம் குறைவதற்குக் காரணம் கூறுதல்

ஸ்வயமாகவே எல்லாம் அறிந்தவர்களாக இருந்த அந்த மாநவ மாநவர்கள் மேகம் என்கிற வித்யையிலிருந்து சுரந்த நீரைப் பருகி ஜ்ஞாநத்தில் குறைபாட்டைப் பெறுகின்றனர்.

### பிறகு ஶாஸ்த்ரம் பிறத்தல்

முன்பு பிறந்த மநுக்களால் ஶாஸ்த்ரம் உண்டாக்கப் படுகிறது. அதில் சொல்லப்பட்ட வழியைக் கொண்டு அவர்கள் உத்தமமான கதியைப் பெறுகிறார்கள். முநிவரே ! ஸ்ருஷ்டியைப் பற்றி இதுவரை ஓரளவு சொன்னேன். இது விஷ்ணுவின் ஸுதர்ஶநத்தால் மேலே கூறியபடி நடத்தப் படுகிறது.

### இரண்டு அத்யாயங்களின் பொருள் சுருக்கம்

நாரதரே! மேலும் இந்தச்சுருக்கத்தை உள்ளபடி கேளும். **ஹரி** என்று கூறப்பட்ட விஷ்ணுவின் இந்த ஶக்தி எல்லா பொருள்களிலும் ஊடுருவி நிற்கிறது. ஆறு குணங்கள் நிறைந்த அந்த ஶக்தி, ஜ்ஞாநம், ஆநந்தம், செயல் ஸ்வரூபமாக விளங்குகிறது. அது கார்யம் காரணம் என்கிற முறையில் இரண்டுவகை உருவத்தைப் பெற்றிருக்கிறது. காரணம் என்பது விஷ்ணுவின் ஸுதர்ஶந உருவமான ஸங்கல்பம். நாரதரே ! இந்த ஸங்கல்பம் தடையின்றி இருப்பதுதான் ஸுதர்ஶந ஸ்வரூபம். ஜ்ஞாநத்தை அடிப்படியாகக் கொண்டே செயல் வடிவத்திலுள்ள இந்த ஸுதர்ஶநம் கல்மஷமில்லாதவர். விருப்பம் போல் செயல்படும் ஜ்ஞாந ஸ்வரூபி. **பாவ்யம்** என்கிற மற்றொரு அம்ஶம் **பூதி** என்று சொல்லப்படுகிறது. ஸங்கர்ஷணன் முதல் பூமிவரை உள்ள ஶுத்தமல்லாத ஸ்ருஷ்டியைச் செய்கிறது. ஸங்கர்ஷணன் முதலிய வ்யூஹங்கள் வரை ஶுத்த ஸ்ருஷ்டியாக இருக்கும். முநிவரே ! ஶக்தி முதல் பூமி வரை உள்ளது ஶுத்தமல்லாத படைப்பு. மஹா முநிவரே! இரண்டு அம்ஶங்களுக்கு இடையில் உள்ள புருஷன் நான்கு வகைப்படும். ஶுத்தமல்லாத அந்தப் புருஷன் கூடஸ்தன் என்று அறிந்துகொள்ளும். இவ்வாறு பூதி என்பது

பலவகையில் நெருப்பின் ஜ்வாலை, காற்றினால் வளர்க்கப்படுவது போல ஸுதர்ஶநத்தால் வளர்க்கப்படுகிறது. ஸ்ருஷ்டியின் போது **அநுலோமமாகவும்** (மேலிருந்து கீழாக)ப்ரளயத்தின் போது **ப்ரதிலோமமாகவும்** (கீழிருந்து மேலாக) செயல்படும் அந்த ஸுதர்ஶநத்தினால் இது இடையிடையே நிறுத்தப்படுகிறது. மேலும் பலவாறாகப் படைக்கப்படுகிறது. மஹர்ஷியே ! எவன் ஸுதர்ஶநத்துக்குக் கட்டுப்படும் நிலையைத்தான் பிறக்கும்போது பெறுவதில்லையோ, அவனுக்குப் பூதியின் அம்ஶம் சிறிதிலும் சிறிது கூட இருப்பதில்லை.

இவ்வாறாகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** ஶுத்தம்
ஶுத்தமல்லாத ஸ்ருஷ்டி வர்ணனை என்கிற
ஏழாவது அத்யாயம் முற்றிற்று.



உலகத்தின் ஆதார நிரூபணம் என்கிற

## 8வது அத்யாயம்

### படைப்பில் வாதிகளின் பலவகை ஐயப்பாடுகள் (ஸந்தேஹங்கள்)

*நாரதர் :—* ஷாட்குண்ய பரிபூர்ணரும் பகவானுடைய கண்களை அழித்தவருமான ஸ்வாமிந் ! தேவரீருடைய வாக் எனும் தாமரையிலிருந்து பெருகிய இந்த விஷயங்களை எல்லாம் கேட்டேன். அடியேன் மனம் குழப்பத்திலுள்ளது. தத்வங்களைச் சொல்ல வந்த சிலர் ஸ்ருஷ்டி, மூன்று பூதிகளால் அமைந்தது என்கிறார்கள். மற்றும் சிலர் நான்கு பூதிகளால் அமைந்தது என்கிறார்கள். மற்றும் சிலர் ஐந்து பூதங்களால் என்றும், மற்றும் சிலர் ஏழு தாதுக்களால் அமைந்தது என்றும், மேலும் சிலர் எட்டு ப்ரக்ருதிகளால் ஆனதென்றும் சொல்கின்றனர். மற்றும் சிலர் ஒன்பது ப்ரக்ருதிகளால் ஆனது என்றும், சிலர் பத்து தத்வங்களாலானது என்றும் வேறு சிலர் பதினொன்று தத்வங்களால் ஆனது என்றும் சொல்கின்றனர். இவ்வாறு தத்வம், ப்ரக்ருதி இவைகளைப் பற்றிய எண்ணிக்கையைக் கூடுதலாகவும் குறைவாகவும், முனிவர்களும், ஸித்தர்களும், தேவர்களும், வேதங்களும் சொல்கின்றன. சிலர் ஸ்ருஷ்டியை அண்டத்திலிருந்தும், மற்றும் சிலர் தாமரையிலிருந்து பிறந்ததாகக் கூறுகின்றனர். படைப்பை அக்நியிலிருந்து பிறந்ததாகவும், தேஹத்திலிருந்து பிறந்ததாகவும், சிலர் வித்யையின் கர்ப்பத்திலிருந்து பிறந்ததாகவும், மற்றும் சிலர் ஶூந்யத்திலிருந்து தோன்றியதாகவும், இவ்வாருகப் பலவகை ஶாஸ்த்ரங்கள் கூறுகின்றன. பலவகை மாறுபட்ட பொருள்கள், பலவகை தர்ஶநங்கள் (ஸித்தாந்தங்கள்) இவைகளின் அலைகளால் கொந்தளிக்கும் கோலாஹலம் நிறைந்த கடலில் படகில்லாமல் அழுந்திக் கொண்டிருக்கும் என்னுடைய புத்தி இப்பொழுது மங்குகிறது. ஶங்கரனே ! மஹாதேவனே ! நிஶ்சயம் உருவத்திலிருக்கும் ஜ்ஞாநம் என்கிற படகைக் கொடுத்து அந்தப் புத்தியைக் கரையேற்றுங்கள்.

## இதற்குப் பதில்

**அஹிர்புத்ந்யர் :—** தேவர்ஷியே ! இப்படிப்பட்ட இந்தக் கேள்வி பொருத்தமானதே. இவ்விஷயத்தில் மஹான்கள் கூட மயங்குகிறார்கள். உண்மை நிலையை இப்பொழுது விளக்குகிறேன், கேளும். பரமாத்மா எனப்படும் உயர்ந்த தெய்வம் ஒருவரே. அவருடைய ஆறு குணங்கள் ப்ரகாஶமானவை. அநாதியானதும், எல்லையற்றதுமான வேதம் அதன் உண்மையைச் சரியானபடி விளக்கவில்லை. மத்யஸ்தமான பல வகைக் குணங்களால் அந்த **வேதவாக்கு** புரியாதது போல் இருக்கிறது.

## ஸந்தேஹத்துக்குக் காரண விளக்கம்

முனிவரே ! பகவானுடைய குணங்களிலும் திருநாமங்களிலும் தத்வ ஜ்ஞாநிகள் ஓய்ந்து போனார்கள். இந்த தத்வத்தை அறிந்தவர்களில் சிறந்தவர்கள் தாங்கள் ஏற்படுத்திய ஸங்கேதமான வார்த்தைகளோடு கூடிய பலவகைக் குணங்களால் ஜகத்துக்குக் காரணமான அந்தப் பொருளைக் குறிப்பிடுகிறார்கள். பலவகைக் குணங்களின் காரணங்களால் பலவகையாகப் பேசுபவர்களின் வார்த்தைகளால், **பர்யாயம்** (ஒரே பொருளைக் குறிக்கும் பல சொற்கள்) அறியாத ஜநங்கள் வேறுபாட்டை (முரண்பாட்டை)க் கருதுகிறார்கள்.

## ஒரே மஹாலக்ஷ்மிக்குப் பலவிதத் திருநாமங்கள்

முனிவரே! அந்த ஶக்தி தன்னுடைய ஸங்கல்பத்தினால் படைப்பில் ஈடுபடும்பொழுதும், அவ்வாறே தன் ஸங்கல்பத்தினால் ப்ரளயத்தில் ஓய்ந்திருக்கும் பொழுதும், ஜ்ஞாநம் பலம் ஏற்றக் குறைவினால் எந்த தத்வ ஜ்ஞாநிகள் அவ்வாறே குறைவினாலும் மிகுதியாலும் வேற்றுமைகளைக் கண்டபொழுதும், ஶிஷ்யர்களால் கேட்கப்பட்டு அவ்வளவையும் அவர்கள் சொன்னார்கள். ஆகையால் முழுமையாகப் புரிந்து கொள்ளாத புத்தி, எண்ணிக்கையில் மயங்குகிறது. உலகத்தைப் படைக்கும் பிரமன்

முதலியவர்களிடையே ஏற்றத் தாழ்வும் கூட, அதைச் சொல்பவர்களிடையே உள்ள வேற்றுமையால் தோற்றுவிக்கப் பட்டது. ஆறு குணங்கள் உள்ள விஷ்ணுவின் சுதந்திரம் தட்டிக் கேட்க முடியாதது. அவரிடமுள்ள ஜ்ஞாநம் இச்சை இவற்றிலிருக்கும் மாறுபாடுகளால் அண்டம் பத்மம் முதலியவை உண்டாகின்றன. பரமாத்மாவின் ஸங்கல்பங்கள் கேள்விக்கு உட்பட்டவை அல்ல. அவர் படைக்கும் பொழுதும், காக்கும்பொழுதும், ஒடுக்கும்பொழுதும் எப்படி எப்படிச் செயல்படுகிறுரோ, அந்த அந்த வேறுபாடுகள் காலத்தின் மஹிமையால் பலவகைப்படும்.

### வாதிகள் வெவ்வேறு வகைகளைச் சொல்லுதல்

எம்பெருமான் நாராயணனுடைய ஜ்ஞாநத்தின் ஸங்கல்பத்தின் அடிப்படையாக வேறுபாடுகள் ஏற்பட்டிருக்கும் பொழுது, ஒருவர் ஒன்றைச் சொல்கிறுர், மற்றொருவர் மற்றொன்றைச் சொல்கிறுர். தங்கள் தங்கள் அறிவினால் புரிந்துகொண்டு நன்மையைக் கருதிச் சீடர்களுக்குச் சொன்னார்கள்.

### அதனால் ஶாஸ்த்ரங்கள் பலவகைப்பட்டன

ஆகையால் ஸ்ருஷ்டி முதலியவைகளைப் பற்றிய ஶாஸ்த்ரங்களின் போக்கு இவ்வாறு பலவகைப்படுகிறது. மனிதர்களின் மாறுபட்ட படைப்பு அவர்கள் கர்மங்களிலிருக்கும் மாறுபாட்டை அடிப்படையாகக் கொண்டது. அப்படியே சதுர்முக ப்ரஹ்மாவின் படைப்பில் வேறுபாடுகளில் பகல் இரவு என்ற பேதத்தால் ஸுகம் து:கம் என்கிற வேறுபாடு பகலில் ஏற்படுகிறது என்று ஒப்புக் கொள்ள வேண்டியது.

### ப்ரஹ்மாவின் கல்பங்கள் பலவகைப்பட்டன

முனிவரே ! பரப்ரஹ்மாவின் படைப்பில் திநங்கள் வாயுவால் சூழப்பட்டவைகளாய், மற்றும் பல மழையால் சூழப்பட்டவைகளாய், சில வெய்யில் நிறைந்தும், ஶத்ருக்களால் சூழப்பட்டும், சில ஸுகமாயும்

இனிமையாகவும் இருக்கின்றன. இத்தகைய தீர்மானத்தைக் கொண்டு நிலேயான புத்தியை ஏற்று மனதை நிலே நிறுத்திக் கொள்ளும். உள் மயக்கம் விலகட்டும். இவ்வாறு பல வகை உருவங்கள், செயல்கள், நிலேகள் இவைகளால் வேறுபட்டவைகளாயும் நிமித்தம், கர்தா இவைகளாலும் வேறுபட்டவைகளாகவும் கூறப்பட்டது.

### கேட்ட விஷயங்களே மறுபடிச் சொல்லுதல்

**நாரதர்** :—ஸ்வாமிந் ! எல்லாம் அறிந்தவரே ! எருதுக் கொடியோனே ! காரணம் உம்மால் சொல்லப்பட்டது. உலகத்தை எல்லாம் படைத்தவரான விஷ்ணுவின் பிரிக்க முடியாத ஶக்தி லக்ஷ்மி எனப்படும். அது க்ரியை என்றும் பூதி என்றும் இரண்டாக வேறுபடும். க்ரியை என்ற பெயருடைய அந்த ஶக்தி, ஸுதர்ஶநம் எனப்படும் விஷ்ணுவின் ஸங்கல்பமே. உலகத்தின் வடிவமாக உள்ள பூதி என்பது காலம், மூலப்ரக்ருதி, புருஷன் என்கிற உருவத்தில் உள்ளது. ஶுத்தம் என்பது வ்யூஹம் என்றும், விபவம் என்றும் பெயருடையது. க்ரியை என்பது பூதியைச் செயல்படச் செய்யும், அது ஸுதர்ஶந வடிவத்தில் உள்ளது. இந்த விஷயங்கள் தேவர்களுக்கும் தேவரான உம்மால் சொல்லப் பட்டதை நான் கேட்டேன். நாதனே ! இப்பொழுது மற்றொரு கேள்வி கேட்க விரும்புகிறேன். ரிஷபவாஹநரே ! உலகங்களுக்கு ஆதாரம் என்று எது சொல்லப்பட்டது?

### ஸுதர்ஶநமே உலகங்களுக்கு ஆதாரம்

**அஹிர்புத்ந்யர்** :— ஆதாரம் என்று எது சொல்லப்படுகிறதோ, அதை உள்ளபடி சொல்கிறேன் கேளும். யாரால் இந்த உலகம் நூலால் ஆன மணிகள் போலத் தாங்கப்படுகிறதோ, அதைச் சொல்கிறேன். மஹர்ஷியே ! லக்ஷ்மி என்கிற ஶக்தி விஷ்ணுவின் முதலாவதான ஶக்தி எனப்படும். **பாவப்** பொருள்கள் **அபாவப்** பொருள்கள் இவற்றில் விஷ்ணுவைச் சார்ந்தே அந்த ஶக்தி இருக்கிறது. அதன் லக்ஷத்தில் ஒரு அம்ஶத்திலும் ஒரு அம்ஶம் தன்னுடைய ஸ்வதந்த்ரத்தினால் வளர்க்கப்பட்டதாய் க்ரியை

என்றும் பூதி எனும் பெயரில் பிறக்கிறது. இவ்வாறு சொல்லப்பட்டது. முளையினால் இவைகள் போல (மரத்தினால் செய்யப்பட்ட தேரின் பல பாகங்கள் ஆணிகளால் அடித்துப் பொருத்தப்படுவது போல என்று பொருள்) ஸுதர்ஶநன் என்கிற செயலால் அந்த பூதி எப்பொழுதும் தாங்கப்படுகிறது. இந்த விஷயத்தில் மேலும் விளக்கம் சொல்கிறேன், கேளும்.

### 1. மஹாராத்ரிதர மென்கிற சக்ரம்

ஸகல உலகங்களையும் சுருக்கிக் கொண்ட பரப்ரஹ்மத்தின் அசைவற்ற நிலை என்பது லயம் என்றும், மஹாராத்ரி என்றும் அவருடைய ஸங்கல்பத்தால் தாங்கப் படுகிறது. **மஹாராத்ரிதரம்** என்பது பரப்ரஹ்மத்தின் ஸுதர்ஶநம் என்கிற அரம் (Spokes) ஆகும். அந்த ஒரு அரத்தோடு கூடிய பெரிய சக்ரம் இப்பொழுது பரிஶீலிக்கப் படுகிறது.

### 2. உஷஸ் சக்ரம்

பரப்ரஹ்மத்தின் ஶக்தியிலிருந்து பிறந்த படைக்க வேண்டும் என்கிற விருப்பம் என்னும் உருவில் உள்ளது, காற்றினால் தீயின் ஜ்வாலை வளர்க்கப்படுவது போல் அவருடைய ஸங்கல்பத்தால் வளர்க்கப்படுகிறது. இரண்டு அரங்களோடு கூடியதாக உஷஸ் சக்ரம் என்கிற பெயரால் சொல்லப்படுகிறது. பூதியை விரும்புபவர்களாலும், ப்ரஹ்மத்தாலும் தாங்கப்படுகிறது.

### 3. உதய சக்ரம்

ஸங்கர்ஷணனின் ப்ரகாஶத்தை எது எப்பொழுது தாங்குகிறதோ, அது அப்பொழுது மூன்று ஜ்ஞாந ஸ்வரூபமாக உள்ள உதய சக்ரமாகும். ஸங்கர்ஷணனின் ஸங்கல்பமாகிற அது ஜ்ஞாநத்தை விரும்புபவர்களால் உபாஸிக்கப்படுகிறது.

### 4. ஐஶ்வர்ய சக்ரம்

ப்ரத்யும்நனுடைய ப்ரகாஶம் ஐஶ்வர்யம் என்கிற வடிவத்தில் உறுதியாக இருக்கும். மேலும் அது விஷ்ணு,

லக்ஷ்மீ இவர்களுடைய ஸங்கல்பத்தினால் தரிக்கப்படுகிறது. அதுவே ஐஶ்வர்யமயமாகவும் ப்ரத்யும்நனுடைய ஸங்கல்ப மாகவும், உறுதியாகவும் நான்கு அரங்களோடு கூடிய சக்ரத்தை ஆட்சியிலிருப்பவர் உபாஸிப்பதாகவும் ஆகும்.

### 5. ஶக்தி மஹாசக்ரம்

அநிருத்தனுடைய ப்ரகாஶம், ஶக்தி தேஜஸ் இவைகளால் வளர்க்கப்படுகிறது. பரப்ரஹ்மத்தின் ஶக்தியால் பிறந்த ஸங்கல்பம் அதை எப்பொழுதும் தாங்குகிறது. அதுவே ஐந்து அரங்களோடு கூடியதாய் வளர்க்கப்பட்டு **ஶக்தி மஹாசக்ரம்** எனப்படும். இதை ஶக்தி தேஜஸ் இவற்றின் வளர்ச்சியை விரும்பி விஶ்வேதேவர்கள் உபாஸிக்கிறார்கள்.

### 6. ஆறு அரங்களுடன் சக்ரம்

**சதுர் வ்யூஹம்** என்று பேசப்பட்டதும், கேஶவன் முதலிய 12 அவதாரங்களும் எம்பெருமானின் ஸங்கல்ப ரூபமாக இருக்கும் ஸுதர்ஶநத்தினால் தாங்கப்படுகிறது. ஆறு அரங்கள் கொண்ட அந்த மஹாசக்ரம் வேறு வ்யூஹங்களை உற்பத்தி செய்யக் கூடியது. ஆறு அரங்களோடு கூடிய இதை வ்ரதங்களை அநுஷ்டிக்க விரும்புபவர்கள் உபாஸிக்கின்றனர்.

### 7. மஹாஸுதர்ஶந சக்ரம்

மஹா முநிவரே ! முன்பு சொல்லப்பட்ட **விபவம்** என்பது பத்மநாபன் முதலிய உறுதியான வ்யூஹங்கள் ஆகும். விஷ்ணுவின் ஸங்கல்பமான ஸுதர்ஶநத்தால் தாங்கப் படுகிறது. 12 அரங்களோடு கூடிய அது **மஹாஸுதர்ஶநம்** என்று சொல்லப்படுகிறது. மற்றொரு **விபவம்** என்கிற பெயருடையதாய், ஸுதர்ஶநத்தின் ஶக்தியின் அநுப்ரவேஶத்தினால் அவதரித்த அது, அவருடைய ஸங்கல்பத்தினால் 12 அரங்கள் கொண்டதாய் தரிக்கப் படுகிறது.

## 8. ஸஹஸ்ரார சக்ரம்

**பரமாகாஶம்** எனப்படுவதும் விஷ்ணுவின் ஶாஸ்வதமான இடமாகவும் கருதப்படுகிற **வைகுண்டம்** என்கிற ஸ்தானம், ஆயிரம் அரங்களோடு கூடிய அவருடைய ஸங்கல்ப உருவமான சக்ரத்தால் தாங்கப்படுகிறது. முனிவரே! இவையெல்லாம் ஸுதர்ஶநத்தின் உருவமாகச் சுருக்கமாகச் சொல்லப்பட்டன. இவை ஆதார உருவமாகவும் ஆதேய உருவமாகவும் இருந்து அவருடைய ஸங்கல்பத்தால் தாங்கப்படுகின்றன (தாங்கும் பொருள் **ஆதாரம்;** தாங்கப்படும் பொருள் **ஆதேயம்).** ஶக்தியின் கோடியிலும் கோடியின் அம்ஶம் **ஸங்கல்பம்** என்றும் **பூதி** என்றும் இரண்டு வகைப்படும். விஷ்ணுவினுடைய அந்த ஶக்தி **ஸத்தை** என்று சொல்லப்படுகிறது. இவ்வாறு அது பலவகைகளாகத் தோற்ற மளிக்கிறது.

இவ்வாருகப் பாஞ்சராத்ர தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய** ஸம்ஹிதையில் உலகத்தின்
ஆதார நிர்ணயம் என்கிற
**எட்டாவது அத்யாயம்** முற்றிற்று



ஶக்தமல்லாத உலகத்தின் நிர்ணயம் என்கிற

## 9வது அத்யாயம்

### முதலில் புருஷ சக்ரம்

**அஹிர்புத்ந்யர்—** ஶக்தமான ஆதாரம் சொல்லப்பட்டது. அந்த **பூதி** என்பது இதனால் தரிக்கப் படுகிறது. அது **வ்யூஹம்** முதலிய உருவத்தில் செயல்படுகிறது. புருஷன் முதல் பூமி வரை உள்ளவை எவ்வாறு ஶக்தமல்லாத உருவமுடையவையோ, அவை எதனால் தாங்கப்படுகின்றனவோ, அது எம்பெருமானின் ஸங்கல்பமே என்று அறிந்துகொள்ளும். அந்தச் சக்ரம் **த்ர்யரம் புருஷ சக்ரம்.** இதனால் தான் புருஷன் தாங்கப்படுகிறான்.

### ஶக்தி முதலான சக்ரங்கள்

அந்தச் சக்ரம் 30 அரங்களோடு கூடியதாகக் கூறப்பட்டது. அதனால் **ஶக்தி** தாங்கப்படுகிறது. அது போல் **நையத சக்ரம்** என்று ஒன்று உண்டு. **நியதி** என்பது அதனால் தான் தாங்கப்படுகிறது. ஆறு அரங்களோடு கூடியது **கால சக்ரம்.** இதனால்தான் காலம் தாங்கப்படுகிறது. முனிவரே! மூன்று அரங்களோடு கூடிய ஆதார சக்ரங்கள் **ஸத்வம் ரஜஸ் தமஸ்** என்பவைகளைத் தாங்குகின்றன என்று ஜ்ஞாநிகள் பேசினர். முன்பு சொல்லப்பட்ட புத்தி 11 அரங்களோடு கூடிய சக்ரத்தால் தாங்கப்படுகிறது. எட்டு அரங்களோடு கூடிய **மஹாசக்ரம்** அஹங்காரத்தைத்தாங்குகிறது. 1 அரத்தோடு கூடியது **வியத் சக்ரம்.** இரண்டு அரங்களோடு கூடியது வாயுவைத்தாங்குகிறது. **தேஜஸ்**சக்ரம் 3 அரங்களோடு கூடியது என்று சொல்லப்படுகிறது. முனிவரே ! நான்கு அரங்களோடு கூடியது **ஜலசக்ரம். பார்த்திவ சக்ரம்** ஐந்து அரங்களோடு கூடியது. இதனால் பூமி தாங்கப்படுகிறது. எல்லா குணசக்ரங்கள் மூன்று மூன்று அரங்களோடு கூடியவை. இந்த்ரியங்கள் ஸம்பந்தப்பட்ட சக்ரங்கள் 11 வகைப்படும். இவை 4 அரங்கள் உடையவை. முனிவரே! இவ்வாறாக **ஆதார ஶக்தி** என்பது தனித் தனியாக உமக்குச் சொல்லப்பட்டது.

## மஹா விபூதி சக்ரம்

ஒற்றை அரம் கொண்ட **மஹா சக்ரம்** பெரிய ஐஶ்வர்யத்தைத் தரவல்லது. கேளும் ! இது பெரிய கொடிக் கம்பத்தில் ஆகாயத்தில் துணிபோல் தாங்கப்படுகிறது. முநிவரே! இது எப்பொழுதும் **பவமாநன்** என்று சொல்லப்பட்ட வாயுவினால் தாங்கப்படுகிறது. அவ்வாறு ஸங்கர்ஷணன் முதல் பூமிவரை உள்ள விஷ்ணுவின் ஶக்திமயமான **பூதி** அந்தரத்தில் நிற்கும் துணியில் விஷ்ணுவின் ஸங்கல்பத்தினால் தாங்கப்படுகிறது. மஹர்ஷியே! எம்பெருமானின் ஸங்கல்ப உருவமாக உள்ள அந்தச் சக்ரம் கணக்கிலடங்காத அரங்களோடு கூடியது. **மஹா விபூதி** என்கிற திவ்யமான சக்ரம் வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாதது. இப்படி என்று அறிய முடியாதது. ஆதியும் அந்தமும் இல்லாதது. **பாவப்** பொருள்கள் **அபாவப்** பொருள்கள் எல்லாம் இதன் அடையாளமே. கணக்கில்லாத அரங்களோடு கூடியது. எல்லையற்றது. கணக்கில் அடங்கக் கூடிய பல கூட்டங்கள் நிறைந்தது. பல கோடி ப்ரஹ்மாண்டங்களின் கோடியிலும் கோடியான அற்புதம் என்கிற பிரிவுகளையுடையது. ஆயிரக் கணக்கான பஞ்ச மஹா பூதங்களைத் தோற்றுவிக்கும் ஶக்தியை உடையது. ஜோதியின் பாகங்களின் பிரிவுகள் போலிருக்கிற பல கோடி இந்த்ரியங்களால் அடையாளம் செய்யப்பட்டதும் சிறு சிறு மேகங்கள் போன்ற ப்ரஹ்மாண்டங்கள் சூழ்ந்ததும், மஹா பூதங்களாலான நீரினால் சிற்சில இடங்களில் சூழப்பட்டது போலிருக்கும். மழையின் துளிகளால் போல் விஷ்ணுவின் வாஸஸ்தாநம் பரவி இருக்கிறது. லக்ஷக் கணக்கான ஜோதிகள் போன்ற மஹா பூதங்களால் ஒவ்வொரு இடத்தில் ப்ரகாஶமாக இருக்கிறது. விசிறிகளால் உண்டு பண்ணப்பட்டது போன்ற பூதக் காற்றினால் சில இடங்களில் வீசப்படுகிறது. ஸாதாரண ஆகாயம் போன்ற கோடிக் கணக்கான ஆகாயங்கள் நிறைந்தது. அநேக வித உருவங்களிலிருக்கும் அஹங்காரங்களால் ஒட்டையிடப்பட்டது போல் அஹங்காரத்தோடு கூடியது. பல உருவங்களிலும் சிறிய பெரிய அளவிலும் பல கோடி

தமஸ்ஸுக்களால் அலங்கரிக்கப்பட்டது. பல லக்ஷக் கணக்கான அனல் காற்றுகளால் சிற்சில இடங்களில் சூழப் பட்டது. சிற்சில இடங்களில் லேசான வெண்மையான தூசிகளால் அழகு படுத்தப்பட்டது. வெண்மையான பல வடிவங்களிலுள்ள கோடிக் கணக்கான ப்ராணிகளால் அழகு செய்யப்பட்டது. மூன்றுவகை, ஆறுவகை, பன்னிரண்டு வகை, இருபத்து நான்கு வகை, இரண்டு பதினைந்து (30) வகை, ஆறு அறுபது எண்கள், பல கோடிப் பிரிவுகள் உள்ளவை. பல்லாயிரக் கணக்கான காலங்களாலும், பல லக்ஷக் கணக்கான பலவகைக் கட்டுப்பாடுகள் என்கிற பெயருள்ள நியதியினாலும் நிறைந்தது. பல கோடி ஆயிரம் கூடியதும், பல கோடி குணங்களுடையதும் பல வகைத் தேன் அடைகள் போன்ற (தேன் கூடு) ஶக்தியோடு கூடியது. சொட்டும் தேன் கூடுகள் போன்ற தத்வங்களாகிற பல கோடி, பல ஆயிரம், பல லக்ஷம் வடிவமுள்ள ஶக்தியினால் சிற்சில இடங்களில் பூசப்பட்டது. வேலைகளில் ஈடுபட்டிருக்கும் வெண்மை, சிவப்பு, கறுப்பு உருவங்கள் சில இடங்களில் உட்கார்ந்திருப்பது போல இருக்கும். அநேகம் கொசுக்கள் நிறைந்த அத்திமரம் போல் சில இடங்களில் இருக்கும். பல ப்ராணிகள் வடிவத்திலும் பலவிதப் பழங்கள் உருவத்திலும், நல்லது கெட்டது என்கிற இருவகை வாஸனைகள் நிறைந்ததாக இருக்கும். பல ஶ்ரமங்கள் நிறைந்து உட்கார்ந்திருக்கும் ஆட்கள் உடையதாக இருக்கும். நிர்மலாநந்தம் என்கிற பெரிய ஸத்தை உருவமான ஆட்கள் நிறைந்திருக்கும். எந்தவிதத் தீமைகளற்றவரும் ஆறு குணங்கள் நிறைந்த உருவத்தோடு கூடிய லக்ஷ்மி தேவியோடு வீற்றிருப்பவரும், நிர்மலமான ஆநந்த ஸ்வரூபத்துடன் நித்யர்களாலும், முக்தர்களாலும் எப்பொழுதும் ஸேவிக்கப்பட்டவரும், ஸர்வ ஈஶனுமான **ஸ்ரீமந் நாராயணன்** தோற்றமளித்துக் கொண்டிருப்பார். ஸ்வயமாகவே தோன்றியவையும், எப்பொழுதும் த்ருப்தியுடன் கூடியவையும், பெரிய தமோ குணத்திலிருந்து விடுபட்டு நேர்த்தியாக உள்ள ஆத்மாக்களால் அழகு செய்யப்பட்ட வேலியால் சூழப்பட்டதும், ஆறு குணங்கள் நிறைந்த திருமேனியுடன் வ்யூஹ

உருவத்திலிருப்பவர்களும், தாமரைக் கண்களோடு கூடிய புருஷர்களால் வீற்றிருக்கப்பட்டதாக இருக்கும். இவர்கள் உலகத்தின் தோற்றம், காத்தல், ஒடுக்குதல் இவற்றைச் செய்பவர்களாக இருப்பார்கள்.

**ஸம்ஹார சக்ரம்**

ஸ்ரீ விஷ்ணுவின் மேலான நித்ய ஸங்கல்பம், ப்ரளயம் செய்ய விருப்பம் கொண்டு அளவில்லாத அரங்களோடு கூடியதாய் எல்லையில்லாததாய் **ஸம்ஹார ஸுதர்ஶநம்** ஆகும். அந்த ஒரே ஸங்கல்பம் பலவித உருவ வடிவமாகச் சொல்லப்படுகிறது. மேலும் அது எல்லையற்றது. அளவிட முடியாதது. புரிந்துகொள்ள இயலாதது. தன்னிகரற்றது. அலையில்லாக் கடல் போன்றது. மேகமில்லாத ஆகாயத்துக்கு ஒப்பானது. ஆறு குணங்களுடன் அசைவற்றிருக்கும் மிகப் பெரிய பரப்ரஹ்மம் அது. அவரை ஒரு நாளும் விட்டுப் பிரியாத ஶக்தி, **பாவப்** பொருள் **அபாவப்** பொருள் உருவத்தில் அவருடைய ஸங்கல்பத்துக்கு ஏற்ப ஸங்கல்பமுடைய தேவி, சந்த்ரனின் ப்ரகாஶம் போன்றவள். அந்த ஸுதர்ஶநம் பொருள்களாகச் செயல்படும் தன்மையுடன் அசைவற்ற நிலையின் ஸங்கல்பத்தால் அசைவற்று இருக்கும்.

**சலந சக்ரம் (அசைவு)**

மஹர்ஷியே ! ஸ்ருஷ்டியிலும் ஸம்ஹாரத்திலும், ரக்ஷணத்திலும் அசைவதற்கான ஸங்கல்பம் அந்த ஸுதர்ஶநத்தில் உள்ளது. ஸுதர்ஶநமயமான அது **சலந சக்ரம்** எனப்படும்.

**அது மூன்று வகைப்படும்**

ஶாஸ்த்ரங்களில் கரை கண்டவர்களால் இந்த சக்ரத்துக்கு மூன்று வகைகள் உண்டு என்று கூறப்படுகிறது. அது மஹா ஸ்ருஷ்டி ரூபமாய், ஒடுக்குவதும் படைப்பதுமான செயல் உடையது. அது பலவகை ஶக்தி நிறைந்தது என்று உமக்கு முன்பே சொன்னேன். **மஹா ஸம்ஹார சக்ரம்**

ஒடுக்குவதும் படைப்பதுமான இயல்புடையது என்று உமக்கு முன்பே சொல்லப்பட்டது. நடுவில் உள்ள காக்கும் சக்ரம் ஒடுக்குவதும் படைப்பதுமான இயல்புடையது. அதன் விரிவைச் சொல்கிறேன். அது ப்ரமாணமாக (ஆதாரமாக) இருக்கும். ஒரு நடிகன் வெவ்வேறு பாத்ரங்களாக நடிக்கும் போது எப்படி வேறாகவே காட்சியளிக்கின்றானோ, அதே போல் ஒரே சக்ரம் மாறுபட்ட செயல்களால் வெவ்வேறு தோற்றமளிக்கும்.

இவ்வாறாகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் ஶுத்தமல்லாத
உலகத்தின் வர்ணனை என்கிற
ஒன்பதாவது அத்யாயம் முற்றிற்று.



பொருள் என்கிற ப்ரமாணத்தின் விளக்கம் என்கிற

## 10வது அத்யாயம்

**நாரதர் :—** தேவர்களுக்கெல்லாம் தேவனான பகவானே! பார்வதியின் ப்ராண நாயக! ஜநங்களுக்கெல்லாம் அதிபதியே! **உலகங்களுக்கெல்லாம் அதிபதியே!** தேவர்களுக்கு அபயம் தருபவரே! முப்புரங்களை எரித்தவரும், தத்வ ஜ்ஞாநத்துக்குக் கடலுமான தேவரீருக்கு நமஸ்காரம். எந்த தசையிலும் குறை இல்லாதவரும், ஆறு அங்கங்களோடு கூடிய உமக்கு நமஸ்காரம். தேவ தேவனே! உலகங்களுக்கு அழிவில்லாத காரணமாகவும், ஆதாரமான - அழிவில்லாத ஸங்கல்ப மென்றும், சொல்லப்பட்ட ஸுதர்ஶநம் விஷ்ணுவின் ஸங்கல்பத்தாலேயே செயல்படுகிறது என்று சொல்லப்படுகிறது. சுருக்கமாகவும், விரிவாகவும் சொல்லப்பட்ட விஷயங்களை நான் மனத்தில் நிறுத்திக் கொண்டேன். யமனுக்கும் யமனானவனே! இப்பொழுது சற்று விரிவாகச் சொல்ல வேண்டுகிறேன்- ப்ரமாணம் என்று சொல்லப்பட்டது எது? எத்தகையது? எத்தனை உருவமுடையது? அது எதற்கு? அது எந்த ஸ்வரூபம்? தேவனே! இதை விரிவாகச் சொல்வீராக. இந்த ஸகல ரஹஸ்யங்களைச் சொல்லக் கூடியவர் தேவரீரைத் தவிர வேறு ஒருவருமில்லை.

### ப்ரமாணத்தை நிரூபிப்பதாக உரைத்தல்

**அஹிர்புத்ந்யர் :—** நாரதரே! அழிவில்லாத ப்ரமாணங்களின் நிலையைச் சொல்கிறேன், கேளும். தேவர்களும், அஸுரர்களும், மனிதர்களும் நிறைந்த இந்த உலகம் யாரிடம் ஒடுங்குகிறதோ, உலகத்தைப் படைத்த விஷ்ணுவுக்கு எது நடு ஸங்கல்பமோ, அது அழிவில்லாமல் தெளிவாக இருக்கிறது. இது உலகங்களுக்கு வழி காட்டி என்கிற நிலையில் உள்ளது. மஹாமுநிவரே! ஸ்திதி சக்ரம் என்கிற பெயருடைய அது ப்ரமாணம் என்று சொல்லப்படுகிறது.

**ப்ரமாணங்களின் வகை**

இது ஒடுங்குதல் என்றும் படைத்தல் என்றும் இரண்டு வகைகளாக அறியப்படுகிறது. எல்லா விஷயங்களிலும் ஒரே வகையாக உள்ள அந்த ஸங்கல்பம், ஸ்திதி மஹா சக்ரம் எனப்படும். எவரிடம் எல்லாம் ஒடுங்குகிறதோ, எந்த ஒழுங்கு முறை ஒவ்வொரு பொருளுக்கும் உண்டோ, எந்த ப்ராணிக்குப் பரிணாமங்கள், செயல்கள், ஏற்படக் கூடிய இடங்கள், உருவங்கள் உள்ளனவோ, அதேபோல் ப்ரமாண உருவத்திலுள்ள ஸ்ருஷ்டியின் வடிவத்தில் இருக்கும் சக்ரத்தில் அது எப்பொழுதும் நிறைந்திருக்கும். ஒரு செயல் முதலிய விஷயம், ஸ்ருஷ்டி முதலியவைகளின் லக்ஷணங்கள், ஶாஸ்த்ரங்கள், அவைகளின் பொருள், அவற்றின் விளைவு, ஒழுங்குமுறை எல்லாம் வாஸுதேவன் முதலிய நான்கு வ்யூஹங்களில், அவர்களின் ஸங்கல்பத்தால் ஏற்படுகிறது. அதுவே முதலாவதாகவும், பகவத் ஸ்வரூபமாயுள்ள, காக்கும் தொழிலுக்கான சக்ரமாகும். இதுவே ப்ரமாணம். இதனால் அவற்றின் அளவு அறியப்படுகிறது.

**அதன் விவரணம்**

திவ்யமான ஆநந்தம் நிறைந்த பரமாகாஶம் (ஸ்ரீ வைகுண்டம்) விஷ்ணுவினுடைய ரக்ஷணத்துக்கு ஆதாரமாய், அவருடைய ஸங்கல்பத்தாலேயே நியதிக்குட்பட்டதாய், நெருக்கடி (குறுகல்) இல்லாததாய், எல்லையற்றதாய் இருக்கிறது. முனிவரே ! ஜடப் பொருள்களின் முக்யமான காரணமாகக் காலத்தினால் மாறுதலைப் பெறக் கூடிய ஶக்தியும், அதன் ப்ரமாணமும் உத்தமமான மூன்று வகைகளாக இருக்கும். அது ஸ்வரூபம், செயல், குணம் முதலியவற்றில் அளவுக்குட்பட்டது. நியதி, காலம் என்கிற இவை இரண்டும் காலத்தின் பிரிவுகள். ஶுத்தத்துக்கும் ஶுத்தமல்லாததற்கும் இடையில் புமான் என்பது கூடம் போல் இருக்கிறது. பலவகை ஜீவன்களுக்குக் காரணமான அதற்கு மாறுபடாத நித்யமான ஒரு நிலை உண்டு. அதற்கு ஒரு அளவு உண்டு. இவை எல்லாம் அளவு கோலான சக்ரத்தில் கட்டுப்பட்டிருக்கும்.

(குறிப்பு :— கூடம் என்பது பட்டரை என்று பொருள்படும். பொற்கொல்லர்கள் அதைச் சிறிய அளவிலும், கருமான் என்கிற இரும்புக் கொல்லர்கள் பெரிய அளவிலும் வைத்திருப்பார்கள். அவற்றின் மேல் எத்தனைப் பொருள்களைக் காய்ச்சி வைத்து அடித்தாலும், பல வருடங்களானாலும், அது சிறிதும் தேயாது, அசையாது. அதுபோல் இருப்பவர் கூடஸ்தர்) முனிவரே! காலம், காஷ்டை முதலிய பிரிவுக்குட்பட்ட அளவின் வேறுபாடு, அந்த அளவாக இருக்கும் சக்ரத்தில் முழுமையாக வசப்பட்டு இருக்கிறது. ஸத்வம், ரஜஸ், தமஸ் இவற்றின் உருவம், செயல், பயன் இவையெல்லாம் அளவு கோலான ஸுதர்ஶநத்திலிருந்து அமைவதாகும். புத்திக்கு உள்ள மூன்றுவகை, தர்மம் முதலிய மாறுதல்கள், செயல்கள், அசைவு முதலியவைகளின் நிஶ்சயம் நிமேஷம் எல்லாம், மேலும் இவற்றில் உள்ள அளவு என்கிற இயல்பு, இவை எல்லாம் ஆதாரமாக இருக்கும் ஸுதர்ஶநத்திலிருந்து அமைபவை. இரண்டு வகையான அபிமாநம் என்பதும், அஹங்காரத்தின் செயல்களும், காமம் முதலிய குணங்களும், அவற்றின் அளவும், அதன் நிலையும் இவை எல்லாம் ஆதாரமாக உள்ள ஸுதர்ஶநத்துக்குக் கட்டுப்பட்டிருக்கின்றன. முனிவரே ! பஞ்ச பூதங்களின் காரணமான ஐந்து தந்மாத்ரங்களும், ஸ்ருஷ்டி ஸங்கல்பத்தில் ஏற்பட்டுள்ளது போல் ப்ரளய ஸங்கல்பத்திலும் ஒடுங்கியுள்ளது. இவை இரண்டும் எங்கும் வ்யாபித்திருக்கும் அளவு எல்லாம் அந்த ப்ரமாண ஸுதர்ஶநத்திலிருந்து அமைபவை. ஶரீரத்தில் இருக்கும் திறமை, ஜ்ஞாநத்திலிருக்கும் ஐந்து வகை, ஶாந்தம், பயங்கரம் முதலிய உருவங்களும், ஜ்ஞாநேந்த்ரியங்கள் ஐந்தும், பேச்சு, எடுத்தல், நடை, ஸந்தோஷம், வெளியேற்றுதல் முதலிய கர்மேந்த்ரியங்களில் உள்ள நிலை இவற்றின் அளவுகளும் மொத்தத்தில் உள்ள ஶரீரமென்பதும் எல்லாம் விஷ்ணுவின் ஸங்கல்பமான ஸுதர்ஶநத்தில் கட்டுப்பட்டுள்ளன. சேர்ந்திருக்கும் நிலை, இடைவெளி (உள்ளே இருக்கும் ஆகாஶம்), கநமின்மை, செயல்கள், ஊசுகுவித்தல்,

வற்றடித்தல், உறுதி, பூமியின் கநம் இவையெல்லாம் சேர்ந்து ஐந்து பூதங்களான உடலாகும். ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்கிற எண்களில் சேர்ந்த நிலையாகும். இதை எவற்றால் வ்யாபித்திருக்கும் அளவு என்பது அளவான ஸுதர்ஶநத்தில் அமைவதே. ஒவ்வொரு தத்வத்திலும் ஶாஸ்வதமாக உள்ள அளவு எல்லாம் விஷ்ணுவின் ஸங்கல்பரூபமான ப்ரமாண சக்ரத்தின் போக்கு (இயல்பு). இவ்வாருகக் காத்தலில் உள்ள அளவுகள், எல்லைகள், சக்ரத்தில் உள்ளபடி சொல்லப்பட்டன. முநிவரே ! விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் அமையும் மற்ெருரு வகையான காத்தலையும் சொல்கிறேன், கேளும். முநிவரே ! இடையூறுகளை விலக்குவதன் மூலம் ஏற்படும் இது இயல்பான போக்கோ, தத்வங்களுக்கும், அதிலிருந்து பிறந்தவற்றிற்கும் இது காத்தல் என்று சொல்லப்பட்டுகிறது. வேறு குணங்களைச் சேர்த்து வைப்பதன் மூலம் ஸத்வ குணத்தின் எந்த உறுதியான வெளிப்பாடு உண்டோ, அதுவும், தர்ம பூத ஜ்ஞாநம் முதலிய உருவத்திலிருக்கும் இதுவும் ஸுதர்ஶநத்தால் உண்டாக்கப்படுகிறது. (தர்மம், தர்மி என்று ஒவ்வொரு பொருளிலும் இரண்டு தத்வங்கள் உள்ளன. பொருளை தர்மி என்று சொல்லலாம். அதில் உள்ள இயல்பை தர்மம் என்று சொல்வர். காகம் என்பது தர்மி. கருமை நிறம் தர்மம், கொக்கு, பால் இவை தர்மி. அவற்றின் வெண்மை நிறம் தர்மம். இதே போல் நம்முடைய ஆத்மா தர்மி. அவற்றில் அவ்வப்பொழுது ஏற்படும் ஜ்ஞாநம் தர்மபூத ஜ்ஞாநம்). சிறந்த பரிமாணமான இது மூன்று உலகங்களையும் தாக்குகிறது என்று அறியப்பட வேண்டும். ஸத்வ குணத்தினால் ப்ரகாஶிக்கும் புத்தி உடையவர்களால் நிதாநமாக த்யாநிக்கப்பட்டு இது அந்நம் இவைகளைக் கொடுப்பதன் மூலம் எப்பொழுதும் ஆகாயம் பூமி இரண்டையும் காப்பாற்றும். வேறு குணங்களைக் கொடுப்பதன் மூலம் தமோ குணத்துக்கு எந்த எழுச்சி உண்டோ அதர்மம் முதலிய உருவத்திலிருக்கும் இது விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் உந்தப்பட்டு, தமோ குணத்தால் கலங்கிய புத்தி உள்ளவர்களால் நிதாநமாக த்யாநம்

செய்யப்பட்டு அந்நம், மழை முதலியவைகளை அழிப்பதன் மூலம் ஆகாயத்தையும், பூமியையும் அழிக்கின்றது. ஸத்வ குணத்தின் அழிவு மற்ற இரு குணங்கள் மூலம் எப்பொழுதும் உண்டாகிறது.

### ஶஸ்த்ர வ்யூஹத்தின் நிலை

பிறகு தர்மத்தை நிலை நிறுத்த, பாபிகளை அழிக்கப் போகிறவராய், ஸர்வ லோகங்களுக்கும் அதிபதியாகிய விஷ்ணு, ஜநார்தநன் என்கிற அவதாரத்தை எடுத்துக் கொள்கிறார். அப்பொழுது விஷ்ணுவின் ஸங்கல்பமான ஸுதர்ஶநன் என்கிற பெயரை உடையவர், பலவகை ஆயுதங்கள் வடிவத்துடன் ஒரு உருவம் எடுத்துக் கொள்கிறார். சக்ரம், கலப்பை, புல்லாங்குழல், சங்கு, வில், அம்பு, கத்தி, கேடயம் இவற்றின் உருவத்துடனும், கயிறு, ஈட்டி, கோடாலி, தண்டம், வஜ்ராயுதம் உலக்கை இவற்றுடனும், அவ்வாறே த்ரிஶூலம் ஸ்வரூபத்துடனும் மேலும் குட்டையான பல ஆயுதங்களின் உருவத்திலும், இவ்வாறு பலவகை உருவங்களுடன் அவருடைய ஸங்கல்பத்தால் ஏற்படும் மாறுதல்களுடன் உலகத்தின் க்ஷேமத்துக்காக நாராயணனின் திருக்கையை ஆஶ்ரயித்து அவதரிக்கிறது. இவ்வாறு ஆயுங்களைப் பற்றிய அணி சுருக்கமாக உனக்குக் காண்பிக்கப் பட்டது. ஸுதர்ஶநம் அஸ்த்ரங்களின் உருவத்திலிருக்கும் மற்றொரு அணி என்று கூறப்படுகிறது.

### அஸ்த்ர வ்யூஹத்தின் விளக்கம்

அது அங்கங்கள் உபாங்கங்கள் இவற்றுக்கு அலங்காரமாக அழகான உருவத்தை எடுத்துக் கொண்டு, ப்ராஹ்மணன், க்ஷத்ரியன் முதலிய உருவத்துடன், முகம், தோள்கள், தொடைகள், திருவடிகள் இவற்றிலிருந்து, ப்ரஹ்மாஸ்த்ரம் முதலிய அணியை, ப்ரயோக மந்த்ரம், உபஸம்ஹார மந்த்ரம் இவையாக உலகத்தைக் காப்பாற்றுவதற்காக 120 வகைகளாகப் படைக்கின்றார். சதுர்முக ப்ரஹ்மா பித்ருக்கள், ப்ரஹ்மன், தேவர்கள் மூலமாக அவ்வாறே படைக்கிறார். மிகவும் நேர்த்தியான பலவகை

உருவங்களுடன் கூடியவராய் அஸ்த்ர உருவத்தை எடுத்துக் கொண்டு வெளிப்படுகிறார். ப்ரஹ்மா, தேவர்ஷிகள், ராஜர்ஷிகள், இவர்களிடமும், மந்த்ர உருவங்களிலும் அநுக்ரஹம், ஶாபம் முதலிய வடிவமாக இருக்கும். முநி ஶ்ரேஷ்டரே! பூமியிலோ, ஆகாயத்திலோ, அழிப்பதற்கோ, அருள் புரியவோ இது உறு துணையாக இல்லை என்பது இடையாது. பொருள் உருவத்திலிருக்கும் ப்ரமாணங்களின் அணி இந்த அளவே. ஸுதர்ஶந தேவனுடைய ஒளிவடிவமாக உள்ள உருவத்தை இனிச் சொல்கிறேன் கேளும்.

இவ்வாறுகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் பொருள் என்கிற
ப்ரமாணத்தின் விளக்கம்
10வது அத்யாயம் முற்றிற்று.



ஒலிவடிவ வ்யூஹ ரூபங்களின் வர்ணனை என்கிற

# 11வது அத்யாயம்

**நாரதர் :—** ஸகல தேவர்களுக்கும் இன்பத்தையும் நன்மைகளையும் கொடுப்பவரும், ஶங்கரர் என்றும், கைலாஸ நாதர் என்றும் இருக்கின்ற பார்வதி நாயகனே ! உமக்கு நமஸ்காரம்.

### ஶப்தாத்மக ப்ரமாணத்தைப் பற்றிக் கேள்வி

தேவர்களுக்கு அதிபதியே ! ப்ரமாணம் என்று சொல்லப்படுகிற வ்யூஹங்களைப் பற்றி இந்த விஷயம் முழுவதுமாகக் கேட்டறிந்தேன். இனி ஶப்த உருவமான (ஒலிவடிவமான) எந்த விஷயம் சொல்ல நினைக்கிறீரோ, அதை எனக்குச் சொல்வீராக.

### அதைச் சொல்ல விரும்பி முன்னுரை

**அஹிர்புத்ந்யர் :—** முன்பு நடந்த பலவகையான பொருள்களின் முதல் ஸ்ருஷ்டியில் ஶக்தியோடு கூடிய விஷ்ணுவுக்குப் பின் வருமாறு இன்பத்தைத் தரவல்ல எண்ணம் உதித்தது. **இந்த ஸ்ருஷ்டி ஸத்வ குணம் மேலோங்கியதாகவும், மிகப் பெரியதாகவும் ஸகல தர்மம், அர்த்தம் (பொருள்) இவற்றை வெளிப்படையாக அறியும்படியாகவும், எந்தவித இடையூறு இல்லாமலும், இன்பம் நிறைந்ததாகவும், என்னால் அமைக்கப்பட்டது.**

### தத்வங்களைப் பற்றி ஸ்வரூபம் தோன்றுதல்

தத்வங்களைப் பற்றி ஜ்ஞானம் நிறைந்திருப்பதாலும் நல்ல தர்ம கார்யங்களைச் செய்வதாலும் மிகவும் ஶீக்ரமாகவே என்னை அடைந்து தன்னுடைய ஶுத்த ஸ்வரூபத்தை அடையப் போகிறது. ரஜஸ், தமஸ் இந்த குணங்களின் அதிகரிப்பு (வளர்ச்சி) சில காலத்துக்குப் பிறகே வரும். அதன் வளர்ச்சி அதில் பற்றுதல் இவற்றால் ஸத்வகுணமும் உறிஞ்சப்பட்டுவிடும்.

### அஸுரர்கள் தாநவர்கள் தோற்றம்

அப்பொழுது அஸுரர்கள், தாநவர்கள், ராக்ஷஸர்கள் பிறப்பார்கள். அப்பொழுது அவர்களால் ஸத்வ குணத்தோடு கூடிய மிகவும் நேர்த்தியான ஒழுங்குமுறை (வ்யவஸ்தை) கலைக்கப்படும்.

### ஜ்ஞாநத்தின் அழிவால் தர்மம் மறைதல்

ரஜோகுண, தமோகுண வளர்ச்சியால் நல்ல ஜ்ஞாநம் அழிக்கப்படும்பொழுது ஜ்ஞாநத்துக்குக் காரணமான தர்மம் மறைந்துவிடும். பிறகு ஆதாரமில்லாத (ரக்ஷணமில்லாத) ஶுத்தமான ஸாத்விக ப்ரஜைகள் அழிந்து போவார்கள். அப்பொழுது பலவித உருவங்களை எடுத்துக் கொண்டு நான் அடிக்கடி கார்யம் செய்ய வேண்டியிருக்கும். அந்த உருவங்களில் பலவகையான உபகரணங்கள் தேவைப்படும். மாயையுடன் (ப்ரக்ருதி) இந்த ஸ்வரூபத்துடன் பூதங்களுக்குள் புகுந்து பலவகையான ஆயுதங்களின் கூட்டங்களைக் கொண்டு, தர்ம கார்யங்களுக்கு இடையூறாக இருப்பவர்களை அழித்து ஆங்காங்கு தர்ம கார்யங்களின் கட்டுப்பாடு செய்யப்பட வேண்டியிருக்கும்.

### அதர்மத்தை அழிக்கும் ஸாதநங்கள் இருவகை

தர்மத்தை வெறுப்பவர்களை அழிப்பதற்கு உபகரணங்கள் அஸ்த்ரங்கள் - ஶஸ்த்ரங்கள் என்றும் ஶாஸ்த்ரங்கள் என்றும் இரண்டு வகைப்படும். இவ்வாறு சொல்லிவிட்டுத் தன்னுடைய ஸங்கல்பத்தின் ஶக்தியால் இவ்வாறு நினைத்து, ஶஸ்த்ரங்கள், ஶாஸ்த்ரங்கள் ஏராளமாக நிறைந்த வ்யூஹங்களை பகவான் கணக்கிட்டுப் படைத்தார். அதுவே ஸுதர்ஶந உருவமான வ்யூஹம். அது ஒழுங்கு முறைக் கட்டுப்பாட்டை நிலைநிறுத்த வல்லது. அளவு என்று கருதப்பட்டு அவ்வாறு சொல்லப்படும் ப்ரமாணமாக இருக்கும் ஶாஸ்த்ரங்களின் பொருள் விஷ்ணுவின் ஸங்கல்பம் என்று கூறப்பட்டது. அது அந்த ப்ரஹ்மத்தினிடமிருந்து எவ்வாறு வெளிவந்தது என்று சொல்கிறேன் கேளும் :—

## முதல் ஶாஸ்த்ரத்தின் வடிவத்தை வர்ணித்தல்

மநத்திலிருக்கும் எல்லா இருளேயும் போக்கவல்லதான, இந்த ஒரு ஶாஸ்த்ரம் ஆகாயத்திலிருந்து இடி ஒலிபோல ஸங்கல்ப உருவமாகவே வெளிவந்தது. எழுத்துக்கள் பொருள்கள் நிறைந்த சொற்களுடன் ஜ்ஞாநம் ஆநந்தம் என்கிற பெரிய அலேகளோடு விஷ்ணுவின் பக்தி என்கிற கடலிலிருந்து பிறந்த முத்துக்கள் ரத்நங்கள் போன்றவைகளால் விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் ஏற்பட்ட ஸுதர்ஶநத்தின் உருவமாய்க் கோர்க்கப்பட்டிருக்கிறது. ஜ்ஞாநம் நிறைந்த அந்த ஶாஸ்த்ரம் 10 லக்ஷம் அத்யாயங்கள் கொண்டதாய் நல்ல தர்மங்களே விளக்குவதாகவும் **காமபாலனால்** (விஷ்ணுவால்) சொல்லப்பட்டது.

## அது எல்லா ஶாஸ்த்ரங்களின் பொருளே உள்ளடக்கியது

அது நான்குவித புருஷார்த்தங்களேயும் காரண கார்ய விளக்கத்தோடு உடையதாக இருக்கிறது. ருக் **வேதம், யஜுர் வேதம், ஸாமவேதம், அதர்வண வேதம்** இவற்ருேடு கூடியது. **வ்யாகரணம், மீமாம்ஸை, ந்யாயம்** இவற்றின் பொருள்களுடன் உபாயம், யுக்திகள் நிறைந்தது. தேவலோகத்தைச் சேர்ந்தவர்களுக்கும், மனிதர்களுக்கும் உபயோகமான நல்ல ஸித்தாந்தங்களால் அழகு பெற்றது. பலவகையான நல்ல பலன்களேத் தரவல்ல உபாயங்கள் கர்மாநுஷ்டாநங்கள் இவைகளேப் பலவகைச் சந்தங்களுடன் உடையது. (இதை, **சந்தஸ்** என்று வடமொழியில் கூறுவர்) காலங்கள், ஸந்தி இவைகளின் கணக்குகளுடனும், ப்ரக்ருதி, ப்ரத்யயங்கள், ஸ்வரங்கள் விபக்திகாரகங்கள், லிங்கங்கள், ஸ்வேச்சையான ப்ரக்ருதி ஸந்திகள், பெயர்கள், அதிகாரங்கள் இவைகளுடன் கூடியதாகவும், பரிபாஷைகளால் அலங்கரிக்கப்பட்டதாகவும் உள்ளது. (குறிப்பு :— (1) காலம் - ஒரு மாத்திரை, இரண்டு மாத்திரைகள், மூன்று மாத்திரைகள் இவற்றை **ஹ்ரஸ்வம், தீர்க்கம், த்ருதம்** என்பார்கள். (2) இரண்டு வார்த்தைகளே இணைத்தல் (3) எண்களேக் குறிக்கும் சொற்கள் (4) **ராம: ஹரி:** என்னும் சொற்களில் ராம, ஹரி என்பவை ப்ரக்ருதி என்றும் விஸர்கம்: **ப்ரத்யயம்** ஆகும்;

அதே போல் **ரமா வதூ:** என்பதில் உள்ள **ஆகாரங்கள்** **ஊகாரங்கள்** ப்ரத்யயம் ஆகும். இதேபோல் **பவதி** என்கிற வினைச் சொல்லில் **'பூ'** என்பது ப்ரக்ருதி, **'தி' என்பது ப்ரத்யயம்** என்று சொல்லப்படும். (5) **உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம்-** இவை ஸ்வரங்கள் எனப்படும். இவை வேதத்தில் வருபவை (6) முதல் வேற்றுமை தொடங்கி ஏழாவது வேற்றுமை வரை உள்ள ப்ரத்யயங்கள், காரகங்கள் எனப்படுகின்றன (i) பெயர்ச் சொற்கள், ராமனை என்கிற இடத்தில் வரும் ஐ என்பது **கர்ம காரகம்,** (ii) **ராமேண** என்பதில் உள்ள **ஆல் காரண காரகம்,** (iii) **ராமாய** என்று ராமனுக்கு என்னும் பொருளில் வரும் 'கு' **ஸப்ரதாந காரகம்.** யாருக்கு ஒரு பொருளைக் கொடுக்கிறோமோ அது **ஸப்ரதாநம்,** (iv) ராமனிடமிருந்து, ராமனைக் காட்டிலும் என்பதில் 'இருந்து, காட்டிலும்' என்பவை **அபாதாந காரகங்கள். ராமாத் லக்ஷ்மண: கநீயான்** என்பது போலாகும். (v) எந்த ஸம்பந்தத்தையும் குறிக்கும் **உடைய** என்பது (**காரகம்** இல்லை) (vi) **ராமே** என்பதில் **'இல்' 'இடத்தில்'** என்பது **அதிகரண காரகம்,** (vii) **ஆண்பால் - பும்லிங்கம், பெண்பால் - ஸ்த்ரீலிங்கம், ஒன்றன் பால்- நபும்ஸக லிங்கம்** (viii) **தேவ: + ருஷி: - தேவ ருஷி:** இங்கு தேவ ருஷி என்பவை ப்ரக்ருதியும் **தேவர்ஷி** என்பது ஸந்தியாகும். (ix) **ஸம்ஜ்ஞா** என்பது பெயர்ச் சொல்லைக் குறிக்கும் (x) **அதிகார: -** இலக்கண விதி - முறை). **ஆதேஶம் -** ஒரு எழுத்தில் மற்றொரு எழுத்து வருவது; **ஆகமம் -** ஒரு எழுத்துடன் வேறு எழுத்து சேர்வது; **லோபம் -** ஒரு எழுத்து மறைவது; **விகாரங்கள் -** எழுத்துக்கள் மாறுவது - **க்ரு** என்பது **கரோதி** என்று மாறுவது போல); **உபாதி -** தனித் தன்மை; பலவகை **வ்ருத்திகள் -** தாதுக்களால் அமைந்த சொற்கள். ஸம்ஸ்க்ருதத்தில் எல்லாச் சொற்களும் ஐந்து வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன - அவை **க்ருதந்தம், தத்திதாந்தம், ஸமாஸம், ஏகஶேஷம், ஸநாத்யந்தம்** ஆகும்.

**க்ருதந்தம் - கும்பகார:** என்னும் சொல்லில் **கார:** என்பது **க்ரு** என்பதிலிருந்து வந்தது - **தத்திதாந்தம் -** பலவகைச் சொற்களைப் பலவகை உறவுகளாக மாற்றுவது; **ஜநக** என்கிற சொல் ஸீதையைக் குறிக்கும்போது **ஜாநகீ** என்று மாறுவது போல; தஶரதனுடைய குமாரன் **தாஶரதி:-**ரகு குலத்தில்

பிறந்த **ராகவன்;** யதுகுலத்தில் பிறந்தவன் **யாதவன்** என்பதுபோல. **ஸமாஸம்** - இரண்டோ அல்லது பல சொற்கள் ஒன்றாகச் சேர்வது ஸமாஸம் எனப்படும். **ராம: + லக்ஷ்மண:** - **ராம லக்ஷ்மணௌ.** இது 28 வகைப்படும். **ஏகசேஷம்** ஒரே சொல் இருவரைக் குறித்தல்- **உதாஹரணம்** - **மாதா + பிதா = பிதரௌ. ப்ராதா + ஸ்வஸா - ப்ராதரௌ.** ஒரே சொல் மிகுதியாவதால் **ஏகசேஷம்** எனப்படுகிறது. **ஸநாத்யந்தம்** சிற்சில பொருள்களில் சிற்சில **ப்ரத்யயங்கள்** விதிக்கப்படுகின்றன. இவற்றில் **'ஸந்'** என்பது விருப்பத்தைக் குறிக்கும் விகுதியாகும். **ஜிகமிஷதி** - செல்ல விரும்புகிறான், **சிகீர்ஷதி** - செய்ய விரும்புகிறான், **விவக்ஷதி** - பேச விரும்புகிறான். இங்குள்ள **'ஷ' 'ஸ'** என்பது விருப்பத்தைக் குறிக்கும். இது போன்றவை இன்னும் பல. **வாக்யங்கள்**- பல சொற்கள் சேர்ந்தவை. **உபபதங்கள்** - **அநுசர:** (பின்னால் வருபவன்) என்பதில் **'அநு'** என்பதும், **உபகார:** (உதவி) என்பதில் **'உப'** என்பதும், **ஸந்தோஷ:** என்பதில் **ஸம்** என்பதும், **ப்ரதிமாஸம், ப்ரதிதிநம், ப்ரதி வர்ஷம்** இவைகளில் **ப்ரதி** என்பதும், **உபபதங்களாகும். அவ்யயங்கள், உபஸர்கங்கள்,** பல பெயர்கள், **நிபாதங்கள், மாத்ரை, வ்ருத்தி ஸ்வரங்கள்** இவைகளின் பலத்தினாலும், **அபிநிஷ்டாநம்** என்கிற ஸாமவேதங்களாலும், **யமம், ரங்கம்** என்கிற பிரிவுகளாலும், பதங்கள் **பிந்து** என்கிற அநுஸ்வரங்களாலும் அழகு செய்யப்பட்டுள்ளன. (குறிப்பு :— **அவ்யயம்** - பெயர்ச் சொற்களுக்கு வேற்றுமைகள் வருவது போல் அல்லாமல் சில சொற்கள் உண்டு. அவை அவ்யயங்களாகும். **வ்யயம்** என்றால் மாறுதல். இது இல்லாதது **அவ்யயம்** (2-ம்) **ச - து - ஹி, புந:, பூய:** இன்னும் பல. இவை மாறுதலற்று இருக்கும்.

**உபஸர்கம்** - வினைச் சொல்லுக்கு முன் வருவது **உபஸர்கம்** எனப்படும். **அநுகச்சதி** (பின் தொடர்கிறான்) என்பதில் **அநு உபகரோதி** (உதவி செய்கிறான்) என்பதில் **உப** என்பது போலப் பலவகை **நிபாதங்கள்.** சில சொற்களைப் பிரிக்க முடியாது. இது **நிபாதம்** எனப்படும். உதாஹரணம் **ஸீமந்த:** (பெண்களின் வகிடு) என்பதை **ஸீமா + அந்த:** என்று

பிரிக்கக் கூடாது. இது அதனால் **நிபாதம்.** எல்லையின் கோடி என்ற பொருளில் **ஸீமந்த:** என்றே வரும். **மாத்ரா** ஒரு நொடி, இரண்டு நொடிகள், மூன்று நொடிகள் என்று சொற்கள் வரும். **அ.இ.உ.** — ஒரு நொடிச் சொற்கள், **ஆ ஈ ஊ** - இரண்டு நொடிகள், தொலைவில் உள்ளவர்களை அழைக்க ராமா, **க்ருஷ்ணு** என்கிறோம், இது மூன்று நொடிகள். எழுத்துக்கள் **ஆகமமாகவும், விகல்பமாகவும்,** இதுவாவது - அதுவாவது - Option எழுத்துக்களின் மாறுபாடுகளாலும் (முன்பின்னாக வருதல்) சிறிய கற்பனைகளாலும், **விக்ருதியாலும், ப்ரக்ருதியாலும், நிருக்தங்களாலும்** (வார்த்தைகளின் பொருளைக் கூறும் நிகண்டு) கல்பஸூத்ரங்களாலும், **(வ்ரதம், ப்ராயஶ்சித்தம்)** பலவிதத் தீர்மானங்களாலும், கணக்கிட்டுப் பார்ப்பதால் ஏற்படும் க்ரஹங்கள், நக்ஷத்ரங்களாலான ராஶிகள் இவற்றில் உள்ள மாறுபாடுகளாலும், ஹோரைகள் ஸ்கந்தங்கள் - முதல் ஸ்கந்தம், பத்தாவது ஸ்கந்தம் என்று பாகவதத்தில் வருகிற அத்யாயம் போன்றவைகளாலும், பலன்களுக்காகச் சொல்லப்பட்ட **விதாநங்களாலும்** (விதிமுறைகள்) விதிகளாலும் அர்த்த வாதங்களாலும் வேதத்தில் சிற்சில த்ரவ்யங்கள், ம்ருகங்கள், தேவர்களைப் புகழ் பாடும் ஸ்தோத்ரங்கள் வரும். இவற்றுக்கு **அர்த்தவாதங்கள்** என்று பெயர். மந்த்ரங்களிலிருந்து பிறந்த விசாரங்களாலும் (பரிஶீலனை வாதங்கள்), கர்மாக்களின் விதிகளாலும் (ஜ்யோதிஷ்டோமம், வாஜபேயம் முதலியவை) அங்கங்கள், யுக்திகள், க்ரமங்கள், **ஊஹங்கள்** (தமிழில் **யூஹம்** எனப்படும். சிற்சில விஷயங்கள் சில இடங்களில் சொல்லப்படாமல் விடுபட்டிருக்கும். அவற்றை வேறு இடங்களில் இருப்பதை அறிந்து எடுத்துக் கொள்வது **ஊஹம்** எனப்படும். ஸாமத்தில் **ஊஹம்** என்று ஒரு பிரிவு உண்டு) **தந்த்ரங்கள், ஆவாபம், அதிதேஶம்** இவற்றாலும் (ஶாஸ்த்ரங்களில் ஓரிடத்தில் சொன்னதை வேறிடத்திலும் எடுத்துக் கொள்ள வேண்டும். இதற்கு **அதிதேஶம்** என்று பெயர்). பல அதிகாரங்களுடனும், பல வாக்யங்களாலான விசாரங்களாலும், ப்ரமாணங்களைக் கொண்டு ஏற்படுத்தப்பட்ட ந்யாயங்களாலும், **நிக்ரஹம்,**

**சலம்**, ஜாதிகளாலும் (வாதம் செய்யும்பொழுது ஒருவரை ஒருவர் அதட்டி உருட்டிப் பேசுவர். இதற்கு **நிக்ரஹம்** என்று பெயர். சில ஸமயங்களில் சிலர் சரியாக இல்லாத விஷயங்களைப் பேசி மயக்க முயல்வர். இதற்குச் **சலம்** என்று பெயர்) த்ரவ்யங்கள், கர்மங்கள் (க்ரியை) இவற்றிலுள்ள விருப்பம் (Option), பொதுவான குணங்கள் இவற்றாலும் (**ஸத்யம் வத** போல், **மாத்ரு தேவோ பவ** போலவும்) பலவகையான **சாதுர் ஹோத்ரம்** என்கிற யாகங்கள் (**சாதுர்ஹோத்ரம்** என்று யஜுர்வேத ஆரண்யகம் 3வது ப்ரஶ்நத்தில் வரும் 5 அநுவாக மந்த்ரங்களுக்குப் பெயர். **சித்:, ஸ்ருக், ப்ருதிவீஹோதா, அக்நிர்ஹோதா, ஸூர்யம் தே சக்ஷு: மஹாஹவிர்ஹோதா** என்று 3 வாக்யங்கள் கொண்டது. இவை 5 ஆக இருந்தாலும் **சாதுர்ஹோத்ரம்** என்று பெயர்) நான்கு வகையான சிறந்த சிகிச்சை முறைகளாலும், நான்குவகை ஆஶ்ரமங்களாலும் (ப்ராஹ்மணனுக்கு (i) ..**ப்ரஹ்மசர்யம்,** (ii) ..**கார்ஹஸ்பத்யம்,** (iii) ..**வாநப்ரஸ்தம்,** (iv) **ஸந்யாஸம்** என்று நான்கு ஆஶ் ரமங்கள் சொல்லப்பட்டுள்ளன) நான்கு வர்ணங்களாலும் (**ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைஶ்ய, ஶூத்ரர்**) பலவகையான ஸம்ஸ்காரங்களாலும் **ஜாதகர்மா, நாமகரணம்** முதலிய 40 ஸம்ஸ்காரங்களாலும் நித்ய கர்மங்கள், காம்ய கர்மங்கள் இவற்றாலும், பலவகை இதிஹாஸங்கள், புராணங்கள் இவைகளுடனும் (வரலாற்றைப் பற்றி காவ்யங்களுக்கு இதிஹாஸம் என்று பெயர்.) **ஸ்ரீமத் ராமாயணம், ஸ்ரீமத் பாகவதம்** இவைகள். புராணங்கள் 18 வகையாகும். இவற்றில் உலகம் தோன்றியது — **ஸ்ருஷ்டி, ப்ரளயம்** முதலியவைகளும் பல பல **மந்வந்த்ரங்களும்** வரும். (**புராணம் பஞ்சலக்ஷணம்**) அவரவர்கள் இயல்பைக் கொண்டு செய்யப்பட்ட பலவகை ஸித்தாந்தங்களாலும், ஜீவன் ஈஶ்வரன் போன்ற விஷயங்களாலும், பரிணாமங்களின் பலவகைகளாலும், நிலைபாடுகள், லக்ஷணங்கள், வ்யாக்யாநங்கள் (உரை) தர்மம், இவற்றின் நிர்ணயம் இவைகளால் அலங்கரிக்கப்பட்டும் ஸ்ருஷ்டியைப் பற்றிய ப்ரமாணங்கள் இவைகளின் பலவகையான கற்பனைகளோடு கூடியதாயும், ஜீவன், மாயை என்பதின் **லேபம்** (ஒட்டுதல்),

**அலேபம்** (ஒட்டாமை - பற்றில்லாமை) என்பவைகளின் விகாரங்களாலும், தத்வங்கள், அதிலிருந்து பிறக்கும் பொருள்களின் வகைகளாலும், பலவகை கதிகள் (ஜீவன் செல்லும் வழி) இவற்றைப் பற்றி விசாரணைகளாலும், மோக்ஷத்தின் படிகள் பற்றி விசாரங்களாலும், புகழுக்கான பலவகை மார்கங்களாலும், ஜ்ஞானம், அஜ்ஞானம், இவைகளின் நிலை பற்றிச் சொல்லப்பட்ட குணம் குற்றம் இவற்றின் விசாரங்களாலும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்கிற குணங்கள் பற்றிய விளக்கங்களாலும், தத்வங்கள் 24 என்கிற கணக்கில் பேசிய பலவித ஸாங்க்யர்களின் விசாரங்களோடு கூடியதும் **அஷ்டாங்கயோகம், ஆஸநம்** முதலிய விசாரங்களாலும், அவற்றின் வ்யாக்யாந உருவத்தில் உள்ள க்ரந்தங்களாலும், பலவகை உடற்பயிற்சி, மநப் பயிற்சி இவற்றாலும், வைராக்யம் (பற்றில்லாமை) தன் நான்கு வகைகளாலும், யோகத்திற்கு உடன்பாடான அந்தரங்க பஹிரங்க விசாரங்களாலும் (**அந்தரங்கம்** - நெருக்கமானது; **பஹிரங்கம்** - விலகியது.) **க்லேஶம்** (துன்பம்) **கர்மம்** (செயல்) இவற்றின் பலனாக ஏற்படும் புண்யம் பாபம் இவற்றின் விசாரங்களாலும் **தாபம்** என்கிற ஸம்ஸ்காரம் பற்றி விசாரங்களாலும் (ஶங்க சக்ரங்களை நெருப்பில் காய்ச்சி நமது புஜங்களில் ஒற்றுவது **தாபஸம்ஸ்காரம்**) பலவகைத் துன்பங்களைப் பற்றி விசாரங்களாலும் (பாவம் செய்தவர்கள் என்ன என்ன தண்டனை பெறுவார்கள் என்பது) நான்குவகை **அதிஷ்டாநம்** என்பது பற்றித் தனித் தனி விசாரங்களாலும் **உபாதேயம்** (எடுத்துக் கொள்ளுதல்) (**ஹேயம்** விலக்குதல்) இவைகளைப் பற்றியும், பலவகை உருவங்களைப் பற்றிய சிந்தனைகளாலும், காம போகங்கள் (ஸுக போகங்கள்) பற்றியும், மனதை வஶப்படுத்தும் ஸாதநமாக உள்ள பலவகைச் செயல்களின் விளக்கங்களாலும், மனத்திலிருக்கும் பலவகை ஸித்திகளாலும், அலங்கரிக்கப்பட்டிருக்கும். (ஸித்திகள் எட்டுவகை - (i) ..**அணிமா** - உடம்பை மிகவும் அணு அளவுக்குச் சுருக்கிக் கொள்ளுதல், (ii) ..**மஹிமா** - உடம்பை மிகப் பெரிதாக வளர்த்தல், (iii) ..**லகிமா** - உடம்பின் கநத்தை இல்லாமல்

செய்வது, (iv) ..கரிமா - கநத்தை அதிகப்படுத்துதல். (v) ..ப்ராப்தி:- நினைத்த பொருளை நேரில் வரும்படிச் செய்தல், (vi) ..ப்ராகாம்யம் - விரும்பியதை நிறைவேற்றுதல், (vii) ..ஈஶித்வம் - தானிட்ட ஆணை அனைவராலும் மதிக்கப்படுதல், (viii) வஶித்வம் - புலன்களை அடக்குதல் முதலியன) க்ரியைகள் - ஜ்ஞாநம் இவற்றைப் பற்றிய வேறுபாடுகளை விளக்குவதன் மூலம் நல்ல வழிகளை எடுத்துக் கூறுவதாலும் பலவகையான அர்த்த பஞ்சகத்தைப் பற்றி விளக்கம் தருவதும் (ஆத்ம விஷயங்களைப் பற்றிப் புரிந்து கொள்ள ஐந்து விஷயங்களை அவஶ்யம் தெரிந்து கொள்ள வேண்டும். (1) நாம் ஸ்ரீ வைகுண்டத்துக்குச் சென்று அடைய வேண்டிய பரப்ரஹ்மத்தின் உருவங்கள் (2) ஜீவர்களின் ஸ்வரூபம், (3) நாம் அங்கு செல்வதற்கு வழி வகைள் (4) அங்கு போய்ச் சேர்ந்தபின் கிடைக்கும் பலன், (5) தடைகள். ஐந்து வகை ஶக்தியின் விளக்கங்களாலும் காமம், க்ரோதம், லோபம், என்கிற மூன்றுவகை மநத்தின் அழுக்குகளை ஒழிப்பதைப் பற்றி வர்ணனையாலும், மனிதர்களுக்கு ஸுகபோகங்களின் ஸாதநங்கள் பற்றி விளக்கங்களாலும், அவைகளிலுள்ள வகைகள் பற்றி விரிவுகளாலும், ஆலயங்களில் உத்ஸவங்கள் செய்வதற்கு முன் தீக்ஷை பெற்றுக் கொள்ளுதல், மூர்த்திகளை ஆவாஹநம் செய்யும் முறைகளாலும், பஶுபதி என்கிற ஶிவனைப் பற்றிய தர்மங்களாலும், இவ்வாறுகப் பலவகையான உருவங்களோடு கூடிய புத்தியின் செயல்களால் அழகாக உள்ளதும், பலவகையான யோக்யதை (தகுதி)யோடு கூடிய கல்பனைகளால் ஆங்காங்கு சேர்ந்ததாகவும், தகுதியின் மூலம் நல்ல தர்மங்களைப் பலவாறுக எடுத்துக் காட்டுவதாக உள்ளது. ஸங்கர்ஷணனால் சொல்லப்பட்ட இந்த ஶாஸ்த்ரம் முன் காலத்தில் 10 லக்ஷம் அத்யாயங்களோடு கூடியதாக இருந்தது. உலகத்தின் மூலகாரணமான விஷ்ணுவின் ஸங்கல்பத்தினால் ஸங்கல்ப உருவாகவே உள்ளது.

### அந்த ஶாஸ்த்ரம் பகவானின் உகப்புக்காக

முதல் ஸ்ருஷ்டியின் போது மிகச் சிறந்த மநுக்களும், மாநவ மாநவாக்களும், எவர்கள் சொல்லப்பட்டார்களோ,

அவர்கள் பல வகைப்பட்ட உபசாரங்கள் மூலம் நாராயணனை மகிழ்வித்தார்கள்.

**அந்த ஶாஸ்த்ரத்தின் ப்ரசாரம் மந்தமாயிற்று**

பிறகு காலத்தின் மாறுதலால் யுகம் மாறும் பொழுது, த்ரேதாயுகத்தின் தொடக்கத்தில் ஸத்வ குணத்தின் குறைவால் ரஜோகுணம் பரவிய காலத்தில், மஹாத்மாக்களான ப்ராஹ்மணர்கள் கூடக் காமத்தை (ஸுகபோகத்தை) விரும்பினார்கள். அதனால் **ஸுதர்ஶநம்** என்ற ஶாஸ்த்ரம் ப்ரசாரத்தில் குறைந்து விட்டது. பிறகு உலகங்களெல்லாம் மோஹத்தில் (அஜ்ஞாநத்தில்) குழம்பியிருக்கும் பொழுது, உலகத்துக்குச் சட்டத்தை ஏற்படுத்துபவர்கள் ஒன்று சேர்ந்துச் செய்ய வேண்டியதைப் பற்றி ஆலோசித்தனர். விஷ்ணுவின் முகத்திலிருந்து பிறந்த **அபாந்தர தபஸ்** என்கிற முனிவரும், ஆதி தேவனிடமிருந்து பிறந்த **கபிலர்** என்கிற புராதநரான ருஷியும், உலகங்களைப் படைத்த **ஹிரண்ய கர்பரும்** (சதுர்முக ப்ரஹ்மா), **பஶுபதி**யென்றும் **ஶிவன்** என்றும் சொல்லப்படும் நானும் அநேகமாயிரம் வருடங்கள் கடுமையான தவம் செய்து தேவதேவனான **நாராயணனால்** நினைவூட்டப்பட்டவர்களாய் ஆதிதேவனிடம் அநுமதி பெற்று, அவருடைய ஸங்கல்பத்தின் உருவமான **ஸுதர்ஶநத்தின்** பாகத்தினால் கூடியவர்களானோம். அந்த பகவானால் அநுக்ரஹிக்கப்பட்டு நல்ல ஜ்ஞாநத்தையும் பலத்தையும் பெற்று தர்மத்தால் தோன்றிய ஶாஸ்த்ரத்தை உருவாக்கினோம். முதலில் **அபாந்தர தபஸ்** என்கிற பகவான் முனிவர், ஹரியின் புத்ரன் **வாத்ஸ்யாயநர்** அவருக்குத் தோன்றிய அளவு உருவாக்கினார். அப்பொழுது விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் உண்டான **வாத்ஸ்யாயநரால்** சொல்லப்பட்ட **ருக், யஜுஸ், ஸாமம்** இவைகள் நிறைந்த, ஜ்ஞாந உருவமான ஶாஸ்த்ரம், ஏற்பட்டது. விஶேஷ ஜ்ஞாநம், படைத்தவரான **கபிலர்** ஶாஸ்த்ரங்களிலிருந்து சில அம்ஶங்களை உருவாக்கினார். **அது தத்வங்களின் கணக்கை நோக்காகக் கொண்டு பிறந்த ஸாங்க்யம்** என்கிற ஶாஸ்த்ரமாக ஆயிற்று. உலகங்களுக்கு முதல்வரான **ஹிரண்யகர்பர்** எனப்படும் **சதுர்முக ப்ரஹ்மா** அந்த ஶாஸ்த்ரத்திலிருந்து எதை

உருவாக்கினாரோ, அது யமம் முதலிய அங்கங்களோடு கூடிய யோக ஶாஸ்த்ரம் ஆயிற்று. (யமம், நியமம், ஆஸநம், ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணை, த்யாநம், ஸமாதி இவை அஷ்டாங்கயோகம் எனப்படும்) நான் பலவகை வ்ரதங்கள் நிறைந்த ஶாஸ்த்ரத்திலிருந்து எதைக் கொண்டு வந்தேனோ அது பாஶுபதம் என்று பெயர் பெற்று, பஶுக்கள் என்கிற ஜீவர்களுடைய பாஶக் கயிற்றை (ஸம்ஸாரம்) விடுவிக்கக் கூடியதாக இருக்கிறது.

**பகவான் பாஞ்சராத்ரம் என்பதை வகைப்படுத்துதல்**

நல்ல ஶாஸ்த்ரமாக உள்ள அந்த வேதமென்கிற ஒரே ஶாஸ்த்ரத்திலிருந்து ஸாரத்தை எடுத்துக் குழப்பமில்லாத ஶாஸ்த்ரத்தை விஷ்ணு தானே எடுத்துரைத்தார். அது பரம், வ்யூஹம், விபவம் (முன்பு விவரிக்கப்பட்டவை) ஸ்வபாவம் முதலியனவற்றை விளக்குவதாகப் பாஞ்சராத்ரம் என்கிற பெயரை உடைய மோக்ஷம் என்கிற ஒரே பலனைக் குறிப்பதுமான ஶாஸ்த்ரமாயிற்று. விஷ்ணுவின் ஸங்கல்ப உருவமும் ஸுதர்ஶநம் என்கிற பெயரையும் உடையது. அது ஐந்து முகங்கள் உடையது. அந்த பகவானால் அந்த ஶாஸ்த்ரத்தைக் கொண்டு ஐந்து விதமாகப் பிரிக்கப்பட்டது.

**அத்யாயத்தின் பொருளைப் பட்டியலிடுதல்**

விஷ்ணுவின் ஸங்கல்ப உருவமாக உள்ள ப்ரமாணங்கள், அணி இதுவரை ஶஸ்த்ரம் என்றும், ஶாஸ்த்ரம் என்றும் இரண்டு வகைகளாகக் கூறப்பட்டது. மேலும் என்ன கேட்க விரும்புகிறீர்?

(குறிப்பு :—வேதங்கள் பகவானைப் போலவே அநாதி. இதை உருவாக்கினார்கள் என்று சொல்லியது உபசார உக்தி (கௌரவ வார்த்தை). கண்டு பிடித்தோம் என்கிற பொருளில் எடுத்துக் கொள்ள வேண்டும்).

இவ்வாறுகப் பாஞ்சராத்ரம், த்ந்த்ர ரஹஸ்யம்
அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் ஒலிவடிவ வ்யூஹ
ரூபங்களின் அணியைப்பற்றிய 11வது அத்யாயம் முற்றிற்று.

ஶப்தங்களை ஆத்மாவாக உடைய அணிகளின்
சிறப்பான ஸ்வரூபத்தைக் கூறுதல் என்கிற

# 12வது அத்யாயம்

## முன் கூறியதை மீண்டும் கூறுதல்

**நாரதர் :—** தேவர்கள் அஸுரர்கள் எல்லோராலும் துதிக்கப்படுபவரும் பார்வதியின் பதியுமான தேவனே! உமக்கு ப்ரணாமங்கள். உம்முடைய க்ருபையினால் மிகவும் அத்புதமான விஷ்ணுவின் புகழைக் கேட்டேன். ஸுதர்ஶந ஸ்வரூபமான விஷ்ணுவின் அந்த ஶாஸ்த்ரம் முதலாவதாகும். இதை **வாச்யாயநர் (வாத்ஸ்யாயநர்)** முதலியவர்கள் தனித்தனி ஶாஸ்த்ரங்களை அதிலிருந்து சொன்னார்கள். மூன்று வேதங்கள் **ஸாங்க்யம், யோக ஶாஸ்த்ரம், பாஶுபதம், ஸாத்வதம்** என்கிற இவற்றின் ஸ்வரூப விஶேஷத்தை அடியேன் அறிய விரும்புகிறேன்.

### பதில் உரைக்க ப்ரதிஜ்ஞை

**அஹிர்புத்ந்யர் :— நாரதரே !** அந்த விஷ்ணுவின் ஸங்கல்பம் எத்தனை வகையானதோ அவற்றின் ஸ்வரூபத்தைத் தனித் தனியாக உள்ளது உள்ளபடி சொல்கிறேன், கேளும். அதில் முதலாவதான மூன்று வேதங்கள் என்கிற ஸ்வரூபம் எல்லா விஷயங்களையும் விளக்குவதாகும். அது ருக், **யஜுஸ், ஸாமம்** என்கிற உருவத்தோடு இருப்பதால் **த்ரயீ** என்று கூறப்பட்டது. மூன்றாக இருப்பதாலும் அவற்றின் செயல்களில் உள்ள வேற்றுமையால் **த்ரயீ** எனப்படுகிறது. **ருக், யஜுஸ், ஸாமம், அதர்வாங்கிரஸ்** என்பவை நான்குவகை யாகங்களை முக்யமாகக் கொண்டதால் நான்கு வகை என்றும் கூறப்பட்டது. **அதர்வண வேதம்** என்பது **ருக், யஜுஸ், ஸாமம்** இவையே. ஆனாலும் இது ஶாந்தி (ரோகம் முதலியவற்றுக்கு), ஏவல் போன்ற அபிசாரங்களை முக்யமாகக் கொண்டிருப்பதால் தனிப்பெயர் கொடுக்கப்பட்டது. 21 கிளைகள் உள்ளதாக ருக்வேதம் கூறப்பட்டது. ஒரே வழியில் செல்கின்ற **யஜுர்வேதத்துக்குக்** கிளைகள் 101 ஆகும். ஸாமவேதத்துக்கு 1,000 கிளைகள் உள்ளன. **அதர்வணத்துக்கு**

ஐந்து கிளைகள். மஹர்ஷிகளால் இந்த அளவு உள்ளதாகவே சொல்லப்படுகின்றன. எம்பெருமானிடமிருந்து அநுமதி பெற்ற முநிவர்களால் இந்த வேதங்களுடைய தனிப்பட்ட தர்மங்கள், ஸ்வரூபம், அங்கங்கள் இவற்றைப் பற்றிக் கூறப்படுகின்றன.

**ஶிக்ஷா முதலிய ஆறு அங்கங்கள்**

(1) **ஶிக்ஷா, (2) வ்யாகரணம், (3) சந்தஸ், (4) நிருக்தம், (5) ஜ்யோதிஷம்** (நக்ஷத்ரங்கள், க்ரஹங்கள் இவற்றின் ஸஞ்சாரம்),(6) **கல்பம்** என்று (வேதங்களுக்கு) பண்டிதர்கள் ஆறு அங்கங்கள் கூறுவர்.

**மீமாம்ஸை, ந்யாயம் துணையான அங்கங்கள்**

**மீமாம்ஸை, ந்யாய ஶாஸ்த்ரம்** இவை இரண்டும் உபாங்கங்கள். அவ்வாறே தர்மத்தை அறிந்த பெரியோர்களின் கொள்கைகளும் வேதவாக்யங்களிலிருந்து கிடைக்கப்படும் பொருள்களும், எந்த உருவமாகவும், கர்ண பரம்பரையாகவும் வந்ததும், 40 ஸம்ஸ்காரங்கள் மற்றும் சில பழக்க வழக்கங்கள் இவைகளும் மஹர்ஷிகள் மனதுக்கு உகந்த ஶாஸ்த்ரமாகும்.

**உபவேதங்கள்**

இதிஹாஸங்கள், புராணங்கள் என்பவை **உபவேதங்கள்** என்று சொல்லப்படுகின்றன. **வாஸ்து ஶாஸ்த்ரம்** (மனையைப்பற்றி), **தநுர்வேதம்** (வில்வித்தை), **காந்தர்வம்** (ஸங்கீதம்), **ஆயுர்வேதம்** (மருத்துவம்) இந்த ஐந்தும் உபவேதங்கள் என்று கூறப்படுகின்றன. ஆட்சி முறை, உழவுத் தொழில் இவை இரண்டும் மேலான கலைகள் ஆகும். வேதங்களை அறிவதற்கு 21 வகை முறைகள் கூறப்பட்டுள்ளன. ஆதியில் விஷ்ணுவின் வாக்கிலிருந்து பிறந்த **வாத்ஸ்யாயநர்** என்கிற ருஷியின் மூலம் இத்தனை வகைகளோடு கூடிய ஸங்கல்பம் ஒலித்தது.

**ஸாங்க்ய ஶாஸ்த்ரத்தின் விவரணம்**

**கபிலர்** எனப்படும் ருஷியின் மூலமாக ஸாங்க்யம் என்கிற உருவத்தோடு விஷ்ணுவின் ஸங்கல்பம் முன்பு

எவ்விதமாக வெளிவந்தது என்பதைச் சொல்கிறேன் கேளும், மஹாமுநிவரே! ஸாங்க்யம் எனப்படும் 60 வகைகளாக உள்ள ஶாஸ்த்ரம் **ப்ராக்ருதம், வைக்ருதம்** என்று இரண்டு மண்டலங்களோடு கூடியது.

### ப்ராக்ருத மண்டலத்தின் விவரணம்

அவற்றில் ப்ராக்ருத மண்டலம் என்பது 32 வகைகள் கொண்டது. முதலாவது ப்ரஹ்மதந்த்ரம், இரண்டாவது புருஷாங்கிதம். ஶக்தி, நியதி, காலம் என்பவை மற்ற மூன்று குண தந்த்ரங்கள் (ஸத்வம், ரஜஸ், தமஸ்) மூன்று. அக்ஷர பூர்வகம், ப்ராண தந்த்ரம், கர்த்ரு தந்த்ரம், ஸாமி தந்த்ரம், ஜ்ஞாந தந்த்ரங்கள் ஐந்து, க்ரியா தந்த்ரங்கள் ஐந்து, மாத்ரா தந்த்ரங்கள் ஐந்து, பூத தந்த்ரங்கள் ஐந்து. இவை முப்பத்திரண்டு வகை. ப்ராக்ருத மண்டலம் சொல்லப்பட்டது. இனி வைக்ருத மண்டலம் பற்றி-

### வைக்ருத மண்டல விவரணம்

**வைக்ருத மண்டலம்** 28 வகைகள் கொண்டது. க்ருத்ய காண்டங்கள் ஐந்து, மற்றொன்று போக காண்டம், வ்ருத்த காண்டம் ஒன்று, க்லேஶ காண்டங்கள் ஐந்து, ப்ரமாண காண்டங்கள் மூன்று, க்யாதி காண்டம், தர்ம காண்டம், வைராக்ய காண்டம், ஐஶ்வர்ய காண்டம், குண காண்டம் லிங்க காண்டம், த்ருஷ்டி காண்டம், அநுஶ்ரவிக காண்டம், து:க காண்டம், ஸித்தி காண்டம், காஷாயப் பெயர் கொண்ட காண்டம், அவ்வாறே ஸமய காண்டம், மோக்ஷ காண்டம் இவ்வாறு 28 வகைகள் கொண்டது **விக்ருதி மண்டலம்**. இவை எல்லாம் சேர்ந்து 60 தந்த்ரங்களாகும். அறுபது தந்த்ரங்கள் கொண்டது ஸாங்க்யம். விஷ்ணுவின் ஸுதர்ஶநமயமான இது, முநிவரே! எல்லாம் அறிந்த மஹர்ஷி கபிலரிடமிருந்து தோன்றிற்று.

### யோக ஶாஸ்த்ர ஸ்வரூபத்தின் வர்ணனை

விஷ்ணுவின் ஸங்கல்ப உருவமாகப் பெரிய யோக ஶாஸ்த்ரம் **ஹிரண்யகர்பரிடமிருந்து** (நான்முகன்) பிறந்தது. அதன் வகைகளைச் சொல்கிறேன் கேளும்.

## யோகத்தைப்பற்றி இரண்டு ஸம்ஹிதைகள்

ஆதி காலத்தில் **ஹிரண்யகர்பரால்** சொல்லப்பட்ட யோகம் ஸம்பந்தமான இரண்டு ஸம்ஹிதைகளில் ஒன்று **நிவ்ருத்தியோகம்**, மற்றொன்று **கர்ம யோகம்.**

## நிவ்ருத்தி ஸம்ஹிதையின் 12 வகைள்

**நிவ்ருத்தி ஸம்ஹிதை** எனப்படுவது 12 வகைப்படும். அங்க தந்த்ரம் முதலாவது. **தோஷ தந்த்ரம்** அடுத்தது. **உபஸர்கம், அதிஷ்டாநகம், பஹிஸ்தத்வாதிகாரத்**தோடு கூடிய **ஆதார தந்த்ரம், யோக தந்த்ரம், ரிக்த யோக தந்த்ரம், பூர்ண யோகம், ஸித்த யோக தந்த்ரம்** என்ற பெயரில் மூன்று, **மோக்ஷ தந்த்ரம்.** இவ்வாருக **நிவ்ருத்தி ஸம்ஹிதை**க்கு 12 வகைகள் கூறப்பட்டன.

## கர்ம ஸம்ஹிதையின் நான்கு வகை

**க்ரியா ஸம்ஹிதை** நான்குவகை என்று ப்ரஹ்மாவினால் சொல்லப்பட்டது. ஒன்று பலவகையான கர்மங்களேச் சொல்வது, மற்றொன்று க்ரியைகளேப் பற்றி விளக்குவது. அவ்விரண்டு வெளிப்படை என்றும், மனதைச் சார்ந்தது என்றும் இரண்டு வகை. யோகத்தைச் சொல்லும் ஶாஸ்த்ரம் இவ்வாருக 16 வகைகள் கொண்டது. விஷ்ணுவின் ஸுதர்ஶநமயமான அது சதுர்முக ப்ரஹ்மாவினிடமிருந்து வந்தது.

## பாஶுபதம் எட்டு காண்டங்களே உடையது

தந்நிகரற்ற நான் சொன்ன இந்த ஶாஸ்த்ரம் எட்டு காண்டங்களே உடையதாகச் சொல்லப்பட்டது. முதலாவது **பதி காண்டம்,** அடுத்து **பஶு காண்டம்,** மூன்றாவது **பாஶ காண்டம்** ஐந்துவகை. மேலும் **ஶுத்த சர்யா, மிஶ்ரசர்யா** என்று இரண்டு காண்டங்கள். ஆறாவது **தேவ காண்டம்.** அதை அடுத்து **தீக்ஷா காண்டம்.** எட்டாவது காண்டம் மிகப் பெரியதாக ஸாயுஜ்யத்தைப் பற்றி விளக்குகிறது. எட்டுகாண்டங்களேக் கொண்ட இந்த ஶாஸ்த்ரம் விஷ்ணுவின் ஸங்கல்பமே என்று சொல்லலாம். மஹர்ஷியே ! மிகவும்

சிறப்புகளை உடைய பாஶுபத ஶாஸ்த்ரம் என்னாலேயே சொல்லப்பட்டது.

### பாஞ்சராத்ரத்தில் ஸ்வரூப விளக்கம்

விஷ்ணுவின் ஸுதர்ஶநமயமான ஶாஸ்த்ரம் **ஸாத்வதம்** என்று சொல்லப்படும். அதன் பத்து வகைப் பிரிவுகள் சுருக்கமாகச் சொல்லப்படுகின்றன. முதலாவது **பகவத் ஸம்ஹிதை**. அடுத்து **கர்ம ஸம்ஹிதை**. மூன்றாவது வித்யைகளைப் பற்றியது. நான்காவது **கால ஸம்ஹிதை**. மற்றொன்று **கர்தவ்ய ஸம்ஹிதை**. ஆறாவது சிறப்பாகச் செய்யப்படும் க்ரியையைப் பற்றியது. ஏழாவது **ஸம்யம ஸம்ஹிதை** என்று பெருமை வாய்ந்தது. எட்டாவது **சிந்தா** என்று கருதப்பட்டது. ஒன்பதாவது **மார்க ஸம்ஹிதை. மோக்ஷ ஸம்ஹிதா** என்கிற பரிஶுத்தமான **ஸாத்வதீ** என்பது 10வது ஆகும். இந்த அளவுள்ள **ஸாத்வத ஶாஸ்த்ரம்** ஸநாதநரான விஷ்ணுவிடமிருந்து தோன்றிற்று. **(ஸநாதநம்** - என்றும் அழிவு இல்லாதது). முனிவரே! இந்த ஐந்து ஶாஸ்த்ரங்களும் ஆதியில் ஏற்பட்டவை. இவை விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் உந்தப்பட்டு ஒவ்வொரு யுகத்திலும் பிரிக்கப்படுகின்றன. அந்தந்த மூன்று வேதங்களின் ஸம்ஹிதைகள் கர்த்தாக்களின் பெயரைக் கொண்டு சொல்லப்படுகின்றன. ஒவ்வொரு ப்ரதேஶத்திலும் உள்ளவைகள். குறைகள், காலம், அநுகாலம் இவைகளால் மறைந்து போய்விடுகின்றன.

### பகட்டான ஶாஸ்த்ரங்கள் தோன்றுவதற்குக் காரணம்

பிறரை ஹிம்ஸிக்கும் துஷ்டர்களை மயக்குவதற்காக விஷ்ணுவின் ஸங்கல்பங்களே, தேவர்ஷிகள் ப்ரஹ்மர்ஷிகள் வாக்கிலிருந்து பகட்டான ஶாஸ்த்ரங்களாகத் தோன்றுகின்றன.

### சொல்லப்பட்டதின் திரட்டு

இதுவே ஸுதர்ஶநமயமான மிகவும் உத்தமமான ஶாஸ்த்ரார்த்த ப்ரமாணங்களின் அணி. முனிவரே! இவையே ஶபதம் என்றும் **அர்த்தம்** என்றும் பிரித்து உமக்குச் சொல்லப்பட்டன.

**ஸுதர்ஶநத்தைக் குறிக்கும் பெயர்கள்**

ப்ராணன், மாயை, க்ரியை, ஶக்தி, பாவம், உந்மேஷம், உத்யமம், ஸுதர்ஶநம், விஷ்ணு ஸங்கல்பம் இவை ஒரே பொருளைக் கூறுபவை.

**ஐந்து ஶாஸ்த்ரங்களும் நாராயணனைக் குறிக்கோளாகக் கொண்டவை**

ஐந்து வகைகளாகச் சொல்லப்பட்ட இந்த ஶாஸ்த்ரங்கள் ஒரே குறிக்கோள் உடையவை. ஶாஸ்த்ரம் ஸுதர்ஶநம் எனப்படுகிறது. இவற்றின் பொருள் அழிவில்லாத விஷ்ணுவே. மஹாமுநிவரே ! ப்ரமாண ஸ்வரூபமாகிய ஸுதர்ஶநம் என்ற பெயருள்ள இந்த விஷயம் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. வேறு என்ன கேட்க விரும்புகிறீர்?

**இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம் அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் ஶப்த உருவமான ப்ரமாண ஸ்வரூப நிரூபணம் என்கிற 12வது அத்யாயம் முற்றிற்று.**



ப்ரமாணங்களின் பொருள் விளக்கம் என்கிற

# 13வது அத்யாயம்

**நாரதர் :—** தேவர்களுக்கெல்லாம் தலைவரே ! உமக்கு நமஸ்காரம். மருத் என்னும் தேவர்களுக்குத் தலைவரே ! நமஸ்காரம். வ்ருஷபக் கொடியோனே ! பவாநீபதியுமான உமக்கு நமஸ்காரம். தேவரீருடைய வாக் என்னும் தாமரையிலிருந்து வெளிவந்த விஷயங்கள் என் மனதில் நன்றாகப் பதிந்தன. உலகங்களுக்குக் காரணமும், உலகங்களுக்கு ஆதாரமும் எவரோ, உலகங்களுக்கு அளவு எதுவோ, இவை மூன்றும் மனதில் நன்றாக இறுத்தப்பட்டன. ஶங்கரரே ! இப்பொழுது எனக்கு ப்ரமாணம் என்பதின் பொருளைக் கூறக் கடவீர். ப்ரமாணங்களின் அர்த்தம் எது, எத்தகையது, எந்த அளவு உள்ளது ?

**அஹிர்புத்ந்யர் :—** நாரதரே ! உள்ளது உள்ளபடி சொல்கிறேன் கேளும். ப்ரமாணம் என்பதன் சிறந்த அர்த்தத்தைச் சொல்கிறேன் கேளும். அது விஷ்ணுவின் ஸங்கல்பத்தை அடிப்படையாகக் கொண்டு பல வழிகளில் ப்ரகாஶிக்கிறது, செயல்படுகிறது. மிதி என்பது ஸாதுக்களால் லக்ஷ்மி என்று சொல்லப் படுகிறது. உத்தமமான அந்த மஹாலக்ஷ்மி ப்ரபா என்று சொல்லப்படுகிறாள். மிதி என்கிற ஜ்ஞாநத்துக்கு ஒரு விஶேஷம் உண்டு. அதாவது உள்ளது உள்ளபடி புரிந்து கொள்ளுதல். அந்த ஜ்ஞாநத்துக்கு எது முக்கிய காரணமோ அது ப்ரமாணம் என்று சொல்லப்படுகிறது.

### ப்ரமாணத்தின் பொருள்

ப்ரமாணத்தைக் கொண்டு எது தீர்மானிக்கப்படுகிறதோ, அது ப்ரமாணத்தின் பொருள். மனிதர்களுக்கு எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் எது மிகவும் அநுகூலமாக உள்ளதோ அதுதான் ப்ரமாணார்த்தம் என்று இங்கு நான் சொன்னதின் கருத்து.

### அது இரண்டு விதம்

அது இரண்டு பிரிவாக உள்ளது. ஹிதம் (நன்மை பயப்பது) ஸாதநம் (காரணம்). இவற்றின் விளக்கத்தைக் கூறுகிறேன், கேளும்-

### ஹிதத்தின் ஸ்வரூபம்

மனிதர்களுடைய கஷ்டங்களெல்லாம் விலகி விடுகிறது என்பது எதுவோ, எப்பொழுதும் அத்துடன் கூடியதாய் எந்த லக்ஷ்யம் உள்ளதோ, அதுவே ஹிதம் என்று கருதப்படுகிறது.

### ஸாதநத்தின் ஸ்வரூபம்

அதற்கு ஒரு பொழுதும் மாறுபடாமல் எது ஸாதநமாக உள்ளதோ, அது ஹிதத்துக்குக் காரணம் என்று வேதாந்தங்களில் கரைகண்டவர்கள் கூறுகிறார்கள்.

### ஹிதத்தின் ஸ்வரூபத்தின் உண்மை நிலை

ஜீவன்களுடைய ஸ்வரூபமாக எது உள்ளதோ, அதுவே ஹிதம் என்று கூறப்படுகிறது. இந்த ஜீவனுக்கு பகவத் ஸ்வரூபத்வம் என்பது எதுவோ, அது பகவத்தா என்னும் பெயரை உடையதாகும்.

### ஸாதநம் இரண்டு விதம்

அதற்கு மிக முக்யமான ஸாதநம் எதுவோ அது இரண்டு வகைப்படும். ஜ்ஞாநம் என்பது ஒன்று. தர்மம் என்பது மற்றொரு வகை.

### காரணமாக ஸாத்யமாக உள்ள நிலை

இந்த இரண்டும் ஒன்று காரணமாகவும் (ஹேது), ஒன்று ஸாத்யமாகவும் ஆகிறது.

### ஜ்ஞாநம் இரண்டு வகை

ஸாத்யம் என்று சொல்லப்பட்ட அந்த ஜ்ஞாநம் ஹேதுமத் எனப்படும். அது இரண்டு வகைப்படும். ஒன்று ஸாக்ஷாத்காரம் என்றும் மற்றொன்று பரோக்ஷம் எனப்படும்.

### காரணம் ஸாத்யம் இவற்றின் நிலே

இவ்விரண்டுக்கும் எது ஹேது, எது ஹேதுமத் என்கிற நிலேயை இப்பொழுது விவரிக்கிறேன். பரோக்ஷமாக இல்லாதது **ஹேதுமத்**, பரோக்ஷம் என்பது **ஹேது.**

### கார்யங்களுக்கு ஜ்ஞாநம் ஹேது

இந்த இரண்டுவகை ஜ்ஞாநங்களுக்கும் உள்ள தன்மை **ஹேது** என்று சொல்லப்படுகிறது. அதனால் ஸாதிக்கப்படுகிற ஸாக்ஷாத்காரம் - பரோக்ஷஜ்ஞாநம் ஹேது. ஏனென்ருல் அதனால்தானே இவை அறியப்படுகின்றன.

### கார்யங்களின் இருவகை

தத்வ ஶாஸ்த்ரக் கடலில் கரை கண்டவர்களால் இதற்கும் இரண்டு வகைகள் கண்டறியப்பட்டன. நேராக உபகாரம் செய்வது ஒன்று, மற்ருென்று சிறிது தள்ளி உபகாரம் செய்வது.

### சிறிது தள்ளியிருக்கும் கர்மத்தின் ஸ்வரூபம்

ஶக்தியோடு கூடிய பகவான் (எல்லாவற்றுக்கும் அதிபதியாக உள்ள விஷ்ணு) கரை இல்லாத பரப்ரஹ்மம். அவரே நாராயணன் என்கிற திருநாமத்தால் சொல்லப்படுகிறவர். ஶாஶ்வதமானவர். மாறுபாடு இல்லாதவர். ஷாட்குண்யம் எனப்படுபவர். இந்த ப்ரஹ்மம் முதலாகப் புல் பூண்டுவரை உள்ள அனேத்தும் அவருடைய விபூதிகளே. அவை மூன்று வகை பாவனேயோடு கூடியவைகள். அந்த பகவானுடைய ஸுதர்ஶநத்தினால் உற்பத்தி செய்யப்பட்டவை. முன்பு என்னால் ஶக்தியின் கோடியில் ஒரு அம்ஶம் என்று எது சொல்லப்பட்டதோ, அந்த அம்ஶத்தின் ஒரு பாகத்தினால் உண்டான ப்ரஹ்மம், விஷ்ணு ஸங்கல்பத்தாலேயே உண்டானதே. இந்த விபூதியின் மூலமாக **அகாமஹதர்** - பற்றற்றவர்களான புருஷர்களால் அது கொஞ்சம் தள்ளி உபகாரம் செய்யும் தர்மமாகும்.

## நெருக்கமான தர்மத்தின் ஸ்வரூபம்

இவ்வாறு சொன்ன விபூதிகளோடு கூடிய பரப்ரஹ்மத்தை யோகியான ஒருவர் எதைக் கொண்டு நேராக த்ருப்தி செய்வாரோ, (ஆராதிப்பாரோ) அது ஸாக்ஷாத் தர்மம் எனப்படும். ஸகல விதமான ஸாத்வத ஶாஸ்த்ரங்களும் (பாஞ்சராத்ரம்) இந்த விஷயத்தை நிரூபிப் பதாகும்.

## கர்ம காண்டத்தின் அபரதர்ம விளக்கம்

எது வேதங்களுடைய முன் பகுதியோ (கர்ம காண்டம்), உத்தமமான விஷயங்களைக் கூறுவதாக உள்ளதோ, அது அபர தர்மத்தை ஆசையற்றவர்களுக்கு விளக்குவதாகும்.

## பாஶுபத மதத்தின் விபூதிகளின் தர்மம்

என்னால் பாஶுபதத்தில் சொல்லப்பட்ட விபூதிகளிலுள்ள இந்த தர்மம், கடுமையான வ்ரதங்களை ஏற்றுக் கொண்டவர்களால் எப்பொழுதும் ப்ரஹ்மத்தின் ப்ரீதிக்காகச் செய்யப்படுகிறது.

## ஸாங்க்யர்களின் கருத்து

நேராகவோ, பரம்பரையாகவோ, (வெறொன்றின் துணை கொண்டோ) எது மோக்ஷத்துக்கு உபாயமாக உள்ளதோ, அது பரோக்ஷமான ஶாஸ்த்ரம் என்று ஸாங்க்ய ஶாஸ்த்ரத்தினால் சொல்லப்படுகிறது.

## வேதாந்திகளின் கருத்து

அந்தரங்கமான ஶமம் (ஶாந்தி) முதலிய அங்கங்களோடு கூடியதாய், பக்தி ஶ்ரத்தையுடன் கூடியதாய், அபரோக்ஷ ப்ரஹ்ம ஜ்ஞாநம் உபநிஷத்துக்களால் விளக்கப்படுகிறது.

## யோகஶாஸ்த்ரத்தின் கருத்து

பஹிரங்கம் அந்தரங்கம் என்கிற யமம் முதலிய அங்கங்களோடு கூடிய மநத்தின் சலநத்தை அடக்குதல் என்கிற யோகமுறை யோக ஶாஸ்த்ரத்தில் கூறப்பட்டது.

அடிக்கடி பயிற்சி செய்வதன் மூலமும், பற்றற்ற நிலையோடு கூடிய பரமாத்மாவை த்யாநம் செய்வதன் மூலமும் **(உபாஸநம், ப்ரணிதாநம், ஸமாதி** எல்லாம் ஒரே பொருளைக் குறிக்கும்) **ஸாக்ஷாத்கார ஜ்ஞாநம்** என்கிற பெயருடைய ஸித்தர்களின் ஶுத்தமான மோக்ஷம் கொடுக்கக் கூடியது யோகம் எனப்படும்.

## குணங்களின் முக்கிய நிலை எங்கும் சொல்லப்பட்டது

முன் சொல்லப்பட்ட தத்வ ஜ்ஞாநம், பலவகை ஹேதுக்களோடு கூடியதாய், பலவகை தர்மம் இவைகள் எல்லாம் எல்லா ஶாஸ்த்ரங்களாலும் விளக்கப்படுகின்றன. மனிதர்களுக்கு நல்ல விஷயங்களில் ஈடுபாடு ஏற்படவும், பாபங்களைக் குறைக்கவும், ஆசை, பகை இவற்றில் ஈடுபட்டவர்களுக்கு ஆயுர்வேதத்தை உபதேஶிப்பதாகவும் உள்ளது. பலவகைப் பலன்களைப் பெறுவதற்காக, பலவகை நியமங்களோடு கூடியதான பலவகை தர்மங்களும், பலவகை ஜ்ஞாநங்களும் ஶாஸ்த்ரங்களால் விதிக்கப்பட்டுள்ளன.

## லௌகிகமான புருஷார்த்தங்களைப் பற்றி

ஆகையால் முன்பு கூறியபடி தர்மம், அர்த்தம் (அறம், பொருள்) அதன் சிறப்புத் தன்மையுடன் கூட உமக்கு விளக்கப்பட்டது. மேலும் ஶாஸ்த்ரங்களால் லௌகிகமான இரண்டு புருஷார்த்தங்கள் சொல்லப்பட்டுள்ளன. **அர்த்தம், காமம்** இரண்டுக்குள் **காமம்** என்பது ஶப்தாதி விஷயங்களைச் செய்யக் கூடிய புலனாகச் சொல்லப்பட்டுள்ளது. அர்த்தம், (பொருள்) என்பது பஶு, பூமி, தங்கம் முதலியவைகளைப் பார்ப்பதால் ஏற்படும் பலனாகும்.

## அறம் பொருள் இன்பம் இவை ஒன்றுக்கொன்று காரணமாகவும் கார்யமாகவும் இருக்கும்

பொருள் தர்மத்துக்கும், காமத்துக்கும் அப்படியே பொருளுக்காகவும் ஸாதநமாகி இருக்கும். தர்மம் (அறம்) தர்மத்துக்கும், காமத்துக்கும் அப்படியே பொருளுக்கும் ஸாதநம். ஆசை தர்மத்துக்கும் காமத்துக்கும் அப்படியே

பொருளுக்கும் ஸாதநம். பொருளும், ஆசையும் எல்லா இடங்களிலும் விலகிச் செல்வதன் மூலம் ஸாதநமாகும். தர்மம் என்பது எல்லா வகையான கார்யங்களுக்கும் சட்டாயமாக ஸாதநமாக இருக்கும். ஆகவே இந்த மூன்றும் த்ரிவர்கம் என்று ஜ்ஞாநிகளால் கூறப்பட்டுள்ளது. மோக்ஷம் என்பது பலனாகவே ஆகும். இவ்வாறு நான்கு புருஷார்த்தங்கள்.

### அர்த்தம் காமம் இவைகளுக்கு ப்ரமாணம்

வீடு, ஆட்சி முறை, நான்கு உபவேதங்களோடு கூடிய தொழில் முறை, இவை பொருள், இன்பம் இவைகளுக்கு ப்ரமாணம் என்று ஜ்ஞாநிகளால் குறிப்பிடப்பட்டுள்ளது.

### இதிஹாஸம் முதலியவைகளின் உதவி

இதிஹாஸம், புராணம் என்கிற பெயரில் உபவேதம் என்று எது சொல்லப்பட்டிருக்கிறதோ அது ஶாஸ்த்ரங்களுக்கு உதவியாய் இருக்கிறது. இது தத்வ ஜ்ஞாநத்தைக் கொடுக்கும். இவ்வாறு நான்கு வகை புருஷார்த்தங்களும் சுருக்கமாகக் கூறப்பட்டன.

### தர்மம் முதலியவைகளுக்கு நெருக்கமான ஸாதநம்

நாரதரே ! இந்த நான்கு புருஷார்த்தங்களுக்கு நெருக்கமான ஸாதநத்தைச் சொல்கிறேன், கேளும். எந்த நோக்கமும் இல்லாததும் (பலன் கருதாமை) இரக்கம் இவை தர்மத்துக்கு உதவியாக இருக்கும். இடம் காலம் இவற்றுக்கு ஏற்ற வகையில் செயல் படுதல் பொருளுக்குக் காரணம். பலனை எதிர் பார்க்காமல், உபஸ்காரம் இல்லாத (உதவியற்ற) மனதின் ப்ரவ்ருத்தி காமத்துக்குக் காரணம். எல்லாவற்றிலும் த்யாக மநப்பான்மை மோக்ஷத்துக்குக் காரணம்.

### புருஷார்த்தங்களுக்கு விலகிய ஸாதநங்கள்

ந்யாயத்தை விட்டு மாறாத தர்மம் முதலியவை தர்மத்துக்கு விலகிய ஸாதநம். தந்த்ரங்கள், பணம் சேர்க்க வேண்டும் எனும் எண்ணம் பொருளுக்கு விலகிய ஸாதநம்.

கையைப் பிடித்தல் முதலியவை காமத்துக்கு விலகிய காரணமாக அறிவாளிகளால் கூறப்பட்டது. மோக்ஷத்துக்குப் பலனில் பற்றில்லாத தர்மங்கள் செய்வது முதலியன விலகிய ஸாதநம். இந்த நான்குவகை புருஷார்த்தங்களுள் விபூதியின் செயல்பாடு விஷ்ணுவின் ஸங்கல்பமே அச்செயலுக்குக் காரணம்.

### அத்யாயத்தின் பொருள் சுருக்கம்

இவ்வாறு ப்ரமாணார்த்தங்களின் சிறந்த போக்கு (தன்மை) முழுமையாக உமக்குச் சொல்லப்பட்டது. ஸாதநங்களும் உட்பிரிவுகளும் கூறப்பட்டன. மேலும் என்ன கேட்க விரும்புகிறீர்?

**இவ்வாறாகப் பாஞ்சராத்ரம், தந்த்ர ரஹஸ்யம்**
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் ப்ரமாணார்த்த**
**நிருபணம் என்கிற 13வது அத்யாயம் முற்றிற்று.**



## ஜீவனுடைய பிறப்பு காரணம்; அதிலிருந்து கரை ஏற வழிவகை இவைகளின் நிரூபணம் என்கிற

# 14வது அத்யாயம்

### முதலில் மோக்ஷத்தைப் பற்றி மீண்டும் கேள்வி

**நாரதர் :—** அஜ்ஞானம் என்கிற இருளை எரித்துச் சாம்பலாக்கும் நெற்றிக் கண்ணின் ஜோதியோடு கூடியவரும், த்ரிபுரங்களை எரித்தவரும், அந்தகனுக்கு (யமனுக்கு) அந்தகனுமான ஸ்வாமிந் ! தேவரீருக்குப் பல நமஸ்காரங்கள். எல்லா புருஷார்த்தங்களையும், முக்யம், முக்யமல்லாதது எல்லாம் கேட்டேன். அவற்றில் முக்தி என்கிற பெயரை உடைய சிறந்த புருஷார்த்தமும் கேட்டேன். த்ரிபுரங்களை எரித்த தேவரீரால் **பகவத் ஸாயுஜ்யம்** என்கிற மோக்ஷமும் சொல்லப்பட்டது. அதற்கு இரண்டுவகை தத்வஜ்ஞானம் ஸாதநமாக உள்ளது என்பதும், அதற்கும் பலனில் பற்றில்லாத தர்மம் (கர்மாநுஷ்டாநம்) ஸாதநமாகச் சொல்லப்பட்டது. சந்த்ர ஶேகரனே ! அந்த முக்தியைப்பற்றி மேலும் விரிவாகச் சொல்ல வேண்டும். முக்தி எப்படிப்பட்டது ? எதில் இருந்து கிடைக்கிறது? இந்த இரண்டையும் சொல்ல வேண்டும். எல்லாவற்றையும் அறிந்த தேவரைத் தவிர வேறொருவரை நான் கேட்க விரும்பவில்லை.

### ஜீவஸ்வரூபத்தின் சுருக்கம்

**அஹிர்புத்ந்யர் :—** ஆதியில்லாதவன் (நித்யன்), அளவிட முடியாதவன், ஜ்ஞாநாநந்த ஸ்வரூபன், புருஷன் இத்தகைய பகவத் ஸ்வரூபனே பகவானால் எப்பொழுதும் இயக்கப்படும் ஜீவன் (பகவான் என்பது விஷ்ணுவே).

### ஜீவன் பகவானுடைய ஶக்தியின் ஒரு சிறிய அம்ஶம் என்கிற நிலை

விஷ்ணுவின் மனதுக்கு ஏற்றவாறு எப்பொழுதும் செயல்படுபவளான எந்த லக்ஷ்மி உண்டோ, அவள் இரண்டு வகையாக **மஹாலக்ஷ்மி, மஹா ஸத்தா** என்று இருக்கிறாள் என்று முன்பே சொன்னேன். பூதி என்றும், க்ரியை என்றும்,

ஒன்றுக்கொன்று காரணம் கார்யம் என்கிற பெயரில் இருக்கும். அந்த பூதி - நெருப்பின் ஜ்வாலை எப்படிக் காற்றினால் பரவப்படுகிறதோ, அது போல க்ரியையால் வளர்க்கப்படுகிறது. பூதியின் பலவகை விபூதி எனப்படும் என்று முன்பே சொன்னேன். அந்த விபூதி ஶுத்தமானது என்றும், ஶுத்தமல்லாதது என்றும் முன்பே சொல்லப்பட்டது. கால ஸ்வரூபமாக உள்ள மற்றொரு ஶக்தி புமாந் (ஜீவன்) என்று சொல்லப்பட்டது. கால ஶக்தியின் மாறுபாடுகளில் இருக்கும் இந்த ஜீவன் நிச்சயமாக ஸம்ஸாரத்தில் உழல்வான் (ஸம்ஸாரம் - பிறப்பு இறப்பு சக்ரம்). இவன் ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட வழிகளில் முறையைப் பின் பற்றித் தானே வந்து பிறக்கிறான்.

## அதில் மீண்டும் கேள்வி

**நாரதர் :—** தேவர்களுக்கெல்லாம் தேவனும் த்ரிபுரம் எரித்தவரும் ஶங்கரன் என்கிற பெயரை உடைய பகவானே! கால ஶக்தியின் மாறுதலில் இருப்பவன் எப்படி அநேக காலம் ஸம்ஸாரத்தில் உழல்கிறான்? எப்படி எந்த வழியைப் பின்பற்றி இவன் தானே வந்து பிறக்கிறான்?

**அஹிர்புத்ந்யர் :—** யாராலும் ஏன், எப்படி என்று கேட்கமுடியாத ஒரு மேலான தனிப்பட்ட அதிகாரம் மஹாவிஷ்ணுவினுடையது. ஸகல காமங்களையும் நிரம்பப் பெற்றிருந்தும் கூட பகவான் ஒரு அரசன் விளையாடுவது போலத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு விளையாடுகிறான். அவருடைய ஸுதர்ஶநம் என்கிற பெயருடைய ஸங்கல்பம் இது. அந்த ஸங்கல்பத்துக்குப் பலவகை உருவங்கள் உண்டு என்றாலும் அந்த ஸங்கல்பம் ஐந்து வகைகளாகச் செயல்படுகிறது. படைத்தல், காத்தல், அழித்தல் என்கிற உருவத்துடனும், தண்டனை, அநுக்ரஹம் என்கிற வடிவத்திலும் செயல் படுகிறது. மறைத்தல் என்கிற அந்த ஶக்தி, தண்டனை என்கிற பெயருடையது. அந்த ஶக்தி ஜீவன் என்கிற பெயரையுடைய புருஷனைத் தானே உருவம், அதிகார ஶக்தி, ஜ்ஞாநம் (விஜ்ஞாநம்), மறைத்தல் என்கிற செயல் மூலம் மறையும்படிச் செய்கிறது.

## மறைத்தல் என்பதற்கு வேறு சொற்கள்

மாயா, அவித்யை, மஹாமோஹம், பெரிய இருள், தமஸ், பந்தம், ஹ்ருத்க்ரந்தி என்பவை ஒரே பொருளைக் குறிக்கும் சொற்கள். (அவித்யை - அஜ்ஞானம்; பந்தம் - ஸம்ஸாரத்தில் பிணைப்பு; ஹ்ருத்க்ரந்தி - மனதில் ஏற்படும் முடிச்சு).

## ஜீவன் அணு

ஸ்வரூபம் மறைவதால் ஜீவனுக்கும் அணுஸ்வரூபம் சொல்லப்படுகிறது. தன் ஸர்வவல்லமை மறைக்கப்படுவதால் ஏதும் செய்ய இயலாமை தோன்றுகிறது. ஜீவனிடமுள்ள ஜ்ஞானம் சுருங்குவதால் ஏதும் அறியாத் தன்மை நிலவுகிறது. விஷ்ணுவின் ஶக்தியால் மறைக்கப்பட்ட ஜீவன் அணு என்றும், செயல் திறன் குன்றியவன் என்றும், சிற்றறிவுள்ளவனென்றும் சொல்லப்படுகிறான்.

## அணுத்வத்துக்கு அஶுத்தமும் பிணைப்பும்

இந்த மூன்றுவகை மலங்கள் (அழுக்கு), மூன்றுவகைப் பிணைப்புகள் என்று ஜ்ஞானிகளால் சொல்லப்பட்டது.

## அவித்யையால் மலம் வளர்தல்

விஷ்ணுவின் இந்த மறைக்கும் ஶக்தியால் இவ்வாறு மறைக்கப்பட்டவனாய் ஸம்ஸாரத்தில் பிணைப்பைப் பெற்ற ஜீவனுக்கு அவித்யை, அஹங்காரம், ஆசை முதலியவை மலத்தை வளர்க்கின்றன.

## விருப்பு, வெறுப்பு இவைகளை விலக்க ஆசை

இப்படிப்பட்ட துன்பங்களைக் கொடுத்துத் துன்புறுத்தும் அவித்யையால் பீடிக்கப்பட்டு, ஆசை, வெறுப்பு இவைகளால் தூண்டப்பட்டு ஶப்தாதி விஷயங்களைப் பின் தொடர்பவனாய் விரும்பும் பொருளைப் பெறுவதற்கும், வேண்டாத பொருள்களை விலக்குவதற்கும் முயற்சி செய்பவனாய் ஆசை உடைய இந்த ஜீவன் நற்பலன்களையும்

தீய பலன்களையும் கொடுக்கவல்ல கார்யங்களைச் செய்கின்றான்.

### கர்மாக்களால் பிறப்பு ஆயுள் பெறுதல்

பிறகு கர்மங்கள் பலனைக் கொடுக்கும் நிலையில் இருந்து கொண்டு நன்மை தீமை கலந்த பிறத்தல் ஆயுள் இவற்றின் தொடர்ச்சிகளை விதியால் உந்தப்பட்டுப் பெறுகிறுன். இன்பம் முதலியவற்றின் பல வகை வாஸனைகளை மெள்ள, வளர்த்துக் கொள்கிறான். இது ஶக்தியின் மறைக்கும் வகைகள்.

### மறைத்தலுக்கு உதவி

பூதியைத் தொடர்ந்து வரும் இரண்டு அம்ஶங்களான காலம், ஶக்தி, என்பவை நிக்ரஹம் (மறைத்தல்) மூலம் ஜீவனுக்கு மறைத்தலை உண்டு பண்ணுகின்றன. பிறப்பில்லாத அந்த ஜீவனுக்கு ஸ்ருஷ்டி முதலான மூன்று வகையான ஶக்திகள் பலவகையான பலம் பொருந்திய முன் செய்த கர்மங்களால் ஏற்படுகின்றன.

### ஹேதுவும் பந்தமும் அநாதி

இந்த ஸம்ஸார பந்தம் அநாதி. பந்தத்துக்குக் காரணமும் அநாதி என்று சொல்லப்படுகின்றது.

### ஸம்ஸார பந்தத்திலிருக்கும் ஜீவனுக்கு பகவானின் க்ருபை கிடைத்தல்

இவ்வாறு ஸம்ஸாரம் என்கிற சக்ரத்தில் இருப்பவனும் தான் செய்த கர்மங்களால் சுழன்று கொண்டிருப்பவனும், துன்பங்களால் அவதிப்படுபவனுமான ஜீவனிடத்தில் விஷ்ணுவினுடைய ஒரு வகையான க்ருபை உண்டாகிறது.

### க்ருபையால் அநுக்ரஹ ஶக்தி உண்டாதல்

விஷ்ணுவின் உருவமாக எந்த ஐந்தாவது ஶக்தி சொல்லப்படுகிறதோ அது அநுக்ரஹ உருவமான ஶக்தி. அது விஷ்ணுவின் மேலான க்ருபை. மஹாவிஷ்ணுவினுடைய அந்த ஶக்தி ஏற்படுவது வேதத்திலுள்ள வாக்யங்களால் சொல்லப்படுகிறது.

### க்ருபையினால் ஜீவனின் கர்மாக்களில் நடுநிலைமை

அநுக்ரஹ வடிவம் ஸுதர்ஶநமயமானதும், விஷ்ணுவின் கருணை மழை உருவமானதும், உள்ள ஶக்தியால் எப்பொழுது இந்த ஜீவன் ஏற்றுக் கொள்ளப்படுகிறானோ அப்பொழுது கருணை மழை பொழியும் ஶக்தியினால் பார்க்கப்படுகிறான் (கடாக்ஷிக்கப்படுகிறான்). விஷ்ணுவினால் பார்க்கப்பட்ட அந்த ஜீவன் கர்மாக்களின் நடு நிலைமையை அடைகிறான். ஸம நிலையில் உள்ள கர்மங்களின் நல்வினை - தீவினைகளால் செயலற்ற தன்மையை அடையும் பொழுது ஶக்தியின் லாபம் ஜீவனை ஸம்ஸாரத்திலிருந்து கரையேற்றுகிறது.

### ஜீவனைக் கர்மங்கள் உதாஸீநம் செய்வதற்கு உதாரணம்

எப்படி மூட்டை முடிச்சுகளுடன் வரும் வழிப் போக்கனிடம் திருடர்கள் திருடுவதில் எண்ணமோ முயற்சியோ இல்லாமல் நடுநிலையிலிருந்து ஸாதுக்களை அசட்டையாக விட்டு விடுவார்களோ, அவ்வாறு அநுக்ரஹ வடிவில் அந்த ஶக்தி கிடைக்கும் ஸமயத்தில் நல்வினை தீவினை என்கிற இரண்டு வகைக் கர்மங்களும் ஸம நிலையிலிருந்து கொண்டு ஜீவன் விஷயத்தில் அசட்டை செய்து விடுகின்றன.

### மோக்ஷத்தை விரும்புபவனுக்கு மோக்ஷத்துக்கான உபாயம் கிடைக்கும் வகை

அந்தக் கடாக்ஷம் கிடைத்த பிறகு மோக்ஷத்தில் விருப்பம் கொண்டு அந்த ஜீவன் வைராக்ய (பற்றில்லாமை) நிலையில் இருந்து கொண்டும், நல்ல ஜ்ஞாநத்தில் பற்றுடையவனாய் இருந்து கொண்டு ஶாஸ்த்ரங்களைப் பரீஶீலனை செய்து வருவான். ஆசார்யர்களிடம் ஸேவை செய்தும், ஸத்வ குணங்களின் செயல்பாடுகளால் ஜ்ஞாநியாகவும், அந்த ஜ்ஞாநத்தை நிலை நிறுத்திக் கொண்டும், ஆசார்யனால் கிடைத்த ஜ்ஞாநத்தை அலட்சியம் செய்யமாட்டான். தனக்கு ஏற்படும் துன்பங்களை அலட்சியப் படுத்தியும், பலவகைகளிலும் ஸாரத்தைத் தேடியும்,

உத்தமமான ஜ்ஞாநத்தை வளர்த்துக் கொள்வான். ஸாங்க்ய யோகத்தில் பற்றுடையவனாய், நல்ல கார்யங்களில் தான் ஈடுபட்டுக் கடுமையான வ்ரதங்களை அநுஷ்டிப்பான். அசைவற்ற வேதாந்த ஜ்ஞாநமுடையவனாய், நல்ல கார்யங்களாலும் தள்ளிவிடும் மூலம் முன்பு சொன்ன கட்டாயம் ஏற்பட வேண்டிய முறைகளால் பெருமுயற்சியால் விஷ்ணுவின் ஸ்தாநத்தை அடைகிறான்.

## ஜ்ஞாநத்தை அடைந்து மோக்ஷம் பெறுதல்

நிறைந்த ஜ்ஞாநத்தை உடையனாய், புத்தியைத் தெளிவாக வைத்துக் கொண்டு எந்த விதக் குழப்பமும் இல்லாமல் துக்கங்கள் இல்லாத விஷ்ணுவின் உலகத்தைச் சென்று அடைகிறான்.

இவ்வாறாகப் பாஞ்சராத்ர ரக்ஷை, தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் ஜீவனுக்குப் பிறப்பு காரணம், அதிலிருந்து கரையேறுதல் என்கிற**
14வது அத்யாயம் முற்றிற்று.



## தகுதியுள்ளவர்களை விளக்குதல் என்கிற

# 15வது அத்யாயம்

ஸுதர்ஸநமென்கிற சக்ரத்தின் மத்தியிலிருக்கும் பரமாத்மாவான (விஷ்ணு) மநதை அடக்கியவர்களால் த்யாநம் செய்யப்பட்டவராய் ஸம்ஸாரம் என்கிற கிணறு போன்ற ஆபத்திலிருந்து நம்மைக் காப்பாற்றுவாராக.

### தகுதியுள்ளவர்கள் பற்றிக் கேள்வி

**நாரதர் :—** தேவர்களுக்கெல்லாம் தேவனும், எருதுக்கொடியோனுமாகிய ஸங்கரனே! உமக்கு நமஸ்காரம். தேவரீர் க்ருபையால் மேலானதும் ரஹஸ்யமுமான உத்தமமான ஜ்ஞாநம் பற்றிக் கேட்டறிந்தேன். நான் முன்னால் கேட்ட கேள்விகளில் எது ஒன்று மீதமுள்ளதோ அதைப் பற்றிச் சொல்ல வேண்டும். எல்லோரும் ஈடுபடக் கூடியதாக நான்கு புருஷார்த்தங்கள் சொல்லப்பட்டன. அவற்றுக்கு யார் தகுதி உடையவர்கள்? இது பற்றி விரிவாகச் சொல்ல வேண்டும், அப்பனே!

### கேள்விக்குப் பதிலாக முதலில் ஸாத்விகமுறை பற்றி விளக்கம்

**அஹிர்புத்ந்யர் :—** வித்யைகளையெல்லாம் உள்ளே அடக்கிக் கொண்டு உள்ளவர்களாய், ப்ராஹ்மணர், க்ஷத்ரியர், வைஸ்யர், ஸூத்ரர் என்கிற பிரிவுகளுடன் கூடிய மநுக்கள் என்று எவர் சொல்லப்பட்டனரோ, அவரிடமிருந்து பிறந்தவர்கள் மாநவர்கள் என்றும் மாநவ மாநவாக்கள் என்றும் சொல்லப்பட்டார்கள். இவர்களுடைய முகம், புஜங்கள், தொடைகள், திருவடிகள் இவைகளிலிருந்து ப்ராஹ்மணர், முதலியவர்கள் பிறந்தனர். ப்ராஹ்மணர், க்ஷத்ரியர், வைஸ்யர், ஸூத்ரர் என்று இவர்களும் சொல்லப்பட்டனர். இவர்களில் இரண்டு இரட்டையர்கள் தகுதிக்குத் தக்கபடி இந்த நான்கு வர்ணத்தவர்களிடம் அதிகாரம் செய்கிறார்கள்.

**ஸாத்விக முறை அதிகாரம்**

முன்பு எல்லோரும் ஏற்றுக் கொள்ளத் தக்கதென்று ஐந்து ஸித்தாந்தங்கள் எவை சொல்லப்பட்டனவோ, அவைகளிடையே மநுவம்ஶத்தில் பிறந்தவர்கள் ஸாத்விக மார்கத்தைப் போதிக்கின்றனர்.

**அவர்கள் பகவானை அடைதல்**

ஸம்யமம் முதலிய அங்கங்களோடு கூடிய 13 வகையான கர்மங்களைச் செய்பவர்களாய் **பஞ்ச கால ப்ரக்ரியையை** அநுஷ்டிப்பவர்களாய் இருந்து கொண்டு இவர்கள் புருஷோத்தமனான நாராயணனை அடைகிறார்கள். (பஞ்ச காலம் என்பது **(1) அபிகமநம், (2) உபாதாநம், (3) இஜ்யா, (4) ஸ்வாத்யாயம், (5) யோகம்** எனப்படும்). நாரதரே ! எல்லோரும் கேள்விப்பட்டிருக்கும் நான்கு ஆஶ்ரமங்கள் முதல் மூன்று வர்ணத்தினருக்கு ப்ரதாநம். இவை முறையே **ப்ரஹ்மசாரி, க்ருஹஸ்தன், வாநப்ரஸ்தன், ஸந்யாஸி** என்பன. ஶூத்ரன் என்பவன் முன் கூறிய மூன்று வர்ணத்தினருக்கு ஸேவை செய்வதன் மூலம், ஆசை, வ்யாதி, லோபம் இவை அற்றவனாக இருப்பதன் மூலமும், காலப் போக்கில் நாராயணன் ஸ்தாநத்தை அடைவான்.

**மற்ற ஆஶ்ரமத்தினருக்கும் மோக்ஷம் நிச்சயம்**

முன்பு சொல்லப்பட்ட மூன்று வர்ணத்தினரும், ஶூத்தர்களாகவும் வேதத்தைக் கற்பதிலும் கற்பிப்பதிலும் ஈடுபட்டவர்களே. வேறு தெய்வங்களைப் பூஜிப்பவர்களாகவும், ஸ்ருஷ்டி காலத்திலிருந்து தகுதி உடையவர்களாகவும் இருப்பார்கள். பகுத்தறிவு ஏற்படுவதற்கு முன்புவரை தாய் தந்தையர்களால் நல்ல முறையில் வளர்க்கப்பட்டு உபதேஶம் பெற்றவர்களாய் ஆசார்யனுக்கு ஸேவை முழுமையாகச் செய்பவர்களாய், ஏழு வகைப் பொருள்களை நன்கு அறிந்தவர்களாயும், இருப்பார்கள். கட்டுப்பாடுகளோடு கூடியவர்களாய், ஶாந்தி நிரம்பப் பெற்றவர்களாய், ப்ரக்ருதி பற்றிய அறிவு நிறைந்தவர்களாய், எதிலும் கவனக் குறைவு அற்றவர்களாய்,

ஆசையற்றவர்களாய், ஊக்கம் நிறைந்தவர்களாய், ஶுத்தர்களாக இருப்பர். (ஶுத்தம் என்பது பண விஷயத்தில் கொடுக்கல் வாங்கல் இவற்றில் ந்யாயமாகவும் சொன்னபடி நடந்து கொள்வது மாகும். **ய: அர்த்தே ஶுசி: ஸ ஶுசி: ந ம்ருத்வாரிஶுசி: ஶுசி:** என்பது முன்னோர் வாக்கு) புலனடக்கம் உள்ளவர்களாய், ஸித்தர்கள் என்ற மஹாத்மாக்களாகவும், ஜ்ஞாநத்தில் தெளிவை நன்கு பெற்றவர்களாகவும், ஜ்ஞாநத்தோடு கூடிய கர்மங்களைச் செய்பவர்களாகவும், நல்ல ஶீலங்களுடன் (ஒழுக்கம்) கூடியவராகவும் இருப்பார்கள். தன் கடைசி காலம் வரை நான்கு ஆஶ்ரமங்களில் ஒன்றைப் பற்றி நின்று, நூறு ஆண்டுகள் முன் சொன்ன ஐந்து காலங்களில் செய்யப்படும் கார்யங்களைக்குறைவின்றிச் செய்பவர்களாய், ஞாநத்தால் பிறந்த கர்ம யோகங்களின் முடிவில் பலனை (நல்ல விவேகத்தை)ப் பெற்று, பகவத் விஷயமான ஜ்ஞாநம் எப்பொழுதும் ஒளி வீசிக்கொண்டிருப்பவர்களாய், ப்ரக்ருதி ஸம்பந்தமான முயற்சிகளை (கார்யங்களை) விலக்கியவர்களாயும் இருந்து, பிறகு கோடி ஸூர்யனின் ப்ரகாஶனும், ஸகல உலகங்களுக்கும் ஸ்வாமியும், மஹாலக்ஷ்மியின் பர்த்தாவும், குற்றமற்றவனும் ஸகல ப்ராணிகளுக்கும் அந்தராத்மாவாக உள்ள வாஸுதேவனான ஸ்ரீமந் நாராயணனைச் சென்று அடைகிறுர்கள். (ஸகல சராசரங்களிலும் உள்ளும் புறமும் வ்யாபித்து, இருப்பதால் எம்பெருமான் வாஸுதேவன் எனப்படுகிறான். இதை நம்மாழ்வார் கரந்தெங்கும் பரந்துளன் என்று அருளிச் செய்தார்).

### இல்லறம் மற்ற ஆஶ்ரமத்தவருக்கு உதவியாயிருத்தல்

க்ருஹஸ்தாஶ்ரமம் என்கிற ஒன்றே அக்நி கார்யமுடையது. மற்ற மூன்று ஆஶ்ரமங்களும் வ்ரதங்கள் முதலியவற்றால் ஶுத்தமாகவும் அக்நி கார்யம் இல்லாதவர்களாகவும் கூறப்பட்டுள்ளது. மற்ற மூன்று ஆஶ்ரமத்தினரும் **ஊர்த்வரேதஸ்ஸு**களாக (ஊர்த்வரேதஸ் என்றால் ஆண்களின் விந்து. க்ருஹஸ்தனைப் போல் இவர்கள்

வெளியேற்றமாட்டார்கள். அதனால் அந்த ரேதஸ்
ரேதஸ்ஸை உடம்பிலேயே மேலுக்குச் செல்வதாகப் பெரியோர்கள்
சொல்வர்) இருந்து கொண்டு க்ருஹஸ்தனின் ஆதரவில்
இருப்பார்கள். முநிவரே ! இவ்வாறாக ஸாத்விக முறை
ஒருவாறு சொல்லப்பட்டது. இதே போல் மற்றொரு
வழியைப் பற்றி விவரமாகக் கூறுகிறேன் கேளும்.

### முகம், புஜங்கள், தொடைகளிலிருந்து பிறந்தவர்கள் வேதம் முதலியவற்றில் தகுதி

எவர்கள் எம்பெருமானின் முகம் முதலியவற்றிலிருந்து நான்கு வர்ணங்கள் பிறந்தார்களோ அவர்கள் வேதம் முதலிய நான்கு விஷயங்களிலும் நன்றாகக் கற்கத் தகுதி உடையவர்கள்.

### ஸாங்க்யர் ஸாத்வத வழியை ஏற்றுக் கொள்ளுதல்

மூன்று வேதங்களைக் கற்பவர்களே ஸாங்க்யம் முதலிய மூன்று ஸித்தாந்தங்களிலும் ஸித்தி பெறுகிறார்கள். அவர்களும் விரும்பினால் உத்தமமான ஸாத்வத வழியை ஏற்றுக் கொள்வர்.

### பாஶுபத மதத்தினருக்கு வேத கர்மாநுஷ்டாநமில்லை

முநிவரே ! எவர்கள் பாஶுபதமதத்தை ஏற்றுக் கொள்கிறார்களோ அந்த ப்ராஹ்மணர் முதலியவர்கள் வேதத்தில் சொல்லப்பட்ட கர்மாநுஷ்டாநங்களை ஏற்று நடப்பதில்லை. பாஞ்சராத்ரத்தை ஏற்றுக் கொள்வது போல் வேறு தர்மங்களைச் செய்வதில்லை.

### ஸாங்க்யர்கள் கர்மாநுஷ்டாநம் செய்வதில்லை

ஸாங்க்யர்கள் கர்மாநுஷ்டாநம் செய்யாதவர்கள் என்றும் த்யாநம் ஒன்றிலேயே ஊற்ற முடையவர்களாகச் சொல்லப்படுகிறார்கள்.

### யோகிகளின் கர்மாநுஷ்டாநம்

எவனொருவன் நித்ய கர்மங்களையும் நைமித்திக கர்மங்களையும் அநுஷ்டிப்பவனாகவும், யோகத்தைச் செய்பவனாகவும் இருந்து கொண்டு பக்தி யோகத்தில் ஈடுபட

விருப்பத்தினால் அவன் ப்ரஹ்ம த்யாநத்தில் இருப்பவனாகக் கிடைக்காததைப் பெறவும் கிடைத்ததை வளர்க்கவும் வேதத்தில் சொல்லப்பட்ட நித்ய நைமித்திக கர்மங்களைச் செய்வான். நாரதரே ! இவர்களுக்கு வேதம் முதலியவற்றில் கூறப்பட்ட வழிமுறை கூறப்பட்டது.

### வர்ணாஶ்ரம தர்மங்களின் விவரணம்

வர்ணங்கள் ஆஶ்ரமங்கள் இவற்றின் பிரிவுகள், அவற்றின் தர்மங்கள் இவைகளைச் சொல்கிறேன் கேளும் :—

### நான்கு வர்ணங்கள்

ப்ராஹ்மணன் முதலியவர்கள் நான்கு வர்ணத்தினர் என்று எவர்கள் குறிப்பிடப்பட்டனரோ, அவர்களில் த்விஜர்கள் என்கிற பெயரையுடைய முதல் மூன்று வர்ணத்தினர் வேதத்தைக் கற்பவர். நான்காவதாகச் சொல்லப்பட்ட ஒரு ஜாதியினர் முதல் மூன்று வர்ணத்தினருக்கு ஸேவை செய்ய வேண்டும்.

### யாகம் செய்வித்தல், வேதம் கற்பித்தல், தானம் பெறுதல் இவை ப்ராஹ்மணருக்கு மட்டுமே

பகவானின் முகத்திலிருந்து பிறந்த ப்ராஹ்மணன் என்கிற ஒரு வர்ணத்தினர் மட்டுமே, ப்ராஹ்மணன், க்ஷத்ரியன், வைஶ்யன் என்கிற மூவருக்கும் வேதங்களைக் கற்பிப்பர். ஜீவநத்துக்காகப் பொறாமையில்லாமல் விருப்பப்படி யாகம் செய்விப்பான். மூன்று வர்ணத்தினரிடமிருந்து தானம் ஏற்றுக் கொள்ளலாம். இது வேதத்தில் சிறப்பாகச் சொல்லப்பட்ட முறை.

### ஆயுதங்கள் தாங்குவது க்ஷத்ரிய தர்மம்

க்ஷத்ரியன் என்பவனுக்கு எப்பொழுதும் ஆயுதங்கள் தரித்தல் சிறப்பான தர்மம். ஶாஸ்த்ரத்தை அநுஸந்தித்து ஆபத்திலிருப்பவர்களைக் காப்பதும், மக்களைக் காத்தலும் இவனுடைய கடமை.

## பயிர்த் தொழில் முதலியவை வைஶ்ய தர்மங்கள்

பயிர்த் தொழிலும், பஶுக்களைக் காத்தலும், வ்யாபாரமும், வைஶ்யனுக்குச் சிறப்பான கடமை.

## யாகம் செய்தல், அத்யயநம், தாநம் இவை மூன்று வர்ணத்தினருக்கும்

யாகம் செய்தல், வேதம் கற்றல், தாநம் செய்தல் இவை மூன்று வர்ணத்தினருக்கும் பொதுவானது. இவற்றில் முன் சொன்னது எல்லாம் தர்மத்துக்காகவே. பிறரைத் துன்புறுத்தல் முதலியவைகளை விலக்க வேண்டும்.

## ஸேவை செய்வது ஶூத்ர வர்ணத்தினரின் கடமை ஜீவநத்துக்காகவும் ஆகும்

ஸேவை செய்வது ஶூத்ரனின் கடமை. ஜீவநத்துக்காகவும் அமையும், இதில் ப்ராஹ்மணர்களுக்கு ஸேவை செய்வது சிறந்தது. மற்ற இருவருக்கும் செய்யும் ஸேவை சிறிது குறைந்தது என்று கூறப்பட்டது.

## நால்வருக்கும் பொதுவான தர்மம்

கொல்லாமை, அஸத்யம், கோபமின்மை, தன் மனைவியிடமே பற்றுதல், இரக்கம் இவை நான்கு வர்ணத்தினருக்கும் பொதுவானது என்று குறிக்கப்பட்டது.

## ஆஶ்ரமங்கள் யாருக்கு உத்தமம்

ப்ராஹ்மணனுக்கு நான்கு ஆஶ்ரமங்கள் உத்தமம். க்ஷத்ரியனுக்கு விருப்பம் போல் அமையும். முதல் மூன்று ஆஶ்ரமங்கள் க்ஷத்ரியனுக்கும் வைஶ்யனுக்கும் கட்டாயமான தர்மம்.

## உபநயநம் இரண்டாவது பிறவி

உபநயநத்துக்கு முன் மூன்று வர்ணத்தினருக்கும் வ்ரதங்கள் கிடையாது. ஆசார்யனிடமிருந்து காயத்ரீ உபதேஶம் பெறுவது இரண்டாவது பிறப்பு. இது உத்தமமாகக் கருதப்படுகிறது.

## மூன்றாவது பிறவி

யாகத்தில் தீக்ஷை பெறுதல் மூன்ருவது பிறவியாகக் கருதப்படுகிறது. யாகத்தில் ஈடுபட்டிருக்கும் பெரியோர்களான ப்ராஹ்மணர்கள் யாகத்தின் முடிவில் முறையே வேத அத்யயநத்தில் ஈடுபட்டவர்களாய் இருந்து கொண்டு மூவரும் தேவர்களுக்கு ஸமமாக ஆகிறார்கள். இவ்வாருக வர்ணங்கள் நான்கைப் பற்றிச் சொல்லப்பட்டது. ஆஶ்ரமங்களைப் பற்றியும் சொல்கிறேன், கேளும்.

## உபகுர்வாண ப்ரஹ்மசாரியின் கடமை

ஆசார்யனிடமிருந்து இரண்டாவது பிறவி (**உபநயநம்**) பெற்று, அவருடைய ஸமீபத்திலேயே இருந்து கொண்டு அவருடைய கார்யங்களில் (ஸமித், தர்ப்பம் சேகரித்தல், பசுவைக் காப்பாற்றிப்பால் கறத்தல் முதலியன) ஈடுபட்டு, அவரையே எப்பொழுதும் அண்டியிருந்து, அவரிடம் பக்தி செய்து, அவரைக் கதியாக ஏற்றுக் கொண்டு, எல்லா விஷயங்களையும் அவருக்குத் தெரிவித்துக் கொண்டு அவருடைய ஆஶ்ரமத்துக்கு வெளியிலிருந்து பிக்ஷை எடுப்பதாக இருந்து கொண்டு, வேறு கார்யங்கள் செய்து கொண்டு, ஆசார்யனிடமிருந்து வேதத்தைக் கற்க விரும்புபவனுகவும், அவஸரப்படாமல் திநமும் ஸ்நாநம் செய்பவனுகவும் பொறாமையற்றவனுகவும் இருந்து கொண்டு காலை மாலை ஸந்த்யாவந்தநங்களை வெளியே செய்ய வேண்டும். புலன்களை அடக்கிக் கொண்டும் எல்லா ப்ராணிகளிடமும் இரக்கம் காட்டுபவனாகவும், காலை மாலை இரு வேளைகளிலும் அக்நியில் ஸமிதாதாநம் செய்து கொண்டு உபகுர்வாணன் என்று அழைக்கப்படும் ப்ராஹ்மணன் வேதத்தைக் கற்பதில் ஸித்தி பெறுவான்.

## ப்ரஹ்மசர்யத்தை முடித்து விருப்பப்படி வேறு ஆஶ்ரமங்களை எடுத்துக் கொள்ளுதல்

வேதங்களில் சொல்லப்பட்டபடி ஸ்நாநம் செய்து, வ்ரதங்களைச் செய்து, குருவுக்குத் தக்ஷிணை கொடுத்தவனாய்

ப்ராஜாபத்யம், ஸௌம்யம், ஆக்நேயம், வைஶ்வ
(வ்ரதங்கள் - ப்ராஜாபத்யம், ஸௌம்யம், ஆக்நேயம், வைஶ்வ **தேவம்)** குருவின் அநுமதி பெற்று நான்கு ஆஶ்ரமங்களில் ஒன்றை எடுத்துக் கொள்ள வேண்டும்.

## நைஷ்டிக ப்ரஹ்மசாரியின் தர்மங்கள்

தன்னுடைய ஆஶ்ரமத்தையே விரும்பும் ப்ரஹ்மசாரி தன் ஶரீரம் விழும்வரை கட்டுப்பாட்டுடன் கூடியவனாய், ஆசார்யனுக்கே ஸேவை செய்து கொண்டிருக்கலாம். அந்த ப்ரஹ்மசாரி மேலும் ஜ்ஞாநத்தை விரும்புபவனாக, ஆசார்யனிடமிருந்து மேலான ஜ்ஞாநத்தைப் பெறலாம். இல்லாவிடில் புண்யங்கள் அழியும் என்பது வேதங்களில் கூறப்பட்ட கட்டளை.

## இல்லறம்

உத்தமமான இல்லறம் என்கிற தர்மத்தைக் கடைபிடிக்க விரும்புபவனாகில், ஆசார்யனின் அநுமதி பெற்று ஸ்நாநம் செய்து **(ஸ்நாதக வ்ரதம்)** முறைப்படி ஒரு பெண்ணை ஏற்றுக் கொண்டு அவளுடன் தர்ம கார்யங்களைச் செய்ய வேண்டும். திநமும் **ஸ்வாத்யாயத்தில்** (வேதம் ஓதுதல்) ஈடுபட்டு, தேவர்ஷி பித்ருதர்பணம் போன்றவற்றைச் செய்து கொண்டு ஸத்யத்தையே பேசுபவனாய் (ஸத்யம் - உண்மை மட்டுமல்ல; ப்ரியமாகவும் நன்மை பயப்பதாகவும் இருக்க வேண்டும்) திநமும் விருந்தாளிகளை உபசரித்துக் கொண்டு, ஜீவநத்தை ஆடம்பரமில்லாமல் எளிமையாக நடத்திக் கொண்டு இருத்தல் வேண்டும். காழ்ப்பு (அஸூயை) இல்லாமல் மேலும் பேராசை அற்றவனாகவும், **ஸ்நாதக வ்ரதங்களை** அநுஷ்டித்துக் கொண்டும் ஐந்து வேள்விகளில் ஈடுபாடு உள்ளவனாக இருத்தல் வேண்டும் (ஐந்து வேள்விகள் **- தேவயஜ்ஞம், ருஷி யஜ்ஞம், பித்ரு யஜ்ஞம், பூத யஜ்ஞம், மநுஷ்ய யஜ்ஞம்).**

## பாஞ்சராத்ர தர்மத்தின் அவஶ்யம்

ஐந்து கால முறைகளை அநுஷ்டித்துக் கொண்டு, இரக்கம், பொறுமை, ஸந்தோஷம் (ப்ராஹ்மணனுக்குப்

போதும் என்ற மநம்) இவற்றுடன் இருத்தல் வேண்டும். கோபமின்மை, ஸத்யம், கூச்சம், கல்வி, ஶௌசம்த்தம், திருடாமை, மந அடக்கம், இவற்றைக் காப்பவனுகவும், ஶக்திக்கு மீறி உடலே வருத்தாமலும், விவேகத்துடன் ஶாஸ்த்ரங்களில் கூறப்பட்ட ஶௌபகார்யங்களைச் செய்பவனாகவும், மநத்தாலும் செயலாலும் எல்லா வேள்விகளைச் செய்ய வேண்டும்.

## பலனில் விருப்பம் இல்லாமல் கர்மங்களைச் செய்யும் க்ருஹஸ்தனுக்கு மோக்ஷம் கிட்டும்

பேராசை இல்லாத நல்ல ஜ்ஞாநத்தோடு, அஹங்காரம், லோபம் இவற்றை விட்டு நல்ல ஆலோசனே, முயற்சியுடன் மறுபிறப்பு அற்ற நிலையை அடைவான். வேதங்களிலும் தர்ம ஶாஸ்த்ரங்களிலும் விதிக்கப்பட்ட க்ரியைகளைச் செய்து கொண்டும், நித்ய கர்மம், நைமித்ய கர்மம் இவற்றில் ஈடுபட்டும் உள்ள க்ருஹஸ்தன் நல்ல ஜ்ஞாநத்தில் விருப்பம் உள்ளவன், உத்தமமான ஜ்ஞாநத்தைப் பெற்று, நல்ல வேதாந்த ஜ்ஞாநம் கிடைக்கப் பெற்றவனாய் மஹாவிஷ்ணுவின் ஸ்தாநத்தை அடைகிறுன்.

## ப்ரஹ்மலோகம் அடைதல்

விதிக்கப்பட்ட தர்மங்களிலேயே எப்பொழுதும் ஈடுபட்டிருக்கும் இவன் ப்ரஹ்மலோகத்தில் போற்றி வரவேற்கப்படுவான்.

## வாநப்ரஸ்தாஶ்ரம தர்மங்கள்

இல்லறம் ஏற்ற பிறகோ அதற்கு முன்போ வாநப்ரஸ்தம் என்கிற ஆஶ்ரமத்தை ஏற்றுக் கொள்ளலாம். க்ருஹஸ்தனாக இருந்தால் உடலில் சுருங்கிய நிலையையும், நரையையும், புத்ரர்களேயும், பேரன்களேயும், எப்பொழுது காண்பானோ, உடனே வநத்துக்குச் சென்று விடலாம். ஶாஸ்த்ரங்களில் விலக்கப்பட்ட ஆசாரங்களே விட்டு, காட்டில் கிடைக்கும் உணவுப் பொருள்களே உட்கொண்டு வெளியிலும் உள்ளேயும் அக்நியில் ஹோமம் செய்து கொண்டும் யாகங்களைச் செய்து

கொண்டும் ஒவ்வொரு வருடமும் மூன்று தவங்களை முறைப்படி செய்தல் வேண்டும் (உள்ளே அக்நி என்பதற்கு **ப்ராணாய ஸ்வாஹா** முதல் ஐந்து தடவை ப்ரஸாதத்தை உட்கொள்ளுதல் என்று கருத்து. (இதற்கு **ப்ராணாக்நி ஹோத்ரம்** என்று பெயருண்டு). வநத்திலிருப்பவன் பலனில் பற்றில்லாத எண்ணத்துடன் ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட கர்மங்களைச் செய்து கொண்டு வ்ரதங்களை அநுஷ்டித்து அந்த அந்தத்தீக்ஷைகளை மந அடக்கத்துடன் செய்து கொண்டும், ஆஹாரங்களைக் குறைத்துக் கொண்டும், மநத் தூய்மையுடையவனாய், தத்வங்களை அறிவதில் ஆசையுடன், நல்ல தத்வ ஜ்ஞாநத்தைப் பெற்று விஷ்ணுவின் ஸ்தாநத்தை அடைவான்.

### ஆசையுள்ளவர்களுக்கும் ப்ரஹ்மலோக ப்ராப்தி

பலனில் விருப்பமற்றவனாய் தர்ம கார்யங்கள் செய்து கொண்டு மஹாப்ரஸ்தாநத்தைத் தொடங்கி ஶோகமோ, பயமோ அற்றவனாய் இருக்கும் வாநப்ரஸ்தன் ஸ்ரீ வைகுண்டத்தில் வரவேற்கப்படுவான். **மஹா ப்ரஸ்தாநம்— ப்ரஸ்தாநம்** என்பதன் பொருள் ப்ரயாணம். இதில் **மஹா** சேர்ந்ததால் நீண்ட நெடும் தூர ப்ரயாணம் - அதாவது உணவோ, நீரோ கூட அருந்தாமல் போய்க் கொண்டே இருந்தால் ஶரீரம் விழும்பொழுது மோக்ஷம் கிடைக்கும். இதைப் பஞ்ச பாண்டவர்கள் செய்ததைப் பாரதத்தில் காணலாம்.

### துறவியின் தர்மங்கள்

**ப்ரஹ்மசர்யம்** இல்லறம் இவைகளிலிருந்தும் அல்லது முதல் ஆஶ்ரமத்திலிருந்தும் காவி வஸ்த்ரமணிந்து இரண்டு ஆஶ்ரமங்களுக்குப் பிறகோ, ஒன்றுக்குப் பிறகோ துறவறம் ஏற்றுக் கொள்ளலாம். **ப்ராஜாபத்ய இஷ்டி**யை எல்லா வேதங்களையும் சொல்லி தக்ஷிணைகள் கொடுத்து குருவிடம் அநுமதி பெற்று, கர்மாநுஷ்டாநத்தில் களைத்தவராய் பெரிய வ்ரதத்தை ஏற்று மூன்று அக்நிகளை வளர்த்து நான்காவது ஆஶ்ரமத்தை ஏற்றுக் கொள்வான். எல்லா வகையான தீயச்

செயல்களிலிருந்து விலகியவனாய், ஶப்தாதி விஷயங்களில் (புலன்களில்) பற்றில்லாதவனாய், தன்னுடைய ஆத்மாவுக்கு உத்தமமான கதியைத் தேடிக் கொண்டும் (விரும்பியும்), ஸூக்ஷ்மமான பரமாத்மாவைத் தேடிக் கொண்டும், எப்பொழுதும் த்யாநத்திலேயே இருந்து கொண்டு வேதாந்த ஜ்ஞாநத்தில் ஈடுபட்டு எப்பொழுதும் பக்தியிலேயே இருப்பான். கடுமையான வ்ரதங்களை ஏற்று, ஒரு கையை இழைப்புளியால் சீவியும், மற்றொன்றைச் சந்தநத்தால் தெளித்துக் கொண்டும், ஆகாஶம் போலும், வாயு போலும் அசைவின்றி பூமியிலேயே அசையாத மநத்தை உடையவனாய், அந்த ஸந்யாஸி, நீரைப் போல் குளிர்ந்த மநமுடையவனாய், எப்பொழுதும் அக்நியால் ஶுத்தமாகவும் கங்கையின் மடு போல் கலக்கமற்றவனாய் ஶூந்யமான (குடியில்லாத) வீடு போல் உடலை உடையவனாய், எம்பெருமானை நினைத்துக் கொண்டும், வேறு எந்தப் பொருளைப் பற்றியும் நினைவற்றவனாய், மனதில் ஸாத்வத ஶாஸ்த்ரங்களை நினைத்துக் கொண்டும் ஶுத்தமான மநத்துடன் ஸந்துஷ்டியுடன் இருக்க வேண்டும். எல்லா ப்ராணிகளுக்கும் அபயம் கொடுப்பவனாகவும், அவ்வாறே எல்லோராலும் அபயம் கொடுக்கப்பட்டவனாகவும் வேதம் சொல்லிக் கொண்டு யோகத்தில் உட்கார்ந்து இருக்க வேண்டும். யோகத்திலிருந்து கொண்டு வேதத்தைச் சொல்வதில் ஈடுபட வேண்டும். யாருடனும் எதையும் பேசாமலும், பேச வேண்டிய ஸமயத்திலும் கூடப் பேசாமல் இருக்க வேண்டும். எல்லா ப்ராணிகளிடம் ஸமநிலையில் இருந்து கொண்டு, தாய் போலவும், தந்தை போலவும் இருந்து, மனதில் நல்ல ஜ்ஞாநம் உடையவனாய் ஆத்ம ஸ்வரூபத்திலேயே களித்திருப்பவனாய், எல்லா ப்ராணிகளிடம் அன்பு காட்டுபவனாகவும், ஜ்ஞாநம் என்கிற மாளிகை மீது ஏறியவனாகவும், எக்காலத்திலும் எவ்விதத்திலும் ஜ்ஞாநங்களிடமிருந்து விலகினவனாகவும், எல்லாப் பொருள்களையும் மலை மீதிருப்பவன் பூமியிலிருப்பதைப் பார்ப்பது போல் பார்த்துக்கொண்டும்,

சிலரால் ஊமை என்று பேசப்பட்டவனும், வேறு சிலரால் ஜ்ஞாநி என்று விரும்பப்பட்டவனும், சிலரால் யாரோ ஒருவன் என்று சொல்லப்பட்ட போதிலும் சிலரால் இவர் ஒரு பயங்கரவாதியாக இருக்கலாம் என்று சொல்லப்பட்ட போதிலும், மகிழ்ச்சியுடன் கட்டித் தழுவப் பட்ட போதிலும் (அவர்களிடம்) அசட்டை செய்வதும், கருணை காட்டுபவனும், அன்பு காட்டுபவனாகவும், பகுத்தறிவு, ஜ்ஞாநம் மகிழ்ச்சி இவற்றாலும் எப்பொழுதும் மக்களால் சூழப்பட்டவனுகவும், பிக்ஷை எடுத்துச் சாப்பிடுபவனுகவும், போதும் என்ற எண்ணம் நிறைந்தும், இப்படிப்பட்ட சில குணங்களுடன் கூடியவனாய் இருக்க வேண்டும்.

## ஸந்யாஸிகளுக்கு மோக்ஷம்

சுடர் தட்டிய தீப ஒளிபோல் இருப்பவனாய், ஸந்யாஸி ஆகிய இவன் த்யாநத்திலேயே ஈடுபட்டவனாய் இருந்து கொண்டு, ஶரீரத்தை தஹநம் முதலிய ஸம்ஸ்காரங்கள் செய்யாமல் இருப்பதன் மூலம், விஷ்ணுவின் ஸ்தாநமான ஸ்ரீ வைகுண்டத்தை அடைவான். (முன்பு ப்ராணி என்று சொல்லப்பட்டதற்கு மனிதன் உள்பட எல்லா உயிரினமும் என்று பொருளாகும்).

## அத்யாயத்தின் பொருள் சுருக்கம்

இவ்வாறு அதனதன் சிறப்பு தர்மங்களோடு கூடிய இந்த வர்ணங்களும் ஆஶ்ரமங்களும் அவற்றினுடைய தர்மங்களும் சுருக்கமாகச் சொல்லப்பட்டன. மேலும் என்ன கேட்க விரும்புகிறீர் ?

இவ்வாறாக ஸ்ரீ பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்**
**தகுதியுள்ளவர்களை வர்ணிக்கும்**
**15வது அத்யாயம் முற்றிற்று.**

### வர்ணங்கள் பிறந்த வரலாறு என்கிற

## 16வது அத்யாயம்

### ரக்ஷையும் அதன் அதிகாரிகளும்

நாரதர் :— தேவர்களின் பகைவர்களான அஸுரர்களை மாய்த்தவரும், ஸர்வஜ்ஞரும், எருதுக் கொடியோனுமாகிய பகவானே ! காரணங்களுடன் கூடியதும், நாஶத்துடன் கூடியதுமான ப்ரமாணத்தின் அர்த்தங்களை நாம் கேட்டோம். இவற்றுக்கெல்லாம் காவந்து (ரக்ஷை) எது? காத்தலைச் செய்யும் உரிமையுடையவன் யார்? அப்பனே ! இந்த இரண்டையும் சற்று விரிவாகத் தேவரீர் சொல்ல வேண்டும்.

### இதற்குப் பதில் சொல்ல ஆரம்பம்

அஹிர்புத்ந்யர் :— எம்பெருமானையே மநத்தில் வைத்திருக்கும் தேவர்களுக்கு (பூ தேவர்களுக்கும் ஸ்வர் தேவர்களுக்கும்) காவந்து ஸுதர்ஶந உருவத்தில் தான் உள்ளது. விஷ்ணுவின் ஸங்கல்பமான அவரைத் தவிர வேறு எந்தக் காவந்து செய்ய முடியும்? விஷ்ணுவின் ஶக்தியின் கோடியில் ஒரு அம்ஶமாகப் பிறந்த எந்த ஒரு உத்தமமான க்ரியா ஶக்தி உண்டோ ஸுதர்ஶநம் என்கிற பெயருடைய அந்த தேவி எம்பெருமானைச் சேர்ந்த எல்லாக் கார்யங்களையும் செய்ய வல்லது. எல்லா பொருள்களிலிருந்து உண்டாகும் ஸாமர்த்யம் என்பது கூட அந்த ஶக்தி ஸ்வரூபமே. தத்வங்களும், அதிலிருந்து பிறந்த பொருள்களும், சேதநர்கள், அசேதநர்கள் (உயிருள்ளவை, உயிரற்றவை) பலவகை ப்ரமாணங்களுக்கும் பாவம், அபாவம் என்கிற இரண்டுக்கும், தர்மம், அர்த்தம், காமம் இவற்றுக்கும் மோக்ஷத்துக்கும் மூன்று வகை பந்தங்களுக்கும் (புண்யம், பாபம், காம - க்ரோத - லோபம் சேர்ந்து மூன்றுவகை பந்தங்கள்) எதர்கெல்லாம் தன் தன் வேலையைச் செய்வதில் திறமை உள்ளதோ அவையெல்லாம் ஸுதர்ஶநத்தின் வடிவமே.

### அஸ்த்ரங்கள் ஆயுதங்கள் இவைகளால் ரக்ஷை

ஶஸ்த்ரங்கள் (ஆயுதங்கள்) அஸ்த்ரங்கள் உருவத்திலிருப்பதுமான விஷ்ணுவின் ஸங்கல்பத்தின் மாறுபாடுகள் உமக்குச் சொல்லப்பட்டன. எதைக் கொண்டு உலகத்துக்கு அதிபதியாகிய பகவான் ஜநங்களுக்கெல்லாம் ஸந்தோஷத்தைத் தருபவனாக அவதாரம் செய்தும் எல்லா வற்றிலும் உள்ளுக்குள் இருப்பவனாக நுழைந்தும், உயிரினங்களையெல்லாம் ஶாஶ்வதமாக நடத்தி வருகிறார்.

### மந்த்ரங்களின் கூட்டங்களால் ரக்ஷை

பலவகையான மந்த்ரங்களின் உருவமாக உள்ள யந்த்ரங்களுடைய பல வகைகளில் விசித்ரமாகக் காணப்படுவதும், வேதங்கள் - ஶாஸ்த்ரங்கள் இவ்விரண்டிலிருந்தும் வெளிப்படுகின்றதும், பல வகையான பொருள்களை உற்பத்தி செய்வதும், ஶுத்த ஜ்ஞாநத்தோடு கூடிய விஷ்ணுவினுடைய மற்றொரு க்ரியா ஶக்தி என்பதும் சொல்லப்பட்டது.

### மந்த்ர மூலமான ரக்ஷையில் ப்ராஹ்மணர்களுக்கே அதிகாரம்

ஸகல தத்வார்த்தங்களின் ஸாரத்தை அறிந்தவனும், ஸகல கல்விகளில் தேர்ச்சி பெற்றவனும், நித்ய நைமித்திக கார்யங்களைத் தவறாமல் செய்பவனும், தூயவர்களான நற்குடியில் பிறந்தவர்களுக்கு ப்ரியமானவனும், மூன்றிலும் ஶுத்தமானவனும் (உள்ளம், உரை, செயல்) ஆறு கர்மாக்களின் செய்முறையை அறிந்தவனும் (வேதம் கற்றல், கற்பித்தல், யாகம் செய்தல் - செய்வித்தல், தாநம் கொடுத்தல்-பெறுதல் இந்த ஆறும் ப்ராஹ்மணனுக்கே உறியவை) ப்ரப்ரஹ்மமான எம்பெருமானின் வயிற்றுக்குள் இருந்தவனாய், தன் மனைவியிடம் மட்டுமே ஈடுபடுபவனாய், விஷ்ணுவின் மேலான மந்த்ர ஸ்வரூபமான க்ரியா ஶக்தியைச் செய்யத் தகுதி உடையவனாவான்.

### அரசன் உதவியின்றி ரக்ஷை செய்யமுடியாது

ப்ராஹ்மணன் பிறர் உதவியின் மூலம் கார்யம் செய்வதில் தகுதி இல்லாதவனாகிறான். ஆனால் அரசனை

உதவிக்கு வைத்துக் கொண்டு உலகத்தின் க்ஷேமத்துக்காக அந்த ஶக்தியைக் கொண்டு செயல்படலாம்.

### அரசனின் புகழ்

ஏனென்றால் அரசன் மேலான ஜீவன். ஸகல தேவஸ்வரூபன். ஆட்சி செய்பவன். விஷ்ணுவின் க்ரியா ஶக்திக்கு இருப்பிடம். பகவத் ஸ்வரூபன். ஏனெனில் பகவான் ஆதியில் தன் ஶிரஸ்ஸிலிருந்து க்ஷத்ரியனைப் படைத்தார். அதனால் இவன் பட்டாபிஷேகம் செய்யப்பட்டு ஸகல ஜநங்களுக்கும் மேலானவனாக இருக்கிறான். வேதங்களிலும் ஶாஸ்த்ரங்களிலும், ப்ராஹ்மணனைப் போல் இரண்டு மடங்கு ஶக்தியுடையவன் என்று போற்றப்படுகிறான்.

### அரசனின் பகைவர்களுக்கு அறியாமை

எவன் அறியாமையினால் அரசனைப் பகைக்கிறானோ, அந்த மூடன் ஹரியைப் பகைத்தவன் ஆகிறான். எவன் அறியாமையால் ஹரியைப் பகைக்கிறானோ, அந்த மனிதன் மஹாலக்ஷ்மியைப் பகைத்தவனாகிறான். லக்ஷ்மியைப் பகைக்கும் அந்த மதிகேடன் ஸகலவித தர்ம கார்யங்களிலும் ஸித்தி பெறுவதில்லை. அவன் எந்த உலகத்துக்கும் செல்லத் தகாதவன் ஆகி ஸகல தேவர்களாலும் ஒதுக்கப்பட்டவனாய், எந்த விதமான ஆதாரமும் இல்லாத காரிருளில் பல காலம் போய்ச் சேருகிறான்.

### ஆகையால் அரசன் மதிக்கத்தகுந்தவன்

இந்த உலகத்துக்கும் மேல் உலகங்களுக்கும் உதவியாக இருக்கும் லக்ஷ்மியைப் பெற விரும்புபவன் என்ற தெளிந்த ஜ்ஞானம் உடையவனாய் ஸகல ஜநங்களுக்கும் தெய்வம் போன்ற அரசன் மதித்து நடத்தப்பட வேண்டும்.

### ப்ராஹ்மண க்ஷத்ரியர்களிடம் லக்ஷ்மி வஸிப்பதில்லை

மிகவும் மென்மையான லக்ஷ்மி வெறும் ப்ராஹ்மணனிடம் மட்டும் வஸிப்பதில்லை. க்ருபையால்

வெறும் க்ஷத்ரியனிடம் பயந்தவளாய் அங்கு இருக்க விரும்புவதில்லை.

### ஒன்றாக இணைந்த அவர்களிடம் வஸிக்கிருள்

அக்நியும், சந்த்ரனும் சேர்ந்த உருவம் போன்ற ஒருவரோடு ஒருவர் இணைந்த அந்தணன், அரசன் இவ்விருவரிடமே, கோடையில் குளிர்ச்சியான குளத்தில் போல மிகவும் ப்ரீதியுடன் வஸிக்கிருள்.

### அதற்குக் காரணம்

ஏனெனில், அவ்விரு தேஜஸ்விகளும் உலகத்தின் நல்வாழ்க்கையைக் காக்கின்றனர். விஷ்ணுவினுடைய க்ரியா வடிவமான எல்லா ஶக்தியும் அவ்விருவரிடமே நிலைத்திருக்கிறது.

### இந்த விஷயத்தில் நேராகவும் எதிர் மறையாகவும் த்ருஷ்டாந்தம் (உவமை) கூறுதல்

ஒரு பெரிய நதியைச் சிறிய குளம் எவ்வாறு தாங்கமுடியாதோ அவ்விதமே ஶக்தியற்ற ஒரு மனிதன் விஷ்ணுவின் க்ரியாஶக்தியைத்தாங்க முடியாது. ஶக்தி வாய்ந்த ஒரு கடல் எவ்வாறு அந்த நதியை ஏற்றுக் கொள்கிறதோ, அவ்வாறே ப்ராஹ்மணனோடு இணைந்த அரசன் அந்த விஷ்ணுவின் ஶக்தியை ஏற்கத் தகுந்தவனுகிறான். ஒரு சிறிய குளம் எப்படி அந்தப் பெரிய நதியின் வீழ்ச்சியால் உடைக்கப்படுமோ, அதுபோல எந்தப் பாதுகாப்புடன் இருந்தாலும் ஒருவன் மட்டும் தனியாக அந்த க்ரியாஶக்திக்கு ஈடு கொடுக்க முடியாது.

### க்ரியாஶக்தியின் எல்லா ஜநங்களுக்கும் ப்ரயோஜநம்

ஸமுத்ரத்துக்குச் செல்கின்ற ஒரு பெரிய நதி, சிறிய குளங்களை எல்லாம் வாய்க்கால்கள் மூலம் எவ்வாறு நிரப்புகிறதோ, அவ்வாறே ஒரு பெரிய அரசனால் ப்ரயோகிக்கப்படும்பொழுது, அந்த க்ரியாஶக்தியால் நாடுகளில் அத்தனை மக்களும் செல்வங்கள் நிறைந்தவர்களாக ஆவார்கள்.

## சக்ரவர்த்திகளின் தாரதம்யம் (ஏற்றத் தாழ்வு)

சக்ரவர்த்தியாக உள்ள அரசன் **க்ரியா ஶக்தியின்** முதல் பாகத்திலும், அவனுக்குட்பட்ட மண்டலங்களுக்கு அதிகாரி இரண்டாவது அம்ஶத்திலும், **விஷயேஶ்வரன்** (மாநிலத்தின் அதிகாரி) மூன்றாவது பாகத்திலும் செயல்படத் தகுதியுள்ளவர்கள். ப்ரதாந மந்த்ரியோ, ப்ராஹ்மணனோ எவன் பல மக்களைக்காக்கிறானோ அந்த ஒரு தனி மனிதன் இந்த **க்ரியாஶக்தியை** ஒரு தனி மனிதனுக்காகச் செயல்படுத்த முடியாது. **க்ரியாஶக்தியின்** அதிகாரம் உமக்குச் சொல்லப்பட்டது. இந்த ஶக்தியின் ஸ்வரூபத்தை நான் சொல்கிறேன்.

### பொதுவாக ஶக்தி இரண்டு வகை

விஷ்ணுவின் ஶக்தியின் கோடியிலும் மிகச் சிறிய பாகத்திலிருந்து காரணம் கார்யம் என்கிற இரண்டு வகை வெளிப்பாடுகள் இருக்கின்றன. காரணம் என்பது விஷ்ணுவின் ஸங்கல்பம், அதற்கு **ஸுதர்ஶநம்** என்று பெயர். **இந்த க்ரியா ஶக்தி** என்கிற தேவீ, **ஸாமர்த்யம், யோகம், பாரமேஷ்ட்யம், மஹாதேஜஸ், மாயா யோகம்** என்று இவ்விதமான சொற்களால் செயலில் ஸாமர்த்யமான அந்த விஷ்ணுவின் ஸங்கல்பம் சொல்லப்படுகிறது.

### கார்யத்தின் வெளிப்பாடு பூதியின் அம்ஶம்

கார்யம் என்று எந்த ஶக்தியின் வெளிப்பாடு உள்ளதோ அது **பூதி** என்று சொல்லப்படுகிறது. அதுவே ஶுத்தம் என்றும் ஶுத்தமற்றது என்றும் முன்பே சொல்லப்பட்டது. அக்நியின் ஜ்வாலைபோல விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் செயல்படுகிறது. **நாராயணன் ஒரே தெய்வம்.** அவருடைய உள்ளத்தை அநுஸரித்து இந்த **க்ரியா ஶக்தி** உள்ளது. அந்த தேவியின் - **க்ரியாஶக்தியின்** மந்த்ரவடிவான ஸ்வரூபத்தைச் சொல்கிறேன், கேளும்.

### க்ரியாஶக்தியின் நாதவடிவம்

அந்த **க்ரியாஶக்தி** வெளிப்படும் பொழுது **நாதம்** என்கிற வடிவத்தைப் பெறுகிறது.

### நாதத்தின் ஒலி வர்ணனை

அந்த உயர்ந்த நாதம் பெரிய மணியின் ஒலிக்கு ஸமாநம் என்று தெரிந்து கொள்ளும்.

### அது யோகிகளுக்கே ப்ரத்யக்ஷம்

அந்த நாதம் உத்தமர்களான யோகிகளால் தங்கள் மனத்துக்குள் நேராக உணரப் படுகிறது.

### சில இடங்களில் நீர்க்குமிழி உருவமுடையது

அது கடலில் ஒரு நீர்க்குமிழி போல் சில இடங்களில் மட்டும் ப்ரகாஶத்தைப் பெறும். அந்த நாதமும் தொடர்ச்சியான போக்கினால் **பிந்து** என்று சொல்லப்படுகிறது.

### பிந்துவின் இருவகை

அந்த **பிந்து - நாமம், நாமி** என்கிற பெயர்களோடு இரண்டாகப் பிரிகிறது.

### நாமம் – ஶப்த ப்ரஹ்மமாக வெளிப்பாடு

அவற்றில் **நாமத்தின்** வெளிப்பாட்டைப் பெற்று ஶப்த ப்ரஹ்மம் உண்டாகிறது.

### நாமியின் பூதி உருவம்

**நாமியின்** தோற்றத்தைப் பெற்று முன் சொன்ன பூதி உண்டாகிறது.

### வர்ணத்தின் உத்பத்தியைப் பற்றி உரை

முநிவரே! இப்பொழுது மந்த்ரத்தின் மார்கத்தில் வரும் நாமத்தின் தோற்றம் சொல்கிறேன் கேளும். **பிந்து** என்கிற அந்த ஶக்தி தன் இச்சையினால் **நாமம்** என்கிற வடிவத்தைப் பெறுகிறது. அந்த **பிந்து** அக்ஷரங்களில்லாமல் இருந்த போதிலும் இரண்டாவது இல்லை என்கிறபடி ஒரே வடிவமாக இருக்கிறது.

## பிந்துவின் இரண்டு வகைகள்

அது **ஸ்வரம்** என்றும் **வ்யஜ்ஞநம்** என்றும் இரண்டு வகையாக நிற்கிறது. இந்த **பிந்து** உருவத்திலிருக்கும் ஶக்தியின் விவரங்களை மேலும் சொல்கிறேன், கேளும். ஶப்தங்களின் படைப்பு என்று உத்தமமான இந்த ஶக்தி தோற்றமளிக்கிறது. ஒரு பொருள் பல பொருள்களை உடையது என்கிற விசித்ரமான நிலையிலிருந்து கொண்டு பலவகை அக்ஷரங்கள் என்கிற உருவத்தைப் பெற்றதாகவும் இருக்கிறது. சந்த்ரனை போன்ற லக்ஷ்மியின் ஒளிவடிவமான உருவம் **ஸ்வரம்** என்றும், **வ்யஜ்ஞநம்** என்றும் மாறுதலைப் பெறுகிறது.

### 'அ' காரம் வெளிப்பாடு

அ என்பது போன்ற வெளிப்பாடு **அநுத்தரம்** என்று சொல்லப்படுகிறது.

### இதுவே சொற்களாகும்

இது ஒன்றே பலவகையான உருவங்களைக் கொண்டு எல்லா சொற்களாக விளங்குகிறது.

### 'இர்' 'உர்' என்கிற வெளிப்பாடு

அதுவே தன் விருப்பத்தினால் **இர்** என்றும், வெளிப்பாட்டினால் **உர்** என்றும் கருதப்படுகிறது.

### மூன்று எழுத்துக்களிடமிருந்து மற்ற ஸ்வரங்கள்

இந்த மூன்று எழுத்துக்களே மற்ற ஸ்வரங்களை உண்டு பண்ணுகின்றன.

### அவை நீண்ட ஒலி பெறுதல் (நெடில்)

தந்நிகரற்ற அந்த ஆநந்தம் **ஆ** என்கிற தன்மையைப் பெறுகிறது. **இர்** என்கிற ஸங்கல்பத்தால் அந்த **ஈஶாநன்** (எம்பெருமான்) **ஈ** என்கிற தன்மையைப் பெறுகிறது. **உர்** வெளிப்படுத்திக் கொண்டு ஊந வடிவில் இருந்து கொண்டு **ஊ** என்கிற தன்மையைப் பெறுகிறது.

## ஏ யின் உற்பத்தி

தந்நிகரற்ற அந்த ஸங்கல்பம் ஏ காரமாக அமைகிறது. அதுவே மீண்டும் தந்நிகரற்றதாய் ஐ என்கிற தன்மையைப் பெறுகிறது. தந்நிகரற்ற எம்பெருமானின் ஸங்கல்பத்தினால் ஓ என்கிற எழுத்து பெறுகிறது. மீண்டும் சிறந்ததாய் ஔ என்கிற தன்மையைப் பெறுகிறது. **ஸந்தி** (இணைப்பு) உருவமான இவைகள் நான்கு **ஸந்த்யக்ஷரம்** (இணைப்பு உயிரெழுத்து) என்று கூறப்படுகிறது.

## அவற்றுக்கு உறுப்பொருள் தோன்றுதல்

உத்தமமான ஸங்கல்பத்தின் சேர்க்கையால் வளர்ந்து **'ஏ'** என்று கருதப்படுகிறது. மேலும் தந்நிகரற்றதாய் சேர்க்கையால் **ஐஶ்வர்யம் உடையது** என்கையால் ஐ என்கிற நிலையைப் பெறுகிறது. எம்பெருமான் எல்லா இடங்களிலும் கோர்த்துக் கொண்டு இருப்பதால் ஓ என்கிற தன்மையைப் பெறுகிறது. (நெய்யும் பொழுது நீண்ட நூல்கள் ஒரு பக்கம் குறுக்கு நூல்கள் உள்ளே பாய்ந்து மேலும் கீழுமாகக் கோர்த்துக் கொண்டு போகும். இந்த நிலைக்கு **ஓத:** என்று பெயர். இதனால் ஓ தன்மை பெறுகிறது). அதே ஸங்கல்பம் எப்பொழுதும் **ஔர்ஜிதத்தால்** (ஊர்ஜிதமாக - த்ருடமாக இருப்பதால்) ஔ என்கிற தன்மையைப் பெறுகிறது.

## 'ரு' 'ஸ்ரு' எழுத்துக்கள் தோன்றுதல்

இந்த இரண்டு மூன்றெழுத்துக்களின் சேர்க்கை **(அ இ உ)** வளர்ச்சியாக இருப்பதால் ரு என்பதாக ஞாநிகளால் சொல்லப்பட்டது. **அ ல** என்பதன் வடிவமாக **ல்ரு** தன்மை பெறுகிறது. மறுபடியும் தந்நிகரற்றதாய் **ப்ல** என்றாகிறது. இவ்விதம் 14 எழுத்துக்கள் உருவத்தை வெளிப்படுத்தி எம்பெருமானின் அநாதியான **குண்டலிநீ ஶக்தி** நடிகை போல் வளர்கிறது. இதன் இரண்டு வடிவங்கள் ஸூக்ஷ்மமாய் படைப்பு ஒடுக்கலுக்குக் காரணமாகிறது. விவரிக்க முடியாத பெரிய **ஸத்தா** என்று சொல்லப்பட்ட **க்ரியா ஶக்தி** முறையே சொற்கள் என்கிற உருவத்தில் மாற விரும்பி, **ஸ்ருஷ்டி** என்கிற

தன்மையைப் பெற்றது. ஸ்ருஷ்டி என்பது ஸர்கம், விஸர்கம் என்பது விஸர்ஜநம் விட்டுவிடுதல்.

### நாபியில் குண்டலிநியின் பார்வை

இத்தகைய ஸம்ஸ்காரங்களால் மூலாதாரத்திலிருந்து வெளிப்பட்டு ஶாந்தமானது எந்தவித ஒட்டுதல் இல்லாமல் ஒட்டும்படி தந்நிகரற்றதாய்ச் செய்து கொண்டு, பார்வை, பார்க்கப்படும் பொருள் என்கிற உருவத்தைப் பெற்று சொல் பொருள் என்கிற மாறுதலே அடைந்து அந்த க்ரியா ஶக்தி எம்பெருமானின் நாபியில் பெயர்ச் சொற்களேப் பார்த்து போகத்தினால் தன்னேப் பார்க்கக் கூடிய தன்மையைப் பெற்றதாய் விஷ்ணுவின் ஶக்தி மந்த்ரங்களுக்குத் தாயாக இருந்து தகுதியின் குறைபாட்டைப் பெறுகிறது. இதை யோகிகள் தங்கள் த்யாநத்தினால் பெறுகிறுர்கள்.

### ஹ்ருதய கமலத்தில் விரிவை அடைதல்

க்ரியை வடிவாக உள்ள அந்த லக்ஷ்மி வளர்ச்சியடையும் நோக்கத்துடன், பொருள்களேப் புடம் போட்டு ஶுத்தப்படுத்தி, பொருள் உடையது என்கிற மாறுதலேப் பாடிக் கொண்டிருக்கும் பெண் வண்டுகள் போல் ஹ்ருதய கமலத்தில் விரிவை அடைகிறுள். பொருள் சொல் என்கிற தன்மையோடு அசைந்து கொண்டே இருக்கக் கூடிய க்ரியா ஸ்வரூபமாக உள்ளது அந்த ஶக்தி. அப்பொழுது பொருள்களுக்குள் இருக்கும் எல்லா ஸம்ஸ்காரங்கள் நினேவுகளே வளர்க்கின்றன.

### தொண்டையில் விஸர்கத்தின் பரிணாமம்

இத்தகைய க்ரியா ஶக்தி ஒவ்வொரு பொருளேத் தெரிவிக்க விரும்பி, ப்ரகாஶம் இல்லாத - கூடஸ்தமான ஶப்தம் என்கிற உருவத்தைப் பெறுகிறது. தந்நிகரற்ற ஸங்கல்பத்தினால் தொடப்பட்டது. 14 வகையான அந்த ஶக்தி கண்டத்திலிருந்து (தொண்டை) விஸர்கமாகிறது. அந்த ஸங்கல்பத்தை ஆதாரமாகக் கொண்டு ஹ என்கிற வடிவத்தைப் பெறுகிறது. அது பகவத் ஸங்கல்பமாக ஆகி

(க் எழுத்து) வ்யஜ்ஞநம் கூடியதாய் மீண்டும் தந்நிகரற்ற ஸங்கல்பமாக இருந்து கொண்டு பிந்துவில் வந்து நிற்கிறது. **பிந்து ஸம்ஹாரம்** என்று கூறப்படுகிறது. விஸர்கம் **ஸ்ருஷ்டி** எனப்படும். இந்த ஸ்ருஷ்டி, ஸம்ஹாரம் இரண்டும் சுருக்கமாகச் சொல்லப்பட்டன. முநிவரே ! ஸ்வரம் என்கிற உயிரெழுத்துக்களுடைய பலவகை வரிசைகளைக் கேளும்.

## ஸ்வரங்களின் வித்யாஸம்

முன்னால் சொல்லப்பட்ட மூன்று எழுத்துக்கள் ஸ்வரங்களுக்குக் கூடஸ்தமாகச் சொல்லப்பட்டன. ஒவ்வொன்றும் 18 வகையாக யோகிகளின் ஸித்தாந்தம் கூறுகிறது. ரு ல்ரு என்ற எழுத்துக்களுக்கும், வ்யஜ்ஞநங்களுக்கும் எவை கூடம் என்று சொல்லப்பட்டனவோ, அவற்றின் முதல் 18 வகையும் இரண்டாவது 12 வகையும் எனப்படும் ஐந்து ஸ்வரங்களுக்கு 84 வகைகள் சொல்லப்பட்டன. எந்த நான்கு எழுத்துக்கள் கூடஸ்தங்களாக உள்ளனவோ, அவைகளுக்கும் இவ்வாறு மாறுபாடுகள் உண்டு. 300 ஏகாரங்களும் 24 எழுத்துக்களும் இவ்வாறு **அநுஷ்டுப் சந்தஸ்ஸுக்கு** 5,800 எழுத்துக்கள் ஆகும். தத்வங்களில் தேர்ச்சி பெற்றவர்களால் ஐ என்ற எழுத்து நன்ருகக் கூறப்பட்டிருக்கிறது. ஓ, ஔ என்பதும் இத்தகைய வகைகளைக் கொண்டதே. ரம் யௌ, கௌ ரௌ யம் என்று எண்கள் ஸந்தியிலிருந்து யோகிளும் முநிவர்களும் மனத்தினால் நினைக்கிருர்கள். கௌ, ரௌ, யம் என்கிற இந்த உயிரெழுத்துக்களின் எண்கள், அவ்வளவான ஸ்வரங்கள் எல்லாம் **ஸ்ருஷ்டி, ஸம்ஹாரம்** என்கிற இரண்டு பிரிவுகளுடன் கூடியதாய் அறியப்பட வேண்டும். ஸ்ருஷ்டியுடனும், ஸம்ஹாரத்துடனும், தனித்தும் இருந்து, ஸ்வரூபம், பொருள், ஸந்தி எல்லாம் சேர்ந்து 14 ஆகும். **ஸ்ருஷ்டி** என்பது சந்த்ரன் என்றும், **பிந்து** என்பது ஸூர்யன் என்றும் சொல்லப்படுகின்றன.

## ஸ்வரங்களின் ஸூர்ய சந்த்ர ஆத்மபாவம்

ஆதியில் ஸப்த ஸ்வரங்கள் ஸூர்யனுடைய கிரணங்கள் என்று சொல்லப்பட்டன. ஆ முதலியவை சந்த்ரனுடைய

கிரணங்கள் என்று தெரிந்துகொள்ளப்பட வேண்டும்.

**அவைகள் பகலிலும் இரவிலும் செயல்படுகின்றன**

ஸூர்யன் பிங்களா மார்கத்தில் ஸ்வரத்தோடு சென்று கொண்டு பகலைத் தருகிறான். சந்த்ரனோ ஸ்வரங்களுடன் இடா மார்கத்தில் சென்று கொண்டு இரவைப் படைக்கிறான்.

**மேலான ஶக்தியின் ஸுஷும்நாகதியில் ஸஞ்சாரம்**

விஷ்ணுவின் மேலான ஸ்வரங்களின் கூடஸ்தன் என்கிற பெயருடைய ப்ரகாஶமான ஶக்தி எதுவோ, அது ஶப்த ப்ரஹ்மத்தை உண்டு பண்ணிக் கொண்டு ஸுஷும்நா கதியில் ஸஞ்சாரம் செய்கிறது. இவ்வாறாக ஸ்வரங்களின் மேலான போக்கு உமக்குச் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. முநிவரே! இனி வ்யஞ்ஜநங்களின் (மெய்யெழுத்து) ஸ்ருஷ்டியைச் சொல்கிறேன்.

**விஸர்கத்துக்கு வாஸுதேவ உருவம்**

மிக மிகச் சிறப்பான எந்த ஸ்ருஷ்டி முன்பு சொல்லப்பட்டதோ அது சதுர்வ்யூஹத்தைச் சேர்ந்த பகவான் வாஸுதேவனுடையது. பிந்துவுடன் கூடிய அச்யுதன் முதலாவதான ஆகாரத்தை எடுத்துக் கொண்டு அக்நியுடன் கூடிய நாதத்தை யோகிகளின் யோகத்தின் தொடக்கத்தில் வளர்க்கிறது. விஸர்கத்துடன் கூடிய அச்யுதன் உட்புற மேல் பக்கத்தில் ஸ்ருஷ்டியைச் செய்கிறார். விஸர்கத்துடன் கூடிய அச்யுதன் வெளிப்புற ஸ்ருஷ்டியைச் செய்கிறார்.

**உஷ்மாவின் உற்பத்தி**

ஹ, ஸ, ஷ, ச, இவைகள் எப்பொழுதும் ஶக்தியோடு கூடிய உஷ்மா என்கிற பெயருடையவை. இந்த நான்கும் சாதுராத்ம்யம் என்றும் சதுர்ப்ரஹ்ம என்றும் கூறப்பட்டன. க்ஷ என்கிற கூடத்தோடு சேர்ந்து ஐந்தாவது ப்ரஹ்மம் என்று சொல்லப்படுகிறது. க்ஷ என்பது ஸாத்வத ஸம்ஹிதையில் ஸத்யத்தின் பீஜம் என்று சொல்லப்பட்டது. அதே போலுள்ள க, ஷ சேர்ந்த உருவத்தை வேறு என்று சிலர் கருதுகிறார்கள்.

## அந்த:ஸ்தாவின் உற்பத்தி

ச வுக்குப் பிறகு **வ**, அதற்குப் பிறகு **ல**, ல வுக்குப் பிறகு **ர**, ர வுக்கு பிறகு **ய** பிறக்கிறது. **ய** முதலியவை உலகத்தைத் தாங்கி நிற்கும் **தாரண ஶக்தி** என்று சொல்லப்படுகின்றன. நமக்கு உள்ளே இருக்கும் புருஷனால் அடங்கியுள்ள இந்த வர்ணங்கள் **அந்த:ஸ்தா** என்று கூறப்பட்டன. **ஈஶாவாஸ்ய**த்தின் தொடக்கத்தில் இவை **அவஸ்தா** என்று கூறப்பட்டிருக்கின்றன.

## 'ம' எழுத்தின் உற்பத்தி

எம்பெருமான் ஶக்தியிலிருக்கும் **ய** விலிருந்து **ம** உண்டாகிறது. மிகவும் சிறப்பு வாய்ந்த பிந்து **ம்** என்ற ஶப்தத்தை உடையதாக இருக்கிறது.

## அதற்கு ஸகல ஜீவர்களின் ஸமஷ்டி வடிவம் ஜீவர்களேயே சொல்வதாகும்

அது ஸகல ஜீவர்களின் சேர்க்கை என்று சொல்லப்படுகிறது. நமக்காகச் சொல்லப்பட்ட **ம** உத்தம புருஷன் என்ற பெயருடையது.

## 'ப' எழுத்தின் உற்பத்தி

அந்த **ஈஶ ஶக்தி** ஸூக்ஷ்மமான - நுண்ணிய ஆராய்ச்சியால் வளரும்பொழுது போக்யமாக உள்ள ப்ரக்ருதியால் **ம** வை அடுத்து **ப** என்று பருத்த ஒலியுடன் கூறப்படுகிறது.

## 'ப' முதல் 'ட' வரை 13 வர்ணங்கள்

போகத்துக்கு ஸாதநமாயிருக்கும் வெளியிலும் உள்ளும் இருக்கும் இயல்பினால் **ப** முதல் **ட** முடிய 13 வர்ணங்களாக வெளிப்படுகின்றன.

## 'ப' முதல் மூன்றும் 'மஹத்' 'அஹங்காரம்' 'மநம்' இவற்றைக் குறிப்பிடுகிறது.

**புத்தி அஹங்காரம் மநம்** இவை **ப** முதல் மூன்று

எழுத்துக்களால் குறிக்கப்படுகின்றன. ந முதல் த முடிய மஹத் என்கிற இந்த்ரியம் குறிக்கப்படுகிறது.

### 'ட' வர்கம் கர்மேந்த்ரியம்

ண முதல் ட முடிய கர்மா என்று பெயருடையது. போக்யம், உத்பவம் என்று இரண்டு வகைப்படும்.

### 'ச' வர்கத்தின் உற்பத்தி

ஞ முதல் ச முடிய ஐந்து தந்மாத்ரங்களாக வெளிப்படுகின்றன. (ஶப்த தந்மாத்ரம், ஸ்பர்ஶ தந்மாத்ரம், ரூப தந்மாத்ரம், ரஸ தந்மாத்ரம், கந்த தந்மாத்ரம் என்று ஐந்து தந்மாத்ரங்கள்).

### 'க' வர்கத்தின் உற்பத்தி

ங முதல் க முடிய எழுத்துக்களின் தொடர் பஞ்ச மஹாபூதங்கள். எந்த வர்ணத்திலிருந்து எவைகளின் பிறப்பு ஏற்படுகிறதோ, அது போல் தத்வ ஸ்ருஷ்டியில் அவற்றை ஸ்மரிக்க வேண்டும்.

### 'ள' வின் உற்பத்தி

ல வின் வேறு இந்த்ரியமாக ள பிறக்கிறது.

### மெய்யெழுத்தின் மூன்று வகைகள்

வ்யஞ்ஜநத்தை ஆத்மாவாக உடைய வர்ணங்கள் 34 என்று உமக்குச் சொல்லப்பட்டது. இம்மாதிரி ஒவ்வொன்றும் ஸ்வரங்களின் சேர்க்கையில் அநேகம் வேறுபாடுகள் காணப்படும். முனிவரே ! க காரங்கள், கி காரங்கள், கு காரங்கள், க்ரு காரங்கள், க்லு காரங்கள் 36 வகைகள். அதே போல் கே காரங்கள், கோ காரங்கள் எண்ணிக்கையால் யோகிகளால் கூறப்பட்டன. தான் வெளிப்படாமல் இருப்பது கை காரம், கௌ காரங்களின் எண்ணிக்கை 7. உருவம், பொருள், சேர்க்கை என்று ருஷிகளால் கணக்கிடப்படுகின்றன. இவ்வாறே மெய்யெழுத்துக்களின் எண்ணிக்கைகளும் உருவம் பொருள் இரண்டும் அங்கங்களோடு வேறுபடுவதால் நீதிமத் ப்ரதிபா

என்னும் பிரிவுகளால் உண்டாகிறது. உயிரெழுத்துக்கள், மெய்யெழுத்துக்கள் சேர்க்கையால் இந்த எண்ணிக்கை கூறப்பட்டது. ஒன்று, இரண்டு, மூன்று போன்ற சேர்க்கைகளால் **வ்யஞ்ஜநங்கள்** (மெய்யெழுத்துக்கள்) முறையே தனியாகவும், உயிரெழுத்துக்களுடன் கூடியும், இவற்றின் எண்ணிக்கை கூறப்பட்டது.

**வர்ணங்களின் எண்ணிக்கை பகவானின் ஶக்தியாலே**

இவ்வாறுக விஷ்ணுவின் **ஶப்தஶக்தி, வ்யாகரணம், மீமாம்ஸை, ந்யாயம்** முதலிய மொட்டுகளோடு கூடியதும், எழுத்துக்கள் அடிமரத்துடனும், ஜ்ஞாநம் என்கிற வேருடனும் கூடிய பூஞ்செடியாக விளங்குகிறது. எழுத்துக்களின் வரிசை, தேவர்களுக்கு அதிபதியான ஶக்தியோடு கூடிய விஷ்ணுவினாலேயே ஸ்தூலமாகவும், ஸூக்ஷ்மமாகவும் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டுள்ளது. எம்பெருமானுடைய ஆஜ்ஞையால் எனது அம்ஶ பூதங்களான பல ருத்ரர்களாலும் மந்த்ரங்களுக்குக் காரணமான **மந்த்ரமாத்ருகாதேவி** இயக்கப்பட்டுள்ளது.

இவ்வாறுகப் பாஞ்சராத்ரம் தந்த்ரரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் வர்ணத்தின் உற்பத்தி** என்கிற
16வது அத்யாயம் முற்றிற்று.



## வர்ணங்களின் பெயர் விவரம் என்கிற

# 17வது அத்யாயம்

த்யாநம் செய்பவர்களுக்கு எப்பொழுதும் ஆநந்தம் கொடுப்பதும், சுடர்கள் நிறைந்த கூந்தலுடையதும் ஸுதர்ஸநம் என்கிற பெயருடையதுமான அந்த ஒப்பற்ற, சொல்ல முடியாத ஜ்யோதியை த்யாநம் செய்வோமாக.

### வர்ணங்களின் எண்ணிக்கை உருவம் முதலானவை பற்றிக் கேள்வி

**நாரதர் :—**எல்லாம் அறிந்தவரும், ஸர்வ என்கிற திருநாமம் உடையவரும், அஸுரர் கூட்டம் அனைத்தையும் அழிப்பவருமான தேவரீருக்கு நமஸ்காரம். வர்ணங்கள் ஸ்தூல உருவமாகவும், ஸூக்ஷ்ம வடிவமாகவும் எவ்வாறு நிலைத்து நிற்கின்றனவோ தேவர்களுக்கெல்லாம் தேவனான விஷ்ணுவாலும், தேவரீர் அம்ஸத்துடன் சேர்ந்த ருத்ரர்களாலும், ஸ்வாமிந் ! ஸங்கரா ! அந்த உத்தமமான நிலைகள் இருக்கும் விவரத்தை எனக்குச் சொல்ல வேண்டும்.

### பதில் சொல்வதாகச் சூளுரை

**அஹிர்புத்ந்யர் :—** விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் வளர்ச்சியடைந்த விஷ்ணுவின் வடிவமான வர்ணங்கள் எவ்வாறு யாரால் தாங்கப்பட்டிருக்கின்றனவோ, அதைச் சொல்கிறேன், கேளும்.

### வர்ணங்களின் அதிஷ்டாந தேவதைகளாக இருக்கும் விஷ்ணுவின் உருவங்கள்

அ காரம் எல்லாவற்றுக்கும் ஆதியும், அளவிடமுடியாத எல்லாவற்றையும் வ்யாபித்திருப்பதாகவும் சொல்லப் படுகிறது. ஆநந்த ஸ்வரூபனாகவும், முழு முதல் தேவனும், மறைப்பதாகவும் ஆ ஜ்ஞாநிகளால் கருதப்படுகிறது. இ இஷ்டம் என்றும் இத்தம் என்றும் ராமன் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. விஷ்ணுவாகவும் பஞ்ச பிந்துவாகவும் மாயையாகவும் ஈ சொல்லப்பட்டுள்ளது.

உ உதயமென்றும், உத்தமமென்றும் **புவநம்** என்றும் பெயரை உடையதாக இருக்கும். **ஊ** ஜ்ஞாநத்துக்கு ஆதாரமென்றும், லோகங்களுக்கு **ஈமஶன்** என்றும் **ஊர்ஜ**மென்றும் கூறப்படுகிறது. ரு ருதத்தை ஆஶ்ரயித்திருப்பதாகவும், **ஸத்ய**மென்றும், அங்குஶ மென்றும் பெயருடையது - **ஜ்வாலை, ப்ரஸரணம், விஷ்டரம்** என்றும் ரூ பெயருடையது - **ல்ரு** தாரக மென்றும், லிங்காத்மாவாகவும் பகவான் என்றும், **ல்ரூ** நீண்ட மூக்கை உடையதாகவும் **தேவதத்தன்** என்றும் **விராட்** என்றும் பெயருடையது ஏ காரம் உலகங்களுக்குக் காரணமாகவும் முக்கோணமாகவும் **விக்ரஹம்** என்றும் கூறப்படுகிறது. ஐ என்பது அவ்வாறு ஐஶ்வர்யம், **யோகி,** ஐராவணம் இவற்றைக் குறிக்கும். ஓதநமென்றும் ஓத தேவனென்றும், **விக்ரமீ** என்றும் ஓ சொல்லப்படுகிறது. **ஔ ஔர்வம்,** பூதரன் என்றும், ஔஷத ஸ்வரூபம் எனப்படும். **ஓம்** மூன்று உலகங்களிலும் ஐஶ்வர்யம் கொடுக்கும் என்றும், வ்யாபிக்கும் தன்மையுடையதாயும், ஆகாயத்துக்கு அதிபதி என்றும் கூறப்படுகிறது. **அம்** படைத்தலைச் செய்கிறது. **அ:** என்பது பரமேஶ்வரன். **க கமலம், கராளம்,** மூல ப்ரக்ருதி; க குட்டையான உருவமுடையது. வேதஸ்வரூபி, உலகங்களைப் படைப்பவர்; க (g) நோயைத் தீர்க்கும், **கதாதரன், கோவிந்தன்** என்ற பெயருடையது. க (gh) **ஸூர்யன்,** ஒளி மிகுந்தது, ப்ரகாஶம் உடையது; ங ஒற்றைக் கோரைப்பல் உடையது. ஜகத் ஸ்வரூபம், ஜகத்தைப் படைப்பவன்; ச என்பது சந்த்ரனின் கிரணம் போன்றது, சஞ்சலமானது (அசையக் கூடியது) சக்ராயுதனான எம்பெருமான். ச (ch) விருப்பங்களைத் தரக் கூடியது, கபடத்தை அழிப்பது, அநுஷ்டுப் முதலிய வ்ருத்தம் என்றும் சந்தஸ்ஸாகவும் இருக்கும். **ஜ** என்பது **அஜிதன்** என்கிற எம்பெருமானின் அம்ஶம், பிறப்புகளைப் போக்க வல்லது, மேலும் என்றைக்கும் உள்ளது. ஜ (gh) மத்ஸ்யாவதாரத்தின் அம்ஶம் **(ஜஷ - மத்ஸ்யம்)** ஸாமகாநம் செய்து கொண்டு (ஸாமவேதத்தை) எப்பொழுதும் படிக்க உதவும் ஞ என்பது **உத்தமன்** என்கிற பெயருடையது. ட மக்களுக்கு

ஸந்தோஷத்தைத் தரும் சந்த்ரனின் குணமுடையது. மந நிறைவு எனப்படும். ட (th) மேகம் போன்றது, சக்ரத்தின் வட்டை போன்றது, எம்பெருமான் கௌஸ்துபரத்நம் எனக் கருதப்படுகிறது. ட (d) **முஸலாகாரம்,** தண்டத்தை ஏந்தியது (தண்டனை கொடுப்பது) மிகப் பெரிய பராக்ரமம் உடையது; ட (dh) என்பது உலகம் போல் பெரிய திருமேனியுடன் உறுதியான செயலுடன், முப்பத்திரண்டு வித்தைகளில் ஒன்றான **ப்ரதர்தந** வித்யை என்பதாகும்; **ண** என்பது அபயம் தருவது, ஆட்சி செய்வது, தங்கு தடையற்ற செயலை உடையது; **த** பனைமரத்தை அடையாளமுடையது - **விராட் புருஷ** ஸம்பந்தமுடையது; மாலை அணிந்ததாகக் கருதப்படுகிறது. **த** (th) என்பது வில் ஏந்தியும், உலகங்களைக் காத்தும் எல்லாவற்றையும் தாங்கியும் இருக்கும். **த** (d) இடைவெளி தருவதும் அடக்குவதும், ஶாந்தியை அளிப்பதுமாக இருக்கும். **த** (dh) ஶார்ங்கத்தை, ஏந்தியும், தாமா என்றும், மாதவன் எனக் கூறப்பட்டது, **ந** என்பது நரன் நாராயணன் (பதரிகாஶ்ரமத்தில் உள்ளவர்) ஸந்மார்கம் (நல்வழி) எனக் கருதப்பட்டது. **ப** என்பது **பத்மநாபன், பரிஶுத்தன்-** மேற்கு முகமாக உள்ளவன்; **ப** (ph) மலர்ந்த திருக்கண்களுடனும், கலப்பை தாங்கியும், வெண்ணிறத்தை உடையதையும் குறிக்கும். **ப** (b) **வாமநன்,** (குட்டை உருவம்) குறுகியது- அழகு நிறைந்த உருவம்; **ப** (bh) **பல்லாதகம்-** மருதமரம், எல்லாவற்றிலும் வெற்றியைத் தரும், ஶாஶ்வதமானது (அசைவற்றது); **ம** என்பது அடக்கி ஆள்வதாகவும், **கால ஸ்வரூபீ,** எல்லாவற்றுக்கும் மூல காரணம்; **ய** என்பது நான்குவகை மார்கமுடையது, மிகவும் நுண்ணியது, சங்கத்தின் அம்ஶம் **(வாயுபீஜ** மென்பர்) **ர** உலகங்களைத் தாங்கும், அக்நி அம்ஶம் (அக்நி பீஜம்) காலத்தைப் புனிதமாக்கும்; **ல** என்பது தெய்வாம்ஶம் உடையது, குபேரனின் அம்ஶம், ஜீவன்களுக்கு அதிபதி; **அ** அம்ருத பீஜம், வராஹாம்ஶம், வருணனின் அம்ஶம்; (ஶ) என்பது ஶங்கரரின் அம்ஶம், ஶாந்தியைத் தரும், தாமரை போன்றது; **ஷ** என்பது நரஸிம்ஹ அம்ஶம்; அக்நி ரூபம், ஒளி மிகுந்தது; **ஸ** அமுதம், போதுமென்ற மநம்; ஸோமன்

இவற்றைக் குறிக்கும்; ஹ ஸூர்யாம்ஶம், மூச்சுக்காற்று, பரமாத்மா (நாராயணன்); க்ஷ என்பது அநந்தேஶன் (பூமா தேவிக்கு நாயகன்) வர்கங்களுக்கு இறுதியாகவும், கருடாம்ஶமாகக் கருதப்படுகிறது. பிந்து என்பது ஸம்ஹார மூர்த்தி; விஸர்கம்-ஸ்ருஷ்டி என்று சொல்லப்பட்டது. விஷ்ணுவின் ஶக்தி வடிவமான இந்த வர்ணங்கள் பருத்தும், நுண்ணியதாயும், உள்ள எம்பெருமானை ஆத்மாவாகக் கொண்டவை. அளவிட முடியாத தோற்ற முடையவை. நூற்று ஐம்பது என்று கணக்கிடப்பட்டுள்ளன.

## வர்ணங்களின் தேவதைகளின் ரௌத்ர வடிவம்

மஹர்ஷியே ! அந்த எழுத்துக்களெல்லாம் எந்த தேவர்களால் உண்டுபண்ணப்பட்டனவோ, அப்படிப்பட்ட என்னுடைய அம்ஶத்தோடு சேர்ந்த ருத்ரன் என்ற பெயருடைய அந்த அக்ஷரங்களிலிருக்கும் மஹாத்மாக்களான அந்த தேவதைகளைச் சொல்கிறேன், கேளும் - ஸ்ரீ கண்டர், ஆநந்தர், ஸூக்ஷ்மேஶர், த்ரிமூர்த்தி, அமரேஶ்வரர், அங்க்ரீஶர், பாரபூதி, திதி, ஸ்தாணு, பவன் என்பவர், கண்டேஶர், பௌதிகர், ஸத்யோஜாதர், அநுக்ரஹேஶ்வரர், அக்ரூரர், மஹாஸேநர், இவர்கள் ஸ்வர மூர்த்திகள் (உயிரெழுத்து). இனி க்ரோதிஶர், சண்டீஶர், பஞ்சாந்தகர், ஶிவோத்தமர், ஏகருத்ரர், கூர்மர், ஏகநேத்ரர் என்பவர், சதுராநநன் (நான்முகன்), அஜேஶர், ஶர்வர், ஸோமேஶர்,லாங்கலி, தாரிகர், அர்த்த நாரீஶ்வரர், உமாகாந்தர், ஆஷாடர், தண்டீ, அத்ரி, மீநர், மேஷர், லோஹிதர், ஶிகீ, சலகண்டர், த்விகண்டர், மஹா காலர், வாலி புஜங்கேஶர், பிநாகீ, கட்கீஶர், பிகர், ஶ்வேதர், ப்ருகு, வகுலீஶர், ஸம்வர்தகர் என்று கூறப்பட்டவர்கள் என் ஸம்பந்தமுடைய வர்ணங்களின் அதிஷ்டாந மூர்த்திகள், ருத்ர மூர்த்திகள் என்று கூறப்பட்டுள்ளனர்.

## வர்ண சக்ர பத்மத்தின் விளக்கம்

இவ்வாறு எழுத்துக்களாலான சக்ரம், பத்மம் இவைகளைச் சொல்கிறேன், கேளும். ப்ரணவம் அச்சு என்று

கருதப்பட்டது. ஶக்தி குழை எனப்பட்டது. **அகசர், அஷ்டதபர்** வர்க எழுத்துக்களோடு ஆரக் கால்கள் ஆகும். யகாரம் முதலியவை வட்டை (Rim) எனப்படும். கருடன்ப்ரதி (கவசம்) எனப்படும். **ப்ரணவம் கர்ணிகை** என்று சொல்லப்பட்டது. (மகரந்த கேஸரங்கள் சூழப்பட்ட காய் போன்றது, ஶக்தி மகரந்த தாதுக்கள். 16 உயிரெழுத்துக்கள், வர்கங்கள் ஐந்து **(க, ச, ட, த, ப) அந்த:ஸ்தங்கள்** நான்கு **(ய, ர, ல, வ,)** ஊஷ்மம் நான்கு **(ச ஸ ஷ ஹ)** இவை எல்லாம் சேர்ந்து எட்டு இதழ்கள் கொண்ட (பத்மம்). கருடன் அழகு என்று கூறப்பட்டது. ஆக, சக்ர பத்மத்தின் நடுவிலிருக்கும் எழுத்துக்களிள் வரிசையைக்கொண்ட மாத்ருகா, மந்த்ரங்களுக்குக் காரணமாகவும் ஆறு குணங்களோடு கூடிய விஷ்ணுவினுடைய **மஹாதேவீ** என்றும் சொல்லப்படுகிறது.

## வர்ண மாத்ருகை என்கிற வைஷ்ணவ ஶக்தியின் விளக்கம்

உயிரெழுத்துக்களில் **அ** வை அங்கங்களாகவும், வர்க எழுத்துக்கள் என்கிற ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டதாகவும் தாமரையின் உள் பாகம் போல் விளங்குவதும், சங்கு தாமரை தரித்தும், **ப்ரணவம் ஸ்ரீ** இவைகளை உடலாகக் கொண்டதும், மற்ற உயிரெழுத்துக்களை முகமாகவும், **க ச** இரண்டு கைகளாகவும், **ட, த,** இரண்டு திருவடிகளாகவும், **ப** முதலியவை ஶூபமான வயிறாகவும், **ய, ர** இவைகளை உயிராகவும் உஷ்ணமாகவும் கொண்டதும், (ல) உத்தமமான மாலையாகவும், **வ** என்கிற ஒட்டியாணத்தோடு விளங்குவதும், **ச ஷ** இவை இரண்டு குண்டலங்களாகவும் **ஸ** ஹ்ருதயமாகவும், **ஹ** என்பது உள்ளே இருக்கும் உயிராகவும், **க்ஷ** என்பது ஒளியாகவும், இத்தகைய எழுத்துக்களின் வரிசைகளைக் கொண்டதும் **பாஶம்** (கயிறு) **அங்குஶம்** (ஈட்டி) இவற்றைக் கையில் ஏந்தியவளாகவும் வாக்கே வீணையாக உள்ள **வைஷ்ணவ ஶக்தி** த்யாநிக்கப்பட வேண்டும்.

## முதலில் விஷ்ணு ஶக்தியின் ஆராதனை

இனி சொல்லப்போகும் மந்த்ரத்தினால் **ஸரஸ்வதீ** தேவியைத் தொடக்கத்திலேயே ஆராதனை செய்ய வேண்டும்.

## பிறகு மந்த்ரங்களின் குறிப்பு

தேவியின் அநுமதி பெற்று, ஆசார்ய பரம்பரையை வணங்கி, கணேஶனைப் பூஜித்து, (அங்க கரந்யாஸங்களுக்குத் தேவையான) மந்த்ர பீஜங்களை எடுக்க வேண்டும்.

## வைஷ்ணவ வடிவத்தில் வழிபாடு

**அப்ரமேயம்** முதலிய த்யாநங்களுடன் விஷ்ணு ஸம்பந்தம் உடைய **உத்தாரங்களைப்** பண்டிதன் எடுக்க வேண்டும்.

## ரௌத்ர மந்த்ரங்களின், ஶக்தி மந்த்ரங்களின் குறிப்பு

ருத்ர ஸம்பந்தமான அக்ஷரங்களைக் கொண்டு ருத்ர ஸம்பந்த பீஜங்களையும், ஸரஸ்வதியின் அம்ஶங்களைக் கொண்டு ஶக்தி பீஜங்களையும் எடுக்க வேண்டும். மஹா முனிவரே ! மந்த்ரங்கள் எங்கும் வ்யாபித்திருப்பவை. எப்பொழுதும் நிலையாக இருப்பவை. ஆயினும் ஸ்ருஷ்டியின் இயல்பைக் கருதி மந்த்ரங்கள் ஶக்தியுடன் விளங்குவதாக இருக்க வேண்டும்.

## முறைகள் தவறினால் வரும் விளைவுகள்

மூடனான எவன் சொல்லப்பட்ட முறைகளை விட்டு மந்த்ரத்தை ஜபிப்பானோ, ஶாஸ்த்ரங்களை மீறிய அவனுக்கு மந்த்ரங்கள் ஶாபம் கொடுப்பவையாக அமையும்.

## முறைகள் தவறாமல் செய்தால் உடனே பலன்

எந்த ஒரு ஜ்ஞாநி முறைகள் எல்லாவற்றையும் விடாமல் மந்த்ரத்தை ஜபிப்பானோ அவனுக்குச் சொன்னவுடன் மந்த்ரம் பலனைத் தரும்.

இவ்வாறு ஸ்ரீ பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையின் வர்ணங்களின்**
பெயர் விளக்கம் என்கிற 17வது அத்யாயம் முற்றிற்று.

மந்த்ரங்களின் பீஜாக்ஷரம் என்கிற

# 18வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம் ।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥

**ஒருமுறை த்யாநித்தாலும் பற்பல கோடி ஜந்மங்களில் செய்த பாபக்கூட்டங்கள் அனைத்தும் உடனே தீர்க்க வல்லது எதுவோ, அப்படிப்பட்ட உத்தமமான ஸுதர்ஶந பகவானின் அந்த தேஜஸ்ஸை எப்பொழுதும் த்யாநம் செய்வோமாக.**

(**குறிப்பு :—** இக்கருத்தை உடைய ஶ்லோகம் அடுத்து வரும் பல அத்யாயங்களிலும் வருகிறது என்பது அஹிர்புத்ந்யரின் விஷ்ணு பக்திக்குப் பெரிய எடுத்துக் காட்டாகும்.)

### ஶக்தி மந்த்ரத்தை ஏற்றுக் கொள்ளுதல்

**அஹிர்புத்ந்யர் :—** முதலில் அக்நீஷோ (ஸோ)மர்களின் ஸ்வரூபமான ஶக்தியை எடுக்க வேண்டும் (அக்நி + ஸோமன் இந்த இரண்டு சொற்கள் சேரும்போது அக்நீஷோம என்று மாறும்) விஷ்ணுவிடம் நிலை கொண்டிருப்பதும், பரமாத்மாவிடம் நிலை பெற்றிருப்பதும், நம்மைத் தொடுவதும் வ்யாபிப்பதுமான ஸரஸ்வதியை ஹ்ருதயமாக எடுத்துக் கொண்டு மறுபடி அதைத் தன் மநத்தோடு சேர்க்க வேண்டும். மறுபடி மனத்துக்குள் இணைத்து 'ஶ ஷ' என்கிற ஊஷ்மாக்ஷரங்களைச் சேர்க்க வேண்டும். ஐந்து பிந்துக்களை உடைய அந்த மஹாஶக்தியை அந்த ஊஷ்மாக்ஷரங்களை ஆஸநமாக உடையவளாக நினைக்க வேண்டும். வ்யோமேஶனை ஆஶ்ரயித்து (சார்ந்து) இருக்கும் அந்த மஹாஶக்தியைப் பிறகு மீண்டும் மனத்தால் நினைக்க வேண்டும்.

### அதன் மஹிமையின் சுருக்கம்

உத்தமமான இந்த மஹா ஶக்தி, சந்த்ரன், ஸூர்யன், அக்நி இவற்றை ஆபரணமாக உடையவள். மூன்று

உலகங்களிலும் ஆட்சியைக் கொடுப்பவள். ஒளி மிகுந்தவள். இந்த ஶக்தி **ஸ்தூலம், ஸூக்ஷ்மம், பரம்** என்கிற வகையில் விளக்கப்பட்டிருக்கிறது. மஹா முநிவரே! ஸுதர்ஶநத்தைப் பற்றியதும் விஷ்ணுவின் ஸங்கல்ப வடிவமாக மந்த்ரங்களுக்கெல்லாம் இந்த ஶக்தி அடிப்படைக் காரணம் ஆகும். பூமியில் வேறு விஷ்ணு ஸம்பந்த மந்த்ரங்கள் எவை உண்டோ, அவற்றுக்கும் இதுதான் அடிப்படைக் காரணம். இந்த **மஹாஶக்தி** என்பது விஷ்ணுவின் உத்தமமான **அஹந்தை** ஆகிய (அஹங்காரம் என்னும்) தத்வம். பலவகைப்பட்ட பல சொற்கள் பொருள்கள் அந்தந்த ஸங்கல்பங்களாகிற மொட்டுக்களோடு கூடியது. **அநுஸ்வாரம் விஸர்கம்** என்கிற இரண்டையும் கடைசியில் கொண்டுள்ள முதல் ஆறு உயிரெழுத்துக்களும் மற்ற ஆறு உயிரெழுத்துக்களும் தன் ஶக்தியுடன் சேர்ந்து வைக்கப்பட வேண்டும்.

## பத்து எழுத்துக்கள் கொண்ட ஸுதர்ஶந மந்த்ரத்தின் குறிப்பு

தனக்கு த்ருப்தி ஏற்படும்வரை அந்த ஶக்தியை மனத்தில் இருக்கச் செய்து, மஹா மந்த்ரமாகிய ஸுதர்ஶந மந்த்ரத்தை வேறு எதையும் நினைக்காமல் ஜபிக்க வேண்டும். ஶக்திக்கு ஹ்ருதயமாக இருக்கும் அம்ருதத்தை **அப்ரமேயம்** என்கிற மந்த்ரத்தால் வர்ணிக்க வேண்டும். அந்த மந்த்ரத்துக்கு அந்தராத்மாவாக இருக்கும் பரமாத்மாவை உடனே முதலில் சொன்ன மந்த்ரத்தைக் கொண்டு த்ருப்தியாக நினைத்திருப்பதாக இணைக்க வேண்டும். ஸோமனை மட்டும் அங்கு நிலைத்திருப்பதாகவும், அவர் ஸோமனில் இருப்பதாகவும் புத்திமான் நினைக்க வேண்டும். ஸகல உலகங்களுக்கு ஆதாரமாகவும், அவரில் இருக்கும் ஆநந்தத்தையும், பொல்லாப் பாவங்களையே எரிபொருளாகக் கொண்ட காலாக்நியை எடுத்துப் பலவகை ப்ரபாவங்களை உடைய வ்யாபக மந்த்ரத்தால் இணைக்க வேண்டும்.

சுருக்கமாக அதன் மஹிமை

ஸுதர்ஶநத்தினுடைய **மஹாவித்யா** என்கிற ஶக்தி 10 அக்ஷரங்கள் கொண்டது. **ஸ்தூல, ஸூக்ஷ்ம,** பரம் என்கிற உருவமுடையது. விஷ்ணுவின் ஸங்கல்பமேயாகும். இது எம்பெருமானின் பல வகையான ஸங்கல்பத்தினால் ஏற்படும் **ஸத் அஸத்** என்கிற உருவங்களைக் கொண்டதாகவும் எல்லா பொருள்களையும் வ்யாபித்துக் கொண்டும் உள்ள இந்த ஸுதர்ஶந மந்த்ரத்தின் நிலை மிகவும் மேலானது. ஆகாஶம் முதல் பூமி வரை உள்ள பலவகை விபூதிகளில் நிறைந்திருப்பதாகவும் மிகவும் நுண்ணிய இந்த ஸுதர்ஶந ஶக்தி, காரணத்திலிருந்து ஒரு போதும் பிரியாததாகும். பலவகைப் பாபங்கள் என்கிற அஸுரர்களின் கூட்டங்களையும் இருளையும் ஒழிக்கும் வல்லமையுடையது. ஸ்தூல சக்ரம் என்கிற ஸ்தூலத்துடன் கூடி விஷ்ணுவின் ஸங்கல்பத்தின் இயல்பு ஆகும் இது. உயிரெழுத்துக்கள், மெய்யெழுத்துக்கள், கூடஸ்த எழுத்துக்கள் இவற்றால் நிறைந்த இந்த மந்த்ரம் நான்கு அக்ஷரங்கள் கொண்டது. இது ஸகலவித அஷ்ட மஹா ஸித்தியைத் தரவல்லது. லாபம் (வெற்றி), இழப்பு (அழிவு) இவற்றுக்கு இடம் தராதது. கூடத்தில் (ஶிரஸ்ஸில்) மூன்று எழுத்துக்கள். அதற்குப் பின் இந்த நான்கு எழுத்துக்களின் கடைசியில் நம: என்று சேர்ந்த இந்த ஆறு அக்ஷரங்கள் கொண்ட இந்த மந்த்ரம் உலகத்தையே படைக்கும்.

வாசகர்களுக்கு :— கீழ் வரும் ஶ்லோகங்கள் மந்த்ரங்களின் பீஜாக்ஷரங்களைக்கொண்டவை. ரஹஸ்யமானவை. ஆகவே இதற்குத் தமிழாக்கம் செய்யவில்லை. மூலம் மட்டும் அப்படியே தரப்பட்டிருக்கிறது. தேவை உள்ளவர்கள் பண்டிதர்கள் உதவி கொண்டு விளக்கம் பெறலாம்.

மூன்றுவகை ஐந்து பீஜங்கள்

परमात्मानमादाय योजयेदुदयेन तु।
प्रधानं संस्पृशेद्भूयः परं बीजं तु पञ्चमम्॥ १९

सूर्यमुद्दामकालाढ्यं सूक्ष्मं तद्बीजमुच्यते।
सप्राणं भुवनाधारं रक्षोदुरितमर्दनम्।। २०

स्थूलं तु पञ्चमं बीजं सौदर्शन मनुत्तमम्।

மூன்று வகை ஆறு பீஜங்கள்

यत्तत् साङ्कर्षणं घोरं लाङ्गलं परमायुधम्।। २१।।

योजयेदप्रमेयेण चन्द्रिका केवलेन च।
परं तत् परमं षष्ठं दीप्तिशालि सुदर्शने।। २२ ।।

सर्वशास्त्रार्थ कूटस्थमिति तेजोऽप्रमेयकम्।
षष्ठे परा स्थितिर्बीजे सेयं नारद ! दर्शिता।। २३ ।।

तत् फुल्लनयनाकारं फुल्लैर्यन्नयनैर्वृतम्।
प्रथितं प्रथमाक्रान्तं विश्वाप्ययकृदुज्ज्वलम्।। २४ ।।

सूक्ष्मं षष्टं समुद्दिष्टं बीजं सौदर्शनं परम्।
यस्मान्नयति सन्मार्गं छित्त्वाऽघं बाह्यमान्तरम्।। २५ ।।

प्रथते च मुहुर्वृद्ध्या विश्वमाप्याययत्यपि।
इयं ते मध्यमावस्था सूक्ष्मा षष्ठी प्रदर्शिता।। २६ ।।

श्वेताख्या व्यापकाक्रान्ता आह्लादेन तु केवलम्।
षष्ठी स्थूला समुद्दिष्टा विधा नारद ! ते मुने !।। २७ ।।

स्थाणुं छित्वा यथा दग्ध्वा पूर्वं केदारकारकः।
फलप्रापणबीजानि प्रथयित्वा च वारिणा।। २८ ।।

आप्याय्य शान्तसन्तापः व्याप्नुवन् विविधं फलम्।
आह्लादं लभतेऽतीव सेयं षष्ठी परा मुने !।। २९ ।।

इति ते दर्शिता शश्वत् शक्तिः सा षोडशाक्षरी।

இப்படிப்பட்ட இந்த காயத்ரீ தன்னுடைய ஶக்தி நிறைந்ததாக இருக்கும் என்று சொல்லப்பட்டது.

### மறுபடி ஶக்தி மந்த்ரத்தின் பெருமை

இந்த ஸுதர்ஶநத்தின் ஶக்தி ஸம்ஸாரத்துக்குக் காரணமான பாபங்களை அழிக்க வல்லது. ஜபிக்கப்பட்டு, பூஜிக்கப்பட்டு ஹோமம் செய்யப்பட்டாலும், த்யாநம் செய்யப்பட்டாலும் ஸாதகனை (செய்பவனை)க் கரை ஏற்றுவிக்கும். இதன் தனித் தன்மை வாய்ந்த பீஜம் நான்காவது உத்தமமான கூடமாகும். சந்த்ரன், அம்ருதம், ஸ்வரூபமாக உள்ள இந்த காயத்ரீ த்யாநம் செய்யப்பட்டாலும் தனித் தன்மை வாய்ந்ததாய் த்ருப்தியைத் தரவல்லது. இதன் முதல் அக்ஷரத்திலிருந்து புருஷ ஸூக்தம் உண்டாயிற்று. இரண்டாவது அக்ஷரத்திலிருந்து பிறந்தது ஸ்ரீ ஸூக்தம் என்று சொல்லப்படுகிறது.

### மந்த்ரத்தின் சுருக்கமான உரை

ஸ, ஹ இவற்றின் ஜ்ஞாநத்தை நினைத்தால் அது ஆயிரம் அரங்களைக் கொண்டது. ஸ ஹ என்பது பலம் என்று சொல்லப்படுகிறது. அது எல்லாவற்றையும் சுரக்க வல்லது. அது ஸஹஸ்ரம் (ஆயிரம்) எனும் எல்லையற்றது என்றும் உயிரைக் காக்கும் என்றும் சொல்லப்படுகிறது. அரங்களைப் பற்றிய ஜ்ஞாநம் எப்பொழுதும் தூய்மையானது என்றும், எந்த வாஸனைகளையும் போக்க வல்லது என்றும் சொல்லப்படுகிறது; ஜ்ஞாநம் க்ரியை வடிவத்திலுள்ள இந்த ஶக்தி இவ்வாறு ஸுதர்ஶநத்தின் அம்ஶம். உலகங்களுக்காக ஶக்தி வாய்ந்த தன் தோற்றத்தைப் பெற்றுத் தானே ப்ராணன் ஸூர்யன் வடிவத்திலிருந்துகொண்டு பரமாத்மாவின் வடிவமாகப் பாபங்களை எப்பொழுதும் அழித்தும், உலகத்தை ஆநந்தித்து இருக்கச் செய்யும். இதுவே ஶ்வேதா என்ற பெயருடன் அநுக்ரஹமே நிறைந்ததாய் எப்பொழுதும் தான் ஆநந்தம் நிறைந்ததாக இருக்கும். சேர்க்கப்பட்டும் பிரிக்கப்பட்டும் உள்ள வாக்யங்களாலும், எழுத்துக்களாலும்,

பதங்களாலும் பொருளின் போக்கைச் சுருக்கமாகச் சொன்னேன். விஸ்தாரமாகச் சொல்ல இயலாது.

### ஸுதர்ஶநம் ஏழு அக்ஷரம்

இது ப்ரணவத்தோடு கூடியதாய் ஸப்தாக்ஷரீ என்று கூறப்பட்டது.

### ஸுதர்ஶநம் எட்டு அக்ஷரம் கொண்டது

தன் ஶக்தியோடு கூடிய இது, எட்டு அக்ஷரங்களைக் கொண்டதாகவும் கூறப்பட்டது.

### ஸுதர்ஶந மந்த்ரத்தின் ஒன்பது அக்ஷரங்கள்

மேலும் ஸ்ரீ யோடு கூடியதாய் இது ஒன்பது அக்ஷரங்கள் உடையது.

### அங்கஸித்தியைத் தரும் அங்கமந்த்ரம்

இனி இந்த காயத்ரிக்கு அங்கம் ஸித்திப்பதற்காக மற்றும் ஒரு அங்கத்தைச் சொல்கிறேன், கேளும். முதலில் சந்த்ரனின் கிரணத்தை எடுத்துக் கொண்டும், அப்ரமேயத்தைக் கொண்டு அலங்காரம் செய்ய வேண்டும். ஸகல உலகங்களுக்கு ஆதாரமாகவும், பரமாத்மா, ப்ரக்ருதி இவற்றுடன் கூடியதாகிறது. ஆநந்தத்தோடு கூடியதாக இரண்டாவது கூடத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். சதுர்கதியை எடுத்துக் கொண்டு, அப்ரமேயத்தால் அலங்காரம் செய்ய வேண்டும். பிறகு ஆநந்தத்தோடு இணைத்து, பரமாத்மாவை உத்தாரம் செய்ய வேண்டும். ஆநந்தம் நிறைந்த இந்த மந்த்ரம் அங்க மந்த்ரங்களுக்கெல்லாம் அதிபதியாகும் இந்த மந்த்ரம் அசைந்து ஜ்வலிக்கும் அக்நியாகவும், மலர்ந்த தாமரை போன்றதாகவும், ஆயிரம் ஸூர்யன் அக்நி போன்ற காந்தியை உடையதாகவும், ஆதிதேவனை ஒத்த ஒளி உடையதாகவும், எப்பொழுதும் ஶாந்தியுடன் கூடியதாகவும், ஸூக்ஷ்ம நிலையில் உள்ளதாகச் சொல்லப்பட்டது. பயங்கரமான விரிந்த வர்ணங்களின் ஒளியுடன் கூடியதாய், ஒளி மிகுந்த லக்ஷம் சக்ரங்களோடு கூடியதாய், தன் தேஜஸ்

என்கிற ப்ராணனால் எல்லா பாபங்களைப் போக்கி சந்த்ரன், ஸூர்யன் வடிவத்தில் இருந்து கொண்டு மூன்று உலகங்களையும் காத்து அருள்கிறது. இவ்வாறு சக்ரமந்த்ரத்தினுடைய உத்தமமான ஸ்தூலாகாரம் விளக்கப்பட்டது. உத்தமமான பலவகையான பீஜங்களோடு, ஹ்ருதயம் முதலிய அங்கங்களோடு, கட்டத்தில் சக்ர மந்த்ரத்தை எப்படி இணைக்க வேண்டும் என்று சொல்கிறேன், கேளும்.

இவ்வாறாகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்

அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில், மந்த்ரோத்தாரம்

முற்றிற்று.



## அங்கம், உபாங்கம், மந்த்ரோத்தாரம் என்கிற

# 19வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத்பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம் ।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥

(இதன் பொருளை 18வது அத்யாயத்தின் தொடக்கத்தில் காண்க)

### ஹ்ருதய மந்த்ரம்

**அஹிர்புத்ந்யர் :—** குணங்களுடைய மேலான இயல்பு எதுவோ அது தான் உத்தமமான ஜ்ஞாநம் பலம் முதலிய மற்ற ஐந்து குணங்களுள் எப்பொழுதும் ஶுத்தமாகவும், வாஸனையற்றதாகவும் அது ஆறு குணங்களின் ஸ்வரூபம் என்கிற காரணத்தால், **ஹ்ருதய மந்த்ர**மாக ஆகிறது. அதைக் குறிக்கக் கூடிய உருவத்தை மனத்தால் ஸாதகன் என்கிற ஜ்ஞாநி உத்தாரம் செய்ய வேண்டும். ஜ்ஞாநமாக இருப்பதால் **அப்ரமேயம்** என்றும் **வ்யாபகம்** என்றும் முதல் மந்த்ரம் ஆகிறது. **ஆநந்த, ஆதிதேவ, கோபந** என்கிற ஆறு வகைகள் அந்த வரிசைப்படி ஒன்று சேர்த்து ஜ்ஞாநம் உத்தமமான ஸாங்கர்ஷண மந்த்ரமாகும். பல வகையான விஶேஷங்களோடு சேர்க்கையினால் சிறப்பைப் பெற்றதும், எப்பொழுதும் அந்த பகவத் ஸ்வரூபமாகவே இருக்கும், ஜ்ஞாந ஸ்வரூபமாக உள்ள இந்த மந்த்ரம் , மந்த்ரங்களுள் சிறந்த மந்த்ர ராஜன் ஆகிறது. பிறகு மந்த்ரங்களின் ஶக்தி வெளிப்படுவதற்காக **ஹ்ருதயாய நம:** என்பதைச் சேர்க்க வேண்டும்.

### ஶிரோ மந்த்ரம்

ஸ்ரீமந் நாராயணனுடைய எந்த ஒரு ஶாஶ்வதமான இச்சை உண்டோ, அது அழகாகவும் நன்ருக ப்ரகாஶிப்பதாக இருக்கும், எங்கும் தடையின்றிச் செல்லக் கூடியதும் மிகவும் உத்தமமாகவும் இருக்கும். அம்ருதத்தின் ஆதாரம் என்கிற பிரிவுடன் கூடியது. வம் என்கிற பீஜத்தால் இணைக்கப்பட்டு எல்லாம் எம்பெருமான் நாராயணனுடைய தடையற்ற

ஆட்சித்திறமை (ஐஶ்வர்யம்). அது எல்லோருக்கும் மேலாக இருப்பதாகும் ஶிரஸ்ஸாகும். எங்கும் தடையில்லாமல் இருப்பது ஸங்கல்பத்தின் மிகச் சிறந்த நிலையாகும். அது மிக அழகாகவும் ஒளி மிகுந்தும், அங்கத்துக்கு மிகச்சிறந்த இருப்பிடமாகும். வம் என்பது அவரை விளக்கிக் காட்டும் ஒரு மேலான பீஜம். இதைக் கொண்டு ஶிரஸ்ஸுடன் சேர்க்க வேண்டும். அத்துடன் சேர்க்கப்பட்ட **சக்ர மந்த்ரம்** ஐஶ்வர்யங்களை வெளிப்படுத்துவதாக அமையும். இந்த மந்த்ரத்தின் தேவதையின் திருவுள்ளத்தை வளர்ப்பதாகவே விளங்கும், பிறகு ஶக்தியின் வெளிப்பாட்டுக்காக **ஶிரஸே ஸ்வாஹா** என்று சேர்க்க வேண்டும்.

## ஶிகா மந்த்ரம்

அம்ருதமாகவும், சந்த்ராம்ஶமாகவும் இருக்கும் இது மிகவும் ஶாந்தி நிறைந்திருக்கும். இந்த உலகங்களுக்கெல்லாம் ஆட்சி செய்கிற விஷ்ணுவின் ஶக்தி மிக மிக உத்தமமானது. அதற்கு உலகம் என்கிற உருவம் மிகவும் சிறந்ததாகவும், தூய்மையாகவும் இருக்கும். **ஸ்** என்று **(ஸ:)** சொல்லப்பட்ட இதனால் ஶக்தி உதயம் பெற்று சக்ரமந்த்ரத்தை உருவத்தில் மிகவும் சிறந்ததாக ஆக்குகிறது. அந்த ஶக்தியோடு சேர்ந்த இது ஶக்தி வடிவமாகவே விளங்கும். ஹ்ருதயத்தில் இருப்பதாக எந்த ஒரு குண்டலிநீ ஶக்தி சொல்லப்பட்டதோ, அந்த ஶிகை உத்தமமான தீபம் போன்றது என்று யோகிகளால் சொல்லப்படுகிறது. அது ஶிகை இருக்குமிடத்தில் மேல் நோக்கிச் சுடர்விடும் (பரவும்) ஆகையால் ஶக்தியின் ஶிகாஸ்தாநத்தில் த்யாநம் செய்ய வேண்டும், **ஶிகாயை வஷட்** என்று ஶக்தியின் வெளிப்பாட்டுக்கு ந்யாஸம் செய்ய வேண்டும்.

## கவச மந்த்ரம்

விஷ்ணுவின் மிகவும் ஶக்தி வாய்ந்த பலம் **ஊர்ஜ:** என்று சொல்லப்பட்டது. ஜ்ஞாநத்தைத் தாங்கும் திறமை, மிகவும் ஶாஶ்வதமான ஶாந்தி ஸ்வரூபம் உடையது. எல்லா கார்யங்களாலும் எதெல்லாம் எழுப்பப்பட்டதோ, அந்த

ஶ்ரமங்கள் நீங்க த்ருப்தியைத் தருகிறது. அந்த பலம் எல்லா உலகங்களுக்கும் ஆதாரம் என்று போற்றப்படுகிறது. பலத்துக்கு பலம் சேர்த்து வைத்து வளர்ந்த இந்த ஶக்தி எல்லா உலகங்களை வளர்க்கிறது (தரிக்கிறது). ப்ராணங்களுக்கு நான்கு வகைச் செயல்பாடுகளோடு கூடியது என்று எது சொல்லப்பட்டுள்ளதோ, **வ்யாநம், அபாநம்** முதலிய இது நால்வகைச் செயல்பாடாகும். இதுவே நான்கு வகைச் செயல்பாடுகளுடன் கூடிய **ப்ராணன்** என்கிற பலம் என்று சொல்லப்படுகிறது. இதனால் **அஜிதன்** என்று சொல்லப்பட்ட **அச்யுதன்** எல்லா உலகங்களை ஜயிக்கிறார். அந்த உயர்ந்ததான விஷ்ணுவின் மந்த்ரம் முன் சொன்ன குணங்களோடு சேர்ந்திருக்கும். அது **அப்ரமேயம்** (அளவிடமுடியாதது). **அநாதி** என்பதால் ஸூர்யன் என்று சொல்லப்பட்டது. இத்தனைப் பலங்களுடன் கூடிய இந்த மந்த்ரம் பலத்தின் உருவமாகவே நிலையாக இருக்கும். இந்த பலம் அந்த மந்த்ரத்தின் எல்லா பாகங்களிலும் பரவி மிகப் பெரியதாகவும் நிலையாகவும் இருக்கும். அந்த பலம் தோள்களில்தான் வெளிப்படும். அதனால் இதைத் தோள்களிலேயே ந்யாஸம் செய்ய வேண்டும். **கவசாய ஹூம்** என்று வெளிப்பாட்டுக்காக முத்திரை வைக்க வேண்டும்.

### அஸ்த்ர மந்த்ரம்

**ஸுதர்ஶந சக்ரத்திலிருக்கும் ஸு** என்கிற எழுத்துக்குத் தந்நிகரற்ற பெருமை, குறையில்லாமை, எவ்வித மாறுதலும் இல்லாமை, தன் ஸங்கல்பம் தடைப்படாமல் இருத்தல் இவை எல்லாம் பொருளாகும். தன்னுடைய ஸங்கல்பத்தால் உயிருள்ள பொருள்கள், உயிரற்ற பொருள்கள் சேர்ந்த இந்த உலகத்தை இயற்றிக் கொண்டு எது எப்பொழுதும் மாறுதலற்றதாகவே இருக்கிறதோ, அதுவே மஹா ஸுதர்ஶநத்தினுடைய மந்த்ர ஶக்தி. அதில் இருக்கும் ஶக்தி ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டுள்ளது. மேலும் துஷ்டர்களை அடக்கும் இயல்புடையது. ஸகல பாபங்களை அழிக்கும் இயல்புடையது. உலகங்களுக்கெல்லாம் ஸுகத்தைக் கொடுக்க வல்லது. அஸுரர்களை அழிக்கும் பரமாத்மாவுக்கு

அந்த மாறுதலற்ற தன்மை மஹாஸுதர்ஶநம் என்கிற வீர்யமாகப் பல வகையாகப் பேசப்படுகிறது. வீர்யத்தோடு இணைக்கப்பட்ட மந்த்ரம் வீர்யமாகி நிலைத்து நிற்கும். அந்த மந்த்ரத்தின் ஸ்தாநமாகிய உள்ளங்கையில் வைக்க வேண்டும் (ந்யாஸம்) அஸ்த்ராய பட் என்று அநுக்ரஹ ஶக்திக்குச் சேர்க்க வேண்டும்.

## நேத்ர மந்த்ரம்

உள்ளே ஜ்ஞாநமாக விளங்கும் எது ப்ரக்ருதி ஸம்பந்தமான இருளை அழிப்பதாக உள்ளதோ, அதனுடைய எந்த ஒரு ஶக்திக்கு ஸூர்யன் போல் மேல் நோக்கிச் செல்லும் சுடர் உண்டோ, எல்லா மனிதர்களுக்கும் ஐஶ்வர்யத்தால் இருக்கும் தேவை இல்லாத நிலை எதற்கு உண்டோ அம்ருதத்துக்கு ஆதாரமாக இருக்கும் நிலை உள்ள அது, எப்பொழுதும் பிறவியை அழிக்க வல்லது. அதன் தேவையற்ற தன்மையால் அந்த நிலை தேஜஸ் எனப்படுகிறது. விஷ்ணுவின் ஸம்பந்தமான அந்த தேஜஸ் ஜ்வாலா என்கிற பெயரால் பல இடங்களில் கூறப்பட்டுள்ளது. தேஜஸ்ஸோடு சேர்ந்த மந்த்ரம் தேஜோமயமாகவே நிலைத்து நிற்கும். தேஜஸ்ஸுக்குக் கண்ணே இருப்பிடம். ஆகையால் அந்த மந்த்ரத்தை அங்கு வைக்க வேண்டும். நேத்ராய வௌஷட் என்று அநுக்ரஹ ஶக்திக்காக வித்யாஸமாகச் சொல்ல வேண்டும். இவ்வாருக உமக்கு ஆறு குணங்களை உடைய அங்கங்களின் வரிசை விளக்கப்பட்டது. ஜ்ஞாநிகளால் உபாங்கங்களின் வரிசையும் விளக்கப்படுகிறது.

## உபாங்க மந்த்ரம்

வயிறு, இரு ப்ருஷ்டங்கள், தொடைகள், முழங்கால்கள் இரண்டு பாதங்கள் வ்யாபக மந்த்ரத்தோடு கூடிய ச முதலான வர்ணங்களையும் ஜ்ஞாநம் முதலியவற்றுடன் நமஸ்ஸுடன் கூட வைக்க வேண்டும் (ந்யாஸம்). மந்த்ரத்தின் தேஹம் ஆறு குணங்களுடன் கூட ஆகிவிடும். விஷ்ணுவின் ஸங்கல்பத்தால் எழுச்சி கொண்ட இச்சை என்கிற எந்த பாவம் உண்டோ அது அப்ரமேயம்,

நோய்களைத் தீர்க்கும், ஸ்வர்கம் மோக்ஷம் இவற்றுக்கு வழியுமாக அமையும். பாபங்கள் அனைத்தையும் அழிப்பதால் இது அக்நி என்று சொல்லப்படுகிறது. அக்நியோடு (ரம் பீஜம்) சேர்க்கப்பட்ட மந்த்ரம் அக்நி ஸ்வரூபமாகவே நிலைத்து நிற்கும். அந்த மந்த்ரத்தால் நாற்புரமும் ப்ராகாரம் ஏற்படுத்த வேண்டும். அக்நிக்கும் ப்ராகாரத்திற்கும் இடையிலுள்ள மந்த்ரம் கண்ணால் பார்க்க முடியாததாக அமையும். சக்ர காயத்ரியை ஜபித்துக் கொண்டு மேல்புறமும் கீழ்ப்புறமும் குறுக்காகவும் தனக்கு வெளியில் சக்ர முத்திரையினால் சுற்றிலும் முத்திரை வைக்க வேண்டும். அல்லது அக்நியால் ப்ராகாரம் அமைப்பதற்கு முன்பு இந்தச் சக்ரமுத்திரை செய்யலாம்.

**சக்ர காயத்ரீ** (இது ரஹஸ்யமானபடியால் மூலம் மட்டும் இங்கு தரப்படுகிறது)

हृदयं चाथ चक्राय विद्महे पदमादिमम्।
मन्त्रनाथस्य नेत्रादिपदं सूक्ष्मोऽथ धीमहि ॥

गायत्र्या आधनवमे ततश्चैवाऽनिवारितः।
ततः समस्तरूपं तु गायत्र्या दशमं पदम् ॥

उदिता चक्रगायत्री संप्तविंशतिकीर्तिता।
अथ सौदर्शनास्त्राणां मन्त्रानेतान् निबोध मे ॥

### சக்ரம் முதலிய அஸ்த்ர மந்த்ரங்கள்

ஓம், ஷாட்குண்ய பரிபூர்ணனான விஷ்ணுவே ! தேவரீர் எல்லோருக்கும் மூலகாரணம். மற்றும் ஸமமானவர்; சக்ர மூர்த்தி தரர் என்றும், கதா மூர்த்தி தரர் என்றும், ஶார்ங்க மூர்த்தி தரர் என்றும், ஶங்க மூர்த்தி தரர் என்றும் சொல்லப்படுகிற நான்கு அஸ்த்ரங்கள், மேலும் ஸேநாபதே என்கிற பதமும் எல்லா இடங்களிலும் சொல்லிப் பிறகு தனிப்பட்ட மந்த்ரத்தைச் சொல்ல வேண்டும். சக்ரத்தில் ப்ரதாந தெய்வம் இருக்க வேண்டும். பிறகு கதை

முதலியவற்றில் ஆறு அக்ஷரங்கள் கொண்ட மந்த்ரமும் கௌமோதகீ, மஹாஶார்ங்க, மஹா கட்க என்று சொல்ல வேண்டும். பிறகு கவசம் அஸ்த்ரம் இவற்றைச் சேர்க்க வேண்டும். இதுவே மௌந விதிமுறை. இந்த நான்கும் சக்ரம் முதலியவைகளுக்கு காயத்ரீ என்று சொல்லப்படும். சங்கு முதலிய நான்குக்கும் இந்த மந்த்ரங்களைச் சொல்கிறேன், கேளும்.

### சங்கம் முதலிய மந்த்ரங்கள்

**ஓம்,** ஆறு குணங்கள் நிரம்பிய விஷ்ணுவே ! நீர் எல்லாவற்றுக்கும் எப்பொழுதும் ஸமமானவர். ஶங்க மூர்த்திதர என்றும், ஹல (கலப்பை) மூர்த்திதர என்றும், முஸல (உலக்கை) மூர்த்திதர என்றும், ஶார்ங்க மூர்த்திதர என்றும், பிறகு ஸேநாபதே என்றும் எல்லாவற்றுக்கும் பொதுவாகச் சொல்ல வேண்டும். பிறகு மஹா பாஞ்சஜந்யாய ஸ்வாஹா என்று ஒரு கூடுதல் மந்த்ரமும், மஹா ஹலாய ஸ்வாஹா என்கிற மந்த்ரமும் கூடுதலாகக் கருதப்படுகிறது. பிறகு மஹா ஶார்ங்காய ஸ்வாஹா என்றும் இந்த நான்கும் சங்கம் முதலியவற்றுக்கு காயத்ரீயாகும். தண்டம் முதலிய எட்டு ஆயுதங்களுக்கும் பின் வரும் மந்த்ரங்களைச் சொல்கிறேன், கேளும்.

### தண்டம் முதலிய மந்த்ரங்கள்

**ஓம்,** ஆறு குணங்கள் நிரம்பப் பெற்ற விஷ்ணுவே ! தேவரீர் எல்லோருக்கும் எப்பொழுதும் பொதுவானவர். தண்டமூர்த்திதர என்றும், குந்த (ஈட்டி) மூர்த்திதர என்றும், ஶக்தி மூர்த்திதர என்றும், பாஶமூர்த்திதர என்றும், அங்குஶ மூர்த்தி தர என்றும் (மாவட்டி - யானைப்பாகன் கையில் வைத்திருப்பதைக் காணலாம்). குலிஶ மூர்த்திதர என்றும் (வஜ்ராயுதம்-இந்த்ரன் ஆயுதம்) பரஶு (கோடாலி) மூர்த்திதர என்றும், ஶதமுக மூர்த்திதர என்றும் அநல மூர்த்திதர என்றும் தனிப்பட்ட மந்த்ரங்களின் வரிசையில் ஸேநாபதே என்கிற பதம் எல்லாவற்றுக்கும் சொல்ல வேண்டும். பிறகு மஹா தண்டாய நம: என்பதைக் கூடுதலாகச் சொல்ல வேண்டும்.

**மஹா குந்தாய நம:** என்கிற மந்த்ரம் கூடுதலாகக் கருதப்படுகிறது. **மஹாஶக்தயே நம:** என்பது கூடுதலாகக் கருதப்படுகிறது. **மஹா பாஶாய நம:** என்பது கூடுதலான மந்த்ரமாகக் கருதப்படுகிறது. **மஹாங்குஶாய நம:** என்பது கூடுதலாகக் கருதப்படுகிறது. **மஹாகுலிஶாய நம:** என்பதும் கூடுதலாகக் கருதப் படுகிறது. **மஹாபரஶவே நம:** என்பது கூடுதலாகக் கருதப்படுகிறது. **மஹா ஶதமகாய** என்பதும், **மஹா அநலாய** என்பதும் கூடுதலான மந்த்ரங்கள். இந்த மந்த்ரம் 33 எழுத்துக்கள் கொண்டது. 10 ஆயிரம் ஒளிக்கு ஸமம். இவ்வாறுக அஸ்த்ரங்களைப் பற்றிய இந்த மந்த்ரங்கள் தெளிவாகவே சொல்லப்பட்டன.

## இங்கு சொல்லப்படாதவை பற்றி

ஆதாரம் முதல் ஆஸநம் தொடங்கி த்வாரம் (வாசற்படி) வரை பூஜை செய்ய வேண்டும். பல வகையான முத்ரைகளும் எது எதற்கு எப்படிப்பட்டதோ அவ்வாறு ஸமர்ப்பிக்க வேண்டும். **அபிஷேக விதி** (திருமஞ்ஜநம் செய்யும் முறை) தீக்ஷை பெற வேண்டிய கட்டாயமும், **பூத ஶுத்தியும்,** பலவகை த்யாநங்களும், எல்லாம் **ஜயாக்ய ஸம்ஹிதையில்** சொல்லப்பட்டது போல் செய்ய வேண்டும். ஒவ்வொன்றுக்கும் ஏற்பட்ட தனிப்பட்ட மந்த்ரங்களைத்தவிர முத்ரை இல்லாத தண்டம் முதலிய அஸ்த்ரங்களுக்கு ஶக்தி முத்ரை, அஸ்த்ர முத்ரையுடன் கூடியதாகச் செய்யப்பட வேண்டும். மஹர்ஷியே ! இவ்வாறு ஸுதர்ஶந மந்த்ரத்தின் முறை சுருக்கமாகச் சொல்லப்பட்டது. மந்த்ரங்களை உபதேஶம் பெறுதல் முறை பின் வருமாறு சொல்கிறேன், கேளும்.

இவ்வாறு ஸ்ரீ பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்**
அங்க உபாங்க மந்த்ரோத்தாரம் என்கிற
19வது அத்யாயம் முற்றிற்று.

## மந்த்ரங்கள் உபதேஶம் பெறுதல் முதலிய

# தீக்ஷமுறை என்கிற 20வது அத்யாயம்

**த்யாதம் ஸக்ருத்பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம் ।**
**ஸு்தர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥**

(இதன் பொருளை 18வது அத்யாயத்தின் தொடக்கத்தில் காண்க)

★ ★ ★

### ஆசார்யலக்ஷணம்

**அஹிர்புத்ந்ய:** — வைஷ்ணவ ஆசார்யர் என்பவர், வேதங்கள், வேதாந்தங்கள் இவற்றின் ஸாரத்தை அறிந்தவராகவும், 94 வித்யாஸ்தாநங்களில் தேர்ச்சி பெற்றவராகவும் (ஆறு அங்கங்கள், நான்கு வேதங்கள், மீமாம்ஸை, ந்யாய ஶாஸ்த்ரம், புராணங்கள், தர்ம ஶாஸ்த்ரங்கள்) வேறு இடத்திலிருந்து எடுத்துக் கொள்ள வேண்டியதையும், சில இடங்களில் விலக்க வேண்டியதையும் அறிந்தவராகவும், தேவதைகள் மற்றும் பித்ருக்களின் கர்மங்களில் ஈடுபட்டவராகவும், பிறர் மீது தூஷணம் பேசாதவராகவும், பாபச் செயல்களைச் செய்யாதவராகவும், பிறரின் பெருமையைப் பார்த்துப் பொறுமை கொள்ளாதவராகவும், பிறரின் து:கத்தில் இரக்கம் காட்டுபவராகவும், எல்லா ப்ராணிகளிடம் அன்பு நிறைந்தவராகவும், பிறரின் இன்ப காலத்தில் மகிழ்ச்சியடைபவராகவும், நல்ல கார்யங்களில் ஸந்தோஷம் உடையவராகவும், கெட்ட புத்தி உள்ளவர்களிடம் (அசட்டையாக) பாராட்டாமல் இருப்பவரும், தவம், மந அமைதி, தூய்மை நிறைந்தவராகவும், யோகம், வேதாந்த விசாரங்களில் பற்றுள்ளவராகவும் பாஞ்சராத்ர முறைகளை அறிந்தவராகவும், வேறு ஶாஸ்த்ரங்களைக் கற்றவராகவும், ஶாஸ்த்ரத்தின் உட்கருத்தை அறிந்தவராகவும், மந்த்ரங்களின் ப்ரயோகங்களின் முறையை அறிந்தவராகவும், வ்யாகரணம், மீமாம்ஸை, ந்யாய ஶாஸ்த்ரம் இவற்றில் புலமை பெற்றவராகவும், ப்ரமாணங்களைக் காட்டி வாதம் செய்வதில்

வல்லவராகவும், பொது விதி, விதி விலக்கு இவற்றில் தெளிவு உடையவராகவும் மந்த்ரங்களில் தேர்ச்சி பெற்றவராகவும், குண்டம் - மண்டலம் இவற்றின் வேறுபாட்டைத் தெரிந்தவராகவும், க்ரியைகளை எந்தக் காலத்தில் செய்வது என்பதில் தெளிவு பெற்றவராகவும், ஆத்மா பற்றிய அறிவில் சிறந்தவராகவும், மந அடக்கம், புலனடக்கம் உடையவராகவும், நற்குடியில் பிறந்தவராகவும் இருத்தல் வேண்டும்.

### ஶிஷ்ய லக்ஷணம்

இஹ - பர ஸுகங்களை விரும்பும் ஶிஷ்யன் நல்ல ஆசார்யனை ஆஶ்ரயிக்க வேண்டும். **த்விஜன்** என்பவன் (உபநயநம் செய்து கொள்ளும் முதல் மூன்று வர்ணத்தினர்- தாயின் வயிற்றிலிருந்து ஒரு ஜந்மம், உபநயநத்தினால் இரண்டாவது ஜந்மமும் பெற்றதால் **த்விஜன்** என்று சொல்லப்படுகின்றனர்). அடக்கம், வ்ரதங்களை உடையவனாகவும், உபநயநம் முதலிய ஸம்ஸ்காரங்கள் பெற்றும் ஶுத்தனாகவும் இருந்து கொண்டு, ப்ரஹ்மசர்யத்தில் இருந்து கொண்டு புத்திஶாலியாகத் தன் பத்நியிடம் மட்டும் ஈடுபட்டு, கபடமில்லாதபடி- உள்ளது உள்ளபடி தான் செய்ததையும் செய்யாததையும் சொல்பவனாகவும், ஸம்ஸாரம் (பிறப்பு, இறப்பு) என்கிற தணலின் மத்தியில் இருந்து கொண்டு தான் செய்த நல்வினை தீவினைகளால் வாட்டப்படுபவனாய் **தேவரீரை ஶரணமடைந்தேன், தேவரீரின் பாதமூலத்துக்கு வந்து விட்டேன், சொல்லித்தர வேண்டும், ஸ்வாமிந் !** என்று சொல்லி நல்ல ஆசார்யனை ஆஶ்ரயிக்க வேண்டும்.

### தீக்ஷா க்ரமம்

இவ்வாறு ஆஶ்ரயித்தவனும், சூது வாதில்லாமல் பேசுபவனும் வெளிப்படையாகவும், மறைவிலும் ஏற்படும் சில குறிகளைக் கொண்டு பல வகையில் பரீக்ஷிக்கப்பட்டு ஒரே நிலையில் இருப்பவனாக அறியப்பட்டவனுக்கு, ரஹஸ்யங்களையும் வேதங்களையும் காப்பாற்றுபவனுக்கு,

மூர்க்கத்தனமற்றவனாய், பொருமையற்றவனாய், பேராசை, மோஹம் இவையற்றவனாய் ஒரு வருடம் இவ்வாறு பலவகைச் சூழ்நிலைகளிலும் பரீக்ஷிக்கப்பட்டு மாறுதல் இல்லாமல் இருப்பவனுக்கு எந்த வித்யையை எந்த அளவில் கற்பிக்க வேண்டுமோ அவ்வாறு கற்பிக்க வேண்டும்.

## அங்கந்யாஸ கரந்யாஸங்கள்

கல்வியின் அடிப்படை அக்ஷரங்களை ஆதியில் தன் ஶரீரத்தில் ந்யாஸம் செய்ய வேண்டும். மந்த்ரங்களிலுள்ள எழுத்துக்களைக் கொண்டு **அங்கந்யாஸம் கரந்யாஸம்** இவற்றைச் செய்ய வேண்டும். மந்த்ரத்தினால் மூன்று தடவை தனித் தனியாகக் கையின் பின் பக்கங்களைத் துடைக்க வேண்டும். இவ்வாறு உள்ளங்கை இரண்டிலும் விரல்களை ந்யாஸம் செய்ய வேண்டும். நடு விரல்கள் இரண்டின் நுனிகளால் ப்ரணவத்தை முதலிலும், கடைசியிலும் வைத்து **தாரகம், தாரிகா, லக்ஷ்மீ** இவற்றை ந்யாஸம் செய்ய வேண்டும். கட்டைவிரல் நடு ரேகையில் ஸோமனை ஆதியிலும் முடிவிலும் ப்ரணவத்துடன் பிந்துவுடன் ந்யாஸம் செய்ய வேண்டும். ஆள் காட்டி விரல் ரேகையில் இவ்வாறு ப்ராணனை ந்யாஸம் செய்ய வேண்டும். மூன்றுவது எழுத்துக்கள் முதலியவற்றை மற்ற விரல்களில் நடு ரேகையில் ந்யாஸம் செய்ய வேண்டும். **லாங்கலம்** என்கிற பரமாஸ்த்ரத்தை விரல்களின் நுனியில் ந்யாஸம் செய்ய வேண்டும்.

## ருஷி முதலியவற்றின் பலவகை இடங்கள்

ருஷியை ஶிரஸ்ஸிலும், சந்தஸ்ஸை முகத்துக்கு நேராகவும், ஆதியும் அந்தமும் இல்லாத **நாராயணனை** ஹ்ருதயத்திலும் ந்யாஸம் செய்து நினைக்க வேண்டும்.

## பரமஸூக்ஷ்ம ஸ்தூல மந்த்ரங்களின் ருஷிகள்

பரம புருஷ ஸ்வரூபமான மந்த்ரத்துக்கு பரமாத்மா ருஷி, சொல்லப்பட்டது. ஸூக்ஷ்மத்துக்கு ஸங்கர்ஷணனும் ஸ்தூலத்துக்கு நானும் ருஷி என்று சொல்லப்பட்டது.

## ஸுதர்ஶந மந்த்ரம் அதர்வண வேதத்தில் ஸாரதமம்

மஹர்ஷியே ! அதர்வாங்கிரஸம் என்று ஐந்து ஶாகைகள் உண்டு. அவற்றில் க்ருதாந்தன் என்கிற உத்தமமான மந்த்ரராஜன் மறைந்திருக்கிறது.

## ஸங்கர்ஷணன் உத்தரவினால் அஹிர்புத்ந்யர் அதை வெளிப்படுத்தினார்

த்ரேதா யுகத்தின் தொடக்கத்தில் 10 ஆயிரம் வருடங்கள் தவம் செய்து உத்தமமான ஸங்கஷர்ணனின் ஆக்ஞையின்படி மிகுந்த மந ஒருமைப்பாட்டுடன் என்னால் அதர்வண வேதம் முற்றிலுமாக மெள்ள மெள்ளக் கடைந்தெடுக்கப்பட்டது. கடையப்பட்ட அந்தக் கடலிலிருந்து, தயிரிலிருந்து வெண்ணெய் (நெய்) போல அநாதியான இந்த மந்த்ரம் அங்கங்கள் உபாங்கங்களுடன் மற்ற பரிவாரங்களுடனும் எடுக்கப்பட்டது. அதனால் இந்தப் பெரிய மந்த்ரராஜனுக்கு என்னை ருஷி என்று சொன்னார்கள். தேவர்களால் போற்றப்படுவதும், சதுர்முகனால் போற்றப்படுவதும், முனிவர்களால் போற்றப்படுவதுமான காயத்ரீ என்பது இந்த மந்த்ரத்துக்கு சந்தஸ். ஸ்தூல வடிவாகவும், ஸூக்ஷ்ம வடிவாகவும் உள்ள பரமாத்மா (மஹாவிஷ்ணு) இதன் தேவதை.

## தேஹத்தில் ஸம்ஹார ந்யாஸம்

மந்த்ரங்களுக்கு ராஜாவான- அநாதியான மந்த்ரத்தை தேஹத்தில் ந்யாஸம் செய்ய வேண்டும். சந்த்ரன், ஸூர்யன் அக்நி இவற்றைப் போன்ற ஒளியுடைய பகவானை, அவரே பரம புருஷன், ஸூக்ஷ்மம், ஸ்தூலம் என்கிற பாவனையோடு ப்ரணவம் முதலிய மூன்றை ஶிரஸ்ஸிலும், சந்த்ரனை நெற்றியிலும், ஸூர்யனை வாயிலும் ஸ்ரா என்கிற பீஜத்தைக் கழுத்திலும், ரம் என்கிற பீஜத்தை மார்பிலும், ஹிம் என்பதை நாபிக்கு நேராகவும், பட் என்கிற பீஜத்தை மூலாதாரத்திலும், தாரம் முதலியவற்றை ஹ்ருதயத்திலும், மீண்டும் ஹம் எனும் பீஜத்தை ஸமூலகம் (முழுவதும்) நாபியிலும், ஸரா என்பதைய் பாதங்களிலும், மீண்டும் ரம் என்பதை

ஹ்ருதயத்திலும், ஹிம் என்பதை வாயிலும், பட் என்பதை ஶிரஸ்ஸிலும் பிறகு முழுமையாக (வ்யாபக ந்யாஸமாக)ச் செய்ய வேண்டும்.

**அங்கோபாங்க ந்யாஸம்**

ஹ்ருதயம் முதலிய அங்கங்களை அதன் அதன் இடங்களில் ந்யாஸம் செய்ய வேண்டும். மந்த்ரத்தில் உள்ள வர்ணங்களைக் கொண்டு உபாங்கங்களைச் செய்ய வேண்டும்.

**உடலை மூன்று பகுதிகளாக இணைக்க வேண்டும்**

தேஹத்தை **ஸ்தூலம்** என்றும், **ஸூக்ஷ்மம்** என்றும், **பரம்** என்றும் மூன்று வகையாகத் தெரிந்து கொள்ள வேண்டும். அங்கங்கள், ப்ரத்யங்கங்கள் (விரல்கள் போல) கோஶம் (கழுத்துக்கும் இடுப்புக்கும் நடுவில்) நிறைந்ததாகக் கண்ணுக்குத் தோன்றுவது **ப்ரத்யக்ஷம் - ஸ்தூலம்** எனப்படுகிறது. உள்ளே இருக்கும் ஏழு தாதுக்கள், மநம் இவை சேர்ந்து **ஸூக்ஷ்மம்** என்றும் பெயருடையது. **பரம்** என்பது ஆத்மா. ஸூர்யன் அக்நி இவற்றின் கோடி ஜ்வாலை போல் கோலாஹலம் நிறைந்த இந்த மூன்று வகைகளான மந்த்ர ராஜனில் இந்த ஶரீரத்தை மூன்று வகைகளாக த்யாநிக்க வேண்டும். உத்தமமான வெளுத்த பெரிய தேஜஸ்ஸை, மனதில் - ஹ்ருதயத்தில் இருப்பதாகவும் ஶரீரத்தை ஜ்யோதிகளுக்கெல்லாம் தலைவனான நாராயணமயமாக த்யாநிக்க வேண்டும். பிறகு அந்தச் சக்ரத்தின் மத்தியிலுள்ள ஸோமன், ஸூர்யன், அக்நி வடிவத்தில் தன் ஆத்மாவை மூழ்கச் செய்து பிறகு நிர்வாஸநம் செய்ய வேண்டும்.

**ஸ்ருஷ்டி ந்யாஸம்**

பிறகு பரம ஸூக்ஷ்மம், ஸ்தூலம் என்கிற நிலையில் இருப்பவையும் அநாதியுமான மந்த்ரராஜர்களை முன் சொன்ன முறைகளை அநுஸரித்தே ஶரீரத்தின் மூன்று பாகங்களை மறுபடி உத்ஸர்ஜநம் செய்ய வேண்டும். கைகளிலும், தேஹங்களிலும் அமைவதாக எந்த ந்யாஸம் சொல்லப்பட்டதோ, அவற்றில் தன்னைப் புகுத்திக்கொண்டு மறுபடி ந்யாஸம் செய்ய வேண்டும்.

## ஶிஷ்யன் பார்த்தல்

பிறகு உத்தமமான மந்த்ரத்தை ஶரீரமாகக் கொண்டவரும், மந்த்ர ஸ்வரூபமாகவும், மந்த்ரத்துக்கு ஸாரதியாயும், விஷ்ணுவின் ஸங்கல்பத்தினுல் உண்டான ஸுதர்ஶநமயமான ஶரீரத்தைத் தாங்கிய (ஆசார்யன்) அக்நி, ஸூர்யன், சந்த்ரன் இவர்கள் வடிவத்திலுள்ள கண்களால் முறையே ஶிஷ்யனைப் பார்க்க வேண்டும்.

## ஶிஷ்யனுக்கு ஸம்ஹார ந்யாஸம்

பிறகு ஸ்தூலம் முதலிய த்யாநத்தோடு, மந்த்ரத்தால் அதே பாவத்தைக் கொண்டு அதே (தேஹத்தை) எரிக்க வேண்டும். முன் சொன்ன முறையை அநுஸரித்து ஶிஷ்யன் ஶரீரத்தைப் பரமாத்மாவில் மூழ்கவைத்து முன் சொன்ன முறையில் செய்ய வேண்டும். எரிக்கப்பட்டு எழுந்திருந்த அந்த ஶிஷ்யனுடைய ஶரீரத்தில் முன் சொன்ன முறையில் மந்த்ரத்தால் ந்யாஸம் செய்ய வேண்டும்.

## மந்த்ரோபதேஶம்

இனி அந்த ஶிஷ்யனுக்கு அங்கங்களோடு கூடியதும், அர்த்த விளக்கத்தோடு கூடியதும், பக்தி ஶ்ரத்தையோடு கூடியதும் எந்த எந்தக் கருத்து மறைந்திருக்கிறதோ அதை அந்த மந்த்ரராஜனை ஶிஷ்யனுக்கு உபதேஶம் செய்ய வேண்டும். இவ்வாறு அநாதியான மந்த்ரராஜன் உபதேஶம் பெறப்பட்டபோது, பகவானுடைய கடாக்ஷத்தினுல் ஏற்படக் கூடிய நம்பிக்கை அவன் மனதில் தானாகவே உண்டாகும்.

## ஶிஷ்யனுடைய கடமை

இவ்வாறு நன்றுக உபதேஶம் பெறப்பட்ட மந்த்ரத்தால் மந்த்ரத்தை அறிந்த ஶிஷ்யன் தன்னைப் பாக்யஶாலி என்று நினைத்துப் பிறகு ஆசார்யனிடம் பின் வருமாறு விண்ணப்பம் செய்ய வேண்டும் - ''தன்னையும் தன்னுடையதான பொருள்களையும், மேலும் எவையெல்லாம் இருக்கின்றனவோ அவற்றை எல்லாம், பாபத்தையும், மற்ற ப்ரியமில்லாத சில பொருள்களைத் தவிர

எல்லாவற்றையும் காணிக்கையாக ஸமர்ப்பிக்கிறேன். இவ்வாறு விண்ணப்பம் செய்த பிறகு தன்னைத் தானே பாக்யஶாலி என்று நினைத்துக் கொள்ள வேண்டும். இப்படிப்பட்ட எண்ணம் கொண்டவனுக்குக் கபடமில்லாமையால் மந்த்ரம் தன்னைத்தானே ப்ரகாஶிக்கச் செய்யும். ஶிஷ்யனுடைய பக்தி ஶ்ரத்தையிலுள்ள ஏற்றத் தாழ்வினால் அந்தந்த தீக்ஷை முதலியவற்றின் ஸாதநங்களெல்லாம் தான் பெற்ற தீக்ஷையாலும், பிறருக்கு தீக்ஷை செய்விப்பதாலும் அல்லது தன் புத்தியினாலேயே தன்னை நல்ல பாத்ரமாக ஆக்கிக் கொண்டு அதர்வண வேதத்தில் சொன்ன ஸம்ஸ்காரங்களாலும் மந்த்ரங்களாலும் ஸம்ஸ்காரம் செய்து கொண்டு குருவினால் தனக்கு உபதேஶிக்கப்பட்ட இந்த மந்த்ரத்தை உபதேஶிக்க வேண்டும். இவ்வாறு தான் க்ரஹித்து ஸித்தி பெற்ற ஸாதநங்களைக் கொண்டு, மௌநமாய் இருந்து, ஸித்தி பெற்ற இந்த மந்த்ரத்தினால் உலகத்துக்கு நன்மையை ச்செய்ய வேண்டும்.

**இந்த மந்த்ரத்தை அற்பப் பயனுக்காக ப்ரயோகித்தல் கூடாது**

ஒரு பொழுதும் யாரோ ஒரு அற்பனுக்கோ, அல்லது தனக்காகவே இந்த மந்த்ரத்தை அற்ப விஷயங்களுக்காக ப்ரயோகித்தல் கூடாது. அது அற்பமான செயல் என்று சொல்லப்பட்டுள்ளது. மூன்று உலகங்களின் பாதுகாப்புக்காகவும், பூமண்டலத்தின் நன்மைக்காகவும், அரசனுக்காகவும், அரசனின் மந்த்ரிக்காகவும், நன்மைக்காகவே, இதை ப்ரயோகித்தல் வேண்டும். அபாவத்துக்காக (தீய பதங்களுக்காக) ஒரு பொழுதும் ப்ரயோகிக்கக்கூடாது.

**முதலில் செய்ய வேண்டிய விதி**

மலைகளின் உச்சியிலோ, ஆற்றங்கரையிலோ, தேவாலயங்களிலோ முனிவர்களின் ஆஶ்ரமத்திலோ, ஸித்தர்கள் தங்குமிடத்திலோ, பஶு மாட்டுக் கொட்டிலிலோ, அக்நி ஶாலையிலோ, மூன்று க்ருச்ரங்களால் லக்ஷ்மீ ஜபம் ஆவ்ருத்தி செய்து, தன்னை ஶுத்தம் செய்து

கொண்டு, **ஸாத்வத ஸம்ஹிதையில்** சொல்லப்பட்ட ப்ரம்ம - கூர்சத்தினால் தன்னை மூன்று முறை ப்ரோக்ஷித்துக் கொண்டு, ஒரு பகல் முழுவதும் விஷ்ணுவின் பிம்பத்தைத் திருவடி முதல் திருமுடிவரை ஸேவிக்க (பார்த்தல்) வேண்டும். பிறகு பிக்ஷை எடுத்த ஹவிஸ்ஸை, **யவ** என்கிற தாந்யத்தால் செய்த அந்நத்தைக் கொண்டு ஆஹாரம் செய்ய வேண்டும். பாலையோ, ஹவிஸ்ஸையோ எது முடியுமோ அந்த தீக்ஷை செய்து கொள்ளலாம் (**ஹவிஸ்** என்பது கஞ்சியை வடிக்காமல் நன்ருகப் பக்குவமான சாதத்தாலான உஷ்ணம் குறையாத ப்ரஸாதம் என்று சொல்லப்பட்டது).

### மந்த்ர ஜபங்களின் எண்ணிக்கை

மந்த்ரத்தில் ஸித்தி பெற்ற ஆசார்யன் 6 லக்ஷம் ஜபிக்க வேண்டும். 60 ஆயிரம் ஹோமம் ஆறு முறை செய்ய வேண்டும். இதே அளவு தீர்த்தத்தினால் தர்பணம் செய்ய வேண்டும். பிறகு ப்ராஹ்மண போஜநம் (ஸந்தர்பணை) செய்விக்க வேண்டும். மேலே சொன்னவைகளைக் கபடமின்றி முறைப்படி செய்தால் மந்த்ரராஜன் அநுக்ரஹம் செய்வார், (ப்ரஸந்நமாவார்). மந்த்ரம் ப்ரஸந்நமானதால் உலகத்தின் அன்பின் காரணமாக ரக்ஷையை அரசனால் ப்ரார்த்திக்கப் பட்டவனாக இருந்தே செய்ய வேண்டும். ஒரு போதும் தக்ஷிணையில் குறைபாடு கூடாது. இவ்வாருக **மந்த்ரராஜனுடைய** விளக்கம் நன்ருக உமக்குச் சொல்லப்பட்டது, இந்த மந்த்ரம் உரத்த குரலில் (யாவரும் கேட்கும்படி) சொல்லப்பட வேண்டும். இஷ்டப்படி சொல்லப்படக் கூடாது.

இவ்வாருகப் பாஞ்ச ராத்ரம், தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** மந்த்ரங்களின்
உபதேஶம் பெறுதல் என்கிற தீக்ஷமுறை என்கிற
20வது அத்யாயம் முற்றிற்று.

ஜ்யோதிமயமான ரக்ஷை விளக்கம் என்கிற

## 21வது அத்யாயம்

**த்யாதம் ஸக்ருத்பவ ஈநேககோட்யகௌகம் ஹரத்யரம்।**
**ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥**
*(விளக்கம் 18வது அத்யாயத்தில் காண்க)*

### ரக்ஷை முறைகள் பற்றிக் கேள்வி

*நாரதர் :—* எல்லா தேவகணங்கள் கூட்டங்களுக்கும் நன்மை செய்யும் உமக்கு நமஸ்காரம், முப்புரங்களை எரித்த உமக்கு நமஸ்காரம். பார்வதி மணாளனுக்கு மீண்டும் நமஸ்காரம். உங்களுடைய இந்த வாக்யம் மிகவும் அற்புதமாக இருந்தது. இது வேதங்களிலும் கிடைக்காத பொருள். இதனால் நான் மிகவும் பாக்யம் பெற்றேன். பயன் அடைந்தேன். மேலும் உத்தமமான உமது வார்த்தை என்கிற அம்ருதத்தை மீண்டும் கேட்க விரும்புகிறேன். ரக்ஷை என்பது எது? இந்த மந்த்ரத்தைக் கொண்டு மந்த்ரத்தை உபதேஶம் செய்யும் ஆசார்யனால் அந்த ரக்ஷை எந்த முறையில் செய்யப்பட வேண்டும்?

### ரக்ஷை இரண்டு வகை

*அஹிர்புத்ந்யர் :—* மந்த்ரத்துக்குப் பாதுகாப்பு இரண்டு வகைகள். மந்த்ரத்தை எப்பொழுதும் த்யாநம் செய்து கொண்டிருக்கும் ஒரு ஜ்ஞானியினால் முதலில் ஜ்யோதிமயமாகச் செய்யப்பட வேண்டும். பிறகு உச்சரிப்பு வடிவமாகச் செய்யப்பட வேண்டும். சிதைவு, அழிவு இல்லாததும், எக்காலத்திலும் இருப்பதும் மிகப் பெரியதுமான உத்தமமான பரப்ரஹ்மம் என்கிற ஜ்யோதி எதுவோ ஸூர்யனுக்கு ஒளி தரும் ஸூர்யன். சந்த்ரனுக்கும் மேலானவன். எல்லா ஜ்யோதிகளுக்கும் அவனே தேஜஸ். எப்பொழுதும் பரிபூர்ண காமன் (அவருக்கு எந்தத் தேவையுமில்லை). எப்பொழுதும் ஆநந்தமயன். தோற்றம் - மறைவு இல்லாதவன். அந்த ப்ரஹ்மத்தை அச்சாகச் செய்ய வேண்டும். பிறகு அந்த மாந்த்ரிகனின் நாபியை நினைக்க வேண்டும்.

## நாபி அமைத்தல்

அந்த ப்ரஹ்மத்தின் தர்மத்தைத் தனது தர்மமாகக் கொண்டவளும், ப்ரஹ்மத்தை விட்டு ஒருபோதும் பிரியாதவளும், கர்மங்களால் ஏற்படும் உருவமற்றவளும், தந்நிகரற்றவளும், எப்பொழுதும் உலகங்களைக் கடாக்ஷித்து அநுக்ரஹிப்பவளுமாக நாபியை நினைக்க வேண்டும்.

## ஸ்ரீ ஶப்தத்தின் விளக்கம்

ஸ்ரீ விஷ்ணுவின் ஆஶ்ரயத்திலிருப்பதாலும், மற்ற ஜீவன்களால் ஆஶ்ரயிக்கப்படுபவளாயும், (நம் ப்ரார்த்தனைகளைக் கேட்பதாலும்) ஜீவர்களைக் கேட்கும் ஶக்தி உடையவர்களாகச் செய்பவளும், அளவில்லாத ஆநந்த ஸ்வரூபிணியும், மிகப் பெரிய ஒளியுடன் கூடியவளும், மாறுதல்கள் அற்றவளும், எந்த வகையான தேவையற்றவளுமாக இருப்பவள் என்பது ஸ்ரீ என்பதன் பொருளாகும் (பணம், மனைவி, குழந்தைகள் விருப்பமின்மை).

## லக்ஷ்மியின் ஆறு குணங்கள்

**ஜ்ஞாநம், ஶக்தி, பலம், ஐஶ்வர்யம், வீர்யம், தேஜஸ்** இவற்றின் ஒளி நிறைந்தவள் லக்ஷ்மி. பல பல அவதாரங்கள் செய்பவள். பிரிக்க முடியாதவள் (பகவானிடமிருந்து). மற்ற தத்வங்களைப் பிரிப்பவள். **நந்தா, பத்ரா, ரிக்தா, ஜயா, பூர்ணா, அம்ருதா, ஹரா** என்கிற திருநாமங்கள் உடையவள். மூன்று வடிவங்கள் உடையவள், மூன்று வடிவமற்றவள். கண்களால் பார்க்கும் அனைவருக்கும், ப்ரியமானவள். எந்த நிஷேத ஶாஸ்த்ரங்களாலும் தடுக்க முடியாதவள், (ஒன்றைக் கூடாது என்பது சொல்வது **நிஷேத ஶாஸ்த்ரம்**). எந்த வகையான ஶாஸ்த்ரக் கட்டுப்பாடுகளாலும் கட்டுப்படுத்த முடியாதவள். வாக்கினால் துதிக்க முடியாதவள். ஆனால் வாயால் சொல்லத் தக்கவள். என்றைக்கும் அழிவில்லாதவள். இவள் **கௌரீ, லக்ஷ்மீ, ஸரஸ்வதீ** என்கிற திருநாமங்கள் கொண்டவள்.

## ஆரம் அமைத்தல்

இப்படிப்பட்ட அந்த ஶக்திக்கு (மறைதல், படைத்தல், காத்தல், அழித்தல், அருள் புரிதல்) என்கிற ஐந்து வகைச் செயல்களை நாம் அமைக்க வேண்டும்.

## வட்டை அமைத்தல்

வ்யூஹத்தையும், வ்யூஹாந்தரத்தையும், வட்டை உருவமாக அமைக்க வேண்டும். ஸத், சித், ஆநந்தம் இவற்றின் எல்லையற்ற நிலை வடிவமாகவும், அசைதல் அசையாதிருத்தல் நிலை உடையதாகவும் எல்லா கார்யங்களுக்கு அடிப்படையாகவும், தூய்மையானதாகவும், செயலற்ற - நிலையான யோகம் தவம் இவற்றில் உள்ளவர்களால் த்யாநிக்கப்படுபவளாகவும், ஸ்ருஷ்டி-ப்ரளயம் இரண்டு காலங்களிலும் இருப்பவளும், தோற்றம், மறைவு இவையற்றதும், எப்பொழுதும் அவஸ்தைகள் இல்லாமலும் (ஶைஶவம், பால்யம், கௌமாரம், யௌவநம், ஜரா என்பவை மங்கையர்களின் அவஸ்தைகள்), நான்கு அவஸ்தைகளோடு கூடியவளும், கால் அற்றதும், (அடிவைத்தல் அற்றதும்), க்ரமங்களில் (முறைகளில்) உள்ள நான்கு பாதங்கள் உள்ளதும், ஆயுதங்கள் இல்லாததும், பரபரப்பு (Tension) அற்றதும், ஸகல ஆயுதங்கள் நிறைந்ததும், ஶாஸ்த்ரங்களும் அவற்றின் பொருள்கள் என்கிற வகைகள் கூடியதும், பலன்களைக் கொடுப்பதில் திறமை மிக்கதும், சந்த்ரன் ஸூர்யன் அக்நி இவற்றின் கோடிக் கணக்கான அற்புதக் கணக்கானதும், ஈடற்ற தன் ஒளிக் கூட்டங்களால் எல்லாவகைப் பாபங்களை அழிக்கும் நேமி (வட்டை)யை அமைக்க வேண்டும்.

## விபூதியின் அதிபதிகளுக்கு வட்டையின் வெளிப்புறம் இடம்

விபூதிகளுக்கு அதிபதிகளை வட்டையின் வெளிப்புறத்தில் ஒளி மிகுந்தவர்களாக த்யாநம் செய்ய வேண்டும். ஆயிரம் சந்த்ரன் ஸூர்யன் அக்நி இவற்றின் ஒளியுடையவர்களும், ஜ்ஞாநம் ஆநந்த ஸ்வரூபம்

உள்ளவர்களும், எல்லாவகை உருவங்களை உடையவர்களும், உருவமற்றவர்களும், எல்லாவகை விரும்பிய பலன்களைத் தருபவர்களும், ராக்ஷஸர்கள், தைத்யர்கள், தானவர்கள் இவர்களைத் தன் ஒளிக்கற்றையால் மறைப்பவளுமான இவளை நினைக்க வேண்டும். தாம்ர வர்ணமானவளும், ஒளிப் பிழம்புகளிலிருந்து உதித்தவளும், ஶுத்தமல்லாத ஸ்ருஷ்டி வடிவத்தில் த்யாநிக்க வேண்டும். விரும்பினால் **த்ரைலோக்ய தாரணீ சக்ர**மாகவோ, மண்டலமாகவோ அதனுடைய தேவதை என்றே அச்சில் இருப்பதாக த்யாநிக்க வேண்டும்.

## இவ்வாறு த்யாநித்தால் வேறு பலன்களையும் தரவல்லதாக அமையும்

மந்த்ர உபதேஶகன் இவ்வாறு எங்கு கருத்தை மனதில் கொண்டிருப்பானோ, அங்கு பாபங்கள் தொலைந்துவிடும். ஆதி வ்யாதிகள் தீரும். (ஆதி - மந நோய், வ்யாதி - உடல் ஸம்பந்த தொல்லை) ஈதிபாதைகளும், பகைவர்களும், வேறுவகை ஶ்ரமங்களும் கூட ஏற்படாது (ஈதி - மூஷிக (எலி), மஶக தம்ஶ கொசு, ஈ முதலியவை கடித்தல் ஈதிகள்). அரசன் எப்பொழுதும் வெற்றியைப் பெறுவான். அமைச்சர்களும் எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் இருப்பர். நண்பர்கள் எப்பொழுதும் நல் மநத்துடனிருப்பர்; நெருங்கிய நண்பர் இன்பம் பெறுவர். உறவினர்கள் அன்பு நிறைந்தவர்களாக இருப்பர். ஸாதுக்கள் எப்பொழுதும் நிறைந்திருப்பர். நம்மால் வளர்க்கப்பட வேண்டியவர்களுக்கு (குடும்பத்தினருக்கு)ச் செல்வம் செழிக்கும். மஹாலக்ஷ்மியின் கடாக்ஷம் எப்பொழுதும் இருக்கும். மக்கள் எல்லாச் செல்வமும் நிறைந்திருப்பர். ஒருவரை ஒருவர் நேசிப்பர். செல்வத்தைக் கொண்டு விருப்பங்களை (ஸுக போகங்களை)ப் பெறுவர். தர்ம கார்யங்கள் செய்வதன் மூலம் செல்வம் பெறுவர். பணத்தைக் கொண்டு காமத்தையும் தர்மத்தையும் பூர்த்தி செய்து கொள்ளலாம். பணத்தால் ஸுக போகங்களை நிறைவேற்றிக் கொள்ளலாம். காமம் தர்மம் இவற்றால் தர்மத்தை நிறைவேற்றி, தர்மம் காமம் இவற்றால் செல்வம் சேர்க்கலாம்.

**முக்ய பலன்கள்**

மக்கள் அனைவரும் தங்கள் கடமைகளில் ஈடுபடுவர். மேலும் நன்மைகளைப் பெறுவர். பரமாத்மாவைப் பற்றித் தெளிந்த ஜ்ஞாநம் பெற்றுப் **பரமபதம்** என்கிற **ஸ்ரீ வைகுண்டம்** அடைவர். இவ்வாருக ஜ்யோதிமயமான ரக்ஷை உமக்கு விளக்கப்பட்டது. **வாக்** உருவமான ரக்ஷையைப் பற்றிச் சொல்கிறேன், கேளும்.

இவ்வாருகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** ஜ்யோதிமயமான ரக்ஷை
என்கிற 21வது அத்யாயம் முற்றிற்று.



மந்த்ரமயமான ரக்ஷை விளக்கம் என்கிற

## 22வது அத்யாயம்

**த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।**
**ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி॥**

**அஹிர்புத்ந்யர் :—** வாக்கு வடிவமானது என்று சொல்லப்படும் மந்த்ரமயமான **ரக்ஷை**யைச் சொல்கிறேன், கேளும். அதில் தேவர்கள், அஸுரர், மனிதர்கள் அடங்கிய இந்த உலகம் முழுமையும் பின்னிக் கிடக்கிறது. **மந்த்ரராஜன்** என்று சொல்லப்பட்ட இது ஆறு அக்ஷரங்கள் கூடியது என்று சொல்லப்பட்டது. நல்ல ஸித்தி பெற்றவர்களுக்கு இது இஷ்டங்களை நிறைவேற்றும். நினைக்க முடியாத ஆஶ்சர்யங்கள் நிறைந்தது. அந்த மந்த்ரத்தை, **ப்ரணவம் - ஶக்தி - ஸ்ரீ** - இவற்றின் பீஜாக்ஷரங்களைக் கொண்டு அமைக்க வேண்டும். ப்ரணவத்தையும், தாரத்தையும் கொண்டு சுற்றி வளைக்க வேண்டும். தாரத்தால் மூன்று முறையும், இவ்வாறே ஶக்தியாலும் ஸ்ரீ பீஜத்தாலும் சுற்றி வளைக்க வேண்டும். சுற்றிலும் மறுபடி மாத்ருகாக்ஷரங்களுடன் கூடவே எழுத வேண்டும். மேலும் வெளியில் கோரும் பலனை எழுத வேண்டும். மீண்டும் வெளியில் மந்த்ர ராஜனை **தாரம், ஶக்தி, ஸ்ரீ** இவற்றால் எழுத வேண்டும். இந்த உத்தமமான **அக்ஷ** அமைப்பு தேவர்களுக்கும் கிடைக்காது. **ஸ்ர** என்பதை **ஶக்தி, ஸ்ரீ** இந்த பீஜங்களால் அணைத்துக் கொள்ளப்பட்டதாக அமைக்க வேண்டும். **ஸ்ரா** என்கிற பீஜத்தோடு சேர்த்து மந்த்ரராஜனால் சுற்றி வளைக்க வேண்டும். **ஶக்தி, ஸ்ரீ, தாரம்** இவைகளோடு சேர்ந்த மாத்ருகாக்ஷரத்தை வெளியில் எழுத வேண்டும். பிறகு **அப்ரமேயம், தாரம்** இவற்றையும், ஶக்தியைப் பிறகும் **வ்யாபக** மந்த்ரத்தையும் **ஸ்ரீ** என்பதையும் வரிசையில் கிழக்கு அரத்தை எழுத வேண்டும். **அப்ரமேயத்துடன்** இணைத்து மந்த்ரத்தின் இரண்டு பக்கங்களில் எழுத வேண்டும். உத்தமாதி முறைப்படியே தென்புறத்து அரத்தை எழுத வேண்டும். ப்ரஸாதம் முதலிய க்ரமத்தால் மேற்கு அரம் அமைக்க வேண்டும். **வ்யோமேஶன்** முதலிய

முறைப்படி வடக்கு அரம் அமைய வேண்டும். இந்த உத்தமமான நான்கு அரங்கள் கொண்ட ரக்ஷை தேவர்களாலும் நன்கு பூஜிக்கப்படுவதாகும். அரத்தின் தொடக்கத்திலும் முடிவிலும் ரம் என்கிற பீஜத்தை எழுத வேண்டும். இந்த நான்கு அரங்களும் ப்ரளயகால அக்நி போன்ற ஜ்யோதியாக அமையும். சுற்றிலும் விஷ்ணுவின் ஆறு அக்ஷரங்களை எழுதி ஶக்தி, தாரம், ஸ்ரீ பீஜங்களோடு அனைத்தையும் கவசம் போன்ற வளையத்தால் சுற்ற வேண்டும். இவற்றைச் சுற்றிலும் லக்ஷ்மி தாரம், ஶக்தி, பீஜங்களை மூன்று மூன்றாக எழுத வேண்டும். ஆறு அக்ஷரங்கள், தாரம், ஶக்தி, ஸ்ரீ இவற்றுடன் இணைத்து மாத்ருகாக்ஷரத்தை மறுபடி ஒவ்வொரு இடத்திலும் சக்ரம் எழுத வேண்டும். இதுவே நான்கு அரங்களைக் கொண்ட சக்ரம் என்று சொல்லப்படுகிறது.

## ஆறு அரங்கள் கொண்ட விஷ்ணு சக்ரம்

இப்பொழுது சொல்லப்போகும் சக்ரத்தை ப்ரணவமயமாகவும், அச்சாகவும், அமைக்க வேண்டும். ப்ரணவம், ஶக்தி, லக்ஷ்மி இவற்றின் பீஜாக்ஷரங்களைக் கொண்டு இணைக்கப்பட்டதும், மந்த்ரராஜனுமாக அமைக்க வேண்டும். சக்ரத்தின் சுற்றிலும் முன்பு எதை அக்ஷமாகச் சொன்னோமோ, அதை அமைக்க வேண்டும். வெளியில் தாரம் முதலிய மூன்றையும் உள்ளே கொண்ட திருநாமத்தின் அக்ஷரங்களை எழுத வேண்டும். இதற்கும் வெளியில் விஷ்ணுவின் ஆறு அக்ஷரங்கள் கொண்ட மந்த்ரராஜனை எழுத வேண்டும். இதற்கும் வெளியில் ஸ ஹ இவை கொண்ட மாத்ருகையை எழுத வேண்டும். இவை அனைத்தையும் அச்சாக த்யாநிக்க வேண்டும். ஶக்தி லக்ஷ்மி பீஜங்களுடனும் தாரத்துடனும் இணைக்கப்பட்ட ஸ்ரா என்கிற பீஜத்தை நாபியாக வைத்து ஆறு எழுத்துக்கள் கொண்ட வைஷ்ணவ மந்த்ரத்தினால் அமைக்க வேண்டும். ஸ்ரா என்கிற எழுத்தோடு சேர்ந்த மாத்ருகாக்ஷரங்களைச் சுற்றிலும் எழுதவேண்டும். ர எனும் எழுத்தையும் ப்ரணவத்தையும், ர எனும் ப்ரணவமும் ஶக்தி பீஜத்தையும், பிறகு ரேபத்தையும் (ர) ப்ரணவத்தையும், பிறகு லக்ஷ்மியையும், ர என்பதையும்

இந்த வரிசையில் முதலில் எழுத வேண்டும். ப்ரளய காலத்து ஒளியுடைய அரத்தைத் தென் கிழக்கில் எழுத வேண்டும். ப்ரணவத்துடன் சேர்ந்து **அக்நி** (ரம்) மந்த்ரத்தை எழுத வேண்டும். ரேபம் **(ர) வம், ப்ரணவம்; ர வம் ஶக்தி; ர வம் லக்ஷ்மி;** ர என்கிற வரிசையில் தென்திசையில் அரம் அமைக்க வேண்டும். **ரேபம், ஷ்ணம், ப்ரணவம், ரேபம், ஷ்ணம், ஶக்தி; ரேபம் ஷ்ணம் லக்ஷ்மி** ரேபம் என்கிற முறையில் தென் மேற்கு திசையிலும், **ரேபம்** வேம்; ப்ரணவம்; ரேபம் வேம் ஶக்தி பீஜம்; ரேபம் வேம் லக்ஷ்மி; ரேபம் என்று மேற்கு திசையில் அரம் எழுத வேண்டும். ரேபம் நம் ப்ரணவம்; ரம் நம் ஶக்தி பீஜம்; ரேபம், நம் லக்ஷ்மி பீஜம் ரேபம் என்று வட மேற்கு திசையிலும், ரேபம், மோம், ப்ரணவம்; ரேபம் மோம் ஶக்தி பீஜம்; ரேபம் மோம் லக்ஷ்மி பீஜம்; ரேபம் என்று வட கிழக்குத் திசையில் எழுத வேண்டும். அந்த அந்த அக்ஷரங்களால் குறிக்கப்பட்ட மந்த்ரத்தை அந்த அந்த அரங்களின் ஓரங்களில் எழுத வேண்டும். இந்த அரங்கள் 10 அக்ஷரங்கள் கொண்டவையாய் இருக்கும். இப்படி ஆறு அரங்கள் இருக்கும் இந்த உத்தமமான யந்த்ரம் தேவர்களாலும் வணங்கப்படுவதாகும். சுற்றிலும் வட்டையாக மந்த்ரத்தின் ஸித்தி பெற்றவர் அஷ்டாக்ஷரத்தை எழுத வேண்டும். ஹம் என்கிற பீஜத்தை, ஶக்தி, ஸ்ரீ, ப்ரணவத்தோடு கூடியதாக வட்டமாக எழுத வேண்டும். ஶக்தி பீஜம், ப்ரணவம் லக்ஷ்மி பீஜம் மூன்று மூன்று முறை எழுத வேண்டும். பட் என்பதோடு இணைந்த மாத்ருகையை வெளியில் வட்டை போன்ற ப்ரதி எழுத வேண்டும். இந்த ஆறு அரங்கள் கொண்ட சக்ரம் 26 எழுத்துக்கள் கொண்டது.

### எட்டு அரங்கள் கொண்ட நாராயண சக்ரம்

இந்த ஆறு அரங்கள் கொண்ட ஒளி மிகுந்த சக்ரத்தை அச்சாக அமைக்க வேண்டும். அஷ்டாக்ஷர மந்த்ரத்தினால் எட்டு ஆரங்கள் கொண்ட சக்ரத்தை அமைக்க வேண்டும். மிகுந்த வலிமையுடையதும், மிகவும் பயங்கரமானதும், ப்ரளய கால அக்நி போன்ற ஒளியுடைய இந்தச் சக்ரத்தை அமைக்கும் முறையை முநிவரே! கவனமாகக் கேளும்.

இதைச் சுற்றிலும் தாரம் முதலிய பீஜங்களோடு சேர்ந்த மந்த்ரத்தை எழுத வேண்டும். அதற்கு வெளியில் தாரம் முதலிய பீஜங்கள் சேர்ந்த நாம (அஷ்டாக்ஷர) எழுத்துக்களை எழுத வேண்டும். அஷ்டாக்ஷர மந்த்ரத்தைக் கொண்டு இணைக்கப்பட்ட மந்த்ரராஜனை வெளியில் சுற்றிலும் எழுத வேண்டும். அதற்கு வெளியில் **ஸஹ** உள்ளடங்கியதாக மாத்ருகா அக்ஷரங்களை எழுத வேண்டும். இவற்றையெல்லாம் அச்சாக த்யாநிக்க வேண்டும். ஶக்தி பீஜம், லக்ஷ்மி பீஜம், தாரம் இவைகளோடு அஷ்டாக்ஷரத்தினால் மிகவும் அத்புதமான **ஸ்ர** என்கிற எழுத்தை நாபியாக அமைக்க வேண்டும். **ஸ்ர** என்பதோடு சேர்ந்த மாத்ருகாக்ஷரங்களையும் சுற்றிலும் எழுத வேண்டும். இதுவே நாபி என்று கருதப்படும். வெளியில் அஷ்டாக்ஷரத்தை எழுத வேண்டும். **ரம் ப்ரணவம், தாரம்; ரம் தாரம்; ரம் தாரம்; ஶ்ரீபீஜம் ரம்** என்று கிழக்கு ஆரத்தை அமைக்கவேண்டும். ரம், நம், தாரகம், ரம், நம், ஶக்திபீஜம், ரம் ஶ்ரீபீஜம் ரம் என்று தென் கிழக்கில் ஆரம் அமைக்க வேண்டும். **ரம், மோம், தாரம், ரம் மோம் ஶக்தி பீஜம், ரம் மோம் இரண்டும் ஶ்ரீ பீஜம் ரம்** என்று ஜ்ஞாநியாக இருக்கும் ஒருவர் இந்த வரிசையில் தெற்கு ஆரம் அமைக்க வேண்டும். **ரம் நாம் தாரகம், ரம் நாம் ஶக்தி பீஜம், ரம் நாம் ஶ்ரீ பீஜம் ரம்** இவ்வாறு தென் மேற்கு திக்கில் எழுத வேண்டும். **ரம் ராம் தாரகம், ரம் ராம் ஶக்தி பீஜம், ரம், ராம், ஶ்ரீ பீஜம் ரம்** இவ்வாறு மேற்கு ஆரத்தை அமைக்க வேண்டும். **ரம் யம் தாரகம், ரம் யம் ஶக்தி பீஜம், ரம் யம், ஶ்ரீ பீஜம் ரம்** இவ்வாறு வடமேற்கு ஆரத்தை எழுத வேண்டும். **ரம் ணாம் தாரகம், ரம் ணாம் ஶக்தி பீஜம், ரம் ணாம் ஶ்ரீ பீஜம், ரம்** என்று வடக்கு ஆரத்தை அமைக்க வேண்டும். **ரம் யம் தாரகம், ரம் யம் ஶக்தி பீஜம், ரம் யம் ஶ்ரீ பீஜம் ரம்** என்று வடகிழக்கில் ஆரம் அமைக்க வேண்டும். சொன்ன வகையில் அந்த அந்த அக்ஷரங்களோடு இரு ஓரங்களிலும் மந்த்ரத்தையும், எழுதி அமைக்கப்பட்ட இந்த எட்டு ஆரங்கள் கொண்ட இது என்றும் மிகவும் புண்யமானது. தேவர்களாலும் அஸுரர்களாலும் நமஸ்கரிக்கப்படுவதாகும். சுற்றிலும் ஆஶ்சர்யமான த்வாதஶாக்ஷர மந்த்ரத்தை வட்டையாக அமைக்க வேண்டும்.

தாரம், தாரம், தாரம் இவைகளால் இணைக்கப்பட்ட ஹ்ரா்ம் என்கிற அக்ஷரத்தை வெளியில் எழுத வேண்டும். ஶக்தி பீஜம், தாரம், ஸ்ரீ பீஜம் இவற்றை மூன்று மூன்றாக வெளியில் சுற்றிலும் எழுத வேண்டும். **பட்** எழுத்துடன் கூடிய மாத்ருகாக்ஷரத்தை வெளியில் **கூட்டாக** அமைக்க வேண்டும். **நாராயணனைத்** தேவதையாக கொண்ட **நாராயணனால்** சொல்லப்பட்ட இந்த மஹா சக்ரத்தை அச்சாக வைத்து இந்தச் சக்ரத்தைப் பன்னிரண்டு ஆரங்கள் கொண்டதாக எழுத வேண்டும். வாஸுதேவனைத் தேவதையாகக் கொண்ட **வாஸுதேவ சக்ரம்** அமைக்கும் முறைகளைச் சொல்கிறேன், கேளும்.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** மந்த்ரமான
**ரக்ஷை விளக்கம்** என்கிற
**22**வது அத்யாயம் முற்றிற்று.



வாஸுதேவன் முதலிய யந்த்ர நிரூபணம் என்கிற

# 23வது அத்யாயம்

**த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம் ।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய திமஹி ॥**

(இதன் விளக்கம் 18வது அத்யாயத்தில் கொடுக்கப்பட்டுள்ளது).

### 12 ஆரங்கள் கொண்ட சக்ரம்

**அஹிர்புத்ந்யர் :—** 12 ஆரங்கள் கொண்ட சக்ரத்தை அமைக்கும் முறையை இனி சொல்கிறேன். இதை த்யாநம் செய்த மாத்திரத்தில் பாபங்கள் எல்லாம் சிதறி அழிந்துவிடும். **நாராயண சக்ரம்** என்று எது முன்பு சொல்லப்பட்டதோ, அதை அச்சாக ஆசார்யன் சொல்லப் போகிற முறைப்படி அமைக்க வேண்டும். **நாராயண சக்ரம்** என்கிற பெயருடைய சக்ரத்துக்கு வெளியில் **தாரம் தாரம் தாரம்** என்ற மூன்றுகளால் இணைந்த மந்த்ரராஜனைச் சுற்றிலும் எழுத வேண்டும். இதற்கு வெளியில் **தாரம், ஶக்தி பீஜம், ஸ்ரீ பீஜம்** இவைகளோடு கூடிய மந்த்ரத்தில் உள்ள எழுத்துக்களை எழுத வேண்டும். **த்வாதஶாக்ஷர** மந்த்ரத்தோடு கூடிய மந்த்ரராஜனைச் சுற்றிலும் எழுத வேண்டும். வெளியில் **ஸ ஹ** இவற்றோடு கூடிய மாத்ருகாக்ஷரங்களை எழுத வேண்டும். இவையெல்லாம் சேர்ந்து அச்சாக த்யாநிக்க வேண்டும். த்வாதஶாக்ஷர மந்த்ரத்துடன் ஶக்தி பீஜம், ஸ்ரீ பீஜம், தாரகம் இவைகளோடு இணைந்த மிகவும் அத்புதமான **ஸ்ர** என்பதை நாபியாகக் கருத வேண்டும். **ஸ்ர** என்கிற எழுத்தோடு இணைந்த மாத்ருகாக்ஷரங்களை எழுத வேண்டும். இதுவே **நாபி** என்று சொல்லப்படுகிறது. பிறகு த்வாதஶாக்ஷரங்களை எழுத வேண்டும். கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு இந்தத் திசைகளில் இரண்டு இரண்டாகவும், தென் கிழக்கு, தென் மேற்கு, வடமேற்கு, வட கிழக்கு மூலைத் திசைகளில் ஒவ்வொன்றாகவும் எழுத வேண்டும். **ரம்,** மந்த்ரத்தின் அக்ஷரங்கள், **தாரம்; ரம்,** மந்த்ராக்ஷரங்கள் **தாரம்; ரம்**

மந்த்ரத்தின் அக்ஷரங்கள், **ஸ்ரீ பீஜம்**, ரம் என்ற முறையில் த்வாதஶாக்ஷர மந்த்ரங்களுடன் 12 அக்ஷரங்களைக் கிழக்கு முதல் வட கிழக்குவரை மந்த்ரத்தை அறிந்தவன் எழுத வேண்டும். இப்படிப்பட்ட அக்ஷரங்களுடன் கூடிய மந்த்ரத்தை ஆரங்களின் ஓரங்களில் எழுத வேண்டும். 12 அக்ஷரங்கள் கொண்ட இந்த மஹாமந்த்ரம் எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணனுக்கு ப்ரியமானது. **ஜிதந்தே** என்கிற மந்த்ரத்தைச் சுற்றிலும் வட்டையாக எழுத வேண்டும். **தாரம்**, தாரம், **அநுதாரம்** இவைகளால் சேர்க்கப்பட்ட **ஹூம்** என்பதை வெளியில் எழுத வேண்டும். **ஶக்தி பீஜம், லக்ஷ்மி** பீஜம், **தாரம்**, இவற்றை மூன்று மூன்றாக வெளியில் எழுத வேண்டும். **பட்** என்பதோடு கூடிய **மாத்ருகாக்ஷரத்தைக்** கட்டாக (Rim) அமைக்க வேண்டும். **வாஸுதேவ மந்த்ரம்** என்று பெயர் பெற்ற இந்த மந்த்ரம் தேவர்களாலும் போற்றப்பட்டது. இந்தச் சக்ரத்தின் மாஹாத்ம்யத்தை என்னைப் போன்றவர்களால் சொல்ல இயலாது.

### அஜிதா என்கிற 32 ஆரங்கள் கொண்ட சக்ரம்

இந்தச் சக்ரத்தை அச்சாக வைத்து 32 ஆரங்கள் செய்ய வேண்டும். **அஜிதம்** என்கிற பெயருடைய இந்தச் சக்ரம் தேவர்கள் அஸுரர்கள் எல்லாராலும் பூஜிக்கப்பட்டது. இந்தச் சக்ரம் செய்யும் முறை பெரியோர்களால் சொல்லப்பட்டது போல உமக்கு உபதேஶிக்கப்படுகிறது. வாஸுதேவன் என்கிற பெயருடைய சக்ரம் அக்ஷமாக அமைக்கப்படுகிறது. இப்பொழுது எப்படி எப்படி எல்லாம் செய்ய வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளதோ, அந்த முறையைச் சொல்கிறேன் கேளும். மந்த்ரத்தில் ஸித்திபெற்ற ஆசார்யன் வாஸுதேவன் என்ற பெயருடைய அச்சைச் சுற்றிலும் வெளியில் **தாரம் தாரம் அநுதாரம்** இவற்றினால் இணைக்கப்பட்ட மந்த்ரராஜனை எழுத வேண்டும். **தாரம்** முதலியவைகளோடு இணைக்கப்பட்ட 12 அக்ஷரங்கள் கொண்ட நாம வர்ணங்களை வெளியில் எழுத வேண்வும். **ஜிதந்தா** என்கிறதோடு இணைக்கப்பட்ட மந்த்ரத்தைச் சுற்றிலும் வெளியில் எழுத வேண்டும். (ஜிதந்தே

புண்டரீகாக்ஷ ! **ஜிதந்தே விச்வபாவந !** என்கிற ஸ்தோத்ரத்தைக் குறிக்கிறது). **ஸ ஹ** என்கிற இரட்டைகளினால் போஷிக்கப்பட்ட மாத்ருகாவை வெளியில் எழுத வேண்டும். ஒரு பண்டிதன் அந்தச் சக்ரத்துக்கு இதுவே அச்சு என்று புரிந்து கொள்ள வேண்டும். **ஸ்ர** என்கிற மிக அத்புதமான பீஜத்தை, **ஶக்தி பீஜம், லக்ஷ்மி பீஜம், தாரகம்** இவற்றோடு இணைத்து **ஜிதந்தா** என்கிற மந்த்ரத்தின் மூலம் நாபியை ஏற்படுத்த வேண்டும். அதற்கு வெளியில் **''ஸ்ர''** என்பதால் இணைக்கப்பட்ட மாத்ருகாக்ஷரங்களை எழுத வேண்டும். புண்டரீகாக்ஷனான எம்பெருமானுக்கு ப்ரியமான நாபியாக இது அமையும். இதற்கு வெளியில் 32 ஆரங்களை எழுத வேண்டும். ஒவ்வொரு திக்கிலும் நான்கு நான்கு என்கிற முறையில் ஆரங்கள் அமைக்கப்பட வேண்டும். **ரம்,** மந்த்ராக்ஷரம் **தாரம்; ரம்** மந்த்ரங்களின் எழுத்து **தாரகம்; ரம்** மந்த்ரங்களின் எழுத்து **லக்ஷ்மி; ரம்** என்று இந்த முறையில் 32 ஆரங்களை **ஜிதந்தையைக்** கொண்டு நன்றாக எழுத வேண்டும். ஆரத்தின் இரு பக்கங்களிலும் அந்த அந்த அக்ஷரத்தோடு கூடிய மந்த்ரத்தை எழுத வேண்டும். இதுவே உத்தமமான 32 ஆரங்கள் கொண்ட சக்ரம். எம்பெருமானுக்கு ஜயத்தை கோஷிக்கும் சக்ரமாகும். சுற்றிலும் **ந்ருஸிம்ஹாநுஷ்டுப்** மந்த்ரத்தை வட்டையாக அமைக்க வேண்டும். அதற்கு வெளியில் **தாரம், தாரம், அநுதாரம்** இவைகளால் இணைக்கப்பட்ட **ஹூம்** என்கிற பீஜத்தை எழுத வேண்டும். இதற்கும் வெளியில் **ஶக்தி பீஜம், தாரம், லக்ஷ்மி பீஜம்** இவற்றை மூன்று மூன்றாக எழுத வேண்டும். **பட்** என்கிற பீஜத்தோடு சேர்ந்த மாத்ருகையை கட்டாக (Rim) எழுத வேண்டும். **அஜிதம்** என்கிற திருநாமமுடைய இந்தச் சக்ரம் புண்டரீகாக்ஷனுக்கு மிகவும் ப்ரியமானது. இதன் மூலம் தான் **ஸ்ரீ புண்டரீகாக்ஷன்** இப்பொழுது அனைத்து அஸுரர்களை வெற்றி கொள்கிறான். அத்யத்புதமான இந்தச் சக்ரம் விஷ்ணுவின் புகழ் என்று சொல்லப்படுகிறது. இந்த மந்த்ரத்தில் எப்பொழுதும் நல்ல கவனத்தோடு இருக்கும் மாந்த்ரிகர் இந்த உலகத்தையெல்லாம் வெற்றி கொள்வார்.

## நாரஸிம்ஹம் பெயருடன் சேர்ந்த 32 ஆரம் கொண்ட சக்ரம்

இதையே அக்ஷரமாகக் கொண்டு மற்ளுரு சக்ரத்தை அமைக்கலாம். மஹாவிஷ்ணு ஸ்வரூபமாகவும், கோரமாகவும், மங்களகரமாகவும், யமனையும் அழிக்கக் கூடியதாகவும் இது அமையும், குற்றமற்ற முனிவரே! இதை அமைக்கும் முறையைச் சொல்கிறேன் கேளும். **தாரம், தாரம், அநுதாரம்** இவைகளோடு இணைக்கப்பட்ட மந்த்ரராஜனை **அஜிதம்** என்கிற சக்ரத்தின் வெளியில் சுற்றிலும் எழுத வேண்டும். **தாரம்** முதலிய ந்ருஸிம்ஹ மந்த்ரத்தின் பீஜாக்ஷரங்களை எழுத வேண்டும். **ஸ ஹ** என்பதோடு சேர்ந்த மாத்ருகையை **உக்ரம் வீரம்** என்பதோடு சேர்ந்த மாத்ருகையை **உக்ரம் வீரம்** என்கிற மந்த்ரத்தோடு கூடிய **மந்த்ரராஜனை** எழுத வேண்டும். விஷ்ணுமயமான இந்த அச்சு சக்ரத்துக்கு மிகவும் மங்களகரமானது. மிகவும் அத்புதமான **ஸ்ர** என்பதை ஶக்தி **பீஜம், ஸ்ரீ பீஜம், தாரம்** இவைகளோடு இணைத்து **உக்ரம் வீரம்** என்கிற மந்த்ரத்தோடு எழுத வேண்டும். **ஸ்ர** எழுத்துக்களோடு இணைந்த மாத்ருகையை வெளியில் எழுத வேண்டும். நாராயண ஸ்வரூபமாக இந்த நாபி சொல்லப்பட்டு மிகவும் உத்தமமானது ஆகும். நாபிக்குச் சுற்றிலும் 32 ஆரங்களை அமைக்க வேண்டும். எட்டு திக்குகளிலும் நான்கு நான்கு என்கிற முறையில் வரிசையாக எழுத வேண்டும். ரம் **மந்த்ராக்ஷரம் தாரம்; ரம் மந்த்ர பீஜம் தாரம்; ரம் மந்த்ர பீஜம் லக்ஷ்மீ பீஜம்; ரம்** என்று இப்படிப்பட்ட வரிசையில் 32 ஆரங்களை ந்ருஸிம்ஹ அநுஷ்டுப்பால் எழுத வேண்டும். அந்த அந்த அக்ஷரங்களோடு கூட மந்த்ரம் ஆரத்தின் இரு பக்கங்களிலும் எழுதப்பட வேண்டும். இப்படிப்பட்ட 32 ஆரங்களைக் கொண்ட இந்தச் சக்ரம், துஷ்டர்களான அஸுரர்களை அழிக்க வல்லது. இந்தச் சக்ரத்துக்கு வட்டையாக, **காயத்ரீ, த்ருஷ்டுப், ஆநுஷ்டுபம்** என்கிற மூன்று சந்தஸ்ஸுகளை **(காயத்ரீ சந்தஸ் 24** வர்கங்கள் உடையது. முப்பத்திரண்டு அக்ஷரங்கள் கொண்டது) அமைக்க வேண்டும். **ஹூம்** என்கிற பீஜத்தை **தாரம், தாரம், அநுதாரம்**

இவற்றுடன் சேர்த்து வெளியில் எழுத வேண்டும். இதற்கும் வெளியே **ஶக்தி பீஜம், தாரம், ஶ்ரீ பீஜம்** இவற்றை மூன்று மூன்றாகச் சுற்றிலும் எழுத வேண்டும். **பட்** என்கிற அஸ்த்ர மந்த்ரத்தோடு இணைந்த மாத்ருகாக்ஷரத்தைக் கட்டாக அமைக்க வேண்டும். மிகவும் அத்புதமானதும், கோரமானதும், துஷ்டர்களான தாநவர்களை அழிக்கக் கூடியதுமான இந்தக் கட்டு **ந்ருஸிம்ஹனை** தேவதையாகக் கொண்ட பெரிய சக்ரம் என்றும், யமனையும் வெல்லக் கூடியது என்றும் சொல்லப்பட்டது. இந்தச் சக்ரத்தை த்யாநம் செய்வதன் மூலம் **ப்ரேதம், அபஸ்மாரம்** (வலிப்பு), **கூஷ்மாண்டம்** (ஶிஶுக்களைப் பாதிக்கும் நோய்) தைத்யர்கள், தாநவர்கள், ராக்ஷஸர்கள், **டாகிநீ** என்கிற துர்தேவதை, பூத யோநிகள், க்ரூர தேவதைகளும், நோய்களும் எப்பொழுதும் விலகி விடும் (அப்பா ஒருவர். அவருக்கு இரு மனைவிகள், - **தநு, திதி** என்று பெயர். தநுவுக்குப் பிறந்தவர் **தாநவர்**கள். திதிக்குப் பிறந்தவர் **தைத்யர்**).

### நூறு ஆரங்கள் கொண்ட சக்ரம்

இவ்வாறு சொல்லப்பட்டிருக்கும் இந்தச் சக்ரத்தை அச்சாக வைத்துக் கொண்டுதான் நக்ஷத்ர மண்டலம் இயங்குகிறது. மூன்று நக்ஷத்ரங்கள், **(அஶ்விநி, பரணி, க்ருத்திகை) காயத்ரீ, அநுஷ்டுப், உஷ்ணிக்** என்கிற சந்தஸ்கள் இவற்றைப் பற்றி ஸந்தேஹமில்லாமல் பண்டிதர்களால் சொல்லப்பட்ட முறையை இப்பொழுது கேளும். ஆகாயத்தில் கண்ணுக்குப் புலப்படக் கூடியதாகவும், எல்லோருக்கும் தெரிந்ததுமான உத்தமமான எந்த ஒரு ஜோதி உண்டோ, இதுவே **தத்** என்று தொடங்கும் **காயத்ரீ** ஆகும். வேதங்களுக்கும் மாத்ருகையாக உள்ள உத்தமமான ப்ரணவமாகும். அக்நி ஹோத்ரத்தில் இருக்கின்ற எந்த ஜோதி ஹோமம் செய்யப்பட்ட பொருள்களை எடுத்துச் செல்கிறதோ **ஜாதவேதஸே** என்கிற வேதபாகம் இதுவே. அந்த ஜோதிக்கும் அக்நி மயமான **த்ருஷ்டுப்** என்ற பெயரை உடைய ஶரீரம். எந்த ஒரு ஜோதி கண்களுக்கு மகிழ்ச்சியைத் தந்து கொண்டு உலகத்தையெல்லாம் பலவகை ரஸங்கள் மூலம்

போஷிக்கிறதோ (புஷ்டியாக வளர்க்கிறதோ) **த்ரயம்பகம் யஜாமஹே** என்பது **ஆநுஷ்டுபம்** என்கிற பெயருடைய இது சந்த்ரன் ஸ்வரூபத்திலுள்ள ஶரீரம். அறிவைக் கொடுப்பதும், உஷ்ணத்தைக் கொடுப்பதும், மகிழ்ச்சியைத் தருவதுமான ஜ்யோதிகளால் இந்த உலகம் தாங்கப்படுகிறது. **போக்தா** (இன்ப துன்பங்களை அநுபவிப்பவன்) **போஜ்யம்** (இன்ப துன்பங்களைத் தரும் பொருள்) என்கிற ஸ்வரூபத்தோடு கூடிய ஒன்றுக்கொன்று முரண்பாட்டுடன் இந்த உலகம் இருக்கிறது. மஹாவிஷ்ணு ஸ்வரூபமான எந்த மஹா பெரிய சக்ரம் சொல்லப்பட்டதோ, அதை உத்தமமான இந்த ஜ்யோதிகளைக் கொண்டு மந்த்ரங்களை அறிந்த ஆசார்யன், அச்சு அமைக்க வேண்டும். சந்தஸ்ஸுகளாலும் தாரங்களாலும் முன்பே இணைக்கப்பட்ட அக்ஷமாகச் செய்ய வேண்டும். இதற்கு வெளியில் மஹாவிஷ்ணு ஸ்வரூபமான மந்த்ரராஜனை எழுத வேண்டும். அதற்கு வெளியில் தாரம் முதலியவைகளுடன் இணைக்கப்பட்ட இதே மந்த்ரத்தில் மாத்ருகாக்ஷரங்களை எழுத வேண்டும். அதற்கும் வெளியில் சந்தஸ்ஸினால் இணைக்கப்பட்ட மந்த்ரத்தை எழுத வேண்டும். அதற்கும் வெளியில் **ஸ ஹி** என்கிற இரண்டு எழுத்துக்களை உள்ளடக்கிய மாத்ருகாக்ஷரங்களை எழுத வேண்டும். நாரதரே ! ஜ்யோதி சக்ரத்துக்கு இதுவே **அக்ஷம்** என்று கூறப்பட்டுள்ளது. ஶக்தி பீஜம், **ஸ்ரீ பீஜம், தாரம்** இவைகளுடன் சேர்ந்து **ஸ்ர** என்கிற அக்ஷரத்தை, **காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப்** இந்தச் சந்தஸ்ஸுகளால் நாபியை அமைக்க வேண்டும். இதற்கு வெளியே **ஸ்ர** உடன் இணைக்கப்பட்ட மாத்ருகாக்ஷரங்களை எழுத வேண்டும். இதுவே வேதங்களிலும், உபநிஷத்துக்களிலும் கூறப்பட்ட **நாபி** என்று சொல்லப்படுகிறது. இதற்கு 100 ஆரங்கள் இருக்கும். இதன் முறையைச் சொல்கிறேன், கேளும். வடமேற்கிலிருந்து தென் கிழக்கு வரையிலும், தென் மேற்கிலிருந்து வடகிழக்கு வரை இரண்டு நூல்களை அதில் வைத்து நான்கு வகையாகப் பிரித்து 5 x 5 = 25 ஆரங்கள் அந்த ஒவ்வொரு இடத்திலும் எழுத வேண்டும். இவ்வாறு நூறு ஆரங்கள் அமையும். இதன்

செய்முறையைச் சொல்கிறேன் கேளும். காயத்ரீ முதலிய மூன்று சந்தஸ்ஸுகளை மூன்று முறை எழுத வேண்டும். ரம் **மந்த்ரார்ணவம் தாரம்; ரம் மந்த்ரார்ணவம் தாரகம்;** ரம் மந்த்ரமாத்ருகை, **லக்ஷ்மீ பீஜம்** ரம் என்று இந்த வரிசையில் ஆரமாக இருக்கும் **காயத்ரீ** முதலியவற்றில் கவனத்துடன் எழுத வேண்டும். **த்ருஷ்டுப்** என்கிற ஆரத்தை **த்ருஷ்டு**பாலேயே பூர்த்தி செய்ய வேண்டும். **அநுஷ்டுபினால்** அமைந்த ஆரங்களை **அநுஷ்டு**பினாலேயே பூர்த்தி செய்ய வேண்டும். கிழக்கு திசையில் ஆரம்பித்து வடகிழக்கு திசைவரை அந்தந்த அக்ஷரங்களோடு மந்த்ரத்தை ஆரங்களின் இரண்டு ஓரங்களிலும் எழுத வேண்டும். நூறு ஆரங்களைக் கொண்ட இது மிகவும் புனிதமானது. அதுவே உத்தமமான ப்ரஹ்மாஸ்த்ரமயமாக இருக்கும். பாதங்களாலும், பதங்களாலும், அக்ஷரங்களாலும் மூன்று வகையாக **ப்ரஹ்ம தண்டம், ப்ரஹ்ம பிரஸ், ப்ரஹ்மாஸ்த்ரம்** இவைகளின் தேஜஸ்ஸைக் கொண்டும் தலை கீழான முறையில் **காயத்ரி**யால் மந்த்ராசார்யன் உள்ளே இருக்கும் வட்டையை அமைக்க வேண்டும். மந்த்ரத்தை நன்கு அறிந்த ஒரு ஆசார்யன் **ஆக்நேயாஸ்த்ர** ஸ்வரூபமாக இருக்கும் தலை கீழான **த்ருஷ்டுபினால்** வட்டையின் நடு பாகத்தை அமைக்க வேண்டும். தலை கீழான **அநுஷ்டுபைக்** கொண்டு வட்டையின் மூன்றும் பாகத்தை அமைக்க வேண்டும். த்ரயம்பகாஸ்த்ர வடிவத்துடன் இவற்றைத் தலை கீழான முறையில் ஒவ்வொரு எழுத்தாக மந்த்ரங்களுடன் இணைந்து எழுத வேண்டும். **தாரம், தாரம், அநுதாரம்** இவைகளுடன் இணைக்கப்பட்ட **ஹூம்** என்கிற பீஜத்தை வெளியில் எழுத வேண்டும். இதற்கு வெளியில் **பட்** என்பதோடு சேர்ந்த மாத்ருகாக்ஷரங்களைக் கட்டாக அமைக்க வேண்டும். அக்நி, சந்த்ரன், ஸூர்யன் மூன்று ஜோதிகள் சேர்ந்த சக்ரம் என்று அநேகவித அஸ்த்ரங்களின் கூட்டங்களோடு சேர்ந்து குறையில்லாத ப்ரஹ்ம ஜ்யோதியாக மூன்று உலகங்களிலும் புகழ் பெற்றிருக்கிறது.

ப்ரஹ்ம சக்ரம்

இந்தச் சக்ரத்துக்கு வெளியில் ஐந்து ஹோதாக்களும், ஜாக்ரதையோடு இருக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. ஸம்பாரங்கள், (இதற்கு வேண்டிய த்ரவ்யங்கள்) பத்நிகள், தக்ஷிணைகள், ஹ்ருதயங்கள், அதற்கு வெளியில் 100 ருத்ரர்கள், ஐந்து ப்ரஹ்மாக்கள், அதற்கு வெளியில் இருக்க வேண்டும். அதற்கு வெளியில் **த்வரிதாவையும்**, **புருஷ ஸூக்தத்தையும்**, அதற்கு வெளியில் **ஸ்ரீ ஸூக்தத்தையும்**, **காயத்ரியையும்**, மூன்று **வ்யாஹ்ருதி**களையும் **(பூ: புவ: ஸுவ:)**, **ப்ரணவம்** அதைச் சுற்றி இவ்விதம் சொன்ன முறையில் வரிசையாக எழுத வேண்டும். இந்த **ப்ரஹ்ம சக்ரம்** எல்லா சந்தஸ்ஸுகளாலும் அமைக்கப்பட்டதாகும். ஸகல கஷ்டங்களைத் தீர்க்க வல்லது. எல்லா பாபங்களையும் அழிக்க வல்லது. இதை நினைத்த மாத்திரத்தில் எல்லோருக்கும் எப்பொழுதும் அவர்கள் ப்ரார்த்தனைகளைத் தரவல்லது.

## ஆயிரம் ஆரங்கள் கொண்ட மாத்ருகா பீஜ சக்ரம்

இதற்குப் பிறகு உத்தமமான **மாத்ருகா சக்ரம்** என்பது அமைக்கப்பட வேண்டும். சந்த்ரன், ஸூர்யன், படவாக்நி இவற்றின் பீஜங்களின் சேர்க்கை, சுற்றிலும் எழுத வேண்டும். **தாரம், தாரம், அநுதாரம்** இவைகளோடு இணைத்து மந்த்ர ராஜனை, அதற்கு மந்த்ரங்களை அறிந்த ஆசார்யன் எழுத வேண்டும். தாரங்களோடு இணைந்ததாக மறுபடியும் எழுத வேண்டும். அதற்கு வெளியில் ப்ரணவங்களோடு கூடிய மந்த்ரங்களின் பீஜாக்ஷரங்களையும், அதற்கும் வெளியில் மந்த்ரங்களுடன் மாத்ருகாபீஜம் எழுத வேண்டும். **ஸ ஹ** இவைகளோடு இணைக்கப்பட்ட மாத்ருகா பீஜத்தை எழுத வேண்டும். இதுவே மாத்ருகா சக்ரத்தின் அச்சாகச் சொல்லப்பட்டது. **தாரம், தாரம் அநுதாரம்** இவைகளுடன் மந்த்ரங்களின் மாத்ருகா பீஜத்துடனும், இணைந்து **ஸ்ர** என்கிற உத்தமமான நாபியை ஏற்படுத்த வேண்டும். அதற்கு வெளியே **ஸ்ர** என்கிற பீஜத்துடன் இணைந்த மாத்ருகாக்ஷரங்களை எழுத வேண்டும். இதுவே **மந்த்ர பீஜம்** (ஶப்த ப்ரஹ்மம்)

உத்தமமான நாபி என்று சொல்லப்பட்டது. இதற்கு ஆயிரம் ஆரங்கள் உண்டு. அதன் முறையைச் சொல்கிறேன், கேளும். முன் சொன்னது போல் பிரிக்கப்பட்ட நூலின் இடங்களில் (5 x 50) 250 ஆரங்கள் ஒவ்வொரு இடத்திலும் அமைக்க வேண்டும். இவ்வாறு 20 ஐம்பதுகள் சேர்ந்து ஆயிரம் ஆரங்கள் வரும். **தாரம், தாரம், அநுதாரம்** இவைகளுடன், **ஸரஸ்வதீ, லக்ஷ்மி, துர்கா** இந்த மூன்று பீஜங்களுடனும், அவ்வாறே **படவாக்நியைக் கடைசியாகக் கொண்ட** நான்கு **மாத்ருகா பீஜங்களுடனும்** (படவாக்நி, அக்நி, ஸூர்யன், சந்த்ரன்) **க** முதல் **ட** வரை 14 **ண** முதல் **ல** வரை 14 இவற்றுடன், **வ** முதல் **க்ஷ** வரை எழுத்துக்களையும் மூன்று உலகங்களுக்கு ஆட்சி செய்யும் நிலையைத் தரக் கூடிய 500 அக்ஷரங்களும், அதே அளவுடைய ஸ்ருஷ்டி பீஜம் வரை இவ்வாறு ஒன்று சேர்த்து ஆயிரத்தால் இம்மாதிரி ஆரங்கள் அமைக்க வேண்டும். அதன் முறையைச் சொல்கிறேன், கேளும். **ரம், மந்த்ரபீஜம், தாரம்; ரம், மந்த்ர பீஜம், தாரம்; ரம் மந்த்ர பீஜம் லக்ஷ்மி பீஜம்** ரம் என்று இந்தவரிசையில் கிழக்கு முதல் க்ரமமாக ஆயிரங்களை எழுத வேண்டும். இது ஶப்த ப்ரஹ்ம ஸ்வரூபமும், உத்தமமுமான **ஸஹஸ்ராரீ மாத்ருகா சக்ரம்** என்று கூறப்பட்டுள்ளது. பிந்துவோடு கூடிய ஐஶ்வர்ய பீஜத்தையே **வாக்பவம்** என்கிறார்கள். **கராளவிபுதம்** என்பதில் வ்யாபக மந்த்ரத்துடன் கூடிய மாயையும், காம ராஜமயமான பீஜத்தில் சந்த்ரன் பாடவாக்நி வ்யாபக மந்த்ரமும், ஸரஸ்வதீ பீஜத்துடன் கூடியதும் இந்த மூன்றும் **வாக்பவம்** எனப்படும். ப்ரளய கால அக்நியில் உள்ள கமலம், ஸூர்யன், வாயு இவர்கள் போக்கை உடையதும் வ்யாபக மந்த்ரத்தோடு கூடிய மாயா முதல் மாத்ருகா பீஜம். அனைத்து உலகங்களுக்கு ஆதாரமாகவும், ஸூர்யன் அக்நி இவற்றின் மஹிமையுடன் கூடியதும், ஐந்து பிந்துக்களும் வ்யாபக மந்த்ரத்துடன் கூடியது இரண்டாவது பீஜம். சந்த்ரன் அக்நியில் உள்ளதும், ஸூக்ஷ்மத்தில் உள்ளதும் ஆநந்தம் வ்யாபக மந்த்ரத்துடன் கூடியது மூன்றாவது பீஜம் என்று சொல்லப்பட்டது. இனி நான்காவதைச் சொல்கிறேன், கேளும். சந்த்ரன் காலம் இவற்றை அங்கமாக உடையதும், ஸூக்ஷ்மத்திலிருப்பதும், ப்ரளய காலாக்நியிலிருந்து

காப்பதும் இவற்றை இணைத்து வ்யாபக மந்த்ரத்துடன் கூடியது உத்தமமான நான்காவது பீஜம். மாத்ருகை மந்த்ரத்தின் இந்த நான்கு பீஜங்களை அந்த அந்த அக்ஷரங்களோடு கூடிய மந்த்ரத்தையும் ஆரங்களின் இரண்டு பக்கங்களிலும் ஆசார்யன் ஆயிரம் ஆரங்கள் கொண்ட முறையைச் செய்யும் போது எழுத வேண்டும். ஆசார்யன் மந்த்ரத்தில் உள்ள மாத்ருகாக்ஷரங்களைத் தலை கீழாக எடுத்துக் கொண்டு, தாரம் முதலியவைகளோடு இணைக்கப்பட்ட **ஹூம்** என்பதை வட்டமாக எழுத வேண்டும். **பட்** என்பதுடன் இணைக்கப்பட்ட மாத்ருகாக்ஷரங்களைக் கட்டாக அமைக்க வேண்டும். இதுவே **மாத்ருகாசக்ர**மாகும். இதில் எல்லாம் அடங்கியுள்ளது. அக்ஷவடிவமாக எந்த மாத்ருகாக்ஷரம் உள்ளதோ, அதை முதலாக வைத்து அதற்கு வெளியில் கட்டாக எழுத வேண்டும். அதற்கும் வெளியில் சிந்தாமணியையும், அதற்கும் வெளியில் **பரா** என்கிற பீஜத்தையும், அதற்கும் வெளியில் **பராவரா** என்கிற பீஜத்தையும், அதற்கு வெளியில் **ஸ்ரீ பீஜம்** எழுத வேண்டும். அதற்கு வெளியில் **தாரகம்** எழுத வேண்டும். தாரகையையும், அதற்கு வெளியில் ஈட்டிகளை மூன்று மூன்றாகவும், அதற்கும் அதற்கு வெளியில் ஈட்டிகளை மூன்று மூன்றாகவும், அதற்கும் வெளியில் பாசக்கயிற்றை மூன்று மூன்றாகவும், சக்ரத்தின் அங்கங்கள் முதலாகச் சுற்றிலும் அமைக்கப்பட வேண்டும். அதற்கு வெளியில் திக்பந்தம் அமைக்க வேண்டும். அதன் முறையைச் சொல்கிறேன், கேளும். **புருஷாய ஸ்வாஹா** என்றும், திக்குகளின் பெயரை அமர்ஷணமாகவும், அதற்குப் பிறகு **ஸஹ** என்றும் எல்லா திக்குகளிலும் அமையும் வகையில் **பந்தயாமி** என்றும் பிறகு **ஆத்மநே ஸ்வாஹா** என்றும், மூலை திக்குகளின் பெயரை க்ரூரமாகவும், பிறகு **ஸஹ** என்றும், மூலை திக்குகளிலும் சேரும்படி **பந்தயாமி** என்றும், அதற்கு வெளியில் **சக்ர காயத்ரி**யும், இறுதியில் அக்நி ஸ்வரூபமான மதில் சுவரையும், வெளியில் ஆகாய மண்டலத்தையும், அதன் பீஜத்தோடு கூட அதற்கு வெளியில் **யம்** என்கிற வாயு பீஜத்தையும், இந்தச் சக்ரத்தின் பீஜத்துடன் வெளியில் **அக்நி பீஜத்தைச் சக்ர** பீஜத்துடன் சேர்த்தும், அதற்கு வெளியில் **அப்** பீஜத்தை மண்டலமாகவும் **சக்ர பீஜ**த்துடன்

சேர்த்தும், அதற்கு வெளியில் **ப்ருத்வீ** பீஜத்தைச் சக்ர பீஜத்துடன் சேர்த்தும், **ப்ராணன், ஸூக்ஷ்மம், அநலன் (அக்நி) வருணன், புருஷேஶ்வரன், வ்யாபக** மந்த்ரத்துடன் இணைத்த இவை ஆகாயம் முதலியவற்றின் பீஜங்களாகும். **அக்நி, கமலம், பாஸ்கரம், மார்தந, அநல, ஸூக்ஷ்ம, ஔர்வா, ஊர்ஜ** ஒன்று சேர்ந்து வ்யாபக மந்த்ரத்துடன் கூடியதாய் இவை சிந்தாமணி என்கிற உத்தமமான பீஜம், **பரா** என்கிற பெரிய மந்த்ரம், **ஸோமஸ்தா, ஔர்வஸ்த ஸ்ருஷ்டிகா, வ்யாபக** மந்த்ரத்துடன் சேர்ந்து ஸோமன், விஷ்ணு என்கிற **பராவரா** என்பதாகும். ஸுதர்ஶந பீஜத்தின் சேர்க்கையால் (மாலா மந்த்ரம்) பூமியைச் சுற்றிலும் வளைக்க வேண்டும். பிறகு ஸுதர்ஶந பீஜங்களின் சுற்றிலும் தாரத்தினால் எழுதவேண்டும். **ஸோமன், ஸூர்யன், மேலும் ஸோமன் காலாக்நி** இவ்விரண்டும் **க், ச், ட், த், ப்** என்கிற உயிரெழுத்தில்லாத மெய்யெழுத்துக்களின் ஸுதர்ஶந கூடம் எனப்படுகிறது. இந்த ப்ரளய கால அக்நி போன்ற ஒளியுடைய ஸுதர்ஶந வடிவம், அம்ருத பீஜத்துடன் சேர்ந்து **(வம்)** முன்பு குறிப்பிடப்பட்ட கூடத்தைச் சாந்தமாக அமைக்கும், நாரதமுநிவரே! **அக்நி, ஸோம** ஸ்வரூபமான இந்த சக்ரத்தைப் பற்றி உமக்கு விளக்கமாகக் கூறப்பட்டது. இந்தச் சக்ரத்தை விஷ்ணுவின் உத்தமமான தேஜஸ் என்று எப்பொழுதும் த்யாநிப்பீராக.

இவ்வாறு பாஞ்சராத்ரம், தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் வாஸுதேவன்**
**முதலிய யந்த்ர நிரூபணம்** என்கிற
**23**வது அத்யாயம் முற்றிற்று.



யந்த்ர தேவதைகளின் த்யாந விளக்கம் என்கிற

# 24வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவயம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥
(இதன் விளக்கம் 18வது அத்யாயத்தில் உள்ளது)

## முன் சொல்லப்பட்ட எட்டு சக்ரங்களுக்குப் பலன் கூறுதல்

**அஹிர்புத்ந்யர் :-** மஹர்ஷியே ! சந்த்ரன், ஸூர்யன், அக்நி இவற்றின் ஒளி போல் ப்ரகாஶம் உடைய இந்த சக்ரம் உமக்குச் சொல்லப்பட்டது. ஶப்தஸ்வரூபம் அனைத்து மந்த்ரங்களுக்கும் ஸமமானது. வாக்கு என்றும், பொருள் என்றும் எவையெல்லாம் உலகத்தில் உள்ளனவோ அவை சொல்லப்பட்டன. முநிவரே ! **ப்ரஹ்மசக்ரம்** என்று எது உள்ளடங்கியதாகக் கூறப்பட்டதோ அது குற்றமற்ற ஜ்ஞாநத்தையே கொடுப்பதாகும். **விஷ்ணுசக்ரம்** என்று அத்புதமான எது சொல்லப்பட்டதோ, அது எல்லா இடங்களிலும் பரவியிருத்தல், ஒளி, ஜ்ஞாநம், பராக்ரமம் இவற்றைக் கொடுப்பதாகும். மூன்றாவதாக எது அத்புதமானதாகக் கூறப்பட்டதோ - அந்தச் சக்ரம் மேன்மையான புகழையும் பொருளையும் தரவல்லது. முநிவரே ! நான்காவதாக எந்தச்சக்ரம் கூறப்பட்டதோ அது மோக்ஷத்தைக் கொடுக்கவல்லது என்று அனைவராலும் சொல்லப்படுகிறது. ஐந்தாவது சக்ரம் வெற்றியையும், புகழையும் கொடுப்பதாகச் சொல்லப்பட்டது. ஆறாவது பொல்லாத நோய்களையும் அபம்ருத்யுவையும் அழிக்க வல்லது. ஏழாவது சக்ரம் ப்ரஹ்ம தேஜஸ்ஸைக் கொடுக்க வல்லது. செல்வம், பொருள், வெற்றி இவற்றைக் கொடுப்பது எட்டாவது சக்ரமாகும்.

## இவற்றின் மஹிமையை விரிவாகக் கூற இயலாமை

ஸகல யோகிகள் முநிஶ்ரேஷ்டர்கள் இவர்களால் வணங்கப்பட்ட இந்த எட்டு சக்ர விஷயத்தில் ஒவ்வொன்றுக ஓரளவு பலன் உமக்குச் சொல்லப்பட்டது. எல்லா

சராசரங்களையும் தனக்கு ஶரீரமாகக் கொண்ட இந்த விஷயத்தைப் பற்றி விஸ்தாரமாகச் சொல்ல வேண்டுமானால் பல லக்ஷம் வருடங்களானாலும் இயலாது. மந்த்ரங்களை நன்றாக அறிந்த ஆசார்யன் முன்பு சொல்லப்பட்ட அந்த மந்த்ர தேவதைகளை மந்த்ரங்களின் அக்ஷரங்கள், அவற்றின் பெரிய மஹிமை, அதன் வகைகள் இவற்றுடன் பூஜிக்க வேண்டும். அந்தத் தேவதைகளை மூர்த்தி, ஶக்தி, பரிவாரங்கள், ஆபரணங்கள், வீர்யம், மஹிமை என்கிற இந்த விஷயங்களோடு எப்பொழுதும் த்யாநிக்க வேண்டும்.

## சக்ரதேவதைகளின் ஸ்வரூபம் த்யாநம் முதலியவற்றின் விளக்கம்.

முதல் சக்ரத்தில் எல்லாவற்றுக்கும் காரணமாயிருப்பவரும் புண்யம், பாபம் இவற்றின் பலன் ஏதுமில்லாதவரும், எல்லா உலகங்களையும் படைத்தல், காத்தல், அழித்தல் இவைகளால் கட்டாயமாக ஏற்படும் அநுக்ரஹத்திலேயே இருப்பவரும், குறையில்லாத ஶக்தி உடையவரும், அலையற்ற பெருங்கடல் போன்றவரும், ப்ரணவத்தின் பொருளாக ப்ரகாஶிக்கிறவருமான ஸ்ரீ ஹரியை த்யாநம் செய்ய வேண்டும். விஷ்ணு சக்ரத்தில் பருத்தும், வலிமை உடையதாகவும், நீண்டவையுமான நான்கு திருக்கைகளால் தரிக்கப்பட்ட ஶங்கம், சக்ரம், கௌமோதகீ என்கிற **கதை,** தாமரை இவற்றோடு கூடியவரும், வெண்ணிறமானவரும், மலர்ந்த திருமுக மண்டலத்தோடு கூடியவரும், தாமரை போன்ற நீண்ட திருக்கண்களை உடையவரும், பீதாம்பரத்தைத் (தங்கத்தகடி) தரித்தவரும், விஶாலமான திருமார்பை உடையவரும், தனக்குத் தானே காரணமான (ஸ்வயமாகத் தோன்றியவராக) இவரை த்யாநம் செய்ய வேண்டும். கருத்த திருமேனியுடனும், கிரீடம் உடையவரும், கம்பீரமான நான்கு புஜங்களால் கௌமோதகீ என்கிற **கதை** தாமரை, உத்தமமான ஶங்கம், சக்ரம் இவற்றைத் தரித்தவரும், **நாராயணன்** என்கிற திருநாமமுடையவரும், கண்களுக்குத் தெவிட்டாத இன்பம் தருபவரும், ஆதி

தெய்வமுமான எம்பெருமானை மஹாலக்ஷ்மியுடன் சேர்த்து மூன்றுவதாகச் சொல்லப்பட்ட சக்ரத்தில் த்யாநம் செய்யவேண்டும். நான்காவது சக்ரத்தில் குருக்கத்திப்பூ, சந்த்ரன் போன்ற நிறமுடையவரும், தாமரை இதழ் போல் நீண்ட திருக்கண்கள் உடையவரும், ஶுத்தமான ஜபமாலை தரித்தவரும், அழகாக நிமிர்ந்த ஜ்ஞாநமுத்ரை உடையவரும், இரண்டு கைகளால் சக்ரம் வெண் சங்கைத் தரிப்பவருமான எம்பெருமான் **வாஸுதேவனை** த்யாநிக்க வேண்டும். ஐந்தாவதான அந்தச் சக்ரத்தில் ஶங்கம், சக்ரம், தாமரை, **கதை**, ஈட்டி, கயிறு, **ஶார்ங்க** மென்கிற வில், **நந்தகம்** என்கிற வாள் இவற்றை பயங்கரமான எட்டு கைகளால் தாங்கி நிற்பவரும், கருடன்மேல் (பெரிய திருவடி) அமர்ந்திருப்பவரும், ஹிமய மலையைப் போன்றவரும் அநாதியுமான எம்பெருமானை த்யாநிக்க வேண்டும். ஆறுவது சக்ரத்தில், முநிவரே ! கொடியதும், பயங்கரமானதும், வளைந்த நகங்களின் நுனிகளால் கிழிக்கப்பட்ட ஹிரண்யகஶிபு என்கிற அஸுரனின் மார்பிலிருந்து பீறிட்ட ரத்தம் பூசிய திருமேனியுடையவரும், பயங்கரமான பார்வையுடன் கூடிய மூன்று கண்களுடன் பார்க்கப் பயத்தைத் தருபவரும், ஸகல ஜகத்துக்கும் காரணமாயிருக்கும் **நரஸிம்ஹனை** த்யாநிக்க வேண்டும். (ஏழாவது சக்ரத்தில்) சந்த்ரன், அக்நி, ஸூர்ய கிரணங்களின் வீச்சினால் ஏற்பட்ட அடர்த்தியான லதா க்ருஹத்தின் மத்தியில் இருப்பவரும், தாமரை, **கதை**, சக்ரம், சங்கம் இவற்றைத் தரித்தவரும், வேதங்களில் போற்றப்பட்டவரும் (வேத ஸ்வரூபியான) கருடன் மீது வீற்றிருப்பவரும், உலகங்களுக்கெல்லாம் மூல காரணமும், அளவிட முடியாதவரும், மஹாலக்ஷ்மியின் நாயகனும் புராண புருஷனுமான **நாராயணனை** த்யாநிக்க வேண்டும்.

### மாத்ரு சக்ரத்தில் லக்ஷ்மியை த்யாநித்தல்

பசும்பால், சங்கு, சந்த்ரன், ஆகாயகங்கை, குருக்கத்திப்பூ இவற்றின் ஒளி போல் வெண்மையான தாமரையையும், சங்கையும் ஏந்தியவளும், புன்முறுவலுடன்

மலர்ந்த திருமுக முடையவளும், தாமரை போன்ற திருக் கண்களுடையவளும், மாத்ருகாஸ்வரூபியான தேவதை தன் சக்ரம் என்கிற ஸ்தாநத்தில் வீற்றிருப்பதாக த்யாநிக்க வேண்டும். ஆறுடன் கூடிய அசைந்து கொண்டிருக்கும் 10 ஶூலங்களைத் தன்னுடைய 16 திருக்கரங்களால் தரிப்பவளும், **ஜபாகுஸுமத்தின்** (செம்பருத்திப்பூ) நிறமுடையவளும், சிந்தாமணி என்கிற சக்ரத்தில் இருப்பவளும் மூன்று கண்களை உடையவளுமான தேவதையை, முநிவரே! விஷ்ணுவின் ஶக்தி என்று மனதால் த்யாநிக்க வேண்டும். பூரண சந்த்ரன் போல் குளிர்ச்சியான காந்தியை உடையவளும், திருக்கையில் ஜ்ஞாந முத்திரை வைத்திருப்பவளும், உள்ளங்கையில் தன்னைப் பற்றி விளக்குவதான புத்தகத்தை வைத்திருப்பவளும், புன்னகை பூத்தத்திரு முக மண்டலத்தை உடையவளும், தாமரைக் கண்களோடு கூடிய தேவதையான, பரமபுருஷனான நாராயணன் ஶக்தியுமான **உத்தமா தேவி** என்று த்யாநிக்க வேண்டும். தாமரை போல் சிவந்த கைகளால் அபயமுத்ரை, வரமுத்ரை, ஈட்டி, கயிறு இவற்றைத் திருக்கைகளில் உடையவளும், சிவந்த வஸ்த்ரத்தை அணிந்தவளும், பெரிய தாமரையின் இதழ்கள் போன்ற திருக் கண்கள் உடையவளும், நுண்ணிய தன் திருமேனி காந்தியில் இருக்கும் **பரம், அவரம்** என்கிற எல்லாவகை தத்வங்களையும் தரிப்பவளும் **(பரம்** - மேலானது, **அவரம்** - தாழ்ந்தது) **பராவர** என்கிற திருநாமம் உடைய ஆதி ஶக்தியை அங்கு த்யாநிக்க வேண்டும். தன் திருக்கையிலிருக்கும் கயிற்றிலுள்ள மடக்கு சுருக்கங்களில் ஸகல ஜீவராஶிகளைத் தரிப்பவளும், இலுப்பைப்பூ தாமரை போன்ற சிவந்த திரு மேனியையுடையவளும், பருத்த ஸ்தநங்களை உடையவளும், மதத்தினால் சுழன்று கொண்டிருக்கும் தாமரைக் கண்களையுடையவளும் லக்ஷ்மீபதியான **நாராயணன்** பக்கத்திலிருப்பவளுமான, இவளை எல்லாவற்றுக்கும் தேவதையாக த்யாநிக்க வேண்டும். அசையாமல் நல்ல கவனத்தோடு இருப்பவனும், முகத்தின் நுனியான மூக்கு என்கிற கூர்மையான ஈட்டியில்

தன்னைப் பதிய வைத்தவனும் (த்யாநத்தில் இருப்பவனும்), ஆன ஆசார்யனால், வணங்கும் ஜீவர்களின் கூட்டத்தினால் நன்கு துதிக்கப்பட்டவளும், உத்தமமான ஈட்டியின் மேல் வீற்றிருப்பவளும், மிகுந்த மஹிமையுடையவளுமான ஆதியில் ஏற்பட்ட ஹரியின் ஶக்தியை த்யாநிக்க வேண்டும்.

## அங்க மந்த்ர தேவதையை த்யாநித்தல்

முன்பு யாருடைய அங்கம் உலகமெல்லாம் **ஸுதர்ஶந** சக்ரத்தின் மூலமாகவே ஏற்பட்டது என்று கூறப்பட்ட அந்த **ஸுதர்ஶநத்தின்** திருமேனி போலவே உள்ளதாகக் கூறப்பட்டதோ, அந்த **காயத்ரீ,** எரியும் தீயின் நிறத்தை உடையவளாகவும், சக்ரராஜனான **ஸுதர்ஶநத்தைப்** போன்ற மஹிமையுடையவளாகவும், பருத்த ஸ்தநங்களோடு கூடியவளாக (அந்த காயத்ரியும்), யாருடைய உருவத்தை எல்லா அஸுரர்களையும் தன் ஜ்வாலையால் கலைக்கப்பட்டு ஓடச் செய்யும் அக்நிமயமாகவே இருப்பதாகப் பெரியோர்கள் கூறுகிறார்களோ அப்படிப்பட்ட ஆகாயத்திலிருக்கும் ஶக்தியும் நீலத் தாமரை போன்ற தேஹ காந்தியுடையவளாய் ஆயிரம் ஸூர்யர்களை மாலையாக அணிந்திருப்பவளாய் மநத்தால் த்யாநிக்கப் பட வேண்டும். திருமேனியில் நான்கு வடங்கள் கொண்ட மாலையை அணிந்திருப்பவளும், புகை போன்ற நிறமுடைய தேஹம் உடையவளும் வாயுவில் இருக்கும் ஶக்தி த்யாநிக்கப் பட வேண்டும். ப்ரளய காலாக்நி மற்றும் ஆயிரம் ஸூர்யன்களை மாலையாகக் கொண்டவளும் சிவந்த நிற ஶரீர காந்தியுடையவளுமான தேஜஸ்ஸில் இருக்கும் ஶக்தி த்யாநிக்கப் பட வேண்டும். அம்ருதம் போன்ற திருமேனி அமைப்பு கொண்டவளும், பல லக்ஷம் வராஹங்களை மாலையாக கொண்டவளுமான ஜலத்திலிருக்கும் ஶக்தியை த்யாநிக்க வேண்டும். உருக்கிய தங்கம் போன்றவளும், ஸகல வித ஜீவ ராஶிகளைத் தரிப்பவளுமான ஆதி புருஷனான நாராயணனுடைய பூமிஶக்தியும் த்யாநிக்கப் பட வேண்டும்.

**ஸுதர்ஶநமய ஸர்வ சக்ரங்களின் வடிவம் த்யாநம்.**

ப்ரளயகாலத்து அக்நியின் பல லக்ஷம் பல ஆயிரம் ஸமமான வடிவமும், எரிச்சலால் வேதனைப்பட்டும் வேகின்ற நிலையிலுள்ள ஸகல அஸுரர்களுடைய மேதஸ்ஸின் கசிவு நிறைந்த ஒளி மிக்க ஶிகைகள் (ஜ்வாலை) நிறைந்ததும் ஸுதர்ஶந வடிவமான வர்கம் (எட்டு) மநத்தால் த்யாநிக்கப்பட வேண்டும். (**மேதஸ்** - உடலுக்குள் இருக்கும் ஏழு தாதுக்களில் ஒன்று. இதைக் கொழுப்பு என்று சொல்வர்).

**ஸுதர்ஶந மயமான ஸமஸ்த மந்த்ரங்களின் மூல பூத ஶக்தி த்யாநம்**

ஸூர்யன், சந்த்ரன், அக்நி இவைகளைக் கண்களாகக் கொண்டவளும் பால ஸூர்யன் போன்ற நிறமுடையவளும், அகில உலகங்களிலும் வ்யாபித்து இருப்பவளும், அனைவராலும் வணங்கப்படுபவளும், ஆயிரம் சக்ரங்களை ஆயிரம் கைகளால் தரிப்பவளுமாகிய ஶக்தியை ஸுதர்ஶந மந்த்ரத்துக்குத் தேவதை என்று த்யாநிக்க வேண்டும்.

**இதுவரை சொல்லப்பட்ட மந்த்ரங்களில் ப்ராம்ஹணனுக்கு அதி தூரம்.**

உலகமனைத்துக்கும் நன்மைக்காக இந்தப் பல வகைகளிலும் உத்தமமான இந்த லக்ஷணங்கள் சொல்லப்பட்டன. இதை அரசனின் அநுமதி பெற்ற உத்தமமான ப்ராம்ஹணன் சோம்பலின்றி எப்பொழுதும் த்யாநிக்க வேண்டும். பாபங்கள் ஒரு போதும் தொல்லை கொடுக்காது. ஏவல், நோய் இவைகள் பறந்தோடிப் போகும். பூமி, பயிர்கள் நிறைந்து செழிப்பாக இருக்கும். மனிதர்களும் **தர்மம், அர்த்தம், காமம்** (அறம், பொருள், இன்பம்) நிறைந்தவர்களாக இருப்பார்கள். நீண்ட நாட்கள் வாழ்பவர்களாகவும், பாபங்கள் அற்றவர்களாகவும், நல்ல புகழும், வீர்யமும் நிறைந்தவர்களாகவும், அவரவர்களுக்கு விதிக்கப்பட்ட செயல்களைச் செய்வதன் மூலம் பூஜிக்கப்படுகிற ஶாஸ்த்ரங்களில் எப்பொழுதும் த்யாநம்

உள்ளவர்களாகவும், குற்ற மற்றவர்களாய் வாழ்ந்து இறுதியில் பரம புருஷனாகிய **நாராயணனைச்** சென்று சேர்கிறார்கள் (கர்மங்களால் ஆராதிக்கப்படுபவர் பகவானே. ஆனால் இங்கு ஶாஸ்த்ரம் என்று ஶாஸ்தா என்ற கருத்தினால் கூறப்படுகிறது). நாரத முனிவரே! இவ்வாறு உத்தமமான பல முறைகள், விதிகள் சொல்லப்பட்டன. அந்தணர்களும், அரசர்களும் இவ் விஷயத்தில் அசையாத கவனமுள்ளவர்களாக இருக்க வேண்டும். இந்த விஷயத்தில் கவனக் குறைவு உள்ளவன் கூட, இவ்வித லேசான கார்யங்களால், அவனவன் முயற்சிக்குத் தக்க பலன்களைக் கட்டாயம் பெறுவான்.

இவ்வாருக ஸ்ரீபாஞ்சராத்ரம் தந்த்ரரஹஸ்யம்
**அஹிர்புத்ந்யஸம்ஹிதையில் யந்த்ர தேவதை** த்யாநம்
என்கிற 24வது அத்யாயம் முற்றிற்று.



ஸுதர்ஶந யந்த்ரத்தின் மஹிமையைக் கூறுதல் என்கிற

# 25வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேக கோட்யகௌகம் ஹரத்யரம் ।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥
*(இதன் பொருள் 18வது அத்யாயத்தில் உள்ளது)*

## முன்பு சொன்ன விஷயங்களை மீண்டும் கூறுதல்

**நாரதர் :-** பகவானே ! உள்ளது உள்ளபடி நல்ல முறையில் விரிவாகச் சொல்லப்பட்டது. எது மூல காரணம், எது எல்லாவற்றுக்கும் அடிப்படை, இந்த உலகங்களுக்கு எது ஆதாரம் என்பதும், அவ்வாறே அறம், பொருள், இன்பம் இவற்றின் வடிவமும், அவற்றுக்கு வழிமுறையும், மேலான ஶாஸ்த்ரங்கள், அவ்வாறே மாய ஶாஸ்த்ரங்கள்(அஞ்ஞாநம்) அவ்வாறே ஆத்ம விஷயங்கள், உத்தமமான மோக்ஷமும், ஸம்ஸாரத்தால் ஏற்படும் பந்தமும், அதற்குக் காரணமும், வர்ணங்கள் ஆஶ்ரமம் இவற்றின் பிரிவுகளும், முக்கியமாக அவர்களுக்கு விதிக்கப்பட்ட கடமைகளும், எல்லா வர்ணத்தினருக்கும் அரசனால் கிடைக்க வேண்டிய பாதுகாப்பு பற்றியும், இவையெல்லாம் சொல்லப்பட்டன. அவ்வாறே அரசர்கள் காக்கும் முறை பற்றியும் மிகவும் அழகாக விளக்கப்பட்டது.

## கலி பிறந்த பிறகு அரசர்களுக்குக் காக்கும் முறை எப்படிச் சரியாக அமையும்? கலியைப் பற்றிச் சுருக்கமாகக் கூறுதல்

ப்ராம்ஹணர்கள் யாகம் செய்யார், தாநமும் செய்யார், ஹோமமும் செய்யார். கலியில் யாவருமே அவரவர் கடமைகளைப் பெரிதாகக் கருத மாட்டார்கள். ஸகல மந்த்ரங்களின் ஶக்திகள் அவமதிப்பைப் பெறும். ஸத்வகுணம் இல்லாத அரசர்கள் பராக்ரமம் அற்றவர்களாக இருப்பார்கள். திருடர்களால் துன்புறத்தப்பட்டுக் கொள்ளையடிக்கப் பட்ட ராஜ்யத்தை உடைய அரசர்கள் செல்வமற்றவர்களாகவும் இருப்பார்கள். கலியுகத்தில்

பஶுக்கள் பால் குறைந்ததாகவே காணப்படும். மக்களும் கலியில் பஞ்சத்தினால் பீடிக்கப்பட்டவர்களாய்ப் பசியால் வாடுவார்கள். மேலும் மக்கள் வேதம் கற்காதவர்களாய் பகவான் ஶ்ரீமந் நாராயணனை, தமோ குணம் நிறைந்தவர்களாய் பாஷண்டிகளின் போக்கில், நிந்தனை செய்வார்கள்.

## அப்படிப்பட்ட கலியில் அரசர்களின் ரக்ஷைக்கு உபாயம் பற்றிக் கேள்வி

இவ்வாறு தோஷம் நிறைந்த கலியில் அரசர்கள் எவ்வாறு சரியாகப் பாதுகாப்பது? ஸத்வகுணங்களற்ற ஶக்தியற்ற ப்ராஹ்மணர்கள் எவ்வாறு சரியாகப் பாது காக்கப்படுவார்கள்? அதை எனக்குக் கலக்கமறச் சொல்ல வேண்டும். மஹேஶ்வரா ! உம்மைத் தவிர வேறு யாரால் சொல்ல முடியும்?.

## பதில் தொடக்கம்

**அஹிர்புத்ந்யர் :-** நாரதரே ! நீர் மிகவும் சரியாகவே கேட்டீர். மந்த்ரங்களால் காப்பது என்பது கலியுகத்தில் இயலாது. அது உண்மை. ஆனாலும் நீர் என் மீது மிகுந்த பக்தி உள்ளவராகையால் அது பற்றிக் சொல்கிறேன் கேளும். ஸகல ப்ராணிகளையும் அரசர்கள் காக்கும் வகை என்பது மிகவும் ரஹஸ்யமானது. அது ஶாஸ்த்ரங்களின் மேலான கருத்து.

## ப்ரம்ஹாவின் தலையைக் கிள்ளிய பாபத்தைப் போக்க ஸுதர்ஶந யந்த்ரம் பெறுதல்

புண்யமான பதரிகாஶ்ரமத்தில், சதுர்முக ப்ரஹ்மனின் தலையைக் கிள்ளிய என் பாபம் தீருவதற்காக ஸகல வித கஷ்டங்களைப் போக்க வல்லதும், பல விதப் பீடைகளை நீக்க வல்லதுமான இந்த விஷயம் ஶ்ரீமந் நாராயணனால் சொல்லப் பட்டது. இது அஷ்ட ஸித்திகளைக் கொடுக்க வல்லதும், ஸகல விதச் செல்வங்களைத் தர ஒரே காரணமானதும்.

## அதன் மஹிமை

பிறர் செய்யும் ஏவல் முதலியவற்றை அழிக்க வல்லதும், உத்தமமான அரசாட்சியைத் தர வல்லதும், மங்களகரமானதும், கலியால் ஏற்படும் தீமைகளை விலக்கக் கூடியதும், பகைவர் அனைவரையும் அழிக்க வல்லதும் ஆகியதாகச் சொல்லப்பட்டது. இதை நினைத்த மாத்திரத்தில் மனிதர்களுக்குப் பகைவர் அழிவர். திருடர்கள் தங்கள் ஆட்சியில் உள்ள தேஶங்களை இழந்தவர்களாய்ப் பத்து திக்குகளிலும் பறந்தோடி விடுவர். இந்த யந்த்ரம் யாருடைய வீட்டில் வைக்கப்பட்டுள்ளதோ, அவருக்கு எல்லாம் நிறைவேறும். எந்த ஒரு அரசன் இந்த யந்த்ரத்தைத் தன் மாளிகையில் பரம விஸ்வாஸத்துடன் அமைக்கச் செய்கிறுனோ அவனுக்கு இந்தப் பூமண்டலம் அனைத்தும் தன் கட்டுப்பாட்டில் வரும். ஸந்தேஹமில்லை. ஸுதர்ஶந யந்த்ரத்தின் மஹிமை என்னால் சொல்லப்பட்டுள்ளது.

### ஸுதர்ஶந நாரஸிம்ஹ யந்த்ரத்தின் மஹிமை

எவனொருவன் ஸுதர்ஶந யந்த்ரத்துடன் கூடியதாக ந்ருஹிம்ஹ யந்த்ரத்தை (தன் அரண்மனையில்) அமைக்கச் செய்கிறுனோ, அவனுக்கு ஸ்வர்கம் முதலிய மற்ற உலகங்களும் கட்டுப்பாட்டில் அமையும். இதை எழுதுவதன் மூலம் எப்பொழுதும் எல்லாம் கிட்டும்.

### விஷ்ணு பஞ்ஜர யந்த்ரத்தின் மஹிமை

விஷ்ணுவின் பஞ்ஜர யந்த்ரத்தை அமைப்பதன் மூலம் எல்லா தேவதைகளும் எப்பொழுதும் அநுக்ரஹம் செய்வர். மனிதர்களைப் பற்றிக் கேட்க வேண்டுமா?

### மூன்று யந்த்ரங்களின் மஹிமை கூற இயலாது.

இந்த மூன்று யந்த்ரங்கள் ஒன்று சேர்ந்து கொடுக்கும் பலனைச் சொல்வது என்பது ஸர்வக்ஞன் என்று பெயர் பெற்ற என்னாலும் முடியாத கார்யம் நாரதா !

**மஹா ஸுதர்ஶந யந்த்ரத்தின் பலன்:-**

இந்த மஹா ஸுதர்ஶந யந்த்ரத்தை அமைப்பதன் மூலம் ப்ராம்ஹணன் மூன்று உலகங்களையும் வஶப்படுத்த முடியும். இந்தப் பூமண்டலத்தைப் பற்றிச் சொல்ல வேண்டுமா? ஒரு இடத்தில் ஸுதர்ஶநத்துடன் கூடிய நரஸிம்ஹ யந்த்ரத்தை அமைத்தும், மற்றொரு இடத்தில் எல்லா அங்கங்களும் குறைவறச் சேர்ந்த தனி ஸுதர்ஶந யந்த்ரத்தை அமைத்தும், இரண்டு முகங்கள் கூடியதாகவும், ஸகல அஸ்த்ரங்களோடு இணைந்ததாகவும், ஸ்ரீ விஷ்ணு பஞ்ஜரத்தில் அடங்கியதாக அனைத்து மந்த்ரங்கள் சேர்ந்ததாக அமைத்து **மஹா ஸுதர்ஶநம்** என்கிற இந்த யந்த்ர கூடம், புண்யம் செய்யாத மக்களுக்குக் கிடைக்க இயலாது. தன் பக்தர்களுக்கு ஸுகத்தைத் தரவல்ல முக்கிய யந்த்ரம் இது ஒன்றே. இது தேஜோ மயமாகவும், ஸகல உலகத்தாரால் வணங்கப்படுவதாகவும், இதை அமைக்க வேண்டும். விரும்பினால் ஸகல உலகங்களையும் வெற்றி கொள்ளலாம்.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ரரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யில் ஸுதர்ஶந
யந்த்ரத்தின் மஹிமை சொல்லும்
25வது அத்யாயம் முற்றிற்று.



மஹா ஸுதர்ஶந யந்த்ரத்தின் லக்ஷணம் என்கிற

# 26வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேக கோட்யகௌகம் ஹரத்யரம் ।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥
(இதன் பொருள் 18வது அத்யாயத்தில் உள்ளது)

## மஹா ஸுதர்ஶந யந்த்ரத்தைப் பற்றி விரிவாகச் சொல்லும்படிக் கோரிக்கை

**நாரதர் :-** பகவன் ! இந்த யந்த்ரத்தை அமைப்பது பற்றியும், லக்ஷணங்கள் பற்றியும், விரிவாகக் கேட்க விரும்புகிறேன். அடியேனுக்கு அதைச் சொல்ல வேண்டும்.

## பதில் சொல்வதாகச் சூளுரை

**அஹிர்புத்ந்யர்:-** தேவர்ஷியே ! இந்த யந்த்ரத்தின் லக்ஷணங்களை விரிவாக சொல்கிறேன், கேளும்.

## யந்த்ரம் அமைப்பதற்குத் தேவையான பொருள்கள்

வெள்ளியினாலோ, தங்கத்தாலோ, பஞ்ச லோஹத்தாலோ, ஶிலையாகவோ, அவரவர் தகுதிக்கேற்ப இந்த யந்த்ரத்தின் அர்ச்சை வடிவை ஆசார்யன் செய்விக்க வேண்டும்.

## யந்த்ரத்தை எழுதுவதற்குத் தேவையான பொருள்கள்

கனிப்பொருள், சந்தநம், கற்பூரம், குங்குமப்பூ, அகில் கட்டை இவற்றிலிருந்து கிடைக்கும் சாற்றினால், தங்கத்தினால் செய்த ஊசியைக் கொண்டு வஸ்த்ரத்தில் எழுதலாம்.

## யந்த்ரத்தில் மத்தியில் ஸுதர்ஶந புருஷன் வடிவம்

ஆசார்யன் மிகவும் கவனத்துடன் சந்த்ர மண்டலத்தின் மத்தியில் ப்ரணவம் எழுத வேண்டும். அதன் மத்தியில் சிவப்பு நிறத்தால் அமைந்த ஸுதர்ஶநத்தை எழுத வேண்டும்.

### அதன் உருவத்தைப் பற்றி விரிவு

மஞ்சள் நிறக் கண்களோடு கூடியதும், பழுத்த கூந்தல் நிறைந்ததும், சிவந்த வஸ்த்ரம் அணிந்ததும், எல்லையில்லா பக்தி உடையதும், 16 அல்லது 8 திருக்கைகளோடு கூடியதும், தேஜோமயமாகவும், கயிறு, ஈட்டி, தாமரைப்பூ, உலக்கை, வில், சங்கு, கதை, சக்ரம் முதலிய பயங்கரமான உத்தமமான ஆயுதங்களுடன் கூடியதும், வெற்றி கண்டவர்களுக் கெல்லாம் மேலானவரும், இப்படிப்பட்ட விஷ்ணுவின் உத்தமமான உருவத்துடனும், எப்பொழுதும் தேஜோமயத் திருமேனி உடையதும், கோரைப் பற்களிலிருந்து வெளிப்படும் அக்நியின் ஜ்வாலைகளால் சிவந்த முகத்தை உடையதும், பல வகை ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டதும், மயிர்க் கூச்சல் தரும் பயங்கரமானதும், தன் ஒளியால் உலகமனைத்தையும் நிரப்புவதும், மிகுந்த பல முடையதும், கிழிக்கப்படும் அஸுரர்களின் ரத்தத்தைப் பருகுவதில் விருப்பமுடையதும், அநேக உதய ஸூர்யர்களுக்கு ஸமமானதும், யாவருமறிந்த பல பராக்ரமங்களை உடையதும், எப்பொழுதும் மநம் என்னும் தத்துவத்துடன் வேகத்தில் ஒப்பானவரும், நாராயணனுடைய கமலக்கைக்கு ஸேவை செய்து கிடைக்கும் ஆநந்தத்தில் திளைத்தவரும், வேகத்தில் விஷ்ணுவின் ஸங்கல்பத்துக்குக் கூட உத்தமமான வழிகாட்டியும், நினைத்த மாத்திரத்திலேயே தன் பக்தர்களுக்கு இஹ- பர ஸுகங்களைத் தர வல்லதும், தன் பக்தர்களின் பகைவர்களை அழிப்பதும், தேவர்களால் பூஜிக்கப்பட்டதும், ஸித்தர், கந்தர்வர், அஸுரர்கள் இவர்களால் போற்றப்படும் செயல்களை உடையதும்-

### அதன் பரண்யனாக இருப்பதும், தோஷமற்றிருப்பதும், கல்யாண குணங்கள் இருப்பதும் பற்றி

பக்தர்களின் துயரங்களைத் துடைப்பதும், புகலிடம் தேடி வருபவர்களைக் காப்பதும், என்றைக்கும் எல்லையற்றதாகவும், குற்றமற்றதாகவும், கல்யாண குணங்களுக்குக் கடல் போன்றதும்-

## ஸாதகம் என்று எழுதுதல்

இத்தனை குணங்கள் சேர்ந்த எல்லையற்ற ஆநந்த முடைய ஸுதர்ஶநத்தை எழுதி அதன் திருவடிகளுக்கு ஸமீபத்தில் **ஸாதகம்** என்கிற பெயரை அமைக்க வேண்டும்.

## ஆறு கோணங்கள் அமைத்தல்

சந்த்ர பிம்பத்தைச் சுற்றிலும் அக்நி ஸ்வரூபமாகவும், அளவற்ற ஒளியுடன் கூடியதாகவும், ஸகல பலன்களைக் கொடுக்க வல்லதும், ஆறு கோணங்கள் உடைய சக்ரத்தை எழுத வேண்டும்.

## ஆறு அக்ஷரங்கள் அமைத்தல்

கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு திசைகளிலும், இரண்டு இடைத் திசைகளிலும் மந்த்ரத்தின் ஆறு அக்ஷரங்களை எழுத வேண்டும்.

## அங்கமந்த்ரங்கள்

ஆறு கோணங்களில் இடையில் அங்க மந்த்ரங்களின் அக்ஷரங்களை வரிசையாக எழுத வேண்டும்.

## நான்கு தாமரை இதழ்கள்

இதற்கு வெளியில் நான்கு இதழ்களுடன் கூடிய தாமரையையும்

## அதில் எழுதப் பட வேண்டியவை

இதில் பிந்துவுடன் கூடிய கவசபீஜம், **பட்** என்கிற சொல் இவற்றை வரிசையாக எழுத வேண்டும்.

## இடைவெளியில் எழுத வேண்டியவை

அவ்வாறே ஆசார்யன் இதழ்களின் இடை வெளியில் **ய/ர/ல/வ** என்கிற எழுத்துக்களை எழுத வேண்டும்.

## எட்டு தளங்களுடன் தாமரை

இதற்கு வெளியில் எட்டு தளங்கள் கொண்ட தாமரையை 16 தாதுக்களுடன் கூடியதாய் எழுத வேண்டும்.

**தாதுக்களின் எழுத்துக்கள்**

இதனுடைய அந்த மகரந்த தாதுவில் வரிசையாக 16 உயிர் எழுத்துக்கள் எழுத வேண்டும்.

**தளங்களில் அஷ்டாக்ஷரம்**

இதன் இதழ்களில் மஹா மந்த்ரமான **அஷ்டாக்ஷரம்** எழுத வேண்டும்.

**16 இதழ்களும் 32 தாதுக்களும்**

இதற்கு வெளியில் 32 மகரந்த தாதுக்களுடன் கூடிய 16 இதழ்கள் கொண்ட தாமரை எழுதப் பட வேண்டும்.

**தாதுக்களில் எழுத்துக்கள்**

**க** முதல் **ஸ** வரை உள்ள எழுத்துக்களை இந்த 32 கேஸரங்களில் எழுத வேண்டும்.

**தளங்களில் வைஷ்ணவ மந்த்ரங்கள்**

இதன் இதழ்களில் 16 எழுத்துக்கள் கொண்ட விஷ்ணுவின் மந்த்ரத்தை எழுத வேண்டும்.

**32 இதழ்களும் தாதுக்களும்**

இதற்கு வெளியில் 32 தாதுக்கள் கொண்ட தளங்கள் எழுதப்பட வேண்டும்.

**தாதுக்களில் வராஹ அநுஷ்டுப் மந்த்ரம்**

இந்தத் தாமரையின் கேஸரங்களில் கிழக்கு முதல் ஆரம்பித்து வரிசையாக உத்தமமான **வராஹ அநுஷ்டுப் மந்த்ரத்தை** எழுத வேண்டும்.

**தளங்களில் ந்ருஸிம்ஹ அநுஷ்டுப் மந்த்ரம்**

இதன் 32 இதழ்களில் எல்லா பலன்களைக் கொடுக்க வல்லதும், எதையும் தரவல்லதுமான அநுஷ்டுப் சந்தஸ்ஸில் அமைந்த **ந்ருஸிம்ஹ மந்த்ரத்தை** முறையாக எழுத வேண்டும்.

### 64 இதழ்கள் கொண்ட தாமரை

அதற்கு வெளியில் 64 இதழ்கள் கொண்ட தாமரை இதழ்கள் எழுத வேண்டும்.

### பாதாள ந்ருஸிம்ஹ மந்த்ரம்

அதன் இதழ்களில் **பாதாள ந்ருஸிம்ஹ** மந்த்ரத்தை எழுத வேண்டும்

### மறுபடியும் 8 இதழ்கள் தாமரை

மறுபடியும் 8 இதழ்களுடன் கூடிய தாமரையை எழுதி-

### அஷ்டாக்ஷர ந்ருஸிம்ஹ மந்த்ரம்

அதன் எட்டு இதழ்களில் **ந்ருஸிம்ஹ தேவதை**யின் 8 எழுத்துக்களை எழுத வேண்டும்.

### மாஹேந்த்ர மண்டலம்

அதற்கு வெளியில் வஜ்ராயுதத்தோடு கூடியதும், ஜ்வலிக்கும் எல்லா அலங்காரங்களுடன் கூடியதுமான மஹேந்த்ரனை தேவதையாகக் கொண்ட மண்டலத்தைச் சுற்றிலும் அமைக்கவேண்டும்.

### ஆசார்யன் பெயர் பீஜத்துடன் அமைத்தல்

அதற்கு வெளியில் கிழக்கு முதல் பெரிய திசையில் வரிசையாகத் தன் திருநாமத்துடன் கூடிய பீஜத்தைத் திறமையுள்ள ஆசார்யன் அமைக்க வேண்டும்.

### வெளிக் கோணங்களில் எழுத்துக்கள்

நான்கு இடைத் திக்குகளில் **ய ர ல வ** எழுத்துக்களை எழுத வேண்டும்.

### கோணங்களின் இடைவெளியில்

இடைத் திக்குகளின் உள் பாகத்தில் **யம், ரம், லம், வம்,** பீஜத்தை எழுத வேண்டும்.

**சுற்றிலும் உயிரெழுத்துக்கள்**

அதன் வெளியில் எல்லா உயிரெழுத்துக்களையும், தலை கீழாக (**அ** முதல் **அ:** வரை) அமைக்க வேண்டும்.

**சுற்றிலும் 'ஸ' முதல் எழுத்துக்கள்**

ஸ முதல் க வரை உள்ள எழுத்துக்களையும் சுற்றிலும் எழுத வேண்டும்.

**தன் பெயர், கயிறு, ஈட்டி, இவைகளால் சுற்றுதல்**

கடைசியில் உள்ள **க்ஷ** ஞ மந்த்ர எழுத்துக்களோடு தன் பெயரை எழுதி, கயிறு, ஈட்டி இவற்றுல் எல்லாவற்றையும் நோயாளி சுற்றி வளைக்க வேண்டும்.

**பூ புரம் அமைத்தல்**

சோம்பலின்றி வெளியில் **பூ புரம்** அமைக்க வேண்டும்.

**நாற்புறமும் கேஶவாதி நாமங்கள்**

இதற்கு நான்கு புறங்களிலும் திரு மேனிகளோடு கூடிய கேஶவாதி திரு நாமங்களை எழுத வேண்டும்.

**கேஶவனின் ஸ்வரூப விளக்கம்**

உருக்கிய தங்கம் போன்ற நிறமுடையவரும், தாமரைபோல் நீண்ட திருக்கண்கள் உடையவரும், எல்லையற்ற கருணை உள்ளவரும், தாமரை, சங்கு, சக்ரம், **கதை** இவைகளைத் தரித்தவரும், பீதாம்பரம் (பொன்னாடை)அணிந்தவரும், வைஜயந்தீ என்கிற மாலையைத் தரித்தவரும், முத்துமாலை, தோள்வளைகள், வளையல்கள், குண்டலங்கள் (காது ஆபரணம்) இவைகளுடன் விளங்குபவரும், நான்கு திருக்கைகளோடு கூடியவரும், கம்பீரமான அங்கங்களோடு கூடியவரும், மலர்ந்த திருமுக மண்டலம் உடையவரும், விஶேஷமான ஶக்தி படைத்தவரும், கஷ்டங்களைத் தீர்ப்பவருமான **கேஶவன்** என்கிற எம்பெருமாள் கிழக்கு தொடங்கி எழுத வேண்டும்.

## நாராயண ஸ்வரூபம்

ஶங்கம், சக்ரம், தாமரை, **கதை** இவற்றைத் தரித்தவரும், கரு நீல மேகம் போன்ற நிறமுடையவரும் ஸகல அலங்காரங்களுடன் கூடியவருமாகிய **நாராயணனை** அடுத்ததாக எழுத வேண்டும்.

## மாதவன் ஸ்வரூபம்

தாமரை, கௌமோதகீ எனும் **கதை**, ஶங்கு, சக்ரம் இவற்றைத் தரித்தவரும், எவ்வித மாறுபாடு இல்லாதவரும், நீலத் தாமரை (நெய்தல்) போன்ற நிறமுடையவருமாகிய **மாதவன்** என்கிற மூர்த்தியை அடுத்ததாக அமைக்க வேண்டும்.

## கோவிந்த ஸ்வரூபம்

சக்ரம், கௌமோதகீ எனும் **கதை**, ஶங்கு, தாமரை இந்த ஆயுதங்களுடன் விளங்குபவரும், சந்த்ர பிம்பம் போன்றவரும், அளவில்லாத வீர்யமுடையவருமான **கோவிந்தனை** அமைக்க வேண்டும்.

## விஷ்ணு ஸ்வரூபம்

**கதை**, தாமரை, ஶங்கம், சக்ரம் முதலிய ஆயுதங்களைத் தரித்தவரும், மிகுந்த அழகுடையவரும், உலகங்களுக்கு நாயகனுமான தாமரைத் தாதுக்கள் போன்ற நிறமுடைய **விஷ்ணுவை** அடுத்ததாக அமைக்க வேண்டும்.

## மதுஸூதநன் ஸ்வரூபம்

சக்ரம், ஶங்கம், தாமரை, **கதை** இவைகளைத் தரிப்பவரும், கருணைக் கடலும், செந்தாமரை இதழ் போன்ற நிறமுடையவரான **மதுஸூதநனை** அமைக்க வேண்டும்.

## த்ரிவிக்ரம ஸ்வரூபம்

சக்ரம், கௌமோதகீ, தாமரை, ஶங்கம் இவைகளோடு கூடியவரும் உலகங்களுக்கு அதிபதியும், ஜ்வலிக்கும் தங்கம் போன்ற நிறம் உடையவருமான ஒப்பற்ற **த்ரிவிக்ரம** மூர்த்தியை அடுத்ததாக அமைக்க வேண்டும்.

### வாமந ஸ்வரூபம்

ஶங்கம், சக்ரம், **கதை**, தாமரை இவற்றைத் தரித்தவரும், மிகவும் அலங்காரமுடையவரும், **பால ஸூர்யன்** போன்ற நிறமுடையவருமாகிய **வாமந** மூர்த்தியை அடுத்ததாக அமைக்க வேண்டும்.

### ஸ்ரீதர ஸ்வரூபம்

தாமரை, சக்ரம், **கதை**, ஶங்கம் இவற்றோடு விளங்குபவரும், ஸகல கல்யாண குணங்கள் நிறைந்து கடல் போன்றவரும் தாமரை போன்ற நிறமுடையவருமான **ஸ்ரீதரன்** என்கிற பகவானை அடுத்து அமைக்க வேண்டும்.

### ஹ்ருஷீகேஶ ஸ்வரூபம்

**கதை**, ஸுதர்ஶநம் (சக்ரம்) இவைகளுடன் ஶங்கம் தாமரை இவைகளோடு விளங்குபவரும், மின்னல் போன்ற திருமேனி காந்தியுடையவரும், தாமரைக் கண்ணனுமான **ஹ்ருஷீகேஶ** மூர்த்தியை அடுத்ததாக அமைக்க வேண்டும்.

### பத்மநாப ஸ்வரூபம்

ஶங்கம், தாமரை, **கதை**, சக்ரம் இவற்றுடன் இருப்பவரும், ஒளி மிகுந்த அநேக ஸூர்யன்கள் போன்ற திருமேனி காந்தி உடையவருமான பத்மநாப மூர்த்தியை எழுத வேண்டும்.

### தாமோதர ஸ்வரூபம்

தாமரை, ஶங்கம், சக்ரம், **கதை** இவைகளைத் தரிப்பவரும், **பந்தூக** மலரின் நிறத்தைப் போன்றவரும், பக்தியினாலேயே அடையத்தக்கவருமான **தாமோதர** மூர்த்தியைப் பிறகு அமைக்க வேண்டும்.

### பெயர்களை நம: என்று சேர்த்து எழுதுதல்

இவ்வாறு வரிசையாக அமைத்த பின் அவரவர் திரு நாமங்களை அமைக்க வேண்டும். **நம:** என்பதைக் கடைசியில் வைத்து **இவர்** என்ற பெயரையும் **ரக்ஷ ரக்ஷ** என்றும் எழுத வேண்டும்.

### பீஜாக்ஷர ந்யாஸம்

**யம், ஶம், ரம், ஷம், லம், ஸம், வம், ஹம்** என்று இரட்டை இரட்டையாகக் கிழக்கு முதல் நான்கு திக்குகளில் எழுத வேண்டும். **யம், ஶம், ரம், ஷம், லம், ஸம், வம், ஹம்** என்று இரட்டை இரட்டையாக வட கிழக்கு முதல் அப்ரதக்ஷிணமாக எழுத வேண்டும்.

### மறுபடி கயிறு ஈட்டி இவற்றால் சுற்றி வளைத்தல்

முதலில் கயிற்றால் சுற்றி வளைத்து, பிறகு ஈட்டியால் சுற்றி வளைக்க வேண்டும். இவை எல்லாவற்றையும் பீஜாக்ஷரங்களோடு கூடிய ஹ்ருதய மந்த்ரத்தைக் கொண்டு சுற்றி வளைக்க வேண்டும்.

### நான்கு திசைகளில் விஷ்ணு மூர்த்தியை அமைத்து அவைகளின் அஸ்த்ரங்களின் விவரம்

கிழக்கு முதல் நான்கு திசைகளிலும், சக்ரம், கௌமோதகீ **(கதை)** வில், கத்தி, இவைகளுடன் கூடிய மாறுதலற்ற விஷ்ணுவை அமைக்க வேண்டும். எல்லா மூர்த்திகளுக்கும் ஶங்கம், சக்ரம் பொதுவாக இருத்தல் வேண்டும்.

### தென் கிழக்கில் ஹ்ருஷீகேஶன்

தென் கிழக்கில் **ஹ்ருஷீகேஶ**னை அமைக்க வேண்டும்.

### ஆயுதங்கள்

ஶங்கம், கலப்பை, உலக்கை, ஈட்டி இவற்றை எழுத வேண்டும்.

### இடை திக்குகளில் ஜநார்தநன்

பிறகு இடை திக்குகளில் **ஜநார்தந**னை அமைக்க வேண்டும்.

### ஆயுதங்கள்

தடி, ஈட்டி, ஶக்தி ஆயுதம், கயிறு, அங்குஶம், வஜ்ரம், கோடாலி, **ஶதமுகாநலம்** என்று இவைகளை வரிசையாக இந்த மூர்த்திகளின் கைகளில் எழுத வேண்டும்.

### அருகில் பரிவாரங்கள்

ஒவ்வொருவருக்கும் அருகில் பரிவாரங்கள் (பரிஜநங்கள்) எழுத வேண்டும்.

### பூமியில் புருஷோத்தமனை நினைக்க வேண்டும்

வராஹ வடிவமுடையவரும், ஶங்கம், சக்ரம், கதை தரிப்பவரும், பூமிப் பிராட்டியுடன் கூடியவரான பரம புருஷனான **நாராயணனை** பூமியில் இருப்பதாக த்யாநிக்க வேண்டும்.

### ஆகாயத்தில் ந்ருஸிம்ஹன்

அளவில்லாத வீர்யமுடைய, பயங்கரமான, பல திருவாபரணங்களைச் சாற்றிக் கொண்டிருக்கிற, ஹிரண்ய கஶிபுவைக் கிழித்த, **ந்ருஸிம்ஹ மூர்த்தியை** ஆகாயத்திலிருப்பதாக த்யாநிக்க வேண்டும்.

### கிழக்கு முதலிய திசைகளில் ஆயுதங்கள்

ஜ்ஞாநியானவன் கிழக்கில் பெரிய சுடர்களின் மத்தியில் **ஸுதர்ஶந** சக்ரத்தை த்யாநிக்க வேண்டும். தெற்கு திக்கில் இவ்வாறே சுடருக்குள் இருக்கும் **கதையை** த்யாநிக்க வேண்டும். மேற்கில் மிகவும் பயங்கரமான சுடருக்குள் இருக்கும் ஶார்ங்கம் என்னும் வில்லை த்யாநிக்க வேண்டும், வடக்கில் மிகவும் பயங்கரமான கத்தியை த்யாநிக்க வேண்டும்.

### 24 ஆரங்கள் கொண்ட சக்ரம் அமைப்பு

இந்தச் சக்ரத்தின் மத்தியில் கீழ் பாகத்தில் சக்ரம் தாமரையுடன் கூடிய 24 ஆரங்கள் கொண்ட நல்ல வட்டைகளுடன் விளங்கும்.

### நடுவில் 12 இதழ்கள் கொண்ட தாமரை

நடுவில் 12 இதழ்கள் கொண்ட தாமரையுடன் சக்ரத்தை எழுத வேண்டும்.

## ஆக்நேய மண்டலம் அமைப்பு

சக்ரத்தின் மத்தியில் தாமரையின் கர்ணிகை இருக்கும் இடத்தில் ஆக்நேய மண்டலம் அமைக்க வேண்டும்.

## நடுவில் யோக நரஸிம்ஹர்

அதன் மத்தியில் யோக வேஷ்டி சாற்றிக் கொண்டிருப்பவரும், (மேல் உத்தரீயத்தை யக்ஞோபவீதம் போல் அணிந்து கொள்வது யோக வேஷ்டி எனப்படும்.) அநாதி புருஷனும், நான்கு திருக்கைகளில் நான்கு சக்ரங்கள் தரித்தவரும், பரமபுருஷனும், அஶோக மரத்தின் கீழே வீற்றிருப்பவரும், ப்ரளய காலாக்நிக்கு ஒப்பான ஶரீர காந்தியுடையவரும், அனைத்துத் திருவாபரணங்களை அணிந்தவரும், பக்தர்கள் அனைவருடைய ஶ்ரமங்களைத் தீர்ப்பவரும், அளவிட முடியாத கல்யாண குணங்களுக்குக் கடலும், பக்தர்களை அநுக்ரஹிப்பவரும், எப்பொழுதும் எல்லா உலகங்களுக்கும் அதிபதியுமான **ஸ்ரீ ந்ருஸிம்ஹனை** மேற் சொன்னவாறு அமைத்து,

## அவர் திருவடிகளில் இரு கிங்கரர்கள்

அவர் திருவடிவாரத்தில் அவர் கட்டளைப்படி செய்பவர்களும், பயங்கரமானவர்களும் கரு நீல மேகம் போன்ற நிறமுடையவர்களும், பயங்கரமான கண்களை உடையவர்களும், கம்பீரமான திருமேனியுடையவர்களும், பயங்கர ஆயுதங்கள் ஏந்தியவர்களும், உத்தமமானவர்களும், கோரைப்பற்களால் பீதியைத் தரும் முகமுடையவர்களும், வட்டமான விழிகளை உடையவர்களுமான அவருடைய இரண்டு கிங்கரர்களை அமைக்க வேண்டும்.

## சக்கரத்தைச் சுற்றி எட்டு ஶக்திகள்

பிறகு சக்ரத்தின் நாற்புரமும் கூந்தலை மேலே தூக்கிக் கட்டி முடிந்திருப்பவர்களும், அவரால் அருளப்பட்ட ஶக்தியை உள்ளவர்களும், நல்ல யௌவந வயதில் இருப்பவர்களும், அனைத்து ஆபரணங்களை அணிந்தவர்களும், 2 கைகள் உள்ளவர்களும் மாலைகள்

அணிந்தவர்களுமான எட்டுப் பெண்களை அமைக்க வேண்டும். கிழக்கில் மஞ்சள் வஸ்த்ரம், அணிந்த **ஜயா** என்கிற தேவியையும், தென் கிழக்கில் கருத்த நிறத்துடன் நீண்ட கண்கள் உடைய **மோஹிநீ** என்பவளையும், தெற்கில் கருத்த நிறம் உள்ள **விஜயா** என்பவளையும், தென் மேற்கில் சிவந்த நிறம் உள்ள **ஹ்லாதிநீ** என்பவளையும், மேற்கில் மஞ்சள் நிறமுள்ள உத்தமமான **அஜிதா** தேவியையும், வட மேற்கில் கருத்த நிறமுள்ள அநாதியான **மாயா** தேவியையும், வடக்கில் சிவப்பு நிறமுள்ள **அபராஜிதா** என்பவளையும், வட கிழக்கில் புகை நிறம் கொண்ட **ஸித்தி** என்பவளையும் அமைக்க வேண்டும்.

## இப்படியமைந்த யந்த்ரத்தின் மஹிமை

இவ்வாறு அமைக்கப்பட்ட இந்த யந்த்ரம் பெரிய பாபங்களை அழிக்க வல்லது. ஆயுள், ஆரோக்யம், தநம் தர வல்லது. மக்கட் செல்வம், நண்பர்கள், நல்ல மனைவி இவற்றைக் கொடுக்க வல்லது. எல்லா வகை இடையூறுகளைத் தடுக்க வல்லது. எல்லா துர் தேவதைகளை விரட்ட வல்லது. எவரொருவர் எவற்றை விரும்பி இந்த யந்த்ரத்தை எழுதுவாரோ அவருக்கு அவற்றை எல்லாம் கொடுக்க வல்லது. இந்த யந்த்ரத்தை ரத்நங்கள், முத்து. பவழங்கள், இவைகள் நிறைந்ததாகத் தங்கத்தில் அமைக்க வேண்டும். அமைப்பவர் அரசனாயிருந்தால் நோயற்றதாகவும், பகைவர்கள் அற்றதாகவும் உள்ள ராஜ்யத்தைப் பெறுவர்.

## பனை ஓலையில் எழுதினாலும் பலன் உண்டு.

எவரொருவர் பனை ஓலையில் இதைக் குங்குமப்பூ குழம்பினாலும், சந்தநத்தினாலும் எழுதித் தலையில் அணிகிறரோ, அவரது விருப்பம் அனைத்தும் நிறைவேறும். அவருக்குப் பேய், பிசாசுகள், பாம்பு, ராக்ஷஸர்கள் இவர்களது தொல்லைகள் எல்லாம் விலகிப் போய்விடும்.

### பரிலையில் செய்தால் மோக்ஷம் கிடைக்கும்

எவர் இந்த உலகத்தில் சிலை வடிவில் இந்த யந்த்ரத்தை அமைப்பாரோ, அவர் இம்மையில் எல்லா இன்பங்களையும் பெற்று விஷ்ணுவின் ஸாயுஜ்யம் அடைவர்.

### உலோஹத்தில் செய்வதன் பலன்

உலோஹத்திலோ, வெள்ளியிலோ இதை அமைக்கும் மாந்த்ரிகர் அறம், பொருள், இன்பம் இவற்றை அநுபவித்து விரைவில் மோக்ஷத்தைப் பெறுவார்.

### ஆலயம் அமைப்பதன் பலன்

எவர் **கர்ஷணம்** (நிலம் உழுதல்)முதல் ப்ரதிஷ்டை (அஷ்ட பந்தந ப்ரதிஷ்டை) வரை செய்து ஆலயம் அமைக்கிறாரோ அவர் குலத்தில் பிறந்தவர்கள் ஒப்பற்ற புண்ய லோகம் செல்வர்.

### பயம் முதலியவற்றில் த்யாநபலன்

ஆபத்திலும், போர்க்களத்திலும், வாதங்களிலும், இதை த்யாநிப்பவர்களுக்கு வெற்றி எளிதில் கிடைக்கும். இதில் ஸந்தேஹமே இல்லை.

### மூன்று வேளைகளில் பூஜை செய்தால் மோக்ஷம்

மூன்று வேளைகளிலும் இந்த நிகரற்ற யந்த்ரத்தைப் பூஜித்து வருபவர் **ஆத்யாத்மிகம்**, **ஆதிதைவிகம்**, **ஆதிபௌதிகம்** என்கிற மூன்று வகை ஶ்ரமங்கள் நீங்கி விஷ்ணுவின் உலகத்தில் வர வேற்கப்படுவர்.

### ரக்ஷை அமைப்பில் விஶேஷ வித்யாரம்பம்

நல்ல ஆட்சி அமைய வேண்டுமானால், நாரதரே! இதன் சிறப்பான அம்ஶத்தைச் சொல்கிறேன், கேளும். ராஜ்யத்தை விரும்புபவன் ஆனாலும், ராஜ்யம் பறிபோனவன் ஆனாலும் பிறரால் அவமதிக்கப்பட்டவன் ஆனாலும்,

## ஆசார்ய பூஜாவிதி

இந்த ஸுதர்ஸந யந்த்ரத்தை அமைத்துக் கொடுக்கும் நல்ல குருவை எல்லோரிலும் மேலானவர் என்று மதித்து அவரை மிகுந்த செல்வம் தந்து உபசரித்து,

## பகவதாராதனை முறை

பிறகு தாமரைக் கண்ணனும், நீலமேக வண்ணனும், பீதாம்பரம் தரித்தவனும், ஸகல ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவனும், நான்கு புஜங்களோடு கூடியவனும், பரம புருஷனும் ஆகிய நாராயணனை ஆசார்யன் உபதேஸித்த முறையில் பூஜை செய்ய வேண்டும்.

## யந்த்ரம் அமைத்தல்

உருக்கிய தங்கத்தினால் ஆனதும், ரத்நம், பவழம் இவற்றால் அலங்கரிக்கப்பட்டும், எல்லா அலங்காரங்களோடும் கூடியதான இந்த உத்தம யந்த்ரத்தைச் செய்ய வேண்டும்.

## இதனால் ராஜ்யம் பெறுதல்

இதைச் செய்தவுடன் எந்த உபத்ரவமும் இல்லாத ராஜ்யத்தைப் பெறுவான்.

## எழு த்வீபங்களுடன் பூமியைப் பெறுதல்

எல்லா வகையான ஸித்திகளைக் கொடுக்க வல்ல இதைப் பக்தியுடன் ப்ரதிஷ்டை செய்து பூஜிக்க வேண்டும். இதன் மூலம் பட்டணங்கள் நிறைந்த ஏழு த்வீபங்களுடன் கூடிய பூமியின் ஆட்சியைப் பெறுவான்.

## மூன்று உலகங்களை ஆளும் ஸக்தி பெறுதல்

இவனுக்கு ஸித்தர்கள், கந்தர்வர்கள், அரக்கர்கள் யாவரும் அடங்கியிருப்பார்கள். இவன் இந்த பூமியில் இருந்து கொண்டே மூவுலகங்களின் ஆட்சி அனைத்தையும் நன்கு செய்வான்.

### ஏவல் முதலியவை பலிக்காது

பிறர் செய்த ஏவல், ஶூந்யம் முதலியவை இவனிடம் வராமல் மிகவும் பயந்து, மலையால் தடுக்கப்பட்ட ஆற்று வெள்ளம் போல் அதை ஏவியவனையே சென்று அடையும்.

### துர்தேவதைகளிடமிருந்து பரிஹாரம்

துர்தேவதைகள் அழிந்து போகும். பகைவர்கள் பயந்து ஓடி விடுவார்கள். பீடைகள், துஷ்ட ம்ருகங்கள், ஸர்பம், திருடர், நோய்கள் முதலியவற்றால் வரும் பயம், அவனுடைய ராஜ்யத்தில் ஏற்படாது. அவன் வம்ஶத்தில் எல்லாவகையிலும் பலம் சேரும்.

### தங்கள் கடமையில் ஈடுபாடு

முனிவரே! அனைத்து மக்களும் தங்கள் கடமைகளில் ஈடுபடுவார்கள்.

### இந்த்ரனுக்கு ஆட்சி கிடைத்தல்

முன்னொரு காலத்தில் துர்வாஸ முனிவரின் ஶாபத்தால் இந்த்ரன் தன் ஆட்சியை இழந்த போது, இந்த யந்த்ரத்தின் அநுக்ரஹத்தால் மீண்டும் அவன் ஸ்வர்கலோக ஆட்சியைப் பெற்றான்.

### நான்முகனுக்குப் பகவானின் அருளால் இந்த யந்த்ரம் கிடைத்தல்

முன்னொரு காலத்தில் இந்த யந்த்ரத்தைச் சதுர்முகனுக்கு பகவான் ஸ்ரீ ஹரி உபதேஶித்தார். ப்ரம்ஹனும் விஶ்வகர்மா என்கிற சிற்பியை அழைத்து இந்த யந்த்ரத்தை அமைக்கச் செய்தார். அந்நாள் முதல் தேவர்களும் கந்தர்வர்களும், அஸுரர்களும் மேலும் பல அரசர்களும்,

### பாதுகாக்கும் முறை அமைதல்

விமாநங்களையும் ஆட்சியைக் காக்கும் முறையையும் அமைத்துக் கொண்டனர். ஆகையால் எல்லா அரசர்களுக்கும் இது ஒன்றே உத்தமமான பாதுகாப்பு முறை.

## அத்யாயத்தின் பொருள் நிறைவு

உதய ஸூர்யனின் ஜ்வலிக்கும் பிம்பம் போன்றதும் ப்ரம்ஹன் முதலான அனைத்து தேவர்களாலும் உபாஸிக்கப் பட்டதும் மூலப்ராக்ருதி, மஹான், அஹங்காரம் இவற்றுடன் சேர்ந்ததும், பஞ்ச பூதங்களால் உபாஸிக்கப் பட்டதுமாகிய இந்த **யந்த்ர ராஜனை** யாவரும் பூஜித்தல் நலமாகும்.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்**
**மஹா ஸுதர்ஶந யந்த்ர லக்ஷணம்** என்கிற
26வது அத்யாயம் முற்றிற்று.



தாரக யந்த்ர நிரூபணம் என்கிற

# 27வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேக கோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி॥

(விளக்கம் 18ம் அத்யாயத்தில் உள்ளது)

## முன் அத்யாயத்தைச் சுருக்கமாகச் சொல்லித் தாரக மந்த்ர விஷயமாகக் கேள்வி

**நாரதர் :—** மஹா விஷ்ணுவின் (ஶக்தியோடு இயங்கும்) மந்த்ர ராஜனின் ஸ்வரூபமும், அதற்கு வேண்டிய பலவகை அங்கங்களும் உபகரணங்களும், அதன் பலனும், விரிவாகச் சொல்லப்பட்டன. பகவந் பரமேஶ்வர ! மிகவும் அத்புதமானதும் தேவர்களாலும் பூஜிக்கப்பட்டதுமான இந்த யந்த்ரம் யாரால் அலங்காரமாக (ரக்ஷையாக)த் தரிக்கப்படுகிறது என்பதை இப்பொழுது கேட்க விரும்புகிறேன். இதைத் தரிக்கும் ஶக்தி யாருக்கும் இருப்பதாக நான் நினைக்கவில்லை. தேவரீருக்கு மிகுந்த ஶக்தி- ஸாமர்த்யம் இருப்பதால் இந்த ஸந்தேஹத்தை தேவரீர் நீக்கி அருள வேண்டும்.

## பதில் கூறுதல் தொடக்கம்

**அஹிர்புத்ந்யர் :-** தேவர்ஷியே ! நீர் சொல்வது உண்மை. மிகவும் ஶக்தியோடு (தேஜஸ்) கூடிய அந்த யந்த்ரத்தை யாராலும் தரிக்க இயலாது தான். இப்பொழுது சொல்லப் போகும் மற்றொரு யந்த்ரம் இல்லாமல் இதைத் தரிக்க யாருக்கும் ஶக்தி கிடையாது. முநிஶ்ரேஷ்டரே ! அதன் ஸ்வரூபத்தைச் சொல்கிறேன், கேளும். முதலில் ஸகல அலங்காரங்களோடு கூடியதும் யந்த்ரங்களின் லக்ஷணங்கள் அனைத்தும் நிறைந்த பூமி ஸ்வரூபமான மஹேந்த்ரனைத் தேவதையாக கொண்ட மண்டலத்தைச் செய்து கொண்டு,

## கோணங்களில் பூமியில் பீஜாக்ஷரங்கள்

கோணங்களில் ஆதிஶேஷன் முதலிய எட்டு நாகங்களோடு கூடிய நாற்புறமும் தரிக்கப்படுவதான பூமியின் பீஜங்களை அமைக்க வேண்டும்.

## கிழக்கில் ஶேஷன் குளிகன் அமைத்தல்

இதன் கிழக்கில் பயங்கரமானவர்களும், பயங்கரமான கண்களோடு கூடியவர்களுமான **ஶேஷன் குளிகன்** இருவரையும் ஒருவருக்கொருவர் நேருக்கு நேர் பார்ப்பவர்களாக எழுத வேண்டும்

## தெற்கில் வாஸுகி ஶங்கன்

யந்த்ரத்தை அமைக்கும் ஆசார்யன் தெற்கில் **வாஸுகி, ஶங்க பாலன்** இருவரையும் நேருக்கு நேர் பார்ப்பவர்களாக எழுத வேண்டும்.

## மேற்கில் தக்ஷகன் மஹாம்புஜன்

இவ்வாறே மேற்கே **தக்ஷகன் மஹாம்புஜனை** எழுத வேண்டும்.

## வடக்கில் கார்கோடகன் அம்புஜன்

முனிவரே ! வடக்கில் **கார்கோடகன், அம்புஜன்** இருவரையும் முன் போல் அமைக்க வேண்டும். அதன் நடுவில் பெரிய ஜ்வாலைகளின் சுழல் போல் விளங்குவதும்,

## நடுவில் அக்நி மண்டலம்

ஆறு கோணங்களுடன் பீஜத்துடன் கூடியதும் **வஹ்நி (ரம்)** மண்டலத்தை அமைத்து,

## அதன் நடுவில் வாயு மண்டலம்

அதன் நடுவில் வட்டமாக அதன் பீஜத்துடன் **(யம்)** வாயு மண்டலத்தை அமைக்க வேண்டும்.

## அதன் நடுவில் 10 ஆரங்கள் கொண்ட சக்ரம்

அதன் நடுவில் 10 ஆரங்கள் கொண்டதும், ஶத்ருக்களை அழிக்க வல்லதுமான ப்ரகாஶமானதுமான நேமி மண்டலத்தை அமைக்க வேண்டும்.

## ஆரங்களில் ஸுதர்ஶந ந்ருஸிம்ஹன்

இதன் ஒன்பது ஆரங்களில் வரிசையாக ஒவ்வொன்றிலும் இரண்டு இரண்டு எழுத்துக்களுடன் **ஸுதர்ஶந, ந்ருஸிம்ஹ பீஜ**ங்களை எழுத வேண்டும். 10வது ஆரத்தில் **ஹந** என்கிற எழுத்துக்களை எழுத வேண்டும்.

## சக்ரத்தின் நடுவில் எட்டு இதழ்த் தாமரை

சக்ரத்தின் மத்தியில் **கர்ணிகை**யுடனும், அழகானதும், **கிஞ்ஜல்கம்** என்கிற தாதுக்களோடு கூடிய 8 தளங்களுடன் தாமரையை எழுத வேண்டும்.

## கர்ணிகையில் ப்ரணவ மந்த்ரம்

அந்தக் **கர்ணிகை**யில் ஸம்ஸாரத்தைத் தாண்டுவிக்க வல்ல **தாரக பீஜத்**தை எழுத வேண்டும்.

## அதிலேயே விரும்பிய பலன்

அதன் பிறகு விரும்பிய பலனை அதன் பெயருடன் கூடியதாக எழுத வேண்டும்.

## இந்தத் தாரக யந்த்ரத்தினுல் ஸகல பொருள்களையும் பெறலாம்

இவ்வாறு சொன்ன இந்த மந்த்ரம் மிகவும் உத்தமமானது. மங்களங்களுக்கெல்லாம் மங்களமாகும். புநிதத்துக் கெல்லாம் புநிதமானது. திருடர்களின் தொல்லைகளைப் போக்க வல்லது. அனைத்து விருப்பங்களையும் தரவல்லது. பயங்கரமானது. உலகத்தாரால் பூஜிக்கப்படுவதும் தந்நிகரற்றதுமாகும்.

## இந்த யந்த்ரத்தினுல் இந்த்ரன் பகைவர்களை வெற்றி கொள்ளுதல்

முன்னொரு காலத்தில் அஸுரர்களால் தேவர்கள் தோற்கடிக்கப்பட்ட பொழுது, இந்த்ரன், ப்ருஹஸ்பதியை (தேவ குரு) அழைத்துப் பின் வருமாறு பேசலானான்-''இந்த **திதி** புத்ரர்களும், **தநு** புத்ரர்களும் நம்மை மிகவும்

உபத்ரவிக்கிறார்கள். ஸ்வாமிந் ! இந்த அஸுரர்களை எந்த வழியில் நாம் ஜயிக்கலாம்? ஸ்வாமிந்! இவர்களின் பலம் எந்த வகையில் குறையும்? அதைச் சொல்ல வேண்டும்''. இந்த்ரன் இவ்வாறு கேட்க, ப்ருஹஸ்பதி பின் வருமாறு கூறினார். ''பலனை அழித்த இந்த்ரனே ! ஸுதர்ஶநத்தோடு கூடிய ந்ருஸிம்ஹனுடைய யந்த்ரத்தினுல் இவர்களுடைய ஸேனைகள் எல்லாம் அழியும்.'' இவ்வாறு சொல்லி இந்த்ரனுடைய பட்டணத்தில், ரத்நங்கள், முத்துக்கள், பவழம் இவை நிறைந்ததும் தங்கத்தின் ஒளியுடன் அளவில்லாத தேஜஸ்ஸை உடைய அந்த யந்த்ரத்தை அமைத்தார். அன்று முதல் இந்த்ரனுடைய பகைவர்கள் அனைவரும் செல்வம் இழந்து, ஒளியிழந்து, வீடுகளை இழந்தவர்களாய் தோற்றுப் போயினர். நாலா பக்கங்களிலும் ஓடி விட்டனர். ஆகையால் தேவர்களாலும் நன்கு வணங்கப்படும் இந்த யந்த்ரம் எல்லையற்ற ஶக்தி உடையதாகும்.

**இந்த யந்த்ரம் முன் சொன்ன
மஹா ஸுதர்ஶந யந்த்ரத்தைத் தரிக்கிறது.**

ஆகையால் நாரதரே ! தேவர்ஷியே ! இந்த ஜகத் ஸ்வரூபமான யந்த்ரத்தினுலேயே அதி விசித்ரமான அந்த **ஸுதர்ஶந** ரூபமான யந்த்ரம் தரிக்கப்படுகிறது. என்னால் சொல்லப்பட்ட இந்த மஹா ஸுதர்ஶந யந்த்ரம், **ஸுதர்ஶநன் ந்ருஸிம்ஹன்** இவர்களின் வீர்யத்தோடு தரிக்கப்படுகிறது.

**அரசனைப் போல் நாடும் யந்த்ரத்தைத் தாங்கும்**

மிகவும் சிறந்த இந்த யந்த்ரத்தைத் தரிப்பதற்குப் பூமி தான் சிறந்தது. இந்த பூமியைக் காக்கும் அரசன் தர்ம சிந்தனையுடன் தளராத பராக்ரமம் உள்ளவனாக, தேவர்கள், ப்ராம்ஹணர்கள், பெரியோர், பண்டிதர், இவர்களை மதிப்பவனாகவும், மிகவும் ஆஸ்திக புத்தி உள்ளவனாகவும் இருப்பான்.

**அரசன் திநமும் அர்ச்சனை செய்ய வேண்டும்**

அரசன் இதைச் சக்ரவடிவத்தில் அமைந்ததாகவோ, புருஷன் வடிவத்தில் அமைந்ததாகவோ, இரண்டு வகைகளிலும் அமைந்ததாகவோ பூஜிக்க வேண்டும்.

### இந்த மந்த்ரத்தை உபதேஶித்தவருக்குப் பூஜை

நல்ல ஜ்ஞாநியாக இருப்பவன் இந்த மந்த்ரத்தை உபதேஶித்தவரை மிகவும் சிறப்பாகக் கொண்டாடி மகிழ்விக்க வேண்டும்.

### இதே முறையில் உழுதல் ப்ரதிஷ்டை செய்தல்

உழுதல் முதலிய கார்யங்கள் முதல் ப்ரதிஷ்டை வரையில் உள்ள கார்யங்களை அரசன் இந்த மந்த்ரத்தில் சொல்லப்பட்ட வழியிலேயே தானே முன் நின்று செய்விக்க வேண்டும்.

### இந்த முறையே ஸாத்வத ஸம்ஹிதையில் உள்ளது.

**ஸாத்வத ஸம்ஹிதை** முதலியவற்றில் விதிக்கப்பட்ட முறையாலேயே **ஸுதர்ஶந மந்த்ரத்தையே, ந்ருஸிம்ஹ மந்த்ரத்தையே** அந்தக் கல்பங்களில் சொல்லப்பட்ட முறைகள் இந்த யந்த்ரம் இருக்குமிடத்தில் இதன் மஹிமையால் இயக்கப்பட்டு அமையும். ஆகையால் முன் சொன்ன முறையில் இதை ப்ரதிஷ்டை செய்து பூஜிக்க வேண்டும்.

### அரசர்களுக்கு இதைப் பூஜிப்பதால் ராஜ்யம் முதலியவை கிட்டும்

அரசன் ராஜ்யம், வெற்றி, செல்வங்கள், நல்ல ஆயுள் ஆரோக்யம் இவற்றைப் பெறுவான்.

### திநமும் பூஜிப்பதன் பலன்

திநமும் பூஜித்து வருவதால் அரசனுக்கு ஏழு தீவுகள் கொண்ட கடல் சூழ்ந்த பூமண்டலம் முழுவதும் வஶப்படும்.

### ஹோமத்துக்காக ப்ராஸாதம், குண்டம் அமைத்தல்

எல்லா லக்ஷணங்களும் பொருந்திய மேல் மாடியை ஒரு உத்தமமான ஆஸநமாக அமைத்து அவ்விடத்திலேயே இந்த மந்த்ரத்துக்குக் குண்டம் அமைக்க வேண்டும்.

### ஆசார்யன் ஹோமங்களைச் செய்தல்

அரசன் செய்ய வேண்டிய எந்தக் கர்மங்களுண்டோ, அவற்றை ஆசார்யன் கவனத்துடன் இருந்து இந்தக் குண்டத்தில் இந்த மந்த்ரத்தைக் கொண்டே ஹோமம் செய்ய வேண்டும்.

### மாறுபட்ட வேறு இடம் அமைக்கும் முறை

ரம்யமான விஷ்ணுவின் ஆலயத்திலாவது அல்லது அலங்கரிக்கப்பட்ட மண்டபத்திலாவது, அரசனுக்குச் செய்ய வேண்டிய பாதுகாப்பு முறை, இந்த மந்த்ரத்தைக் கொண்டு செய்வதானால், இந்தக் குண்டத்தை அங்கேயே அமைத்து, அரசன் பலவகைத் தநங்களால் ஆசார்யனைப் பூஜித்து மர்யாதை செய்து அந்தக் கார்யத்தைச் செய்விக்க வேண்டும்.

### யந்த்ரத்தைப் பூஜிப்பதால் பெரும் பயன்கள் கிட்டும்

அரசன் இதனுல் புண்யங்கள் கிடைக்கப் பெற்றவனாய் ராஜ்யத்தைப் பெறுவான். நோயற்றவனாகவும், பகைவர்கள் அற்றவனாகவும், நீண்ட ஆயுள் உள்ளவனாக ஆவான். அவன் பட்டணம் ஆயிரக் கணக்கான யானைகளும், கணக்கில்லாத குதிரைகளும், பல ரதங்களும், சிறந்த படையாட்களும் நிறைந்ததாக அமையும். இந்த யந்த்ரத்தை எந்த அரசன் பூஜிக்கிறானோ, அவன் இந்த யந்த்ரம் எல்லா மந்த்ரங்களையும் தன்னுள் கொண்டிருப்பதனுல் எல்லா தேவதைகளும் பூஜிக்கபட்டவர்களாக ஆவார்கள். எவன் எந்தப் பலனுக்காக இதைப் பூஜிக்கிறானோ, ஆத்ம க்ஷேமத்துக்காகப் பெரிய முயற்சி செய்தாலும், மற்றவர்களுக்கும் அரசனுக்கும் இது நன்மை செய்யும். இந்த மந்த்ரமும் யந்த்ரமும் அரசர்களுக்காகவே விதிக்கப்படுகின்றன. நாரதரே ! மந்த்ரங்கள் எல்லோருக்கும் பொதுவான பலனைக் கொடுப்பவைகள். எந்த அரசனுடைய மந்த்ரிகள் இந்த யந்த்ரத்தைப் பூஜிக்க முனைவரோ அவர்கள் ஸகல க்ஷேம லாபங்கள் மூலமாக அரசனைக் காப்பாற்றுவார்கள்.

**இதை நமஸ்காரம் செய்தாலும் பலன் கிட்டும்**

இதை நமஸ்காரம் செய்வதாலும், பூஜிப்பதாலும், துதிப்பதாலும், நினைப்பதாலும் இதை எவன் ஸந்தோஷப்படுத்துவானோ, அவனுக்கு விரும்பியது எல்லாம் ஶ்ரமமின்றி கைக்குக் கிட்டும்.

**அத்யாயத்தின் நிறைவு**

இவ்வாறு மந்த்ரத்தோடு கூடிய இந்த யந்த்ரம் விளக்கிக் கூறப்பட்டது. இது பக்தர்களுக்கு ஸகல பாபங்களை அழிக்க வல்லது. ஆகையால் சொன்ன முறைகளைச் சரியாக அமைத்த அரசன் உலகில் விருப்பங்கள் நிறைவேறப் பெற்று, இந்த பூ மண்டலம் அனைத்தையும் பெற்றுச் சக்ரவர்த்தியாக (அரசனுக்கு அரசன்)ஆவான்.

இவ்வாறு பாஞ்சராத்ரம், தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** தாரக யந்த்ர நிரூபணம்
என்கிற 27வது அத்யாயம் முற்றிற்று



பகவானை ஆராதிக்கும் முறை விளக்கம் என்கிற

# 28வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி।
(விளக்கம் 18வது அத்யாயத்தில் உள்ளது)

## ஆராதந முறை விளக்கம் தொடக்கம்

**அஹிர்புத்ந்யர் :-** நாரதரே!ஆயுள், ஆரோக்யம், வெற்றி, பூமி இவற்றைத் தர வல்லதும், தாந்யம், தநம் இவற்றைக் கொடுப்பதுமான ஆராதநை முறையைச் சுருக்கமாகவே சொல்கிறேன்.

## அது இஹ- பரலோக பலனைத் தரும்

மக்கள், பஶு, அந்நம், இவற்றை விரும்புபவர்களுக்கு அந்த அந்த பலனை அளிக்கக்கூடியதும், இஹ லோக இன்பங்கள், மோக்ஷம் இவற்றைக் கொடுப்பதும், ஶாந்தியைத் தர வல்லதும், பகைவர்களை வெல்வதற்குக் காரணமாகவும் மிகவும் உத்தமமானதும் உள்ளது இந்த ஆராதந விதி.

## முதலில் ஸ்நாநம் செய்யும் முறை

நல்ல ஶுத்தமான இடத்தில் ஸ்நாநம் செய்யும் தீர்த்தத்துக்குச் சென்று, மந்த்ரத்தைச் சொல்லி மண்ணை எடுத்து அதை இரண்டாகப் பிரித்து ஒரு பாகத்தால் உடம்பையெல்லாம் தேய்த்து அலம்ப வேண்டும். ஸ்நாநம் செய்து ஆசமநம் செய்து மற்றொரு பாகத்தை எடுத்து அதை மூன்று பிரிவுகளாகப் பிரிக்க வேண்டும். நாரதரே ! ஒரு பாகத்தினால் இடது கையில் திக்பந்தம் செய்து, மற்றொரு பாகத்தினால் உடல் முழுவதும் பூசிக் கொள்ள வேண்டும். இதன் பிறகு மற்றொரு பாகத்தை அந்தத் தீர்த்த தேவதைக்குப் பீடம் அமைக்க வேண்டும். அதில் விஷ்ணுவின் இடது பாதத்திலிருந்து பெருகிய கங்கையை நினைத்துக் கொள்ள வேண்டும். அந்த கங்கைக்கு அர்க்யம் ஸமர்ப்பித்து விட்டு,

அந்தத் தீர்த்தத்தை இரண்டு கைகளாலும் எடுத்து, ஏழு முறை மந்த்ரம் சொல்லி, மூன்று முறை ஶிரஸில் சேர்த்துக் கொள்ள வேண்டும். தீர்த்தத்தில் மூழ்கி பகவானின் திருவடிகளில் தன் ஶிரஸை வைத்திருப்பதாக த்யாநித்து அதையே நினைத்துக் கொண்டு முடிந்தவரை மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். பிறகு எழுந்து ஆசமநம் செய்து விட்டு உலர்ந்த வஸ்த்ரம், உத்தரீயம் இவற்றைத் தரித்து, ஊர்த்வபுண்ட்ரங்கள் தரித்துக் கொண்டு, ஆசமநம் செய்து, தேவர்கள், ருஷிகள், பித்ருக்கள் இவர்களைப் பகவானின் ஶரீர பூதர்களாக நினைத்து அவர்களுக்குத் தர்பணம் செய்ய வேண்டும். (இங்கே சொன்ன தேவர்கள், **ப்ரம்மாதயோ யே தேவா:** என்றும் ருஷிகள்: **க்ருஷ்ண த்வைபாயநா: ருஷய:** என்றும், பித்ருக்கள் **ஸோம: பித்ருமான், யமோங்஽கிரஸ்வாந், அக்நி: கவ்யவாஹந: இத்யாதய: யே பிதர:** என்றும், பெரியோர்களால் சொல்லப்பட்டுள்ளது. இதை ப்ரம்மசாரிகள், தகப்பனார் உள்ளவர்கள் உள்பட அனைவரும் அவஶ்யம் செய்ய வேண்டும்). இதன் பிறகு திநசரி செய்ய வேண்டிய ஸந்த்யாவந்தநம் முதலிய கார்யங்களைச் செய்ய வேண்டும். பிறகு தம் க்ருஹத்துக்குச் சென்று, (பெருமாள் உள்ள இடம்) கை கால்களை அலம்பிக் கொண்டு கவனத்துடன்,

## ஆராதந ஆரம்பம்

ஆசமநம் செய்து, யாருடனும் பேசாமல், மௌநமாக இருந்து ஆராதநத்தைத் தொடங்க வேண்டும். நாற்புறமும் வாசற்படிகளோடு கூடியதும், அழகியதுமான ஆராதந ஸ்தாநத்தை அடைந்து த்வார பாலகர்களைப் பூஜித்து மண்டபத்துக்குச் செல்ல வேண்டும்.

## மண்டபத்தின் வர்ணனை

கம்பீரமாகவும், வாழை, மாவிலைத் தோரணங்களோடு கூடியதும், மணிகளால் அமைந்த மேடையுடன் கூடியதும், ரத்நங்கள், பவழங்கள் பதித்த தங்கத்தினாலான பல கம்பங்களோடும், தங்கத்தினாலான பல தீபங்களை உடையதும், பல வகையான தோரணங்களுடனும்,

கொடிகளுடனும், அலங்கரிக்கப்பட்டதும் ரத்நங்கள் பதித்த மணிகள் சலங்கைகளைக் கொண்டதும், பட்டினால் ஆனதுமான **விதாநம்** என்கிற மேற்கூறைத் துணியை உடையதும், சில இடங்களில் ரத்நமயமான பீடங்களால் மண்டபம் அலங்கரிக்கப்படும்.

### அங்கு மேடை அமைத்தல்

அந்த உத்தமமான மண்டபத்தின் நடுவில், மிகவும் ஜ்வலிப்பதான, **பத்மராகம்** பதித்த நான்கு கம்பங்களோடு கூடியதும், முத்துக்களாலான விதாநத்துடன் கூடியதும், நவரத்ந மயமான நான்கு கால்கள் கொண்ட பீடத்துடனும், விளக்குகளோடு கூடியதும், வைடூர்யம் பதித்த உயரமான மேடையை அமைக்க வேண்டும். இவ்வாறு செய்வதற்குச் சக்தியில்லாமல் இருந்தால், ஆசார்யன் இவ்வாறு மேடை இருப்பதாக த்யாநம் செய்து கொள்ள வேண்டும்.

### பகவான் பரிவாரங்களுடன் இருப்பதாக த்யாநம்

இவ்வாறு அமைத்த, பீடத்தில் சக்ரமும், தாமரையும் சேர்ந்த ஆஸநத்தில் ஆதார ஶக்தி, கூர்மம், ஆதிஶேஷன், தர்மம் முதலியவைகளால் தாங்கப்பட்ட தாமரையில், சந்த்ரன், ஸூர்யன், அக்நி, ஸத்வம் முதலியவற்றால் சூழப்பட்டவராய், இவ்வாறு கூறப்பட்ட பரிவாரங்களால் ஸேவிக்கப்பட்டவரும், வேதங்கள், மந்த்ரங்கள், ஆயுதங்கள், அஸ்த்ரங்கள், ஶக்தி இவற்றோடு கூடியவரும், முன் சொன்ன ஆஸநத்தில் பகவானை நன்கு பதிந்த ஆஸநத்தில் அமர்ந்து த்யாநிக்க வேண்டும்.

### பகவானை ப்ரார்த்தித்தல்

தேவரீரைச் சேர்ந்த (தாஸனான) அடியேன் தேவரீரால் கொடுக்கப் பட்ட உபசாரத்துக் கேற்ற மாலை, தூபம், தீபம், சாமரம், தீர்த்தம் முதலியவையும், நைவேத்யம் முதலியவையும் ஆகிய உபசாரங்களால் பூஜிக்கிறேன் என்று சொல்ல வேண்டும்.

ஶரீரத்தில் உள்ள தத்வங்களை லயக்ரமத்தில் ஒடுக்க வேண்டும். பிறகு இந்தப் பருத்த ஶரீரத்தை ஶோஷணம் செய்து எரிக்க வேண்டும். **ரம் - அக்நயே நம:-** முதல் ப்ராணாயாமத்தால் மந்த்ரத்தை நாபியில் ந்யாஸம் செய்ய வேண்டும். அதிலிருந்து பிறந்ததும் **ஸுஷும்நா** நாடியின் மத்தியில் உள்ள நாதத்தினால் வாயு மண்டலத்துக்குச் சென்று அதிலிருந்து கிளம்பிய வாயுவினால் இந்த ஸ்தூல ஶரீரத்தை உலர்த்த வேண்டும். நாரதரே ! இரண்டாம் முறை ப்ராணயாமம் செய்து ஹ்ருதயத்தில் ந்யாஸம் செய்ய வேண்டும். இந்த **(ரம்)** மந்த்ரத்தால் புறப்பட்ட அக்நியைக் கொண்டு தேஹத்தை எரிக்க வேண்டும். மூன்ருவது ப்ராணயாமம் செய்து தன் ஆத்மாவை விஷ்ணுவின் இடது திருவடித் தாமரையின் கீழ் இருப்பதாக த்யாநிக்க வேண்டும். அவருடைய இடக்கால் கட்டை விரலிலிருந்து பெருகிய அமுதத்தினால் தன்னை அபிஷேகம் செய்விக்கப்பட்டவனாக நினைக்க வேண்டும். பிறகு பஞ்சோபநிஷத் மந்த்ரங்களால் முன் போன்ற ஶரீரம் கிடைக்கப் பெற்றவனாய் மந்த்ரங்களைக் கொண்டு **அங்கந்யாஸ கரந்யாஸ**ங்களைச் செய்து ஸுதர்ஶநத்தை த்யாநம் செய்ய வேண்டும். ஆவாஹநம் பண்ணிக் கொண்டு **ப்ரஹ்மரந்த்ரம்** மூலமாக ஸூர்ய மண்டலத்திலிருந்து நம் ஹ்ருதய கமலத்தில் திருவாராதநத்தைத் தொடங்க வேண்டும். மனதும் மற்ற அங்கங்களும் பரிஶுத்தமாக இருந்து மாநஸிக ஆராதநத்தைச் செய்ய வேண்டும். **(ப்ரஹ்மரந்த்ரம்** என்பது தலையில் உச்சியிலுள்ள ஒரு ஓட்டை; **ஹ்ருத்த்யாகம்** என்பது மநதால் செய்யும் திருவாராதநம். அது பின் வருமாறு - தங்கத்தினால் நவரத்நம் பதித்த அண்டாக்களில் நல்ல பஶு நெய்யால் செய்யப்பட்ட நன்கு பக்வமான பக்ஷ்யம், போஜ்யம், லேஹ்யம், உத்தமமான ப்ரஸாதம், மற்றும் பலவகைக் கறிகாய்களுடன் கூடத் தயிர், தேன், நெய் இவற்றுடன், பால், தீர்த்தம் இவற்றுடனும் தாம்பூலத்தையும் அந்தர்யாமியாக உள்ள எம்பெருமானுக்குத் திநமும் நான் **மனத்தால் ஸமர்ப்பிக்கிறேன்** என்று த்யாநம் செய்வதாகும்.

(இக்கருத்தைக் கொண்ட ச்லோகத்தைப் பெரியவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்.)

## பாத்திரம் முதலியவை அமைத்தல்

தன் வலப் பக்கத்தில் குங்குமப்பூ ஏலக்காய் முதலியவற்றுடன் வாஸனையுடன் உள்ள தீர்த்தம் நிறைந்த பாத்திரத்தை (திருக்காவேரி) மூலமந்த்ரத்தினால் **(அஷ்டாக்ஷரம்)** மந்த்ரிக்கப்பட்டு வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு எதிரில் சுத்தமான வஸ்த்ரத்தைப் பரப்பி அதில் தென் கிழக்கில் அர்க்ய பாத்ரத்தை வைக்க வேண்டும். பிறகு தென் மேற்கில் பாத்ய பாத்ரமும், வடமேற்கில் ஆசமநீய பாத்ரமும், வடகிழக்கில் ஸ்நாநீய பாத்ரத்தையும் அமைக்க வேண்டும்.

## அர்க்யாதி பாத்ரங்களில் சேர்க்க வேண்டிய பொருள்கள்

வெள்ளைக் கடுகு, அரிசி, தர்ப்ப நுனி, எள், யவம் (பார்லி), சந்தநம், புஷ்பம், இவை எட்டும் அர்க்ய பாத்ரத்தில் சேர்க்க வேண்டும். அருகம்புல், **விஷ்ணு பர்ணி** (துளஸி) சாமை தாந்யம், தாமரை இதழ் எனும் நாலும் தீர்த்தத்துடன் பாத்ய பாத்ரத்திலும்; லவங்கம் (க்ராம்பு), ஜாதிக்காய் இந்த த்ரவ்யங்கள் ஆசமநீய பாத்ரத்திலும், கடுகு முதலிய முன் சொன்ன பொருள்களுடன் தீர்த்தத்தை ஸ்நாநீய பாத்ரத்திலும் சேர்க்க வேண்டும்.

## முதலில் மந்த்ராஸநம்

1. **அர்க்யம் ஸங்கல்பயாமி** என்று அர்க்ய தீர்த்தத்தை ந்யாஸம் செய்ய வேண்டும். தேவர்ஷியே ! பாத்யம் முதலிய பாத்ரங்களில் இதே போல் சொல்லி ந்யாஸம் செய்ய வேண்டும். இந்தப் பாத்ரங்கள் அனைத்திலும் சந்தநம் கலந்த தீர்த்தத்தைச் சேர்த்து, உத்தரணியால் அர்க்ய தீர்த்தத்தைப் பகவானின் வலக்கையில் அஷ்டாக்ஷரத்துடன் ஸமர்ப்பிக்க வேண்டும். புஷ்பத்தையும் சேர்க்க வேண்டும். பிறகு பாத்ய தீர்த்தத்தால் பகவானின் திருவடிகளில் சேர்க்க வேண்டும். (சுத்த வஸ்த்ரத்தால்) திருக்கைகளையும் திருவடிகளையும்

துடைத்துவிட்டு ஆசமநீய ஜலம் ஸமர்ப்பிக்க வேண்டும். அர்க்யம் முதலிய தீர்த்தங்களின் மீதியை வேறு பாத்திரத்தில் சேர்க்க வேண்டும். பிறகு சந்தநம், மாலை இவற்றைத் தந்து, தூபம், தீபம் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு ஆசமநமும், அதை அடுத்து வாய்க்கு வாஸனை தரக் கூடிய தாம்பூலம் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு ஸேவித்து **ஆத்ம நிவேதநம்** செய்ய வேண்டும்.

### இரண்டாவது ஸ்நாநாஸநம்

ஸ்நாநத்துக்காக ஒரு பீடத்தை ஏற்படுத்தி, சந்தந புஷ்பங்களால் பூஜிக்க வேண்டும். விஜ்ஞாபநம் செய்து **(ஸ்நாநாஸநம் அலம்குரு)** என்று சொல்லிக் பாதுகைகளை ஸமர்ப்பித்து பகவானை ஸ்நாநாஸநத்துக்கு எழுந்தருளப் பண்ணி, பிறகு வஸ்த்ரம், திருவாபரணம், மாலைகள் இவற்றை நீக்கி, ஸ்நாநத்துக்காகத் தனி வஸ்த்ரம் ஸமர்ப்பித்து பாத்யம், ஆசமநீயம், பாதபீடம் (பல் தேய்த்தலுக்கு) நாயுருவி, இவற்றை ஸமர்ப்பிக்க வேண்டும். நாக்கு வழித்தல், வாய் கொப்பளிக்கத் தீர்த்தம் ஸமர்ப்பிக்க வேண்டும். மறுபடி ஆசமநீயம் ஸமர்ப்பித்துக் கண்ணாடி காண்பிக்க வேண்டும். மறுபடியும் தாம்பூலம் ஸமர்ப்பித்தல், எண்ணெய் ஸ்நாநம் -சீயக்காய்த் தூள் போன்ற வஸ்துக்கள், நெல்லிக்காய் ஸமர்ப்பித்தல், தீர்த்தம் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு பகவானுக்குத் திருமேனி துடைக்கும் வஸ்த்ரங்கள் ஸமர்ப்பிக்க வேண்டும். மஞ்சள் பொடி, பிறகு திருமஞ்ஜந வஸ்த்ரம், உத்தரீயம், யஜ்ஞோபவீதம் ஸமர்ப்பிக்க வேண்டும். பாத்யம் ஆசமநீயம், குங்குமப்பூ சேர்ந்த சந்தநம், சந்தநம், புஷ்பம், மிளகு, தூபம், தீபம், மறுபடி ஆசமநீயம் ஸமர்ப்பிக்க வேண்டும். நர்தநம் (நாட்யம்), வாத்யங்கள், பாட்டு முதலிய மங்களமான முறையில் திருமஞ்ஜநம் செய்ய வேண்டும். பிறகு கற்பூர நீராஜநம் (தீபாராதநம்) ஸமர்ப்பிக்க வேண்டும். ப்லோத வஸ்த்ரம், உத்தரீயம், யஜ்ஞோபவீதம் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு ஆசமநீயம் ஸமர்ப்பித்து,

## மூன்றுவதாக அலங்காராஸநம்

பிறகு அலங்காராஸநத்தை ப்ரோக்ஷணம் முதலிய வற்றால் பூஜித்து, பாதுகைகளை ஸமர்ப்பித்து, விஜ்ஞாபநம் செய்து, பகவான் ஆஸநத்தில் அமர்ந்தபின், அர்க்யம் முதலிய பாத்ரங்களை முன் போல் மறுபடியும் நிரப்பி, அமைக்க வேண்டும். அர்க்யம், பாத்யம், ஆசமநீயம் ஸமர்ப்பிக்க வேண்டும். நல்ல வாஸனையுடைய சந்தநம் முதலிய த்ரவ்யங்களைக் கொண்டு அர்க்யம் முதலியவற்றை அமைக்க வேண்டும். பிறகு வகைவகையான வஸ்த்ரங்களும், திருவாபரணங்களும் ஸமர்ப்பிக்க வேண்டும். யஜ்ஞோபவீதம், ஸமர்ப்பித்து ஆசமநீயம் ஸமர்ப்பிக்க வேண்டும். சந்தநம் புஷ்பங்கள் ஸமர்ப்பித்து, நிலைக்கண்ணாடி காண்பிக்க வேண்டும். தூப தீபங்கள் ஸமர்ப்பித்து ஆசமநீயமும் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு ஸ்தோத்ரங்கள் (வேதம், ஸ்ரீமத் ராமாயணம்) சொல்ல வேண்டும். குடை சாமரம் ஸமர்ப்பிக்க வேண்டும். கருடன், ஹநுமான் போன்ற வாஹநங்களைக் காண்பிக்க வேண்டும். சங்கு, திருச்சிந்நம் போன்றவைகளை ஒலிக்கச்செய்ய வேண்டும். வீணை, காஹலம் (எக்காளம்), பேரி (டமாரம்) ஶப்தங்களை ஸமர்ப்பிக்க வேண்டும். நாட்யம், வாத்யம், ஸங்கீதம் முதலியவைகளால் மந்த்ரத்துடன் உபசரிக்க வேண்டும். மூலமந்த்ரத்தைச் சொல்லி எம்பெருமானுக்குப் புஷ்பம் ஸமர்ப்பிக்க வேண்டும். பெருமாளுக்கு, ப்ரதக்ஷிணம் செய்து கொண்டே நாற்புறங்களிலும் புஷ்பாஞ்ஜலி ஸமர்ப்பித்து, மறுபடியும் ஸேவித்து, ஸ்தோத்ரங்களைச் சொல்லி பகவானைத் துதிக்க வேண்டும். தன்னை எம்பெருமானிடம் கைங்கர்யத்தில் ஈடுபடச் செய்யும்படி ப்ரார்த்திக்க வேண்டும். பிறகு முடிந்தவரை மந்த்ரங்களை **(அஷ்டாக்ஷரம்)** த்யாநித்து ஜபிக்க வேண்டும். முனிவரே ! ஆசார்யனை சந்தநம், புஷ்பம் முதலியவற்றால் பூஜித்து ஸகல உபசாரங்களுடன் கூடிய மந்த்ரங்களை அவருக்கு விஜ்ஞாபிக்க வேண்டும். பிறகு முகவாஸ தாம்பூலம் ஸமர்ப்பித்து அர்க்யம் ஸமர்ப்பிக்க வேண்டும்.

## நான்காவது போஜ்யாஸநம்

பிறகு போஜ்யாஸநத்தைப் பூஜித்து, பகவானை விஜ்ஞாபித்து பாதுகைகளை ஸமர்ப்பிக்க வேண்டும். அதில் (போஜ்யாஸநத்தில்) பகவான் வீற்றிருந்த பிறகு அர்க்யம், பாத்யம், ஆசமநீயம் ஸமர்ப்பித்துத் தயிர், நெய், பால், தேன், சந்தநம், இவற்றைப் பாத்ரங்களில் வைத்து ப்ரோக்ஷணம் முதலியவற்றைச் செய்ய வேண்டும். **(யம், வம், ரம் பீஜங்களை** எழுதிக் காண்பிக்க வேண்டும்) அர்க்ய தீர்த்தத்தால் இவற்றை ப்ரோக்ஷித்து **மதுபர்கம்** ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு அர்சகர் தங்கக் காசு, பசு, ரத்நங்கள் இவைகளை ஸமர்பிக்க வேண்டும்.

## ஹவிஸ் (அலங்காரத் தளிகை) ஸமர்ப்பித்தல்

நன்கு பக்வமான அந்நம், நெய், தயிர், பால், தேன், கிழங்குகள், உகப்பான பக்ஷயங்கள், வ்யஜ்ஞநங்கள் அந்த அந்தக் காலங்களில் கிடைக்கக் கூடியதும், சுத்தமானதும், தரமானதும் ஆகிய பழங்களையும் சுத்தம் செய்து, ப்ரோக்ஷணம் முதலியவை செய்து, அர்க்ய ஜலத்தால் ப்ரோக்ஷித்து, அஸ்த்ர மந்த்ரங்களைச் சொல்லி இவைகளை உபசாரமாக ஸமர்ப்பித்து, **ஸுரபி முத்ரையைக்** காண்பித்து இவற்றையெல்லாம் எம்பெருமானுக்கு நிவேதநம் செய்ய வேண்டும். சில வாஸனைப் பொருள்களைத் தந்து கண்ணாடியைக் காண்பித்து, ஆசமநம் ஸமர்ப்பிக்க வேண்டும். கைகளை சுத்தி செய்யச் சந்தநம் ஸமர்ப்பிக்க வேண்டும். முகவாஸ தாம்பூலம் பகவானுக்கு ஸமர்ப்பித்து நமஸ்கரிக்க வேண்டும்.

## மறுபடி ஐந்தாவது மந்த்ராஸநம்

பிறகு **மந்த்ராஸநம்** அமைத்துக் கூர்சத்தினால் துடைத்துச் சந்தநம், புஷ்பம் இவைகளால் பூஜித்துப் பாதுகைகள் ஸமர்ப்பித்து அந்த ஆஸநத்தில் பெருமாள் அமர்ந்த பிறகு மாலை முதலியவற்றைக் களைந்து ஆசமநீயம், பாத்யம் ஸமர்ப்பித்துத் தூபம் காண்பிக்க வேண்டும். மிகவும் சுவையான பழங்களையும், தாம்பூலமும் ஸமர்ப்பிக்க

வேண்டும். பிறகு ஸங்கீதம், வாத்யம், நாட்யம் முதலியவற்றால் உபசரிக்க வேண்டும். ப்ரதக்ஷிணம் செய்து தண்டவத் ப்ரணாமம் (ஸாஷ்டாங்க நமஸ்காரம்) செய்ய வேண்டும்.

### ஆறுவது பர்யங்காஸநம்

பிறகு **பர்யங்கம்** (படுக்கை) பூஜித்து, பகவானிடம் விஜ்ஞாபிக்க வேண்டும். பிறகு பாதுகை ஸமர்ப்பித்து பகவான் படுக்கையில் அமர்ந்தபோது பாத்யம், ஆசமநீயம் இவற்றைப் பக்தியுடன் ஸமர்ப்பிக்க வேண்டும். மஹா ஜ்ஞாநியான நாரதரே ! மாலைகள் திருவாபரணங்கள் இவைகளைக் களைந்துவிட்டு, படுக்கைக்கு ஏற்ற மாலைகளும், ஆபரணங்களும், வஸ்த்ரங்களும், ம்ருதுவான சில உபகரணங்களையும், யஜ்ஞோபவீதம், பிறகு ஆசமநீயம் ஸமர்ப்பித்து, சந்தநம் புஷ்பம் ஸமர்ப்பிக்க வேண்டும். முகவாஸ தாம்பூலம் ஸமர்ப்பித்து ஸ்தோத்ரங்களைச் சொல்லித் துதிக்க வேண்டும். (வேதம், ப்ரபந்தம், சாற்றுமறைப் பாசுரங்கள்) அஷ்டாங்க ப்ரணாமம் செய்து பகவானை ஶரணமடைய வேண்டும். யோகாஸநத்தில் வீற்றிருக்கும் பகவானை ப்ரதக்ஷிணத்தோடு கூடிய அஷ்டாங்க ப்ரணமம், மனது, புத்தி, அபிமாநத்துடன் பூமியில் ஶரீரத்தைக் கிடத்தி ஆமை போல் இரண்டு பாதங்கள் இரண்டு முழங்கால்கள் ஐந்தாவதாகத் தலையும் பூமியில் படும்படி வைத்து ஸேவிக்க வேண்டும்.

### கைங்கர்ய ப்ரார்த்தனை

அஜ்ஞாநாத் அதவா ஜ்ஞாநாத் அஶுபம் யத் க்ருதம் மயா ।
க்ஷந்துமர்ஹஸி தத் ஸர்வம் தாஸ்யேந ச க்ருஹாண மாம் ॥

(தெரியாமலோ, தெரிந்தோ, நான் எந்தத் தவறுகள் செய்தேனோ, அவற்றை எம்பெருமானே ! க்ஷமித்தருள வேண்டும். அடியேனை கைங்கர்யத்தில் ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும்) என்று சொல்லி ப்ராரத்திக்க வேண்டும். இவ்வாறு ஸுதர்ஶநத்தையும் ந்ருஸிம்ஹனாகவும், விஷ்ணுரூப

மாகவும் ஸாதர்ஸநத்தையும் இரண்டு வகையாக இருக்கும் பகவானை ஆராதிக்க வேண்டும்.

**இவ்வாறு செய்யப்படும் திருவாராதநம்**
**மோக்ஷத்துக்கு உபாயமாக அமையும்**

நாரதரே! இவ்வாறு சொன்ன முறையில் ஒரு நாளாவது திரு ஆராதநம் செய்பவனுக்கு மோக்ஷம் என்பது அவன் கையில் உள்ளது. மற்ற பலன்கள் (அறம், பொருள், இன்பம், வீடு) இவைகளைப் பற்றிக் கேட்க வேண்டுமா? இந்த யாகத்தின் (ஆராதநம்) மூலம் எட்டு திக்தேவர்களும், அனைத்து தேவர்களும், ஸித்தர், கந்தர்வர், யக்ஷர்கள், நாகர்கள், அப்ஸரஸ்கள், ஸ்த்ரீகள் கூட்டங்கள் இவர்கள் எல்லோரும் இவ்வுலகில் நமக்கு எளிதில் அருள் புரிவர். மனிதர்களைப் பற்றி கேட்க வேண்டுமா? அப்படிப்பட்ட மஹாத்மாவான ஸ்ரீ ஹரி பூஜையில் ஈடுபடும் அர்சகனுக்குப் பூதங்கள், பைசாசங்கள், ப்ரேதங்கள், கூஷ்மாண்டங்கள் (பஸுக்களைக் கொல்லும் துஷ்ட தேவதை) விநாயகங்கள் (வேறு பல துர்தேவதைகள்) இவன் கட்டளைக்கு அடங்கி இருப்பர்.

**பரிவாரங்களின் பூஜை**

முன்பு சொன்னபடியே எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணனுடைய பரிவாரங்களுக்கு (அநந்தன், கருடன், விஷ்வக்ஸேநர்), தேவர்களின் ஶக்திகளுக்கு, மந்த்ரங்களுக்கு, அஸ்த்ரம் ஆயுதங்களுக்குஅவரவர் திருநாமங்களைச் சொல்லி நம: என்று சேர்த்து 16 வகை உபசாரங்களால் திருவாராதநம் செய்ய வேண்டும்.

இவ்வாறாகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் பகவானின்**
**ஆராதந முறை என்கிற**
28வது அத்யாயம் முற்றிற்று.

குறிப்பு :—

**இங்கு முக்யமாகக் கவனிக்க வேண்டிய ஒரு விஷயம்**

இந்த 28வது அத்யாயத்தில் பெருமாளுக்கு நாம் செய்யும் திருவாராதநத்துக்கான இடம் பற்றிச் சொல்லும் பொழுது, பெரிய மண்டபம், சிறிய மண்டபம், என்றெல்லாம் சொல்லி அவை அனைத்தும் தங்கத்தினால் அமைக்கப்பட்டு, நவரத்நங்கள், பவழம், முத்து இவைகள் எல்லாம் ஆங்காங்கே பதிக்கப் பெற்றிருக்க வேண்டும் என்றும், தீபங்களனைத்தும் தங்கத்தினால் செய்யப்பட்டிருக்க வேண்டுமென்றும் சொல்லப்பட்டுள்ளது. இதைக் கவனிக்கும்பொழுது பலருக்கும் இது நம் போன்ற ஸாதாரண க்ருஹஸ்தர்களுக்குச் சொல்லப்பட்டதா? அல்லது இதற்கு முன் அத்யாயத்தில் சொல்லப்பட்ட 10 வகையான யந்த்ரங்கள் சக்ரங்கள் அமைக்கப்பட வேண்டிய இடம் பற்றிச் சொல்லப்பட்டதா? என்று ஸந்தேஹம் ஏற்படுவது இயல்பு. ஆனால் நாரதருக்கு உபதேசித்த **அஹிர்புத்ந்யர்** ''இவ்வாறு அமைக்க ஶக்தியற்றவர்கள் இப்பொழுது சொன்னவைகளான எல்லாம் மாநஸிக ஆராதநமாகச் செய்து விட்டுப் பிறகு அவரவர்கள் ஶக்திக்கேற்பச் செய்யலாம்'' என்று கூறியிருப்பதாலும், ஸ்நாநம், தேவர்ஷி பித்ரு தர்பணம் இவைகளைச் செய்து விட்டு வஸ்த்ரம், உத்தரீயம் தரித்து ஊர்த்வபுண்ட்ரங்கள் சாற்றிக் கொண்டு தம் தம் ஆஹ்நிகத்தைத் தொடங்கலாம் என்றும் சொல்லப்பட்டுள்ளது. ஆஹ்நிகம் என்பது ப்ரஹ்மசாரிகள் உள்பட யாவருக்கும் **நித்யம், நைமித்திகம், காம்யம்** என்று மூன்று வகைப்படும். **நித்யம்** என்பது ஒருநாள் கூடத் தவராமல் எல்லா நாட்களிலும் செய்ய வேண்டியவை. **நைமித்திகம்** என்பது **அமாவாஸ்யை, மாதப் பிறப்பு, மாதா பித்ரு ஶ்ராத்தங்கள், ஸூர்ய சந்த்ர க்ரஹணங்கள்,** வேளைகளில் செய்யும் கார்யங்களாகும். **காம்யம்** என்பது நம் குழந்தைகளுக்காகவும், நமக்காகவும், சிற்சில பலன்களை வேண்டிச் செய்யும் கார்யங்கள். இதில் **ஆஹ்நிகம்** என்பது ஒருநாள் கூட விடாமல் செய்ய வேண்டும்.

ஆஹ்நிகம் வித்வாந் சரேத் என்று சொல்லியிருப்பதால் இந்தத் திருவாராதநம் பற்றிச் சொன்னதெல்லாம் நம் போன்றவர்களுக்காகவே சொன்னார் என்று தீர்மானிக்க வேண்டியுள்ளது. மேலும் முன் சொன்ன சக்ரம், யந்த்ரம் எல்லாம் அரசர்களின் அநுமதியின் பேரிலோ, அமைச்சர்களின் அநுமதியாலோ அரசர்களுக்கும், உலக க்ஷேமத்துக்கும் செய்யப்பட வேண்டும் என்று சொல்லியிருப்பதால் தங்கத் தூண்கள் நிறைந்த இடம் என்பது முன் சொன்ன யந்த்ரம், சக்ரம் இவைகளை எழுதிப் பூஜிக்க வேண்டிய இடமாகவே நாம் எடுத்துக் கொள்ள வேண்டும்; அங்கும் இந்தத் திருவாராதநமுறை அநுஷ்டிக்க வேண்டும். எனக் கருத இடமுள்ளது.



காம்ய ஆராதந முறை என்கிற

# 29வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவயம் பர்கோ தேவஸ்ய தீமஹி॥
(18வது அத்யாயத்தில் விளக்கம் காண்க)

## பகவானுடைய ஆராதநத்தால் தேவர்கள் கட்டுப்படுவது எப்படி?

**நாரதர் :** இந்த முறையில் செய்யும் பூஜைகளால் தேவர்கள் முதலிய ஸுரர்கள், மற்றும் சொல்லப்பட்டவர்கள் யாருக்கு எப்படிக் கட்டுப்படுகிறார்கள்? இதை எனக்கு விளக்கமாகச் சொல்ல வேண்டும்.

## பதில் தொடக்கம்

**அஹிர்புத்ந்யர்;** மஹர்ஷியே! குறிப்பாக க்ஷத்ரியர் வெற்றியை விரும்புவதால் எந்த விதமான சிறப்பு ஆராதனை முறையினால் எல்லோரும் கட்டுப்படுகிறார்கள் என்பதைச் சுருக்கமாக சொல்கிறேன், கேளும்.

## ஆராதநையால் திக் விஜயம் பெறுதல்

அரசன் எட்டு திக்குகளிலும் வெற்றியை விரும்புவானாகில் குறிப்பான சில சிறந்த ஆராதநை முறைகளால் அந்த அந்தத் திக்குகளில் வெற்றியைப் பெறுவான்.

## கிழக்கு திசையைப் பற்றி

அரசன் கிழக்கிலிருக்கும் அரசர்களிடமிருந்து வெற்றியை விரும்பினால் **ஸ்ரீ ஸுதர்ஶநத்**தைச் சிறப்பான த்ரவ்யங்களைக் கொண்டு ஆராதிக்க வேண்டும். வெள்ளைப் புஷ்பங்களால், வெள்ளை வஸ்த்ரங்களாலும், வெள்ளைச் சந்தனம் முதலிய பூச்சுக்களாலும், நல்ல அரிசியில் தயிர் சேர்த்த அந்நங்களால் ஸுதர்ஶநத்தைப் பூஜித்து முன்பு சொன்னபடி அலங்காரம் செய்யப்பட்ட மண்டபத்தில்,

ஶுத்தமான எம்பெருமான் ஸந்நிதியில், சதுரமாக அமைக்கப்பட்ட ப்ரஸாத பக்ஷணங்களுடன் கூடிய குண்டத்தில் வில்வக் கட்டைகளால் அக்நியை வளர்த்து, கிழக்கு முகமாக உட்கார்ந்து ஶுத்தமாக மிகுந்த கவனத்துடன் இருந்து, நாரதரே! நெய் சேர்த்து வில்வப் பழங்களை நன்கு ஜ்வலிக்கும் அக்நியில் மூலமந்த்ரத்தைக் கொண்டு ஒரு லக்ஷம் ஆவ்ருத்தி ஹோமம் செய்ய வேண்டும். இத்தகைய ஹோமங்களால் கடல் வரையிலுள்ள கிழக்குத் திசை முழுவதும் இவனுக்கு வஶமாகும். வில்வப் பழங்களைக் கொண்டு ஒரு கோடி ஆவ்ருத்தி ஹோமம் செய்வதின் மூலம் **ப்லக்ஷத்தீவு** வரை கிழக்குத் திசை முழுவதும் அந்த அரசர் வஶமாகும். நாரதரே! இந்த ஹோமத்தை இரண்டு கோடி ஆவ்ருத்தி செய்தால் **சால்மலம்** என்கிற இடம் அங்குள்ள அரசனுடன் தன் தேஶம் போல் வஶமாகும். குசம் என்றும், க்ரௌஞ்சம் என்றும், காகம், புஷ்கரத்வீபம் இவை - ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு என்கிற வரிசையில் கிழக்கே உள்ள நாடுகளெல்லாம் பல கோடி வில்வப் பழங்களால் செய்யும் ஹோமங்களால் அந்த அரசனுக்கு வஶப்படும். இந்த த்வீபங்களுக்குக் கிழக்கே உள்ள **மாகவதீ** என்னும் நகரம், 10 கோடி ஹோமம் செய்வதன் மூலம் நிச்சயம் வஶப்படும். இந்தத் தேஶங்களுக்கெல்லாம் பாதுகாப்புக்காக இந்திரன் தன் ஒரு அம்ஶத்தின் மூலம் அங்கேயே வஸிக்கிறான். அவனும் வஶப்படுவான். பல அழகிய பெண்களுடனும், நல்ல **ஷட்ரஸம்** (அறு சுவை உண்டி) அந்நங்களாலும், பாநங்களாலும், குதிரைகள், உத்தமமான யானைகள் இவற்றுடனும், நினைத்தவுடனேயே கிடைக்கக் கூடிய முன்பு சொன்ன **போக** உபகரணங்களுடன் அரசன் தன் நாட்டில் இருப்பது போலவே இருப்பான். இந்த அரசனின் மஹிமையால் எல்லா ஸமுத்ரங்களும் தரைபோல் தேர் மூலம் செல்வதற்குத் தகுந்ததாக அமையும். அவனுக்கு இந்த்ரன், நவரத்நங்கள் பதித்ததும், உத்தமமானதும், சக்ரவர்த்தி என்பதற்கு அடையாளமாக மாலையைத் தானே கொண்டு வந்து சாற்றுவான்.

## தெற்கு திசையைப் பற்றி

தெற்கு திசையை வெற்றி கொள்ள ஆசை அரசனுக்கு இருக்குமானால் முன் சொன்ன மண்டபத்தில் வீற்றிருக்கும் பகவானைத் தெற்கு முகமாகத் திருப்பி எழுந்தருளப் பண்ண வேண்டும். அந்த பகவானைச் சிவப்பு மாலை, சிவப்பு வஸ்த்ரம் தரித்தவராகவும் சிவப்புச் சந்தநம் சாற்றப்பட்டவராகவும், அலங்கரித்து முன் சொன்ன முறையிலேயே பூஜித்து எள் கலந்த சர்கரைப் பொங்கல் நிவேதநம் செய்து பிறைசந்திரன் போன்ற குண்டத்தை ப்ரஸாதம் என்கிற முறையில் அடைத்து, தர்ப்பங்கள், புஷ்பங்கள், பொறி இவற்றால் அலங்கரித்து பகவானுக்கு எதிரில் தெற்கு நோக்கி உட்கார்ந்து கொண்டு மந்த்ரங்களைச் சொல்லி அக்நியைச் சேர்த்து, கருங்காலிக் கட்டையைக் கொண்டு நன்றாக ஜ்வலிக்கச் செய்து, செந்தாமரைப் பூக்களால் லக்ஷம் ஆவ்ருத்தி ஹோமம் செய்ய வேண்டும். இவ்வாறு செய்தால் அந்தத் தென் திசை முழுவதும் இவனுக்கு வஶமாகும். அங்கு உள்ள அரசர்கள் கையில் பழங்கள் முதலிய பரிசுகளைப் பரிவாரங்கள் சூழ இந்த அரசன் வரும் நேரத்தை எதிர்பார்த்துத் தங்கள் கோட்டை வாயிலில் நிற்பார்கள். பிறகு தெற்கு திக்கில் ஆறு தீவுகளில் அதிபதிகளாக உள்ள அரசர்கள் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு ஆவ்ருத்திகளால் செந்தாமரைகளைக் கொண்டு கோடி ஆவ்ருத்திகள் வரிசையாக ஹோமம் செய்வதன் மூலம் அரசர்களுடன் வஶப்படுவார்கள். இந்த யமனுடைய அதிகாரத்தில உள்ள **ஸம்யமிநீ** என்கிற பட்டணம் செந்தாமரைகளால் 10 கோடி ஆவ்ருத்தி ஹோமம் செய்தால் வசப்படும். யமனும், அவனுடைய பக்தியால் மகிழ்ச்சியடைந்து அன்பு கொண்டு அந்த அரசனது கருத்துக்கு முரணாக எதுவும் செய்யமாட்டான். இவன் நாட்டில் அகாலத்தில் மரணம் என்பது யாருக்கும் ஏற்படாது. **ஸம்யமிநீ** என்கிற பட்டணத்தில் யாரெல்லாம் யமனுடைய ஓழே அதிகாரிகளாக உள்ளனரோ, அவர்கள் அனைவரும் இந்த அரசனுக்குப் பணிந்து நடப்பார்கள். ஸந்தேஹம் இல்லை.

யமனும் ஸந்தோஷமடைந்து உத்தமமான அழகிய சக்ரவர்த்திக்கு அடையாளமாக இரண்டு தோள்வளைகளை உடனே கொண்டு வந்து அளிப்பான்.

## மேற்கு திசை பற்றி

அரசன் மேற்கு திசையை வெற்றி கொள்ள வேண்டும் என்று விரும்புவானாகில், அலங்கரித்த மண்டபத்திலிருக்கும் பகவானை மேற்கு முகமாக எழுந்தருளப் பண்ணிப் பல வண்ணங்கள் உள்ள மாலைகளால் அலங்காரம் செய்தும், பல நிறங்கள் உள்ள வஸ்த்ரங்களால் அலங்கரிக்கப் பட்டவராகவும், பல நிறமுள்ள சந்தநம் முதலிய பொருள்கள் சாற்றப்பட்டவராகவும்,பல வகைத் திருவாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவராகவும் செய்து தேன் கலந்த ப்ரஸாதம் செய்து அதைப் பகவானுக்கு நிவேதநம் செய்ய வேண்டும். குண்டத்தைத் தாமரை போன்ற ப்ராஸாதமாக அமைத்து, அலங்கரித்து, அங்கு அக்நி சேர்த்துப் பகவானுக்கு எதிரில் உட்கார்ந்து கவனத்துடன் வந்நிக் கட்டைகளைக் கொண்டு அக்நியை ஜ்வலிக்கச் செய்து மிகவும் மநம் ஒன்றியவனாய் இருந்து கொண்டு தேனில் தோய்த்த கரவீரம் என்கிற ஸமித்துக்களைக் கொண்டு லக்ஷம் ஆவ்ருத்தி மந்திரங்களை ஜபித்து ஹோமம் செய்ய வேண்டும்.இதன் மூலம் ஜம்பூத்வீபத்தின் மேற்கு திசையில் கடல் சூழ்ந்த நிலம் முழுவதும் அந்த அரசனுக்கு அங்குள்ள அரசர்களுடன் சேர்ந்து வஶப்படும். கரவீரம் என்கிற ஸமித்து 1 கோடி, 2,3,4,5,6 கோடிகள் ஹோமம் செய்வதால் அந்த அரசனுக்கு மேற்கு திக்கில் உள்ள ஆறு த்வீபங்களின் வரிசையும் வஶமாகும். ஸுகா என்கிற பெயருடையதும், வருணனைத் தேவதையாக உடையதும், அழகியதும், மிகவும் ஜ்வலிப்பதும், எப்பொழுதும் உணவுப் பொருள்கள், லேஹ்யம்,பாநம் இவைகளோடு குறைவற்று நிறைந்ததும், அழகிய மரங்களோடு கூடிய பல நந்தவநங்கள் நிறைந்ததும், எப்பொழுதும் மலர்ந்த தாமரைகள் நிறைந்த குளங்களால் அலங்கரிக்கப்பட்டதும், பல வித ரத்நங்கள் நிறைந்த க்ரீடா

பர்வதம் என்கிற செயற்கை மலைகள் நிறைந்ததும், தங்கமயமான உயர்ந்த ப்ராஸாதங்கள் மண்டபங்கள் நிறைந்ததும், இப்படிப் பட்ட அந்தப் பட்டணம் அரசனுக்கு அநுபவிக்கத் தகுந்ததாக ஆகும். வருணனும், மணிகள், ரத்நங்கள் பதித்ததும், முத்து மாலைகள் நிறைந்ததும், அமுதம் சொட்டுவதும், எல்லோராலும் வணங்கப் படுவதும், சக்ரவர்த்திக்கு அடையாளமானதும் ஆகிய குடையை மிகவும் மர்யாதையுடன் கொடுப்பான்.

## வடக்கு திசை பற்றி

அரசன் வடக்கு திக்கை ஜயிக்க வேண்டுமென்று விரும்பினால் பகவானைச் சக்ரம் தாமரை இவற்றால் அலங்கரிக்கப் பட்ட ஆஸநத்தில் வடக்கு முகமாக அமர்த்த வேண்டும். மஞ்சள் வஸ்த்ரங்கள் சாற்றப்பட்டவராகவும், மஞ்சள் புஷ்பங்களால் அலங்காரம் செய்யப் பட்டவராகவும், பவழங்கள் நிறைந்த ஆபரணங்கள் சாற்றப் பட்டவராகவும், குங்குமப்பூ சாந்து பூசப்பட்டவராகவும், நெய்யுடன் சேர்ந்து ப்ரஸாதத்தைச் செய்து அதை ஸமர்ப்பித்து, எதிரில் வட்டமான ப்ராஸாத வடிவத்தில் குண்டம் அமைத்து, வடக்கு முகமாக உட்கார்ந்து அக்நி சேர்க்க வேண்டும். மண்டபத்தோடு கூடிய குண்டத்தில் அத்தி மரக் கட்டைகளைக் கொண்டு அக்நியை ஜ்வலிக்க வைத்து, அந்த அக்நியில் **நந்த்யா வர்த்தம்** (நந்த்யா வட்டை) புஷ்பங்கள் கொண்டு ஒரு லக்ஷம் ஆவ்ருத்தி ஹோமம் செய்ய வேண்டும். அதனால் பாரதவர்ஷம் தங்கமலை நிறைந்ததும் அங்குள்ள அரசனுடன் வசப்படும். ஸந்தேஹம் இல்லை. இரண்டு லக்ஷம் ஆவ்ருத்தி ஹோமம் செய்தால் **கிம்புருஷம்** என்கிற வர்ஷம் அதன் அரசனுடன் இவனுக்கு நிச்சயமாக வஶமாகும். மூன்று லக்ஷம் ஆவ்ருத்தி ஹோமம் செய்தால் **ஹரிவர்ஷம்** அந்த அரசனுடன் வஶமாகும். நான்கு லக்ஷம் ஹோமம் செய்தால் **பத்ராஶ்வ வர்ஷம்** வஶமாகும். 5,6,7 லக்ஷம் ஹோமங்களால் இவனுக்கு **இலாவ்ருதம்** கேதுமாலம் ரம்யமானதும் வஶமாகும். எட்டு, ஒன்பது லக்ஷங்களால் தங்க மயமான மேரு வர்ஷம் அந்த அரசனுடன் வஶமாகும். ஆறு

ப்லக்ஷ முகத்வீபங்கள், அதன் ஸுகாநுபவ இடங்கள் இவ்வாறு சொன்ன முறையில் ஹோமம் செய்தால் இவனுக்கு வஶமாகும். இந்த எல்லா வர்ஷங்களுக்கு வடக்கே உத்தமமாகிய பட்டணமாகிய **விபாவரீ** என்கிற ஸோமனுடைய பட்டணம், 10 கோடி ஹோமங்களால் இந்த அரசனுக்கு வஶமாகும். நாரதரே! அந்த ஸோமனுக்குக் கட்டுப் பட்டுள்ள தேவதைகள் அந்த அரசனுக்கு வஶமாக இருப்பர். ஹோமத்தின் மஹிமையால் ஸோமன், தன் நிலாக் கூட்டம் போன்ற ஒளியை உடைய, ரத்நமயமான தண்டுடன் கூடிய, வெண்மையும் குளிர்ச்சியுடைய இரண்டு சாமரங்களைச் சக்ரவர்த்தி என்பதற்கு அடையாளமாகத் தானே எடுத்துக் கொண்டு புகழ் பெற்ற செயல் புரிந்த அரசனுக்கு அன்புடன் அளிப்பான்.

## இடை திசைகள் பற்றி

பெரிய திசைகளை ஜயித்ததால், வெற்றி கொண்டதாக இடை திசைகள் அமையும். அங்கு ஆட்சி புரியும் உத்தமமான திக் பாலகர்கள் நன்கொடைகள் அளிப்பார்கள், (அக்நி, வாயு, நிர்ருதி, ஈஶாநம்).

## மேல் உலகம் பற்றி

ஒரு அரசனுக்கு மேல் உலகத்தை வெற்றி கொள்ள விருப்பம் இருந்தால் இதே போன்ற உத்தமமான மண்டபத்தில் பகவானுக்குக் கிழக்கு முகமாக ஆஸநம் அர்சிக்க வேண்டும். நல்ல வாஸனை உள்ள மலர்களால் அலங்கரிக்கப்பட்டதும், முத்து மாலைகள் சாற்றப்பட்டதும், உத்தமமான சந்தநத்தால் உடல் முழுதும் பூசப்பட்டதும், பட்டு வஸ்த்ரங்கள் அணிவிக்கப்பட்டதுமான பகவானை முறைப்படி பூஜித்து, கற்கண்டாலான பாயஸம், நெய் நிறையச் சேர்த்து ஸமர்ப்பித்து நன்கு பழுத்த பழங்களோடு கூடியதும், எட்டு கோணங்கள் உடையதும், அனைத்து மங்களப் பொருள்களோடு கூடியதும் ஆகிய ப்ராஸாத குண்டத்தை அமைத்து ஆசார்யன் அஸ்த்ரமந்த்ரம் சொல்லி, அக்நி சேர்த்து, கரும் அகில் கட்டைகளால் அக்நியை

ஜ்வலிக்கச் செய்ய வேண்டும்.அதில் பல கோடிக் கணக்கில் நெய் ஹோமம் செய்ய வேண்டும். அந்த ஹோமத்தினால் மேல் உலகம் வஶமாகும். அந்த உலகத்தில் வஸிக்கின்ற ஸித்தர்கள்,கந்தர்வர்கள்,கிந்நரர்கள்,யக்ஷர்கள்,கிம்புருஷர்கள், சாரணர்கள், ஸ்த்ரீகளின் கூட்டங்கள் அனைவரும் வீணை, புல்லாங்குழல், ம்ருதங்கம், தாளங்கள் மற்றும் பல வாத்யங்களுடன் அந்த அரசனுடைய புகழைப் பாடிக் கொண்டு இவ்வரசனைச் சூழ்ந்து கொண்டு மகிழ்விப்பார்கள். இதே ஹோமத்தைக் கோடி கோடி ஆவ்ருத்தி செய்தால் ஸ்வர்கலோகமே இவனுக்கு வஶப்படும்.அங்கே இந்த்ரனும் தன் மனைவி இந்த்ராணியுடன், மற்ற தேவர்களுடனும் ஐராவதம் என்கிற யானை மீது ஏறிக் கொண்டு அப்ஸரஸ்த்ரீகளின் கூட்டங்களுடன் இந்த மஹாத்மாவான அரசனை வரவேற்று, யானை மீதிருந்து இறங்கி, மிக்க மகிழ்ச்சியுடன், நவரத்நங்கள் பதித்த ஸிம்மாஸநத்தில் இவனை உட்கார வைத்து, மங்களங்கள் சொல்லி, நர்தநம், பாடல்கள், மற்ற வாத்யங்கள் முழங்க, தேவலோகத்துக்கே உரிய துந்துபி வாத்யம் முழங்க, ஶங்கங்கள் எக்காளம் முழங்க, பல புண்ணிய தீர்த்தங்களிலிருந்து கொண்டு வரப்பட்ட கும்பங்களுடன் இந்திரன் அரசனைச் சக்கரவர்த்தியாகப் பட்டாபிஷேகம் செய்விப்பான். பிறகு இவனுக்கு நவரத்நங்கள் பதித்த மகுடத்தை, தேவலோகத்திலுள்ள ஒரு யானை, வாயு வேகத்தில் செல்லக் கூடிய குதிரை, புஷ்பகம் போன்ற விமாநம், தங்க மயமான தாமரைகள் கோர்த்த உத்தமமான மாலையையும் மிகவும் மகிழ்ச்சியுடன் தனக்கு நிகரான நிலையையும் தருவான்.நூறு அஶ்வமேத யாகங்கள் செய்யும்படிச் செய்தால் அந்த அரசனைச் சக்ரவர்த்தியாக்கி அவனுக்கு நூறு அப்ஸர ஸ்த்ரீகளைக் கொடுத்து மற்ற தேவர்களுடன் இந்த்ரன் ஸ்வர்க லோகத்துக்குத் திரும்பிச் செல்வான்.

**நாகலோகத்தைப் பற்றி (பாதாளம்)**

சக்ரவர்த்திக்குப் பாதாள உலகத்தை வெற்றி கொள்ள வேண்டும் என்கிற விருப்பமாயின் பத்மராகம் போன்ற

உத்தமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட செஞ் சந்தநத்தைப் பகவானின் திருமேனி முழுவதும் சாற்றிப் பூஜிக்க வேண்டும். வெல்லம் சேர்த்து மாவினால் களி செய்து ஹவிஸ்ஸை நிவேதநம் செய்து, ப்ராஸாத வடிவத்திலுள்ள ஆறு கோணங்களுடன் கூடிய குண்டத்தில் அக்நியை வளர்த்து, பல கோடிகள் பணியாரங்கள் (அப்பங்கள்) ஹோமம் செய்ய வேண்டும். இதனால் தக்ஷகன் முதலிய ஸர்பங்களுடைய உத்தமமான பட்டணம் போகவதி இவனுக்குத் தன்னுடைய பட்டணம் போல் வஶப்படும். இவனுடைய மஹிமையைப் பார்த்து (அறிந்து) அந்தத் தக்ஷகன் மிகவும் பெரிய ஜ்வலிக்கின்ற ரத்நங்களையும் மணி, ரத்நங்களால் செய்யப்பட்ட இரண்டு குண்டலங்களையும் ஸ்த்ரீகளுடன் எடுத்துக் கொண்டு இவன் இருக்குமிடத்துக்கு வருவான்.

**ஸாமாந்ய பரிபாஷை (பொதுவான விஷயங்கள்)**

நாரதரே! இதுவரை சொல்லப்பட்டவைகளோ, சொல்லப்படாதவைகளோ, இவற்றின் லக்ஷணத்தை (இலக்கணத்தை)ச் சொல்கிறேன் கேளும். மந்திரி விரும்பிய பொருள் அதன் மூலம் கிடைக்கும். 1,2,3,4,5,6,7,8,9 வகை விஹாரங்கள் (கூடாரங்கள், பந்தல்கள்), 3,4,5 வாயில்களும் பின்புறம் விரிந்தும், உயரமாகவும், எட்டு திக்குகளிலும் அவ்வாறே நடுவிலும் ஒன்பது அமைக்க வேண்டும். நான்கு திசைகளிலும் நடுவில் ஐந்தும், மற்றவை கிழக்கு நோக்கி அமைய வேண்டும். ஒன்று, இரண்டு முதல் இரட்டைப்படை எண்கள் ஶாந்தியையும் புஷ்டியையும் குறிக்கும் என்று சொல்லப்படுகிறது. ஒன்று, மூன்று முதலிய ஒற்றை எண்கள், ஒன்பதைத் தவிர, தீயவை. பலாஶம், அத்தி, அரசு, கருங்காலி முதலியவை யாகத்துக்கு உகந்தவை. அருகம்புல், எள் முதலியவை ஶாந்திகார்யங்களுக்குச் சிறந்தவை. சிறிய பலன்களை நோக்கி **காரஸ்கரம்** முதலியவைகளும் அவ்வாறே. **கடு பீஜம்** முதலியவைகளும் சிறந்தவை. ஆயிரம் தொடங்கி, லக்ஷம் நடுவிலும், கோடி வரை ஹோமங்களின் வகைகள் உண்டு. ஒருவர், இருவர், பலர் உசிதம் போல்

அத்வர்யுக்களும், ரித்விக்குகளும் கருதப்படுகிறார்கள். ஒரே குண்டத்தில் ஹோமம் செய்வதானால் கிழக்கு முகமாகவும் வடக்கு முகமாகவும் செய்ய வேண்டும். ஸௌம்ய கார்யங்கள் விஷ்ணுவின் கோயில், உத்யாநங்கள், வீடுகள், இவைகளில் செய்ய வேண்டும். அஸௌம்யமானால் மயானம் முதலிய இடங்களில் செய்ய வேண்டும். காலம், முறை இவற்றைக் கூறுகிறேன். ஸௌம்ய கார்யங்களைப் பகலிலும், நல்ல நக்ஷத்ரங்களிலும், ஸௌம்ய யோகத்திலும், மற்ற கார்யங்களை ஸௌம்யயோகமில்லாத நாட்களிலும் செய்ய வேண்டும். ஒன்றாகவோ, சேர்ந்தோ, பிரித்தோ, விருப்பத்துக்கேற்றபடி ஸமித், நெய், முதலியவைகளால் ஒரு லக்ஷம், கோடி ஹோமம் முதலியவை சொல்லப்பட்டன. இவ்வாறு ஊஹம் செய்து கொண்டு மந்த்ரத்தைக் கொண்டு விருப்பத்துக்கு ஸாதகமாக உள்ளதைச் செய்ய வேண்டும். சொல்லப் படாதது போல் இருந்தால் அவைகளை **க்ருஹ்ய ஸூத்ரத்தில்** சொல்லப் பட்டபடி செய்ய வேண்டும். ஆகாரம் முதலியவைகளுடன் கூடியதாக இல்லாமல் இருந்தாலும், ஹோமம் புதிதாக இருக்கலாம்.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர் புத்ந்ய ஸம்ஹிதையில்** காம்ய
ஆராதந முறை நிரூபணம் என்கிற
29வது அத்யாயம் முற்றிற்று.

★ ★ ★



## அஸ்த்ரங்களின் தோற்றம் பெயர் முதலியவற்றின் விளக்கம் என்கிற

# 30வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஸநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥
(விளக்கம் 18வது அத்யாயத்தில் உள்ளது)

### அஸ்த்ரங்கள் பகவானுக்குப் பரிவாரம் ஆவது எப்படி?

**நாரதர் :-** மிகப் பெரியவையும், மிகுந்த ஸக்தி உடையவையும், சொற்களால் விளக்க முடியாதவையும், ஆகிய ப்ரம்மாஸ்த்ரம் முதலிய அஸ்த்ரங்கள் பகவானுக்கு எப்படிப் பரிவாரம் ஆகின்றன? இந்தப் பெரிய அஸ்த்ரங்கள் எதிலிருந்து பிறந்தன? மஹேஸ்வரா! இவைகளுக்குப் பெயர்கள் எவை? அவற்றை நான் கேட்க விரும்புகிறேன். சொல்ல வேண்டும்.

### இதற்குப் பதில் சொல்வதற்கு ஒரு கதையின் தொடக்கம்

**அஹிர்புத்ந்யர் :-** ஸ்ருஷ்டி தொடங்குவதற்கு முன் அநாதியாக இருக்கும் பகவான் நாராயணன் தனக்கு விளையாடுவதற்கு உபகரணங்கள் இல்லாமல் பரிபூர்ணமான ஸந்தோஷம் அடையவில்லை.

### பகவான் தானே பல பொருள்களாதல்

அதனால் பகவான் விளையாடுவதற்குத் தன்னையே பல பொருள்களாக ஆக்கிக் கொண்டார். மூல ப்ரக்ருதியை ஜீவனுடன் கூடியதாகப் படைத்தார்.

### மூல ப்ரக்ருதியிலிருந்து மஹான்

நாரதரே! பிறகு **அவ்யக்தம்** என்கிற மூல ப்ரக்ருதியிலிருந்து **மஹாந்** என்பதைப் படைத்தார்.

### மஹாநிலிருந்து அஹங்காரம்

பிறகு **மஹாநிலிருந்து ஸத்வம், ரஜஸ், தமஸ்** மூன்று குணங்களோடு கூடிய **அஹங்காரத்தைப்** படைத்தார்.

## ஸாத்விக அஹங்காரத்திலிருந்து இந்த்ரியங்கள்

ஞாநேந்த்ரியங்கள், கர்மேந்த்ரியங்கள் என்கிற 10 இந்த்ரியங்களும், மனதும் ஆகப் பதினொன்றை **ஸாத்விக அஹங்காரத்திலிருந்து** படைத்தார்.

## தாமஸ அஹங்காரத்திலிருந்து பூத தந்மாத்ரங்களுடன் பஞ்ச பூதங்கள்

மஹர்ஷியே! **பூதங்கள், பூததந்மாத்ரங்கள்** இவை பத்தையும் **தாமஸ** அஹங்காரத்திலிருந்து பகவான் படைத்தார்.

## ஏழு சூழல்களுடன் அண்டம் படைத்தல்

**மஹத்** முதலாக மற்ற படைப்புகள் முடிய ஒன்றை விடப் பத்து மடங்கு பெரியவையான ஏழு சூழல்களுடன் கூடிய அண்டத்தைப் படைத்தார்.

## அண்டத்துக்குள் சதுர்முகனைப் படைத்தல்

அந்த அண்டத்தில் தன் ஶக்திகளைக் கொண்டு கணக்கில் அடங்காத ப்ராணிகளைப் படைப்பவராகிய **ப்ரஜாபதி** என்கிற **நான்முகனைப்** படைத்தார். **ஸ்ரீ ஹரி** (விஷ்ணு) தன்னுடைய ஶக்தி ஸ்வரூபமாக உள்ள காலத்துடன் சேர்ந்து, ஸ்ருஷ்டிக்கப் பட வேண்டிய **மஹத்** முதலியவைகளில் ஜகத் ஸ்வரூபமாக உள்ள படைத்தலைச் செய்தார்.

## நான்முகனை வ்யாஜமாகக் கொண்டு பகவானே இவ்வுலகத்தைப் படைத்தல்

**விஷ்ணுவே** சதுர்முகனை வ்யாஜமாகக் கொண்டு சித், **அசித்** (உயிருள்ளவை, உயிரற்றவை) கலந்த பல வகையான இந்த உலகத்தை ஒவ்வொரு ஶக்தியுடன் கூடியதாகப் படைத்தார்.

## தேவர்களுக்கும் ப்ராணிகளுக்கும் பெயரிடுதல்

எல்லாரையும் அடக்கி ஆளக்கூடிய ஸர்வ சக்தியான அந்த **விஷ்ணு**, வேதங்களைப் பரிஶீலித்து தேவர்கள் முதலிய

எல்லா ப்ராணிகளுக்கும் பல வகைப் பெயர்களையும் உருவங்களையும் முன்பு இருந்தபடியே செய்தார்.

**பகவானுக்குப் படைத்தல் தொழில் ஏற்படுதல்**

பிறகு எப்பொழுதும் ஸகல வித விருப்பங்களைக் கிடைக்கப் பெற்றவராக இருந்தும் பகவான் நாராயணன், தான் படைத்த ப்ராணிகளைக் கொண்டு விளையாட்டால் ஏற்படும் மகிழ்ச்சியை அநுபவித்தார். (**ஹரே! விஹரஸி க்ரீடா - கந்துகைரிவ ஜந்துபி:!** விஷ்ணுபுராணம் - எம்பெருமானே! விளையாட்டுக்கு உதவும் பந்துகள் போல் இந்த ஜீவராஶிகளைக் கொண்டு விளையாடுகிறீர்!).

**காக்கும் கார்யம் பகவானுக்கே**

இந்த உலகங்களுக்கு வேறு யாரும் காப்பவராகத் தகுந்தவர் அல்ல என்று உணர்ந்து பகவான் தானே தன் ஶக்தியைக் கொண்டு உலகங்களைக் காக்கிறார்.

**தீயவர்களை ஒழித்தாலன்றிக் காத்தல் இயலாது**

தாநவர், தைத்யர், இவர்களை அழித்தாலன்றி தேவர் அஸுரர் மனிதர்கள் அடங்கிய இந்த உலகத்தைக் காத்தல் இயலாது.

**சக்கரத்தின் வடிவமாகச் செயல்படுதல்**

ஆகையால் ஆறு குணங்கள் நிரம்பிய பகவான் சக்கரத்தின் உருவத்தைப் பெற்றவராக அமைந்தார். அந்தச் சக்கரத்தினால் தைத்யர்கள், தாநவர்கள் அனைவரும் ஸம்ஹரிக்கப் படுகிறார்கள்.

**தேவர்கள் இந்த வடிவத்தைத் தரிக்க இயலாது**

தேவர்கள் முதலிய ஸுரர்களுக்கும், அஸுரர்களுக்கும், மண்ணுலகத்தை ஆளும் அரசர்களுக்கும், தந்நிகரற்ற ஶக்தியை உடைய இந்தச் சக்ரத்தைத் தரிக்க ஶக்தி இல்லை.

**ஆயுதங்கள் அஸ்த்ரங்களின் பிரிவு**

நாரத! இக் காரணத்தினால் அவர்களுக்குப் பல வகை அஸ்த்ரங்களும், ஆயுதங்களும் ஶத்ருவை அழிக்கத் தனித் தனியே அமைக்கப்பட்டன.

## ஸுதர்ஶநத்திலிருந்து அஸ்த்ரங்கள் தோற்றம்

அந்த அஸ்த்ரங்கள் விஷ்ணு ஸ்வரூபமாக உள்ள ஸுதர்ஶநத்திலிருந்து பிறந்தன. ஆகையால் அந்த அஸ்த்ரங்கள் மிகப் பெரியவையாகவும், பயங்கரமாகவும் அமைந்துள்ளன. சக்ரத்தின் ஸ்வரூபத்திலுள்ள ஜகந்நாதனாகிய விஷ்ணு தன் வடிவம் மூலமாக எல்லா அஸ்த்ரங்களையும் படைப்பதற்காக மக்களைப் படைக்க விரும்பினார். மஹர்ஷியே! ஆகையால் பகவான் விஷ்ணு பிங்கள வர்ணமுடையதும், பிங்கள வர்ண வட்டமான கண்களையுடையதும், கோரைப் பற்களிலிருந்து வெளிப்படும் நெருப்பினால் மரக்கட்டைகளை அழிக்க வல்லதும், மின்னல் நிறமான தன் பிங்கள வர்ணக் கேஶங்களால் பயங்கரமான உருவத்தை எடுத்துக் கொண்டார்.

### இவற்றில் முகத்திலிருந்து பிறந்த அஸ்த்ரங்கள்

**நாராயணாஸ்த்ரம், பாஶுபதாஸ்த்ரம், ப்ரம்மாஸ்த்ரம், ப்ரம்ம ஶிரஸ்** என்கிற **அஸ்த்ரம், விஷ்ணு சக்ரம், ஜ்ரும்பணாஸ்த்ரம், காலபாஶம், ஆக்நேயாஸ்த்ரம், ஹயக்ரீவாஸ்த்ரம், ப்ரஸ்வாபநம், தாபஸம்,** அளவிட முடியாத ஒளியை உடைய **காலாஸ்த்ரம், தண்ட சக்ரம், கால சக்ரம்,** தர்ம **சக்ரம், ஶைவாஸ்த்ரம், ஶூலம், ருத்ராஸ்த்ரம்,** மிகவும் பயங்கரமான **த்ரிஶூலம்** என்கிற முக்யமான இவை எல்லாம் பகவான் முகத்திலிருந்து தோன்றின. (**ஜ்ரும்பணம்** என்பது எதிரிகளுக்குக் கொட்டாவியை உண்டு பண்ணும், **ப்ரஸ்வாபநம்** என்பது எல்லோருக்கும் தூக்கத்தைக் கொடுக்கும்.)

### மார்பிலிருந்து பிறந்த அஸ்த்ரங்கள்

**ஸம்மோஹநம், இஷீகம்,** மிகுந்த ஒளியை உடைய **ஐந்த்ரம்** சக்ரம், யாவருக்கும் பயத்தைக் கொடுக்கவல்ல **ஶுஷ்க அஶநி, ஆர்த்ர அஶநி, பைநாகாஸ்த்ரம், கங்காளம்,** மிகவும் கொடிய **காபாலம், ஸுர்யாஸ்த்ரம், வருணபாஶம்,** ஶத்ருக்களை அழிக்கவல்ல **ஸந்தாபநம்,** மிகவும் உக்ரமான

வருணாஸ்த்ரம், தர்ம பாஶம் - இந்த அஸ்த்ரங்கள் எல்லாம் பகவானின் திருமார்பிலிருந்து வெளி வந்தன.

## தொடையிலிருந்து வந்த அஸ்த்ரங்கள்

இரண்டு வகை ஶக்த்யஸ்த்ரங்கள், வாயுவைத் தேவதையாகக் கொண்ட **வாயவ்யாஸ்த்ரம்**, **மௌஸலம்**, **காந்தர்வம்**, **தர்பணாஸ்த்ரம்**, எதிரிகளைப் பிளக்கக் கூடிய **ஶோஷணம்**, **யாம்யம்**, **விலபநாஸ்த்ரம்**, எதிரிகளை அழிக்கக் கூடிய **வித்யாதராஸ்த்ரம்**, **கங்கணீ**, **மோதகீ**, **ஶிகரம்**, **க்ரௌஞ்சம்** இவைகள் த்ரிவிக்ரமாவதாரம் செய்த பகவானின் தொடையிலிருந்து உண்டு பண்ணப்பட்டன.

## திருவடிகளில் பிறந்த அஸ்த்ரங்கள்

**அஸிரத்நம்**, **ப்ரஶமநம்**, **கந்தர்ப தயிதம்**, **மதநாஸ்த்ரம்**, **ஸௌமநாஸ்த்ரம்**, **ஸத்யம்**, **ஸம்வர்தநம்**, **மாயாதரம்**, **ஸோமாஸ்த்ரம்**, **த்வாஷ்ட்ரம்**, **ஶீதேஷு**, **பகாஸ்த்ரம்**, ஆகிய இந்த அஸ்த்ரங்கள், நாரதரே! பகவானுடைய திருவடிகளில் பிறந்தன.

## மற்ற அங்கங்களிலிருந்து பிறந்த உபஸம்ஹாராஸ்த்ரங்கள்

**ஸந்தாபநம்**, **ஸத்யவத்**, **தரண**, **த்ருஷ்டம்**, **ப்ருஶாஶ்வதநயம்**, **ஸத்யகீர்த்தி**, **மோஹநம்**, **ரபஸாஸ்த்ரம்**, **ஸர்வநாகாஸ்த்ரம்**, **பராங்முகம்**, **ஜ்ரும்பகம்**, **ப்ரதிஹாரம்**, உத்தமமான **வாருணாஸ்த்ரம்**, **அவாங்முகம்**, **தநாஸ்த்ரம்**, **தாந்யாஸ்த்ரம்**, **வ்ருஷாக்ஷம்**, **காமரூபகம்**, **த்ருடநாகம்**, **காமருசி**, **ஸுநாபம்**, **மகரம்**, **தஶாக்ஷம்**, **வ்ருத்திமான்**, **தஶவக்த்ரம்**, **ருசிரம்**, **தஶஶீர்ஷம்**, ஶத்ருக்களை அழிக்கும் **யோகந்தரம்**, **அநித்ரம்**, **மகரம்**, **போக்தாஸ்த்ரம்**, **கங்கணீ**, **ஶதோதரம்**, **ஸௌமநஸம்**, **பத்மநாபம்**, **மஹாநாபம்**, **ப்ரமதநம்**, **ஜ்யோதிஷாஸ்த்ரம்**, **க்ரதநம்**, **த்ரைராஶி**, **ஸார்சிமாலி**, **விமலாஸ்த்ரம்**, **த்ருதிகாஸ்த்ரம்**, **ஸ்ருஷ்டி விஷமாஸ்த்ரம்**, **ஸுத்யாதாஹம்**, **வித்ருதம்**, **க்ருஶநம்**, **லக்ஷாக்ஷம்**, **கர்ஶநாஸ்த்ரம்**, **உபஸம்ஹாராஸ்த்ரம்** என்ற பெயருள்ள இந்த அஸ்த்ரங்களையெல்லாம்,

ஶத்ருக்களை அழிக்க வல்ல பகவான் தன் மற்ற அங்கங்களிலிருந்து தோற்றுவித்தார்.

**அத்யாயத்தின் பொருளடக்கம்**

நாரதரே! இவ்வாறு அஸ்த்ரங்களின் பெயர்களும் பிறப்பிடங்களும், யந்த்ரத்தின் மஹிமையும் சுருக்கமாகச் சொல்லப்பட்டன.

இவ்வாறு பாஞ்சராத்ரம், தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்**
அஸ்த்ரங்களின் தோற்றம், பெயர்
முதலியவற்றின் விளக்கம் என்கிற
30வது அத்யாயம் முற்றிற்று.

★★★



ஶத்ருக்களை அழிக்க வல்ல பகவான் தன் மற்ற அங்கங்களிலிருந்து தோற்றுவித்தார்.

**அத்யாயத்தின் பொருளடக்கம்**

நாரதரே! இவ்வாறு அஸ்த்ரங்களின் பெயர்களும் பிறப்பிடங்களும், யந்த்ரத்தின் மஹிமையும் சுருக்கமாகச் சொல்லப்பட்டன.

இவ்வாறு பாஞ்சராத்ரம், தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்**
அஸ்த்ரங்களின் தோற்றம், பெயர்
முதலியவற்றின் விளக்கம் என்கிற
30வது அத்யாயம் முற்றிற்று.

★ ★ ★



யோகத்துக்கு அங்கமான, யமம், நியமம், ஆஸநம், இவற்றின் விளக்கம் என்கிற

# 31வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி॥
(விளக்கம் 18வது அத்யாயத்தின் உள்ளது)

## மாநஸிக ஆராதநம் பற்றிக் கேள்வி

**நாரதர்:-** வெளிப்படையான ஆராதநத்துக்கு முன்பு உத்தமமான **மாநஸிக ஆராதநம்** தேவரீரால் சொல்லப்பட்டது. அதன் ஸ்வரூபத்தைப் பற்றி விரிவாகச் சொல்லவேண்டும், அப்பனே!

## பதில் ஆரம்பம்

**அஹிர்புத்ந்யர்:-** நாரதரே! நன்றாகக் கேட்டீர். எல்லா உலகங்களாலும் வணங்கப்பட்ட பகவான் எதன் மூலம் த்ருப்தியடைவாரோ, அப்படிப்பட்ட திருவாராதந ஸ்வரூபத்தைச் சொல்கிறேன், கேளும்.

## மாநஸிக யாகலக்ஷணம்

மூன்று வகையான எந்த ஸாதநங்களைக் கொண்டு வெளிப்படையான திருவாராதநம் செய்யப்படுகிறதோ, மனதில் அமைந்த அவைகளைக் கொண்டு பகவானை அர்சிக்கலாம். இது **மாநஸிக ஆராதநம்** என்று சொல்லப்பட்டது. எல்லா பலன்களையும் தரவல்லது. அல்லது அந்த பகவானுக்கு நம்முடைய ஆத்மாவையே ஸமர்ப்பிக்கலாம். ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாத ஶுத்தமாகவுள்ள இந்த நம் ஆத்மா என்கிற ஹவிஸ்ஸை உத்தமமான தெய்வமான சக்ரரூபத்திலுள்ள மந்த்ரத்தைச் சொல்லி ஸமர்பிக்கலாம்.

## ப்ரக்ருதியிலிருந்து விலகிய ஆத்ம ஸ்வரூபம் எது?

**நாரதர்:-** ப்ரக்ருதியிலிருந்து பிரிந்த ஆத்மாவின் ஸ்வரூபம் பற்றிச் சொல்லவேண்டும். எந்த உபாயத்தின்

மூலம் அது நமக்குக் கிடைக்கும்? அதை எனக்கு மிகவும் தெளிவாகச் சொல்ல வேண்டும், அப்பனே!

**இதற்குப் பதில் தொடக்கம்**

**அஹிர்புத்ந்யர்:-** இது மிகவும் நுண்ணியது (ஸூக்ஷ்மம்). அது எல்லா இடங்களிலும் இருக்கும். எல்லாவற்றையும் அது தாங்குகிறது. ஞாந-ஸ்வரூபம். ஆதி-அந்தம் அற்றது. மாறுதல் அற்றது. எந்த விதப் பிணியுமற்றது. கண்களாலோ, காதுகளாலோ, அறிய முடியாதது. தொட்டு அறிய முடியாதது. கைகளோ, கால்களோ அற்றது. ஶாஶ்வதமானது. பெயர், ஜாதி(ஆண் - பெண்) இவை இல்லாதது, நிறமற்றது, குணமற்றது, எல்லா இடங்களிலும் காதுகள் உள்ளது. எங்கும் கண்கள் உள்ளது. எல்லா இடங்களிலும் - கைகள் கால்கள் உடையது. எதிலும் பற்றில்லாதது. அசைவற்றது. ஶாந்தமானது. ஜ்யோதிர் மயமானது. தந்நிகரற்றது. வெகு தூரத்தில் உள்ளது. பக்கத்திலும் உள்ளது. ஞாநத்தினால் அறியப்படுவது. எந்த வாஸனையும் அற்றது. ஸகல ப்ராணிகளையும் தாங்குவது. எல்லா ஜ்யோதிகளிலும் சேர்ந்தது போன்றது. தமோ குணத்துக்கு அப்பாற்பட்டது. அழிவற்றது. எல்லா ப்ராணிகளுக்கும் உள்ளே இருப்பது. இத்தகைய இயல்புடையது விஷ்ணுவின் அந்தப் **பரமபதம்.**

**யோகம் கர்மம் அதற்கு ஸாதநம்**

யோகம் (பக்தி), கர்மம், அதற்கு ஸாதநமென்று வேதங்களால் சொல்லப்பட்டுள்ளது.

**அது பற்றிக் கேள்வி**

**நாரதர்:-** கர்மா என்பதோ, யோகம் என்பதோ எத்தகையது? இவைகளைக் கொண்டு ப்ரக்ருதியிலிருந்து விலகிய ஆத்மா கிடைக்கும் என்பது எப்படி?

**பதில் தொடக்கம்**

**அஹிர்புத்ந்யர்:-** கர்மா என்பது இரண்டு வகைப்படும். அதைப் பற்றி இப்பொழுது சொல்கிறேன் கேளும். ஒன்று **ப்ரவர்தகம்,** மற்றொன்று **நிவர்தகம்** எனப்படும்.

## இரண்டு வித கர்மங்கள் செயல்

**ப்ரவர்தகம்,** ஸ்வர்கம் முதலிய பலன்களைக் கொடுக்க வல்லது என்று கூறப்பட்டுள்ளது - தேவர்ஷியே! **நிவர்தகம்** என்பது மோக்ஷத்துக்கு உபாயமாகும்.

## அஷ்டாங்க யோகம் பற்றி

ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் சேர்க்கை என்பது **யோகம்** எனப்படுகிறது. இதைக் கொண்டு பகவானைக் காணக் கிடைக்கலாம். இதுவே **அஷ்டாங்க யோகம்** எனப்படும்.

## யோகத்தின் அங்கங்களின் எண்ணிக்கை

இந்த யோகத்தின் எட்டு அங்கங்களைத் தனித்தனியாகச் சொல்கிறேன். அவற்றைக் கேளும். **யமம், நியமம், ஆஸநம், ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணா, த்யாநம், ஸமாதி** ஆகியவை. நாரதரே! **அங்கம் அங்கி** சேர்ந்து எட்டு அங்கங்கள்.

## யமம் என்பதின் விளக்கம்

**ஸத்யம், தயை, ஸந்தோஷம், ஶௌசம், ப்ரம்மசர்யம்,** பொறுமை, **நேர்மை, கட்டுப்பாடான உணவு, திருடாமை, அஹிம்ஸை** (கொல்லாமை) என்று பத்து வகை **யமம்.**

## ஸத்யம் முதலியவற்றின் விளக்கம்

1.**ஸத்யம்** என்பது நேரில் பார்த்ததைச் சொல்லும் வார்த்தை. அது பிறருக்கு ஹிதமாக இருக்க வேண்டும். 2) **தயை** என்பது எல்லா ப்ராணிகளிடமும் எப்பொழுதும் அவர்களின் ஶ்ரமத்தைப் போக்க முயற்சி செய்தல். (3) **த்ருப்தி** என்பது எப்படிப்பட்ட ஶ்ரமதஶையிலும் தான் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்து முடித்தல்.(4) **ஶௌசம்** என்பது விதிக்கப்பட்ட எல்லா கர்மாக்களிலும் நமது அங்கங்கள் செயல் படத் தகுதியாக இருத்தல். (5) **ப்ரம்மசர்யம்** என்பது தன் மனைவியிடம் இன்பம் ஒன்றையே முக்யமாகக் கொள்ளாமலிருத்தல். (6) **பொறுமை** என்பது கோபம் சோர்வு போன்ற நிலை வரும் ஸமயங்களில் கூட மனம் தளராமல் ஒரே நிலையில் இருத்தல். (7) **நேர்மை** என்பது உள்ளம், உரை,

செயல் இவற்றின் செயல்பாட்டில் ஒற்றுமை இருத்தல். (8) **மித ஆஹாரம்** என்பது ப்ரம்மசாரி, க்ருஹஸ்தன், வாநப்ரஸ்தன், ஸந்யாஸி எல்லோருக்கும் வேதம் தர்ம ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட உணவையே உட்கொள்ளும் முறை. (9) **திருடாமை** என்பது பிறர்பொருள்களில் வாக்கு, செயல், மனது இவை செயல்படாது இருத்தல். (10) **அஹிம்ஸை** என்பது பிறருக்கு வாக்கு, மனது, செயல் இவற்றால் துன்பம் தராமலிருத்தல்.

## நியமம் என்பதின் விளக்கம்

வேதாந்தத்தின் ஸித்தாந்தத்தைக் கேட்டு அறிதல், தாநம், மதி, பகவானை ஆராதித்தல், ஸந்தோஷம், தவம், ஆஸ்திக்யம், வெட்கம் (சபலமில்லாமை) ஜபம், வ்ரதங்கள் என்கிற பத்தும் யோகத்துக்கு அநுகூலமான நியமங்கள் எனப்படுகின்றன.

## ஸித்தாந்த ஶ்ரவணம் முதலியவற்றின் விளக்கம்

(1) **ஸித்தாந்த ஶ்ரவணம்** என்பது வேதாந்தத்தைக் கேட்டறிதல் என்று ஞாநிகளால் கூறப்பட்டது. (2) **தாநம்** என்பது ந்யாயமாக ஸம்பாதித்த பொருள்களைத் தகுதி உடைய மனிதர்களுக்கு அளித்தல். (3) **மதி** என்பது அவரவர்களுக்கு விதிக்கப்பட்ட கார்யங்களில் பற்றுதலும் ஊக்கமும். (4) **பகவானின் ஆராதனை** என்பது விஷ்ணுவுக்குப் பக்தியுடன் முடிந்த வரை பூஜை செய்தல். (5) **ஸந்தோஷம்** என்பது நாம் எதிர் பார்க்காமல் எது கிடைத்தாலும் இதுவே போதும் என்கிற மநப்பக்குவம். (6) **தவம்** என்பது **க்ருச்ரங்கள், சாந்த்ராயணம்** முதலியவற்றால் ஶரீரத்தை உலர்த்துதல். (7) **ஆஸ்திக்யம்** என்பது வேதத்தில் மட்டும் சொல்லப்பட்ட ஒரு பொருள் உண்டு என்கிற நிஶ்சயத்தில் இருப்பது. (8) **வெட்கம்** என்பது வேதம் முதலியவற்றில் தடுக்கப்பட்ட செயல்களைச் செய்வது என்று பெரியோர்களால் சொல்லப்படுகிறது. (9) **ஜபம்** என்பது ஆசார்யன் உபதேஶம் செய்த **வேதம், மந்த்ரங்கள்** இவற்றை ஜபித்தல் என்று கருதப்படுகிறது. (10) **வ்ரதம்** என்பது நல்ல ஆசார்யர்கள் உபதேஶித்தவை நமக்கு வழி காட்டி என்கிற நிச்சயம்.

## ஆஸநம் முதலியவைகள் உடல் நலத்துக்கு உகந்தவை

இனி ஆஸநங்களைப் பற்றிச் சொல்கிறேன். அவை மிகவும் முக்யமானவை. பல வகைப்பட்டவை. இவைகளில் ஏதாவது ஒன்றை ஏற்றுக் கொண்டு யோகிகள் ஸௌகர்யம் பெறுவர்.

### முக்கிய ஆஸநங்களின் எண்ணிக்கை

**சக்ராஸநம், பத்மாஸநம், கூர்மாஸநம், மயூராஸநம், குக்குடாஸநம், வீராஸநம், ஸ்வஸ்திகாஸநம், பத்ராஸநம் ஸிம்ஹாஸநம், முக்தாஸநம், கோமுகாஸநம்** என்பவை, நாரதரே! முக்யமாகும்.

### சக்ராஸநம்

இடது தொடையை வலது கணுக்காலில், வலது தொடை இடது கணுக்காலில் வைத்துக் கொள்ள வேண்டும். உடல் வளையாமல் நேராக இருக்கவேண்டும். இதுவே உத்தமமான **சக்ராஸநம்.**

### பத்மாஸநம்

இரண்டு பாதங்களையும் தொடைகள் மீது நெருக்கமாக வைத்து அமர்தல் **பத்மாஸநம்** என்று சொல்லப்படுகிறது. இது ஸகல பாபங்களையும் போக்க வல்லது.

### கூர்மாஸநம்

இரண்டு குதிகால்களை மாற்றியமைத்து மலத்வாரத்தை அழுத்தி வைத்துக் கொள்ளுதல் **கூர்மாஸநம்** எனப்படும். இது யோகத்தில் ஸித்தியைத் தர வல்ல ஆஸநம்.

### மயூராஸநம்

இரண்டு முழங்கைகளையும் தொப்புள் மேல் நெருக்கமாக வைத்து உள்ளங்கைகளால் தரையைத் தொட்டுக் கொண்டு தலையும் காலும் ஒரே மட்டத்தில் உயர்ந்த நிலையில் தண்டம் போல் அமர்தல் **மயூராஸநம்** என்று கருதப்படுகிறது. இது எல்லா வகையான நோய்களையும் தீர்க்க வல்லது.

### குக்குடாஸநம்

பத்மாஸநத்தில் உட்கார்ந்து கைகளை முழங்கால்களுக்கு இடையில் பூமியில் வைத்துக் கொண்டு உடல் மேலாகத் தூக்கி நிறுத்துதல் **குக்குடாஸநம்** எனப்படும்.

### வீராஸநம்

ஒரு பாதத்தை ஒரு தொடை மீது வைத்து மற்றொரு பாதத்தில் தொடையை வைத்தல் **வீராஸநம்** எனப்படும்.

### ஸ்வஸ்திகாஸநம்

இரண்டு பாதங்களையும் முழங்கால்களுக்கும், தொடைகளுக்கும் நடுவில் வைத்து நேராக உட்கார வேண்டும். இது **ஸ்வஸ்திகாஸநம்.**

### பத்ராஸநம்

அடி வயிற்றின் இரு பக்கங்களிலும் குதி கால்களைக் கைகளால் கட்டிக் கொண்டு அழுத்தமாக வைத்து அமர்தல் பாபங்களைப் போக்கக் கூடிய **பத்ராஸநம்** என்று சொல்லப்படுகிறது.

### ஸிம்ஹாஸநம்

அடி வயிற்றின் இரு பக்கங்களிலும் குதி கால்களை மாற்றி வைத்துக் கொண்டு, இரண்டு கைகளையும் விரல்கள் விரிந்தும் முழங்கால்களில் இருக்கும்படிச் செய்து, மூக்கின் நுனியில் கண்களால் பார்த்துக் கொண்டு வாயைத் திறந்து கொண்டு உடல் நேராகவும் ஒரு ஞானி அமர்தல் என்பது எல்லா தேவர்களாலும் வணங்கப்பட்ட **ஸிம்ஹாஸநம்** எனப்படும்.

### முக்தாஸநம்

இடது குதிகாலை ஆண் குறி மேல் வைத்து, மற்றொரு குதிகாலை இதே இடத்தில் கீழே வைத்துக் கைகளை இடுப்பில் கட்டிக் கொண்டு இருத்தல் **முக்தாஸநம்** எனப்படுகிறது. மோக்ஷத்தை விரும்புபவர்கள் இந்த நிலையில் தான் இருப்பர்.

இரண்டு குதிகால்களின் மீது ப்ருஷ்டத்தின் (புட்டத்தின்) இரண்டு ஓரங்களையும் வைத்து இரண்டு கைகளையும் மாற்றிப் பின் பக்கத்தில் வைத்து, கட்டை விரல்களை பிடித்துக் கொண்டு அமர்தல் கோமுகாஸநம் எனப்படுகிறது.

**ப்ராணாயாமம்** நன்கு அமைய நாடிஶுத்தி அவஶ்யம் முனிவரே! 1. **ப்ராணாயாமம்** நன்கு அமைய ஶரீரத்தில் இருக்கும் **ப்ராண அபாந** முதலிய வாயுக்களைக் கொண்டு அக்நியுடன் நாடிகளின் ஶுத்தியைச் செய்து கொள்ள வேண்டும்.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** யோகத்துக்கு
அங்கங்களின் நிரூபணம் என்கிற 31வது அத்யாயம்
முற்றிற்று.



நாடிகளின் தூய்மை, காற்றுகளை வெற்றி கொள்ளுதல், யோகத்தின் அங்கமான ப்ராணாயாமம் முதலியவற்றின் விளக்கம் என்கிற

# 32வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥
(விளக்கம் 18ம் அத்யாயத்தில் உள்ளது)

## நாடிகளின் எண்ணிக்கை, இருக்குமிடம் பற்றிக் கேள்வி

**நாரதர்:-** நாடிகள் எத்தனை உள்ளன? எத்தகையவை? என்ன அளவுள்ளவை? அவை இந்த உடலில் எங்கே இருக்கின்றன? இவைகளை எவ்வாறு ஶுத்தீகரிப்பது? காற்றுகள் எத்தனை? என்ன பெயருடையவை? எத்தகையவை? இவைகளுக்கு எத்தகைய வேலை? இவையெல்லாம் சொல்ல வேண்டும், அப்பனே!

## பதில் ஆரம்பம்

**அஹிர்புத்ந்யர்:-** முநிவரே ! இது மிகவும் ஸூக்ஷ்மமானது(ரஹஸ்யம்). மிகவும் கவனமாகக் கேளும். எல்லா ப்ராணிகளுக்கும் ஶரீரம் தம் தம் விரல்களால் 96 அங்குலங்கள் அளவு உள்ளது.

## உடம்பில் நடு பாகம் தீர்மானித்தல்

மஹா முநிவரே ! உடலில் நடு பாகம் பற்றிக் கேட்க விருப்பம் உண்டானால் கேளும். மலத்வாரத்திலிருந்து மேல் பக்கம் இரண்டு அங்குலங்களும், ஆண் குறியிலிருந்து இரண்டு அங்குலங்கள் கீழாகவும் நடு பாகம் எனப்படும்.

## ஶரீரத்தில் அக்நி மண்டலத்தின் ஸ்வரூப விளக்கம்

நான்கு கால் ப்ராணிகளுக்கும், மனிதர்களுக்கும், பறவைகளுக்கும் வரிசையாக நான்கு மூலைகள் கொண்டதாகவும், மூன்று கோணங்கள் கொண்டதாகவும், வட்டமாகவும் அக்நி மண்டலம் இருக்கும். இங்கு அக்நி

என்று சொல்லப்பட்டது, நம் வயிற்றுக்குள் பசியைத் தோற்றுவித்து உணவை ஜீரணம் செய்வது அக்நியே . இதை ஜாடராக்நி என்பர்.

**நாடிகளின் மூல ஸ்தாநம்**

ஆண் குறியிலிருந்து 'ஒன்பது அங்குலங்கள் மேலே' நாடிகளின் மூலம் (**கந்த:** - கிழங்கு) என்று சொல்லப்படுகிறது. நான்கு அங்குலங்கள் குறுக்காகவும், நான்கு அங்குலங்கள் நீளமாகவும் **மேதஸ்**, மாம்ஸம், எலும்பு, ரத்தம் இவைகளால் முட்டை வடிவமாக (உருண்டை) சூழப்பட்டிருக்கிறது.

**நாபிசக்ரஸ்தாநம்**

அங்கேயே நாபிசக்ரமும், 12 ஆரங்கள் கொண்டதாக அமைந்துள்ளது. அதனால் உடம்பு தாங்கப்படுகிறது. அதில் **குண்டலிநீ** என்பது உள்ளது.

**நாபி சக்ரத்தில் ஸுதர்ஶந மந்த்ரத்தின் எழுத்துக்கள்**

ஸுதர்ஶந மந்த்ரத்தில் எந்த எழுத்துக்கள் இருக்கின்றனவோ, அவற்றை மெய் எழுத்தென்றும் உயிரெழுத்தென்றும் பிரித்து, இந்தச் சக்ரத்தில் கிழக்கு திக்கு தொடங்கி வரிசையாக வைக்க வேண்டும்.

**மீதி எழுத்துக்கள் சக்ரத்தின் நடுவில்**

மீதி உள்ள எழுத்துக்களை மிகவும் கவனத்துடன் நடுவில் வைக்க வேண்டும்.

**நாபி சக்ரத்தைச் சுற்றிக் குண்டலிநீ**

நாபி சக்ரத்தைச் சுற்றிலும் எட்டு முகமுடைய **குண்டலிநீ** இருக்கிறது. எட்டு இயல்பு கொண்ட பாம்பின் உடலால் சூழ்ந்து **வைஷ்ணவீ குண்டலிநீ** உள்ளது. **ஸுஷும்நா** நாடியின் **ப்ரம்மரந்த்ரத்தை** முகத்தால் மூடி மறைக்கிறது.

**சக்ரத்தின் நடுவில் அலம்புஸா, ஸுஷும்நா**

சக்ரத்தின் மத்தியில் **அலம்புஸா, ஸுஷும்நா** என்பவை இருக்கின்றன.

### மற்றுமுள்ள 12 நாடிகளின் தனி இடங்கள்

**ஸுஷும்நா** நாடியின் கிழக்கு ஆரக்காலில் **குஹு** என்கிற நாடி இருக்கிறது. அடுத்த இரண்டு ஆரங்களில் **வாருணாவும், யஶஸ்விநீயும்** உள்ளன. **ஸுஷும்நை**யின் வலப்பக்கத்தில் **பிங்களா** நாடியும், அடுத்த இரண்டு ஆரங்களில் **பூஷா, பயஸ்விநீ**யும் உள்ளன. **ஸுஷும்நை**யின் பின்புறத்தில் ஆரத்தில் **ஸரஸ்வதீ** நாடி உள்ளது. அடுத்த இரண்டு ஆரங்க ளில் **ஶங்கிநீ, காந்தாரீ** என்கிற நாடிகள் உள்ளன. **ஸுஷும்நா** நாடிக்கு இடது பக்கம் **இடா** என்கிற நாடியுள்ளது. அதன் பிறகு **ஹஸ்திஜிஹ்வா, விஶ்வோதரா** என்கிற நாடிகள் உள்ளன. சக்ரத்தின் ஆரங்களில் நாடிகள் ப்ரதக்ஷிண வரிசையில் அமைந்துள்ளன. இந்த 12 ஆரங்களிலும் நான்முகனின் 12 குமாரர்களும் வஸிக்கின்றனர்.

### முக்யமான 14 நாடிகளின் பெயர்கள்

**இடா, பிங்களா, ஸுஷும்நா, ஸரஸ்வதீ, குஹு, பயஸ்விநீ, வாருணா, யஶஸ்விநீ, விஶ்வோதரா, ஹஸ்திஜிஹ்வா, காந்தாரீ, ஶங்கிநீ, அலம்புஸா, பூஷா** இவை பதிநான்கும் முக்யமான நாடிகள்.

### தேஹத்தில் உள்ள நாடிகள்

72,000 நாடிகள் ஶரீரத்தில் இருக்கின்றன.

### மூன்று முக்கிய நாடிகள்

அவைகளில் மூன்று மிகவும் முக்கியமானவை. அவை **ஸுஷும்நா, இடா, பிங்களா** என்பவை. அவற்றில் **ஸுஷும்நா** மிகவும் முக்யமானது. தலை வரை வ்யாபித்துள்ளது.

### ஜீவன் நாடிசக்ரத்தில் சுற்றுதல்

இந்தச் சக்ரத்தில் ஜீவன் ப்ராணனுடன் சேர்ந்து எப்பொழுதும் சுற்றிக் கொண்டிருக்கிறது. சிலந்தி, தான் அமைத்த கூட்டின் மத்தியில் இருப்பது போல் உள்ளது.

## ப்ரம்மரந்த்ரம் மறைக்கப்பட்டிருத்தல்

**ஸுஷும்நை**யில் ஐந்து ஓட்டைகள் உள்ளன. அவற்றில் நான்கு ரத்தம் நிரம்பியது. நடுவில் உள்ள **ப்ரம்மரந்த்ரம்** குண்டலியால் மறைக்கப்பட்டிருக்கும்.

## நாடிகளின் அளவு

**ஸுஷும்நா** நாடியின் முன் பக்கம் நெற்றி வரை உயர்ந்து இருக்கும். பின் பக்கம் கழுத்து வரையிலும் வலது இடது பக்கங்களிலும் உயர்ந்திருக்கும். இரு பக்கங்கள் தலைவரை இருக்கும். இது மிகவும் **ஸூக்ஷ்மம்** (ரஹஸ்யமானது). **அலம்புஸா** என்பது கால் வரை அமைந்திருக்கும். **குஹூ** என்பது ஆண் குறி வரை செல்லும். **வாருணா** உடல் முழுவதும் பரவியிருக்கும். **யஶஸ்விநீ** வலக்கால் கட்டை விரல் வரை வ்யாபித்திருக்கும். **பிங்களா** என்னும் நாடி வலது மூக்கு வரை செல்லும். **பூஷா, பயஸ்விநீ** இரண்டும் வலது கண், வலது காது வரை செல்லும். **ஸரஸ்வதீ** என்பது அடி நாக்கு வரை செல்லும். **ஶங்கிநீ** நாடி என்பது இடது காதையும், **காந்தாரீ** இடது கண்ணையும் வ்யாபித்திருக்கும். **இடா** என்று கூறப்பட்ட நாடி இடது மூக்கு வரை செல்லும். **ஹஸ்திஜிஹ்வா** என்கிற நாடி இடது கால் கட்டை விரல் வரை சென்றிருக்கும். **விஶ்வோதரா** வயிறு வரை செல்லும். ஆக நாடிகளின் விவரம் சொல்லப்பட்டது.

## இடா, பிங்களா இவற்றில் சந்திரன் ஸூர்யன் நிலை

இடாவில் சந்திரன் இருக்கிறான். **பிங்களாவில்** ஸூர்யனும் இருக்கிறான். இவை இரண்டும் காலத்தை அமைக்கும். அதை **ப்ரம்ம நாடி** அநுபவிக்கும் (பயன்படுத்திக் கொள்ளும்).

## உடலில் வாயுவின் செயல் பற்றி விளக்கம்

நம் உடலுக்குள் இருக்கும் வாயுவைப் பற்றிய விவரத்தைக் கேளும்.

**ஶரீரத்தில் 10 வாயுக்கள்**

**ப்ராணன், அபாநன், ஸமாநன், உதாநன், வ்யாநன், நாகம், கூர்மம், க்ருகரம், தேவதத்தம், தநஞ்ஜயம்** ஆகும்.

**ப்ராணன் முதலிய வாயுக்கள் இருக்கும் இடம்**

**ப்ராணன்** என்கிற வாயு எப்பொழுதும் நாபி சக்ரத்தில் தங்கியிருக்கிறது. இது வாய்க்கும் மூக்குக்கும் இடையில் ஹ்ருதயத்தில் ப்ரகாஶிக்கிறது. **அபாநம்** என்பது அநேகமாக மலத்வாரம், ஆண்குறி, தொடைகள், முழங்கால் இவற்றில் தங்கியிருக்கிறது. வயிறு, **வ்ருஷணம்** (விரை), இடுப்பு, கணுக்கால், நாபி, மலத்வாரம், ஜாடராக்நி ஸ்தாநம் இவற்றில் **அபாநம்** இருந்து கொண்டு விளக்கு போல் ப்ரகாஶிக்கிறது. **வ்யாநம்** என்பது கண்களுக்கும், காதுகளுக்கும் இடையிலும், கழுத்தில் பின்புறத்திலும், குதிகால்களிலும், மூக்கிலும், தொண்டையிலும், புட்டங்களிலும் இருக்கிறது. ஸந்தேஹமில்லை. **உதாநம்** என்பது எல்லா மூட்டுகளிலும், கால்களிலும், கைகளிலும் இருக்கும். **ஸமாநம்** என்பது உடல் முழுவதும் எல்லா இடங்களிலும் வ்யாபித்திருக்கும்.

**ப்ராணன் முதலியவற்றின் செயல்கள்**

**ப்ராணன்** என்கிற வாயு நாபி சக்ரத்தில் தங்கியிருக்கிறது. மூச்சு இழுத்தல், மூச்சு விடுதல் முதலியவை **ப்ராணனின்** வேலை என்று கருதப்படுகிறது. எடுத்தல், வீசுதல் இதுவே **வ்யாநத்தின்** வேலையாகும். தேஹத்தின் வளர்ச்சி முதலியவை **உதாநத்தின்** வேலையாகச் சொல்லப்படுகிறது. உடம்பில் புஷ்டி முதலியன **ஸமாநத்தின்** வேலை என்று கருதப்படுகிறது. ஏப்பம் விடுதல் முதலியவை **நாக** வாயுவின் செயல் என்று சொல்லப்பட்டது. இமைத்தல் (கண் கொட்டுதல்) **கூர்ம** வாயுவின் வேலை. தும்மல் **க்ருகரத்தின்** வேலை. தேவர்ஷியே! **தேவதத்தம்** எனும் வாயுவுக்குச் சோம்பல் முதலியவற்றின் வேலை. ஶோகம் முதலிய எல்லா வேலைகளும் **தநஞ்ஜயத்தின்** செயல் பாடு. இவ்வாறு வாயுவின் செயல்களும், நிலைகளும் சொல்லப்பட்டன.

### நாடி ஶுத்தம் செய்யும் முறை

ஆகையால் நாடிகள் முழுமையாக ஶுத்தம் தானே செய்து கொள்ள வேண்டும். வெளியிலிருக்கும் காற்றை இடா மூலம் 16 வினாடிகளில் நிரப்பி, அதை 32 வினாடிகள் உள்ளே அடக்கி வைத்துக் கொள்ள வேண்டும். அதன் இருப்பிடத்தில் ரம் என்கிற பீஜத்துடன் அக்நியை த்யாநிக்க வேண்டும். மூக்கின் நுனியில் அமுதத்தைப் பொழியும் சந்த்ரதேவனை நினைக்க வேண்டும். சந்த்ரனை **வம்** என்கிற பீஜத்தால் நினைத்து வெளி விட வேண்டும். பிறகு முன் சொன்ன வழியிலேயே **பிங்களா** மூலம் காற்றை நிரப்பி அடக்கி இடா மூலம் வெளியே விட வேண்டும். இந்த வகையில் மூன்று காலமும், மூன்று முறை செய்து எப்பொழுதும் கவனத்துடன் செய்ய வேண்டும்.

### இம்முறையில் ஶுத்தம் செய்பவருக்கு மூன்று மாதங்களில் நாடிகளின் தூய்மை அமையும்.

இவ்வாறு நியமங்களுடன் கூடியவனுய்ச் செய்பவனுக்கு 3 மாதங்களில் நாடிகளெல்லாம் தூய்மையாகி விடுமென்று யோகத்தை அறிந்த பெரியோர் சொல்லுகிறுர்கள்.

### இதனால் வாயுவை வெற்றி கொள்ளலாம்

இதனால் நம் ஶரீரத்திலிருக்கும் வாயுக்களைக் கட்டுப் படுத்துவார்கள்.

### இதனால் மநம் நிலைத்து இருக்கும்

நாரதரே! இதனால் தேஹத்தில் வாயுக்கள் எங்கு எங்கெல்லாம் இருக்கின்றனவோ, அங்கெல்லாம் மநம் அக்நியோடு கூட நிலையாக இருக்கும்.

### ப்ராணாயாம விதி

பிறகு எல்லா பாபங்களையும் போக்கவல்ல ப்ராணாயாமத்தைச் செய்ய வேண்டும். நாபி சக்ரத்தின் மேற்புறத்திலும் ஹ்ருதய கமலத்திலும், தொண்டைப்

பள்ளத்திலும், புருவங்களுக்கிடையிலும், அடி நாக்கிலும், மந்த்ரத்தின் ஆறு அக்ஷரங்களை வரிசையாக த்யாநிக்க வேண்டும்.

### ப்ராணாயாமம் செய்யும் முறை

16 விநாடிகள் காற்றை இடா மூலம் நிரப்பி, ஹ்ருதயத்தின் நடுவில் சக்ரரூபத்தில் எழுந்தருளியிருக்கும் குறையற்ற பரமாத்மாவை த்யாநிக்க வேண்டும். இந்த ஸுதர்ஶந வடிவமான எம்பெருமானைத்யாநித்துக் கொண்டு முடிந்த வரை இந்த மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். பிறகு பிங்களாவின் மூலம் 16 விநாடிகளில் **ரேசகம்** (காற்றை வெளியேற்றுதல்) செய்ய வேண்டும். இவ்வாறு மறுபடியும் அதே இடா மூலம் நிரப்பி, உள்ளே அடக்கி, **பிங்களாவின்** மூலம் வெளிவிட வேண்டும். நிரப்பும் போதும், அடக்கும் போதும், வெளி விடும் போதும், **ப்ரணவத்தைச்** சிந்திக்க வேண்டும். 10, 105, 14, 100 முறையே இவற்றின் ஒரு எண்ணிக்கையில் **காயத்ரி**யை ஜபித்து மேலே சொன்ன முறைப்படி செய்ய வேண்டும். இவ்வாறு திநமும் 16 **ப்ராணாயாமங்கள்** செய்ய வேண்டும். இவ்வாறு செய்வதன் மூலம் **ப்ராணாயாமங்கள்** பெரிய பாபங்கள் செய்த மனிதனையும் தூய்மைப் படுத்தும்.

### ப்ரத்யாஹாரத்தின் விளக்கம்

இயல்பாக ஶப்தாதி விஷயங்களில் ஈடுபடுகின்ற மனதை இவ்வாறு செய்வதன் மூலம் ஐந்து அங்கங்களோடு கூடிய **ப்ரத்யாஹாரம்**( திருப்பி இழுத்து நிறுத்துதல்) செய்ய வேண்டும். அந்த ஶப்தாதி விஷயங்களில் உள்ள தீமையை எண்ணி மந உறுதியுடன் இழுத்து பகவானிடத்தில் வைத்தல் ப்ரத்யாஹாரம் என்று சொல்லப் படுகிறது.

### தாரணா விளக்கம்

ஶப்தாதி விஷயங்களின் பற்றுதலை விடுவதன் மூலம் அப்யாஸத்தினாலும் (பயிற்சி) குணங்கள் (மனதை ஒன்று படுத்துவதில்) இருப்பதை உணர்வதாலும் மனதைப்

பரமாத்மாவின் மீது நிறுத்துதல் தாரணா என்று சொல்லப்படுகிறது.

### த்யாநத்தின் விளக்கம்

இவ்வாறு மனதை அடக்கியவன், கட்டுப்பாட்டுடன், சக்ரவடிவமான பகவானிடம் தன் மனதைச் செலுத்தி த்யாநம் செய்ய வேண்டும்.

### வர்ணாஶ்ரம தர்மங்களின் செயல் முறை

உகந்ததும், ஶுத்தமுமான நல்ல தீர்த்தங்களோடு கூடிய காட்டில் அந்தந்த வர்ணங்களுக்கும், ஆஶ்ரமங்களுக்கும் சொல்லப்பட்ட அநுஷ்டாநத்தில் இருந்து கொண்டு, மனத் தெளிவுடன், ஶாந்தியுடனும், நல்ல குணங்களுடனும், கூடியவனாய், அசையாத ஆஸநத்தில் உட்கார்ந்து உடம்பை நேரான நிலையில் இருத்திக் கொண்டு, தன் மூக்கின் நுனியைக் கண்களால் பார்த்துக் கொண்டு, ஹரியினிடம் பக்தியுடன், **ப்ராணாயாமத்தினால்** மேலே வருகின்ற அக்நியுடன் கூடிய வாயுவை, **குண்டலிநியிலிருந்து** பிரித்து **ஸுஷும்நா** நாடியின் நடுவில் இருக்கச் செய்த வாயுவினால் வாயைத் திறந்தபடி வைத்துக் கொண்டு ஹ்ருதய கமலத்திலும், ஹ்ருதயா காஶத்திலும், ஶிகை இருக்குமிடத்திலும், ஜ்வலிக்கும் அக்நியின் ஶிகை (ஜ்வாலை) மத்தியிலும், அத்புதமான உருவத்துடன் கூடிய எம்பெருமானை த்யாநிக்க வேண்டும்.

### த்யாநத்துக்கு ஆதாரத்தின் ஸ்வரூப விளக்கம்

பிங்களமான திருக்கண்களோடு கூடியவரும், செம்பட்டைக் கூந்தல் உடையவரும், எரியும் நெருப்பு போன்ற ஒளியை உடையவரும், கோரைப் பற்களோடு கூடியவரும், புருவத்தை நெரித்துக் கொண்டு பயங்கரமான தோற்றத்தோடு கூடியவரும், மின்னல் கூட்டம் போன்ற ஒளியை உடைய மேல் நோக்கிய கூந்தலுடன் கூடியவரும், பல நிறம் கொண்ட மகிழ்ச்சி தரும் மாணிக்கங்களாலும், முத்துக்களாலும் பதிக்கப்பட்ட கிரீடத்துடன் ப்ரகாஶிப்பவரும், பூர்ண சந்த்ரன் (முழுநிலா) போன்ற

அழகிய ரத்நம் பதித்த குண்டலங்களால் அலங்கரிக்கப் பட்டவரும், எட்டு திருக்கரங்களுடனும், சிவப்பு வஸ்த்ரம் அணிந்தவரும், ஶங்கம், சக்ரம், கதை, ஶார்ங்கம் (வில்), உலக்கை போன்ற உத்தமமான ஆயுதங்களுடன் மற்றும் பாஶக் கயிறு, ஈட்டி, தாமரை இவற்றுடன் கூடியவரும், பகைவர்களுக்குப் பயத்தைக் கொடுக்கும் ஆயுதங்கள் ஏந்தியவரும், உத்தமமான மாலைகள் வஸ்த்ரங்கள் தரித்தவரும், திவ்ய சந்தநம் பூசப்பட்டவரும், தோள்வளை, கைவளை, ஒட்டியாணம், தண்டை இவற்றுடன் கூடியவரும், மற்ற பல வித ஆபரணங்களோடு விளங்குபவரும், தாமரை ஆஸநத்தில் வீற்றிருப்பவரும், மந்திரிகள் அனைவருக்கும் அபயம் தருபவரும், இப்படிப்பட்ட எம்பெருமானை த்யாநித்து யோகம் செய்பவன் அனைத்துப் பாபங்களிலிருந்து விடுபடுவான்.

### ஸமாதி விளக்கம்

ஆகையால் இவ்வாறு சொன்ன வகையால் த்யாநத்தின் தொடர்ச்சியால், உண்டு பண்ணப்பட்ட சிறப்பை உடைய அந்த ஆதாரத்தை மட்டும் பற்றிய தோற்றத்தை யோகிகள் ஸமாதி என்று சொன்னார்கள்.

### ஸமாதியிலிருப்பவன் மஹிமையின் வர்ணனை

பிறகு ஸமாதியை ஏற்றுக் கொண்டு ஆதாரமான விஷயமாக தந்மயீபாவத்தைப் பெற்றவன், விஶேஷமான ஶக்தியோடு கூடிய அந்த ஆதாரத்தின் எல்லாவிதமான மஹிமைகளை அநுபவிப்பான். இப்படிப்பட்ட மஹா மஹிமை உடையவனுக்கு அணிமா முதலிய எல்லா குணங்களும் ஏற்படுகின்றன. (அணிமா, மஹிமா, கரிமா, லகிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈஶித்வம், வஶித்வம் என்பது எட்டு வகை. இந்த எட்டு வகை ஸித்தியைப் பற்றி முன்பே கூறியுள்ளதைக் காண்க). இப்படிப்பட்ட மஹிமை வாய்ந்தவன் விரோதிகளுடைய ஸேனைகள் எத்தனை இருந்தாலும், இவன் துணையின்றி அவைகளை ஸுதர்ஶந சக்ரம் அஸுரர்களையும் ராக்ஷஸர்களையும் அழிப்பது போல்

அழித்து விடுவான். இப்படிப்பட்டவனுக்கு விரும்பிய பொருள்கள் எல்லாம் தானாகவே கிடைக்கும். ஸித்தர்கள், வித்யாதரர்கள், யக்ஷர்கள் எல்லோரும் இவனுக்கு அடிமை ஆவார்கள். தேவர்கள், ருஷிகள், கந்தர்வர்கள், அப்ஸர ஸ்த்ரீகளின் கூட்டங்கள், பிஶாசர்கள், நாகர்கள், அரக்கர் எல்லோரும் அவரிட்ட கட்டளைப்படி நடப்பார்கள். ஸகல உலகங்களுக்கும் படைத்தல், காத்தல், அழித்தல் இவற்றுக்குச் சக்தி படைத்தவனாகவும், எல்லாவற்றையும் அறிந்தவனாகவும், எல்லாவற்றையும் பார்ப்பவனாகவும், எல்லா ஶக்திகளும் கிடைக்கப் பெற்றவனாகவும் ஆகிறான். விரும்பிய பல உருவங்களை எடுப்பவனாகவும், அஸுரர்களையும், அரக்கர்களையும் அழித்தும் எந்த வகைப் பரிவாரமற்றவனாக இருந்தும், தன் விருப்பம் எல்லாம் நிரம்பப் பெற்றவனாக இருப்பான்.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர நஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்**, நாடி ஶுத்தி,
வாயு, யோகாங்கப்ராணாயாமாதி நிரூபணம் என்கிற 32வது
அத்யாயம் முற்றும்.



# மணிமேகரன் வரலாறு

# 33 வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி॥
(விளக்கம் 18 வது அத்யாயத்தில் உள்ளது)

### சொல்லப்பட்ட விஷயங்களை நினைவு கூறுதல்

**நாரதர்:-** ஸ்வாமிந்! ஆத்மஸ்வருபம், குணங்கள், பரிவாரங்கள், மந்த்ரங்கள் எல்லாம் சொல்லப்பட்டன. ஆயுதங்கள், அஸ்த்ரங்கள், தேவதைகள், ஶக்திகள், மண்டலங்கள், பல வகைத் தாமரைப் பூக்கள் இவைகளோடு கூடிய தந்நிகரற்ற, ஸுதர்ஶநத்தின் (மந்த்ரத்தின்) ஸ்வரூபம் சொல்லப்பட்டது. எல்லா ப்ராணிகளுக்கும், நான்கு வர்ணங்களுக்கும், குறிப்பாக க்ஷத்ரியர்களுக்குக் காப்பாக இந்த யந்த்ரம் சொன்னீர்கள், ஸர்வேஶ்வரனே!

### ஸுதர்ஶநத்தின் மஹிமையைப் பற்றி மூன்று வகையான கேள்விகள்

இந்த மந்த்ரராஜனுடைய பெருமை மூன்று சொல்லப்பட்டன. சக்ரத்தின் வடிவத்திலிருக்கும் பகவான் விஷ்ணுவின் மஹிமையா இது? ஸுதர்ஶநத்தின் ந்ருஸிம்ஹனுடையதா? பரிவாரங்களால் ஏற்பட்டதா? எம்பெருமானே! தேவரீர் எல்லாம் அறிந்தவராக இருப்பதால் இந்த ஸந்தேஹத்தை நீக்கி அருள வேண்டும்.

### விரிவாகவே அதற்கு விடை தொடக்கம்

**அஹிர்புத்ந்யர்:-** தேவர்ஷியே! ஸுதர்ஶநத்தின் பெருமை சுருக்கமாக என்னால் சொல்லப்பட்டது. இதன் விரிவைச் சொல்கிறேன், கேளும். மஹான்கள் அனைவரும் பரிவாரமாக இருத்தலே அந்த மஹிமை. அது இவருக்கு இல்லாவிட்டால் பரிவாரங்களால் சூழப்பட்டிருக்கும் நிலைமை இவருக்கு வராது. (குறிப்பு: இங்கு ஒரு உதாரணம். காளிதாஸன் ஶாகுந்தலத்தில் (அங்கம்7- ஶ்லோகம் 4)

ஸித்யந்தி கர்மஸு மஹத்ஸ்வபி யந்நியோஜ்யா:
ஸம்பாவநாகுணமவேஹி தமீஶ்வராணாம் ।
கிம் வா அபவிஷ்யதருணஸ்தமஸாம் விபேத்தா
தம் சேத் ஸஹஸ்ரகிரண: துரி நாऽகரிஷ்யத் ? ॥

ஸூர்யனுக்கு முன் அருணன் தேர்ப்பாகனாக இருக்கிறான். ஸூர்யன் உதிக்கும் முன்பே **அருணோதயம் ஆகிவிட்டது - இருள் அகன்று விட்டது** என்று எல்லோரும் பேசி அருணனுக்குப் பெருமை சேர்க்கின்றனர். ஆனால் இங்கு மஹாகவி **காளிதாஸன்** என்ன சொல்கிறான் கேளுங்கள்! ஸூர்யன் அந்த அருணனைத் தனக்கு முன் உட்காரவைக்காமலிருந்தால் இந்தப் பெருமை அவனுக்கு வந்திருக்குமா? ஆகையால் அருணனுக்கு வரும் பெருமை ஸூர்யனைச் சார்ந்தது என்கிறான். (இவ்வாறு அறிவாளிகள் சொல்வது போல் ஸுதர்ஶநத்துக்கு வரும் பெருமை எம்பெருமானையே சார்ந்தது). ஆகையால் அசையும் பொருள் அசையாப் பொருள் உருவத்திலிருக்கும் உலகமே சக்ரமயம். ஆதியும் அந்தமுமில்லாத சக்ரஸ்வரூபத்திலுள்ள காலத்தைப் பற்றி முதலில் சொல்கிறேன், கேளும்.

**கால சக்ர ஸ்வரூபத்தின் விளக்கம்**

மூன்று நாபிகளுடனும், ஆறு வட்டைகளுடனும், ஐந்து ஆரங்களுடனும் கூடிய எந்த விதச் சிதைவுமற்ற சக்ரம் ஸம்வத்ஸர உருவமாய்க் **கால சக்ரம்** என்று சொல்லப்படுகிறது.

**எல்லாம் கால சக்ரத்துக்கு வஶப்பட்டது**

உயிருள்ளவை, உயிரற்றவை என்கிற இந்த உலகம் அதற்குக் கட்டுப் பட்டிருக்கிறது.

**எம்பெருமான் கால சக்ரத்தைச் சுற்ற வைத்தல்**

பகவான் சக்ரத்தின் வடிவத்தை ஏற்றுக் கொண்டு சுற்ற வைக்கிறார்.

**ஜகத் சக்ரத்தின் விளக்கம்**

**அவ்யக்தம்(ப்ரக்ருதி)** முதலாகப் பஞ்ச மஹாபூதங்கள்

வரை உள்ள தத்வங்களுடைய உருவங்கள் 24 எண்களோடு கூடிய ஆரங்களோடு கூடிய ஜீவனை வட்டையாகக் கொண்டது ஜகத் சக்ரம் என்று கூறப்படுகிறது.

**பரமாத்மா அதை இயக்குகிறுர்**

ஜகத் சக்ரம் என்று கூறப்பட்ட இதை ஸுதர்ஶநம் தானே இயங்க வைக்கிறுர்.

**நாபி சக்ரத்தை இயக்குபவர் பரமாத்மா**

ஜீவனுடைய சரீரம் 12 ஆரங்கள் கொண்ட நாபி சக்ர வடிவமாக உள்ளது. அந்த ஶரீரம் சக்ர வடிவத்திலிருக்கும் அவரால் இயக்கப்படுகிறது.

**பரமாத்மா எல்லாவற்றையும் இயக்குகிறார்**

உற்பத்தியும் நாஶமுமற்ற பகவான் விஷ்ணு, ஸ்ரீமான்- (லக்ஷ்மியுடன் கூடியவர்) ஸுதர்ஶந வடிவத்திலிருந்து கொண்டு எல்லாவற்றையும் இயக்குகிறார்.

**உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல்**

ஞாநம், ஶக்தி முதலிய ஆறு குணங்களுடன் கூடிய ஸ்வரூபத்துடன் உள்ள பகவான் ஸகல ஜகத்தையும் படைப்பவர், காப்பவர், அழிப்பவர்.

**ஶிவன் உருவத்தில் ஆராதிக்கப்படுபவரும் அவரே**

ஶைவர்களால் **ஶிவன்** என்கிற உருவத்தில் ஆராதிக்கப்படுபவர், அந்த ப்ரபு பகவான் **நாராயணனே.**

**ப்ரம்மாவின் உருவமும் அவரே**

அவரே **ப்ரம்மாவின்** உருவத்தில் அனைத்து உலகங்களைப் படைக்கிறார்.

**தன் உருவத்தில் காக்கிறார்**

அந்த ஜநார்தநன் **விஷ்ணுவின்** உருவத்தில் இருந்து கொண்டு இந்த உலகத்தைக் காக்கிறர்.

**ருத்ர வடிவமும் அவரே**

அவரே **ருத்ர** வடிவத்தில் இந்த உலகங்கள் அனைத்தையும் அழிக்கிறார்.

**புத்தர் உருவமும் அவரே**

பௌத்தர்களுக்கு உலகத்தில் புத்தர் வடிவத்தில் இருக்கிறார்.

**திகம்பர மூர்த்தி அவரே**

அவரே திகம்பரர் உருவத்தில் சாம்பரர்களுக்கு இருக்கிறார்.

**ஜிநர் அவரே**

சார்வாக மதத்தின் ஜிநேஶ்வரரும் அவரே.

**ஸுதர்ஶநத்தின் யக்ஞபுருஷ உருவம்**

அவரே யாகம் செய்பவர்களுக்கு யக்ஞ புருஷர் என்கிற வடிவத்தில் இருக்கிறார். **மீமாம்ஸா** ஶாஸ்த்ரம் எழுதியவர்களால் அவரே உபாஸிக்கத் தக்கவராகக் குறிப்பிடப்படுகிறார்.

**கபில மதத்திலும் அவரே**

இவரே கபில மதத்தினரால் **புருஷன்** என்று கூறப்படுகிறார். **மற்ற உருவங்களைக் காட்டிலும் ஸுதர்ஶநம் உருவம் ப்ரியமானது. ஸ்ரீ ஹரி ஜநார்தநன்** அந்த உருவத்தில் தேவர்களுக்குப் பூஜிக்கத்தக்கவராக இருக்கிறார். அவர்கள் விரும்பியது எல்லாம் அவரால் கொடுக்கப்படுகிறது. தேவர்களையும் சக்ரவடிவத்தில் இருந்து கொண்டு ஸந்தோஷப்படுத்துகிறார்.

**அதற்குக் காரணம் கூறுகிறார்**

பக்தர்களைக் காப்பதற்கும், எதிரிகளை அழிப்பதற்கும் பகவான் ஸுதர்ஶந மயமான உருவத்தையே தரிக்கிறார். மஹர்ஷியே! என் மீது பக்தி கொண்டவன் என்பதால் இந்த ரஹஸ்யத்தைச் சொன்னேன்.

**இங்கு சரித்ரம் உதாரணமாகக் காட்டப்படுகிறது**

தேவர்ஷியே ! முன் காலத்தில் நடந்த ஒரு விஷயத்தைச் சொல்கிறேன், கேளும். **துர்தர்ஷன்** என்கிற ஒரு ராஜர்ஷி **ப்ரஹ்ம கந்த**ருடைய குமாரன். அவன் தார்மிகன், மிகுந்த பராக்ரமஶாலி. **நைஶாஶாகம்** என்கிற பட்டணத்தில் வஸித்து

வந்தான். ஏழு த்வீபங்களோடு கூடிய பூமண்டலத்தைத் தர்மத்துடன் (நேர்மையாக) ஆண்டு வந்தான். அவனுக்கு மிகவும் ஸௌந்தர்யமுள்ள **வத்ஸலா** என்கிற மனைவி இருந்தாள். அவள் இவருடன் சேர்ந்து **மணிசேகரன்** என்கிற பிள்ளையைப் பெற்றெடுத்தாள். அந்த மணிசேகரனும் முதல் நிலை (குழந்தைப் பருவம்) தாண்டி அழகிய சரீரத்துடன் சூரனாக, கல்வி அனைத்தையும் பெற்றவனாக, பகைவர்களை வெல்பவனாக இருந்து வாலிபம் அடைந்தவனாய் பாக்யசாலியாய் **ப்ராசீ** என்பவளை மணந்து கொண்டான். எல்லா உலகங்களுக்கும் அரசனாக இருக்கத் தகுதி பெற்ற இந்தக் குமாரனை அந்த ஊரில் அரசாட்சி செய்ய அமைத்துவிட்டு, துர்தர்ஷன், தவம் செய்யக் காநகம் சென்றான். மணிசேகரனும் கடல் சூழ்ந்த மண்ணுலகத்தைத் தன் தந்தை போல் காத்து வந்தான். மஹாத்மாவான அவனுக்கு ப்ராசீயிடம் 7 பிள்ளைகள் பிறந்தனர். மணிசேகரன் அனைத்து பூவுலகத்தையும் காத்துவந்த போது எல்லா உயிர்களுக்கும் பயத்தைத் தருபவனும், பலசாலியும், நான்முகனிடம் வரம் பெற்றவனுமான விகடாக்ஷன் என்பவன் இருந்தான். அந்தப் பெரிய அஸுரனால் இந்தப் பூவுலகம் அனைத்தும் தொல்லைக்கு ஆளாக்கப்பட்டது. அவன் குமாரர்களாலும் பேரன்களாலும், கொள் பேரன்களாலும், உலகமெல்லாம் நிரம்பியிருந்தது. மிகவும் பயங்கரமான அந்த அஸுரர்கள் அனைத்து உயிரினங்களையும் வதைத்து வந்தனர். விகடாக்ஷனால் கட்டளையிடப்பட்ட பயங்கர உருவத்துடன் கூடிய அவர்கள் மிகவும் வேகமாகச் சிலரை ஓடச் செய்தனர். மற்றும் சிலரைக் கொன்றனர். மதியில் சிறந்த மஹர்ஷியே ! அந்தணர் செய்யும் யாகங்களுக்கு அழிவு கொடுத்து வந்தனர். ஆங்காங்கே ஆச்ரமங்களில் வஸித்து வந்த நான்கு வர்ணத்தைச் சேர்ந்தவர்களுடைய அவரவர்களுக்குத் தக்கபடி விதிக்கப்பட்ட நற்கார்யங்களை அழித்து வந்தனர். பெரிய அஸுரனான விகடாக்ஷன் உலகத்தில் இருக்கும் ரத்நங்களையும், மிகுந்த தநங்களையும் தனக்கே கொடுக்கும்படிக் கட்டளையிட்டான். துராத்மாவான அவனால் பீடிக்கப்பட்ட

மக்கள் அனைவரும் இந்தச் செய்தியை அரசன் மணிஶேகரனுக்குத் தெரிவித்தனர். தாமரை போன்ற கண்களையுடைய அரசன் சீறி எழுந்து மஹா அஸுரனான விகடாக்ஷனுடன் போர் செய்யத் தீர்மானித்தான். ஸேனைகள் அனைத்தையும் அழைத்துத் தயார் செய்தான். அவனுடைய ஏற்பாட்டைப் பார்த்து மந்த்ரிகள் அனைவரும் ஒன்று கூடி அரசனிடம் ஸேனைகளுடன் போர் புரிவதால் மட்டும் அந்த அஸுரன் கொல்லப்பட முடியாதவன் என்பதைத் தெரிவித்தனர். மேலும் அந்த அஸுரன் முன்பு தன் தவத்தால் மகிழ்விக்கப்பட்ட **ப்ரஹ்மதேவ**னிடம் பின் வரும் வரம் கேட்டான்- ''என்னை எந்தப் பகைவர்கள் எதிர்த்துப் போர் புரிய வருகிறார்களோ, அவர்களால் நான் கொல்லப்படாமல் இருக்க வேண்டும்'' என்று. 'அப்படியே ஆகட்டும்' என்று அவர் சொன்னவுடன் விகடாக்ஷன் மிகவும் கர்வம் கொண்டு தன்னை எதிர்த்து வரும் பகைவர்களால் கொல்லப்படாமல் இருந்தான். ஆகையால் நீங்களும் இப்பொழுது அவனுக்கு எதிராகச் செய்யும் ஏற்பாடுகளை நிறுத்திக் கொள்ளுங்கள் என்று சொன்னார்கள். மந்திரிகளால் சொல்லப்பட்ட விஷயங்களை அரசன் கேட்டுப் போர் ஏற்பாடுகளிலிருந்து ஓய்ந்தான். பிறகு அரசன் மிகவும் சிறந்தவரான க்ரது என்கிற புரோஹிதரை அழைத்து, மந்த்ரங்களை அறிந்த அவருடன் மந்த்ராலோசனை செய்தான். விகடாக்ஷனுடைய அனைத்து வரலாற்றையும் உள்ளபடி உரைத்து, எதிரிகளால் அவன் கொல்லப்படமுடியாது என்கிற நிலையைச் சொல்லி, ''ஸ்வாமிந் ! அந்தப் பலஶாலியை எந்த வழியில் நாம் ஜயிக்கலாம்? நம் மக்கள் அனைவரும் நிம்மதியாக இருக்கத் தகுந்த உபாயத்தைச் சொல்லுங்கள்'' என்றான். இவ்வாறு அரசனால் கேட்கப்பட்ட அந்தப் புரோஹிதர் வெகு நேரம் ஆலோசித்து மணிஶேகரனிடம் பின் வருமாறு கூறினார்- ''வரத்தினால் கர்வம் கொண்டிருக்கும் அவன் ஜயிக்க முடியாதவன், இது உண்மைதான். ஆறு குணங்கள் நிரம்பப் பெற்றவரும், ஶங்கு, சக்ரம், கதை இவைகளைத் தரித்தவரும், நீருண்ட மேகம் போன்ற நிறத்தவரும், தாமரை போல் நீண்ட கண்கள் உடையவரும், அளவிட முடியாதவரும்,

உலகங்களுக் கெல்லாம் அதிபதியும், பக்தர்களின் கஷ்டங்களைப் போக்குபவரும், உயர்ந்த நற்குணங்கள் நிரம்பியவரும், அஸுரர் கூட்டங்களை அழிக்க வல்லவருமான மஹாவிஷ்ணுவைத் தவிர இவ்வுலகில் அவனுக்கு நிகரான வேறு உபாயம் எதுவும் இல்லை. ஆகையால் ''அரசே ! சக்ர உருவத்தில் இருப்பவரும் பக்தர்களைக் காப்பதற்கு வ்ரதம் கொண்டவருமாகிய அந்த விஷ்ணுவை எல்லா விதத்திலும் ஶரணமாக அடைவாயாக. அவரை எப்படி அடைவது என்பதற்கு வழியை முனிவர்களுள் சிறந்த **துர்வாஸர்** அறிவார். அவருடைய அநுக்ரஹத்தினால் அந்த அஸுரனை எல்லா விதத்திலும் அழிக்க முடியும். எல்லா ப்ராணிகளுக்கும் பயங்கரமாக விளங்கும் அவரிடம் இப்பொழுதே செல்வாயாக'' என்றார். பரமதார்மிகனான அரசன் ''அப்படியே'' என்று தீர்மானித்து அந்தப் புரோஹிதருடன் அந்தப் பட்டணத்திலிருந்து புறப்பட்டான். ஹிமாலயத்தின் உச்சியில் தபஸ் செய்பவரும், இரண்டு வெளுப்பான மரவுரிகளை அணிந்திருப்பவரும், வெண்மையான யஜ்ஞோபவீதம் தரித்தவரும், ஜடாமுடியையும், மாந்தோலையும் அணிந்தவரும், ஶாந்தமானவரும், எரியும் அக்னிக்கு ஸமமானவரும், ஆகிய அந்த மாமுநிவரைப் புரோஹிதருடன் அரசன் சென்றடைந்தான். மாமுநிவர் அந்த துர்வாஸர், அரசனையும் புரோஹிதரையும் பார்த்து அவர்களை முறைப்படி வரவேற்று உபசரித்து நல்வரவு கூறினார். ''வநங்களால் சூழப்பட்ட இந்த இடத்துக்கு எதற்காக வந்திருக்கிறீர்கள்? உங்கள் இருவரையும் ப்ராஹ்மண தர்மமும், க்ஷத்ரிய தர்மமும் உருவெடுத்து வந்திருப்பதாக நினைக்கிறேன். நீ **ப்ரஹ்மகந்தருடைய** குமாரனான **மணிஶேகரன்** என்று அறிவேன். ஏழு தீவுகள் கொண்ட இந்தப் பூமண்டலம் உன் ஆட்சிக்கு உட்பட்டது என்று கேட்டிருக்கிறேன். உன்னுடைய அங்கம் முதலிய எல்லா தர்மங்களும் குறைவற நடந்து வருகின்றனவா? அரசனே! மக்களை அவரவர் தர்மத்தில் ஈடுபட வைத்துக் காத்து வருகிறாயா? இந்த **க்ரது** என்பவரைப் புரோஹிதராகப் பெற்றிருக்கும் உனக்கு எது தான் கிடைக்காது?

அங்கங்களோடு கூடிய அனைத்து வேதங்களையும் அறிந்தவராகவும் முனிவர்கள் அனைவரிலும் சிறந்த முனிவரும், ஶமம், தமம் (மநத்தையும் வெளி இந்த்ரியங்களை அடக்கியவரும்) எல்லா வகையிலும் தூய்மை பெற்றவரும், ப்ரஹ்ம தேஜஸ் மிகுந்தவரும், ப்ரியமாகவும், ஹிதமாகவும் பேசுபவரும், தான் ஏற்ற வ்ரதங்களை மந வஸதியுடன் நடத்துபவரும், தர்மத்தை அறிந்தவரும், அனைத்து ஶாஸ்த்ரங்களையும் கற்றுணர்ந்தவரும், எல்லாக் கார்யங்களிலும் திறமை மிக்கவரும், விதிக்கப்பட்ட கர்மாக்களைத் தானே செய்து வருபவரும், ஒழுக்கம் மிக்கவரும், எப்பொழுதும் வேள்விகள் செய்து வைப்பவரும், எந்த விதத் தீய குணம் இல்லாதவரும், இரக்கம் மிகுந்தவரும், அனைவரிடமும் ஸமமான நோக்குடையவரும், பக்தியில் சிறந்தவரும், ஸ்வதர்மத்தைக் குறைவரச் செய்து வருபவரும், பரந்த மனம் உடையவரும், போதும் என்கிற மனம் உடையவரும், அரசர்களால் மதிக்கப்பட்டவரும், பலராலும் விரும்பப்படுபவரும், எப்பொழுதும் எம்பெருமான் புருஷோத்தமனிடம் பக்தி உள்ளவரும், ஷண்மதங்கள் எனப்படும் ஆறு மதங்களைச் சேர்ந்த தர்மங்களை அறிந்தவரும் (**வைணவம், ஶாக்தம், ஶைவம், காணாபத்யம், கௌமாரம், ஸௌரம்** இவற்றில் **கௌமாரம்** - என்பது முருகனையும், **ஸௌரம்** என்பது ஸூர்யனையும் உயர்வாகப் பேசும் மதம்) ராஜ நீதிகளைக் கற்றறிந்தவரும், தயை உடையவரும், நற்பெருங்குடியில் பிறந்தவரும், நல்ல ஸித்திகள் பெற்றவரும், அனைத்து மந்த்ரங்களையும் அறிந்தவரும், மற்ற பல நற்குணங்கள் பெற்றவரே, புரோஹிதர் என்று கருதப்படுகிறார். இந்த க்ரது இப்படிப்பட்டவர். இவரே தேவ குரு **ப்ருஹஸ்பதி** என்று சொல்லலாம். அரசே! இவர் மூலம் எல்லா கார்யங்களையும் நீ செய்யக் கடவாய். ஆனாலும் சில பகைவர்களால் தோல்வியுற்றவன் போல் நீ வந்திருக்கிறாய். அரசே! நீ வந்த காரணம் என்ன? எல்லாவற்றையும் சொல்''. இவ்வாறு பேசி அந்த முனிவர் முடித்துக் கொண்டார். பிறகு முனிவர்களில் சிறந்த **க்ரது துர்வாஸரிடம்** பேசலுற்றார். ''மொத்தமாகச்

சொன்னால் நாங்கள் வந்தது அரசனின் கார்யமாகவே. துராத்மாவான விகடாக்ஷனால் இவருடைய ராஜ்யம் தொல்லை கொடுக்கப்பட்டிருப்பதையும், இந்த அரசனுக்குப் பகைவர்களை வெற்றி கொள்ளமுடியாமையையும், அஸுரன் பலத்துடன் இருப்பதும், நான்முகனிடமிருந்து வரம் பெற்றதையும், அவன் வம்ஶபரம்பரை எங்கும் பரவியிருப்பதையும், இவ்வாறாக உலகத்தவரால் பழிக்கத்தக்க அந்த அஸுரனுடைய செயல்கள் உள்ளன என்றார். அவரை நமஸ்கரித்து மேலும் கூறினார். ''அவனை வெல்வதற்கு வழியைக் கூற வேண்டும். தேவரீரை இந்த அரசன் ஶரணமடைகிறான். தர்மங்களில் மிகுந்த பற்றுடைய இந்த அரசனைத் தேவரீரே காத்தருள வேண்டும். ருஷியே! இவனால் இந்த உலகங்கள் காப்பாற்றப்பட்டு வந்திருக்கின்றன'' என்றார். இவ்வாறு சொல்லி நமஸ்காரம் செய்து எதிரில் நிற்கும் இருவரையும் மிகுந்த கருணையுடன் கடாக்ஷித்து துர்வாஸ முனிவர், **ஸுதர்ஶநத்தைத்** தேவதையாகக் கொண்ட ஆறு அக்ஷரங்களோடு கூடிய, **தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம்** என்கிற நான்கு வகைப் புருஷார்த்தங்களைத் தரவல்ல உத்தமமான மந்த்ரத்தை அவர்களுக்கு உபதேஶித்தார். இந்த ஸாதநத்தைக் கொண்டு உன் புரோஹிதரால் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள். ஏனெனில், புரோஹிதரே அரசர்களுக்கு உலக வழிபட்டதும், மறுமையில் கிடைக்கவல்ல பலன்களைக் கொடுக்கவல்லதும், **ஸுதர்ஶந** தேவனை ப்ரதிஷ்டை செய்து ஆராதநம் (பூஜை) செய்கையில் புரோஹிதருடைய குற்றத்தால் தீய பலன்கள் ஏற்படுவதும், அவ்வாறே புரோஹிதர் செய்யும் கார்யங்களில் சிறப்புகளும், நற்பலன்களும் ஏற்படுகின்றன. மற்ற பரிவாரமாக உள்ள புரோஹிதர்களின் கார்யமும், இவருடைய கார்யமும் இவரே செய்ய வேண்டும். இவ்வாறு அவ்விருவருக்கும் சொல்லிவிட்டு முன் காலத்தில் நடந்த சரித்ரத்தை மஹாமுநிவரான **துர்வாஸர்** சொன்னார். ஷாட்குண்ய பரிபூர்ணரான **புருஷோத்தமன்** வராஹ உருவத்தை ஏற்றுக் கொண்டு வராஹ கல்பத்தில் நீரிலிருந்து பூமியை மேலே கொண்டு வந்தார். அப்பொழுது நாயகனான

பகவானிடம் பூமி தேவி மிகவும் ஸந்தோஷம் கொண்டு கேட்டாள் ''உலகங்களுக்கு அதிபதியான பகவானே ! தேவரீருக்குப் பிடித்த வராஹ உருவத்தை ஏற்றுக் கொண்ட தேவரீர் பக்தர்களுடைய ஸந்தோஷத்துக்காக பூமண்டலத்தில் இந்த வடிவத்துடனேயே இருக்க வேண்டும். இவ்வாறு அந்தப் பூமி தேவியால் ப்ரார்த்திக்கப்பட்ட பகவான் அன்று முதல் **ஸாலக்ராமம்** என்கிற பெயருடைய பூமியின் பாகத்தில் வஸித்து வருகிறார். ஸுதர்ஸந வடிவத்துடன் கூடியவராய் ஸ்ரிய:பதியான பகவான் பக்தர்களிடம் கருணை கொண்டு இப்பொழுதும் அந்த தேஸத்தின் பெருமையாலும், பக்தர்களிடம் உள்ள க்ருபையாலும், பூமி தேவியின் ப்ரார்த்தனைக்கு இணங்க அங்கு வஸித்து வருகிறார். இங்குசெய்யப்படும் தவம் எதுவானாலும் அது ஆயிரம் மடங்காக மாறும். அங்கே மனிதர்களோ, கால் நடைகளோ, புழுக்களோ பறவைகளோ, எவை மரணமடைந்தாலும் அவை சங்கினாலும், சக்ரத்தினாலும் சிந்நம்(அடையாளம்) உடையவைகளாக அமைகின்றன. இது நிச்சயம். புண்டரீகாக்ஷனான **ஸ்ரீ ஹரி** ஸுதர்ஸந வடிவத்தைத் தரித்தவராய்ப் பல நல்ல மங்களமான குணங்களுக்குக் கடல் போல எப்பொழுதும் ஸாந்நித்யம் செய்கிறார். அந்த தேஸத்தில் வஸிக்கும் தேவர்களும், மனிதர்களும், பஸு, பக்ஷிகளும், மரங்களும், மலைகளும் எல்லாம் சக்ரத்தைச் சிந்நமாக உடையவர்களாய் இருப்பார்கள். ஸரஸ்வதி நதியின் புனிதமான கரையில் **ஸாலக்ராம** க்ஷேத்ரத்தில் சக்ர உருவத்திலிருக்கும் **ஜநார்தநனை** முன் சொன்ன முறையிலேயே வழிபட்டு அவருடைய அநுக்ரஹத்தால் நீ தீய செயல்கள் செய்து வரும் பகைவர்களை ஜயிப்பாய். பிறகு ஸத்ருக்கள் இல்லாத இந்த பூமியை முன்போல் காத்து வருவாய்'' என்று சொன்னார். இவ்வாறு முனிவர்களுள் சிறந்த **துர்வாஸர்,** புரோஹிதருடன் சேர்ந்து இருக்கும் அரசனிடம் சொல்லி முடித்தார். பிறகு அரசனும் புரோஹிதரும் அவரை வணங்கி விட்டு வெற்றி தரும் விமானத்தில் ஏறி **நைஸாஸாகம்** நகரத்துக்குச் சென்றனர். பிறகு **ஸாலக்ராமம்** சென்று வேண்டிய எல்லா உபகரணங்களையும் எடுத்துக் கொண்டு

புரோஹிதருடன் சக்ர உருவத்திலிருக்கும் ஜநார்தநனே மந்த்ரங்களால் வழிபட்டான். அந்த அரசன் அர்ச்சனைகளாலும், ஜபங்களாலும் த்யாநத்துடனும் மிகுந்த பக்தியுடனும் பகவானை ஒரு மாதம் மகிழ்வித்தான். அப்பொழுது சக்ர உருவத்தில் உள்ளவரும், கதை, உலக்கை, சங்கு, சக்ரம், வில், பாசக் கயிறு, ஈட்டி, தாமரை இவைகளை உத்தமமான எட்டு திருக்கரங்களால் தரித்துக் கொண்டு, மஞ்சள் திருக்கண்களுடன், மேல் நோக்கிய பழுப்பு நிறச்சடைகளுடன், சிவந்த நிறத்துடன், மிகுந்த தேஜஸ் நிரம்பியவராய், கோரைப் பற்களால் பயங்கரமான திருமுகத்துடன் தாமரை ஆஸநத்தில் வீற்றிருப்பவராய், சிவப்பு வஸ்த்ரம் தரித்துக் கொண்டு, ஒளி மிகுந்தவராகவும், அனைத்துத் திருவாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, மார்பில் அழகிய மாலை அணிந்தவராகவும் புன்முறுவலுடன் காட்சி தந்தார். பகவானின் மார்பிலிருந்து, அனைத்து மக்களின் கண்பார்வைகளை மங்கவைத்துக் கொண்டு ஆகாயத்தில் தோன்றும் வட்டவடிவமான மின்னல் போல் ஒளியுடைய சக்ராயுதம் தோன்றிற்று. முதலில் ஒன்று, பிறகு பத்து, அதன் பிறகு நூறு, ஆயிரம், பத்தாயிரம், லக்ஷம், கோடி என்று ஆகாயம் அனைத்தும் பலவிதமான சக்ரம் நிரம்பியதாக, பயங்கரமாக நிரம்பிவிட்டது. அந்த ஸுதர்ஶநம் விகடாக்ஷன் என்கிற அஸுரனை உற்றார், உறவினர்களுடன் ஒரே ஸமயத்தில் கொன்று எதிரிகள் எவருமில்லாமல் நின்றிருந்தது. பிறகு சிறிது நேரத்தில் பறந்து சென்று விட்டது. எங்கும் பரவிய புகழுடன் மணிசேகரன் கடல் காடுகளுடன் கூடிய தன் ஆட்சிக்குட்படுத்தப்பட்ட எல்லா தீவுகளுடன், பட்டணங்களுடன் இந்த மாநிலத்தை, இந்திராணியின் கணவன் இந்திரன் ஸ்வர்கலோகத்தை ஆண்டதுபோல் ஆண்டு வந்தான்.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** மணிசேகர
உபாக்யாநம் என்கிற
33வது அத்யாயம் முற்றிற்று.

★ ★ ★

# அத்தியாயம் 34

## வாசகர்கள் கவனிக்கவும்

அத்யாயங்கள் 34, 35 இவைகளுக்குப் பொருள் சரியாக விளங்காமையால் பல பண்டிதர்களைக் கேட்டபோது பாஞ்சராத்ர ஆகமம் தெரிந்த பண்டிதர்களுக்குத்தான் தெரியும் என்றார்கள். அப்படிப்பட்ட ஒரு பண்டிதருக்கு எழுதியும், வேறு வகைகளில் முயற்சி செய்தும் சரியான பலன் கிடைக்கவில்லை. ஆகையால் இந்த இடத்தைக் காலியாக விடக் கூடாது என்பதால் மூல ஶ்லோகங்கள் மட்டும் எழுதப்பட்டிருக்கின்றன.

★ ★ ★

ब्रह्मास्त्रादिमन्त्रस्वरूपनिरूपणं नाम चतुस्त्रिंशोऽध्यायः

ध्यातं सकृद्भवानेककोट्यघौघं हरत्यरम्।
सुदर्शनस्य तद्दिव्यं भर्गो देवस्य धीमहि ।।

***

ब्रह्मास्त्रादिमन्त्रस्वरूपप्रश्नः

***

नारदः - भगवन् ! सर्वधर्मज्ञ ! सर्वलोकनमस्कृत ! ।
उक्तं चक्राद्विनिष्क्रान्तमस्त्रजातमिह प्रभो ! ।। १

तेषां स्वरूपं मन्त्राणां सर्वेषां वक्तुमर्हसि ।
विना त्वां न हि पश्यामि वेत्तारं कमपीश्वर ! ।। २

तदुत्तरकथनाय तेषां गुह्यतमत्वाख्यानम्

अहिर्बुध्न्यः -

महर्षे ! यत् त्वया पृष्टमेतत् गुह्यतमं परम् ।
सुदुर्लभमनाख्येयं कस्मैचित् सर्वसाधकम् ।। ३

तथापि तव वक्ष्यामि भक्तोऽसीति महामुने ! ।
त्वयाप्येतन्न दातव्यं सुरासुरसमर्चितम् ॥ ४

## १. ब्रह्मास्त्रम्

फान्तं वह्निसमायुक्तं व्योम हालासमन्वितम् ।
मेषद्वयं दन्तयुतं हालाहलमतः परम् ॥ ५

घनाद्यं वायुपूर्वं च दन्तयुक्तमथाऽन्तिमम् ।
सरसं चर्क्षपर्यायिं भान्तं भृगुमतः परम् ॥ ६

अम्बरं वायुसंयुक्तमरिमर्दनमप्यतः ।
प्रदीप्तं अथ वक्तव्यं परमं च पदं ततः ॥ ७

तत्ते पदे प्रयोक्तव्ये गायत्र्या मध्यमं ततः ।
पदत्रयं प्रयोक्तव्यं एतत् ब्रह्मास्त्रमीरितम् ॥ ८

## २. दण्डचक्रम् ।

जीवः पञ्चमवर्गादिश्चतुर्थाद्योऽन्तिमान्वितः ।
भृगुः सदीर्घो दण्डाद्यो मेषो यष्टचपराह्वयः ॥ ९

आत्मने च पदं तत्र चक्रायेति पदं ततः ।
वर्मान्त एष मन्त्रस्तु दण्डचक्रमितीष्यते ॥ १०

## ३. कालचक्रम्

वारुणं मायया युक्तं वान्तं वारणसंयुतम् ।
यूपान्तं वह्निना युक्तं मोऽथ साग्निरथात्रियुक् ॥ ११

धान्तं कालात्मनेत्येतच्चक्रायेति पदं ततः ।
फडन्त एष मन्त्रस्तु कालचक्रः प्रकीर्तितः ॥ १२

## ४. धर्मचक्रम्

मोन यक्रा च नेत्मर्मा तथा ध नमयेति च।
निलखीत्यपि चाकारो व्युत्क्रमेण प्रदृश्यते।। १३

धर्मचक्रमिमं मन्त्रं विदुः पूर्वे महर्षयः।

## ५. विष्णुचक्रम्

तारपूर्वं च हृदयं भगाद्यन्तौ वनादिमः।। १४

चण्डीशयुक्त आषाढस्तीव्रतेजस इत्यपि।
पर्यायं लक्षसंख्याया आरेति च पदं ततः।। १५

परमत्र प्रयोक्तव्यं भिन्धीति च पदं ततः।
भीषयेत्यपि वक्तव्यं विष्णुचक्रमिदं विदुः।। १६

## ६. इन्द्रचक्रम्।

यषशो कं तथा नीवानदा वन्नपिरूमहि।
मिन्नेलज्वेति तारं च इन्द्रचक्रमिदं स्मृतम्।। १७

## ७. वज्रास्त्रम्

तारं चतुर्मुखः स्वङ्गनाथवान् दीर्घसंयुतः।
पिनाकी दीर्घसंयुक्तो जलाद्यं मायि सोमराट्।। १८

फलान्तं भीषणपदं दम्भोले इत्यपि क्रमात्।
वर्मास्त्रयुक्तं विज्ञेयं वज्रास्त्रमिदमुत्तमम्।। १९

## ८. त्रिशूलम्

हृत्पूर्वं वह्निमायायुगाषाढो मायया बकः।
वह्निर्भृगुः सचण्डीशः प्रयोक्तव्यस्ततः परम्।। २०

अथ शूलवरायेति भीमरूपपदं तथा।
दारयेति पदं तत्र मारयेति पदं ततः ॥ २१
भीषयेति शिरोऽन्तं च त्रिशूलमिदमीरितम्।

९. ब्रह्मशिरोस्त्रम्

क्रोधी दण्डी च चण्डीशवीरान्तं वृश्चिकादिमम्॥ २२
आषाढयुक् सचण्डीशो हुं फड् ब्रह्मशिरः स्मृतम्।

१० ऐषीकास्त्रम्

हास्वा पक्षि यवद्रावि न्यंसैरप मरेति च॥ २३
पकारं व्युत्क्रमेणेदमैषीकं परमं स्मृतम्।

११. मोदकी

भृगुः क्रोधी पिनाकी च सानन्तो मित्र इत्यपि॥ २४
सन्तापनान्ते माया स्यान्मोदकान्ते च तां न्यसेत्।
कवचास्त्रयुतो मन्त्रो मोदकी स्यात् गदाह्वया॥ २५

१२. शिखरी

लोहितश्च भुजङ्गेशो भृगुर्भौतिकसंयुतः।
मुण्डः सवाली खड्गीशो दीर्घयुक्तश्च पावकः॥ २६
उमेशो मायया युक्तः शिखरीति पदं ततः।
ततो भेदिनि फट् चैव शिखरी स्याद् गदाह्वया॥ २७

१३. धर्मपाशास्त्रम्

वप्रान्तमाद्यं चण्डस्य मण्डपे मध्यमं ततः।
दुर्वृत्तेति पदं तत्र गजपर्यायमप्युत॥ २८

द्विरावृत्तं बन्धयेति धर्मपाशमिदं विदुः।

१४. कालपाशास्त्रम्

अत्रिर्मायान्वितः श्वेतः ससोमेशोऽथ पावकः॥ २९

षष्टस्वरसमायुक्तो लोहितश्च ततः क्रमात्।
विष्टम्भयेति च पदं द्विरावृत्तमतः परम्॥ ३०

वर्मान्त एष मन्त्रस्तु कालपाश इतीरितः।

१५. वरुणपाशास्त्रम्

तुन्दिलेति पदं पूर्वं सर्वेति च पदं ततः॥ ३१

वारणेति ततो घोररूपेति च पदं क्रमात्।
वर्म फट् चेति मन्त्रोऽयं वारुणं पाशमुत्तमम्॥ ३२

१६. आद्योऽशनिः

लोहितश्चैव वह्निश्च कूर्मः साषाढकं विषम्।
भारभूतियुतः क्रोधी ततश्च मतिपश्चिमः॥ ३३

अथ हस्तापरं नाम शोषयेति द्विरुच्चरेत्।
अशनिद्वितयादाद्यमिमं मन्त्रं विदुर्बुधाः॥ ३४

१७. अन्योऽशनिः

यषभी णरदानोमरप इत्यपरोऽशनिः।

१८. पैनाकास्त्रम्

अमरेशोऽथ खान्तोऽग्निसंयुक्तो दण्ड इत्यपि॥ ३५

अङ्कुशो भिन्धि भिन्धीति पैनाकममितद्युति।

१९. नारायणास्त्रम्

विष्णुर्दण्डी पुनश्चाद्यो भुजङ्गो दीर्घसंयुतः ॥ ३६

आषाढो मायया युक्तः सुदर्शनपराह्वयः ।
दारणेति पदं तत्र विश्वमूर्ते इति क्रमात् ॥ ३७

वर्मास्त्रे च तथा ज्ञेये नारायणमिदं स्मृतम् ।

२० पाशुपतास्त्रम्

सपिनाकी बको बिन्दुर्महामायासमन्वितः ॥ ३८

लोहितोऽथ बकश्चायं पञ्चमस्वरसंयुतः ।
कवचास्त्रे प्रयोक्तव्ये एतत् पाशुपतं स्मृतम् ॥ ३९

२१ आग्नेयास्त्रम्

तारं ततश्च हृदयं बहुवर्णाय चेत्यथ ।
वृत्तपिङ्गलशब्दं च लोचनेति ततः क्रमात् ॥ ४०

विश्वामित्रपदं चापि तथा प्रशमनेति च ।
दहेति शोषयेत्येवं प्रयुञ्ज्यात् भीषयेति च ॥ ४१

एतदाग्नेयमत्युग्रं सुरासुरसुपूजितम् ।

२२ दयितास्त्रम्

बकश्च सूक्ष्मश्चण्डश्च भुजङ्गो दीर्घदण्डवान् ॥ ४२

व्योम खड्गीशसंयुक्तं वाली प्रक्षेपणेति च ।
वर्मान्तमेतं मन्त्रं तु दयितं परिचक्षते ॥ ४३

२३ वायव्यास्त्राम्

वालिनं दण्डसहितं त्रिरावृत्तं विनिर्दिशेत् ।
यक्षरक्षः पदे चैव पिशाचादीनिति क्रमात् ॥ ४४

अमित्रांश्चेति च पदं ब्रूयात् दूरमतः परम्।
द्विरावृत्तं ततः कुर्यादुत्सारय पदं क्रमात्।। ४५
वायव्यमेतत् विख्यातं त्रैलोक्ये सर्ववन्दितम्।

## २४ हयशिरोस्त्रम्

व्योम दण्डयुतं व्योम वाली शीताद्यमक्षरम्।। ४६
श्वेतो वह्नियुतो दीर्घो भुजङ्गो दीर्घसंयुतः।
आषाढोऽथ महामायासंयुतो मुण्डमण्डितः।। ४७
कबलीकुर्विति ब्रूयादयं हयशिरो मनुः।

## २५ क्रौञ्चास्त्रम्

नपन्तासरपेत्येष फडन्तः क्रौञ्च ईरितः।। ४८

## २६ प्रथमा शक्तिः

णिरदाविरप र्तेमूस्रदी व्युत्क्रमतो मनुः।
वर्मान्त एष शक्तिभ्यामाद्यः सर्वारिभीषणः।। ४९

## २७ द्वितीया शक्तिः

नेसेतप्रो र्णिककुशं र्तेमूज्रव इतीरितः।
व्युत्क्रमेण हुमन्तोऽयं शक्तिभ्यामपरो मनुः।। ५०

## कङ्कालास्त्रम्

शिवोत्तमः सबिन्दुश्च क्रोधी दीर्घान्वितोऽनलः।
भान्तो दीर्घसमायुक्तो वाली फडिति चान्ततः।। ५१
कङ्काल एष कथितो मन्त्रः सर्वभयङ्करः।

## २९ मुसलास्त्रम्

चण्डाद्यन्तौ क्रमान्न्यस्य रूपाद्यन्तौ ततः परम्॥ ५२
आवर्तयेत् घातयेति तदेतन्मुसलं स्मृतम्।

## ३० कापालास्त्रम्

चण्डो भुजङ्गश्चाऽत्रिश्च बको वह्निसमायुतः ॥ ५३
मुण्डो द्विगण्डो मायी मा मेषद्वयमतः परम्।
खड्गीशो भौतिकयुतो वह्निश्चण्डीशसंयुतः ॥ ५४
अस्त्रान्त एष मन्त्रः स्यात् कापालमतिभीषणम्।

## ३१ कङ्कणी

अत्रिः सदीर्घो वह्निश्च मायया तु समन्वितः ॥ ५५
आषाढोऽनन्तसहितो वह्निर्दीर्घसमन्वितः।
आद्यश्चतुर्थवर्गस्य चण्डीशेन समन्वितः ॥ ५६
दमयेति द्विरावृत्त्या मनुरेष तु कङ्कणी।

## ३२ वैद्याधरास्त्रम्

हृदयं प्रथमं न्यस्य भगेति च पदं ततः ॥ ५७
वतीत्येतदपि ब्रूयान्महामाये इति क्रमात्।
कवचास्त्रे प्रयोक्तव्ये एतद्वैद्याधरं परम्॥ ५८

## ३३ असिरक्तास्त्रम्

खण्डिताद्यतिपर्यायं पदं शक्ते इति क्रमात्।
वर्मान्तमसिरक्ताख्यं अस्त्रमेतदुदाहृतम्॥ ५९

## ३४ गान्धर्वास्त्रम्

क्रोधी पिनाकिसंयुक्तो दण्डभौतिकसंयुतः ।
मोहयेति द्विरभ्यस्य मनुर्गान्धर्व इष्यते ।। ६०

## ३५ प्रस्थापनास्त्रम्

पञ्चान्तकः सदण्डः स्यादथो गणपते अपि ।
लोकेत्यनन्तरं ब्रूयादमित्रानित्यनन्तरम् ।। ६१
प्रस्थापयेत्यथाभ्यस्य प्रस्थापनमुदाहृतम् ।

## ३६ प्रशमनास्त्रम्

लोहितः सानलो जीवो महामायासमन्वितः ।। ६२
अत्रिर्द्विरण्डः पञ्चारिर्लान्तो मायी तलादिमः ।
मायारूपिणि चेत्येतत् पदमन्ते प्रयोजयेत् ।। ६३
एतत् प्रशमनं नाम सर्वशत्रुनिवारणम् ।

## ३७ सौर्यास्त्रम्

तारं ततश्च हृदयं परायेति पदं ततः ।। ६४
परेति पदमुच्चार्य तेजपदमनन्तरम् ।
निबर्हणाय चेत्येतत् फडन्तं सौर्यमुच्यते ।। ६५

## ३८ दर्पणास्त्रम्

अत्रिर्दण्डी च खड्गीशो मायया च समन्वितः ।
अत्रिः सदीर्घो वह्निश्च मायी चाऽऽषाढकः स्मृतः ।। ६६
अत्रिर्लोहितयुक्तश्च वह्निर्वर्म च फट् ततः ।
दर्पणास्त्रमिदं प्रोक्तं सर्वारिबलमर्दनम् ।। ६७

## ३९ शोषणास्त्रम्

बको दन्ती च शुक्राद्यो मायायुक्तस्तलादिमः ।
वैरीति मानसेत्येतत् प्रयोज्यं वर्म चाऽन्ततः ॥ ६८

एतच्छोषणमित्युक्तं विश्वारातिक्षयंकरम् ।

## ४० सन्तापनास्त्रम्

आषाढो दीर्घसंयुक्तो लोहितो मायायाऽन्वितः ॥ ६९

आषाढो लोहितो वह्निर्भृगुर्भौतिकसंयुतः ।
मुण्डयुक्तं सवालि स्यात् भृगुराकाश एव च ॥ ७०

स्रमूर्ते इति च न्यस्य सन्तापयपदं ततः ।
आवर्तयेदिमं मन्त्रं सन्तापनमुदाहृतम् ॥ ७१

## ४१ विलापनास्त्रम्

भृगुर्भौतिकसंयुक्तः सवह्निर्दण्डसंयुतः ।
महाकालः सदीर्घः स्याद् वाली दीर्घान्वितस्ततः ॥ ७२

आत्मने तु पदं पश्चात् फडन्तः स्याद्विलापनम् ।

## ४२ मदनास्त्रम्

हुं येमाहामरर्वादु व्युत्क्रान्तं मदनं स्मृतम् ॥ ७३

## ४३ कन्दर्पदयितास्त्रम्

चलगण्डमथो व्योम सामराधीश्वरं ततः ।
महाकालः सदन्तः स्यात् व्योम मेषस्ततः परम् ॥ ७४

मायाविच्चिति च ब्रूयादस्त्रायेति पदं ततः ।
फडन्त एष मन्त्रस्तु कन्दर्पदयितं स्मृतम् ॥ ७५

### ४४ पैशाचास्त्रम्

निहमोरप इत्येष व्युत्क्रान्तः सशिरो मनुः ।
पैशाचमिदमाख्यातमखिलारिविमर्दनम् ।। ७६

### ४५ तामसास्त्रम्

अजेश्वरं त्रिरावृत्तं सदण्डं प्रथमं पठेत् ।
तिमिरेति पदं ब्रूयाद्धस्तपर्यायमेव च ।। ७७

प्रतिसैन्यं पदं पश्चात् संवृण्विति समभ्यसेत् ।
एतत् तामसमित्युक्तमस्त्रं सर्वारिमोहनम् ।। ७८

### ४६ सौमनास्त्रम्

विष्णुर्दन्ती महाकालः शिवोत्तममतः परम् ।
शक्ते इति पदं पश्चात् परस्तम्भन इत्यतः ।। ७९

वर्मास्त्रे च ततो ब्रूयादेतत् सौमनमुच्यते ।

### ४७ संवर्तास्त्रम्

भुजङ्गो दण्डवान् पश्चात् रिपूनिति पदं वदेत् ।। ८०
क्षिपेति द्विः शिरोऽन्तं स्यात् संवर्तमिदमुत्तमम् ।

### ४८ मौसलास्त्रम्

तिग्मेति वृत्ते इति च पदे पूर्वं पठेत् क्रमात् ।। ८१
भिन्धीति च द्विरभ्यस्तं शिरोऽन्तं मौसलं स्मृतम् ।

### ४९ सत्यास्त्रम्

तारं प्रणामपर्यायं परमार्थाय इत्यथ ।। ८२
रिपूनिति पदं ब्रूयाज्जहीत्येतत् द्विरभ्यसेत् ।
सत्यमस्त्रमिदं प्रोक्तं सर्वशत्रुनिबर्हणम् ।। ८३

५० मायाधरास्त्रम्

तारं ततश्च हृदयं देवायेति पदं वदेत्।
मायात्मने इति पदं पठित्वा तदन्तरम्।। ८४
फडन्त एष मन्त्रस्तु मायाधरमुदीरितम्।

५१ घोरास्त्रम्

शिवोत्तमः सदण्डश्च पुनश्चायं सदन्तकः।। ८५
वह्निस्ततो भुजङ्गः स्यादङ्कीशेन च संयुतः।
लोहितो दीर्घयुग्वाली चण्डायेति पदं वदेत्।। ८६
शिरोऽन्त एष मन्त्रस्तु घोरमस्त्रमुदीरितम्।

५२ रत्यस्त्रम्

भृगुरौद्रद्विकं रेफं द्विः कृत्वा प्रादिकान् पुनः।। ८७
शिवोत्तमं ससत्यं च भुजङ्गेशस्ततः परम्।
आषाढोऽमरयुङ्मेषं रत्यस्त्रं च पवित्रकम्।। ८८

५३ अघोरास्त्रम्

चटं वीप्स्य पुनः प्रादिं क्रोधीशं व्योम चाभ्यसेत्।
वारुणं च तथा कालं द्विर्वामिनसबिन्दुकम्।। ८९
मीनमावृत्य मेषं च आषाढं लोहितं पुनः।
शक्त्याधिकमघोरास्त्रं वर्मास्त्रान्तमुदीरितम्।। ९०

५४ सौमास्त्रम्

भृगुं सानुग्रहाधीशं दण्डिनं प्रथमं पठेत्।
द्विषन्तं पदमुच्चार्य तत उद्वेजयेति च।। ९१
अन्त्यं द्विरभ्यसेदेतत् सौमास्त्रमिदमीरितम्।

५५ त्वाष्ट्रास्त्रम्

प्रणवं हृदयं पूर्वं भृगुस्तेनैव संयुतः ।। ९२
क्रोधी पिनाकी मेषश्च मायया च समन्वितः ।
महाकालद्वयं साग्निदीर्घयुक्तं ततः परम् ।। ९३
भारभूतियुगाषाढो मीनो दीर्घसमन्वितः ।
धाम्ने इति पदं ब्रूयात् परायेति पदं ततः ।। ९४
एतत् त्वाष्ट्रं समाख्यातं सर्वलोकनमस्कृतम् ।

५६ दारुणास्त्रम्

विष्णुर्दण्डी पुनश्चाद्यो भुजङ्गो दीर्घसंयुतः ।। ९५
आषाढो मायया युक्तो ज्वलनो बिन्दुसंयुतः ।
चतुर्मुखश्च क्रोधीशः फडन्तः स्यात्तु दारुणम् ।। ९६

५७ भगास्त्रम्

विपक्षादिममध्यान्तान् पठेत् विभजनेति च ।
प्रवृत्तायेति च पदं भगेति तदनन्तरम् ।। ९७
आत्मने इति निर्दिश्य भगास्त्रं तत् फडन्तिमम् ।

५८ शीतेष्वस्त्रम्

बकस्त्रिमूर्तिसहित आषाढश्च शिखी ततः ।। ९८
पिनाकी खड्गिको मायी लोहितश्च तथोपरि ।
संवर्तकः सदण्डश्च क्षिपेति द्विः पठेत् ततः ।। ९९
शिरोन्त एष मन्त्रस्तु शीतेषुरभिधीयते ।

## ५९ मानवास्त्रम्

लोहितश्च भुजङ्गश्च दीर्घो वाल्यथ लोहितः ।। १००
अग्निर्भान्तश्च वाली च सवह्निर्दीर्घसंयुतः ।
अत्रिर्दीर्घसमायुक्तो भेदिने इति च क्रमात् ।
भीमरूपाय चेत्युक्त्वा नमोऽन्तं मानवं स्मृतम् ।। १०१

## ६० रौद्रास्त्रम्

दहेति द्विरभ्यस्य पूर्वं प्रचण्डप्रयोगं विधायाथ रूपेति पश्चात् ।
ततो रुद्रधाम्ने इति न्यस्य पश्चाच्छिरोवृत्तमेतत् परं रौद्रमाहुः ।।

## ६१ प्रस्वापनास्त्रम्

अत्रिस्त्रिमूर्तिसहितोऽथ शिवोत्तमश्च
साग्निर्भृगुस्त्वमरनायकसप्रयुक्तः ।
सुस्यन्तिमः करिपदं च ततः प्रयोज्यं
मायात्मिके इति फडन्तमसौ मनुः स्यात् ।। १०३
प्रस्वापनं तदिदमाहुरशेषवैरि-
सेनासमस्तपरिमोहनकारि मुख्यम् ।
इत्थं समस्तपरमास्त्रसमुद्धृतिस्तु
तत्त्वान्मया विरचिता परमेष्ठिसूनो ! ।। १०४
तारं सद्योजातमाषाढमन्ते खड्गेशानं भौतिकेनैव युक्तम् ।
वह्निं मायासंवृतं तत्र चोक्त्वा हृत्पर्यायं वर्म फट् चान्ततः स्यात् ।।
१०५

इति श्री पाञ्चरात्रे तन्त्ररहस्ये अहिर्बुध्न्य संहितायां
ब्रह्मास्त्रादिमन्त्र स्वरूपनिरूपणं नाम
चतुस्त्रिंशोऽध्यायः ।।

* * *

संहारास्त्रस्वरूपनिरूपणं नाम

# पञ्चत्रिंशोऽध्यायः

ध्यातं सकृद्भवानेककोट्यघौघं हरत्यरम्।
सुदर्शनस्य तद्दिव्यं भर्गो देवस्य धीमहि।।

* * *

## संहारास्त्र स्वरूप प्रश्नः

नारदः -
भगवन्! पूर्वमाख्यातं संहारास्त्राण्यशेषतः।
सुदर्शनस्यापराङ्गान्निर्जग्मुरिति चेश्वर!।। १
तेषां स्वरूपविज्ञाने वर्तते मे कुतूहलम्।
वक्तुमर्हस्यशेषेण यदि सानुग्रहो मयि।। २

## तदुत्तरकथनारम्भः

अहिर्बुध्न्यः -
तदेतत् परमं गुह्यं पुरा नारायणेरितम्।
भक्तोऽसीति तव स्नेहात् वक्ष्यामि शृणु नारद!।। ३

### १ सत्यवदस्त्रम्

लोहितोऽग्निसमायुक्तः खड्गीशो भारभूतिमान्।
आषाढयुग्मं मुण्डश्च मायी स्यात् खड्गनायकः।। ४
साग्न्याषाढयुगं पश्चात् क्रोधीशं निर्दिशेत् ततः।
परमेष्ठिन्निति ब्रूयादथो ऋतमिति क्रमात्।। ५
पिबेति सशिरोमन्त्रः सत्यवानिति विश्रुतः।

### २ सत्यकीर्त्यस्त्रम्

तारं ततश्च हृदयं सत्यधाम्न इति क्रमात्।। ६

शमयेति द्विरावृत्तं सत्यकीर्तिरिति स्मृतम्।

३ धृष्टास्त्रम्

अत्रिः सामरनाथश्च साग्निः पश्चान्तकः स्मृतः ॥ ७

महाकालश्च मज्जा च साग्निश्चोमापतिस्तथा।
प्रसादयेत्यथाभ्यस्तं धृष्टमस्त्रमिदं विदुः ॥ ८

४ रभसास्त्रम्

क्रोधी पिनाकी मायी स्यात् खड्गी मायासमन्वितः।
अत्रिः पिनाकी मुण्डश्च दीर्घयुक्तो रसस्तथा॥ ९

अग्निर्द्विरण्डश्च भृगुर्दीर्घे वाली ततः परम्।
नमोऽन्त एष मन्त्रस्तु रभसः परिकीर्तितः ॥ १०

५ प्रतीहारतरास्त्रम्

तारं शिरोयुतं मन्त्रं प्रतीहारतरं विदुः।

६ पराङ्मुखास्त्रम्

लोहितो वह्निसंयुक्तः स्तुतेति च पदं ततः ॥ ११

स्तोभात्मने इति ब्रूयात् पराङ्मुख इति क्रमात्।
आयेति च हृदन्तं तु पराङ्मुखमुदाहृतम्॥ १२

७ अवाङ्मुखास्त्रम्

अमरेशास्तथाऽत्रिश्च सवाल्याषाढनायकः।
विद्रावणायेति पदमवेति तदनन्तरम्॥ १३

नतेति च प्रयोक्तव्यं फलाय तदनन्तरम्।
शिरोयुक्तमिमं मन्त्रं मन्त्रिणोऽवाङ्मुखं विदुः ॥ १४

८ लक्षाक्षास्त्रम्

नियुतापरपर्यायं भेदिने इत्यनन्तरम्।
निरासकेति चाऽऽवृत्तं परमायेति चेत्यथ।। १५
हृदयान्तमिमं मन्त्रं लक्षाक्षं परिचक्षते।

९ विषमास्त्रम्

खड्गीशो मायया युक्तः कूर्मो मायासमन्वितः।। १६
आषाढो वह्निसहितः लोहितश्चाग्निसंयुतः।
भृगुः सदीर्घो वह्निश्च मर्षयेति द्विरभ्यसेत्।। १७
एतद्विषममित्युक्तं अस्त्रं परमदुर्जयम्।

१० दृढनाभास्त्रम्

शान्तिं पदं न्यसेत् पूर्वं कुर्वित्येतदतः परम्।। १८
निबिडेति ततो न्यस्य गात्रशब्दं ततः परम्।
विष्कम्भेति शिरोऽन्तं च दृढनाभमुदाहृतम्।। १९

११ संहारकास्त्रम्

हास्वा यक्राचतसृवि मोन ओं व्युत्क्रमो मनुः। २०
संहारकमिदं चास्त्रं विदुः पूर्वे महर्षयः।।

१२ दशाक्षास्त्रम्

खड्गीशो मायया युक्तस्तेन युक्तो बकस्तथा। २१
वान्तो दीर्घसमायुक्तः आषाढो मुण्ड एव च।।
दीर्घी खड्गेश्वरो वह्निरुमेशो दीर्घसंयुतः। २२
वाली हृदन्तो मन्त्रोऽयं दशाक्षः परिपठ्यते।।

१३ दशशीर्षास्त्रम्

तारपूर्वं च हृदयं चलगण्डं ततो न्यसेत्।
अम्बरं सामराधीशं वक्त्रायेति पदं ततः ॥ २३

वज्रवारणशब्दी च आयान्तं शतवक्त्रकम्।
शिवोत्तमः सदन्तः स्यादग्निर्दीर्घसमन्वितः ॥ २४

भृगुराषाढवान् साग्निः कर्तनायेति विन्यसेत्।
दशेति च पदं पश्चाच्छीर्षायेति पदं ततः ॥ २५

शिरोऽन्त एष मन्त्रस्तु दशशीर्षमुदाहृतम्।

१४ शतोदरास्त्रम्

तारं प्रणामपर्यायं लुप्तास्त्रेति पदं ततः ॥ २६

जालायेति प्रयोक्तव्यं बहूदरपदं ततः।
आयेत्यन्ते प्रयोक्तव्यं शतोदरमिदं विदुः ॥ २७

१५ पद्मनाभास्त्रम्

लोहितः पावकश्चैव नकुलीशस्ततः परम्।
आषाढो मायया युक्तः प्रवृत्त इति च क्रमात्॥ २८

नाशनायेत्यथाभ्यस्तं स्वस्त्यन्तं पद्मनाभकम्।

१६ महानाभास्त्रम्

महाकालोऽम्बरं दीर्घं लोहितो दीर्घसंयुतः ॥ २९

बकः खड्गीश्वरो मायी नाशनायेति च न्यसेत्।
चक्रात्मन इति ब्रूयात् स्वस्त्यन्तो मन्त्रनायकः ॥ ३०

महानाभमिदं प्राज्ञा वदन्त्यखिलसाधकम्।

## १७ दुन्दुनाभास्त्रम्

बकश्चैव महाकालो मायी चाऽऽषाढनायकः ॥ ३१

शूलायेति प्रयोक्तव्यं चण्डनाभाय चेत्यतः ।
स्वस्ति चैव द्विरभ्यस्तं दुन्दुनाभमिदं विदुः ॥ ३२

## १८ धृतिमाल्यस्त्रम्

मेषो मायी च साङ्घीशो भृगुश्चैवात्रिरेव च ।
मायायुक्तस्तथाषाढो दीर्घदण्डसमन्वितः ॥ ३३

क्रोधी च सामरेशः स्यात् बको दीर्घसमन्वितः ।
वाली दीर्घसमायुक्तो निवारितपदं ततः ॥ ३४

तेजसे इति च ब्रूयात् स्वस्त्यन्तोऽयं महामनुः ।
धृतिमालीति विख्यातः सर्वलोकेषु पूजितः ॥ ३५

## १९ रुचिरास्त्रम्

संवर्तकः सामरेशो मीनो बिन्दुसमन्वितः ।
मायी च क्षामयेत्येतदावृत्तं वृत्तिमान् मनुः ॥ ३६

द्विरावृत्तः प्रहरणं शं तनोतु पदं ततः ।
शिरोन्त एष मन्त्रस्तु रुचिरः परिकीर्तितः ॥ ३७

## २० पितृसौमनसास्त्रम्

लोहितो मायया युक्तः आषाढो भारभूतिमान्।
देवसारेत्यतः पाठ्यं सर्वाभयपदं ततः ॥ ३८

प्रदेत्येतत् प्रयोक्तव्यं सर्वशान्तिकराय च ।
शिरोऽन्त एष मन्त्रस्तु पितृसौमनसं स्मृतम् ॥ ३९

## २१ विधूतास्त्रम्

तारं तथा च हृदयं खड्गीशो मायया युतः ।
मीनश्चाङ्गीशसंयुक्तः आषाढो दीर्घसंयुतः ।। ४०

चण्डो मायी पिनाकी चाप्याषाढो दीर्घसंयुतः ।
लोहितश्च करायेति पदं तत उदीर्य च ।। ४१

परमेत्यथ धाम्ने च विधूतमिदमुत्तमम् ।

## २२ मकरास्त्रम्

नमस्त्रुटितशब्दौ च पठित्वा प्रथमं ततः ।। ४२

शस्त्रास्त्रशब्दौ चोच्चार्य शक्तये इत्यनन्तरम् ।
शक्तिशालिन इत्युक्त्वा मकरायेति च क्रमात् ।। ४३

प्रवृत्तास्त्रपदे चैव महार्णवपदं ततः ।
विभेदिन इति ब्रूयादेतन्मकरमुत्तमम् ।। ४४

## २३ करवीरसमास्त्रम्

तारपूर्वं नमश्चोक्त्वा तिरस्कृतपदं ततः ।
गदाशब्दं समुच्चार्य वीर्यायेति ततः पठेत् ।। ४५

शिरोऽन्त एष मन्त्रस्तु करवीरसमं स्मृतम् ।

## २४ धनास्त्रम्

तारं प्रणामपर्यायं लोहितं वह्निसंयुतम् ।। ४६

आषाढोऽनन्तसंयुक्तो लोहितो मीन एव च ।
मुण्डः शिवं कुरुपदं द्विरावृत्तं धनं स्मृतम् ।। ४७

२५ धान्यास्त्रम्

वेतवाजीर्तरापेति व्युत्क्रमेण समीरितम्।
शिरोऽन्त एष मन्त्रस्तु धान्यमित्युच्यते बुधैः ॥ ४८

२६ ज्यौतिषास्त्रम्

लोहितो वह्निसंयुक्तः चण्डाद्यन्तौ ततः क्रमात्।
बको मुण्डः समायी स्यात् सवह्निर्लोहितस्तथा ॥ ४९

बको विषं ततो मुण्डो मायी प्रकटितेति च।
अथ विश्वं पदं चोक्त्वा ततः प्रशमयेति च ॥ ५०

द्विरभ्यस्तमिमं मन्त्रं ज्यौतिषं परिचक्षते।

२७ कृशनास्त्रम्

क्रोधी पिनाकी मायी स्यादाषाढं च ततः परम् ॥ ५१

क्रोधी चानन्तसहितो बकयुग् दीर्घमग्निमत्।
मुण्डो वाली शिरोऽन्तश्च कृशनं समुदाहृतम् ॥ ५२

२८ नैराश्यास्त्रम्

मायी खड्गी शिखी चैव महामायी पिनाकवान्।
कृतचक्रेति शब्दौ च चक्रायेति च निर्दिशेत् ॥ ५३

वषडन्तमिमं मन्त्रं नैराश्यं परिचक्षते।

२९ विमलास्त्रम्

खड्गेशः प्रथमं मायी चाषाढो दीर्घवह्निमान् ॥ ५४

भृगुश्च मायासंयुक्त आषाढो दीर्घसंयुतः।
मायी चण्डः पिनाकी च सानन्तोऽतः परं क्रमात् ॥ ५५

भृगुः साषाढदीर्घाग्निर्वाली च तदनन्तरम् ।
विमलायेति चोच्चार्य शिरोऽन्तं विमलं स्मृतम् ।। ५६

३० योगन्धरास्त्रम्

भृगुर्लान्तः सवह्निश्च मायाशब्दं पठेत् ततः ।
मयास्त्रायेति च पदं तमोबर्हण इत्यपि ।। ५७

मूर्तये इति निर्दिश्य योगं चेति ततः पठेत् ।
धरायेति पदं चापि महते इत्यनन्तरम् ।। ५८

भीषणायेति च ब्रूयात् अभ्यस्तं हृदयं ततः ।
योगन्धरमिदं प्रोक्तं अस्त्रं निखिलवन्दितम् ।। ५९

३१ विनिद्रास्त्रम्

मुण्डो मायी तथाकाश आषाढश्च ततः परम् ।
मेषो मायायुतोऽत्रिश्च सदीर्घाग्निस्ततः परम् ।। ६०

मुद्रायेति शिरोऽन्तोऽयं विनिद्रमभिधीयते ।

३२ नैद्रास्त्रम्

विषमग्न्यनिलोपेतं सषष्टस्वरबिन्दुकम् ।। ६१

पिण्डमेतच्छिरोऽन्तं च नैद्रमस्त्रविदो विदुः ।

३३ प्रमथनास्त्रम्

प्रथमं तारमुच्चार्य हृदयं च ततः परम् ।। ६२

विषं ततश्च दण्डीशं मायया च समन्वितम् ।
आषाढं च बकं चैव पठित्वा तदनन्तरम् ।। ६३

ततः क्रोधी च साषाढश्चण्डीशेन समन्वितः ।
प्रसादयेत्यथावृत्तमस्त्रं प्रमथनं स्मृतम् ।। ६४

## ३४ सार्चिर्माल्यस्त्रम्

वरुणेन समायुक्तो दीर्घयुक्तश्चतुर्मुखः।
ततः पिनाकी सानन्तो लान्तो मायी ततः परम्॥ ६५

ज्वालान्तो मायया युक्तः पिनाकी च ततः परम्।
आद्यं चतुर्थवर्गस्य महासीति पठेत् ततः॥ ६६

शक्त इत्यपि वक्तव्यं महामहस इत्यपि।
मर्षयेति द्विरभ्यस्तं सार्चिर्मालिरयं मनुः॥ ६७

## ३५ कामरूपास्त्रम्

हास्वा नञ्जभरश्वासरपत्तवृप्र इत्यपि।
रस्वा इति व्युत्क्रमेण कामरूपमिदं स्मृतम्॥ ६८

## ३६ कामरुच्यस्त्रम्

ओं नमो इत्युपक्रम्य मुण्डो मायासमन्वितः।
तृतीयस्वरसंयुक्तश्चण्डो रान्तस्ततः परम्॥ ६९

कबन्धेति पदं ब्रूयात् सन्धानायेति चान्ततः।
शिखान्तोऽयं कामरुचिर्मन्त्रः पूर्वैः समीरितः॥ ७०

## ३७ मोहनास्त्रम्

भौतिकं दण्डसंयुक्तं अङ्कुशं च ततो वदेत्।
मोहवारिणिशब्दं च शिरोऽन्तं मोह उच्यते॥ ७१

## ३८ आवरणास्त्रम्

खड्गीशो दीर्घसंयुक्तो वह्निर्मायासमन्वितः। ७२
आषाढश्च महाकालो व्योम दीर्घान्वितं ततः॥

महाकालश्च सानन्तो वाली चण्डीशसंयुतः ।
शिरोन्तोऽयं महामन्त्रः प्रोक्तमावरणं बुधैः ॥ ७३

### ३९ जृम्भकास्त्रम्

द्विरण्डौ द्वौ क्रमान् न्यस्य सदण्डौ चतुराननम् ।
मुण्डमुच्चार्य परतःस्वस्तीति पदमुद्धरेत् ॥ ७४
शिरोऽन्तोऽयं महामन्त्रः जृम्भकः परिकीर्तितः ।

### ४० सर्वनाभकास्त्रम्

चण्डोऽनन्तसमायुक्तो मायी चात्रिस्ततः परम् ॥ ७५
आद्यश्चतुर्थवर्गस्य सेनापदमनन्तरम् ।
जीवातव इति ब्रूयाच्छिरोऽन्तं सर्वनाभकम् ॥ ७६

### ४१ भृशाश्वतनयास्त्रम्

वेगाद्यन्तौ क्रमादुक्त्वा विश्वाद्यं च ततः परम् ।
जितशब्दमथोच्चार्य वैनतेयाय इत्यपि ॥ ७७
शिरोऽन्तोऽयं मनुः प्रोक्तो भृशाश्वतनया इति ।

### ४२ संधानास्त्रम्

भृगुश्च वरुणः साग्निर्मुण्डो मायी ततः क्रमात् ॥ ७८
खड्गीशः साग्निदीर्घश्च लोहितोऽथ उमापतिः ।
शं कुर्विति द्विरभ्यस्तः मन्त्रः सन्धानमुच्यते ॥ ७९

### ४३ वारुणास्त्रम्

भृगुर्लान्तोऽग्निसहितो दण्डेन च समन्वितः ।
भृगुर्व्योमाऽथ जीवश्च वरुणेन समन्वितः ॥ ८०

शिरोऽन्त एष मन्त्रस्तु वारुणं परिकीर्तितम्।

अस्त्राणां मूर्तत्वामूर्तत्वजिज्ञासया नारदेनाऽहिर्बुध्न्यस्तुतिः।

नारदः -
भगवन्! देवदेवेश! सर्वलोकनमस्कृत!॥ ८१

सर्वाध्यक्षाप्रमेयात्मन्!अचिन्त्यज्ञानगोचर!।
त्वामाश्रित्य सुराः सर्वे लभन्ते काङ्क्षितं फलम्॥ ८२

त्वत्तः सर्वं समुद्भूतं जगत् स्थावरजङ्गमम्।
त्वयैव पालितं सर्वं संहृतं च महेश्वर!॥ ८३

त्वमादिः सर्वजगतामनादिस्त्वं जगन्मय!।
पुरुषस्त्वं त्वमव्यक्तो व्यक्तस्त्वं विश्वभावन!॥ ८४

यज्ञस्त्वमिज्यो यष्टा त्वमग्रयस्त्वं त्वमाहुतिः।
वषट्कारस्त्वमोङ्कारो वेदवेद्यस्तथा भवान्॥ ८५

त्वत्त एव च भूतानि प्रवर्तन्ते महेश्वर!।
करणं कारणं कर्ता कार्यं कर्म फलं विभो!॥ ८६

त्वमेव भूतं भव्यं च भवच्च परमेश्वर!।
निर्गुणस्त्वं जगत्सृष्टौ जुषमाणो गुणानसि॥ ८७

अणीयसामणीयांस्त्वं महांश्च त्वं महीयसाम्।
अनुरक्तस्त्वयीशान! प्रयाति परमां गतिम्॥ ८८

अपरक्तो व्रजत्येव निरयं विकृतिर्न ते।
कलाकाष्ठामूहुर्तादिकालश्च त्वं कलात्मकः॥ ८९

सर्वदा सर्वभूतेषु निवसन्नपि शङ्कर!।
न लिप्यसे तद्विकारैः पद्मपत्रमिवाम्भसा॥ ९०

करामलकवत् सर्वं सर्वदा कलयस्यतः ।
प्रोक्तवानसि सर्वास्त्रस्वरूपं पृच्छतो मम ॥ ९१

## अस्त्राणां मूर्तत्वामूर्तत्वप्रश्नः

किमेषां मूर्तयः सन्ति ? किं वाऽमूर्तान्यमूनि वै ? ।
छेत्तुमर्हसि देवेश ! तमिमं संशयं विभो ! ॥ ९२

## तेषां मूर्तत्वप्रतिपादनम्

अहिर्बुध्न्यः

तेषां भवन्ति गात्राणि भीमरूपाणि नारद ! ।
वक्त्रभीषणदंष्ट्रोग्रमुखत्रस्तजनानि वै ॥ ९३

भीषिताघूर्णितारक्तवृत्तनेत्रयुतानि वै ।
विद्युत्पुञ्जप्रतीकाशकेशभीमानि नारद ! ॥ ९४

कानिचिद्धूम्रवर्णानि भास्कराभानि कानिचित् ।
कानिचिच्छुक्लवर्णानि वह्निकल्पानि कानिचित् ॥ ९५

महापरिघसंकाशभीमरूपैः करैः परैः ।
यथास्वं धृतशस्त्राणि महान्ति बलवन्ति च ॥ ९६

वेगवन्ति प्रमाथीनि वैरिदर्पद्रुहाणि च ।
उपासितानि सततं सुरासुरवरैरपि ॥ ९७

एवंभूतान्यधिष्ठाय गात्राण्यस्त्राणि नारद ! ।
विचरन्ति यथाकामं अकुतोभीतिमन्ति च ॥ ९८

अकलितमहिमानि भीषणानि
ज्वलितवपूंषि समुद्यतायुधानि ।
अविहतगमनानि चाऽस्त्रमुख्या-
न्यनवरतं भुवनेषु संचरन्ति ॥ ९९

*इति श्रीपाञ्चरात्रे तन्त्ररहस्ये अहिर्बुध्न्यसंहितायां*
*संहारास्त्र स्वरूपनिरूपणं नाम*
*पञ्चत्रिंशोऽध्यायः॥*



## அரசர்கள் ஸுதர்ஶந யந்த்ரத்தை ஆராதநம் செய்யும் முறைகளும் கேஶவாதி நாமங்களின் குணங்களின் முக்யக் கருத்தை உறுதி செய்தல் என்கிற

# 36வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி।।

### ஸுதர்ஶந யந்த்ரத்தின் பூர்வாங்கம் அபராங்கம் இவற்றோடு அர்ச்சனை இவைகளின் முறை

**நாரதர்:-** பகவானே! மிக மஹிமையுடன் கூடிய எல்லா அஸ்த்ரங்களின் ப்ரயோக மந்த்ரங்களும், அவ்வாறு உபஸம்ஹார மந்த்ரங்களும் எல்லாம் சொல்லப்பட்டன. மஹான்களால் முன் சொன்ன முறைப்படியே, **அறம், பொருள், இன்பம், மோக்ஷம்** என்கிற நான்கு பலன்களை விரும்புகிறவர்களாய் பூஜிக்கத் தகுந்த **ஸுதர்ஶநம்** தேவரீரால் சொல்லப்பட்டது. அரசனாக இருந்தால் உத்தமமான **ஸுதர்ஶந** உருவமாகப் பூஜிக்க வேண்டும். இரண்டு முக உருவங்கள் (**ஸுதர்ஶநம், ந்ருஸிம்ஹம்**) இவற்றையும் ஆராதிக்கலாம் என்று சொல்லப்பட்டது. ஸுதர்ஶந யந்த்ரத்தினுடைய மற்றொரு அங்கத்தை எப்படி ஒருவன் த்யாநம் செய்ய முடியும்? எப்படித்தான் அதைச் செய்வான்? மஹேஶ்வரா ! இந்த என் ஸந்தேஹத்தை நீக்கி அருள வேண்டும்.

### அதற்கு விடை கூறுதல்

**அஹிர்புத்ந்யர்:-** ஜ்யோதிர் மயமான இந்த யந்த்ரத்தை அரசன் பின் வருமாறு த்யாநம் செய்து பூஜிக்கலாம்:-

### முதலில் யந்த்ரத்தின் நடுவில் ஸுதர்ஶந த்யாநம்

யந்த்ரத்தின் நடுவின் மஹிமை மிகுந்தவரும், பயங்கரமான கண்களோடு கூடியவரும், மேல் நோக்கிப் படுத்த சடை முடியை உடையவரும், ஜ்வலிக்கும் கோரைப் பற்களால் ப்ரகாசிக்கும் முகத்தை உடையவரும், நின்ற

திருக்கோலத்திலிருப்பவரும், மிகவும் அழகான எட்டு புஜங்களோடு கூடியவரும், பெரிய வில்லை ஏந்திக்கொண்டு சக்ரத்தின் நடுவில் உள்ள தாமரையில் நிற்பவரும், ஸமமான வளைவுகளோடு கூடியவரும், கம்பீரமான அங்கங்களோடு கூடியவரும், சிவந்த வஸ்த்ரம் அணிந்தவரும், உலகத்துக் கெல்லாம் ஸ்வாமியும், ஶங்கம், சக்ரம், **கதை,** உலக்கை பாசக்கயிறு, ஈட்டி இவற்றைத் தரிப்பவரும், அனைத்துத் திருவாபரணங்கள் அணிந்தவரும் வைஜயந்தீ என்னும் வநமாலையினால் அழகு மிகுந்தவருமான-

## சுற்றிலும் கேஶவன் முதலிய மூர்த்திகள் த்யாநம்

இப்படிப்பட்ட **ஸுதர்ஶநத்**தை த்யாநம் செய்து கொண்டு பிறகு கேஶவன் முதலிய மூர்த்திகளை நின்ற நிலையிலோ உட்கார்ந்த நிலையிலோ முன் சொன்ன முறையிலேயே அலங்காரங்கள் ஆயுதங்களுடன் கூடியவர்களாக விருப்பம் போல அமைத்து முக்யமானவர்களாய், உத்தமமானவர்களாய்ச் சுற்றிலும் த்யாநம் செய்ய வேண்டும்.

## பிறகு விஷ்ணு முதலிய 16 மூர்த்திகள் த்யாநம்

பிறகு விஷ்ணு முதலிய 16 மூர்த்திகளால், ஆயுதங்கள் கூடியவர்களால், அழகான திருமேனியுடன் கூடியவர்களால், உற்சாகமுடையவர்களால், ஸகல திருவாபரணங்களும் அணிந்தவர்களால், கூண்டு போல் சூழப்பட்டதாக **யந்த்ரராஜனை** த்யாநம் செய்ய வேண்டும்.

## சுற்றிலும் உருவங்களுடன் ஸம்ஹாராஸ்த்ரங்கள் த்யாநம்

இதற்கும் வெளியில் சுற்றிலும் ஶரீரத்துடன் கூடியவையும், மிகவும் பெரிய உருவமுடையவர்களாகவும், கை கூப்பிய நிலையில் உள்ளவர்களாகவும், அத்புதமானவர்களாகவும், யாரிடமும் பயமற்றவர்களாயும், மிகுந்த சக்தியுள்ளவைகளுமான அனைத்து **ஸம்ஹாராஸ்த்ரங்களை**யும் நினைக்க வேண்டும்.

## பிறகு ப்ரயோகாஸ்த்ரங்களின் த்யாநம்

நாரதரே! பிறகு மூர்த்தியோடு கூடியவையும், எல்லா உலகங்களையும் விழுங்க விரும்புவது போல் ஜ்வலித்துக் கொண்டிருப்பவையுமான **ப்ரயோக அஸ்த்ரங்களைப்** பின் வருமாறு த்யாநம் செய்ய வேண்டும்.

## ந்ருஸிம்ஹ த்யாநம்

இவ்வாறு சக்ரங்களின் வரிசையில் த்யாநம் செய்து மேலும் ந்ருஸிம்ஹனுடைய மூர்த்தியைத் தரித்திருக்கும் பரம புருஷனான நாராயணனை அனைத்து உலகங்களுக்கும் ஆதாரமாக உள்ளவரும் உயர்ந்த தெய்வமுமான பகவானை ஜ்வலிக்கும் வட்டையோடு கூடிய அழகிய சக்ர வடிவத்தில் உள்ள யந்த்ரத்தைக் கீழ் பாகத்தில் த்யாநம் செய்ய வேண்டும். இந்த யந்த்ரத்தின் வட்டைகளுக்கு நான்கு திசைகளிலும் பெரிய ஜ்வாலையை த்யாநிக்க வேண்டும். சக்ரம், **கதை**, வில், கத்தி இவைகளைத் தரித்திருக்கும் புருஷர்களை த்யாநிக்க வேண்டும். மிகுந்த தேஜஸ்ஸோடு கூடிய யந்திரத்தின் ஒரு முகத்தை த்யாநிக்க வேண்டும்.

## அபராங்க த்யாநம்

மஹா மந்த்ரங்களால் நாற்புறமும் அலங்கரிக்கப்பட்டு நடுவில் உள்ள **ப்ரணவம்** அல்லது விஷ்ணுவின் கூண்டு தொடங்கி திருமேனிகள்(உருவம்) இல்லாத முன் சொன்ன மந்த்ரங்களின் ஸமூஹத்தை அபராங்கமாக-

## எல்லா அஸ்த்ரங்களின் மந்திரம் மாத்ரம் த்யாநம்

அந்தந்த இடங்களில் த்யாநிக்க வேண்டும். மற்ற அஸ்த்ரங்களைத் தோற்றுவிக்கக் கூடியதும், அழகிய வட்டையோடு கூடியதும் தேவர்களாலும் வணங்கப் படுவதும், மிகுந்த ஶக்தியுடையதும், தந்நிகரற்ற சக்ர வடிவத்திலிருப்பதும், முன் சொன்ன அனைத்து ஸ்வரூப குணங்களோடு கூடியதும், எல்லா விருப்பங்களையும் கொடுக்க வல்ல ஒரே ஸாதநமும், மஹாயந்த்ர ஸ்வரூபமான மந்த்ரங்களின் கூட்டங்களை த்யாநித்துப் பிறகு எல்லாவகை

ஸம்ஹாராஸ்த்ரங்களின் மந்த்ரங்களைச் சுற்றிலும் த்யாநிக்க வேண்டும். புருஷோத்தமனாகிய எம்பெருமான் இந்தச் சக்ரத்தின் மத்தியிலிருப்பதால் பெரியோர்களால் அவர் **சக்ரவர்த்தி** என்று சொல்லப்படுகிறார்.

### ஆகையால் பூஜிக்கும் அரசர்களும் சக்ரவர்த்திகளே

ஆகையால் எந்த ஒரு அரசன் பக்தி மிகுந்தவனாய் இதைப் பூஜிப்பானோ, அவன் விரைவிலேயே சக்ரவர்த்தி என்கிற நிலையைப் பெறுவான்.

### மற்றவர்களாலும் பூஜிக்கப்பட வேண்டும்

அரசனுடைய நன்மையை விரும்புபவர்கள், அரசன், அரசனுடைய வேலைக்காரர்கள், மந்திரிகள், வேறு மனிதர்கள் எல்லோருமே உத்தமமான இந்த யந்த்ரத்தைப் பூஜிப்பார்கள்.

### செல்வம் விரும்புபவர்கள் பூஜிக்கலாம்

முன்பு சொன்னது எல்லாம் அரசர்களுக்காகவே முக்யமாகச் சொல்லப்பட்டவை. அரசனைத் தவிர மற்றவர்களும் அரசன் மூலம் செல்வம் கிடைக்கப் பெறுவார்கள். தங்கம், வெள்ளி முதலிய உலோஹங்களாலோ, ஶிலையினாலோ எவன் இந்த **ஸு¬தர்ஶநத்தை** அமைத்துப் பூஜிப்பானோ, அவன் மிகுந்த செல்வம் பெறுவான். நீண்ட ஆயுளையும் பெறுவான். ஆரோக்யம் பெறுவான். அவன் வம்ஶத்தில் பிறந்தவர் அனைவரும் நீண்ட ஆயுளைப் பெறுவர்.

### இரண்டு முகங்களோடு யந்த்ரத்தைப் பூஜிப்பதில் உபதேஶம் செய்ய ப்ராம்ஹணர்களே தகுதி பெற்றவர்கள்

ஆனால் இரண்டு முகங்களோடு கூடிய யந்த்ரத்தை, மந்த்ரத்தை உபதேஶித்த ப்ராம்ஹணனே பூஜிக்க வேண்டும். முநிவரே! ஏனென்றால் இரண்டு முகங்களோடு கூடிய ஸு¬தர்ஶந சக்ரத்தின் மிகுந்த ஶக்தியை, ஞாநத்தாலும், தவத்தாலும், மந்த்ர ஶக்தியாலும் அந்த ப்ராம்ஹணன் தான் தாங்குவதற்குச் சக்தி உள்ளவனாக இருப்பான்.

ஸம்ஹாராஸ்த்ரங்களின் மந்த்ரங்களைச் சுற்றிலும் த்யாநிக்க வேண்டும். புருஷோத்தமனாகிய எம்பெருமான் இந்தச் சக்ரத்தின் மத்தியிலிருப்பதால் பெரியோர்களால் அவர் **சக்ரவர்த்தி** என்று சொல்லப்படுகிறார்.

### ஆகையால் பூஜிக்கும் அரசர்களும் சக்ரவர்த்திகளே

ஆகையால் எந்த ஒரு அரசன் பக்தி மிகுந்தவனாய் இதைப் பூஜிப்பானோ, அவன் விரைவிலேயே சக்ரவர்த்தி என்கிற நிலையைப் பெறுவான்.

### மற்றவர்களாலும் பூஜிக்கப்பட வேண்டும்

அரசனுடைய நன்மையை விரும்புபவர்கள், அரசன், அரசனுடைய வேலைக்காரர்கள், மந்திரிகள், வேறு மனிதர்கள் எல்லோருமே உத்தமமான இந்த யந்த்ரத்தைப் பூஜிப்பார்கள்.

### செல்வம் விரும்புபவர்கள் பூஜிக்கலாம்

முன்பு சொன்னது எல்லாம் அரசர்களுக்காகவே முக்யமாகச் சொல்லப்பட்டவை. அரசனைத் தவிர மற்றவர்களும் அரசன் மூலம் செல்வம் கிடைக்கப் பெறுவார்கள். தங்கம், வெள்ளி முதலிய உலோஹங்களாலோ, ஶிலையினாலோ எவன் இந்த **ஸுதர்ஶநத்தை** அமைத்துப் பூஜிப்பானோ, அவன் மிகுந்த செல்வம் பெறுவான். நீண்ட ஆயுளையும் பெறுவான். ஆரோக்யம் பெறுவான். அவன் வம்ஶத்தில் பிறந்தவர் அனைவரும் நீண்ட ஆயுளைப் பெறுவர்.

### இரண்டு முகங்களோடு யந்த்ரத்தைப் பூஜிப்பதில் உபதேஶம் செய்ய ப்ராம்ஹணர்களே தகுதி பெற்றவர்கள்

ஆனால் இரண்டு முகங்களோடு கூடிய யந்த்ரத்தை, மந்த்ரத்தை உபதேஶித்த ப்ராம்ஹணனே பூஜிக்க வேண்டும். முனிவரே! ஏனென்றால் இரண்டு முகங்களோடு கூடிய ஸுதர்ஶந சக்ரத்தின் மிகுந்த ஶக்தியை, ஞானத்தாலும், தவத்தாலும், மந்த்ர ஶக்தியாலும் அந்த ப்ராம்ஹணன் தான் தாங்குவதற்குச் சக்தி உள்ளவனாக இருப்பான்.

## ஸுூர்ய மண்டலம் திருக்கண்கள் முதலிய ஸ்தாநங்களில் இருக்கும் புருஷர்கள் அனைவரும் ஒருவரே

ஸுூர்ய மண்டலத்தில் இருப்பவர் எவர் அந்தப் பரம புருஷனாகக் காணப்படுகிறாரோ, அவரே ஸ்வர்ணமயமாக நம் கண்ணுக்குள்ளும் காணப்படுகிறார். நாபி சக்ரத்தின் நடுவில் அதே புருஷன் இருக்கிறார்.

## அவரே கால சக்ரம் முதலியவற்றை இயக்குகிறார்

**கால சக்ரத்தை** இயக்குபவர் என்றைக்கும் மாறுதலே இல்லாத புருஷன். அவரே **யுக சக்ரத்தையும்** இயக்குகிறார் என்று ஞாநிகள் கூறுகின்றனர். இவ்வாறே மஹர்ஷிகளும் கூறுகின்றனர்.

## இஹ - பர பலன்களுக்கு ஸாதநம்

எல்லா உலகங்களையும் படைக்கும் முக்ய தேவனும் எல்லா உலகங்களுக்கும் முக்யமான ஸாக்ஷியும் (எல்லா செயல்களையும் எல்லோரையும் கவனிப்பவர் ஸாக்ஷி எனப்படுகிறார்) சக்கரவர்த்தி என்கிற திருநாமம் உடையவரும், எவ்வித மாறுதலுமற்றவருமான இந்த பகவான் விமாநத்தில் எழுந்தருளப் பண்ணப்பட்டு, எவனால் பூஜிக்கப்படுவாரோ, அவன் இந்த உலகமும் மேல் உலகமும் பெறுவான்.

## விமாநம் அமைக்கத் தொடங்குவதே பெரும் பயனைத் தரும்

மஹாமுநிவரே! ஸுதர்ஶந விமாநத்தை எவன் அமைக்கத் தொடங்குகிறானோ, அவன் இவ்வுலகில் வேண்டியவற்றை எல்லாம் பெற்று விஷ்ணுவின் உலகமான வைகுண்டத்தையும் அடைவான். ஸுதர்ஶந விமாநத்துக்காக எவனொருவன் பூமியை உழுகிறானோ அவனுடைய விரோதிகள் மடிவர். எல்லாச் செல்வங்களும் கிட்டும். எவனொருவன் விமாந கார்யங்களைத் தொடங்கிச் சில இடையூறுகளால் அந்தக் கார்யம் நின்று விட்டாலும் அவன் இந்தப் பூமண்டலத்தில் அனைத்தையும் ஆட்சி செய்து, எல்லா இன்பங்களையும் பெற்று மறுபடியும் ஸுதர்ஶந

பக்தனாயிருந்து தடைப் பட்ட கார்யங்களைப் பூர்த்தி செய்வான். கடைசியில் வைகுண்டத்தை அடைந்து விஷ்ணுவுடன் **ஸாயுஜ்யம்** பெறுவான். (**ஸாயுஜ்யம்** என்பதன் பொருள் ஐக்யமாகி விடுதல் என்று சிலர் கருதுகிறார்கள். ஸ்வாமி தேஶிகன் **ஸமாநம் யுஞ்ஜதீதி ஸதுக்; ஸயுஜோ பாவ: ஸாயுஜ்யம் - குணாஷ்டக ப்ராப்தி**( எட்டு வகை குணங்கள் கிடைக்கப் பெறுதல் என்று தீர்மானித்திருக்கிறார். அவைகள்-கிழத்தன்மை, மரணம், பசி, தாஹம், ஶோகம், ஸத்யகாமத்வம், ஸத்ய ஸங்கல்பத்வம், பாபங்கள் இவைகள் இல்லாமை).

## அங்கங்களுடன் ப்ரதிஷ்டை செய்தவனுக்கு என்னென்ன பலன்கள் - இதன் விளக்கம்

உத்தமமான விமாநத்தை அமைத்து ஸுதர்ஶநத்தை ப்ரதிஷ்டை செய்து வேதங்கள் கற்றறிந்த ப்ராம்ஹணர்களை (வைஷ்ணவர்களாக)க் குறைந்த பக்ஷம் 12 பேர்களை அந்த ஸுதர்ஶநத்துக்குக் கைங்கர்யம் செய்பவர்களாக இயன்ற அளவு வஸதியுடன் அமர்த்தி, அவர்களுக்கு வேண்டிய ஸௌகர்யங்களைச் செய்து கொடுத்து, நிலங்களும், மடம் முதலியவைகளும் தந்து எவன் திநமும் இந்த பகவானுக்குச் சிறந்த முறையில் பூஜை செய்வானோ அவனுடைய செல்வாக்கும் ஆட்சியும் ஒவ்வொரு நாளும் அளவு கடந்து வளரும். நோயற்ற நிலையும், நீண்ட ஆயுளும் கிடைக்கும். இதில் ஐயமில்லை. அடுத்த பிறவியில் அகண்ட பூமண்டலத்துக்கு அதிபதியாகப் பிறந்து பூலோகத்தை முழுவதும் ஆண்டு, அடுத்த பிறவியில் ஸ்வர்கத்தின் அதிபதியாக (இந்திரனாக) இருந்து அந்த இந்திரனுடைய பதவியை வெகு காலம் அநுபவிப்பான். பிறகு வரிசையாகப் பல உலகங்களுக்கு அதிபதியாக இருப்பான். பிறகு விஷ்ணுவின் உலகமான **பரமபதம்** (வைகுண்டம்) அடைகிறான்.

## ஸுதர்ஶந ஆராதநம் செய்யாவிடில் அரசனாக முடியாது

இவ்வாறு இந்த தேவனை ஆராதிக்காமல் ஒருவனும் அரசனாக முடியாது.

### ஆராதநையில் ஏற்றத் தாழ்வின் பலன்

இதே போல் இந்த பகவானுடைய திருவாராதநத்தில் (பூஜையில்) ஏற்றத் தாழ்வு இருக்குமேயானால் அவன் ஸுக போகங்களில் ஏற்றத் தாழ்வு அமையும்.

### அரசர்களுக்கும் மற்றவர்களுக்கும் ஆராதநம் அவஶ்யம்

ஆகையால் ஒரு அரசன் எல்லா வகைகளிலும் முயன்று ஸுதர்ஶநத்தையே பூஜிக்க வேண்டும். நல்ல பிறப்பு, நீண்ட ஆயுள், ஸுக போகம் இவற்றை விரும்புபவர்கள் ஆகிய மற்றவர்களும் இந்த ஸுதர்ஶநத்தைப் பூஜிப்பதன் மூலம் விரும்பும் எல்லா பலன்களையும் பெறுவார்கள்.

**ஶேஷியான (தலைவன்) கேஶவன் முதலியவர்கள் ஶேஷபூதனான (அடிமை) ஸுதர்ஶநத்துக்கு எப்படிப் பரிவாரமாக இருக்கிறார்கள்?**

**நாரதர்!** ஆயுதம் என்கிற பெயரை உடைய **ஸுதர்ஶநம்** விஷ்ணுவுக்கு **ஶேஷன்** (தாஸன், அடிமை) என்பது தெளிவான விஷயம். இந்த நிலையில் இத்தகைய ஸுதர்ஶநத்துக்குக் **கேஶவன்** முதலிய மூர்த்திகள் பரிவாரமாக இருக்கின்றனர் என்று எப்படிச் சொல்லப்படும்? விஷ்ணு முதலிய மூர்த்திகள் அனைவரும் எப்படிக் கூண்டு போல் அமைக்கப்பட்டிருக்கின்றனர்? மேலும் பகவானைக் குறிக்கும் மந்த்ரங்கள் எப்படிப் பரிவாரம் என்கிற நிலையில் இருக்கின்றன? ஸ்வாமிந்! இந்த ஸந்தேஹத்தை தேவரீர் இப்பொழுது நீக்கி அருள வேண்டும்.

### இதற்குப் பதில் தொடக்கம்

**அஹிர்புத்ந்யர்:** அப்பனே! மஹா புத்தி உடையவரே! இது ஒரு மிகவும் ரஹஸ்யமான விஷயம், சொல்கிறேன், கேளும். உம்மைத் தவிர இம்மாதிரி கேள்விகள் கேட்க யாராலும் முடியாது.

### ஸுதர்ஶமும் அநாதி, அளவு கடந்தவர்

நாரதரே! புண்டரீகாக்ஷனான, புருஷனான நாராயணன் என்கிற பகவான் எப்படி அநாதியாகவும் மூன்று வகை அளவுகள் இல்லாதவராக இருக்கிறாரோ, அவ்வாறு இந்த

ஸுதர்ஸநமும் அநாதியாயும் அபரிச்சேத்யமாயும் இருக்கிறது. (**கால பரிச்சேதம், தேஸ பரிச்சேதம், வஸ்து பரிச்சேதம்** என்று அளவு மூன்று வகை. அதாவது இந்தக் காலத்தில் இருந்தார், இந்தக் காலத்தில் இல்லை, என்றோ, அங்கிருக்கிறார், இங்கு இல்லை என்றோ, இந்தப் பொருளாயிருக்கிறார், இது இல்லை என்றோ உள்ள விஷயம் முன்பு சொல்லப்பட்டது.)

**இதை விளக்க பகவானுடைய ஸக்தி இரண்டாகப் பிரிதல்**

எல்லாப் பொருள்களையும் படைக்கும் விஷயத்தில் இரண்டு ஸக்திகள் விஷ்ணுவிடத்தில் தோன்றுகின்றன. இவை மிகவும் முக்யமானவை. இவைகளைக் கொண்டு தான் இவர் உலக விஷயமான எல்லாப் பொறுப்புகளையும் நிறை வேற்றுகிறார். ஒன்று அவருடைய விருப்பம் என்கிற ஸ்வரூபமாக உள்ளது. மற்றொன்று செயல் வடிவத்தில் உள்ளது.

**இச்சா ஸக்தி லக்ஷ்மியே**

முதலாவது சொன்ன **இச்சை** என்பது உலகைப் படைக்கும் பகவானுடைய பத்நியான **மஹாலக்ஷ்மி**யாகும்.

**க்ரியா ஸக்தி ஸுதர்ஸநமே**

தத்வங்களை அறிந்த ஞாநிகளால் இரண்டாவது ஸக்தி **ஸுதர்ஸநம்** என்று கூறப்பட்டது.

**இந்த இரண்டு ஸக்திகள் இல்லாமல்**
**பகவான் எதுவும் செய்ய முடியாது**

ஆகையால் **லக்ஷ்மி** இல்லாமல் பகவான் **ஹரி** ஸங்கல்பம் என்கிற இச்சையைச் செய்ய முடியாது. இந்த **ஸுதர்ஸநம்** இல்லாமலும் **கேஸவன்** எதையும் செய்ய இயலாது.

**இந்த இரண்டு ஸக்திகளும் படைத்தல், காத்தல், அழித்தல்**
**இவற்றுக்கு ஸாதநங்கள்**

இந்த இரண்டினால் தான் பகவான் எல்லாவற்றையும் படைக்கிறார். இவற்றால் தான் காக்கிறார். பகவான்

கடைசியில் உலகத்தை அழிக்கவும் செய்கிறார். மதுஸூதநன் என்கிற பகவான் (நாராயணன்) தாநவர்களையும், தைத்யர்களையும் இந்த இரண்டின் மூலமே அழிக்கிறார். எல்லா இடங்களிலும் நிறைந்திருக்கும் இவ்விரண்டின் மூலம் தான் எல்லாக் கார்யங்களும் செய்யப்படுகின்றன.

### இரு வகை ஶக்தியும் ரக்ஷகனை பகவானுக்கு ரக்ஷ்ய கோடியில் சேரும்

ஆகையால் இந்த இரண்டு ஶக்திகளையும் பகவான் எப்பொழுதும் எல்லா வகையிலும் காப்பாற்றுகிறார்.

### குறிப்பாக லக்ஷ்மியும் லக்ஷ்ய கோடியிலேயே சேர்ந்தவள் என்பதன் விளக்கம்

ஒரு சொத்தின் யஜமாநனுக்குத் தன் சொத்துக்கள் எவ்வாறு தன்னாலேயே காப்பாற்றப்படும் நிலை உள்ளதோ அதே போல் எல்லா உலகங்களுக்கும் தாயாக விளங்கும் மஹாலக்ஷ்மியையும், லக்ஷ்மியை மார்பில் தாங்கும் பகவான் தன்னை நான்கு பிரிவுகளாகச் செய்து கொண்டு தன் உடைமையான லக்ஷ்மியைக் காப்பாற்றுகிறார். (ரக்ஷ்ய கோடி - காப்பாற்றப்படும் ஜீவர்களும் ஜடப் பொருள்களும் **பகவானுக்கு ஶேஷம்** என்று சொல்வது போல, மஹாலக்ஷ்மியும் பகவானால் காப்பாற்றப்படுகிறபடியால் பகவானுக்கு ஶேஷம் என்கிற பெயரையே பெறுகிறாள். இந்த உலகமனைத்துக்கும் பகவானும் பிராட்டியும் ஶேஷிகள். பிராட்டியோ பகவானுக்கு ஶேஷம். இதைப் பெரியோர்கள் குறிப்பிடும் போது மஹாலக்ஷ்மிக்கு ஏகோநஶேஷித்வம் என்று சொல்வர்.)

### அதனால் கேஶவன் முதலியவர்களும் பரிவாரம் என்பது தகும்

ஆகையால் **கேஶவன்** முதலிய மூர்த்திகளைப் பரிவாரமாக ஆக்கியதும், விஷ்ணு முதலிய மூர்த்திகளைக் கூண்டு என்று அழைத்ததும், பொருத்தமானதே. எல்லா மந்த்ரங்களும் உலகங்களைக் காக்கின்றன என்பது பொருத்தமே.

### வேறு ஒரு வகையிலும் குணங்களுக்கு முக்யத்வம் உண்டு என்பதை விளக்குகிறார்

இவ்வாறல்லது பகவானே ஸுதர்ஸநத்தின் உருவத்தில் இருந்து கொண்டு இருக்கிறார் என்று ஞானிகளால் கூறப்படுகிறது என்றும் கொள்ளலாம். **ஹரி** என்னும் திருநாமம் உடைய பகவான் **நாராயணன்** ஒவ்வொரு த்ரேதாயுகத்திலும் **ராம லக்ஷ்மண பரத ஶத்ருக்நன்** ஆகிய நான்கு உருவங்களிலும் இருந்து கொண்டு ஸாதுக்களைக் காப்பதற்காக இருக்கிறாரோ, அதே போல் சக்ரஸ்வரூபத்திலும் இருந்து கொண்டு காக்கிறார். ராமன் முதலியவர்களுடைய குணங்களின் முக்யத்வமும் அங்கு அடைந்திருக்கிறது. ஆகையால் **ஜநார்தநன்** தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்கிறான். தன் மூர்த்திகளைக் காப்பதற்குத் தன்னையன்றி வேறு யாரும் இல்லையன்றோ?

### இந்தரஹஸ்யத்தைக்கேட்பதுமுதலியவையும் படிப்படியாகப் பரம புருஷார்த்தமான முக்திக்கு ஸாதநமாகும்

இந்த ரஹஸ்யத்தை எவனொருவன் எப்பொழுது சொல்லிக் கேட்கிறானோ, இதைப் பற்றிக் கேள்வி கேட்கிறானோ, படிக்கிறானோ, நினைக்கிறானோ, அவன் இவ்வுலகத்தில் மிகப் பெரிய செல்வம், செல்வாக்கு முதலியவற்றைப் பெற்று அதன் பிறகு ஸ்ரீ ஹரியினுடைய பரமபதத்தைச் சென்று அடைவான்.

**இவ்வாறு பாஞ்சராத்ரம், தந்த்ர ரஹஸ்யம் அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** ஸுதர்ஸந யந்த்ர ஆராதந முறையில் **கேஶவன்** முதலிய **குணப்ராதாந்யம்** என்கிற 36வது அத்யாயம் முற்றிற்று.

★★★



## ந்யாஸம் என்கிற மற்றொரு பெயருடன் விளங்கும் ஶரணாகதியின் விளக்கம் என்கிற

# 37 வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥

### முன்பு சொன்ன விஷயங்களைச் சுருக்கமாகச் சொல்லி ஸுதர்ஶநம் 16 திருக்கரங்களுடன் விளங்கக் காரணம் என்ன என்று கேள்வி

**நாரதர்:-** ப்ரபோ! ஷாட்குண்ய பரிபூர்ணமான பகவாநே! பரமேஶ்வர! ஸுதர்ஶநருடைய யந்த்ரத்துக்கும் மந்த்ரத்துக்கும், ஸுதர்ஶநத்துக்கும் மற்றுமுள்ள அஸ்த்ரங்களுக்கும் தந்நிகரற்ற மஹிமையும், மூர்த்தி பற்றியும், லக்ஷணங்கள் பற்றியும், ஆராதநம் பற்றியும், யோகம், குறிப்பாக ஸ்வபாவங்கள் பற்றியும் தேவரீர் சொல்லி அருளினீர். உருவத்தைச் சொல்லும் பொழுது 16 புஜங்களுடன் இருப்பதாகவும் கொள்ளலாம் என்று கூறப்பட்டது. அது எப்பொழுது, யாரால், எதற்காக எத்தகையதாகச் செய்யப்பட வேண்டும்?

### அரசர்களுக்கு ஆபத்து வராமல் தடுப்பதே 16 புஜங்களின் பலன்

**அஹிர்புத்ந்யர்:-** பெரும் படைகளோடு கூடிய பகைவர்களால் அரசர்களுக்கு மதிப்புக் குறைவு ஏற்படும் பொழுது, நகரங்கள் எரிக்கப்படும் பொழுது, அரசர்களின் படைகள் புறங்காட்டி ஓடும் பொழுதும், அந்தந்த நாடுகளில் வாழும் மக்களுடைய ஸௌகர்யங்கள் அனைத்தும் தடை பெற்ற பொழுதும், மஹா முநிவரே! இவ்வாறு அரசர்களின் நாடு முற்றுகையிடப்பட்ட பொழுதும், பகைவர்கள் பலத்துடன் விளங்கும் பொழுது அரசனின் தகாத சூழ்நிலையில் 16 திருக்கைகளோடு கூடியவரும், யாராலும் எதிர்க்க முடியாதவருமான ஸுதர்ஶநத்தை ப்ரதிஷ்டை செய்ய வேண்டும்.

## 16 திருக்கரங்கள் கொண்ட ஸுதர்ஶநத்தின் திருமேனி வர்ணனை

கரை காணாதவரும், அளவிட முடியாதவரும், வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதவரும், சிவந்த நிறமுடையவரும் கம்பீரமான அங்கங்களோடு கூடியவரும், பட்டு பீதாம்பரம் தரித்தவரும், மின்னல்களின் கூட்டம் போல் விளங்கும் மேல் நோக்கிய கேஶங்களுடன் கூடியவரும், பிங்கள நிறமுடைய சுழலும் முக்கண்களால் பயங்கரமானவரும், உதட்டைக் கடித்துக் கொள்வதால் தெளிவாகத் தெரியும் கோரைப் பற்களிலிருந்து வெளிப்படும் தீயுடன் ப்ரகாஶிப்பவரும், ஒலிக்கும் சலங்கைகளுடன் கூடிய ஒட்டியாணத்துடன் விளங்குபவரும், பின்புறம் வட்டமாகத் தொங்கும் அழகிய பட்டு வஸ்த்ரத்துடன் கூடியவரும், வண்டுகளின் கூட்டங்களுடன் விளங்கும் திருவடி வரை தொங்கும் உத்தமமான முத்துக்கள் ரத்நங்கள் பதிக்கப்பட்ட கிங்கிணி மாலையைத் தரித்தவரும், **ஜல் ஜல்** என்று ஒலிக்கும் கம்பீரமான சிலம்புகளோடு விளங்கும் திருவடிகளை உடையவரும், மாலை, தோள்வளை, கம்மல் (குண்டலம்) மகுடம் முதலியவைகளுடன் ப்ரகாஶிப்பவரும், மற்றும் பல வகையான திருவாபரணங்களால் சாற்றப்பட்டவரும், வரிசையாகச் சக்ரம், கோடாலி, ஈட்டி, தண்டம், மாவெட்டி இவைகளையும், பல முகங்களோடு கூடிய ஆயுதங்களையும், கத்தி, ஶக்தி இவைகளையும், மேல் நோக்கி நீண்ட உத்தமமான எட்டு வலது திருக்கரங்களால் தரிப்பவரும், இடது திருக்கரங்களால் முறையே, சங்கு, வில், கயிறு, கலப்பை, வஜ்ரம், **கதை,** உலக்கை, ஶூலம்- பயங்கரமான இந்த ஆயுதங்களைத் தரிப்பவரும், தன்னுடைய பக்தர்களின் எதிரிகள் மீது செலுத்தும் கோபத்தினால் கடுகடுத்த புருவ நெரிப்புடன் கூடிய பயங்கரமான முகத்தோடு கூடியவரும், சிறப்பான **ப்ரத்யாலீடம்** (ஒரு காலை முன் வைத்து மற்றொன்றைப் பின் வைத்து நிற்பது) என்கிற நிலையில் நிற்பவரும், ஒளி மிகுந்தவரும் ப்ரளய காலத்து அக்நி, ருத்ரன் இவர்கள் வடிவத்தில் இருந்து இந்த உலகங்களை அழிப்பவரும், கால ஸ்வரூபியும்,

### இவ்வாறு ஸுதர்ஶந த்யாநத்தினால் பகைவர் அழிதல்

ஒளி மிக்கவருமான ஸுதர்ஶநத்தைத் த்யாநிக்க வேண்டும். இவரை த்யாநிப்பதன் மூலம் அரசன் உடனே பகைவன் அற்றவனாக விளங்குவான். அந்தப் பகைவர்கள் பூமியில் எங்கும் தலை காட்ட மாட்டார்கள். பகைவர்கள் இங்குமங்கும் ஓடி அழிவார்கள்.

### ஸுதர்ஶநத்தைப் பூஜிக்காத அரசர்களுக்குப் பகைவர்களால் தொந்தரவு விளையும்

இவ்வகையில் இவரைப் பூஜிக்காத அரசர்கள், பலம் மிக்கவர்கள் ஆயினும் பகைவர்களால் தோல்வியைத் தழுவுவார்கள். செல்வங்களையும் இழந்தவர்களாக ஆவர்.

### யோகத்தினாலோ, ஶரணாகதியினாலோ ஸுதர்ஶந ஆராதநத்தால் இம்மையிலும் மறுமையிலும் நற்பலன்கள் ஏற்படும்

எவனொருவன் பக்தியுடன் வெளிப்படையான யோகத்தாலும், மாநஸிகமான ஶரணாகதியாலும் முன் சொன்ன வழியில் பூஜிப்பானோ, அவன் இவ்வுலகிலும் மேல் உலகிலும் பேரின்பம் பெறுவான். முநிவரே! இதில் ஸந்தேஹமில்லை.

### ந்யாஸம் என்கிற ஶரணாகதியைப் பற்றிக் கேள்வி

**நாரதர்:-** மஹேஶ்வரனே! வெளிப்படையானதும் மாநஸிகமானதுமான யோகம் பற்றிச் சொன்னீர்கள். ந்யாஸம் என்கிற உபாயமும் சொல்லப்பட்டது. அது பற்றி அடியேனுக்கு விளக்கிக் கூற வேண்டும்.

### ந்யாஸம் என்பது மிகவும் ரஹஸ்யமானது

**அஹிர்புத்ந்யர்:-** பெரிய உபநிஷத்துக்களில் கூறப்பட்டுள்ள இது தேவர்களுமறியாத பரம ரஹஸ்யமான விஷயம். விரும்பிய பலனைத்க்கைமேல் தர வல்லது. அனைத்துப் பாபங்களைப் போக்கும் திறன் கொண்டது.

இதை எல்லோருக்கும் சொல்லி விடக் கூடாது. பக்தி இல்லாதவனுக்கு ஒரு போதும் சொல்லலாகாது. நீர் என் மீது ஆழ்ந்த பக்தியுள்ளவர் என்பதால் உம் க்ஷேமத்தை விரும்பி இப்பொழுது இதைச் சொல்லுகிறேன்.

### ஶரணாகதி எல்லா பலன்களேயும் தரவல்லது

பல வித விருப்பங்களை அடைய விரும்பும் யாரால் மற்ற உபாயங்களால் அடைய முடியாதோ, மோக்ஷத்தில் விருப்பம் உடையவனுல் ஸாங்க்யத்தாலோ, பக்தியாலோ, பெற முடியாதோ, எங்கு சென்றவன் திரும்பவும் பூவுலகுக்கு வர மாட்டானோ, அப்படிப்பட்ட **பரமபதம்** ந்யாஸத்தினாலேயே அவர்களுக்குக் கிடைக்கும். மஹா முநிவரே ! பரம புருஷனுன புருஷோத்தமன் என்கிற பகவானும் இதனால் அடையப்படுவான்.

### ப்ரபத்தியின் அங்கங்கள் ஆறு

மஹா முநிவரே ! வேதத்தைக் கற்றறிந்த ஞாநிகள் ந்யாஸம் ஆறு வகையானது என்று சொல்லுகிறார்கள்.

*1.* **ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப:-** உமக்கு அநுகூலமாகவே இருப்பேன் என்று தீர்மானித்துக் கொள்ளுதல். (2) **ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்:-** வேதத்தில் விதித்த கட்டளைகளை மீறுதல் - விலக்கிக் கொள்ளுதல் (3) **ரக்ஷிஷ்யதீதி விஶ்வாஸ:-** பகவான் நம்மைக் காத்தருள்வான் என்கிற திட நம்பிக்கை (4) **கோப்த்ருத்வ வரணம்:-** நீ என்னைக் காத்தருள வேண்டும் என்று ப்ரார்த்தித்தல் (5) **ஆத்மநிக்ஷேப:-** தன்னுடைய ஆத்மாவை பகவானுடைய சொத்து (ஶேஷம்) என்று உம்முடைய சொத்தை உம்மிடமே ஸமர்ப்பித்து விட்டேன் என்று ஸமர்ப்பித்தல் (6) **கார்பண்யம்:- ஆகிஞ்சிந்யம் அநந்யகதித்வம்** இரண்டும் சேர்ந்து **கார்பண்யம்** - அதாவது கர்ம, ஞாந, பக்தி யோகங்கள் போன்ற ஸாதநங்கள் என்னிடம் இல்லை உன்னைத்தவிர வேறு **ஶரணம்** (காப்பவர்) யாரும் இல்லை என்று கூறுதல்- ஆக இவ்வாறாக ஶரணாகதி என்பது ஆறு வகையாக இருக்கும். (**குறிப்பு: அஷ்டாங்க யோகம்**

என்பதில் **ஸமாதி** என்பது **அங்கி** என்றும், **யமம்** முதலியவை அங்கங்கள் என்றும், அங்கங்களையும், அங்கியையும் சேர்த்து **அஷ்டாங்க யோகம்** என்று வழங்கப்படுகிறது. அதே போல் இங்கும் **ஆத்மநிக்ஷேபம்** என்பது **அங்கி** - மற்ற ஐந்தும் **அங்கங்கள்**. ஆக இரண்டையும் சேர்த்து **ஷட்விதா ஶரணாகதி:** என்று சொல்லப்படுகிறது).

**ப்ரபத்தியைச்** சொல்லுமிடத்தில் **ஶரணம்** என்கிற சொல் **உபாயம் (ஸாதநம்), வீடு காப்பவன்** என்கிற பல பொருள்களை உடையது. ஆனால் இங்கு ப்ரபத்தியைச் சொல்லும் இந்த வாக்யத்தில் **உபாயம்** என்னும் பொருளையே குறிக்கும்.

## ப்ரபத்தியின் இலக்கணம்

அடியேன் குற்றங்களுக்கெல்லாம் இருப்பிடம். கை முதல் ஏதும் இல்லாதவன். ரக்ஷகன் யாருமில்லாமல் இருக்கிறேன். தேவரீரே அடியேனுக்கு உபாயமாக இருக்க வேண்டும் என்று ப்ரார்த்தனை வடிவமான ஞாநம் **ஶரணாகதி** என்று சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட ஶரணாகதி பகவான் விஷ்ணுவிடம் செய்யப் பட வேண்டும். (**கார்பண்யம்** என்பதற்கு வேறு கதியில்லாமை, **கர்ம ஞாந பக்தியோக**மில்லாமை என்று குறிப்பிடப்பட்டது. ஆகையால் நம் ஆத்மாவை ஸமர்ப்பிக்கும் பொழுது ஒரு **உபாய**த்தைக் கொண்டு தான் ஸமர்ப்பிக்க வேண்டும். அப்படி ஏதும் இல்லாததால் தேவரீரே அந்த **பக்தி** என்கிற **உபாய**மாக இருந்து ரக்ஷிக்க வேண்டும்.

**ஸுதர்ஶநத்தினிடம் ப்ரபத்தி செய்யும் பொழுது சிறப்பான மந்த்ரம் சொல்கிறார்.**

''பகவானே! (ஆறு குணங்கள் நிரம்பியவனே!) தேவரீர், எதையும் வெற்றி கொள்ளும் இயல்பு உடையவர். ஆயிரம் ஆரங்களோடு கூடியவர். எங்கும் தோல்வியைக் காணாதவர். க்ஷேமத்தைக் கொடுப்பவரும், ஸ்ரீ ஸுதர்ஶநம் என்கிற திருநாமம் உடையவருமான தேவரீரை ஶரணமாகப் பற்றுகிறேன்.''

### ப்ரபத்தி செய்பவனின் அனைத்து பாபங்களும் தொலையும்

இப்படி ப்ரார்த்திப்பதன் மூலம் பகவான் ஸார்ஸநத்தை ஶரணமடைந்தவனுக்கு, அவனைத் தொடர்ந்து வரும் ஸகல பாபங்களும் தீர்ந்து விடும். ஸந்தேஹமில்லை.

### ப்ரபந்நன் க்ருதக்ருத்யன்

மஹர்ஷியே! இந்த ப்ரபந்நனால் எல்லா வகைத் தவங்களும், எல்லா புண்யதீர்த்த ஸ்நாநங்களும், எல்லா யாகங்களும், எல்லா வகைத்தாநங்களும், உடனே செய்யப்பட்டன ஆகின்றன. மோக்ஷமும் அவன் கையில் இருக்கிறது. ஸந்தேஹம் இல்லை.

### இந்த ந்யாஸம் செய்வதாலேயே தவம், யாகம் செய்த பலன் கிட்டும் என்பது எப்படி? என்று கேள்வி

**நாரதர்:-** ஸ்வாமிந்! இந்த **ந்யாஸம்** என்கிற **ஶரணாகதி** ஒன்றினால் மட்டும் தவங்களும், யாகங்களும், புண்ய தீர்த்த ஸ்நாநங்கள், தாநங்கள் எல்லாம் அவனுக்குக் கிடைக்கும் என்பது எப்படி? இதைச் சொல்ல வேண்டும்.

### ந்யாஸம் தவங்களுக்கெல்லாம் மேற்பட்டது என்று பதில்

**அஹிர்புத்ந்யர்:-** எந்தத் தவங்கள் மோக்ஷம் தர வல்லவை என்று விதிக்கப்பட்டுள்ளனவோ, அந்தத் தவங்களுக்கெல்லாம் மேற்பட்டதாகும் இந்த **ந்யாஸம்.** யாகங்களுக்கான ஸமித்துகள் போன்ற ஸாதநங்களை விட ஆத்மாவை அர்பணம் செய்வதை எவன் செய்கிறானோ, அவன் **ஸ்வத்வர:** (சிறந்த யாகம் செய்தவன்) என்று சொல்லப்படுகிறான்.

### ந்யாஸமே மேலான தர்மம் என்பதற்கு ஆதாரம்

இந்த **ப்ரபந்நன், ப்ரபத்தி** என்னும் யாகத்துக்கு ஸாதநமான தன் ஆத்மாவைக் கொண்டு ஆராதித்தால் அவன் செய்த தர்மங்கள் எல்லாவற்றிலும் மேலானவையாகும் என்று நாம் கேட்டிருக்கிறோம்.

## ந்யாஸம் எல்லா யாகங்களுக்கும் ஒப்பானது

யக்ஞ ஸ்வரூபத்தைக் கொண்டு விளங்கும் பகவானைத் தன் ஆத்மாவை மட்டுமே கொண்டு எவன் ஆராதிக்கிறானோ, மஹாத்மாவான அவனால் எல்லா யாகங்களும் செய்யப்பட்டவை ஆகின்றன.

## ந்யாஸம் யக்ஞம் தான் என்பதை உறுதிப்படுத்த யாகங்களுக்கான அங்கங்கள் இங்குக் குறைவின்றி உள்ளன என்கிற விளக்கம்

யக்ஞம் என்கிற பெயருடைய **ந்யாஸத்துக்கு** ஶரீரமே **வேதி**(அக்நி வைக்கும் இடம்). அவனுடைய வாய் **ஆஹவநீயம்** என்கிற அக்நி - அவனுடைய ஹ்ருதயம் **தக்ஷிணாக்நி.** அவன் வயிறே **கார்ஹபத்யாக்நி** என்று வேதத்தால் சொல்லப்படுகிறது. **யஜமாநன்** அவனுடைய மநமே. **யஜமாநனுடைய பத்நி** என்கிற இடத்தில் இவனுடைய புத்தி இங்குள்ளது. தன் பக்தர்களுக்கு எவர்கள் பகைவர்களோ, அவர்களே யாகத்துக்குப் **பஶுக்கள்**( இங்குப் பஶு என்பது நமக்குப் பால் தரும் பஶு அன்று. ஸம்ஸ்க்ருதத்தில் **சதுஷ்பாத: பஶவ:** என்று நான்கு கால்கள் உள்ளவை எல்லாம் பஶுக்களாகச் சொல்லப்படுகின்றன. யாகத்துக்குப் பயன்படுவது வேறு வகை ஐந்து). இதற்கு ரோமங்களே **அக்நி**யாகும். ஆத்மாவே **ஹவிஸ் (ஹவ்யம்)** என்று சொல்கிறார்கள். **ஸவநங்கள்** என்பவை ஶிரஸ்ஸும், இடுப்பும், பாதங்களும் ஆகும். (யாகத்தில் **ப்ராத:ஸவநம், மாத்யந்திந ஸவநம், ஸாயம் ஸவநம்** என்று மூன்று காலங்கள் உண்டு. அது இங்கு கூறப்பட்டது). இவனுடைய ஞாநேந்த்ரியங்கள், கர்மேந்த்ரியங்கள் இவையே யாகத்தில் உள்ள பத்து வகை ஆயுதங்கள். மஹா முநிவரே ! யாகத்தில் இருக்கும் **ருத்விக்** என்பவர்கள் இங்கு ஸுதர்ஶநத்தின் புஜங்களேயாகும். நாரதரே! பகவானின் **பக்தர்களைக் காப்பேன்** என்கிற ஸங்கல்பமே யாகத்தில் உள்ள தீக்ஷையாகும். ருக், யஜுஸ், ஸாம வேதங்களின் ஒலி, இங்கு திருவாபரணங்களின் ஒலியேயாகும் என்று கருதப்படுகிறது.

இந்த யாகத்துக்கு ஸபையில் உள்ள மற்றும் சில பார்வையாளர்களே இங்குத் திருவாபரணங்கள் ஆகும். பகவானின் க்ருபை தான் **ந்யாஸம்** என்கிற யாகத்துக்கு தக்ஷிணை. யாகத்தில் **ஜுஹூ** என்றும், த்ருவா என்றும் **ஸ்ருவ** என்றும் சில ஸாதநங்கள் ஸ்தாநத்தில் **ப்ராசித்ரஹரணம்** என்பதைக் கொள்ள வேண்டும். **மேக்ஷணம், உபப்ருதம்** என்கிற ஸ்தாநத்தில் இடா பாத்ரமாகும். **தாரு, யோக்த்ரம், சமஸ், ஸ்ருஷ்டி, பிஷ்டோத்வபநீ, ஆஜ்ய ஸ்தாலீ** என்கிற இடத்தில் **இத்மம் ப்ரவ்ரசநம்** ஆகிறது. **மதந்தீ** என்பது ந்யாஸத்துக்குச் சக்ரம் முதலிய ஆயுதங்கள் ஆகும்.

## ஶரணாகதி செய்பவன் க்ருதக்ருத்யன் ஆகிறான் என்பதின் விளக்கம்

இந்த வகையில் இருக்கும் அந்த ஸுதர்ஶநத்தை **ஆத்ம நிவேதநம்** செய்து பூஜித்து ஸகல பாபங்களும் நீங்கப் பெற்ற **ப்ரபந்நன்** அநேக யாகங்கள் செய்தவனாக ஆகிறான். ஸந்தேஹமில்லை.

## ஸுதர்ஶந ஆராதநம் செய்யாவிடில் கஷ்டங்கள் நேரும்

இவ்வாறு பல வடிவங்களோடு கூடிய அந்த ஸுதர்ஶநத்தைச் செய்து வைத்து, அவரை ப்ரதிஷ்டை செய்யாமல் இருக்கும் அரசர்களோ, மந்திரிகளோ பூஜை இல்லாமல் இருக்கும் காரணத்தால், பகைவர்களால் தோற்கடிக்கப்பட்டு, ராஜ்யத்தை விட்டு வெளியேறி, எங்கோ ஓடித் திரிவார்கள்.

## அவ்வாறு ஆராதநமில்லாத ராஜ்யத்தில் ப்ரம்மஹத்தி தோஷம் ஏற்படும்

மஹர்ஷியே! அவருடைய ராஜ்யம் ப்ரம்மஹத்தி முதலிய தோஷங்களால் நிறைந்ததாக ஆகிவிடும். **ஸமித்** என்று இதற்கு ருக்வேதம் தயையுடன் பொருள் கூறுகிறது.

## அரசனுக்கு ஜநங்களின் மதிப்பு குறையும்

ஏனென்றால் அந்தச் சக்ரத்தைப் பூஜை செய்யாமல் இருந்தால், அந்த நாட்டில் உள்ள மக்கள் அனைவரும் அரசன்

குற்றம் செய்தவனாக அவன் மீது வெறுப்பு கொண்டவர்கள் ஆவார்கள். இவன் மீது அலக்ஷ்ய புத்தி கொண்டு இந்த ஜந்மத்தில் பலவிதக் கஷ்டங்களை அநுபவித்துக் கொண்டு மரணத்துக்குப் பின் கீழ்மையாகவே பிறந்து எங்கும் இன்பம் பெற மாட்டார்கள்.

## ஸுதர்ஶநத்தைப் பூஜிப்பது எல்லாவிதப் பலன்களையும் கொடுக்கும்

ஆகையால் யாகஸ்வரூபமாக இருப்பவரும், தன் பக்தர்களைக் காக்கும் விஷயத்தில் வ்ரதம் கொண்டவரும், மிகவும் பயங்கரமானவரும், 16 திருக்கரங்களோடு கூடியவரும் தன் பகைவர்களை அழிக்க முயற்சி கொண்டவருமாகிய பகவானை முன் சொன்ன வடிவத்துடன் எல்லா ஆயுதங்களைத் தரிப்பவராகவும், உருவங்கொண்ட அஸ்த்ரங்களுடன் கூடியவராகவும், வஸ்த்ரத்தில் எழுதியோ, ஶிலையில் நிர்மாணித்தோ, பஞ்ச லோஹத்திலோ, இவருடைய பிம்பத்தைச் செய்வித்து, பூஜை செய்து, எந்த அரசன் பக்தியுடன் ப்ரதிஷ்டை செய்து ஸுதர்ஶநத்தைப் பூஜை செய்து வருவானோ, அவனுக்கு உடனே விரும்பியதெல்லாம் நிறைவேறும். அவனுடைய எதிரிகளும் அழிவர்.

**இவ்வாறாக ஸ்ரீ பாஞ்சராத்ரம் தந்த்ரரஹஸ்யம்**
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் ந்யாஸம்**
**என்கிற ஶரணாகதியின் விளக்கம் என்கிற**
**37வது அத்யாயம் முற்றிற்று.**



ஜ்வரம் முதலிய ரோகங்களுக்குப் பரிஹாரம் செய்யும் முறை விளக்கம் என்கிற

# 38வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவானேககோட்யகௌகம் ஹரத்யரம் ।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥

*(விளக்கம் 18ம் அத்யாயத்தில் உள்ளது)*

## முன் சொன்ன விஷயங்களை மீண்டும் சொல்லி நோய்கள் தீர என்ன வழி என்கிற கேள்வி

**நாரதர்:** எல்லாமறிந்த பகவானே! அரசர்களுக்குப் பகைவர்களிடமிருந்து நல்ல பாதுகாப்பு பற்றியும், அவ்வாறே எல்லா வகையான புருஷார்த்தங்களும் தேவரீரால் கூறப்பட்டன. அதற்கு ஸாதநங்களும் மற்ற மற்ற விஷயங்களும் அதன் தொடர்ச்சியாகச் சொல்லப்பட்டன. ஆனால் பகவானே! இந்த ஒரு விஷயத்தைக் கேட்கிற எனக்கு விளக்க வேண்டும். அரசர்களுக்கும், மந்திரிகளுக்கும் மற்ற மக்களுக்கும் புருஷார்த்தங்களுக்கு இடையூறாக நோய்கள் வருமன்றோ? அவற்றைத் தீர்ப்பது எந்த உபாயத்தால் ஸாத்யமாகும்?

## நோய்கள் ஏற்படுவதற்கும் அவைகள் நீங்கவும் காரணங்கள்

**அஹிர்புத்ந்யர்:** முநிவரே! நல்ல கேள்வி கேட்டீர். எந்தக் காரணத்தால் பொறுக்க முடியாத நோய்கள் ஏற்படுகின்றனவோ, அவை எதனால் தீருமோ, அதை இப்பொழுது உமக்குச் சொல்கிறேன், கேளும்.

## ப்ரளய காலத்தில் பகவான் தனியாக விளையாட முடியாது

ப்ரக்ருதியிலிருந்து பிறந்த இந்த உலகங்களெல்லாம் அழியும் போது, அசையும் பொருள் - அசையாப் பொருள் அழியும் காலத்தில், மஹா முநிவரே! எல்லா பஞ்ச பூதங்களும் தந்மாத்ரங்களில் லயிக்கும் பொழுது அந்தத் தந்மாத்ரங்கள் இந்த்ரியம் முதலியவைகளுடன் தேஜோமயமான **மஹாந்** என்கிற தத்வத்தில் ஒடுங்கி இருக்கும் காலத்தில் பிறகு புத்தி

என்கிற பெயருடன் விளங்கும் மஹான், ப்ரக்ருதியில் ஒடுங்கிய பொழுது, அந்த ப்ரக்ருதி 25வது தத்வமான புருஷனில் லயிக்கும் பொழுது, புண்டரீகாக்ஷனான புருஷனிடம் ஒடுங்கியிருக்கையில் ஸகலத்தையும் ஒடுக்கிப் பரம புருஷனான பகவான், புண்டரீகாக்ஷன், பரமாத்மா, ஜகத் முழுதும் பரவி இருப்பவர், தான் ஒருவர் மட்டுமே இருந்து விளையாட முடியாது.

## விளையாட உலகைப் படைத்தார்

அந்த பகவான் **புண்டரீகாக்ஷன்** விளையாட இந்த உலகைப் படைத்தார்.

## பெயர் உருவம் இவற்றை வகுத்தல்

எல்லா இடங்களிலும் நிறைந்திருக்கும் அந்த பகவான் முதலில் பெயர்களையும் உருவங்களையும் படைத்தார்.

## ப்ரக்ருதியைப் படைத்து விளையாடினார்

ஜநார்தநனன பகவான் விளையாட்டுக்கு உபகரணங்களாக மூன்று குணங்கள் நிறைந்த **மாயை** என்கிற ப்ரக்ருதியைப் படைத்து அதைக் கொண்டு விளையாடினார். அந்த ப்ரக்ருதியோ பல வகையான ஶக்திகளோடு கூடி எல்லா பூதங்களையும் உண்டாக்கியது.

## ஜீவனுக்கும் ப்ரஹ்மத்துக்கும் உள்ள ஸ்வரூப வேறுபாட்டை மறைத்தல்

அதனால் அந்த பகவானை ஸந்தோஷப்படுத்திக் கொண்டு அவ்வாறே ஜீவனுக்கும் பரப்ரஹ்மத்துக்கும் உள்ள வேறுபட்ட ஸ்வரூபங்களை மறைத்துக் கொண்டுள்ளது. அது தன்னிடம் யோக்யதா புத்தியை (இன்பத்துக்கு உதவி என்கிற எண்ணத்தை) உண்டு பண்ணிக் கொண்டு விளங்குகிறது.

## பரவஶத்தால் உலகம் ஸம்ஸாரத்தில் உழல்கிறது

அந்த ப்ரக்ருதியினால் பரவஶமான (தந்நிலையை மறந்த) இந்த உலகமனைத்துமே பிறப்பு - இறப்பு சக்ரத்தில் சிக்கிச் சுழன்று வருகிறது.

## தேஹத்தை ஆத்மா என்று எண்ணுதல்

அதனுல் இந்த ஜீவன் உடலில் **ஆத்மா** என்கிற எண்ணத்தைத் தோற்றுவித்துக் கொள்கிறது.

## உடல் ஸம்பந்தம் பெற்ற மக்களிடம் மமகாரம்

அதனால் உடல் ஸம்பந்தம் பெற்ற புத்திரன் முதலிய மக்களிடம், **மமகாரம்** (என்னுடையவர்கள்) என்கிற எண்ணம் தோன்றுகிறது.

## அஹங்கார மமகாரத்தால் பிறந்த வாஸனை உறுதியாகிறது

அதனால் முநிவரே ! **அஹங்காரத்தாலும்** மமகாரத்தாலும் ஏற்பட்ட வாஸனைகள் மக்கள் முதலியவர்களிடம் வேரூன்றிப் பலகாலம் உறுதியாக நிற்கின்றன.

## இதனாலேற்பட்ட விருப்பு வெறுப்புக்களால் புண்ய பாபங்கள் ஏற்படுகின்றன

அதனால் தன் தேஹத்தின் மீதும் புத்ரர்கள் முதலியவர்கள் மீதும் பற்றுதலும் பகையும் ஏற்படுகின்றன. இவற்றின் மூலம் மற்றவை நடைபெறுகின்றன. மட்டமான கார்யங்களையும் நல்ல கார்யங்களையும் இந்த மனிதன் செய்து வருகிறான்.

## பிறப்பு முதலியவை பெறுகிறுன்

அதன் விளைவுகளான பிறப்பு, ஆயுள், இன்பம், துன்பம் போன்றவைகளைப் பெறுகிறுன்.

## கர்மாவின் பலனை அநுபவிக்க ஶரீரம் உண்டாகிறது

இதனால் இரண்டுவகை கர்மாக்களின் பலனைப் பெறுவதற்காக, ப்ராரப்தங்களை அநுபவிப்பதற்காக இந்த உடல் படைக்கப்படுகிறது.

## நோய்கள் பாபங்களின் விளைவுகளாகும்

ஆகையால் பாபங்களாலேயே இந்த உடலில் நோய்கள் பிறக்கின்றன. இந்த ஜீவனால் தீமையே மிகுந்த பல வகைப்பட்ட நோய்கள் அநுபவிக்கப்படுகின்றன.

## இவற்றில் முதலில் ஜ்வரம் நீங்க வழி

அரசனோ, அமைச்சரோ, மற்றவர்களோ, காய்ச்சலால் கஷ்டப்படும் பொழுது மந்த்ரங்களில் தேர்ச்சி பெற்ற பெரியோர்களால் **மஹா ஸுதர்ஶந யந்த்ரம்** கூறப்பட்டுள்ளது. குடு, சீரம், (வெல்லம், பால்) நெய் இவற்றை ஒன்றாகக் கலந்து நான்கு அங்குலம் அளவு எடுத்துக் கொண்டு நன்கு எரியும் அக்நியில் இந்த (ஸுதர்ஶந) மந்த்ரத்தால் ஆயிரம் முறை ஹோமம் செய்ய வேண்டும். ஶுத்தமான இடத்தில் நல்ல அரிசியைக் கொண்டு தாமரை போன்ற சக்ரம் அமைத்து, அதில் பாத்ரத்தை வைத்து, அதில் ஒரு படி அளவு நெய் நிரப்பி, அதில் 1 பலம் எடையுள்ள பருத்தி நூல் திரிகளில் தீபம் ஏற்றி, அதில் மந்த்ரங்களை அறிந்தவர் இந்த மந்த்ரத்தின் மூலம் ஸுதர்ஶநத்தை ஆவாஹநம் செய்து பிறகு மேற்குப் பக்கத்தில் அலங்கரிக்கப்பட்ட ஶுத்தமான இடத்தில் கோட்டை நெல்லைப் பரப்பி மஹேந்த்ர மண்டலத்தை அங்கு அலங்கரிக்க வேண்டும். அதன் மத்தியில் ஆறு அரங்கள் கொண்ட சக்ரத்தையும், அதன் மத்தியில் ப்ரணவத்தையும் எழுத வேண்டும். தட்டையான (பருத்தி) நூல்களால் சுற்றி வளைத்து, மிகவும் அழகான புதிய (மண்) கும்பத்தை வைத்து பச்சைக் கற்பூரம், சந்தநம், குங்குமப்பூ கலந்த ஜலத்தினால் நிரப்பி, அதற்கு வெளியில் சந்தநம், அக்ஷதங்களாலும் பூஜை செய்து, ஐந்து ரத்நங்கள், தாமரைப்பூ, அருகம்புல், தங்கக் காசு, சாம தாந்யம், **விஷ்ணு பர்ணீ** (துளஸீ) மஹாலக்ஷ்மீ பிம்பத்தையும் அதற்குள் சேர்க்க வேண்டும். கும்பத்தின் நாற்புறமும் பட்டு வஸ்த்ரத்தாலும் புதிய மாலைகளாலும் நன்கு அலங்கரித்து நோயாளியின் நாமாக்ஷரங்களோடு கூடிய ப்ரணவத்தின் மேல் வைத்து, பூர்ண சந்த்ரனை த்யாநம் செய்து கொண்டு, அங்கு ப்ரபுவான ஸுதர்ஶநத்தை எழுந்தருளப் பண்ண வேண்டும். தூபம், தீபம், மாலைகள் முதலியவற்றால் முறைப்படி பூஜித்து, தயிர், தேன், நெய் மற்ற எல்லா வகையான வ்யஞ்ஜநங்களோடு கூடிய அரிசியாலான ப்ரஸாதத்தை மனதுக்கு உகந்த நெய்யுடன் கூடிய வெல்லம் (மதுபர்கம்), உத்தமமான ஹவிஸ்ஸை பகவானுக்கு பின் ஸமர்ப்பிக்க வேண்டும். (**ஹவிஸ்** எனப்படுவது

வருமாறு- கஞ்சியை வடிக்காமலும், உஷ்ணம் குறையாமலும், நன்ருகப் பக்குவமான அரிசியாலான அந்நம்.) பிறகு நான்கு திசைகளிலும், இடை திசைகளிலும் பலி ஸமர்ப்பிக்க வேண்டும். நாரதரே! பிறகு நல்ல அரிசியால் செய்த அந்நத்தாலும், வெள்ளைப் புஷ்பங்களாலும், தூபம், தீபம் முதலியவற்றாலும் எட்டு திக்பாலகர்களுக்கும் அந்த க்ஷேத்ர தேவதைக்கும் பலி ஸமர்ப்பிக்க வேண்டும். கிழக்கு முகமாக ஆஸநத்தில் அந்த நோயாளியை உட்காரவைத்து, அவருக்கு எதிரில் அவர் ப்ரதிபிம்பம் தெரியும்படியாகக் கண்ணாடியை வைத்து, மந்த்ரத்தைச் சொல்லிக் கும்பத்தை எடுத்து அர்ச்சகர் கண்ணாடிக்கு அபிஷேகம் செய்ய வேண்டும். உடனே, சந்த்ரன் மேகத்திலிருந்து விடுபட்டவன் போல், அந்த நோயாளி நல்ல குணம் பெற்று ஜ்வரத்திலிருந்து விடுபடுவான். பிறகு கற்றறிந்த ப்ராஹ்மணர்களுக்கு, குறிப்பாக வைஷ்ணவர்களுக்குத் தங்கக்காசுகள் மூன்றும், நெய் இரண்டு படி, பசு, பச்சைக்கற்பூரம், சந்தநம், நல்ல ஆடைகள் இவைகள் அனைத்தையும் ஒருவருக்குக் கொடுக்க வேண்டும்; முநிவரே ! பரமபதத்தை அறிந்தவருக்காவது கொடுக்க வேண்டும். இதனால் அந்த நோயாளி உயிருள்ளவரை, நோயற்றவனாகவே வாழ்வான். ஸந்தேஹமில்லை.

### க்ஷய ரோகத்துக்குப் பரிஹாரம்

முநிஶ்ரேஷ்டரே ! க்ஷயரோகத்தால் அரசன் முதலியவர்கள் பீடிக்கப்படும்பொழுது கருங்காலிக் கட்டைகளால் ஜ்வலிக்கச் செய்து அக்நியில் தேனில் தோய்த்த நாயுருவி ஸமித்துக்களால் மந்த்ரம் தெரிந்த ஒரு பெரியவர் இந்த ஸுதர்ஶந மந்த்ரத்தைச் சொல்லி 1,000 முறை ஹோமம் செய்யவேண்டும். பிறகு மேற்குப்புறத்தில் முன் போல் அமைக்கப்பட்ட அக்நியில் துவரம்பருப்பும் நெய்யும் நிரப்பிய பாத்ரத்தில் இரண்டு பலம் எடையுள்ள திரிகளைக் கொண்டு ஏற்றி மந்த்ரங்களைச் சொல்லிப்பிறகு **ஸுதர்ஶந** பகவானை ஆவாஹநம் செய்ய வேண்டும். அதற்கும் மேற்புறம் ஒரு மணங்கு சம்பா அரிசியால் பரப்பப்பட்ட ஶுத்தமான

தரை அலங்கரிக்கப்பட்டு மஹேந்த்ரனுடைய மண்டலத்தை அமைத்து முன் போல் ஆறு ஆரங்களோடு கூடிய சக்ரத்தை எழுத வேண்டும். இதனுடைய ஆரங்களில் மந்த்ரங்களின் பீஜாக்ஷரங்களையும், நோயாளியின் பெயரையும் ப்ரணவத்தை இருபுறமும் எழுதி, முன்போல் ஆவாஹநாதி உபசாரங்களால் பூஜிக்கப்பட்ட கும்பத்தை அந்த மண்டலத்தில் வைத்து, சக்ர வடிவத்தில் இருக்கும் பகவானை ஆவாஹநம், செய்து பூஜித்து, கற்கண்டு, தேன், நெய் சேர்த்த பாலில் செய்யப்பட்ட ஹவிஸ்ஸை நிவேதநம் செய்ய வேண்டும். முன் சொன்னது போல் எட்டு திக்குகளிலும் ப்ருஹஸ்பதி, க்ஷேத்ர தேவதை, விநாயகர், துர்கை, அஷ்ட திக்பாலர்கள் இவர்களுக்கு பலி ஸமர்ப்பிக்க வேண்டும். பாயஸத்தால் செய்தால் சிறப்பாகும். முன் போலவே நோயாளியைக் கம்பளத்தால் போர்த்திக் கிழக்கு முகமாக ஆஸநத்தில் உட்கார வைத்து, மந்த்ரங்களைச் சொல்லிக் கும்பத்திலுள்ள தீர்த்தங்களால் அபிஷேகம் செய்ய வேண்டும். திநமும் கண்ணாடியில் நிழலாக இருப்பதை அபிஷேகம் செய்விக்க வேண்டும். தங்க நாணயம் இரண்டு, அதே அளவு வெள்ளி, கம்பளம், வேஷ்டி, இரண்டு படி எள்ளு, கமண்டலு, வெண்கலப் பாத்ரம், குடை, பாத ரக்ஷை ஒரு ஜோடி இவற்றை ஆஸ்திகனான ஒரு ப்ராஹ்மணனுக்கு அனைத்தையும் ஸகல மர்யாதைகளுடன் கொடுக்க வேண்டும். இதே போல் இதைச் செய்து வைக்கும் ஆசார்யனுக்கும், நல்ல த்ரவ்யங்கள் கொடுத்து பூஜித்து த்ருப்தி செய்ய வேண்டும். உடனே நோயாளி அந்தப் பெரிய நோயிலிருந்து விடுபடுவான். ஸந்தேஹமில்லை.

### நீரிழிவு நோய்க்குப் பரிஹாரம்

மஹர்ஷியே ! இதேபோல் நோயாளி நீரிழிவு நோயினால் பீடிக்கப்பட்டால் வில்வ ஸமித்துக்களால் இந்த (ஸுதர்ஶந) மந்த்ரத்தைச் சொல்லி ஆயிரம் தடவை மாந்த்ரிகர் (மந்த்ரம் அறிந்தவர்) ஹோமம் செய்ய வேண்டும். உளுத்தம் பருப்பு சேர்ந்த அந்நத்தால் ஹவிஸ்ஸை ஹோமம் செய்ய வேண்டும். இதே ஹவிஸ்ஸைக் கொண்டு பலியும் ஸமர்ப்பிக்க வேண்டும். அந்த நோயாளிக்கே அபிஷேகம்

செய்ய வேண்டும். மற்றவற்றை முன் போல் செய்ய வேண்டும். இரண்டு படி உளுந்து, ஐந்து வெள்ளிக் காசுகள், ஒரு எருது, இவற்றைக் கொடுக்க வேண்டும். முநிவரே ! நோயாளி நோயிலிருந்து விடுபட்டுவான்.

## வயிற்று நோய்க்குப் பரிஹாரம்

இவ்வாறே இருமல், வலி முதலிய வயிற்று நோய்களால் பல காலம் பீடிக்கப்பட்ட மனிதனுக்குப் பரிஹாரம் சொல்கிறேன், கேளும். ஸுதர்ஸநம் ஆவாஹநம் செய்யப்பட்ட கும்பத்தை முன் போல் உபசாரம் முழுமையாகச் செய்து அதற்குக்கிழக்கில் மத்தியில் அக்நி குண்டத்தில் அக்நியை ஜ்வலிக்கச் செய்து நெய்யில் தோய்த்த எருக்கம் குச்சிகளால் இரண்டாயிரம் முறை ஹோமம் செய்ய வேண்டும். மாந்த்ரிகர் ஸுதர்ஸந மந்த்ரத்தைக் கொண்டு இதே போல் எள்ளாலும் ஹோமம் செய்ய வேண்டும் (இரண்டாயிரம் முறைகள்). பிறகு கும்பத்தில் உள்ள தீர்த்தத்தைத் தொட்டுக் கொண்டு ஆயிரம் முறை ஸுதர்ஸந மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். பிறகு மாந்த்ரிகர் அஷ்டதிக்பாலகர்களுக்கு முறைப்படி பலி ஸமர்ப்பிக்க வேண்டும். நாரதரே ! பூதம், பிசாசு, க்ஷேத்ரதேவதை இவர்களுக்கும் பலி ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு அரிசி சாதத்தாலும், வெள்ளைப் புஷ்பங்களாலும், மாவுகளாலும், வெள்ளை நிறக்கொடிகளாலும் கும்பத்தில் ஆவாஹநம் செய்து பகவானை முறைப்படிப் பூஜை செய்ய வேண்டும். சர்க்கரை, தேன், தயிர் கலந்த எல்லாவகை வ்யஞ்ஜநங்கள் (கறிகாய்) கூடிய வெள்ளை அரிசிச் சாதத்தையும் ஹவிஸ் நிவேதநம் செய்யப்பட வேண்டும். பிறகு மாந்த்ரிகர் முன்பு மந்த்ரித்த கும்ப தீர்த்தத்தைக் கொஞ்சம் எடுத்து மந்த்ரத்தைச் சொல்லி நோயாளியைப் பருகச் செய்ய வேண்டும். பிறகு நோயாளியைக் கிழக்கு முகமாக உட்காரவைத்துக் கும்ப தீர்த்தத்தால் அபிஷேகம் செய்ய வேண்டும். ஏழு ப்ராஹ்மணர்களுக்குச் சக்திக்குத் தக்கபடி தாநம் செய்து உபசரிக்க வேண்டும். பிறகு ஆசார்யனை நிறைய பணம், வஸ்த்ரம், அலங்காரங்கள், பலவகைத் தாந்யங்கள்

ஸம்பாவனை செய்ய வேண்டும். அந்த நோயாளியின் வயிற்றிலிருந்த எல்லா நோய்களும் தீர்ந்துவிடும். ஸந்தேஹமில்லை. பிறகு அந்த மனிதன் நல்ல நிலைக்கு வருவான். எப்பொழுதும் தேவர்கள் போலவே மகிழ்ச்சியுடன் இருப்பான்.

## நரம்புத் தளர்ச்சிக்குப் பரிஹாரம்

ஒரு மனிதன் **அபஸ்மாரம்**(காக்கை வலிப்பு) நோயினால் துன்புறும்பொழுது பரிஹாரம் சொல்கிறேன் கேளும். பசுஞ்சாணத்தினால் மெழுகப்பட்டு ஶுத்தமாக உள்ளதும் ஸமமாகவும் மங்கள உபசாரங்கள் அனைத்தும் செய்யப்பட்டதாகவும் உள்ள இடத்தில் இரண்டு பாரம் எள்ளைச் சதுரமாகப் பரப்பி, அதில் இரண்டு கை அளவு **ஸுதர்ஶந** யந்த்ரத்தை வைக்க வேண்டும். முன் சொன்ன முறையிலேயே எல்லா மூர்த்திகளும் இல்லாமல் **ஸுதர்ஶநத்தையும், ந்ருஸிம்ஹனையும்** மந்த்ரமில்லாமல் (வைத்து) **ஸுதர்ஶந** மஹாயந்த்ரத்தை மத்தியில் முன் சொன்ன முறையில் வைத்து, முன் சொன்ன முறையில் நூலினால் அலங்கரிக்கப்பட்டதும், த்ரவ்யங்கள் சேர்க்கப்பட்டதுமாகிய தீர்த்த கும்பத்தைக் கம்பளத்தினால் போர்த்தி, கிழக்கில் முறைப்படி அக்நியை மண்டலமாக ஸ்தாபிக்க வேண்டும். பிறகு இந்த ஸுதர்ஶந மந்த்ரத்தால் இரண்டாயிரம் முறை எள்ளால் ஹோமம் செய்ய வேண்டும். பிறகு கும்பத்தைத் தொட்டுக் கொண்டு 1008 ஆவ்ருத்திகள் மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். மாந்த்ரிகர், மந்த்ரங்களால் ஜபிக்கப்பட்ட தீர்த்தத்தைக் கொண்டு **அபஸ்மாரத்**தினால் பீடிக்கப்பட்ட மனிதனைக் கிழக்கு முகமாக உட்காரவைத்து அபிஷேகம் செய்ய வேண்டும். பிறகு நோயாளி இந்த அபிஷேகத்தினால் ரோகத்திலிருந்து நீங்கப் பெற்றவனாய் ஒரே நொடியில் ஸுகம் பெறுவான். மற்ற ரோகங்களும் கூட அவனைப் பார்ப்பதற்கும் திறனற்றவையாகிவிடும். அவன் பிறகு ஆசார்யனைத் தநங்களாலும், தாந்யங்களாலும் மர்யாதை செய்ய வேண்டும். எந்த யந்த்ரத்தில் எந்தெந்த த்ரவ்யம் உள்ளதோ அதையும் அவனுக்குக் கொடுக்க வேண்டும். பிறகு



எட்டு ப்ராஹ்மணர்களை, எள்ளும் தங்கமும் கொடுத்துப் பூஜிக்க வேண்டும். ஒரு எருமை மாட்டை வெள்ளிக் காசுகளுடன் ஆசார்யனுக்குத் தானம் செய்ய வேண்டும். பிறகு அந்த மனிதன் நல்ல நிலை பெற்று தேவர்கள் போல் பூமியில் மகிழ்ச்சியுடன் வாழ்வான்.

இவ்வாறாகப் பாஞ்சராத்ரம், தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யில் ஜ்வரம் முதலிய
வ்யாதிகளிலிருந்து விடுதலைபற்றி
உபாயம் என்கிற 38ம் அத்யாயம் முற்றிற்று.



## எல்லா பலன்களையும் கொடுக்கவல்ல மஹாபிஷேக முறை என்கிற

# 39வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி॥

*(விளக்கம் 18ம் அத்யாயத்தில் உள்ளது)*

### எம்முறையில் எல்லா பலன்களைப் பெறலாம் என்கிற கேள்வி

**நாரதர்:-** எல்லாமறிந்த பகவானே! எந்த ஒரு கார்யத்தினால் நோய்கள் அனைத்தும் தீருமோ, எதன் மூலம் பகைவர்கள் அனைவரும் அழிவார்களோ, எதனால் எல்லா பலன்களும் கிடைக்குமோ, உலகம் முழுவதும் எதனால் தன் வஶமாக ஆட்சிக்கு வருமோ, எந்த ஒரு கார்யத்தால் தீமையற்ற செல்வம், செல்வாக்கு கிடைக்குமோ அதைச் சொல்ல வேண்டும்.

### பதில் சொல்லத் தொடங்குகிறார்

**அஹிர்புத்ந்யர்:** மஹா முநிவரே! எந்த ஒரு கார்யத்தால் எல்லா பலன்களும் கிட்டுமோ, இந்த ரஹஸ்யமான விஷயத்தை மிகவும் கவனத்துடன் கேளும்.

### மஹாபிஷேகம் என்கிற க்ரியையின் முறை

அரசனுக்கும் மந்த்ரிகளுக்கும், எல்லா தகுதியுள்ளவர்களுக்கும், தான் இருக்கும் நிலையிலிருந்து பரமபதத்துக்கு ஏற விரும்புபவர்களுக்கும், ஏதாவது ஒரு பலனை விரும்புகிற மற்ற ஸாதாரண மக்களுக்கும், எல்லா பலன்களையும் கொடுக்கவல்ல **மஹாபிஷேகம்** என்கிற கார்யம் செய்யப்பட வேண்டும்.

### அதற்கு அங்கமாக இடம் பற்றி

விஷ்ணு ஆலயம், பூந்தோட்டம், அல்லது வீட்டிலேயே ஸமமான மிகவும் ஶுத்தமான இடத்தில், எட்டு வகை மங்கள

வஸ்துக்களால் அலங்கரிக்கப்பட்ட இடத்தில் 9 பாரம் நெல் பரப்பி மாஹேந்த்ர மண்டலம் அமைத்து நாற்புறமும் ஜாதி மல்லிகைகளால் அலங்கரித்து, நடுவில் முன் சொன்ன முறைப்படி ஸுதர்ஶந யந்த்ரத்தை அமைக்க வேண்டும். சந்தநம், புஷ்பம் இவற்றாலும் பூஜிக்க வேண்டும். அதன் மத்தியில் மிகவும் மங்களகரமானதும், தந்நிகரற்றதுமான யந்த்ரத்தை அமைக்க வேண்டும். அதன் மத்தியில் நூலினால் அலங்கரிக்கப்பட்ட கும்பத்தை வைத்து ஆவாஹநம் மூலமந்த்ரத்தால் செய்ய வேண்டும். சந்தநம் சேர்த்த தீர்த்தத்தையும், நவரத்நங்களுடன் சந்தநம், அகில் பொடி, பச்சை கற்பூரம், குங்குமப்பூ அரைத்த விழுது, இவற்றுடன் கூடிய அக்ஷதங்களுடன் சேர்க்கப்பட்டதும், வெண்பட்டினால் அலங்கரிக்கப்பட்டதும், வாஸனை உடைய புஷ்பங்களால் சேர்க்கப்பட்டதும், தூபம் தீபம் இவற்றுடன் ஸமர்ப்பிக்கப்பட்டதும், முகாந்தம் செய்வதற்கு முன்பு நன்றாக அலங்கரிக்கப்பட்ட கும்பம் இருக்கும் குண்டத்தில் எட்டு திக்குகளிலும் அலங்காரத்துடன் கூடிய பூர்ண கும்பங்களை வைத்து **ஆசக்ராய** முதலிய மந்த்ரங்களாலும், **அக்நி ப்ராகாரம்** வரை உள்ள மந்த்ரங்களால் கிழக்கு முதல் ந்யாஸம் செய்ய வேண்டும். பிறகு ஒவ்வொன்றையும் பூஜிக்க வேண்டும்.

### கிழக்கு முதலிய திசைகளிலும் மத்தியிலும் அக்நி குண்ட முறை

எல்லா இடங்களிலும் கும்பத்துக்குக் கிழக்கு பாகத்திலும் அக்நி குண்டங்களை வைக்க வேண்டும் - **ப்ராஸாத லக்ஷணம்** என்கிற குண்டத்தை நன்கு அலங்கரித்து நடுவில் வைக்க வேண்டும். கிழக்கு திசையில் சதுரமானதும், தென் கிழக்கில் முக்கோணம், தெற்கில் அரை வட்ட சந்த்ரன் போன்றதும், தென் மேற்கில் யோநி போன்றதும், மேற்கில் தாமரை போன்றதும், வட மேற்கில் எட்டு மூலைகள் உடையதாகவும், வடக்கில் வட்டமாகவும், வட கிழக்கில் ஆறு கோணங்கள் உள்ளதாகவும், இருக்கும் குண்டங்களில் வைஷ்ணவர்களான ருத்விக்குக்களை ஹோமத்தில் அமர்த்த

வேண்டும். நடுவிலோ ஸாதகராகிய மந்திரிகள் நன்கு ஜ்வலிக்கும் அக்நியில் ஹோமம் செய்ய வேண்டும்.

### ஹோமத்தில் த்ரவ்யங்களின் எண்ணிக்கை

ஒவ்வொன்றிலும் 1,008 தடவைகள் நெய்யினால் ஹோமம் செய்ய வேண்டும்.

### ஹோமத்தில் மந்த்ர முறை

எல்லா இடங்களிலும் மூல மந்த்ரத்தை த்யாநம் செய்து ஹோமம் செய்ய வேண்டும்.

### கும்பத்தை அபிமந்த்ரணம் செய்யும் முறை

ஹோமம் முடிந்த பிறகு ஸாதகாசார்யர் எல்லா கும்பங்களிலும் பகவானைப் பூஜித்து, அதைத் தொட்டு நோயாளியின் பெயரைச் சேர்த்து மந்த்ரத்தை ஆயிரத்தெட்டு முறை ஜபிக்க வேண்டும். பிறகு நோயாளியை ப்ரதாந கும்பத்தைப் பார்த்தவாறு உட்கார வைக்க வேண்டும்.

### முதலில் கிழக்கு கும்பத்திலிருந்து வரிசையாக அபிஷேகம் செய்தல்

பேரீ சப்தத்துடனும், சங்கு எக்காளம் சப்தங்களுடனும் சேர்ந்து கிழக்கு முதலான கும்பங்களிலிருக்கும் தீர்த்தங்களால் நோயாளிக்கு அபிஷேகம் செய்ய வேண்டும்.

### பூர்ணகும்ப தீர்த்தத்தினால் அபிஷேகம்

பிறகு மத்தியில் உள்ள நன்கு அலங்கரிக்கப்பட்ட பூர்ண கும்பத்திலிருந்து தீர்த்தம் எடுத்து, அதனால் அபிஷேகம் செய்து வர வேண்டும்.

### இவ்வாறு அபிஷேகம் செய்வதால் பலன்கள்

அந்த அபிஷேகத்தினால் எல்லா பாபங்களும் நீங்கப் பெற்றவனுய் அந்த நோயாளி, பனி மூட்டத்திலிருந்து விடுபட்ட ஸூர்யன் போல் விளங்குவான். எல்லா விருப்பங்களும், பாபம் நீங்கப் பெற்ற அவனை நாடித் தாமே வரும். அரசனைத் தவிர்த்து வேறு யாருக்கும் இந்தத்

தீர்த்தத்தினால் அபிஷேகம் செய்யலாகாது. இவ்வாறு சிறந்த ஆசார்யனால் செய்யப்பட்ட மஹாபிஷேகம் நிறைவு பெறும் பொழுது, யாருக்கு எது விருப்பமோ, அவருக்கு அது கையிலுள்ளது போல் ஆகும். ஸந்தேஹமில்லை. ஆயுளை விரும்புபவன் நல்ல ஆயுளையும் அதே போல் ஆரோக்யத்தை விரும்புபவன் நல்ல ஆரோக்யத்தையும், செல்வத்தை விரும்புபவன் செல்வத்தையும், கால் நடைகளை விரும்புபவன் கால் நடைகளையும் பெறுவான். குழந்தைப் பேறு இல்லாதவன் புத்ரனைக் கிடைக்கப் பெறுவான். குணமற்றவன் நற்குணஶீலனாக ஆவான். பெண்ணை விரும்பினால் பெண்ணையும், வெற்றியை விரும்புபவன் வெற்றியையும் பெறுவான். பதவியை இழந்தவன் தன் பதவியையும் அவ்வாறே விரும்பினால் பரமபதத்தையும் பெறுவான். உணவை வேண்டுபவன் நல்ல உணவையும், புகழை விரும்புபவன் புகழையும் கிடைக்கப் பெறுவான். இவ்விஷயத்தில் அதிகம் சொல்லத் தேவை இல்லை. எது எது எல்லாம் மனதில் இருக்கிறதோ அது எல்லாம் உடனே கிடைக்கப் பெறுவான். இதில் ஏதும் ஸந்தேஹம் கொள்ள வேண்டாம்.

### கடைசியில் ஆசார்யனுக்கு மர்யாதை

இவ்வாறு அபிஷேகம் செய்விக்கப்பட்ட மனிதன் தன் விருப்பம் நிறைவேறப் பெற்றவனாய், ஆசார்யனுக்குத் தங்கங்களாலும் பல வகை ரத்நங்களாலும், ஆடைகளாலும், புஷ்ப மாலைகள், வாஸனைப் பூச்சுகளாலும், மந்திரம் அறிந்தவனை நன்றாக உபசரிக்க வேண்டும். கன்றுடன் கூடிய ஒரு பசுவையும் கொடுக்க வேண்டும். அபிஷேகத்துக்காக வைத்திருந்த பொருள்களில் எது மீதம் இருக்கிறதோ அவைகளையும், பாயஸம் நிறைந்த பாத்திரத்தையும் கொடுக்க வேண்டும்.

### ருத்விக்குகளையும், ப்ராம்ஹணர்களையும், மகிழ்விக்கும் முறை

எல்லா ருத்விக்குகளையும் தங்கக் காசுகள் கொடுப்பதன் மூலம் மகிழ்விக்க வேண்டும். மற்றுமுள்ள

ப்ராம்ஹணர்களையும் ஶக்திக்கு ஏற்றவாறு மிகவும் கவனத்துடன் பூஜிக்க வேண்டும்.

இவ்வாறாகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** எல்லா
பலன்களையும் தரவல்ல மஹாபிஷேகம்
என்னும் 39 வது அத்யாயம் முற்றிற்று.

## அஸ்த்ரங்களின் ஸ்வரூபம் அவற்றின் ஶக்திகளை நிரூபித்தல் என்கிற

# 40வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி॥

(விளக்கம் 18 வது அத்யாயத்தில் உள்ளது)

### தொடர்ந்து அஸ்த்ரங்களின் ஸ்தாந ஶக்தி ஸ்வரூபம் பற்றிக் கேள்வி

**நாரதர்:-** தேவர்களுக்கெல்லாம் பெரிய தேவனும், பெரிய தேவர்கள் அனைவராலும் பூஜிக்கப்பட்டவருமான பகவந்! ஸ்வாமிந்! நான் எதையெல்லாம் கேட்டேனோ அவை எல்லாம் உள்ளது உள்ளபடி விளக்கப்பட்டன. எல்லா உத்தமமான அஸ்த்ரங்களுடைய மந்த்ர உருவமாக உள்ள மூர்த்திகளும் நான் கேட்டதற்குத் தேவரீரால் நன்கு விளக்கமாகப் பதில் கூறப்பட்டது. அஸ்த்ரங்கள் எவற்றில் நிலை பெற்று இருக்கும்? எவ்வகை ஶக்தியுடையவை? என்பதை என் மீது தேவரீருக்கு அநுக்ரஹ புத்தி இருக்குமாகில் சொல்லி அருள வேண்டுகிறேன்.

### பதிலாக ரஹஸ்யத்தைக் கூறுதல்

**அஹிர்புத்ந்யர்:-** இவை மிகவும் ரஹஸ்யமானவை, சொல்ல இயலாதது. கிடைத்தற்கு அரிது.

### அஸ்த்ரங்கள் தங்கள் உருவத்துடன் காட்சி தரமாட்டா

யாருக்கும் தங்கள் தங்கள் உருவங்களுடன் அஸ்த்ரங்கள் தோன்றியதில்லை.அவை தேவர்களாலும், அரக்கர்களாலும் மந்த்ரத்தின் உருவத்திலேயே உபயோகப் படுத்தப் படுகின்றன.

### தேவர்களின் கார்யத்துக்காக ஒரு ஸமயம் காட்சி தந்த விதம்

ஒரு ஸமயம் வ்ருத்ராஸுரனுடன் போர் புரிந்த பொழுது அந்த அஸ்த்ரங்கள் இந்த்ரனுக்கு இது தேவர்களுடைய கார்யம்

என்பதற்காகக் காட்சியளித்தன. முநிவரே! மந்த்ரங்களின் உருவத்தால் நிறைவேறாத கார்யங்களில் மட்டும் பயங்கரமான அஸ்த்ர தேவதைகள் தங்களுடைய மூர்த்திகள் மூலம் ப்ரத்யக்ஷமாகக் காட்சியளிக்கின்றன. அவற்றைப் பார்த்த உடனேயே பகைவர்களின் படை வீரர்கள் எல்லோரும் அழிந்து போவார்கள். சக்ரத்தின் உருவத்திலிருக்கும் மஹாவிஷ்ணுவே அந்த அஸ்த்ரங்களைத் தன் ஸ்வரூபத்தால் தாங்கி நிற்கிறார். அந்தத் தேவதைகளின் ஸ்வரூபத்தையும் ஶக்திகளையும் பற்றி, முநிவரே! இப்பொழுது உமக்குச் சொல்கிறேன்-

### 1.நாராயணாஸ்த்ரம்

முநிவரே! முதலில் **நாராயணாஸ்த்ர**த்தின் ஸ்வரூபத்தைச் சொல்கிறேன். ஆயிரம் முனைகளோடும், மிகவும் பயங்கரமாகவும், ஆயிரம் ஸூர்யன்களுக்கு ஒப்பான ஒளியுடையதும், நெருப்பு போல் எரிப்பதும், மிகப் பெரிய முனைகளைக் கொண்டதும், மோஹிநிப்பூ போன்ற காட்சி தருவதும் ஆகும்.

### 2. பாஶுபதாஸ்த்ரம்

வளர்பிறை ப்ரதமை சந்திரனின் கலைக்கு ஒப்பானதும், எட்டு முனைகளுடன் ஜ்வலிப்பதும், அநேகம் முனைகளோடு கூடியதும், மின்னல் போன்ற ஒளியையுடையதுமான இது **பாஶுபதாஸ்த்ரம்.**

### 3 ப்ரம்ஹாஸ்த்ரம்

ஆயிரம் ஆரங்களோடு கூடியதும், மின்னல் கூட்டங்களுக்கு ஒப்பான உருவமுடையதும், ரத்நத்துக்கு ஒப்பானதும் ஒரு கைப்பிடிக்குள் அடங்கக் கூடிய நுனியையுடையதும் **ப்ரம்ஹாஸ்த்ரம்** என்று சொல்லப்படுகிறது.

### 4 ப்ரம்ஹ ஶிரோஸ்த்ரம்

கோரைப் பற்களோடு விரிந்த வாயுடனும், உதட்டைக் கடித்துக் கொண்டும், பூனைக் கண்கள் போன்ற கண்கள்

உடையதும், பயங்கரமானதும், பழுத்த கேஶங்களோடு கூடியதும், ஆகிய இது **ப்ரம்ஹஶிரஸ்** என்கிற அஸ்த்ரமாகும்.

**5. விஷ்ணுசக்ராஸ்த்ரம்**

ஆயிரம் ஆரங்களோடு கூடிய **ஸுதர்ஶநம் விஷ்ணு சக்ராஸ்த்ரம்** ஆகும்.

**6. ஜ்ரும்பணாஸ்த்ரம்**

எட்டு கோணங்களோடு கூடிய உருவத்தையுடைய தண்டத்தைப் போன்ற உருவமுடையதை **ஜ்ரும்பணாஸ்த்ரம்** என்று படித்தவர்கள் அறிந்தார்கள்.

**7. காலபாஶாஸ்த்ரம்**

பயங்கரமான உருவத்தையுடைய கயிறு போன்றதே **காலபாஶாஸ்த்ரம்** என்று கருதப்படுகிறது.

**8. ஆக்நேயாஸ்த்ரம்**

ஆறு கோணங்களில் நுனியை (முனையை) உடையதும், எரியும் ஜ்வாலையை உடையதும், ஆகிய இது உத்தமமான **ஆக்நேயாஸ்த்ரம்**.

**9. ஹயஶிரோஸ்த்ரம்**

சுடர் மிக்கதும், குதிரை முகத்தை உடையதும் **ஹயஶிரஸ் அஸ்த்ரம்** என்று கருதப்படுகிறது.

**10. ப்ரஸ்வாபநாஸ்த்ரம்**

நெய்தல் பூவின் கொத்துக் காம்புக்கு ஸமமானது **ப்ரஸ்வாபநாஸ்த்ரம்** (பகைவர்களை இது தூங்க வைத்து விடும்).

**11. தாமஸாஸ்த்ரம்**

நீருண்ட மேகத்துக்கு ஒப்பானது **தாமஸாஸ்த்ரம்** எனப்படும்.

### 12. காலாஸ்த்ரம்

60 மணிகள் (ஒலியோடு கூடியது) நிறைந்ததும், பயங்கரமானதும், தண்டம் போன்றதுமானது **காலாஸ்த்ரம்.**

### 13. தண்டசக்ராஸ்த்ரம்

இரு முனைகளிலும் சக்ரத்தோடு கூடியது **தண்ட சக்ராஸ்த்ரம்** எனப்படும்.

### 14. கால சக்ராஸ்த்ரம்

நான்கு பட்டை சதுரமாகவும், ஓரங்களில் மேஷம் முதல் மீநம் வரை ராசிகள் உள்ளது **கால சக்ராஸ்த்ரம்.**

### 15. தர்ம சக்ராஸ்த்ரம்

அழகான வட்ட வடிவமுள்ளதும், யாகத்தில் உபயோகப்படும் 10 ஆயுதங்கள் போன்ற குறியுள்ளதும் **தர்மசக்ராஸ்த்ரம்.**

### 16. ஶைவாஸ்த்ரம்

நூற்றுக் கணக்கான எரியும் நெருப்போடு கூடிய தண்டம் (தடி) வடிவமுள்ளது **ஶைவாஸ்த்ரம்.**

### 17. ஶூலாஸ்த்ரம்

மிகவும் கூர்மையான மூன்று முனைகளாடு பிடியுள்ள ஆயுதம் **ஶூலாஸ்த்ரம்** எனப்படும்.

### 18. பரஶ்வஸ்த்ரம்

மிகவும் கொடுமையாயும், பயங்கரமாயும் மிகவும் கூர்மையானது **பரஶு அஸ்த்ரம்**

### 19. த்ரிஶூலாஸ்த்ரம்

மூன்று ஶூலங்களை முனையில் கொண்டதும் தடி போன்றதுமானது **த்ரிஶூலாஸ்த்ரம்** எனப்படும்.

### 20. கோராஸ்த்ரம்

**கோராஸ்த்ரம்** என்பது வாள் போன்ற முனை உடையது என்று ஜ்ஞாநிகள் சொல்வர்.

### 21. அகோராஸ்த்ரம்

கருத்த முகமும், பூனைக் கண்கள் போன்ற கண்களும், மேல் நோக்கிய சுடர் போல் உயர்த்திக் கட்டப்பட்ட கேமங்களும், மேலும் கத்தி போன்ற முனையை உடையதும் ஆகிய இது **அகோராஸ்த்ரம்** எனப்படும்.

### 22. ஸம்மோஹநாஸ்த்ரம்

தண்டோடு கூடிய தாமரை போன்றது **ஸம்மோஹநாஸ்த்ரம்** எனப்படும்.

### 23. ஐஷீகாஸ்த்ரம்

**ஐஷீகாஸ்த்ரம்** என்பது நாணல் பயிரின் வேர்கள் போன்றது என்று ஜ்ஞாநிகள் சொல்வர்.

### 24. ஐந்த்ர சக்ராஸ்த்ரம்

**ஐந்த்ரசக்ராஸ்த்ரம்** என்பது வஜ்ராயுதத்தால் குறியிடப்பட்ட சதுரமான உருவமுடையதும், வேலைக்காரன் போன்ற வடிவமுடையதும், அளவற்ற ஒளியுடன் கூடியதும், பகைவர்களின் வீரர்களுக்குப் பயத்தைத் தருவதாக இருக்கும்.

### 25. ஶுஷ்காஶநி அஸ்த்ரம்

எப்பொழுதும் உருவம் முழுவதும் சுடர் விட்டுப் ப்ரகாஶிப்பதும், மிகவும் பயங்கரமாகவும், கடா மாடு போன்ற உருவமுடையதாகவும், தணல் போன்றும் இருப்பது **ஶுஷ்காஶநி அஸ்த்ரம்** என்று சொல்லப்பட்டது.

### 26. ஆர்த்ராஶநி அஸ்த்ரம்

முன் சொன்ன அத்தனை வடிவங்களுடன், வெண்மை நிறம் உடையதாக இருப்பது **ஆர்த்ராஶநி அஸ்த்ரம்** என்று சொல்லப்படுகிறது.

### 27. பைநாகாஸ்த்ரம்

இழைப் புளி போன்ற உருவமுடைய வில் உத்தமமான **பைநாகாஸ்த்ரமாகும்**.

## 28. கங்காளாஸ்த்ரம்

பிசாசு போன்ற உருவமுடையதும், பயங்கரமானதும் ஆகிய அஸ்த்ரம் **கங்காளாஸ்த்ரம்.**

## 29. காபாலாஸ்த்ரம்

மண்டை ஓடுகளை மாலையாக உடையது தந்நிகரற்ற **காபாலாஸ்த்ரம்** எனப்படும்.

## 30. ஸௌராஸ்த்ரம்

ஸூர்யனுடைய பிம்பம் போன்ற பல உருவங்களுடன் கூடியது **ஸௌராஸ்த்ரம்** என்று சொல்லப்படும்.

## 31. வருணபாஶாஸ்த்ரம்

மிகவும் குளிர்ச்சியான உருவத்துடன் மிகவும் பயங்கரமானது **வருணபாஶாஸ்த்ரம்.**

## 32. ஸந்தாபநாஸ்த்ரம்

ஆணி போன்ற முனைகள் நிறைந்ததும் சிறிய கதை போன்றதுமாகும் **ஸந்தாபநாஸ்த்ரம்.**

## 33. வாருணாஸ்த்ரம்

32 த்வாரங்களுடன் வலை போன்றது **வாருணாஸ்த்ரம்** எனப்படும்.

## 34. தர்ம பாஶாஸ்த்ரம்

ஸகல தத்வங்களும் நிறைந்த மாலை போன்ற வடிவமுடையது **தர்ம பாஶாஸ்த்ரம்.**

## 35,36. ஶக்தி த்வயாஸ்த்ரம்

எல்லோருக்கும் தெரிந்த ஶக்தி ஒன்று உண்டு. ஆனால் மற்றொரு ஶக்தி இப்பொழுது சொல்லப்படுகிறது. அது இரு தலைகள், ஒரு காம்புடன் 10 மணிகளால் அலங்கரிக்கப்பட்டதாக இருக்கும். இது **ஶக்தி த்வயாஸ்த்ரம்** எனப்படும்.

### 37. வாயவ்யாஸ்த்ரம்

கொம்புடன் கூடிய கிளைமான் போன்ற உருவம் உடையது **வாயவ்யாஸ்த்ரம்.**

### 38. மௌஸலாஸ்த்ரம்

உலக்கை வடிவமாய், மேலும் மிகவும் ஒளிமிக்க மின்னல் போன்ற தண்டம் **மௌஸலாஸ்த்ரம்.**

### 39. காந்தர்வாஸ்த்ரம்

வீணையின் குறுக்கான **தண்டம்** போன்ற உருவம் உடையது, **காந்தர்வாஸ்த்ரம்** எனப்படும்.

### 40. தர்பணாஸ்த்ரம்

கண்ணாடி போன்றும் முழு நிலா போன்றும் வடிவம் உடையது **தர்பணாஸ்த்ரம்** என்று சொல்லப்பட்டுள்ளது.

### 41.ஶோஷணாஸ்த்ரம்

மிகப் பெரிய பயங்கரமான (ம்ருகங்களின்) கொம்பு போன்று எதிரிகளை வற்றடிக்கும் தன்மையுடையது **ஶோஷணாஸ்த்ரம்.**

### 42. பைஶாசாஸ்த்ரம்

**பைஶாசாஸ்த்ரம்** என்பது பெரிய உருவத்திலுள்ள தணல் போன்றது.

### 43. தேஜ: ப்ரபாஸ்த்ரம்

ஈட்டியைப் போன்ற வடிவமுள்ளதும் பகைவர்களைக் கிழிப்பதுமானது **தேஜ:ப்ரபாஸ்த்ரம்** என்று கூறப்படுகிறது.

### 44. ஐந்த்ராஸ்த்ரம்

ஒளிகளுக்கெல்லாம் இருப்பிடமான வஜ்ராயுதம் போன்றது **ஐந்த்ராஸ்த்ரம்** என்று கூறப்படுகிறது.

### 45. விலபநாஸ்த்ரம்

மேகம் போன்ற வடிவமுடைய அஸ்த்ரத்துக்கு **விலபநாஸ்த்ரம்** என்று பெயர்.

### 46. வித்யா (வைத்யா)தராஸ்த்ரம்

பார்ப்பவர்களை எல்லாம் மயங்கச் செய்யும் புஷ்ப மாலை வடிவத்தில் உள்ளது **வித்யாதராஸ்த்ரம்** என்று சொல்கிறார்கள்.

### 47. கங்காளாஸ்த்ரம்

மிகப் பெரிய மணியின் ஓசையைப் போன்ற ஒலியுடையது **கங்காளாஸ்த்ரம்** எனப்படுகிறது.

### 48. மோதக்யஸ்த்ரம்

**மோதக்யஸ்த்ரம்** என்பது மிகவும் உத்தமமான புஷ்பங்களோடு கூடிய கொடி போன்றது.

### 49. ஶிகராஸ்த்ரம்

கட்டில் போன்ற ஒரு வகை ஆயுதம் **ஶிகராஸ்த்ரம்.**

### 50. க்ரௌஞ்சாஸ்த்ரம்

**க்ரௌஞ்சாஸ்த்ரம்** என்பது மிகப் பெரியது. அன்றில் எனப்படும் பறவையின் வடிவத்திலுள்ளது என்று சொல்லப்படுகிறது.

### 51. அஸிரத்நாஸ்த்ரம்

மிகுந்த ஒளியுடன் கூடிய பட்டாக்கத்தி போன்றதும், **அஸிரத்நாஸ்த்ரம்** என்ற பெயருடையதும் உத்தமமான அஸ்த்ரமாகும்.

### 52. ப்ரஶமநாஸ்த்ரம்

கொடி, மரம் போல் வடிவமுடையது **ப்ரஶமநாஸ்த்ரம்** என்று சொல்லப்படுகிறது.

### 53. கந்தர்பதயிதாஸ்த்ரம்

மிகவும் அழகான கரும்பு வடிவத்தில் உள்ளது. **கந்தர்பதயிதாஸ்த்ரம்.**

### 54. மதநாஸ்த்ரம்

தேவர்களுக்கு ஸமமானதும், எதிரிகளுக்கெல்லாம் அச்சத்தைத் தருவதாகவும் இருப்பது **மதநாஸ்த்ரம்.**

### 55. ஸௌமநாஸ்த்ரம்

**ஸௌமநாஸ்த்ரம்** பல்லக்கு வடிவத்தில் இருக்கும் என்று அஸ்த்ரத்தை அறிந்தவர் கூறுவர்.

### 56. ஸத்யாஸ்த்ரம்

பெரிய முத்துக்களாலான ஜபமாலை போன்ற வடிவம் உடையது, **ஸத்யாஸ்த்ரம்** எனப்படும். இது எல்லா பலன்களையும் தரவல்லது.

### 57. ஸம்வர்த்தகாஸ்த்ரம்

பெரிய சங்கு வடிவத்தில் உள்ளது **ஸம்வர்த்தகாஸ்த்ரம்** என்று சொல்லப்படுகிறது.

### 58. மாயாதராஸ்த்ரம்

பெரிய மரம் வடிவத்தில் உள்ளது **மாயாதராஸ்த்ரம்** என்று கூறுவர்.

### 59. ஸோமாஸ்த்ரம்

பிறைச் சந்த்ரன் வடிவத்தில் அம்பு போன்றது **ஸோமாஸ்த்ரம்** எனப்படுகிறது.

### 60. த்வாஷ்ட்ராஸ்த்ரம்

தண்டத்தோடு (கைப்பிடி) நாற்சந்து முனை வடிவத்தில் உள்ளது **த்வாஷ்ட்ராஸ்த்ரம்.**

### 61. ஶ்ரீதேஷு அஸ்த்ரம்

குடம் போன்ற முகத்தை உடைய உத்தமமான நதிக்கு ஒப்பானது **ஶ்ரீதேஷு அஸ்த்ரம்.**

### 62. பகாஸ்த்ரம்

மூன்று கோணலான தண்டம் போன்றது - அளவில் அடங்காத ஒளியுடன் கூடியது **பகாஸ்த்ரம்.**

**63. ஸந்தாமநாஸ்த்ரம்** அரங்கள் இல்லாத சக்ரம் **ஸந்தாமநாஸ்த்ரம் ஆகும்.**

**64. ஸத்யவத் அஸ்த்ரம்**

வாயைத் திறந்து கொண்டிருக்கும் பெரிய பூதம் போன்றது **ஸத்யவத் அஸ்த்ரம்** எனப்படும்.

**65. வாரணாஸ்த்ரம்**

ஸர்பத்தின் முகத்தோடு கூடியதும், அங்குஶத்தோடு கூடிய யானை வடிவத்தில் உள்ளது **வாரணாஸ்த்ரம்.**

**66. த்ருஷ்டாஸ்த்ரம்**

கபந்தன் போன்ற (தலையில்லாத) வயிறுடன் வாயைத் திறந்த நிலையில் உள்ளது **த்ருஷ்டாஸ்த்ரம்.**

**67. ப்ருஶாஶ்வதநயாஸ்த்ரம்**

இரட்டை முனை வாள் போன்றது **ப்ருஶாஶ்வதநயாஸ்த்ரம்.**

**68. ஸத்யகீர்த்தி அஸ்த்ரம்**

வாயைத் திறந்து கொண்டிருக்கும் முதலை போன்றது **ஸத்யகீர்த்தி அஸ்த்ரம்** எனப்படும்.

**69. மோஹாஸ்த்ரம்**

வாயைத் திறந்து கொண்டிருக்கும் ஸர்பம் போன்ற தலை உடையது **மோஹாஸ்த்ரம்.**

**70. ரபஸாஸ்த்ரம்**

எல்லா அஸ்த்ரங்களையும் அழிக்கவல்லதும், தாரை வாத்யத்தைப் போன்றதுமானது **ரபஸாஸ்த்ரம்.**

**71. ஸர்வ நாபாஸ்த்ரம்**

கமண்டலு வடிவத்திலுள்ளது **ஸர்வநாபாஸ்த்ரம்** என்று கூறப்படுகிறது.

### 72. பராங்முகாஸ்த்ரம்

ஐந்து முகங்களுடன் கூடிய தலை வடிவத்தில் உள்ளது **பராங்முகாஸ்த்ரம்** என்பர்.

### 73. ஜ்ரும்பகாஸ்த்ரம்

சிவந்த கண்களுடன் மூன்று கூடுகள் வடிவத்திலுள்ளது **ஜ்ரும்பகாஸ்த்ரம்.**

### 74. ப்ரதிஹாராஸ்த்ரம்

ஒளி மிகுந்த ஈட்டி வடிவமுள்ளது **ப்ரதிஹாராஸ்த்ரம்.**

### 75. அவாங்முகாஸ்த்ரம்

கரடியின் முகம் கொண்ட பூத வடிவத்தில் உள்ளது **அவாங்முகாஸ்த்ரம்.**

### 76. தநாஸ்த்ரம்

அளவிலடங்காத ஒளி மிக்க மகுட வடிவத்தில் உள்ளது **தநாஸ்த்ரம்.**

### 77. தாந்யாஸ்த்ரம்

நெல் பூங்கொத்து வடிவத்தில் உள்ளது **தாந்யாஸ்த்ரம்** எனப்படும்.

### 78. மஹாபூதாஸ்த்ரம்

எருதின் கண்களைப் போன்றதும், அதன் முகத்தை உடையதும் **மஹாபூதாஸ்த்ரம்** எனப்படும்.

### 79. காமரூபாஸ்த்ரம்

ஓணான் வடிவத்தில் உள்ளது **காமரூபாஸ்த்ரம்** மிகப் பெரிய அஸ்த்ரமாகும்.

### 80. த்ருடநாபாஸ்த்ரம்

பல படங்களுடன் கூடியதான ஸர்பம் போன்றது **த்ருடநாபாஸ்த்ரம்.**

## 81. காமருசி அஸ்த்ரம்

ஸ்வஸ்திக் என்கிற குறி 卐 அல்லது மங்களகரமான வீணை போன்ற வாத்யத்தின் உருவில் உள்ளது காமருசி அஸ்த்ரமாகும்.

## 82. ஸூநாபாஸ்த்ரம்

மிகவும் கூர்மையான குத்துக் கத்தி வடிவத்தில் உள்ளது **ஸூநாபாஸ்த்ரம்.** இது உத்தமமான அஸ்த்ரம் என்று சொல்லப்படுகிறது.

## 83. மகராஸ்த்ரம்

குத்துவிளக்கின் தண்டுக்கு ஒப்பான உருவமுடையது உத்தமமான **மகராஸ்த்ர**மாகும்.

## 84. தஶாக்ஷாஸ்த்ரம்

உறையிலிருந்து எடுக்கப்பட்ட பெரிய பட்டாக்கத்தி போன்றது **தஶாக்ஷாஸ்த்ரம்** என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

## 85. வேதாளாஸ்த்ரம்

ஒட்டகத்தின் முகம் போன்ற உருவமுடையதும் வட்டவடிவம் ஆனது **வேதாளாஸ்த்ரம்** என்று சொல்லப்படுகிறது.

## 86. தஶவக்த்ராஸ்த்ரம்

ஒரு தண்டத்தில் 10 முகங்கள் அமைந்தது போன்றது **தஶவக்த்ராஸ்த்ரம்** என்று சொல்லப்பட்டது.

## 87. ருசிராஸ்த்ரம்

மிகவும் பயங்கரமான கலப்பை போன்றது **ருசிராஸ்த்ரம்.**

## 88. தஶகர்ணாஸ்த்ரம்

காகத்தின் முகம் போன்ற முகமுடையதும், **தஶவர்ஷா** என்பதும் **தஶகர்ணாஸ்த்ரம்.**

**89. யோகந்தராஸ்த்ரம்**

வாயைத் திறந்து கொண்டிருக்கும் கோட்டானின் வடிவத்தில் உள்ளது **யோகந்தராஸ்த்ரம்** எனப்படும்.

**90. வாருணாஸ்த்ரம்**

பகைவர்களின் அஸ்த்ரங்களைத் தடுக்கும் வல்லமை உடையதும், ஶத்ருக்களை அழிக்க வல்லதும் **வாருணாஸ்த்ரம்** எனப்படும்.

**91. அநித்ராஸ்த்ரம்**

விரிந்த கத்தி போன்றது **அநித்ராஸ்த்ரம்.**

**92. குடாராஸ்த்ரம்**

எதிரிகளை உடைத்து எறிவதும், பிளப்பதற்கு உகந்ததும் **குடாராஸ்த்ரம்** எனப்படும்.

**93. ஶதோதராஸ்த்ரம்**

100 வயிறுகளுடன் கூடிய பூதம் போன்றது **ஶதோதராஸ்த்ரம்.**

**94. ஸௌமநஸாஸ்த்ரம்**

செம்பருத்திப் பூவின் கொத்து போன்றது **ஸௌமநஸாஸ்த்ரம்.**

**95. பத்மநாபாஸ்த்ரம்**

தாமரையுடன் கூடிய தொப்புள் உடையதும், மிகப் பெரியதும் பூதம் போன்றதும் **பத்மநாபாஸ்த்ரம்.**

**96. மஹாநாபாஸ்த்ரம்**

மிகவும் பருத்த கழுத்துடன் கூடிய கொக்கு போன்றது **மஹாநாபாஸ்த்ரம்** எனப்படும்.

**97. ஜ்யௌதிஷாஸ்த்ரம்**

**ஜ்யௌதிஷாஸ்த்ரம்** என்பது உத்தமமான விமாந வடிவமுள்ளதாகும்.

### 98. க்ஷேபணுஸ்த்ரம்

பிறருடைய அஸ்த்ரங்களை ஆக்ரமித்து அழிக்க வல்லது **க்ஷேபணுஸ்த்ரம்.**

### 99. த்ரைராபுரிகாஸ்த்ரம்

குரங்கின் முகம் போன்ற தோற்றமுடையதும், மனிதர்களின் போலக் கால்கள் உடையதும், இறக்கைகளோடு கூடியது **த்ரைராபுரிகாஸ்த்ரம்.**

### 100. ஸார்சிர்மாலி அஸ்த்ரம்

ஒரு காலுடனும் பல கைகளுடனும், பல ஜ்யோதி மாலைகளுடன் பூத வடிவம் கொண்டது **ஸார்சிர்மாலி அஸ்த்ரம்.**

### 101. விமலாஸ்த்ரம்

ஸ்படிகத்தினால் செய்யப்பட்ட தொட்டில் போன்ற வடிவமுடையது **விமலாஸ்த்ரம்** என்று அறிய வேண்டும்.

### 102. த்ருதிகாஸ்த்ரம்

பன்றி, சிங்கம், மனிதன், நாய், யானை இவற்றின் முகம் போன்றதும், பூத வடிவத்தில் உள்ளதும், மிகவும் பயங்கரமானதும் **த்ருதிகாஸ்த்ரம்** என்று ஜ்ஞாநிகள் கூறியுள்ளனர்.

இவ்வாறாகப் பாஞ்சராத்ரம் தந்த்ரரஹஸ்யம்
**அஹிர்புத்ந்த்ய ஸம்ஹிதையில்** அஸ்த்ரங்களின்
உருவம், ஶக்தி இவைகளின் விளக்கம் என்கிற
40வது அத்யாயம் முற்றிற்று.



அஸ்த்ரங்களின் ஸ்வரூபத்தை மனதில் நிறுத்திக் கொள்ளும் உபயோகத்தை விளக்குவதற்கு, மதுகைடபர்கள் என்கிற அஸுரர்களின் ஸம்ஹாரத்தை விவரிக்கும்

# 41வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி॥
(விளக்கம் 18ம் அத்யாயத்தில் உள்ளது)

## பகவானால் அஸ்த்ரங்களின் ஸ்வரூபத்தைத் தரிப்பதன் கால விஶேஷம் ப்ரயோஜநம் பற்றிக் கேள்வி

**நாரதர்:-** ஷாட்குண்ய பரிபூர்ணரான ஸ்வாமியே! இந்த அஸ்த்ரங்களை எல்லாம் பகவான் அந்த அந்த மூர்த்திகளோடு கூட அணிந்து கொண்டதாக முன்பு சொல்லப்பட்டது. உலகங்களுக்கு அதிபதியாகிய ஸ்வாமியே! எந்த உருவத்தில், எப்பொழுது, எதற்காக பகவான் அவ்வாறு அணிந்திருந்தார்? தேவரீருக்கு என் மீது க்ருபை இருக்குமானால் இந்தக் கேள்விக்குரிய ஸந்தேஹத்தை, நீக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.

## இது ரஹஸ்யம் என்று பதில் சொல்கிறார்

**அஹிர்புத்ந்யர்:-** நாரத! பரமாத்மாவான விஷ்ணுவின் மீது பக்தி கொண்ட உமக்கு மிகவும் ஆச்சர்யமானதும், ரஹஸ்யமுமான இதை நீர் கேட்டதனால் அதை விளக்கிச் சொல்கிறேன்.

## ப்ரளயம் முடிந்த பிறகு பகவானுக்கு ஸ்ருஷ்டி செய்ய விருப்பம் தோன்றல்

முன்பு ப்ரளயகாலம் முடிந்த பிறகு விளையாட்டில் ஈடுபட ஆர்வம் கொண்ட புருஷோத்தமன் என்கிற பகவான் உலகத்தைப் படைக்க விரும்பினார்.

## மஹத்திலிருந்து பஞ்ச பூதங்கள் வரை படைத்தல்

முதலில் தானே ப்ரக்ருதியையும், புருஷனையும் வெளிப்படுத்தினார். ஸ்ரீ ஹரி பிறகு மஹத் தொடங்கி பஞ்சபூதங்கள் வரையிலுள்ளவற்றைப் படைத்தார்.

### அண்டங்களைப் படைத்து சதுர்முகனைப் படைத்தல்

முதலில் அண்டங்களைப் படைத்து, அதில் சதுர்முக ப்ரம்மாவைப் படைத்தார்.

### மக்களைப் படைக்க நான்முகனுக்கு வேதங்களை உபதேஶித்தல்

ஜநார்தநனாகிய பகவான், மக்களைப் படைப்பாயாக! என்று நான்முகனுக்குச் சொல்லி அவருக்கு வேதங்களை உபதேஶம் செய்தார்.

### சதுர்முகன் மக்களைப் படைத்தல்

பிறகு சதுர்முகன் பல வகையான மக்களைப் படைக்கத் தொடங்கினார்.

### வீரத்தினால் திமிர் கொண்ட மதுகைடபர்கள் பிறப்பு

இந்த ஸமயத்தில் ப்ரம்மாவின் படைப்புக்குப் பிறகு அவருடைய தொடைகளிலிருந்து வீரத்தினால் திமிர் கொண்டவர்களும், மதத்தினால் பித்துப் பிடித்தவர்களாகவும் பெரிய உருவமுள்ளவர்களும் ஆகிய இரண்டு அஸுரர்கள் பிறந்தார்கள்.

### மதுகைடபர்கள் ப்ரம்மாவிடமிருந்து வேதங்களைப் பறித்தல்

அவர்கள் ஸ்ருஷ்டியைத் தொடங்கியிருக்கும், அளவற்ற தேஜஸ்ஸோடு கூடிய ப்ரம்மனைப் பார்த்து, மாயையால் அவருக்குள் புகுந்து அவரிடமிருந்து வேதங்களைப் பறித்தனர்.

### வேதங்களின்றி ப்ரம்ஹனுக்குப் படைத்தலில் திறமை இழப்பு

பிறகு ப்ரம்மன் மக்களைப் படைக்கத் திறமையற்றவனான்.

### வருத்தம் கொண்ட சதுர்முகனின் ஆலோசனை

பிறகு ப்ரம்மன் மிகவும் வருத்தம் அடைந்தார். பகவான் ஸ்ரீ ஹரி மக்களைப் படைப்பாயாக என்று எனக்கு

உத்தரவிட்டார். வேதங்கள் இல்லாமல் பல வகைப்பட்ட மக்களைப் படைத்தல் இயலாத கார்யம். அந்த வேதங்கள் அஸுரர்களால் மாயையால் பறிக்கப்பட்டன. இப்பொழுது என்ன செய்வது? என்று அவர் மிகுந்த கவலை கொண்டார்.

### சதுர்முகன் பாற்கடல் செல்லுதல்

விஷ்ணுவின் நாபீ கமலத்திலிருந்து பிறந்த ப்ரம்ஹன், தான் செய்ய வேண்டிய கார்யத்தை மனதில் நிச்சயித்துக் கொண்டு பாற்கடலின் கரைக்குச் சென்றார்.

### சதுர்முகன் செய்த விஷ்ணு ஸ்தோத்ரம்

அங்கு தேவர்களுக்கெல்லாம் அதிபதியும், தாமரைக் கண்ணனும் ஆகிய அச்யுதனைப் பின் வருமாறு துதிக்கலானார் - ஶுத்தமான ஞானஸ்வரூபம் கொண்ட வாஸுதேவனுக்கு நமஸ்காரம். தேவரீர் எல்லை இல்லாத ஆநந்தத்துக்குக்கிழங்கு போன்றவர். தேவரீரின் மஹிமை சொல்லியடங்காது: மஹாத்மா ! மனதுக்குமெட்டாத ஶக்தி வடிவமானவர். உலகங்களை எல்லாம் தாங்குபவர் (காத்தருள்பவர்). எல்லையற்ற - தந்நிகரற்ற ஐஶ்வர்யத்தைக் கொண்டவரும், தேஜஸ்ஸுக்கெல்லாம் இருப்பிடம் ஆனவரும் ஆகிய உமக்கு நமஸ்காரம். உலகங்களில் எங்கும் உள்ளே புகுந்து நியமிப்பவராய், **அந்தர்யாமி** என்று பெயர் பெற்றவரும், ஶுத்த ஸத்வமே வடிவமுள்ளவர். உலகங்களுக்கெல்லாம் குற்றமற்ற ஆதாரமான ஆபரணங்கள் போன்ற உமக்கு நமஸ்காரம். ஶங்கு, சக்கரம், **கதை**, வாள், ஶார்ங்கம் என்கிற ஆயுதங்களைத் தரிக்கும் உமக்கு நமஸ்காரம். தேவரீர் மஹாலக்ஷ்மிக்கு மணாளன், தாமரைக் கண்ணன், புருஷனாகிய உமக்கு நமஸ்காரம். விஷ்வக்ஸேநர் (ஸேநாபதி) முதலிய நித்ய ஸூரிகளால் எப்பொழுதும் கைங்கர்யம் செய்யப்படுபவரான தேவரீருக்கு நமஸ்காரம். உத்தமமான ஆனந்தத்துக்கெல்லாம் இருப்பிடமான பரம**வ்யோம** என்று சொல்லப்பட்ட ஸ்ரீ வைகுண்டத்தில் நித்ய வாஸம் செய்யும் உமக்கு நமஸ்காரம். உலகங்களைப் படைத்து, காத்து, அவற்றின் மூலம் பல மக்களைப் படைத்து,

லீலைகள் செய்பவர் நீர். தேவரீருடைய ஆட்சிக்குட்பட்டது நித்ய விபூதியும், லீலா விபூதியும். இதனால் மஹா விபூதி என்று அழைக்கப்படும் உமக்கு நமஸ்காரம். ஸகல சராசரங்களும் உமக்குச் சரீரமாகும் உமக்கு நமஸ்காரம். தன்னை ஆஶ்ரயித்தவர்களிடம் உள்ள தயையினால் நான்கு உருவத்தில் வ்யூஹாவதாரம் செய்தவர், உலகத்துக்குத் தீமை செய்பவர்களை அழிப்பது என்கிற வ்ரதம் கொண்டவர். உமக்கு நமஸ்காரம், தேவரீரை ஸ்மரித்தால் தாபத்ரயங்களால் வாடியவர்களுடைய பாபங்களெல்லாம் அழியும். உமக்கு நமஸ்காரம். தேவரீருடைய ஸ்வரூபத்தை நினைக்க இயலாது. யாவருடைய செயல்களுக்கும் தேவரீரே ஸாக்ஷியாக இருப்பவர், விஷ்ணு என்கிற திருநாமம் கொண்டவர். உமக்கு நமஸ்காரம்.

### சதுர்முகனுக்குப் பகவான் தர்ஶநம் வழங்குதல்

இவ்வாறு ப்ரம்ஹன் செய்த ஸ்தோத்ரத்தைக் கேட்டு பகவாந் புண்டரீகாக்ஷன், புருஷோத்தமன், அவருக்குத் தோற்றம் அளித்தார்.

### சதுர்முகன் தன் நிலையைத் தெரிவித்தல்

அவரைப் பார்த்தவுடன் மிகவும் மகிழ்ச்சியடைந்த சதுர்முகன் நமஸ்கரித்து, அளவிட முடியாத ஶக்தி ஸாமர்த்யங்களுடையவராய் வணக்கத்துடன் தன் நிலையை விண்ணப்பம் செய்தார்.

### பகவான் மதுகைடபர்களை நினைத்தல்

இவ்வாறு அஸுரர்கள் செய்த தகாத செயலைக் கேட்டுப் பகைவர்களை அழிப்பவரான பகவான் லேசாகப் புன்முறுவல் செய்து, மதுகைடபர்களைப் பற்றி நினைத்தார்.

### மதுகைடபர்கள் அங்கு வருதல்

மதுகைடபர்களும் இவர் நினைத்த மாத்ரத்தில் அப்பொழுதே அங்கு வந்து சேர்ந்தனர்.

## மதுகைடபர்களுக்குப் பகவான் உரைத்தல்

பிறகு அங்கு வந்திருக்கும் பலத்தினால் திமிர் கொண்ட மதுகைடபர்களைப் பார்த்து மதுஸூதநன் மேகம் போல் கம்பீரமான குரலுடன் பேசத் தொடங்கினார். ''ப்ரம்ஹனுக்கு நான் கொடுத்த வேதங்களை மாயையினால் நீங்கள் பறித்து விட்டீர்கள் என்று அறிந்தேன். இந்த இடத்தில் இவ்வாறு செய்வது தகாது. ஆகையால் எல்லா வேதங்களையும் ப்ரஹ்மனுக்குத் திருப்பிக் கொடுக்கப்பட வேண்டும்'' என்றார்.

## பகவானின் வார்த்தைகளை மறுத்ததின் மூலம் மதுகைடபர்களின் பதில்

பகவானால் இவ்வாறு ஆணையிடப்பட்ட அந்தப் பெரிய அஸுரர்கள் இருவரும் தீமை பயக்கும் செருக்கினால் விவேகத்தை இழந்தவர்களாய், நாங்கள் ஒரு போதும் கொடுக்கமாட்டோம் என்று பதில் உரைத்தனர். நாங்களே பல வகைப்பட்ட மக்களைச் சீக்கிரமே படைப்போம். வேதங்களே தேவையில்லை. பகவானே ! ப்ரம்ஹாவுக்கு என்ன வேலை?

## மதுகைடபர்களை வதைக்க பகவான் விஷ்வக்ஸேநருக்கு ஆணையிடுகிறார்

அவர்கள் பேச்சைக் கேட்டு பகவான் கோபத்தால் கண்கள் சிவக்க துராத்மாக்கள் இருவரையும் ஸம்ஹாரம் செய்யத் திட்டமிட்டார். ''திமிர்பிடித்தவர்களும், மதத்தினால் தீமை செய்ய முற்பட்டவர்களும், பாபிகளுமான இவர்களை வதைத்து வேதங்களை எடுத்து இந்தச் சதுர்முகனுக்குக் கொடு''என்று கை கூப்பி நின்ற விஷ்வக்ஸேநருக்கு ஆணையிட்டார்.

## பிறகு போருக்கான முயற்சி

அவரும் அப்படியே செய்கிறேன் என்று சொல்லி வைஷ்ணவ ஸேனைகள் அனைத்தையும் வரவழைத்து, தயாராக இருந்த அந்த இருவருடன் போர் புரியப்

புறப்பட்டார். அந்த அஸுரர்களும் மிகப் பெரிய ஸேனையை மாயையால் படைத்தனர்.

### இரண்டு அணிகளுக்கும் போர் நடந்தது.

இரண்டு அணிகளுக்கும் பயங்கரமான போர் மூண்டது. அம் மாதிரிப்போர் இது வரை யாரும் பார்த்ததும் இல்லை, கேட்டதும் இல்லை. அவ்வாறு நடந்தது.

### பகவானிடம் விஷ்வக்ஸேநர் மதுகைடபர்களை ஜயிப்பது ப்ரமம் என்று உரைத்தல்

வெகு காலமாகியும் அந்த துஷ்டர்களான அஸுரர்கள் வெற்றி கொள்ள முடியாதவர்கள் என்று அறிந்த விஷ்வக்ஸேநர் நேராகச் சென்று பகவானிடம் தெரிவித்தார்.

### பகவான் எல்லா அஸ்த்ரங்களையும் ஸ்வரூபத்துடன் அணிந்து போர் செய்யச் செல்லுதல்

பிறகு ஜநார்தநன் மிகவும் கோபம் கொண்டு புறப்பட்டார். பகவான் தானே சக்ரத்தின் வடிவத்தை ஏற்றுக் கொண்டு போர் புரியும் அவர்களைப் பார்த்து 62 கைகளால் உத்தமமான அஸ்த்ரங்களின் அணியைத் தரித்துக் கொண்டு நின்றார்.

### எல்லா அஸ்த்ரங்களின் ஸ்வரூபங்களை அணிந்த பகவானின் உருவ வர்ணநம்

மிகவும் கோபங் கொண்டவரும், ஆயிரம் ஸூர்யன்களுக்கு ஒப்பானவரும், சுடர் விடும் தன் திருக்கரங்களால் தரிக்கப்பட்ட அஸ்த்ரங்களோடு கூடியவரும், மேல் நோக்கிய பழுத்த கேஶபாஶங்களுடன் கூடியவரும், மிகவும் பயத்தைத் தருபவரும், ப்ரம்மாண்டத்தின் எல்லையைத் தொடும் திருமேனியுடன் கூடியவரும், செம்பருத்திப்பூ போன்ற நிறமுடையவரும், சுழலும் கொடிய வட்ட வடிவான பழுத்த மூன்று திருக்கண்கள் கொண்டவரும், புருவங்களை நெறித்துக் கொண்டிருப்பதால் பயத்தைத் தரும் தோற்றமளிக்கும் பயங்கரமான முகத்துடன் கூடியவரும், உதட்டைக் கடித்துக்

கொண்டும் ஒளி வீசும் கோறைப்பற்களிலிருந்து வெளி வந்து புரண்டு வரும் நெருப்பை உடையவரும், பெருங்கடல் போன்ற 62 புஜங்கள் கொண்ட கூண்டுடன் கூடியவரும், சிவந்த வஸ்த்ரம் அணிந்தவரும், யாவருக்கும் அச்சத்தைத் தருபவரும், **ஆலீடம்** என்கிற வீரவடிவமான நின்ற திருக்கோலத்தில் இருப்பவரும், மாலைகள் தோள்வளைகள், குண்டலங்கள், வளைகள் முதலிய திருவாபரணங்களோடு **(குறிப்பு: ஆலீடம்** என்பது இடக்காலை முன் வைத்தும், வலக்காலைப் பின் வைத்தும் நிற்கும் நிலை) விளங்குபவரும், சிறு சிறு சலங்கைகளின் கூட்டங்களால் 'ஜல் ஜல்' என்கிற ஒலியை எழுப்புபவரும், மிகவும் ஆஶ்சர்யத்தைத் தருபவரும், தந்நிகரற்ற மிகுந்த தேஜஸ்ஸை உடையவருமான அந்த பகவானைப் பார்த்து-

### உருவத்தைப் பார்த்து ஸேநை ஓடுதல்

ப்ரளய காலத்தில் பொங்கி எழும் கடல்களுக்கு ஒப்பான அந்த அஸுரர்களின் வீரர்கள் அனைவரும் அவரைப் பாதாதிகேஶமாகப் பார்த்து, முழுமையாக ஶக்தியற்றவர்கள் ஆனார்கள். அந்த அஸுரர்கள் இருவரும் தனியாக இருந்தார்கள். ஆயுதங்களோடு மிகவும் பரபரப்புடன் வருகின்ற அந்த இருவரைப் பார்த்து மிகுந்த தேஜஸ்ஸை உடைய அந்த பகவான், அவர்களைக் கொல்ல பயங்கரமான சக்ரத்தை ப்ரயோகித்தார்.

### சக்ரத்தினால் மதுகைடபர்களின் தலையை அறுத்தல்

அந்த உத்தமமான சக்ரம் அஸுரர்களுடைய தலைகளை நொடியில் வெட்டிச் சாய்த்தது. உடனே அவர்களிடமிருந்து வேதத்தை எடுத்துப் பகவானிடம் கொடுத்து விட்டது.

### சதுர்முகனிடம் வேதத்தைக் கொடுத்துவிட்டுப் பகவான் மறைதல்

பகவான் அவற்றைச் சதுர்முகனுக்கு மீண்டும் கொடுத்துவிட்டு மறைந்து விட்டார்.

**ப்ரஹ்மாவினால் முன்போல் ஸ்ருஷ்டி செய்யப்படுதல்**

வேதங்கள் கிடைக்கப் பெற்ற ப்ரம்மனும் முன் போலவே மக்களைப் படைத்தார்.

**முடிவுரை**

சக்ரத்தின் வடிவத்திலிருக்கும். எம்பெருமானுடைய உருவம் இத்தகையது.

இவ்வாறுகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யில் அஸ்த்ர தாரணம் அதன்
உபயோகம் இவற்றை விளக்க விருப்பமும்,
மதுகைடபர்கள் அழிவு என்கிற
41வது அத்யாயம் முற்றிற்று.



ஶ்ருத கீர்த்தி என்கிற காஶிராஜனுடைய
வரலாற்று விளக்கம் எனும்

# 42வது அத்யாயம்

**த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।**
**ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥**
*(விளக்கம் 18ம் அத்யாயத்தில் உள்ளது)*

## அங்க மந்த்ரங்களின் தோற்றம், அவற்றின் தேவதைகள் பயன், ஶக்தி, த்யாநம் செய்யப்படும் முறை பற்றிக் கேள்வி

**நாரதர் :**—ஸகல தர்மங்களை அறிந்தவரும், ஸகல சேதநங்களால் வணங்கப்படுபவரும், ஆறு குணங்கள் நிறைந்தவருமான ஸ்வாமிந் ! நாங்கள் எதையெல்லாம் கேட்க வேண்டுமோ அவையெல்லாம் முழுமையாகக் கேட்கப்பட்டது. இப்பொழுது என் மனதிலிருப்பதைக் கேட்கிறேன். சொல்லியருள வேண்டும். இந்தச் சக்ரத்தின் அங்க மந்த்ரங்கள் யாரிடமிருந்து பிறந்தன? இவற்றுக்குத் தேவதை யார்? எதற்காக - எத்தகைய ஶக்தி உடையது? த்யாநம் செய்யப்பட வேண்டியது எது? இவற்றை உள்ளபடி சொல்லி அருள வேண்டும்.

## ரஹஸ்யத்தைச் சொல்லி பதில் தொடக்கம்

**அஹிர்புத்ந்யர் :**— இது மிகவும் மேலான ரஹஸ்யமானது. கவனமாகக் கேளும்.

## உத்பத்தியைப் பற்றி பதில்

மூல மந்த்ரத்தினால் அலங்கரிக்கப்பட்ட அதர்வண வேதத்திலிருந்து இந்த ஆறு எழுத்துக்கள் கொண்ட மந்த்ரம் என்னால் பாற்கடலிலிருந்து கௌஸ்துபம் எடுக்கப்பட்டது போல் எடுக்கப்பட்டது. முநிவரே ! அவ்வாறு இந்த ஸகலமான அங்க மந்த்ரங்கள் எடுக்கப்பட்டன.

## தேவதையைக் கூறுதல்

அங்க மந்த்ரங்களுக்குக் கூட **ஸுதர்ஶந பகவானே** தேவதை.

**பயன் கூறுதல்**

**ஸுதர்மநத்தைத்** தேவதையாகக் கொண்ட மஹா மந்த்ரத்தில் **ஊற்ற** முடையவர் அங்க மந்த்ரங்களை ஜாக்ரதையாகக் கையாளுதல் முக்யமானது. இவற்றின் வேலை என்னவென்ருல் ஆறு எழுத்துக்கள் கொண்ட மந்த்ரங்கள் எல்லாம் ஒரேவகை மக்தி உடையவை. இதுவே பலன்.

**எது த்யாநம் செய்யப்பட வேண்டியது? என்பதற்குப் பதில்**

இந்த மந்த்ரங்களுக்கு எட்டு புஜங்களோடு கூடிய தேவதை முன் சொன்ன முறைப்படியே த்யாநம் செய்யப்பட வேண்டியவர். வேறு என்ன கேட்க விருப்புகிறீர்?

**திருப்பி எடுத்துக் கொள்ளும் மந்த்ரத்தை ப்ரயோகிக்கும் சூழ்நிலை பற்றிக் கேள்வி**

**நாரதர்:** மிகுந்த தேஜஸ்ஸுடன் கூடியவரும், மிகவும் வள்ளல் தன்மை கொண்டவரும், என்றைக்கும் மந அமைதியோடு கூடியவரும், கருணைக் கடலும், மாஶ்வதமான ஞாநம், க்ரியை, ஐஶ்வர்யம், உலகத்தைப் பற்றிய ஞாநம் இவற்றுக்குக் கடல் போன்றவரும், பெரிய தெய்வமுமான ஷாட்குண்ய பரிபூர்ண ஸவாமிந்! ஸுதர்மந மஹாயந்த்ரம்,மந்த்ரங்களின் மக்தி, பலன் முதலியவற்றில் எதெல்லாம் சொல்ல வேண்டுமோ அவை விளக்கமாகக் கூறப்பட்டன. **ப்ரவர்தகாஸ்த்ரங்களின்** உற்பத்தி முன்பு சொல்லப்பட்டது. அவ்வாறே ப்ரயோகம் செய்யும் முறையும் ஸ்வரூபம் மக்தி இவைகளும் சொல்லப்பட்டன. ஆசார்யனே! **நிவர்தக** மந்த்ரங்களை எந்த இடத்தில், எந்த ஸமயத்தில், உபயோகிக்க வேண்டும்? இந்த விஷயத்தில் எனக்குள்ள பெரிய ஸந்தேஹத்தை நீக்கியருள வேண்டும்.

**பதில் சொல்கிறேன் என்று கூறுரை**

**அஹிர்புத்ந்யர்: நிவர்த்தகாஸ்த்ரங்களின்** ப்ரயோக ஸமயத்தைப் பற்றியும் சொல்கிறேன், கேளும்.

**ப்ரயோக ஸமயம்**

மஹர்ஷியே! எதிரிகளால் ப்ரயோகிக்கப்பட்ட பெரிய

அஸ்த்ரங்களாலும், ஏவல்களாலும் பெரிய துன்பம் விளையும் பொழுது, **ஸம்ஹார மந்த்ர ப்ரயோகம்** செய்ய வேண்டும் என்பதைத் தெரிந்து கொள்ளும்.

## பிறர் செய்யும் ஏவலினால் ஏற்படும் துன்பம் இவற்றை அறிவது பற்றிக் கேள்வி

**நாரதர்!** அரசர்களுக்கும், அமைச்சர்களுக்கும், மற்ற மனிதர்களுக்கும் கூடப் பிறர் செய்யும் (பில்லி ஶூந்யம் போன்ற) அபிசாரத்தை எப்படி அறிய முடியும்?

## அவற்றைத் தெரிந்து கொள்ளத் தகுந்த அறிகுறிகளின் விளக்கம்

**அஹிர்புத்ந்யர்:** அரசர்களுக்குப் பில்லி ஶூந்யம் இவற்றால் ஏற்படும் உடல் நலக் குறைவு நான் சொல்லப் போகும் அறிகுறிகளின் மூலம் அறிந்து கொள்ளலாம். காரணமின்றிக் குதிரைகளும், யானைகளும், மந்திரிகளும், மடிந்து போவர். அரசனும் கடுமையான நோயினால் ஶ்ரமப்படுவான். அவ்வரசனுடைய இடங்களில் மிகவும் பயங்கரமான இடிகள் விழும். பூமியில் பயிர்கள் மிகவும் குறைந்து போகும். பசு எருது போன்ற கால் நடைகள் நூற்றுக்கணக்கில் அழியும். அவனுடைய நாட்டில் மழை இல்லாமல் அடிக்கடிப் பஞ்சம் தாண்டவமாடும். அந்த அரசனுடைய ராணிகளும் கடுமையான நோயினால் பீடிக்கப்பட்டு மரித்துவிடுவர். மாடியிலும், வாசற்படியிலும், தர்பார் மண்டபத்திலும் கரையான் புற்றுகள் தோன்றும். தீப்பந்தங்கள் பெருத்த ஶப்தத்துடன் கடுமையாக விழும். அமைச்சர்களும் பொறாமையினால் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொள்வர். மேகமே இல்லாத போது பயங்கரமான வானவில் தோன்றும். நகரத்தில் இங்கு மங்கும் பயங்கரமான தீயினால் தீமை விளையும். குள்ள நரிகள் தர்பார் மண்டபத்தில் தடையின்றிப் புகுந்து இரவில் தீ எரியும் திசையை நோக்கி மிகவும் பயங்கரமாக ஶத்தமிடும். பலம் பொருந்திய பகைவர்கள் அரசனது நாட்டின் மீது படையெடுப்பார்கள். அரசனும் அசையாமல் பேசாமல்

இருந்து எது செய்வது? எது செய்ய வேண்டாமென்பதை உணராமலிருப்பான். கனவில் தன்னையே மொட்டை அடித்துக் கொண்டு கறுப்பு ஆடை அணிந்தவனாகப் பார்ப்பான். கழுதைகள் பூட்டிய தேரின் மூலம் தெற்கு திசையை நோக்கிச் செல்வதாகக் காண்பான். இது போன்ற அறிகுறிகளால் பகைவர்களால் ஏவப்பட்ட ஶூந்யத்தைத் தெரிந்து கொள்ளலாம். பிறர் ஏவிய துர்தேவதை அரசனுடைய உடலில் புகுமானால் அதைப் பார்த்து அவன் சீக்கிரமே மரித்து விடுவான், ஸந்தேஹமில்லை. அவனுடைய புத்ரர்களையும், மந்திரிகளையும், ராணியையும், நகரத்தையும், எல்லாவற்றையும், சுடர் மாலை சூழ்ந்த **க்ருத்யா** என்னும் தேவதை உடனே அழித்துவிடும்.

**அபிசாரத்துக்குப் பரிஹாரமாக நிவர்தகாஸ்த்ரதாரியான ஸுதர்ஶநத்துக்கு உபசாரம் செய்தல்**

இவ்வாறு அரசன் பிறர் ஏவிய துர்தேவதையால் துன்புறும் பொழுது **நிவர்தகாஸ்த்ர**த்தோடு கூடியவரும், ஒளி மிக்கவரும் சக்ரஸ்வரூபத்திலிருக்கும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவை அந்த ஸமயத்தில் பக்தியுடன் பூஜிக்க வேண்டும். வெள்ளியினாலோ, தங்கத்தினாலோ, ஶிலையினாலோ, செம்பினாலோ, ஸுதர்ஶநத்தை **நிவர்தகாஸ்த்ர**த்தோடு கூடியதாக அமைத்துப் பூஜிக்க வேண்டும். மூன்று உலகங்களில் உள்ளவர்களாலும் வணங்கப்பட்ட அந்த பகவானை வஸ்ரத்தில் எழுதியும் பூஜிக்கலாம். இவ்வாறு நிர்மாணம் செய்து அரசன் த்யாநம் செய்வதன் மூலமோ, பூஜையினாலோ, நமஸ்கரிப்பதாலோ, ப்ரதிஷ்டையினாலோ, ஸ்தோத்ரங்களைச் சொல்வதன் மூலமோ பூஜிக்க வேண்டும். முநிவரே! இந்த வகையில் மற்றவர்களும், அமைச்சர்களும் ப்ரஜைகளும் செய்யலாம்.

**ப்ரீதி கொண்ட ஸுதர்ஶநத்தின் மூலம் பிறர் செய்த (ஏவிய) ஏவல்களைச் சுக்கு நூறாக்குதல்**

பிறகு மிகவும் ஸந்தோஷமடைந்த ஆதியும் அந்தமும் இல்லாத ஸர்வஶக்தியுமான பகவான் தன் பக்தர்களிடம்

உள்ள அநுக்ரஹ புத்தியால் பிறர் செய்த அபிசாரங்களையும் ஏவியவர்களையும் தன் ஸங்கல்பத்தினாலேயே நிமிடத்தில் சாம்பலாக்கி விடுவார். **உபஸம்ஹாராஸ்த்ரத்தினால்** பிறர் ஏவிய பெரிய அஸ்த்ரங்களைக் கூட விலக்கி விடுவார்.

## தேவதையும் அதை ஏவியவனும் அழிதல்

பிறகு சக்ர உருவத்திலிருக்கும் உலகங்களுக்கெல்லாம் பிதாவான அந்த பகவான் பிறரால் ஏவப்பட்டு வந்திருக்கும் மிகவும் பயங்கரமான **க்ருத்யா** தேவதையைத் தானே வெளியில் வந்து சாம்பலாக்கி விடுவார். அதை ப்ரயோகித்தவனையும் சாம்பலாக்கி விடுவார்.

## காஶிராஜனின் சரித்திரமே இங்கு உதாரணம்

இவ்வகையில் **வாராணஸியில்** வஸித்து வந்த காஶிராஜன் என்கிற அரசன் **விஶ்வேஶ்வரன்** என்கிற மஹாதேவனை மிகவும் பக்தியுடன் பூஜித்து, அறியாமையில் சிக்கி, ஸ்ரீ க்ருஷ்ணனுக்காக ஒரு **க்ருத்யை** (அபிசார தேவதை)யை உண்டு பண்ணினான். இப்படித் தோற்றுவிக்கப்பட்ட மிகவும் பெரிய உருவம் கொண்டதும், பயங்கரத் தோற்றமுடைய அந்தத் தேவதை த்வாரகைக்குச் சென்று ஸ்ரீ க்ருஷ்ணனின் ஸமீபத்தை அடைந்தது. சுடர் மாலை சூழ்ந்த முகத்தை உடைய தேவதை வருவதைப் பார்த்த ஸ்ரீ க்ருஷ்ணன் தன்னிகரற்ற ஸுதர்ஶநத்தை ஏவினார். அந்த தேவதை ஆயிரம் ஸூர்யன்களுக்கு ஒப்பான ஜ்யோதியோடு வரும் ஸுதர்ஶநத்தைப் பார்த்து நடுங்கிக் கொண்டு, வந்த வழியே ஓடி ஏவியவனிடம் சென்றது. அந்த **ஸுதர்ஶநம்** தேவதையைக் கொன்றுவிட்டு, காஶிராஜனையும் பட்டினத்தையும் அழித்துவிட்டு மிகுந்த ஒளியுடன் கூடியதாய் பகவான் விஷ்ணுவிடம் மீண்டும் வந்தது.

## ஶ்ருத கீர்த்தி சரித்ரமும் உதாரணமாகிறது.

இவ்வாறே முன் காலத்தில் நடந்த மற்றொரு சரித்ரத்தைச் சொல்கிறேன், கேளும்.

## ஶ்ருத கீர்த்தி ஸப்தத்வீபத்தை ஆளுதல்

**ஶ்ருத கீர்த்தி** என்று புகழ் பெற்ற ஒருவன் ஸௌராஷ்ட்ர தேஶத்து அரசனாக பத்ராசாலை நகரத்தில் இருந்தான். அவன் யானைகள், குதிரைகள், தேர்கள் நிறைந்தவனாகவும், இந்திரனுக்கு ஒப்பான பலம் மிக்கவனாகவும், ஸுதர்ஶந மஹா மந்த்ரத்தில் ஸித்தி பெற்றவனாகவும், மிகுந்த தர்ம சிந்தனை உள்ளவனாகவும், ஸுதர்ஶநத்தின் மீது மிகுந்த பக்தி கொண்டு பூஜைகளில் ஈடுபட்டு வந்தான். அந்த ஸுதர்ஶநத்தின் அநுக்ரஹத்தால் ஏழு த்வீபங்களுடன் பூமண்டலம் முழுவதையும் ஆட்சி செய்து வந்தான்.

### கந்தர்வ நகரம் செல்லுதல்

அவன் வேறு தேஶங்களையும் வெற்றி கொள்ள அப்பொழுது எண்ணம் கொண்டான். யானை, குதிரை, தேர், காலாட்படை இவைகளுடன் கூடத் தான் விரும்பியபடி செல்லக்கூடியதும் ஆச்சர்யமானதுமான தேரில் ஸ்ரீ ஸுதர்ஶநருக்குப் பூஜை செய்து விட்டு ஏறினான். முதலில் ஸேனைகளோடு ஆகாயத்தில் சென்றான்.

### ஸ்வஸ்திக நகர வர்ணனை

அங்கு **ஸ்வஸ்திகம்** என்கிற பெயருடைய விஶாலமான கந்தர்வ நகரம் **வீணாவிநோதன்** என்கிற அரசனால் காப்பாற்றப்பட்டதாக இருந்தது. ஒளி மயமான அந்த நகரம் தாங்களாகவே இயங்கக் கூடிய ஶஸ்த்ரங்களாலும், அஸ்த்ரங்களாலும் பகைவரின் ஸேனைகளை விரட்டியதாகவும், சுற்றிலும் வெளியே எரிபொருள் ஏதுமின்றி ஜ்வலிக்கும் நெருப்பினால் சூழப்பட்டதும், உத்தமமான தங்கத்திலான மாளிகைகளோடு கூடியதும், நவரத்நங்கள் பதித்த கோபுரங்கள் கூடியதும், ரத்நங்கள் பதித்த மாளிகைகளால் நிறைந்ததும், ஸங்கீத ஒலிகள் நிறைந்ததும், ஒளிமிக்க பல விமாநங்களை உடையதும், உத்தமமான பூங்காக்களால் அழகு மிகுந்ததும், தங்கத்தினாலான புஷ்பங்கள் நிறைந்த ஆறுகள், குளங்கள், வாபிகளோடு கூடியதும், தேவப்பெண்மணிகளாலும், அப்ஸர

ஸ்த்ரீகளாலும் நிறைந்ததும், எப்பொழுதும் கந்தர்வர்கள், ஸித்தர்கள் சாரணர்கள் இவர்களுடன் கூடியது.

### அந்நகரத்தைத் தாக்குதல்

இவ்வாறு பெருமை வாய்ந்த அந்த நகரத்தைப் பலத்தினால் திமிர் கொண்ட அரசன் தாக்கினான். பெரிய ஸேனைகளைக் கொண்டு **வீணாவிநோத**னுடன் சண்டை செய்ய முற்றுகையிட்டான்.

### கந்தர்வராஜன், ஸேனையை அனுப்புதல்

கந்தர்வராஜனும் மனிதனால் ஏற்பட்ட முற்றுகையைக் கேள்விப்பட்டு, சிரித்து விட்டு, கந்தர்வர்கள், ஸித்தர்கள் நிறைந்த படையை அனுப்பினான்.

### பயங்கரமான சண்டை

அந்த ஸேனை இந்த அரசனுடன் பல வகை அஸ்த்ரங்களுடன் போர் புரிந்தது. தொடங்கிய அந்தப் போர் மிகவும் பயங்கரமாக மயிர்க்கூச்சல் ஏற்படுத்துவதாக நடந்தது.

### ஶ்ருதகீர்த்தி கந்தர்வ ஸேனையை விரட்டியடித்தான்

இந்த அரசன் கந்தர்வ ஸேனையை எளிதில் ஓடச்செய்து விட்டான். பயத்தினால் நடுங்கிய அது ஓடியது, அரசனும் தன் நாட்டுக்குத் திரும்பினான்.

### கந்தர்வராஜன் கோபத்துடன் தானே போருக்குப் புறப்பட்டான்

இதைக் கேட்டு **வீணாவிநோதன்** என்கிற அந்த அரசன் பெரிய தேரில் உட்கார்ந்து ஸேனைகளுடன் போர் செய்ய, தானே புறப்பட்டான்.

### போர் மூண்டது

பிறகு இந்திரனுக்கும் வ்ருத்ராஸுரனுக்கும் ஏற்பட்டது போல் இவ்விருவருக்கும் போர் தொடங்கியது. அந்தப் படை வீரர்கள் பல வகை அம்புகளைக் கொண்டு ஒருவரை ஒருவர் மாய்த்தனர். அந்த இருவருடைய அம்பு வெள்ளங்களால் ஆகாயமே மறைக்கப்பட்டு விட்டது. அந்தப் போரில்

அவர்களுக்கு வெற்றியோ தோல்வியோ தோன்றவில்லை. இவ்வாறு ஒரே வகையாக ஏற்றத்தாழ்வு இன்றிப் பயங்கரமாக எட்டு நாட்கள் நடந்தது போர்.

**கந்தர்வ ராஜனின் வில் ஒடிந்தது– ஸேநை ஓடிற்று.**

பிறகு அரசன் கந்தர்வ ராஜனின் வில்லை ஒடித்து விட்டான். மேலும் கொடிமரம், குடை, குதிரைகளையும் மழமழப்பான கணுக்களோடு கூடிய அம்புகளைக் கொண்டு வீழ்த்தினான். அந்த எதிரியின் படைகள் முழுவதையும் எட்டு திக்குகளிலும் ஓடும்படிச் செய்து விட்டான்.

**கந்தர்வராஜனின் ஏக்கம்**

கந்தர்வராஜனும் மனிதனால் தன் ஸேநை அழிக்கப்பட்டதை அறிந்து, அரசனை வெற்றி கொள்ள இயலாது என்று எண்ணி மிகவும் கவலை கொண்டான்.

**மனித ஸேநை மீது காந்தர்வாஸ்த்ரம் ப்ரயோகித்தல்**

உத்தமமான அஸ்த்ரங்களைக் கொண்டு இவனை அழிப்பேன் என்று எண்ணி, அந்த மனித ஸேனைகள் மீது **காந்தர்வாஸ்த்ரத்தை** ப்ரயோகித்தான்.

**அதனால் மனிதப் படை மயங்குதல்**

ஶ்ருத கீர்த்தியின் அனைத்துப் படைகளும் **காந்தர்வாஸ்த்ரத்தின்** மஹிமையால் போர் நடந்து கொண்டிருக்கும் போதே மயக்கமடைந்தன. ஸுதர்ஶநத்தின் மஹிமையால் அந்த அஸ்த்ரம் அரசனைச் சென்று அடையவில்லை.

**ஶ்ருத கீர்த்தி புரோஹிதரிடம் செல்லுதல்**

திவ்யாஸ்த்ரங்களில் பழக்கமற்றவனாகிய அரசன், அந்த காந்தர்வாஸ்த்ரத்துக்குப் பரிஹாரம் செய்ய முடியவில்லை. அதனால் அவன் புரோஹிதரிடம் சென்றான். அரசன் அந்தப் புரோஹிதரிடம் நடந்த செய்தியைச் சொன்னான்.

## புரோஹிதர் ஸுதர்ஶநத்தை ஶரணமடைய உபதேஶம் செய்து எல்லா அஸ்த்ரங்களின் உபதேஶம் பெறும்படிச் செய்தார்

தர்மங்களை அறிந்தவரும் உத்தமமான அஸ்த்ரங்களில் தேர்ச்சி பெற்றவருமாகிய அந்தப் புரோஹிதர் அரசனுக்குச் சொன்னார் - ''பயப்படாதே ! அந்த ஸுதர்ஶநத்தை ஶரண மடைவாய். பக்தர்களின் கஷ்டங்களைப் போக்குபவரும், ஸுதர்ஶந வடிவத்தில் இருப்பவரும், ஸகலமான திவ்ய அஸ்த்ரங்களுக்கெல்லாம் இருப்பிடமானவரும், உயர்ந்த தெய்வமுமாகிய பகவானை, 64 ஆரங்களோடும் இரண்டு வட்டைகளோடு கூடியதுமான ஸுதர்ஶந மஹாசக்ரத்தின் நடுவில் இருப்பதாக த்யாநம் செய். 62 திருக்கரங்களோடு கூடியதும், மிகவும் பயங்கரமானதும், ஸம்ஹாராஸ்த்ரங்களைத் தரிப்பவருமான பகவானை இவ்வாறு த்யாநம் செய்து இந்த மந்த்ரத்தை ஜபித்து ஸேனைகளைப் பார். இவ்வாறு ஸகலமான அஸ்த்ர மந்த்ரங்களையும் அவனுக்கு உபதேஶித்தார்.

### இவ்வாறு பலம் பெற்ற ஶ்ருத கீர்த்தி மீண்டும் போர் செய்ய வருகை

ப்ரவர்தக நிவர்தக மந்த்ரங்களை எல்லாம் உபதேஶம் பெற்றுப் போர் செய்ய வருபவனானன். அவ்வரசன் யுத்த களத்துக்கு மீண்டும் வந்து,

### தன் ஸேனையைப் பார்த்தல்

பகவானை த்யாநம் செய்து, மந்த்ரங்களை ஜபித்துத் தன் ஸேனையைப் பார்த்தான். பிறகு அந்த ஸேனை உணர்வைப் பெற்று பெரிய போருக்குத் தொடக்கம் செய்தது.

### மீண்டும் போரில் ஶ்ருத கீர்த்தி வெற்றி கந்தர்வலோகத்தை வஶீகரித்தல்

இரண்டு அணிகளுக்கும் போர் மூண்டது. அரசன் **வீணாவிநோதனைப்** போரில் உத்தமமான அஸ்த்ரங்கள் மூலம் ஜயித்து அந்த கந்தர்வலோகத்தை ஸேனைகளுடன் தன் வஶமாக்கிக் கொண்டான்.

### பிறகு தன் நாட்டுக்குத் திரும்புதல்

பிறகு ஸித்தர்கள், கந்தர்வர்கள், கிந்நரர், சாரணர்கள் இவர்களால் பூஜிக்கப்பட்டவனாய் அரசன் வெற்றிச் செல்வத்துடன் **பத்ரஶாலை** என்னும் பட்டினத்துக்குத் திரும்பினான்.

### ஸுதர்ஶநத்தின் மஹிமையால் ஆச்சர்யமடைந்த அரசன் புரோஹிதருடன் ஆலோசனை

ஸுதர்ஶநத்தின் மஹிமையை நினைத்து மனத்தில் ஆச்சர்யம் கொண்டு, ஜ்வலிக்கும் நெருப்புபோல் இருக்கும் புரோஹிதரிடம் வந்து தாமரைக் கண்களை உடைய அவ்வரசன் பின் வருமாறு ஆலோசனை செய்தான்.

### தன் செல்வம் பகவானின் அருளாலேயே கிடைத்தது என்று கூறுகிறான்

கடல் சூழ்ந்த இந்தப் பூலோகம் பகவானுடைய க்ருபையினால் இதுவரை என் ஆட்சிக்கு உட்பட்டதாக இருந்து வருகிறது. இதே போல் வேறு உலகமும் இவ்வாறே என்று நினைக்கிறேன். பகவான் எப்பொழுதும் என்மீது அருள் புரிந்து வருகிறார்.

### பகவான் க்ருபையால் தனக்கு மோக்ஷம் கிடைக்கும் என்பதிலும் ஸந்தேஹம் இல்லை என்கிறான்

பிறப்பு- இறப்பு என்கிற ஸம்ஸாரத்திலிருந்து பயந்த எனக்கு ஸுதர்ஶந சக்ரத்தின் வடிவத்திலிருக்கும் இந்த பகவான் மோக்ஷத்தையும் கொடுப்பார் என்பதில் ஸந்தேஹமே இல்லை. இந்த ஜந்மத்துக்குப் பிறகு அந்த பகவானை நாமெல்லோரும் எப்பொழுதும் ஸேவித்துக் கொண்டு இருப்போம்.

### அரசனுக்குப் புரோஹிதர் ஸுதர்ஶநத்தை ப்ரதிஷ்டை செய்வது பற்றி உபதேஶம் செய்கிறார்

இவ்வாறு சொல்லி, கை கூப்பி நின்ற அரசனை மஹாமஹிமைஶாலியான புரோஹிதர் பின் வருமாறு

கூறலானார் - "பல நிறங்கள் கொண்ட உத்தமமான விமானத்தை ஸுதர்ஶநத் திருநாமத்துடன் நம் நகரத்தில் ப்ரதிஷ்டை செய்து சக்ரத்தின் மத்தியில் 62 திருக்கரங்களுடன் **நிவர்த்தகாஸ்த்ரங்களுடன்** ஸகல திருவாபரணங்களும் சாற்றிக் கொண்டு முன்பு சொன்ன முறையில் ப்ரதிஷ்டை செய்து ஸுதர்ஶந பகவானை ஸகல கார்யங்களும் நிறைவேறப் பூஜிப்பாயாக.

## அரசனும் அவ்வாறே செய்து முடித்தான்

இவ்வாறு சொல்லப்பட்ட அந்த அரசன் ஸாதாரண விஷயங்கள் நிறைந்த அவரது பேச்சை வணக்கத்துடன் தலையால் ஏற்றுக் கொண்டு எவ்வாறு செய்யப்பட வேண்டும் என்பதை அறிந்து அந்த நகரில் அவ்வாறே அமைத்தான்.

## அதற்காக ப்ராஹ்மணர்களுக்கு அரசன் உணவு உறைவிடம் ஏற்படுத்துதல்

பிறகு அரசன் 120 ப்ராஹ்மணர்களை அந்தத் திருக்கோயிலுக்கு நாற்புறமும் இருக்கச் செய்து ஏராளமான பணங்களையும், ஏராளமான பூமியையும் அவர்களுக்குக் கொடுத்து பகவானை மிகவும் பக்தியுடன் இருப்பவராக அமைத்துத் தன் எண்ணங்கள் நிறைவு பெற்றவனாக ஆகி மகிழ்ச்சியடைந்தான்.

## பிறகு பகவானுடைய க்ருபையால் அரசன் பரம புருஷார்த்தமான மோக்ஷம் பெறுதல்

அரசன் அந்தத் திருக்கோயிலில் ப்ரதிதிநமும் பகவானுக்கு நல்ல முறையில் திருவாராதநம் செய்து எல்லா இன்பங்களும் கிடைக்கப் பெற்றவனாய், பிறகு மிகவும் குறுகிய காலத்திலேயே உலக விஷயங்களில் பற்றுதலை விட்டவனாய் அந்த எம்பெருமானுடைய க்ருபையால் பரமபதம் சென்றடைந்தான்.

இவ்வாறுகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** காஶிராஜ
ஶ்ருத கீர்த்தி உபாக்யாந வர்ணனை என்கிற
42வது அத்யாயம் முற்றிற்று.

ஜலந்தரனை வதைக்க உபாயம் சிந்தித்தல் என்கிற

# 43வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥

(விளக்கம் 18வது அத்யாயத்தில் உள்ளது)

## அனைத்து உலகமும் ஸுதர்ஶநமயம் என்பது எப்படி? எனக்கேள்வி

**நாரதர் :–** அனைத்துக்கும் அதிபதியாகிய தேவனே ! மீண்டும் ஒரு கேள்வி கேட்கிறேன். எனக்குப் பதில்சொல்லி அருள வேண்டும். தேவரீர் இந்த அனைத்து உலகமும் ஸுதர்ஶநமயம் என்று முன்பு சொன்னீர். அது எப்படி என்று தெளிவாகச் சொல்லுங்கள். பகவானால் எப்பொழுது இவ்விஷயம் காண்பிக்கப்பட்டது ? இந்த விஷயம் தெரிந்தவர் இம்மூன்று உலகங்களில் தேவரீரே, வேறு எவரும் இல்லை.

## தேவர்கள் முதலியோர் தர்ம மார்கத்தை ப்ரசாரம் செய்தனர் என்பதின் விளக்கம்

**அஹிர்புத்ந்யர் :–** தேவர்களும் அனைத்து முநிவர்களும், மநுவும் அவருடைய புத்ரர்களும், அரசர்களும் எல்லா வர்ணத்தைச் சேர்ந்தவர்களும் தர்ம மார்கத்தை ப்ரசாரம் செய்திருக்கின்றனர்.

## அஸுரர் முதலியவர் தர்மத்தை அழிப்பவர்கள்

அவ்வாறே எல்லா அஸுரர்களையும், பூதங்கள், வேதாளங்கள் அரக்கர்கள் மிகவும் கொடுமையான மனிதர்கள் இவர்களையும் விலங்குகள், பயங்கர ரூபமுடைய திருடர்கள் இவர்களையும் முநிவரே ! இவ்வாறே அஸுர ப்ரக்ருதியைச் சார்ந்த மற்றும் சிலரையும் எப்பொழுதும் தர்மத்தை அழிப்பதைத் செய்வதாகவே கருதுகிறார்கள்.

## பாபிகளை அழிக்க அஹிர்புத்ந்யர் மேருவின் உச்சிக்குச் செல்லுதல்

ஆகையால், பாபச் செயல்கள் செய்யும் அவர்கள் எல்லோரும் எப்படி அழிவார்கள் என்று நான் பெரும் கவலை கொண்டவனாக மேரு சிகரத்துக்குச்சென்றேன்.

## அங்கு ஸமாதியில் ஒளிமிக்க ஜ்யோதி தோன்றுதல்

அங்கு ஸமாதியில் இருந்து உட்கார்ந்திருந்த எனக்கு உடனே ஒளிமிக்க ஒரு ஜ்யோதி கண்ணால் காண இயலாததாகத் தோன்றிற்று.

## அதர்வண வேத மந்த்ரம் உச்சரித்தல்

பிறகு அதைப் பார்த்ததனால் நான் **அதர்வண வேதத்தில்** உள்ள மந்த்ரத்தை உச்சரித்தேன். அந்த மஹாமந்த்ரத்தை ஜபம் செய்து கொண்டே இருந்த நான் அந்த ஜ்யோதியைப் பார்த்தேன்.

## ஒளியின் நடுவில் ஸுதர்ஶந புருஷனை நேரில் கண்டு கேட்ட கேள்வி

அந்த ஒளிமிக்க ஜ்யோதியில், கறுத்தும் பழுத்த நிறம் உள்ளவரும், ஊர்த்வ ரேதஸ்ஸும், மூன்று கண்கள் உடையவரும், ஆயிரம் ஸூர்யனுக்கு ஒப்பானவரும், ஆயிரம் ஆரங்களோடு கூடிய சக்ரத்தின் மத்தியில் இருப்பவரும், அணி அணியாக ஜ்வாலைகள் இருப்பதால் கண்ணால் பார்க்க இயலாதவரும், கலக்கமில்லாதவருமான பரமபுருஷனான ஸுதர்ஶநனைப் பார்த்து, **நீர் யார்? எங்கிருந்து வந்தவர்? யாரைச் சேர்ந்தவர்?** என்று சிறிதும் பயமில்லாமல் கேட்டேன்.

## ஸந்தோஷம் கொண்ட பகவானால் தன் ஸ்வரூபத்தை விளக்கப்படுதல்

பிறகு ஒளிகளுக்கெல்லாம் இருப்பிடமான அந்த பகவான் பேசலானார்- ஈஶ்வரனே ! இன்று முதல் நான் **ஸுதர்ஶநன்** என்ற பெயரோடு விளங்குவேன். **கண்ணால்**

காணமுடியாத நான் எதனால் உனக்கு எளிதில் பார்க்கத் தக்கவனாக ஆனேனோ, அதனால் ஸுதர்ஶநன்.

## தான் வைகுண்டத்திலிருந்து வந்ததற்குக் காரணம் கூறுதல்

நான் **வைகுண்டம்** என்கிற லோகத்திலிருப்பவன். உம்மைப் பார்க்கவே வந்தேன். **ப்ரத்யாஹாரம், தாரணா, த்யாநம்** என்கிற நிலைகளில் ஈடுபட்டிருக்கிற யோகிகளாலும் காணப்படாதவரும், அற்புத உருவமுடையவரும், எப்பொழுதும் மறைந்தே இருப்பவரும், ரஹஸ்யமானவரும், ஸகல ஜநங்களாலும் பூஜிக்கப் பட்டவரும், பாற்கடலிலிருந்து கடைந்து எடுக்கப்பட்ட அம்ருதம் போல் புத்தி என்கிற மத்தினால் வேதம் என்கிற கடலிலிருந்து கடைந்து எடுக்கப்பட்டவருமாகிய உம்மை, **பரமேஶ்வரனே !** மந்த்ர ஶரீரம் உடைய நான் காண வந்தேன். உமக்கு நான் என்ன செய்ய வேண்டும்? உமக்கும் **தாமோதரனுக்கும்** நான் வேற்றுமையே காண முடியவில்லை. ஆகையால் அந்த **தாமோதரனிம்** எப்படி இருப்பேனோ, அப்படியே **ஶங்கரா !** உம்மிடத்திலும் இருப்பேன்.

## அஹிர்புத்ந்யர் தான் கருதிய விஷயத்தைத் தெரிவித்தல்

இவ்வாறு ஆயிரம் ஸூர்யனுக்கு ஒப்பான அந்த **ஸுதர்ஶந பகவான்** பேசி முடித்த பிறகு நான் மிகவும் ஆஶ்சர்யம் அடைந்து தந்நிகரற்ற தேஜஸ்ஸோடு கூடிய அவரிடம் பேசினேன்- ''உலகத்தில் தர்மங்களை அழிப்பதற்குக் காரணமாக உள்ள பாபிகள் ஏராளமாக உள்ளனர். அவர்களை அழிப்பது எப்படி? எந்த உபாயங்களால் ஆகலாம்'' என்று கவலை கொண்டு நான் யோகத்திலிருந்தபோது, மந்த்ர ராஜனாகிய நீர் ஸேவை ஸாதித்தீர் (காட்சி அளித்தீர்). அந்தக் கார்யம் பூர்த்தியாகி விட்டது என்பது என் கருத்து.

## பாபிகளை நாஶம் செய்ய ப்ரார்த்தனை

ஆகையால் அந்தப் பாபிகளால் ஸாதுக்கள் துன்புறுத்தப்பட்ட பொழுது, நான் நினைத்த மாத்ரத்தில்

தேவரீர் எழுந்தருள வேண்டும். நான் முயற்சியால் செய்ய வேண்டிய கார்யத்தை, ஸ்வாமிந் ! தேவரீர் பூர்த்தி செய்து தரவேண்டும், என்றேன்.

## ஆகட்டும் என்று சொல்லி மறைதல்

**அப்படியே ஆகட்டும்** என்று சொல்லி மறைந்து விட்டார். நானும் கைலாஸத்துக்குச் சென்றேன்.

## இந்த ஸமயத்தில் ஜலந்தரனை வதைப்பதற்காக இந்த்ரன் மந்த்ராலோசனை செய்தல்

இந்த ஸமயத்தில் **ஜலந்தரன்** என்கிற பெயருடைய அஸுரனால் துன்புறுத்தப்பட்ட இந்த்ரன் அனைத்து தேவர்களுடன் மந்த்ராலோசனை செய்தான். அந்த அஸுரன் ஆயுதங்களாலோ, அஸ்த்ரங்களாலோ வெல்ல முடியாதவன் என்பதை யோசித்து அந்தப் பாபியை எந்த உபாயத்தால் அழிக்க முடியும் என்று கேட்டான்.

## வாயு தன் கருத்தைக் கூறுகிறார்

பிறகு **வாயு பகவான்** எழுந்திருந்து இந்த்ரனிடம் கூறலானான். இந்தப் பெரிய அஸுரன் அஸ்த்ரங்களாலோ, ஆயுதங்களாலோ ஜயிக்க முடியாதவன் என்பது உண்மைதான். ப்ரஹ்மாவினால் வரங்கள் கிடைக்கப் பெற்று, அதனால் கர்வம் கொண்டு (ஸேனைகளுடன்) பலம் கொண்டவனாய், **தூம கேது** தோன்றினாற்போல் எரிக்க விரும்புகிறான். எல்லா உலகங்களுக்கும் அதிபதியாகவும், மிகவும் ஜ்ஞாநச் செல்வம் படைத்தவராகவும், யாராலும் அறிய முடியாதவரும், மிகுந்த தேஜஸ்ஸோடு கூடியவருமான தேவர்களுக்கெல்லாம் தேவனுமாகவும், ப்ராணிகளுக்கெல்லாம் நன்மை செய்பவனுமாகிய, மஹாதேவனுமான ஶங்கரனிடத்தில் தேவர்களுக் கெல்லாம் எதிரியும் கொடியவனுமான அந்த ஜலந்தரனால் அபசாரம் செய்யப்பட்டது. ஆகையால் **ஶங்கரன்** அவன் மீது மிகவும் கோபம் கொண்டு இருக்கிறார். இந்தத் தீமைகளைச் செய்பவனான அந்தப் பாபியைக் கொல்வதற்கு அந்தப்

பகவானிடம் செல்வோம். ப்ருஹஸ்பதியை முன்னிட்டுக் கொண்டே அந்தப் பகவானை நாம் ப்ரார்த்திப்போம். அந்த ப்ருஹஸ்பதிதான் அங்கு என்ன பேச வேண்டும் என்பதை அறிந்தவராக இருக்கிறார் என்று **வாயு** கூறினார்.

## வாயுவின் கருத்தை ஏற்ற இந்த்ரன் ஶங்கரனிடம் செல்ல ப்ருஹஸ்பதியை ப்ரார்த்தித்தல்

அந்த வாயு பகவான் பேசி முடித்தவுடன் இந்த்ரனும் **சரி அப்படியே ஆகட்டும்** என்றான். பிறகு சுடர் விட்டு எரியும் நெருப்புபோல் விளங்கும் ப்ருஹஸ்பதியிடம் சென்று இந்த்ர பகவான், ஜலந்தரனைக் கொல்வதற்குத் தேவரீர் ஶங்கரனிடம் செல்ல வேண்டும் என்று ப்ரார்த்தித்தான். ''அந்த ஶங்கரன் அவன் மீது மிகவும் கோபம் கொண்டு இருக்கிறார். கட்டாயம் அவனை ஸம்ஹாரம் செய்வார். ஸந்தேஹமில்லை. தேவர்களின் எல்லா வகைக் கார்யங்களுக்கும் தேவரீரே முக்யமான கதியாக இருக்கிறீர். ஆகையால் அந்தச் சந்த்ர ஶேகரனைத் தேவரீர் சென்று ஸந்திக்க வேண்டும்'' என்றான்.

## இந்த்ரனுடைய பேச்சினால் ப்ருஹஸ்பதி கைலாஸம் செல்லுதல்

தேவர்களுக்கெல்லாம் அதிபதியான இந்த்ரன் இவ்வாறு ப்ரார்த்தித்த போது **அப்படியே ஆகட்டும்** என்று சொல்லி இந்த்ரனால் பூஜிக்கப்பட்ட ப்ருஹஸ்பதி மிகவும் ஸந்தோஷம் கொண்ட மநத்துடன் கைலாஸம் சென்றார்.

## அங்கு ஶங்கரனைக் காணுதல்

அங்கு அழகிய ஒரு மண்டபத்தில் தேவர்களோடு உட்கார்ந்திருப்பவரும், அப்ஸர ஸ்த்ரீகள் செய்யும் நாட்யத்தில் ஈடுபட்டு ஆச்சர்யத்துடன் இருக்க என்னை உதய ஸூர்யனுக்கு ஒப்பான அந்த குரு பகவான் (ப்ருஹஸ்பதி) ஸேவித்து (நமஸ்காரம் செய்து) எழுந்திருந்து என்னைத் துதிக்கலானார்.

## ஜலந்தரனை ஸம்ஹாரம் செய்ய ப்ருஹஸ்பதி ஶங்கரனைத் துதித்தல்

தேவர்களுக்கெல்லாம் தேவரே ! அருள்புரிய வேண்டும். உலகங்களுக்கெல்லாம் அதிபதியே ! அருள் புரிய வேண்டும். ஸகல தேவதைகளையும் காப்பாற்றியும் ஒடுக்கியும் செய்கிற பகவானே ! அருள் புரியவேண்டும். ஷாட்குண்ய பரிபூரணனே ! அருள் புரிய வேண்டும். தேவர்களால் நமஸ்கரிக்கப்பட்டவனே ! அருள் புரிய வேண்டும். ஸகல வித ஜ்ஞாநத்துக்கும் கடல் போன்ற பரமேஶ்வர ! அருள் புரிய வேண்டும். ஆகாயத்தில் வஸிப்பவரே ! உமக்கு நமஸ்காரம். நாகங்களை ஆபரணமாக அணிந்தவரே ! நமஸ்காரம். மிகவும் மங்கள ஸ்வரூபியே ! நமஸ்காரம். முப்புரங்களைஅழித்தவரே ! நமஸ்காரம். நீரே ப்ரஹ்மா, நீரே வஷட்காரர், நீரே ஹவிஸ், நீரே அக்நி, நீரே ஸத்-அஸத் என்று இருவகையாக இருக்கிறீர். தேவரீரே ப்ரணவம், நீரே இந்த்ரன், நீரே யமன், நீரே, வருணன், நீரே சந்த்ரன், நீரே நிர்ருதி, நீரே வாயு, ஸூர்யனும் நீரே, வஸுவும் நீரே, எல்லா இடங்களிலும் இருப்பவர் நீரே. ப்ரக்ருதி நீரே. மஹத்வம், மூன்றுவகை அஹங்காரமும் நீரே. பஞ்சபூதங்களும் நீரே. பூதஸூக்ஷ்மங்களும் நீரே. ஜ்ஞாநமும் அஜ்ஞாநமும் நீரே. அதிகம் சொல்வானேன்? அசையும் பொருள், அசையாப் பொருள் கொண்ட உலகம் நீரே, பூதகணங்களுக்கெல்லாம் தலைவரும் நீரே, எல்லாவற்றுக்கும் காரணம் எதுவோ அதற்கும் காரணம் நீரே. பூமி, ஜலம், வாயு, ஆகாயம், அக்நி, ஸூர்யன், சந்த்ரன், யாகத்தின் யஜமாநன் இந்த எட்டுவகை மூர்த்திகளுடன் கூடியவரும், மஹா முநிவர்கள் மநங்களால் த்யாநிக்கப் படுபவரும், ஸம்ஸார பயத்தைப் போக்குபவரும், உலகத்தை மூர்த்தியாகக் கொண்டவருமான உமக்கு நமஸ்காரம்.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை **ஜலந்தரோபாக்யாநம்** என்கிற
43வது அத்யாயம் முற்றிற்று

ஸுதர்ஶந ஸ்வரூபத்தின் விளக்கம் என்கிற

# 44வது அத்யாயம்

**த்யாதம் ஸக்ருத்பவாநேககோட்யகௌகம் ஹரத்யகம் ।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥**

### ஸ்தோத்ரத்தால் மகிழ்ச்சியுற்ற ஶங்கரன் அவருடைய வருகையின் காரணம் கேட்கிறார்

**அஹிர்புத்ந்யர் :-** இவ்வாறாக ஸ்தோத்ரம் செய்த (ப்ருஹஸ்பதியை) க்ஷேமமா ? என்று கேட்டு, நான் பேசினேன். ப்ருஹஸ்பதியே ! நீர் வந்த காரணம் என்ன?

### ஶங்கரனிடம் ப்ருஹஸ்பதி தேவர்களின் கார்யம் பற்றி விண்ணப்பம்

இவ்வாறு கேட்கப்பட்ட அந்தக் குரு, தான் வந்த காரணம் அனைத்தையும் தெரிவித்தார். கருணைக் கடலே ! ஶம்பு தேவனே ! எங்களுடைய இந்த விஷயத்தை அன்புடன் கேட்க வேண்டும். எல்லாவற்றுக்கும் அதிபதியாக இருப்பவரே ! உம் மனம் எல்லா மக்கள் பற்றியும் அநுக்ரஹம் செய்வதாக இருக்கிறது. ஆகையால் தேவர்கள் கார்யத்துக்கு நான் ஶரணமடைகிறேன். எல்லோரும் கேள்விப்பட்டிருக்கிற ஜலந்தரன் என்கிற அஸுரன் மிகவும் கொடிய செயல்களைச் செய்து கொண்டு, மேலும் சதுர்முகனால் கொடுக்கப்பட்ட பல வரங்களின் பலத்தோடு கூடியவனாக இருந்து கொண்டு தேவர்களை எப்பொழுதும் ஹிம்ஸிக்கிறான். தேவர்களும் இந்த்ரனும் எல்லோருமே அவனை மாய்ப்பதற்குச் சக்தியற்றவர்களாக உள்ளனர். தேவர்கள் அனைவரும் ஒன்று கூடி இவ்விஷயம் பற்றி ஆலோசனை செய்தனர். அவன் மிகப் பெரிய வரத்தினால் கர்வம் கொண்டு இருக்கிறான். இந்தப் பெரிய அஸுரன், மஹாதேவன் ஒருவனால் தவிர யாராலும் அழியப்படமாட்டான். இவ்வாறு யோசனை செய்த பிறகு அனைத்து தேவர்களுடன் கூடிய இந்த்ரன் என்னிடம் பின் வருமாறு சொன்னான் - இந்த மஹாஸுரனை அழிக்கச் சக்தியுள்ளவராக முக்கண்ணனாகிய சிவபெருமானைத் தவிர

யாரையும் எங்களால் நினைக்க முடியவில்லை. அந்தச் சிவனை ஶரணம் அடையுங்கள். தேவர்களுடைய கார்யத்துக்காகப் பின் வரும் விஷயத்தை பிநாகியிடம் கேட்டுப் பெறுங்கள். இந்த்ரனால் இவ்வாறு கேட்டுக் கொள்ளப்பட்ட நான் தேவரீரிடம் வந்தேன். ஆகையால் இந்தத் தேவர்களனைவரும் ஸுகமாக இருக்க என்ன செய்ய வேண்டுமோ, அதைச் ஶீக்கிரமே செய்ய வேண்டுகிறேன்.

## ஶங்கரனால் ஜலந்தர வத ப்ரதிஜ்ஞை

இவ்வாறு அந்த ப்ருஹஸ்பதியால் ப்ரார்த்திக்கப்பட்ட நான், முநிவரே ! சிறிது யோசனையில் ஆழ்ந்தேன். இதை நினைத்து வாசஸ்பதி என்கிற ப்ருஹஸ்பதியிடம் பின் வருமாறு சொன்னேன் - ''பாப கார்யங்களைச் செய்கிற ஜலந்தரனை நான் விரைவிலேயே வதைப்பேன்.''

## அஸுரனை அழிப்பதற்குத் திறமை தனக்கு இருப்பதற்கு ஸுதர்ஶநத்தின் மஹிமையே காரணம் என்கிறார்

நான் ஸமாதியில் இருந்த போது எனக்கு ஸுதர்ஶந வடிவத்தில் இருக்கும் பகவான் ஸேவை ஸாதித்தார் (காட்சி தந்தார்). மந்த்ரமாகவும், மந்த்ரங்களை அறிந்தவருள் சிறந்தவராகவும்,எல்லா மந்த்ரங்களுக்கும் உற்பத்தி ஸ்தாநமாகவும், எல்லா பலன்களையும் தர வல்லவராகவும், என்றைக்கும் சிறிதும் குறைவற்றவரும், துஷ்டர்கள் அனைவருக்கும் அச்சத்தைத் தருபவராகவும், எல்லோரையும் காப்பதில் திறமைஶாலியாகவும், அறம், பொருள், இன்பம், வீடு என்கிற பொருள்களைக் கொடுப்பவராகவும், தன்னுடைய மந்த்ரங்களைக் காப்பதில் ஈடுபட்டவராகவும், மற்றவர்களின் ஏவல் மந்த்ரங்களை விலக்குபவராகவும், அதர்வண வேதத்தில் சொல்லப்பட்ட 6 எழுத்துக்கள் கொண்ட மந்த்ர உருவமாகவும், ஆறுவது காதுக்கு எட்டாதவராகவும், மாம்ஸக் கண்ணால் பார்க்க முடியாதவரும், தேஜோமயமாகவும், கண்களுக்குக் கூச்சத்தைத் தருபவருமான பகவானைப் பார்த்தேன்.

மந்த்ரத்தை உச்சரித்துக் கொண்டு இருந்த என்னால், சக்ரத்தின் மத்தியிலிருந்த ஸுதர்ஶநம் பார்க்கப்பட்டது. ''மந்த்ரத்தை நீ கண்டதனால் நான் மிகவும் ஸந்தோஷமடைந்தேன்'' என்று கூறினர். ''ஶங்கர பகவானே ! பரமபதத்தில் இருக்கும் நான் உனக்கு எப்பொழுதும் அடிமையாக இருந்து மந்த்ரத்தின் மூலம் நினைக்கப்பட்டவனுய்ச் செய்ய வேண்டிய உன் கார்யத்தை அம்ஶத்தினால் வந்து செய்து முடிப்பேன்''. ஸுதர்ஶந உருவமாக இருந்த பகவான் இவ்வாறு சொல்லிச் சென்று விட்டார். அந்த பகவானைக் கொண்டு அந்த துஷ்டனை விரைவில் மாய்ப்பேன்.

## ஶங்கரனிடம் ப்ருஹஸ்பதி வேண்டுகோள்

இவ்வாறு சொல்லப்பட்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்த ப்ருஹஸ்பதி நமஸ்கரித்து மேலும் சொன்னார்- ''பகவன் ஶங்கர ! என் மீது தேவரீருக்கு க்ருபை இருக்குமானால் இந்த ஸுதர்ஶந வித்யையை (மந்த்ரத்தை) எனக்குக் கொடுத்து அருள்வீராக என்ருர். பிறகு நான் எல்லா வகையிலும் மஹாத்மாவாக இருக்கும் அந்தப்பெரியவருக்கு அந்த மந்த்ரத்தை உபதேஶித்தேன்.

## ப்ருஹஸ்பதி ஹிமயமலை செல்லுதல்

அந்த மந்த்ரத்தைப் பெற்று ஸந்தோஷமடைந்து ஹிமய மலைக்குச் சென்ருர் ப்ருஹஸ்பதி. அந்த மலையில் உத்தமமான மந்த்ரத்தை ஜபம் செய்தார்.

## ப்ருஹஸ்பதி ஸுதர்ஶநத்தை நேரில் ஸேவித்தல்

பிறகு மிகவும் வியப்பைத் தரக்கூடிய மூர்த்தியோடு கூடியவரும் சக்ரத்தின் மத்தியில் இருப்பவரும் இன்பம் தரும் வடிவத்துடன் கூடிய பகவான் **ஸுதர்ஶநன்** அவருக்கு நேரில் ஸேவை ஸாதித்தார் (காட்சி தந்தார்).

## ஆஶ்சர்யத்துடன் ப்ருஹஸ்பதி அவர் இரண்டு கைகளுடன் இருப்பதற்குக் காரணம் கேட்டார்

ஜ்வலிக்கும் திருமேனியுடன் கூடியவரும், புன்முறுவல் செய்பவரும், குங்குமப்பூவின்

நிறமுடையவரும், இரண்டு புஜங்களுடன் கூடியவரும், எல்லோருக்கும் அருள் புரிபவரும், பரமபுருஷனும், ஶங்கம் - சக்ரம் இவற்றைத் தரிப்பவரும், உத்தமமான மாலைகளால் அழகு மிக்கவரும், பீதாம்பரத்தைத் தரித்தவரும், இரண்டு திருக்கண்களோடு அழகிய திருமுக மண்டலம் உடையவரும், எல்லோருடைய ஶக்திக்கும் அஸ்த்ரங்களுக்கும் ஆதாரமாக விளங்குபவரும், ஶத்ருக்களை மாய்ப்பவருமான அந்த பகவானைப் பார்த்து ஆஶ்சர்யமடைந்தவராய் நமஸ்கரித்துக் கேட்டார். ''பகவானே ! தேவரீர் எட்டு புஜங்களோடு கூடியவர் என்று உலகத்தில் ப்ரஸித்தமாகப் பேசப்படுகிறீர். இது என்ன ! மனிதர்களுடைய உருவமும் அவயவமும் உடையவராக எனக்கு இப்படி ஸேவை ஸாதிக்கிறீர் ? (தோன்றுகிறீர்)''என்றார்.

## ஸுதர்ஶநத்தின் பதில்

கேளும், என்று சொல்லி ஸுதர்ஶநம் பதில் கூறினார்- என்னுடைய ஸங்கல்பத்தினால் அவ்வப்பொழுது உண்டு பண்ணப்பட்ட வ்யூஹங்கள் ஆயிரக்கணக்கில் உள்ளன. ப்ருஹஸ்பதியே ! அவற்றுள் என்னுடைய முக்யமான வ்யூஹங்கள் நான்கு.

## அவைகளின் எண்ணிக்கை

முதலில் என்னை இரண்டு கைகளோடு கூடியவனாகவும், அதன் பிறகு எட்டு புஜங்கள் உடையவன் என்றும், பிறகு 16 புஜங்கள் உடையவன் என்றும்,அடுத்து 62 புஜங்கள் உடையவன் என்று அறிந்து கொள்ளும்.

## மற்ற வ்யூஹங்கள் உபாஸகர்களின் அநுக்ரஹத்துக்காக

மற்ற வ்யூஹங்கள் பல உண்டு. அவை உபாஸகர்களுக்கு அநுக்ரஹம் செய்வதற்காகவே அமைந்தவை.

## நான்கு வ்யூஹங்களின் வடிவம்

என்னுடைய இந்த உருவம் ஸ்வபாவத்திலேயே அமைந்தது. நித்யமாகவும் ஶுத்த ஸத்வமாகவும் இருக்கும். அதனால் சிதைவு அழிவு அற்றவை.

## மற்றவை உபாஸகர்கள் அநுக்ரஹத்துக்காக

மற்றவை எல்லாம் என்னிடம் பக்தி செய்பவர்களுக்கு அநுக்ரஹம் செய்வதற்காக ஏற்பட்டவை.

## தனக்கு வேறு உருவங்களுமுண்டு என்று விளக்கம்

மற்றொன்று உலகமயமாக இருக்கும் உருவம். தேவர்களாலோ தாநவர் (ராக்ஷஸர்) களாலோ பார்க்க முடியாதது. இப்படிப்பட்டது என்று அறிய முடியாதது. எல்லையற்றது. யாருக்கும் இயற்கையான கண்களால் பார்க்க முடியாது. ப்ருஹஸ்பதியே ! ஹ்ருஷீகேஶன் எப்படியோ அப்படியே நானும்.

## ப்ருஹஸ்பதி அந்த உருவத்தைத் தனக்குக் காட்டியருள வேண்டுதல்

இவ்வாறு பேசிய ஸுதர்ஶந உருவத்திலிருக்கும், அந்த பகவானை, பேசுபவர்களுள் சிறந்த ப்ருஹஸ்பதி, ''ஸ்வாமிந் ! உலகமயமாக உள்ள உருவம் என்று, இயற்கைக் கண்ணால் பார்க்க முடியாது என்றும், எல்லையற்றது என்று எதைச் சொன்னீரோ அதை நான் யோக த்ருஷ்டியால் (ஜ்ஞாநக் கண்) பார்க்கும்படி எனக்கு இப்பொழுது காட்டியருள வேண்டும் என்று நமஸ்கரித்துக் கேட்டுக் கொண்டார்.

## பகவான் ஜகத் சக்ர உருவத்திலிருக்கும் தன்னைக் காண்பித்தல்

நாரதரே ! உலகங்களுக்கெல்லாம் ஆத்மாவாக இருக்கும் பகவானும் தன்னால் கொடுக்கப்பட்ட யோக த்ருஷ்டியை உடைய ப்ருஹஸ்பதிக்கு ஶாஶ்வதமான தன்னுடைய வடிவத்தைக் காண்பித்தார். அவரும் ஆஶ்சர்யம்

அடைந்தவராய் எதிரில் இருக்கும் அந்த பகவானைக் கண்ணுரக் கண்டார்.

## அந்த ஜகத்சக்ரரூபத்தின் வர்ணனை

உலகங்களின் உட்புறமெல்லாம் வ்யாபித்திருக்கும் பயங்கரமான அந்த உருவம், இதற்கு முன் யாரும் பார்த்திராதது. நம்முடைய புலன்களுக்கு எட்டாதது. மிகவும் உயரமாகவும், பலம் மிக்கதாகவும் புஜங்கள், ப்ரிஸ் பிணைந்திருக்கும் ஆயிரக் கணக்கான சக்ர மாலைகளோடு கூடியது. பாதங்களில் பிணைந்து இருக்கும் மிகவும் ப்ரகாசமான பல அண்டங்களின் வரிசைகளை உடையது. தன்னுடைய மஹிமையில் நிற்கிறது. ப்ரளய காலத்திலிருக்கும் ஜ்வலிக்கும் பல ஸூர்யன்களின் கிரணங்களாகிற ஒளிமிக்க உயரமான அழகான கிரீடத்துடன் கூடியது. பெரிய கடலில் ஏற்படும் சுழல்கள் போல் சுற்றும் பழுப்பு நிறக் கண்களோடு கூடியது. பற்பல தேவர்களோடு கூடியது. மிகவும் வெண்மையான கோரைப் பற்களின் இடையில் சிக்கி இருக்கும் பல உலகங்களை உடையது. உலகங்களை விழுங்குவதும் புருவ நெரித்தலால் பயங்கரமானது. சந்த்ரன், நக்ஷத்ரக் கூட்டங்கள் நிறைந்த ஆகாயம் போல் மாலைகள் சூடிய திருமார்பை உடையது. மேல் நோக்கிப் பரவும் ஒளி மாலைகளோடு கூடியது. பெரிய அஸ்த்ரங்கள் கொண்டது. அனைத்து வகை ஆயுதங்கள் உடையது. ஒளிமயமானது. ப்ரளய காலத்தில் இருக்கும் ஸூர்யன், சந்த்ரன், நெருப்பு இவைகளெல்லாம் இந்த உருவத்தில் சிறு பொறி போல் காணப்படுகிறது. தன் உருவத்தினால் எட்டு திக்குகளையும் நிரப்பிக் கொண்டிருக்கிறது. இந்த உருவத்தில் ஆகாயம் எங்கே? பூமி எங்கே? என்று அறிய முடியாத நிலை.

## ப்ருஹஸ்பதி மூர்ச்சை அடைதல்

**ஜணத் ஜணத்** என்னும் ஒலியை எழுப்பிக் கொண்டு இருக்கும் திருவாபரணங்கள் முதலியவற்றின் ஒலிகள் உலகத்தை நிரப்புகின்றன. யாராலும் இதற்கு முன் பார்க்கப்

படாதது. அளவிட முடியாதது. இப்படிப்பட்ட ஜகத் சக்ரத்தைப் பார்த்து ப்ருஹஸ்பதி மூர்ச்சையடைந்தார்.

## மீண்டும் நினைவு பெற்று அவர் ஸுதர்ஸநத்தைத் துதித்தல்

பிறகு மஹாத்மாவான அந்த ப்ருஹஸ்பதி மிகவும் ஶ்ரமப்பட்டுத் தன் நினைவைப் பெற்று ஸுதர்ஸந பகவானைப் பின் வருமாறு துதித்தார். ''ஓம். பகவானே! யாராலும் ஜயிக்க முடியாதவரே! ஸுதர்ஸநரே! ஜ்ஞாந ஸ்வரூபமானவரே! உமக்கு நமஸ்காரம். எல்லா வகையான குறை இல்லாத ஶக்திகளை எப்பொழுதும் நீர் ப்ரகாஶமாக விளங்குவதாக உடையவர். அசையும் பொருள் அசையாப் பொருள் கொண்ட உலகம் அனைத்தையும் தாங்கிக் கொண்டிருக்கிறீர். உம்முடைய வீர்யத்தை யாராலும் தடுக்க முடியாது. உம்முடைய ஒளி மிக மிகப் பெரியது. அனைத்து நற்குணங்களும் கடல் போல் நிறைந்தவர். தேவரீருடைய மூர்த்தி ஶுத்தமான தேஜோமயமானது. மேலும் சக்ர வடிவத்தில் இருப்பவர், உமக்கு நமஸ்காரம். பக்தர்களைக் காப்பதையே தேவரீர் வ்ரதமாகக் கொண்டவர். உமக்கு ஜய எனும் திருநாமம். உம்முடைய பராக்ரமத்துக்கு இணை யாருமில்லை. உமக்கு நமஸ்காரம். ஆயிரம் சக்ரங்கள் உடையவர். ஆயிரம் திருநாமங்கள் உடையவர். ஆயிரம் ஆரங்கள் கொண்ட சக்ரத்தின் வடிவத்திலிருக்கும் உமக்கு நமஸ்காரம். இந்த உலகங்களைப் படைத்து, காத்து, அழிக்கும் ஒரே தெய்வம் நீரே. ஸம்ஸார மென்னும் கடலைத் தாண்டுவதற்கு நல்ல கப்பலோட்டியாக இருக்கிறீர். உமக்கு நமஸ்காரம். ஶாஶ்வதமான தேஜோமயமான உமக்கு நமஸ்காரம். ஸ்வாமிந்! சக்ரவடிவமான பகவானே! எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணனுடைய மனத்தில் எந்த எந்த ஸங்கல்பம் வருகிறதோ, அது எல்லாம் உடனே தேவரீருக்குத் தெரிந்து விடுகிறது. அது எப்படி என்றால் தேவரீருடைய திருவடித் தாமரை உலகத்தில் அந்த ஸங்கல்பத்தை எல்லாம் செயல் வடிவத்தில் நிறைவேற்றி விடுகிறது. நினைத்த மாத்திரத்திலேயே அழிந்து போகும் பக்தர்களின் பெரிய

பாபங்கள் என்கிற வெள்ளமாகிற ஆழ் கடலுக்குக் கப்பல் போலிருப்பது தேவரீரின் இணை அடித் தாமரைகளே. தேவரீருடைய ஜ்யோதி என்கிற கடலின் சிறு துளியினால் ஸ்வரூபம் பெற்றவர்களான ஸூர்யன், சந்த்ரன் அக்நி இவர்களால் ஸ்தோத்ரம் செய்யப்பட்டது தேவரீருடைய மேலான ஜ்யோதி. தேவரீருக்கு நமஸ்காரம். ஸ்வாமிந் ! உலகம், கால சக்ரம், இவற்றின் ஸ்வரூபமானவர் தேவரீர். மேலும் நான்முகன் முதலிய ஸகல தேவர்களால் எப்பொழுதும் போற்றப்படுபவர். எப்பொழுதும் கோவிந்தனை ஸேவிப்பதனுல் ஏற்படும் ரஸத்தினுல் கிடைத்த அளவற்ற ஆநந்த ப்ரவாஹம் நிறந்ததே தேவரீரின் ஸ்வரூபம். அப்படிப்பட்ட உமக்கு என் நமஸ்காரம் உரித்ததாகும். அனைத்து தேவர்களின் அஸ்த்ரங்கள் முதலியவற்றால் தேவரீர் செய்த பற்பல அவதாரங்கள் பற்றி எப்பொழுதும் நினைத்து தேவரீரைப் பற்றிச் செய்யும் ஸ்தோத்ரங்களைக் கேட்பதால் தேவரீர் மநம் மகிழ்ச்சியடைகிறது. மேலும் அனைத்து தேவர்களின் தலைவர்களாலும் அஸுரர்களின் தலைவர்களாலும் (வணங்கப்படுவதால்) கிரீடங்களின் நவரத்நங்களின் ஒளிக் கற்றைகளால் தேவரீருடைய மலரடி இணை எப்பொழுதும் பூசப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட தேவரீருக்கு நமஸ்காரம். தேவரீர் கலை, முஹூர்தம், நாடி முதலிய எவ்விதக் குறிப்புகளும் அற்றவர். மேலும் தேவரீர் திருமேனிச் சிதைவு, வளர்ச்சி, பிறப்பு, இறப்பு இல்லாத திவ்யத் திருமேனி, உமக்கு நமஸ்காரம். தேவரீர் எல்லா வகைகளிலும் எல்லாரைக் காட்டிலும் உத்தமமானவர். ஆனாலும் வாக்குக்கோ, மனதுக்கோ எட்டாதவர். மேலும் தீய குணம் எதுவும் தேவரீரைத் தொட்டதில்லை. பக்தர்களிடம் மிகுந்த ப்ரீதி உடையவர். புண்யங்கள் அளவில்லாமல் செய்தவர்களுக்கு மட்டுமே கிடைக்கத் தக்கவர். யாவராலும் நமஸ்கரிக்கப் பட்டவர். வேத ஸ்வரூபி. பரம ஸத்வ குணமயமான திருமேனி உடையவர். அப்படிப்பட்ட தேவரீரை நமஸ்கரிக்கிறேன்.

### உருவத்தை மறைத்துக் கொள்ளும்படி வேண்டுகிறார்

எம்பெருமானே ! இந்த உலகத்தில் யாரும் தங்களை உள்ளபடித் தெரிந்து கொள்ளவில்லை. தேவர்களும், மனிதர்களும், மற்றவர்களும் இதற்கு விலக்கில்லை. ஆனால் வேதங்கள் மட்டுமே உம்மை அறியும். ஆனாலும் பயத்தைக் கொடுப்பதும் யாராலும் பார்க்கப்படாததுமான இந்த ஜகச்சக்ர உருவத்தை இப்பொழுது க்ருபை செய்து மறைத்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு ப்ருஹஸ்பதியால் ப்ரார்த்திக்கப்பட்ட ஸுதர்ஶநர் சக்ரவடிவத்தில் இருந்து கொண்டு எட்டு திருக்கைகளுடன் அவருக்குக் காட்சி தந்தார். மேலும் ஶ்ரிய:பதியான பகவான் மகிழ்ச்சி கொண்ட முகத்துடன் ப்ருஹஸ்பதியைப் பார்த்துப் பேசலானார்- ''இப்பொழுது உமக்குக் காண்பித்த ஜகச் சக்ர உருவம் தேவர்களால், அஸுரர்களால் காணப்பட்டதில்லை. ஸ்ரீமந் நாராயணனைத் தவிர வேறு யாரும் இதை அறிந்ததில்லை. இது ஸத்யம்.

### ஸுதர்ஶநம் க்ரியா ஶக்தியாக இருக்கும் நிலையை விளக்குகிறார்

இந்த விஷயம் ரஹஸ்யமானது. நான் ஶார்ங்கம் என்னும் வில்லைத் தரிக்கும் எம்பெருமானின் **க்ரியா ஶக்தி**யாக இருக்கிறேன். முநிவரே ! அதனால் அவர் கார்யங்களை எல்லாம் நானே செய்கிறேன். இந்த உலகத்தைப் படைத்தல் முதலிய எல்லாவற்றையும் நானே செய்கிறேன் என்று சொல்லி மறைந்து விட்டார்.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யில் ஸுதர்ஶந
ஸ்வரூபம் காண்பித்தல் என்கிற
44வது அத்யாயம் முற்றிற்று.



# 45 வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥

(விளக்கம் 18வது அத்யாயத்தில் உள்ளது)

## அத்யாத்ம வித்யை பற்றிக் கேள்வி

**நாரதர்:-** பகவன் பரமேஶ்வர! வேதாந்த வித்யை, மற்றும் அவித்யை, உத்தமமான வித்யை இவை எல்லாம் முன்பு விளக்கமாகச் சொல்லப்பட்டன. ஸ்வாமிந்! அவற்றால் எது ஸாதிக்கப்படுகிறது? எது விலக்கப்படுகிறது? தேவரீரே இதை அறிந்தவர். அதை அடியேனுக்கு விரிவாக விளக்க வேண்டுகிறேன்.

## அவித்யையின் வேலை விளக்கம்

**அஹிர்புத்ந்யர்:-** இது மிகவும் ரஹஸ்யமான விஷயம். நான் அதை உமக்குச் சொல்கிறேன், கேளும். ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள இயல்பான உருவம் அவித்யையினால் மறைக்கப்படுகிறது. அவ்விருவருக்கும் உள்ள தத்வ ஞானம் தடுக்கப்படுகிறது. ஸம்ஸாரத்தில் உள்ள ஜீவனுடைய சரீரத்தைப் பற்றி ஞாநம் பிறப்பதால் நல்ல தெளிவான ஞாநம் ஏற்படும். அதே போல் **பந்தநம்** என்ற பெயருடைய இந்த ஸம்ஸாரம் (பிறப்பு - இறப்பு) விளக்கப்படுகிறது.

## பரவித்யையினால் ஏற்படும் பலன்கள் விளக்கம்

குற்றமற்றவரே! பரமாத்மாவின் ஸ்வரூபத்தை அறிவதன் மூலம், மீண்டும் பிறப்பில்லாததும், எப்பொழுதும் எல்லையற்ற ஆநந்தத்தையே பலனாக உடைய மேலான மோக்ஷம் கிடைக்கப் பெறுகிறது. முநிவரே! அநாதி காலமாக ஏற்பட்டவையும், முன் ஜந்மங்களில் ஏற்பட்டவையும், இனி வரப்போகும் நம் புண்ய பாபம் போன்ற கர்மாக்களும் இந்த

ஞானத்தாலே அவற்றின் வாஸனையுடன் சேர்ந்து அழிக்கப்படுகிறது.

**ப்ராரப்த கர்மா அநுபவிப்பதால் தான் தீரும்.**

**ப்ராரப்தம்** என்று சொல்லப்பட்ட வினை அது அநுபவிக்காமல் தீராது. இது எல்லாம் உமக்குச் சுருக்கமாகச் சொல்லப்பட்டது.

**ப்ராரப்தத்தை அழிக்கக்கூடிய ஒரு வகை கர்மா(செயல்) உண்டா? இல்லையா? என்ற கேள்வி**

**நாரதர்:-** ஸ்வாமிந்! **ப்ராரப்தம்** என்று சொல்லப்படும் ஒரு செயல் எந்தக் கார்யத்தினால் அழிக்கப்படும்? அல்லது எந்த கார்யத்தாலும் அழிக்கப்படாத கர்மா உண்டா?

இதற்குப் பதில் கூற குஶத்வஜனுடைய சரித்ரத்தைக் கேளும்: ஜநகர்கள் என்ற குலத்தில் குஶத்வஜன் என்று ஒரு அரசன் இருந்தான். அவன் பரப்ரம்ஹத்தை அறிந்தவன். பெரிய வள்ளல். மக்களைக் காப்பதிலேயே ஈடுபட்டு இருந்தான்.

**குஶத்வஜனுக்குப் பெரிய அறியாமையால் மிகவும் தொல்லை ஏற்பட்டது.**

இப்படிப் பூமண்டலம் முழுவதையும் ஆண்டு வந்த அந்த அரசனுக்கு ஒரு ஸமயம் உடல் முழுவதும் வருத்தக் கூடிய ஒரு வகை மஹா மோஹம் ஏற்பட்டது. அந்த மோஹத்தினால் ஒரு கல்ப காலம் முழுவதும் வருந்தியவனாக இருந்தும், பகைவர்களை வெல்பவனான அந்த அரசன் மோஹம் தானே போய்விடும் என்று அது பற்றிப் பாராட்டாமல் இருந்து விட்டான்.

**அசட்டையாக இருந்த போதிலும் அதனால் மீண்டும் மீண்டும் தொல்லை அதிகம் ஆயிற்று**

அந்த அரசன் மீண்டும் மீண்டும் அதனால் தொல்லை கொடுக்கப்பட்டவன் ஆனான்.

## அவன் சிந்தித்தல்

இதற்குக் காரணம் ஒன்று வலுவாக உள்ளது என்று சிந்திக்கலானான். எப்பொழுதும் பகவத் விஷயத்திலேயே ஈடுபட்டிருக்கும் என்னை இது ஒரு அநாதையைப் போல் தொந்திரவு செய்கிறது. தானுகவே தீருவதாக இல்லை. எக்காரணத்தால் வந்ததாக இருக்கும் என்று சிந்தனை செய்தான்.

## அவனுடைய குலகுருவான யாக்ஞவல்க்யரிடம் செல்லுதல்

இவ்வாறு கவலை கொண்ட அரசன் குரு இருந்த ஆஶ்ரமத்துக்குச் சென்றான். அந்த ஆஶ்ரமம் வேத கோஷம் நிறைந்ததும், ஹோமம் செய்யப்படும் ஹவிஸ்ஸுக்களால் ஏற்படும் புகையால் நிரம்பியதாகவும் மிகவும் புனிதமாக இருந்தது. உள்ளே சென்று அக்நிஶாலையில் வீற்றிருக்கும் ப்ரம்மஞாநிகளால் சூழப்பட்டவரான தன் குலகுரு **யாக்ஞவல்க்யர்** என்கிற தபஸ்வியை மிகவும் வணக்கத்துடன் சென்று கண்டான்.

## குஶத்வஜன் தன் வரவாற்றைச் சொல்கிறான்

மஹாத்மாவான அவரை நமஸ்கரித்துப் பின் வருமாறு பேசலானான் - ''ஸ்வாமிந்! தேவரீரிடமிருந்து தான் நான் **பரவித்யை, அபரவித்யை** எல்லாம் கற்றேன். பர வித்யையினால் என்னுடைய எல்லா கர்மங்களும் அழிக்கப் பட்டு விட்டன. கர்மம் என்பது முன் கர்மம், பின் கர்மம், **ப்ராரப்தம்** என்பதாகக் கேள்விப் பட்டு இருக்கிறேன். **ப்ராரப்த** கர்மத்தின் பலனாக அரசாட்சி கிடைத்தது. இவ்வாறு இருக்கின்ற எனக்கு நினைவு தடுமாற்றம் பொறுக்க முடியாததாகவும் என் உடம்புக்கு எரிச்சலைத் தருவதுமான **மஹாமோஹம்** என்பது தொடங்கிற்று. இப்பெரிய ஶ்ரமம் எதனால் வந்தது? எதனால் தீரும்? தேவரீர் சொல்ல வேண்டுகிறேன்'' என்றான்.

### யாக்ஞவல்க்யரின் பதில்

அரசனால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்தக் குல குரு யாக்ஞவல்க்யர் குஶத்வஜனைப் பார்த்துப் பேசலானார்.

### ஶரீரம் ஏற்படக் காரணம்

மனிதர்களுக்கு இந்த உடல் ஏற்பட்டது இன்பங்களையும் துன்பங்களையும் அநுபவிப்பதற்காகவே.

### ப்ரம்மஞாந முடையவர்களின் ஶரீரமும் இத்தகையதே

ப்ரம்ம ஞாநிகளுடைய ஶரீரமும் கூட இத்தகையதே என்று தெரிந்து கொள். ஆகையால் நீயும் இந்த ஶரீரத்தின் மூலம் கர்ம பலனை அநுபவிக்க வேண்டியதே. நீ ஶரீரத்தின் மூலம் எந்தக் கர்மங்களைச் செய்கிறாயோ அவற்றின் பலன்கள் அநுபவிக்கப்படுகின்றன. ஒரு பொழுதும் காரணம் இல்லாமல் நடப்பதில்லை.

### மஹா மோஹம் பாபத்தின் பலனே

ஆகையால் அரசனே! இந்த நோய் பாபத்தின் பலனாக ஏற்பட்டது என்று தெரிந்து கொள்.

### காரணம் சொல்லுதல்

எந்தக் காரணத்தினால் இந்த மோஹம் வந்ததோ அதை உள்ளபடிச் சொல்கிறேன் கேள். லேசான மந நோய், முற்றிய மந நோய், மநத்தைக் குழப்புதல், மயக்கம், நினைவை இழத்தல், பெரிய கலக்கம், பிதற்றல், நினைவை அழித்தல் என்கிற எட்டு வகை நோய்களும் பெரிய பாபங்களால் ஏற்படுகின்றன. இவை மனிதர்களுக்கு மிகவும் தொல்லை கொடுப்பவை.

### அரசனுக்குத் தோஷம் ஏற்படக் காரணம்

ப்ரம்மஹத்தி செய்தவனுக்குத் தண்டனை கொடுக்காமல் இருந்தாலும் பொய்யை ஸத்யம் என்று நினைப்பதாலும், தன் குல தெய்வத்தை அலட்சியம் செய்வதாலும், அரசனைக் கொல்வதாலும், ப்ராம்மணர்களுடைய சொத்துக்களை அபஹரிப்பதாலும், ப்ராம்மணர்

களுக்குத் தொல்லை கொடுப்பதாலும், மர்யாதைக் குறைவாக நடப்பதாலும், சேரக்கூடாதவர்களுடன் சேருவதாலும், இப்படிப் பட்ட காரணங்களால் இங்கு சொன்ன நோய்கள், அரசே! ஏற்படுகின்றன.

**போர் செய்யாத நேரத்தில் குஶத்வஜன் அரசனைக் கொன்றதாகக் கூறுகிறார்**

அரசே! முன்னொரு ஸமயம் மிகவும் தார்மிகனான ஒரு அரசனை யுத்தம் செய்யாமல் நீ கொன்றாய். அந்தப் பாபத்தின் பலனை இப்பொழுது உடலில் மஹா மோஹத்தின் மூலம் அநுபவிக்கிறாய். மிகவும் பயத்தைக் கொடுக்கும் இந்த **மூர்ச்சனை** என்கிற பெரிய ரோகம் உனக்கு ஏற்பட்டிருக்கிறது.

**ஸுதர்ஶநத்தின் ஶக்தியினால் இந்த எட்டு தோஷங்களும் நிச்சயமாகத் தீரும் என்கிறார்**

ஸ்ரீ ஸுதர்ஶநத்தின் மஹிமையால் முன் சொன்ன எட்டு வகை பாபங்களும் தீரும். அதன் விளைவான ரோகமும் தீரும். ஸந்தேஹம் இல்லை.

**ஸுதர்ஶந ப்ரஸாதந வழி உபதேஶம்**

அரசே! அந்த ஸுதர்ஶந பூஜைக்கு ஏற்பாடுகளைப் பற்றி நன்கு ஆராய்ந்து முயற்சி செய்.

**முதலில் மண்டபம் முதலியவை அமைத்தல்**

முதலில் உயரமானதும், ஸகல வகையான ஶுபங்கள் கூடியதும், பல கம்பங்கள் கூடியதும், உத்தமமான வெளி வாசற்படியால் அலங்கரிக்கப் பட்டதும், வெண் பட்டுகளால் அமைந்த மேல் பரப்பு உடையதும், சிறிய சிறிய சலங்கைகளால் அலங்கரிக்கப்பட்டதும், பல கொடி மரங்கள் நிறைந்ததும், விருதுக் கொடியால் அழகு சேர்ந்ததும், முத்து மாலைகள் எங்கும் தொங்கவிடப்பட்டதும், பல வகை மாலைகளால் வனப்பு மிக்கதும், வெண் பட்டு சுற்றப்பட்ட தூண்களோடு கூடியதும், பற்பல இடங்களில் விளக்குகளால் அழகு செய்யப்பட்டதும், 36 அடி அகலம் உடையதும், 54 அடி நீளம் உடையதும், மிகவும் அழகானதும், எட்டு வகை மங்கள

த்ரவ்யங்கள் உடையதும், சந்தநம், அகில் புகை இவைகளால் வாஸனை உடையதும், எல்லா பக்கங்களிலும் மங்களகரமானதுமான அந்த மண்டபத்தையும் இவ்வாறே -

### ஸரஸ்வதி நதிக்கரையில் மண்டபம் அமைத்தல்

ஸரஸ்வதி நதிக்கரையில் நகரத்துக்கு வெளியில் ஶுத்தமான ஒரு இடத்தில் மற்றொரு மண்டபத்தை அமைக்க வேண்டும். அப்பனே! இதை விரைவிலேயே செய்து முடி, பயம் வேண்டாம். கவலை வேண்டாம்.

### அங்கு தான் வருவதாக ப்ரதிக்ஞை

நான் அங்கு வந்து ஶாந்தி சடங்குகளைச் செய்து வைக்கிறேன்.

### சொன்னபடி அரசன் செய்தல்

இவ்வாறு சிறந்த ஞானியான அந்தக் குரு யாக்ஞவல்க்யர் சொன்ன பொழுது தன் ஊருக்குப் புறப்பட்டான் அரசன். பிறகு அந்த அரசன் வேலைக்காரர்களை வரவழைத்து மிக ஸந்தோஷத்துடன் குரு சொன்ன வகையிலேயே மண்டபத்தை அமைக்கும்படிச் செய்தான்.

### யாக்ஞவல்க்யர் அந்த மண்டபத்துக்குச் செல்லுதல்

அந்த முநிவர் தன் மஹிமையால் அரசனுடைய பாபத்தையும் தோஷத்தையும் போக்க வல்லவராய் இருந்தும், இது அரசனுடைய கடமையாகும் என்று தன் மனதில் தீர்மானித்து அந்த மண்டபத்தை ஶுக்ல பக்ஷத்தில் ஒரு நாளில் சென்று அடைந்தார்.

### மண்டபத்துக்கு மேற்கே அரசனுக்கு ஆஸநம் அமைத்தல்

சிற்பிகளை அழைத்து அரசன் உட்காரத் தகுந்த ஒரு ஆஸநத்தை, மண்டபத்தின் மேற்கு திசையில் மூன்றாவது இடத்தில் நிர்மாணிக்கச் செய்தார்.

## கிழக்கே உள்ள இரண்டு மண்டபங்களின் இடையில் ஹோம குண்டம் அமைத்தல்

இந்த ஆஸநத்துக்குக் கிழக்கே உள்ள இரண்டு மண்டபங்களுக்கு நடுவில் ஹோம குண்டம் அமைக்கச் செய்தார். விமாநத்தில் லக்ஷணங்களோடு கூடிய ஹோம குண்டங்களின் மேல் புறம் சக்ரவடிவத்தில் உள்ள குண்டங்களை மிகவும் பக்தியுடன் அமைக்கச் செய்தார்.

## எட்டு திக்குகளிலும் குண்டங்கள்

இப்படிப்பட்ட இரண்டு குண்டங்களை அமைக்கச் செய்து அதற்கும் வெளியில் எட்டு திக்குகளிலும் இவ்வாறே குண்டங்கள் அமைக்கச் செய்தார்.

## ஒவ்வொரு குண்டத்துக்கும் நடுவில் இரண்டு கும்பங்கள் அமைத்தல்

ஒவ்வொரு குண்டத்துக்கும் பரிஸ்தரணங்கள் சேர்த்து 1 பாரம் எடையுள்ள நெற் பயிர்களைக் குண்டங்களுக்குக் கிழக்கிலும் பக்கங்களிலும் நாற்புறமும் பரப்பி, வெள்ளிக் குடங்கள் எட்டு, தங்கத்தாலான இரண்டு குடங்களையும் நடுவில் தீர்த்தம் நிரப்பப்பட்டனவாகவும் நவரத்நங்களுடன் கூட அமைக்கச் செய்தார்.

## யாக்ஞவல்க்யர் தானே கும்பபூஜை செய்கிறார்

பிறகு முனிவர் ஞாநியான ஸதாநந்தருடன் கூட, பட்டு வஸ்த்ரங்களாலும் நூல்களாலும் சுற்றி, சந்தநம், புஷ்பம், அக்ஷதை இவற்றாலும் அலங்காரம் செய்து, பக்தியுடன் பகவானைக் கும்பத்தில் ஆவாஹநம் செய்து மந்த்ரங்களைச் சொல்லி தூபம் தீபம் புஷ்பங்கள் இவைகளால் பூஜித்தார்.

## யந்த்ரம் அமைத்தல் எழுதுதல் முதலியன

இரண்டு கும்பங்களுக்கு நடுவே மஹாயந்த்ரத்தை ப்ரதிஷ்டை செய்து அந்த ஆசார்யன் வஸ்த்ரத்தில் பகவானைத் தவிர எல்லா மந்த்ரங்களுடன் கூடியதும், எல்லா அஸ்த்ரங்களோடு கூடியதாகவும் முன் சொன்ன வகையில்

மஹா யந்த்ரத்தை எழுதி, அந்த வஸ்த்ரத்தை அரசனின் ஆஸநத்துக்கு மேல் விரிக்கச் செய்து, பிறகு மேல் விரிப்போடு கூடிய அந்த ஆஸநத்தில் அளவில்லா தேஜஸ்ஸோடு கூடிய அரசனை ஏற்றி உட்காரவைத்தார். அந்த ஆசார்யன் அரசனின் ஆஸநத்துக்கு மேல்புற விரிப்பு அமைக்கச் செய்தார். இதே போல் ஶுத்தமான மந்த்ரத்தோடு க்ரஹித்த பூர்ஜஇலை (பனை ஓலை) எடுத்து அதில் கோரோசனையுடன் தங்க ஊசியால் அஸ்த்ரங்களில்லாமல் மந்த்ரங்கள் மட்டும் எழுதச் செய்து இந்த யந்த்ரத்தை மந்த்ரங்களைச் சொல்லிக் கொண்டு அரசன் தலையில் அணிவித்தார். ஸுதர்ஶந மந்த்ரத்தைச் சொல்லி விபூதியினால் திலகமிட்டார். பிறகு மந்த்ரங்களில் தேர்ச்சி பெற்றவர்களும், நியமங்களோடு கூடியவர்களும், வைஷ்ணவ ப்ராம்ஹணர்களுமான எட்டு ருத்விக்குகளை வரவழைத்து முன் சொன்ன எட்டு திசைகளில் அமைந்த குண்டங்களுக்கு அவர்களை நியமித்தார். பிறகு மண்டபத்தின் நாற்புறங்களிலும் திரை ஸமர்பித்துத் தங்கத்தினாலான உபகரணங்களோடு கூடிய நன்கு அலங்கரிக்கப்பட்ட குண்டங்களில், விதிக்கப்பட்ட கர்மங்களை முதலில் செய்து விட்டு, ருத்விக்குகளுடன் கூடியவராய், ஸதாநந்தருடன் கூடியவராய், அந்த ஆசார்யன் நன்கு சுடர் விட்டு எரியும் அக்நியில் ஹோமம் செய்தார். நர்த்தநங்கள், வாத்யங்கள் இவைகளுடன் வேத கோஷத்துடனும் ஹோமம் செய்யும் கார்யத்தில் கவனத்துடன் இருக்கும் ஆசார்யன் முதலில் புண்யாஹவாசநம் செய்தார். ப்ரதாநமான கார்யங்களில் ஈடுபட்ட ஸதாநந்தரும், குருவும், எட்டு திசைகளில் ஹோமத்தில் ஈடுபட்டிருக்கும் எல்லா ருத்விக்குகளும், பக்தியுடன் ஸங்கல்பம் செய்து கொண்டு ஶுத்தமான நெய்யினால் 10,000 ஆவ்ருத்தி ஹோமம் செய்தனர். இவ்வாறு 10 தினங்களின் திநமும் 10,000 வீதம் லக்ஷம் ஆவ்ருத்தி ஹோமம் செய்தனர். ஜபிக்கப்பட்ட கும்ப தீர்த்தங்களைக் கொண்டு குருவினால் திநமும் ஸ்நாநம் செய்விக்கப்பட்ட அந்த அரசன் அந்தப் பீடை நீங்கப் பெற்றவனாய் மந மகிழ்ச்சியுடன் கவலையற்ற மந நிலையுடன் 10 நாட்கள்

நிறைவு அடைந்த உடன் ஏராளமான தங்கச் காசுகளுடன் ரத்நங்களுடன் குருவுக்குப் பூஜை செய்தான். மண்டபத்துக்கும் அவ்வாறே பூஜை செய்தான். அரசன் எல்லா த்ரவ்யங்களையும் குருவுக்கு ஸமர்ப்பித்து, எல்லா ருத்விக்குகளையும் தநங்களாலும் பல வகைத் தாந்யங்களாலும் மகிழ்வித்தான். நல்ல ஞாநியான அந்த குஶத்வஜன் ஸ்வர்க லோகத்தில் இந்த்ரன் ஆட்சி செய்வது போல் இந்த அகண்ட பூமண்டலத்தையும் ஆண்டு வந்தான். மற்ற அரசர்களுக்கும் கூட இதே முறை தான் சொல்லப்பட்டது. த்வாபரயுகத்தில் 50 லக்ஷம் ஆவ்ருத்திகள் ஹோமம் செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டுள்ளது. கலியுகத்திலோ கோடி ஆவ்ருத்திகள் ஹோமம் அரசர்கள் செய்ய வேண்டுமென்று விதிக்கப்பட்டுள்ளது. இவ்வாறாக ப்ரம்ம ஞாநமுடையவர்கள் கூட **ப்ராரப்த கர்மத்தின்** பலனை அநுபவித்தே தீர வேண்டும்.

இவ்வாறாகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம் **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** குஶத்வஜோபாக்யாந வர்ணநை என்கிற 45 வது அத்யாயம் முற்றிற்று.



**ஸுதர்ஶந ஹோமத்துக்கு அங்கமான த்ரவ்யங்களைப் பற்றியும் அவற்றின் அளவு பற்றியும் விளக்கம் என்கிற**

# 46 வது அத்யாயம்

**த்யாதம் ஸக்ருத் பவானேககோட்யகௌகம் ஹரத்யரம்।**
**ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥**

**(விளக்கம் 18ம் அத்யாயத்தில் உள்ளது)**

**அரசன் ஹோம மண்டபத்துக்கு வர இயலாத போது செய்ய வேண்டியது பற்றிக் கேள்வி**

**நாரதர்:-** தேவர்களாலோ, மனிதர்களாலோ, பூதம் முதலியவற்றாலோ, கர்வத்தாலோ, எதிரிகளின் படைகளாலோ, வேறு வகையாலோ ஏற்பட்ட இடையூறுகளால், அரசன் தொடக்கம் முதல் ஹோம மண்டபத்துக்கு வர இயலாமல் இருந்தால், அப்பொழுது அரசனுடைய பெரிய நோய்கள் முதலியவை எப்படித் தீர்க்கப்படும்?

**அஹிர்புத்ந்யர்:-** கேளும்! அரசன் நேரில் நடத்த முடியாமல் இருந்தால் எல்லா வகையிலும் ஞானம் முதலிய நிறைந்த ஆசார்யன் செய்யலாம். ஏனெனில் அவர் தான் அரசனுக்கு இம்மாதிரி யாகம் மந்த்ரம் முதலியவற்றைச் செய்து முடிப்பதற்கு எல்லாமாக இருக்கிறார்.

**புரோஹிதரின் லக்ஷணம்**

குரு என்பவர் தர்ம சிந்தனையுடையவராய், வேதங்கள் முழுமையாகக் கற்றவராய், நல்ல ஒழுக்க முடையவராய், ப்ரியமும் ஹிதமுமான வார்த்தை சொல்பவராகவும், மநத்தளவிலும் ஶுத்தமானவரும், நற்குடியில் பிறந்தவரும், தான் என்கிற கர்வமற்றவரும், பொறுமைஶாலியும், **ஸ்ம்ருதி** அறிந்தவராகவும், புலனடக்கம் உடையவராகவும், தேஶம் காலம் இவற்றை அறிந்து செயல் படுபவராகவும், ஶாஸ்த்ரத்தைக் கண்ணாகக் கொண்டவராகவும், சோம்பலற்றவராயும், பிறரால் அசைக்க முடியாத

உறுதியுடையவராகவும், கவனக் குறைவற்றவராகவும், வள்ளலாயும், நீதிகள் அறிந்தவராகவும், ஸாதநங்கள் - ஸாத்யமான பலன்கள் இவற்றை அறிந்தவராகவும், மந்த்ரங்களை நன்கு அறிந்தும், யாகங்கள் செய்விப்பதில் திறமையுடனும், பேராசையற்றவரும், ஜோதிடம் அறிந்தவரும், இனிமையாகப் பேசுபவராகவும், வைதிக ஆசாரம் உடையவராயும், ஸாத்விக குணத்துடனும், எல்லா வகையிலும் திறமையுடையவராயும், விஷ்ணு பக்தராகவும் வேதம் கற்றும் கற்பித்தும் இருப்பவராகவும், செயல் திறனுடன் கூடியவராயும், விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்பவராகவும், குற்றமற்றவராகவும், ஹிதமானவற்றையும், தீமைகள் விளைவிக்கும் செயல்களைத் தவிர்க்க விரும்புபவராகவும், எல்லா வகைகளிலும் அரசர்களுக்கு ப்ரியமானவராகவும் இருத்தல் வேண்டும்.

### ஆசார்யரால் எல்லா கார்யங்களும் நடைபெறுதல்

தேவ குரு போன்ற இத்தகைய ஆசார்யன் அரசர்களுக்குக் கிடைப்பது அரிது. ஏனெனில் அரசனின் பாபக் கூட்டங்களின் விளைவுகளைத் தீர்த்து வைக்க இத்தகைய ஆசார்யனே தகுதி உடையவராவார். ஆகையால் அப்படிப்பட்ட ஆசார்யனே அரசர்களுடைய பாதுகாப்புக்கான கார்யங்களைச் செய்யக் கடமைப்பட்டவர். ஆகையால் யாருக்கு இத்தகைய ஆசார்யர் கிடைப்பாரோ, அந்த அரசன் சக்ரவர்த்தி ஆவான். அவன் நோய் தீர்ந்தவனாகவும், எதிரிகள் அற்றவனாகவும், நீண்ட ஆயுளைப் பெற்றவனாகவும், எதிரிகளின் படைகளை அழிப்பவனாகவும் இருப்பான். அவனுடைய தேசத்தில் மழையின்மை போன்ற தொல்லைகள் ஏற்படாது.

### அப்படிப்பட்ட ஆசார்யன் கிடைக்காவிடில் அரசனுக்கு நேர் மாறான பலன்

இத்தகைய ஆசார்யனைத் தவிர வேறு ஒருவர் குருவாகவோ, புரோஹிதராகவோ, இருப்பாரேயானால் அந்த அரசனுக்கு நேர் மாறான பலன் கிடைக்கும். ஸந்தேஹமில்லை.

**கும்பங்கள் முதலியவைகளின் அளவு பற்றிக் கேள்வி**

**நாரதர்:-** கும்பங்களுடைய அளவும், **ஸ்ருக் ஸ்ருவம்** இவற்றின் இலக்கணமும், அத்தகைய அரசனுக்கு ருத்விக்குகள் எப்படி இருக்க வேண்டும்? இவையனைத்தையும் சொல்ல வேண்டும் ஸ்வாமிந்! (**ஸ்ருக், ஸ்ருவம்** இரண்டில் ஒன்று நெய்யை எடுத்து ஹோமம் செய்யவும், மற்றொன்று ப்ரஸாதம் (ஹவிஸ்), அடை (புரோடாஶம்) இவற்றை அக்நியில் ஹோமம் செய்யவும் உபயோகிக்கப்படும் கருவி).

**சிறந்த அளவு**

**அஹிர்புத்ந்யர்:-** ஶுத்தமான பரிமள வஸ்துக்கள் சேர்த்துத் தீர்த்தத்துடன் 1 பாரம் எடையுள்ள தங்கக் குடமோ, வெள்ளிக் குடமோ இருக்க வேண்டும். இதுவே சிறந்த முறையாகும்.

**நடுத்தரமான அளவு**

அரை பாரம் எடையுள்ள தீர்த்தக் கும்பங்களானால் அது நடுத்தர முறையாகும்.

**கடை நிலை தர அளவு**

இதிலும் பாதியானால் (1/4 பாரம்) தீர்த்தக் கும்பம் நிரப்பப் பட வேண்டும். இது கடை நிலையாகும்.

**ஸ்ருக் ஸ்ருவம் செய்யும் முறை**

முனிவருள் சிறந்தவரே! **ஸ்ருக் ஸ்ருவம்** இவற்றை விதிக்கப்பட்ட முறைப்படிச் செய்து கொள்ள வேண்டும்.

**ஹோமம் செய்பவர்களின் எண்ணிக்கை**

பிறகு வைஷ்ணவர்களான எட்டு ருத்விக்குகளை வரிக்க வேண்டும்.

**அங்க மந்த்ரம் முதலியவற்றின் முறை**

ப்ரதாநமான இரண்டு குண்டங்களுக்கு மிகவும் கவனத்துடன் இருப்பவர்களும், ப்ருஹஸ்பதிக்கு ஸமமாக

உள்ள இரண்டு பேரை, அங்க மந்த்ரங்களாலும், காயத்ரியாலும், வஹ்நிப்ராகாரத்தினாலும், மூல மந்த்ரத்தினாலும் வரிக்க வேண்டும். வஹ்நிக்குச்சியாலும் (ஸமித்), அருகம்புற்களாலும், எள்ளாலும், மாவிலைகளாலும், ப்ரஸாதத்தாலும், பாயஸத்தாலும், அபூபங்களாலும் (அப்பங்கள்) பலாஶ ஸமித்துகளாலும், முறையே ஹோமம் செய்ய வேண்டும். குருவாயிருப்பவர் ஶுத்தமான நெய்யினால் நடுவிலுள்ள குண்டங்களில் ஹோமம் செய்விக்க வேண்டும். அல்லது எல்லா குண்டங்களிலும் சுத்தமான நெய்யினால் ஹோமம் செய்விக்க வேண்டும். குருவினாலேயே செய்யப்பட வேண்டிய ப்ராயஶ்சித்த முறையில், அரசனுடைய படுக்கை, இருக்கை, வண்டி முதலியவைகளுக்கும் முன் சொன்னபடி மேற்பரப்பை அமைக்க வேண்டும்.

## ஹோமத்தின் முடிவில் அரசனுக்கு அபிஷேகம்

இந்த முறையில் ஹோமம் முடியும் பொழுது, (பூர்ணா ஹுதி) அரசனுடைய குரு அவனை அங்கு வரவழைத்து முன் சொன்ன முறையில் மந்த்ரங்கள் சொல்லி அமைக்கப்பட்ட ஆஸநத்தில் இருக்கச் செய்து அபிஷேகம் முதலியவற்றைச் செய்ய வேண்டும்.

## குரு முதலியவர்களின் ஸம்பாவனை

பிறகு அரசன் மநம் தன்னிலையில் உள்ளவனாய், நவக்ரஹ பீடைகள் நீங்கப் பெற்றவனாய், நமஸ்கரித்து, குருவுக்குத் தன் அடையாளப் பொருள்களையும், விலை உயர்ந்த ஆபரணங்களையும், முத்து, நவரத்நங்கள் பதித்த பொருள்களையும், ரத்நங்கள் பதித்த ஆஸநத்தையும், தங்கத் காசுகளையும், பல வகை ரத்நங்களையும், விளை நிலங்கள் பலவற்றையும், தக்கபடி கொடுத்து, பிறகு ருத்விக்குகளுக்கு மர்யாதை செய்ய வேண்டும். ருத்விக்குகள் அனைவரையும் தனித்தனியாக 100 தங்கக் காசுகள் மூலம் ஸம்பாவனை செய்ய வேண்டும். ஒவ்வொருவருக்கும் 10 பசுக்களும் பல வகை வஸ்த்ரங்களாலும் ஸம்பாவனை செய்ய வேண்டும்.

## ப்ரதாந ஹோமம் செய்தவருக்கு விஶேஷ தக்ஷிணைகள் தர வேண்டும்

ப்ரதாந ஹோமத்தைச் செய்த ஆசார்யனுக்குச் சிறப்பாக நிறைந்த தநங்களை த்ருப்தியடையும் அளவுக்குக் கொடுத்து, ஒரு குதிரையை வண்டியுடன் கொடுக்க வேண்டும். பிறகு அலங்காரம் செய்யப்பட்ட மண்டபத்தையும் அதன் உபகரணங்களையும் அரசன் ஸந்தோஷத்துடன் மற்ற ப்ராம்மணர்களுக்குக் கொடுத்து த்ருப்தி செய்விக்க வேண்டும். அரசன், தானே செய்யக் கூடிய கார்யமாக இருந்தால் முன் சொன்னபடி ப்ரயோகத்தில் மந்த்ரங்களை நன்கு அறிந்த ஆசார்யனுக்கு எல்லா தாநங்களையும் அளிக்க வேண்டும். புரோஹிதரால் செய்யப்பட்ட அனைத்தும் அநாதியான வைதிக ஸம்ப்ரதாயமாகும். அரசன் செய்யும் கார்யங்களானால் அதற்குச் சிறப்பு அம்ஶங்கள் கூறப்பட்டன. அரசனைத் தவிர மற்ற எல்லோருக்கும் இதே முறை சொல்லப்பட்டுள்ளது. பிறகு மந்த்ரங்களை அறிந்த மிகச் சிறந்த ஆசார்யன், அரசனுடைய நன்மைகளை விரும்பி, வைஷ்ணவ பூஜையையும் செய்து முடித்து பூர்ணாஹுதி செய்ய வேண்டும்.

இவ்வாறாகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யில் ஸுதர்ஶந ஹோமத்தின்
அங்கமான த்ரவ்யத்தின் அளவு முதலியவைகளைக் கூறுதல்
என்கிற 46வது அத்யாயம் முற்றிற்று.



மஹாஶாந்திமுறை என்கிற

# 47வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥

(விளக்கம் 18வது அத்யாயத்தில் உள்ளது)

## இம்மை மறுமைப் பலன்களுக்கு முக்ய ஸாதநம் எது? என்று கேள்வி

**நாரதர் :—** பகவந் ! ஐந்து மந்த்ரங்களை அங்கமாக உடையவனே ! (**ஸத்யோஜாதம் ப்ரபத்யாமி, வாமதேவாய நம:, அகோரேப்யோ நம:, தத்புருஷாய, ஈஶாநஸ்ஸர்வ - வித்யாநாம்** என்று தொடங்கும் ஐந்து மந்த்ரங்கள்). பசுக்கள் எனப்படும் ஜீவர்களின் பாஶம் என்கிற ஸம்ஸார பந்தத்தைப்போக்குபவரே ! ஸர்வ ஶக்தியுடையவரே ! ஸ்வயமாகவே நேரில் பார்க்கப்பட்ட ஸகல வஸ்துக்களின் விஶேஷங்களை (தனித் தன்மை) உடையவரே ! ஆகாயத்தை இருப்பிடமாகக் கொண்டவரே ! இந்த மந்த்ரங்களால் இம்மையிலும் மறுமையிலும் பலன்கள் எப்பொழுதும் கிடைக்கின்றன. ஶரீரத்தில் தீராத நோய்களும், நாட்டில் மழையின்மை - அதிக மழை போன்ற தீமைகளும், தீர்க்கப்படுகின்றன என்று தேவரீரால் சொல்லப்பட்டது; அதனால் கேட்கிறேன் - எந்த ஒரு கார்யத்தினால் இஷ்ட ஸித்தியும் அநிஷ்ட நாஶமும் (கோரிக்கை நிறைவேறுதல், தீமைகள் ஒழிதல்) இந்த இரண்டும் கிடைக்கும்? இத்தகைய ஒரு கார்யம் இருக்குமானால், ஶங்கரரே ! அதை எனக்குச் சொல்லி அருள வேண்டும். இப்படிப்பட்ட ரஹஸ்யமான விஷயத்தைத் தேவரீரைத் தவிர யாராலும் சொல்ல முடியாது.

## பதில் ஆரம்பம்

**அஹிர்புத்ந்யர் :-** அதைச் சொல்கிறேன். அது எல்லாவற்றிக்கும் ஶாந்தியைத் தரவல்ல உத்தமமானது.

### சொல்லப்போகும் குறிப்பிட்ட கார்யத்தில் அரசர்களுக்கே தகுதி

ஜாதியின் உட்பிரிவுகளை நன்கு பிரித்து அமைத்துக் கொண்ட பெரும் பாக்யஶாலிகளான மஹாராஜாக்களால் இது செய்யப்பட வேண்டும்.

### அது அனைத்து வகையான ஶ்ரமங்களைத் தீர்ப்பதன் மூலம் விரும்பிய பலனைக் கொடுக்கும் இயல்புடையது

**ஆத்யாத்மிகம், ஆதி தைவிகம், ஆதி பௌதிகம்** (உடலில் ஏற்படும் தொல்லைகள், விதியின் வஶத்தால் ஏற்படும் ஶ்ரமங்கள், இடி, மழை, காற்று, பூகம்பம்) இவற்றால் ஏற்படும் துன்பங்கள் தீரும். அனைத்துவகை நோய்களைப் போக்கும். நன்மைகளைத் தரும். பகைவர் அனைவரையும் அழிக்க வல்லது. ஶாந்தியைத் தரவல்லது. பெரும் வெற்றிகளைத் தருவது. முநிவரே ! பூத ப்ரேத பிசாசுகளைத் தொலைக்கும். எல்லா வகையிலும் புஷ்டியைத் தரும். அனைத்து மக்களையும் கவர்ந்து இழுக்கும். நீண்ட ஆயுளைத் தரும். புண்யத்தை வளர்க்கும். முன் காலத்திலிருந்த அரசர்களால் இது செய்யப்பட்டது.

### அம்பரீஷன் முதலிய அரசர்கள் இதைச் செய்ததால் முன் சொன்ன பலன் கிட்டியது

**அம்பரீஷன், ஶுகர், அலர்கர், மாந்தாதா, புரூரவஸ், உபரிசர ராஜா, துந்து, சிபி, ஶ்ருதநிர்தநர்** இதைச் செய்து முடித்ததால் இந்த அரசர்கள் எல்லோரும் சக்ரவர்த்தி என்கிற புகழை முன்பு பெற்றனர். நோயற்றவர்களாகவும் பகைவரற்றவர்களாகவும், குற்றமற்ற பெரும் புகழ் படைத்தவர்களாகவும் இருந்தனர். ஆகையால் இந்தப் பூவுலகில் மனிதர்களுக்குக் கிடைக்கத் தகும் பெரும் இன்பத்தைப் பெற விரும்பும் அரசர்கள் இந்த மஹாஶாந்தி என்கிற பெயருடைய கார்யத்தை பக்தியுடன் செய்ய வேண்டும்.

## சிறந்த இடத்தைப் பற்றி விளக்கம்

நகரத்துக்கு வெளியே, பெரிய நதியின் கரையிலோ, அல்லது தேவாலயத்திலோ, நெருக்கடியற்ற ஶுத்தமான விஸ்தாரமான இடத்தில், அமைதி தவழும் இடத்தில், ஏரி, குளம் போன்ற இடத்திலோ, முநிவரே! முன் சொல்லப்பட்ட குறிப்புகளோடு கூடிய மண்டபத்தைக் காட்டிலும் அதிகமான நீளம் - அகலம் இவற்றை அமைக்க வேண்டும். அவ்வாறே அரசர்களுக்கான ஆஸநத்தோடு கூடியதாகவும் அமைக்க வேண்டும். அந்தந்த இடங்களில் நாற்புறமும் இனி சொல்லப்படும் குறிப்புகளோடு கூடிய உத்தமமான பல கம்பங்கள் நிறைந்ததாக—

### மண்டபம் அமைப்பு

ரத்நங்கள், தங்கம், இவற்றால் வநப்பு உடையதாகவும், உயரமான நுழை வாயில் உடையதாகவும், நூற்றுக் கணக்கான விளக்குகளோடு விளங்குவதாகவும், சிறு சிறு சலங்கைகளை உடையதாகவும், கொடி மரங்களால் அழகு மிக்கதாகவும், **அஸ்மான கிரி** (மேல் விரிப்பு) உடையதும், படிகள் உடையதும், அனைத்து வகை ஒப்பனைகளோடு கூடியதும், சந்தநம், அகில், பச்சை கற்பூரம் இவைகளின் தூபங்களால் ஆங்காங்கு மணம் தருவதாகவும், ஹோம ஶாலைகள் ஆங்காங்கு அமைந்ததாக மண்டபம் செய்ய வேண்டும்.

### குண்டம் அமைக்கும் முறை

இவ்வாறு இதைக் கவர்ச்சிகரமாக அமைத்து, குண்டங்களை அமைக்க வேண்டும். இந்த மண்டபத்தின் கிழக்குப் பகுதியில் நான்கு திசைகளிலும் குண்டங்களை அமைக்க வேண்டும். நான்கு வ்யூஹங்களின் அமைப்புக்காகக் கிழக்கு முதலிய குண்டங்களை நான்கு சதுரமாகவே அமைக்கவேண்டும் (**வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன்** என்பன). பிறகு கேஶவாதிகளுக்கு ஹோமம் செய்ய வேண்டும். கேஶவன் முதலியவர்களுக்கு இடை திஶைகளில் (தென் கிழக்கு, தென் மேற்கு, வட மேற்கு வட கிழக்கு) மூர்த்திகளை அமைக்க வேண்டும். மற்ற

மூர்த்திகளை அவற்றின் இடைகளில் அமைக்க வேண்டும். முக்கோணமாகவும், ஆறு கோணங்களாகவும், அரை வட்டமாகவும், யோநி, பத்மாக்ருதி, தாமரை பத்மாபம் வடிவமாகவும் வரிசையாக வட்டமாகவும், தாமரை பத்மாபம், எட்டு கோணங்கள் கொண்டதாகவும், வஜ்ராயுதம் போன்றும், வில் வடிவமாகவும், ஶூலம் போன்றும், முறம் போன்றும், இந்தக் குண்டங்களை அமைக்க வேண்டும். மத்தியில் யந்த்ர ரூபத்திலிருக்கும் பகவானை ப்ரதிஷ்டை செய்து அதற்கு எதிரில் விமாநத்தின் லக்ஷணங்களுடன் கூடிய குண்டம் அமைக்க வேண்டும்.

## அஸ்த்ர குண்டம் அமைத்தல்

ஹோமஶாலையில் நாற்புறமும் நூறு அதற்கும் மேல் நாற்பது அஸ்த்ர குண்டங்களை வரிசையாகச் சிறிதும் சோம்பலின்றி அமைக்க வேண்டும். தக்கபடி அஸ்த்ரங்களின் அடையாளங்களை அழகாக அமைக்க வேண்டும்.

## ருத்விக் வரித்தல்

மண்டபத்துக்குள் இருக்கும் குண்டங்களில் 16 ருத்விக்குகளை - ஸாதுக்களான வைஷ்ணவர்களான ருத்விக்குகளை முறைப்படி **புருஷ ஸூக்தம்** முதலான ருக்குகளைக் கொண்டு வரிக்க வேண்டும்.

## அஸ்த்ர குண்டங்களில் மற்ற ருத்விக்குகள்

பிறகு கடைசியில் வேதங்களில் கரைகண்ட வைஷ்ணவர்களை அவர்கள் பெயர்களைச் சொல்லி வரிக்க வேண்டும். வெளியிலிருக்கும் அஸ்த்ரகுண்டஶாலையில் ப்ரஹ்மாஸ்த்ரம் முதலியவற்றிலும் ஶாந்தி ஹோமத்தில் வேதங்களில் கரைகண்டவர்களையும் திறமை மிக்க ருத்விக்குகளை வரிக்க வேண்டும். **ப்ரஹ்மஜஞானம்** முதலிய ருக்குகளைச் சொல்லி வரிசையாக அவரவர்கள் பெயர்களைச் சொல்லி ப்ரஹ்மாஸ்த்ரத்தில் தேர்ச்சி பெற்றவர்களான பண்டிதர்களை வரிக்க வேண்டும். உத்தமமான ப்ரஹ்ம ஸூக்தங்களைக் கொண்டு வரிசையாக 300 ருத்விக்குகளை வரிக்க

வேண்டும். பிறகு அங்கேயே **பவாமித்ர** என்கிற 5 ருக்குகளுடன் **பரோமாத்ர** முதலிய 13 ருக்குகளையும், விஷ்ணு ஸூக்தத்திலிருக்கும் **அஸ்ய வாம** என்கிற 5 ருக்குகளுடன், **அதோ தேவா அவந்து** நோ என்கிற 6 ருக்குகளாலும் **சக்ஷு:** என்கிற 10 ருக்குகளுடன் **ப்ரதி வ ஏந** என்று 6 ருக்குகளாலும் அவரவர் பெயரைச் சொல்லி வரிக்க வேண்டும். பிறகு தங்கத்தாலோ, வெள்ளியாலோ செய்யப்பட்ட ஹோமத்துக்கான உபகரணங்களை அமைக்க வேண்டும்.

## கும்பம் அமைத்தல்

குண்டங்களுக்குக் கிழக்கில் தீர்த்தம் நிறைந்த தங்கக் குடங்களோ, வெள்ளிக் குடங்களோ, செப்புக் குடங்களோ வைக்க வேண்டும். ஒவ்வொரு இடத்திலும் ஒரு பாரம் அளவு நெல்லையும் வைக்க வேண்டும்.

## ஹோமத்துக்கு வரணம்

ஆசார நிஷ்டர்களான ருத்விக்குகளை வரிக்க வேண்டும். அந்தந்த மந்த்ரங்களைக் கொண்டு ஹோமம் செய்யும்படி நியமிக்க வேண்டும்.

## நடு குண்டத்தில் ஆசார்யன் செய்யும் ஹோமம்

ஆசார்யன் நடுவில் இருக்கும் குண்டத்தில் ஸாமவேத, கோஷத்துடனும், மங்களகரமான ஒலியுடன் கூடிய வாத்ய கோஷங்களுடனும் ஹோமம் செய்ய வேண்டும்.

## ஹோமங்களின் எண்ணிக்கை

ஒவ்வொருவரும் கோடி கோடி ஆவ்ருத்திகள் ஹோமம் செய்து ஶாந்தி ஹோமத்தை ஆரம்பிக்க வேண்டும்.

## அந்தந்த கும்பங்களில் அந்தந்த தேவதைகள்

கும்பங்களில் தனித் தனியாக ஒவ்வொரு தேவதையும் அவரவர் மந்த்ரங்களைக் கொண்டு அழைத்து மந்த்ரத்தைச் சொல்லி தூப தீப உபசாரங்கள் ஸமர்ப்பித்துப் பூஜிக்க வேண்டும்.

### ஹோமம் முடிவில் அபிஷேகம்

ஹோமகார்யம் நிறைவு பெற்ற பிறகு அரசனை யந்த்ர வடிவமான ஆஸநத்தில் அமர்த்தி அந்தந்தக் கும்ப தீர்த்தங்களால் அபிஷேகம் செய்ய வேண்டும்.

### அஸ்த்ர குண்டங்களில் ஹோமம்

எந்த எந்த அஸ்த்ர மந்த்ரங்களுக்காக எந்த எந்த ப்ராஹ்மணர்கள் அமர்த்தப்பட்டனரோ, அவர்கள் மிகவும் அமைதியான மனத்துடன் அந்தந்தக் குண்டங்களில் அந்தந்த மந்த்ரங்களைக் கொண்டு ஹோமம் செய்ய வேண்டும்.

### ஹோமத்தின் எண்ணிக்கை முதல் பக்ஷம், இரண்டாம் பக்ஷம், அதம பக்ஷம் என்றுஅமைதல்

ஒவ்வொன்றும் கோடி ஆவ்ருத்திகள் முதல் பக்ஷம் ஆகும். அதில் பாதி இரண்டாம் பக்ஷம் ஆகும். 10 லக்ஷம் ஆவ்ருத்திகள் **அதமம்** ஆகும். இவ்வாறான எண்ணிக்கை எத்தனை நாட்களில் முடியுமோ அத்தனை நாட்கள் கவனக் குறைவின்றியும் சோம்பலின்றியும் செய்ய வேண்டும்.

### நாராயணீயம் முதலிய ஶாஸ்த்ரங்களில் ஹோமத்துக்கு வேண்டிய த்ரவ்யங்களின் விதி

***(1) நாராயணீயம், (2) ப்ராஹ்மம், (3) விமலம், (4) க்ரௌஞ்சம், (5) தர்மபாஶம், (6)லக்ஷாலக்ஷம், (7) ஸம்வர்தம், (8) ஸத்யம், (9) உத்தமம், (10) துந்து நாபம், (11) ஶிதேஷு, (12) விஷ்ணு சக்ரம், (13) மாநவம், (14) ஐந்த்ரம், (15) ஜ்யௌதிஷம்*** என்கிற இவையே அஸ்த்ரங்களின் கூட்டம். இவற்றை நெய்யினால் ஹோமம் செய்ய வேண்டும்.

### காலசக்ரம் முதலியவற்றில் ஹவிஸ்முறை

***(1) காலசக்ரம், (2) தர்ம சக்ரம், (3) வஜ்ராஸ்த்ரம், (4) கதாஹ்வயம், (5) ப்ராஹ்மம்,(6) ஶிரஸ், (7) ஐஷீகம், (8) த்ரிஶூலம், (9) அஶநித்வயம், (10) காலபாஶம், (11) பைநாகம், (12) பாஶம், (13) வாருணம், (14) ஆக்நேயம், (15) தயிதம், (16) உத்தமமான பாஶுபதம்*** இந்த அஸ்த்ரக்

கூட்டங்கள் முறைப்படி சரு(ஹவிஸ்)வைக் கொண்டே ஹோமம் செய்யப்பட வேண்டும்.

**கங்காளம் முதலிய கூட்டத்தில் தயிர் விதிக்கப்பட்டது**

**(1) கங்காளம், (2) முஸலம்,(3) வாயவ்யம், (4) கங்கணி, (5) அஸிரத்நம், (6) காபாலம், (7) ஶக்தி, (8) வைத்யாதரம், (9) ப்ரஸ்வாபநம், ப்ரஶமநம், (10) தர்பணம், (11) ஶோஷணம், (12) ஸந்தாபநம், (13) காந்தர்வம், (14) பைஶாசம், (15) விலாபநம்.** இவை நல்ல ஆஸ்திகர்களால் தயிரைக் கொண்டு ஹோமம் செய்யப்பட வேண்டும்.

**மதநம் முதலியவைகளுக்குப் பால் விதிக்கப்பட்டுள்ளது**

**(1) மதநம், (2) தாமஸம், (3) உத்தமமான கந்தர்பதயிதம், (4) ஸௌமநம், (5) முஸலம்,(6) ஸம்வர்தம், (7) கோரம், (8) மாயாதரம், (9) ஸோமாஸ்த்ரம், (10)வாருணம், (11) த்வாஷ்ட்ரம், (12) ப்ரஸ்வாபநம்,(13) பகாஸ்த்ரம், (14) ரௌத்ரஸ்ருஷ்டம், (15) பராங்முகம்.** இந்த அஸ்த்ரங்கள் அவைகளை த்யாநம் செய்து கொண்டு பாலினால் ஹோமம் செய்ய வேண்டும்.

**ரபஸ அஸ்த்ரக் கூட்டங்களுக்குப் பாயஸம் விதிக்கப்பட்டது**

**(1) ரபஸம், (2) ஸத்யகீர்த்தி, (3) ப்ரதிஹாரதரம், (4) அவாங்முகம், (5) விஷமம், (6) த்ருடநாபம், (7) ஸுநாபகம், (8) தஶாக்ஷம், (9) ஶதவக்த்ரம், (10) ஶதஶீர்ஷம், (11) ஶதோதரம், (12) பத்மநாபம், (13) மஹா நாபம், (14) நைராஶ்யம், (15) க்ரதநம்** இவைகளுக்குத் தெளிந்த மனத்துடன் இருப்பவர்கள் பாயஸத்தைக் கொண்டு ஹோமம் செய்ய வேண்டும்.

**யோகந்தராஸ்த்ரம் முதலிய கூட்டங்களுக்கு எள் விதிக்கப்பட்டது**

**(1) யோகந்தரம், 92) விநித்ரம், (3) நைத்ரம், (4) ஸௌமநஸம், (5) த்ருதிமாலி, (6) ப்ரமதநம், (7) விதூதம், (8) வ்ருத்திமான், (9) மஹார்ச்சிமாலி, (10) மகரம், (11) ருசிரம், (12) கரவீரம்** இந்த அஸ்த்ரங்களுக்கு முறைப்படி எள்ளைக் கொண்டு ஹோமம் செய்ய வேண்டும்.

### தநம் முதலிய கூட்டங்களுக்குத் தேனால் ஹோமம்

**(1) தநம், (2) தாந்யம், (3) காமரூபம், (4) மோஹந ரூபம், (5) காமருசி, (6) வரணம், (7) ஆவரணம், (8) பரமாஸ்த்ரம், (9) ஜ்ரும்பகம், (10) ஸர்வநாபம், (11) ப்ருஶாஶ்வதநயம், (12) மஹான், (13) ஸந்தாநம் (14) பரஶு** இந்த அஸ்த்ரங்களின் தேவதைகளைத் தேனைக் கொண்டு நன்கு மகிழ்விக்க வேண்டும்.

### மற்றவைகளுக்கு ப்ரஸாதத்தினால் ஹோமம்

இங்கு சொல்லப்படாத மற்றும் சில அஸ்த்ரக் கூட்டங்களுக்கு அரிசியினாலான ப்ரஸாதத்தைக் கொண்டு ஹோமம் செய்ய வேண்டும்.

### ஹோமம் முடிவில் குறிப்பிட்ட மந்த்ரத்தைக் கொண்டு ஸுதர்ஶநத்தை த்ருப்தி செய்விக்கும் முறை

இவ்வாறு அந்தந்த மந்த்ரங்களால் முறைப்படி ஹோமம் செய்த பிறகு எல்லா அஸ்த்ரங்களுக்கும் உற்பத்தி ஸ்தாநமாகவும், ஸர்வ வ்யாபியும், ஸுதர்ஶநத்தின் வடிவத்தில் இருப்பவரும், எல்லா யந்த்ர ஸ்வரூபத்தில் இருப்பவருமான விஷ்ணுவை த்ருப்தி செய்ய யந்த்ரங்களுக்குச் சொல்லப்பட்ட ருக்குகளைக் கொண்டு **ஶாந்தி ஹோமம்** தொடங்க வேண்டும்.

### நாராயணீயம் முதலிய கூட்டங்களுக்கு த்ருப்தி செய்தல்

**நாராயணீயம்** முதலிய முக்ய அஸ்த்ரக் கூட்டங்களை ஒவ்வொன்றையும் பக்தியுடன், **பரோ மாத்ர** என்னும் ஸூக்தத்தைக் கொண்டு ஶ்ரத்தையுடன் ஶாந்தி செய்ய வேண்டும்.

### கால சக்ரம் முதலிய அஸ்த்ரங்களுக்குக் குறிப்பிட்ட மந்த்ரம் சொல்லப்பட்டுள்ளது

கால சக்ராதி வர்கத்திலிருக்கும் அக்நியைத் தனித் தனியாக த்ருப்தி செய்ய வேண்டும். கங்காளம் முதலிய கூட்டங்களின் ஶாந்திக்கு **திவஸ்பரி** என்கிற ஸூக்தத்தைக்

கொண்டு நன்கு சுடர் விட்டு எரியும் அக்நியில் ஹோமம் செய்ய வேண்டும்.

### மதநம் முதலிய அஸ்த்ரங்களுக்குக் குறிப்பிட்ட மந்த்ரம் சொல்லப்பட்டுள்ளது

மதநம் முதலிய அஸ்த்ரங்களுக்கு **அதோ தேவ** என்கிற ஸூக்தத்தினாலும், **விஷ்ணோர்நுகம்** என்கிற ஸூக்தத்தினாலும் கவனத்துடன் ஶாந்தி ஹோமம் செய்ய வேண்டும்.

### ரபஸம் முதலிய அஸ்த்ரங்களுக்குக் குறிப்பிட்ட மந்த்ரம் சொல்லப்பட்டுள்ளது

ரபஸம் முதலிய அஸ்த்ரங்களுக்கு **பவ மித்ர** என்கிற ஐந்து மந்த்ரங்களைக் கொண்டு ஒவ்வொன்றுக்கும் ஶாந்தி ஹோமம் செய்ய வேண்டும் என்பது வேதத்தில் சொல்லப்பட்ட முறை.

### யோகந்தரம் முதலியவைகளுக்குக் குறிப்பிட்ட மந்த்ரம் சொல்லப்பட்டுள்ளது

**யோகந்தரம்,** முதலிய அஸ்த்ரங்கள் ஒவ்வொன்றுக்கும் **அதோ தேவா அவந்து** என்கிற ஸூக்தத்தைக் கொண்டு நல்ல கவனத்துடன் இருப்பவர்களால் ஶாந்தி ஹோமம் செய்யப்பட வேண்டும்.

### தநதாந்யாதி அஸ்த்ரங்களுக்குக் குறிப்பிட்ட மந்த்ரம் சொல்லப்பட்டுள்ளது

**தநதாந்யம்** முதலிய அஸ்த்ரங்களுக்கு **ஜுஷஸ்வ ந:** என்கிற ஸூக்தத்தை கொண்டு திறமைஶாலியான ஆசார்யன் ஶாந்தி ஹோமம் செய்ய வேண்டும்.

### மற்ற அஸ்த்ரங்களுக்குக் குறிப்பிட்ட மந்த்ரங்கள்

இதுவரை சொல்லப்படாத பிற அஸ்த்ரங்களை **விஷ்ணு** ஸூக்தத்தைக் கொண்டு ஶாந்தி செய்ய வேண்டும். யந்த்ரங்களுக்குச் சொல்லப்பட்ட புனிதமான

ஸூக்தங்களாலும் எல்லா யந்த்ரங்களுக்கும் ஸ்வரூபியான பகவானை ஸ்தோத்ரங்கள் செய்து பூஜிக்க வேண்டும்.

## ஶாந்தி ஹோமத்துக்குப்பிறகு ஸஹஸ்ர ப்ராஹ்மண போஜந முறை

தேவர்களுக்குப்பூஜை செய்த பிறகு ஆயிரம் ப்ராஹ்மணர்களுக்கு ஶுத்தமான ப்ரஸாதங்களைக் கொண்டும், பாயஸத்தின் மூலமாகவும் போஜநம் செய்விக்க வேண்டும்.

## அஸ்த்ர மந்த்ர தீர்த்தங்களால் அரசனுக்கு அபிஷேகம் செய்யும் முறை

பிறகு அரசனுக்கான ஆஸநத்தில் உட்கார்ந்து மன மகிழ்ச்சியுடன் இருக்கும் அரசனுக்கு ருத்விக்குகளால் கொண்டுவரப்பட்ட புனிதமான அஸ்த்ரமந்த்ர தீர்த்தங்களால் ஸுதர்ஶநத்தின் மூல மந்த்ரத்தைக் கொண்டு ஜபித்து ஆசார்யன் அபிஷேகம் செய்விக்க வேண்டும். அரசன் நோய் தீராமல் இருந்தால் ஆசார்யன் ப்ரோக்ஷிக்க வேண்டும்.

## மண்டப கும்ப ஜலத்தால் அபிஷேகம் அவஶ்யம்

மண்டபத்தில் இருக்கும் கும்பங்களின் தீர்த்தங்களால் அபிஷேகம் அவஶ்யம் செய்விக்க வேண்டும். அரசன் நோய் நீங்கியவனாகவும், கவலை நீங்கியவனாகவும், வெற்றிகள் பெறுபவனாகவும் உடனே ஆகிவிடுவான்.

## முன் சொன்ன மஹாஶாந்தியின் பலன் கூறுகிறார்

அரசனுக்கு ஆரோக்யம் (ரோகம் நீங்கப் பெறுதல்) நீண்ட ஆயுள், வெற்றி, செல்வம், புலனடக்கம், ஆஸ்திக்யம் (தெய்வ நம்பிக்கை), தேவத்தன்மை, கோரிய பலன் அனைத்தும் கிடைத்தல், பூவுலகத்தின் ஆட்சி இவையெல்லாம் ஏற்படும். ஐயமில்லை.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்**
மஹாஶாந்தி முறை என்கிற
47வது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீ ஸுதர்ஶந மஹாயந்த்ரத்துடன் சேர்ந்த ஆஸநம் முதலியவற்றின் மஹிமை என்கிற

# 48வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி॥

## கோரிய பலன் கிடைக்க ஜபம் முதலியவைகளைத் தவிர உபாயம் உண்டா ? என்ற கேள்வி

**நாரதர்:-** பகவானே! சக்ர வடிவத்திலிருக்கும் விஷ்ணுவுக்கு அபிஷேகம், மஹா ஶாந்தி, ஶாந்தி செய்யும் முறை இவை எல்லாம் எல்லா பலன்களையும் கொடுக்கும் என்று கூறப்பட்டது. இவைகளைத் தவிர விரும்பிய பலனைக் கொடுக்கவல்லது ஏதாவது உண்டா ?

## ஆஸநங்கள் பலன் தருபவை

**அஹிர்புத்ந்யர்:** இவைகள் இல்லாமல் கூடச் சில அரசர்கள் கோரிய பலனைப் பெற்றது உண்டு. ஆஸநத்தின் மூலம், மோதிரம், நிலைக்கண்ணாடி, கொடிமரம், அஸ்மானகிரி(மேல் விரிப்பு) இவை மூலம் விசேஷமான செல்வம் நிறைந்தவர்களாகப் பின் வரும் அரசர்கள், முக்தாபீடன், விஶாலன், ஸநந்தன், சித்ரஶேகரன், கீர்த்திமாலி, என்கிறவர்கள் பூமியில் ஆட்சி செய்து தேவர்களுக்கு நிகராக இருந்தனர்.

## ஆஸநம் முதலியவற்றால் முக்தாபீடன் முதலிய அரசர்களுக்கு இஷ்டம் நிறைவேறிய வகை

முன்னொரு காலத்தில் ஆஸநத்தின் மூலமாகவே முக்தாபீடன் என்பவன் பூமியனைத்தையும் வெற்றி கொண்டான். விஶாலன் என்கிற அரசன் மோதிரத்தின் மூலம் மரணத்தை வெற்றி கொண்டான் (யமனை வென்றான்). ஸுநந்தன் என்கிற அரசன் நிலைக் கண்ணாடி மூலமே நாக லோகத்தை வெற்றி கொண்டான். சித்ரஶேகரன் என்பவன் கொடி மரத்தின் மூலம் அஸுரர்களைப் போரில் வென்றான்.

கீர்த்தி மாலி என்கிற அரசன் மேல் விரிப்பு மூலம் ஸ்வர்க லோகத்தை அடைந்தான்.

**ஸாதாரணமான ஆஸநத்தின் ஸாதநம் பற்றிக் கேள்வி**

**நாரதர்:-** ஸாதாரணமான ஆஸநம் முதலியவை எவ்வாறு வெற்றிக்குப் பலனைத் தரும் ஸாதநமாய் இருந்தன? ஸ்வாமிந்! மிகவும் அதிஶயமான இந்த விஷயத்தை எனக்குச் சொல்லி அருள வேண்டும்.

**முக்தாபீடன் வரலாறு**

**அஹிர்புத்ந்யர்:-** மஹா தேஜஸ்வியான ஸௌஶ்ரவஸின் பிள்ளை முக்தாபீடன் தன் தகப்பனார் காலமான பிறகு கடல் சூழ்ந்த மண்ணுலகத்தை ஆண்டு வந்தான்.

**ஹாராபீடன் புலன்களுக்கு வஶப்பட்டதால் ராஜ்யத்தில் தர்மம் குறைந்து போயிற்று.**

தாமரை போன்ற அழகிய கண்களோடு கூடிய அந்த அரசன் தன் அந்த:புரத்திலுள்ள ஸ்திரீகளிடம் இன்பம் நுகர விரும்பியதால் நல்ல கார்யங்களைச் சிறிதும் கவனியாமல் இருந்தான். அதனால் மக்கள் அவன் நாட்டில் அதர்மத்தைச் செய்தனர். அதனால் அவன் நாடு பல திருடர்களால், வலிமை மிக்கவர்களால் குழப்பம் மூட்டப்பட்டு அபஹரிக்கப்பட்டது. சில நல்ல மக்கள் அந்த அரசனிடம் நாட்டில் ஏற்பட்டுள்ள குழப்பத்தைப் பற்றி எடுத்துரைத்தனர். மது பாநத்திலும் புணர்ச்சியிலும் ஈடுபட்டுத் தளர்ந்திருந்த அவன் இவர்கள் பேச்சினாலும் விஷயத்தைப் புரிந்து கொள்ளவில்லை.

**புரோஹிதர்களும் மந்திரிகளும் சேர்ந்து ஆலோசனை**

பிறகு அமைச்சர்கள் புரோஹிதருடன் நன்கு ஆலோசனை செய்தனர். 'அரசனோ இன்பத்தில் மூழ்கியிருக்கிறான். நம் நாடு திருடர்களால் நிறைந்து விட்டது' இவ்வாறு நினைத்து அவர்கள் எல்லோரும் மஹாதேஜஸ்வியான குருவிடம் சென்று, 'எங்களுக்கு வேறு

கதியில்லை. உங்கள் க்ருபையினாலேயே நாங்கள் வெற்றி பெறுவோம்' என்று கூறினர். இவ்வாறு விண்ணப்பிக்கப் பட்ட குருவும், 'சரி அவ்வாறே செய்வோம்'என்றார்.

## வஸிஷ்டரால் உபதேஶிக்கப்பட்ட உபாயம்

இவ்வாறு சொல்லிவிட்டு, அரசனுக்கு வஸிஷ்டர் சொன்ன வகையில் யந்த்ரங்களோடு இணைக்கப்பட்டதும், நவ ரத்நங்கள் பதிக்கப்பட்டதுமான மிகவும் வியப்பூட்டும் ஒரு ஆஸநத்தை அமைத்தார். ஸ்த்ரீகளிடம் கூடிக் குலாவியிருந்த அந்த அரசனை ஆஸநத்தில் ஏறி உட்கார வைத்தார்.

## புரோஹிதர் அரசனுக்குச் செய்ய வேண்டிய கார்யங்களை எடுத்துரைத்தார்

நாற்புறமும் வரிசையாக வேதங்களின் ஶாகைகளைப் பாராயணம் செய்ய ஏற்பாடு செய்தார். பெரியோர்களின் மங்களமான ஆசீர்வாதம், பாடல்கள், வாத்யம், நாட்யக்காரர்கள், பூர்ண கும்பம் இவற்றை அழிவில்லாத அமுதமாகக் கருத வேண்டும். அந்தக் கலஶத்திலிருந்து தோன்றிய எட்டு தளங்களோடு கூடிய தங்கத் தாமரைப்பூவில் நான்கு திருக்கரங்களுடன் கூடியவரும், மூன்று கண்களுடையவரும், கையில் தாமரைப்பூ ஏந்தியவரும், தங்கம் போன்ற நிறமுடையவரும், அனைத்து ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவரும், முத்து மாலையணிந்து விளங்குபவரும், கிரீடம், மாலைகள், தோள்வளைகள், கங்கணங்கள் இவற்றால் அலங்கரிக்கப்பட்டவரும், பீதாம்பரம் சாற்றப்பட்டவரும், அழகிய தோற்றம் உடையவரும், புன்முறுவல் தோன்றும் முகத்துடன் ஸேவை ஸாதிப்பவரும், மங்களங்களைத் தருபவரும், கடி ஸூத்ரம் அணிந்தவரும் காதுகளில் குண்டலம் அணிந்தவரும், திருமார்பில் ஶ்ரீவத்ஸத்தை உடையவரும், லக்ஷ்மீபதியும், பக்தர்களுக்குச் செல்வங்களைத் தருபவரும், பிராட்டி வஸிக்கும் வாஸஸ்தாநமானவரும், அழகு மிக்கவரும்,

எப்பொழுதும் நன்கு மலர்ந்த செந்தாமரை போன்ற திருக்கண்களையுடையவரும், பிராட்டியை ஒரு பொழுதும் பிரியாதவரும், நாபியில் தாமரையுடன் கூடியவரும், கம்பீரமான தோற்றமுடையவரும், பக்தர்களின் ஶ்ரமத்தைப் போக்குபவருமான விஷ்ணுவையும், அவர் வலப்புற மடியில் மஹாலக்ஷ்மி அமர்ந்திருப்பதாக நினைக்க வேண்டும். மந்த்ர மூர்த்தி மந்த்ரங்களின் உட் பொருளான பகவான் முன் சொன்ன மூர்த்தியில் ப்ரவேஶிப்பதாக நினைக்க வேண்டும். இவ்வாறாக நினைத்துக் கொண்டே கலஶத்தைத் தொட்டுக் கொண்டு மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். 10,008 ஆவ்ருத்தி ஜபித்துத் தன் ஶரீரத்தில் அபிஷேகம் செய்து கொள்ள வேண்டும். நவக்ரஹங்களின் பீடையிருந்தாலும் அனைத்துக்கும் இந்த அபிஷேகம் ஶாந்தியைக் கொடுக்கும். **(குறிப்பு:** மேலே சொன்ன வாக்யங்களின் அமைப்பு சிறிது பொருந்தாது போல் தோன்றினாலும் அவை மாற்றப்படாமல் உள்ளது உள்ளபடி எழுதப்பட்டன). யார் நீண்ட ஆயுளையும் செல்வங்களையும் விரும்புவாரோ அவரையும் இந்த ஜலத்தினால் அபிஷேகம் செய்விக்க வேண்டும். விஷயங்கள் அறிந்த மனிதன் ருத்விக்குகள் அனைவரையும் முன்னாடியே பூஜிக்க வேண்டும். மேலும் உத்தமமான ப்ராம்மணர்களுக்கு நல்ல ஸம்பாவனை (தக்ஷிணை) கொடுத்து த்ருப்தி செய்விக்க வேண்டும். இவ்வாறு தனக்காகவும் பிறருக்காகவும் நன்மைகளைச் செய்து கொள்ளலாம். நூறு தங்கக் காசுகளாவது இந்த க்ரியையில் தக்ஷிணை கொடுக்கப் பட வேண்டும். ஸ்நாநத்துக்காக உள்ள வஸ்த்ரத்தைத் தொடக் கூடாது. கந்தல் வஸ்த்ரத்தில் துடைக்கக் கூடாது. க்ஷௌரம் செய்து கொள்ளக்கூடாது. ஸ்நாநம் செய்த தீர்த்தத்தின் மேல் நிற்கக் கூடாது. பிறகு யஜமாநன் அலங்காரங்கள் செய்து கொள்ளலாம். மங்கள த்ரவ்யங்களைப் பார்க்க வேண்டும். காளைக் கன்றையும் ஸௌமங்கலிப் பெண்களையும் பார்க்க வேண்டும்.

தன்னுடைய பிறந்த நக்ஷத்ர திநத்தில் வெள்ளை வஸ்த்ரங்கள் உடுத்த வேண்டும். வெள்ளிக்கிழமைகளில் இவ்வாறு ஏழு முறை செய்ய வேண்டும். இவ்வாறு செய்பவனுக்குக் கோரிய

விஷயங்கள் நிச்சயமாகக் கிடைக்கும். மாறுதல் ஏற்பட்டால் கிட்டாது. செல்வங்களை விரும்புபவன் பாபங்களைப் போக்க வல்ல அந்த கும்ப தீர்த்தத்தை இரு கைகளால் எடுத்துக் கொண்டு காலையில் நின்று கொண்டு 108 முறை ஜபித்துப் பாபத்தைப் போக்க வல்ல தீர்த்தத்தைத் தலையில் சேர்த்துக் கொள்ள வேண்டும். வஸ்த்ரங்களை விரும்புபவன் ஆம்பல் முதலிய புஷ்பங்களால் ஹோமம் செய்ய வேண்டும். எந்த நிறமுள்ள புஷ்பங்களால் ஹோமம் செய்கிறானோ அந்த நிறமுள்ள வஸ்த்ரங்கள் கிடைக்கப் பெறுவான். மழையை விரும்புபவன் பசும் சாணத்தால் மெழுகி ஶுத்தம் செய்யப்பட்ட இடத்தில் சிவப்பு வஸ்துக்களால் மண்டலம் அமைக்க வேண்டும். மண்டலத்துக்கு கிழக்குப் பக்கத்தில் புதிய கும்பத்தை அமைக்க வேண்டும். நூல்களால் சுற்றி நன்றாக அலங்கரிக்கப்பட்டதும் வாஸனை த்ரவ்யங்கள் சேர்ந்த தீர்த்தத்தினால் நிறப்பப்பட்டதுமான கும்பத்தை ஸ்தாபிக்க வேண்டும். ஶுத்தமான அந்தக் கும்பத்தில் மிகவும் கவனத்துடன் ஸூர்யனை ஆவாஹநம் செய்ய வேண்டும். அந்த ஸூர்ய மண்டலத்துக்குள் இருக்கும் விஷ்ணுவை நல்ல ஆசார்யன் முன் சொன்ன முறையில் பூஜிக்க வேண்டும். நல்ல அறிவாளியாக இருப்பவன் அக்நியில் 108 ஆவ்ருத்தி பாயஸத்தினால் ஹோமம் செய்ய வேண்டும். மிகவும் கவனத்துடன் ந்ருஸிம்ஹனை த்யாநம் செய்து கொண்டு அந்த ந்ருஸிம்ஹ மந்த்ரத்தை ஆயிரக் கணக்கில் ஜபிக்க வேண்டும். இவ்வாறு 7 நாட்களோ 12 நாட்களோ செய்ய வேண்டும். இதன் மூலம் த்ருப்தியடைந்த பகவான் நல்ல மழை பொழியச் செய்வார். நாணல் புல்லைக் கொண்டு செய்யும் ஹோமத்தினால் நிச்சயமாக மழை பெய்யும். மழை விரும்புபவன் உபவாஸமிருந்து ஈர வேஷ்டியுடன் எப்பொழுதும் ஜபிக்க வேண்டும். எம்பெருமானுடைய கட்டளையினால் 7 நாட்களில் நல்ல மழை பெய்யும். எரியாத நெருப்பில் (சாம்பல்) ஹோமம் செய்தாலோ உப்பினாலோ ஹோமம் செய்தால் மழையைத் தடுப்பார். அதனால் ஞாநியான ஆசார்யன் மீண்டும் ஶாந்தி செய்ய வேண்டும். எவன் காலையில் ஸ்நாநம் செய்து ஆயிரக்கணக்கில்

மந்த்ரத்தை ஜபிப்பானோ அவனுக்குச் செல்வம், உடல்நலம், தேஜஸ் எப்பொழுதும் மிகுதியாக இருக்கும். எல்லா நாட்களிலும் எவன் பால் மட்டும் உட்கொண்டு புலனடக்கத்துடன் ஜபம் செய்வானோ, அதே போல் ஒவ்வொரு நாளும் 10 லக்ஷம் அர்சனை செய்வானோ, அவன் அணிமா முதலிய அஷ்டஸித்திகளோடு கூடிய நல்ல பலன்களைப் பெறுவான். பகலிலும் இரவிலும் சாப்பிட்டால் அவன் பஞ்சகவ்யம் ஸ்வீகரிக்க வேண்டும். எல்லா பாபங்களையும் நீக்கக் கூடிய இந்த மந்த்ரத்தை பஞ்சகவ்யம் சாப்பிட்டு ஐந்து நாட்கள் திநமும் 1008 முறை ஜபித்தால் ப்ரம்மஹத்தி முதலிய எல்லா பாபங்களிலிருந்தும் உடனே விடுபடுவான். எல்லா விதைகளையும் இந்த மந்த்ரத்தால் 1008 முறை ஜபித்து விதைக்கச் செய்ய வேண்டும். பயிர்கள் மிகவும் செழிப்பாக வளரும். இதில் ஸந்தேஹமில்லை. அந்த உத்தமமான தேவதையை நெய்யினாலும், பாலினாலும் திருமஞ்ஜநம் செய்விக்க வேண்டும். இதனால் ஸந்தோஷமடைந்த பகவான் மநத்தினால் விரும்பிய அனைத்தையும் கொடுத்து அருள்வார். நல்ல அறிவுள்ள யஜமாநன் தான் உட்கொள்ளும் அந்நத்தை ஏழு முறை மந்த்ரத்தால் ஜபித்து உட்கொள்ள வேண்டும். பிறருக்கு இந்தக் கார்யத்தைச் செய்பவன் உட்கார்ந்து கொண்டு செய்ய வேண்டும்.

## இவ்வாறு செய்ததன் மூலம் அரசனுக்குப் பகைவர்கள் இல்லாத அரசாட்சி கிடைத்தது

பிறகு அந்தப் புரோஹிதரால் இவ்வாறு கட்டளையிடப் பட்டு அரசன் 1 மாத காலம் அவ்வாறே செய்து முடித்தான். அதனால் அவனுடைய பகைவர்கள் அனைவரும் நோய்களாலும் இவனுடைய ஸேனைகளாலும் அழிந்து போயினர். அதனால் பகைவர்களற்ற கடல் சூழ்ந்த இந்தப் பூவுலகம் இவனது ஆட்சிக்குட் பட்டதாயிற்று.

## மோதிரத்தின் பெருமையை விளக்க விஶாலனின் கதை தொடக்கம்

விஶாலா என்கிற நகரத்தில் விஶாலன் என்கிற அரசன் இருந்தான். மிகவும் தர்ம சிந்தனை உள்ள அவன் கடல், நகரங்கள் இவற்றுடன் கூடிய பூமியை ஆண்டு வந்தான்.

## விஶாலன் குணங்களின் வர்ணனை

அவன் ஸத்யமே பேசுபவனாகவும் எல்லோரிடமும் ஸமமான புத்தியை உள்ளவனாகவும், உறவினர் போன்றவனாகவும், விதியின் படியே தர்ம கார்யங்களில் ஈடுபாடு உள்ளவனாகவும், 20 வயதில் உள்ள அவன் எப்பொழுதும் ப்ராம்மணர்களை அணுகி ஆலோசனை பெறுபவனாக மக்களை மகிழ்விப்பதில் நோக்குள்ளவனாய், தைர்யஶாலியாய், தேவ கார்யங்களில் பித்ரு கார்யங்களில் ஊக்கமுள்ளவனாக இருந்தான்.

## அம்மாவினால் புத்ரனின் மரணத்தைப் பற்றி ஸூசகமாக அறிந்து புலம்பல்

முனிவரே! தகப்பனாரைப் பிரிந்து இருந்த அவனுடைய தாயார் பின் வருமாறு ஒரு அஶரீரி சொல்லக் கேட்டாள். (சில ஸமயங்களில் ஆகாயத்திலிருந்து சில வாக்யங்கள் காதில் விழும். ஆனால் அங்கு யாரும் ஶரீரத்துடன் தென்பட மாட்டார்கள். இதுவே **அஶரீரி வாக்யம்** எனப்படும்) 'இன்றிலிருந்து நான்காவது நாள் உன் மகன் இறந்து விடுவான்' இந்த வார்த்தையைக் கேட்ட அவள் மிகவும் மனத்தில் குழப்பம் அடைந்து புலம்பினாள்.

## அரசன் தாய்க்கு ஆறுதல் சொல்லிவிட்டுப் புலஹர் என்பவரின் ஆஶ்ரமத்துக்குச் செல்லுதல்

இதைக் கேட்டு மிகவும் வருத்தமுற்ற தன் தாயிடம் மிகவும் அமைதியுடன் பின் வருமாறு கூறினான். ஏன் அழுகிறாய்? என்று வலியுறுத்திக் கேட்கப் பட்ட அவள் நடந்ததை உள்ளபடி சொன்னாள். அரசனும் மிகவும்

தைர்யத்துடன் அதைக் கேட்டுத் தாயாரிடம் 'பயப்படாதே' என்று சொல்லிவிட்டுப் புலஹருடைய ஆஶ்ரமத்தை நோக்கிச் சென்றான்.

## புலஹரிடம் தன் கதையைச் சொன்னான்

அங்கு தவம் செய்யும் முநிவரைப் பார்த்து நமஸ்கரித்துப் பின் வருமாறு கூறினான் - 'என் தாயார் இம்மாதிரி ஒரு அஶரீரி வார்த்தையைக் கேட்டாள்' என்று.

## முநிவர் அதற்குப் பரிஹாரம் சொன்னார்

அவன் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட புரோஹிதரான அந்த முநிவர் கூறினார்- 'ஸுதர்ஶந மஹா யந்த்ரத்தோடு கூடிய இந்த மோதிரத்தை அணிந்து கொள். அதனால் நிச்சயம் மரணம் நீங்கி விடும்' என்றார்.

## அரசன் சொன்னபடி செய்தல்

இவ்வாறு உபதேஶித்த அவர் அரசனை அழைத்து அந்த மோதிரத்தை அணிவித்தார்.

## அரசனை யமகிங்கரர்கள் நெருங்குதல்

அந்த ஸுதர்ஶந யந்த்ரத்தோடு கூடிய மோதிரம் விஶாலனால் அணிந்து கொள்ளப் பட்ட பொழுது, யமனால் அனுப்பப்பட்ட பயங்கரத் தோற்றமுடைய அவனுடைய வேலைக்காரர்கள் அரசனின் உயிரை எடுத்துச் செல்ல யாராலும் தடுக்கப்படாமல் அவனருகில் வந்தனர்.

## மோதிரத்தின் மஹிமையால் கிங்கரர்கள் ஓடி விடுதல்

ஆனால் மோதிரத்தின் மஹிமையால் அவன் அருகில் செல்லச் சக்தியற்றவர்களாக ஆகிவிட்டனர். பரபரப்புடன் கைகளைத் தூக்கிக் கொண்டு அவன் மீது வீசாமல் நின்றிருந்த பொழுது ஸுதர்ஶந சக்ரத்திலிருந்து வெளி வந்த பல வகை ஆயுதங்களால் மிகவும் அதிகமாகத் தாக்கப்பட்டு அவர்கள் வந்த வழியே ஓடி விட்டனர்.

## யமன் முதலியவர்களின் வியப்பு

பிறகு யமன் மட்டுமின்றி மற்றுமுள்ள தேவர்கள் அனைவரும் ஸுதர்ஸநத்தின் மஹிமையால் அவன் மரணத்தைக் கடந்து விட்டான் என்று வியப்படைந்தனர்.

## நிலக் கண்ணாடியின் பெருமையை விளக்க ஸுநந்தன் வரலாறு -

மஹாமுநிவரே! இவ்வாறே நிலக் கண்ணாடியின் ஶக்தியைச் சொல்கிறேன், கேளும். ஸ்ருங்காரம் என்றும் பட்டினத்தில் ஸுநீதி என்கிற அரசன் முன்னொரு காலத்தில் இருந்தான். (ஸுநந்தன் என்பது அவனது மற்றொரு பெயர்). அவன் த்ரேதாயுகத்தின் இறுதியில் பூமியை ஆண்டு வந்தான்.

## ஸுமதி என்கிற அவன் குழந்தையை நாககந்நிகைகள் இழுத்துச் செல்லுதல்

இவன் யாகம் செய்து வெகு காலத்துக்குப் பிறகு குழந்தைப் பேறு பெற்றான். நாளொரு மேனியாக வளர்ந்து வந்த அந்தக் குழந்தைக்கு ஸுமதி என்று தகப்பனார் பெயர் வைத்தார். அழகான உடற்கட்டுடைய அந்தக் குழந்தையும் வாலிபம் பெற்றுச் சீக்கிரமே கல்விகளைக் கற்றவனாகவும், அஸ்த்ர வித்தையில் தேர்ச்சி பெற்றவனாகவும் ஆனான். ஒரு நாள் வேட்டைகாக வெளியிலிருந்தச் சிறிய காட்டுக்குச் சென்றான். அங்கு நல்ல உருவமும் யெளவநமும் கூடிய ஒரு பெண்ணைக் கண்டான். இதற்கு முன் இம்மாதிரி பெண்ணைப் பார்த்திராத உடனே காதலால் தூண்டப்பட்டு மோஹித்தான். அந்தப் பெண்ணும் ஸுமதியை அழைத்துக் கொண்டு தன் இடத்துக்குச் சென்றாள். அவனை மாயையினால் மயக்கி அவனுடன் பாதாள லோகத்துக்குச் சென்று விட்டாள்.

## வாஸுகி பெண் அநங்க மஞ்ஜரியை மணந்து நெடுநாட்கள் அங்கு வஸித்தான்.

அந்த லோகத்தில் போகவதீ என்கிற மிகவும் அழகான நகரத்துக்குச் சென்று அந்தப் பெண் ஸுமதியை அநங்க மஞ்ஜரியிடம் சேர்த்தாள். அவனைப் பார்த்த அந்த அநங்க

மஞ்ஜரி மிகவும் மகிழ்ச்சியடைந்து அவனைக் கணவனாக ஏற்றுக் கொண்டாள். அந்த உலகத்தையும், பட்டணத்தையும், அழகான நாக கந்நிகையையும் பார்த்து அந்த ஸுமதி ஆச்சர்யம் அடைந்தான். அநங்கமஞ்ஜரியைக் காந்தர்வ முறைப்படி மணந்து கொண்டு தன் நாட்டையும், தகப்பன், தாய் முதலியவர்களையும் மறந்து அவளுடன் கூடி மகிழ்ந்திருந்தான். (காந்தர்வ முறை :- ஆடவர்கள் பெண்ணுடன் மோதிரம் மாற்றிக் கொள்வது. இது ஶாஸ்த்ரப்படி அங்கீகரிக்கப்பட்ட முறை).

## புத்ரனைப் பிறிந்ததால் வருத்தமுற்று அரசன் ஒற்றர்களைக் கொண்டு தேடுதல்

இதே ஸமயத்தில் அரசன் வேட்டைக்குப்போன தன் மகன் திரும்பி வராததை அறிந்தான். மிகுந்த பரபரப்புடன் அமைச்சர்களிடம் பின் வருமாறு கூறினான். ''ப்ரியமான புத்ரன். மிகுந்த ஶ்ரமத்துடன் கிடைத்தான். அவன் ஒரே புத்ரன். அவன் எங்கிருந்தாலும் கொண்டு வாருங்கள். அவனுடன் தான் சாப்பிடுவேன். இப்பொழுது சாப்பிட மாட்டேன்'' என்றான். அரசனுடைய பேச்சைக் கேட்ட மந்த்ரிகளால் அனுப்பப்பட்ட தூதர்கள், ஒற்றர்கள், மற்றும் சிலரும் சுறுசுறுப்புடன் நான்கு திசைகளிலும், இடை திசைகளிலும், சிறிய இடுக்குகளிலும், மலைகளிலும், நீர் நிலைகளிலும், ஆறுகளிலும், க்ராமங்களிலும், நகரங்களிலும், நாற்சந்திகளிலும், மரங்களிலும் தேடிச் சென்றனர். பட்டணங்களிலும், காடுகளிலும், புண்ய தீர்த்தங்களிலும் எல்லா இடங்களிலும் தேடியும் ஸுமதியைக் காணவில்லை. இதை அரசனுக்கு உரைத்தனர்.

## உண்ணாவ்ரதம்

அதைக் கேட்டு அரசன் மிகவும் வருந்தி, புலம்பி, உணவின்றி உள்ளே படுத்துக் கிடந்தான். அவனுடைய ஶோகத்துக்கு எல்லையில்லை.

## கண்வரின் ஆச்ரமம் செல்லுதல்

இவ்வாறு அரசன் மோகத்தினால் மயங்கிக் கிடந்த பொழுது புரோஹிதர் தமஸா நதிக்கரையில் வஸிக்கும் கணவரிடம் சென்று அரச குமாரனுக்கு நிகழ்ந்த அத்தகைய செய்தியை விண்ணப்பித்தார்.

## கண்வர் இளவரசனுடைய செய்தியை விளக்குதல்

அதைக் கேட்ட கண்வருஷி மிகவும் இரக்கம் கொண்டு த்யாந நிலையிலிருந்து இளவரசரின் செய்தியை அறிந்தவராய் த்யாநத்திலிருந்து தன் நிலைக்கு வந்தார். முநிவர் குமாரனுடைய எல்லாச் செய்தியையும் புரோஹிதருக்கு எடுத்துரைத்தார். "போகவதீ என்று மிகவும் அழகான ஒரு நகரம் பாதாளத்தில் இருக்கிறது. மிகவும் அழகுடைய வாஸுகி என்னும் நாகராஜனுக்கு அநங்க மஞ்ஜரி என்று ஒரு பெண் இருந்தாள். அவள் நல்ல அங்க அமைப்புகளும், நல்ல வடிவம் உடையவளாய்த் தக்க காலத்தில் யௌவந பருவம் பெற்று இருந்தாள். எந்த ஒரு புருஷனை அவள் விரும்புகிறாளோ அவனுக்கே இவளை மணம் செய்து கொடுப்பேன் என்கிற வாஸுகியின் எண்ணத்தை அறிந்து அவளுடைய தோழிகள் இங்குமங்கும் அலைந்து திரிந்தனர். அவளுக்குத் தகுந்த வரனைத் தேடியும் அத்தகையவன் கிடைக்க வில்லை. நாக லோகத்திலும், பூமியிலும் வரனைத் தேடி அலைந்தனர். ஓரிடத்தில் இந்த அழகான அரச குமாரனைக் கண்டு அநங்கமஞ்ஜரியிடம் மந்மதனுக்கு இணையான அரச குமாரன் இருக்கிறான் என்றும் இவன் செல்வத்தினால் இந்த்ரனுக்கு ஒப்பானவன் என்றும், அவனே உனக்குத் தகுந்தவன் என்றும், இவனை ஸாம, தாந, முறைகளால் கொண்டு வர முடியாது என்றும் கூறினார்கள். அதைக் கேட்ட அநங்க மஞ்ஜரியும் அவனைச் சீக்ரம் கொண்டு வாருங்கள் என்று தோழிகளுக்குச் சொல்லி, அவனை அடைய வேண்டும் என்கிற மிகுந்த ஆவலால் அதிகம் கவலை கொண்டாள். அந்தத் தோழிகளும் ஒருவருக்கொருவர் நன்கு ஆலோசனை செய்து மாயைகளில் தேர்ச்சி பெற்ற 'ரமா' என்பவளை 'அந்த அழகிய வாலிபனை மாயையால் மயக்கி இங்கு அழைத்து வா' என்று

சொன்னார்கள். தோழிகளால் இவ்வாறு பணிக்கப்பட்ட அவள் இவனை மாயையால் கொண்டு சென்றாள். ஸுமதியும் அவளை மணந்து கொண்டு இப்பொழுது அங்கேயே களிப்புடன் இருக்கிறான்' என்றார்.

## அரசகுமாரனைக் கொண்டு வர ஸுதர்ஶந யந்த்ரம் பதித்த நிலைக் கண்ணாடியே உபாயமாகும் என்கிறார்

'ஸுதர்ஶந யந்த்ரம் தவிர அவனை இங்கு வரவழைக்க வேறு வழியில்லை. ஆகையால் அதன் மூலமே நான் அவனை வர வழைக்கிறேன். தங்கத்தைக் கொண்டு கண்ணாடி போல் ஸுதர்ஶந யந்த்ரத்தை முன் சொன்ன முறையில் அமைத்து அதன் மூலம் அவனைக் கொண்டு வாருங்கள்' என்று சொல்லி விட்டு மிகவும் பயங்கரமான தவத்தில் ஈடுபட்டார்.

## அரசன் பாதாள லோகம் செல்லுதல்

புரோஹிதரும் புறப்பட்டுச் சென்று அரசனிடம் எல்லா விஷயங்களையும் தெரிவித்தார். அரசனும் மிகவும் மகிழ்ச்சியடைந்து ஸுதர்ஶந யந்த்ரத்தை உள்ளே கொண்ட கண்ணாடி அமைத்து, தேரில் முன்புறம் அதைப் பதித்துப் பாதாளத்துக்குப் போகும் வழியான அந்த த்வாரத்துக்குச் சென்றான். ஸுநந்தன் அந்தக் கண்ணாடியின் மஹிமையால் பாதாளத்துக்குச் செல்ல ஶக்தி உடையவன் ஆனான்.

## அரசனின் வியப்பு

மற்றொரு ஸ்வர்கலோகமோ என்று நினைக்கத்தக்க அந்தப் பாதாளலோகம் சென்று அங்குள்ள செல்வச் செழிப்பைப் பார்த்து மிகவும் வியப்புற்றான் அரசன்.

## அரசன் தன் குமாரனை மனைவியுடன் நகரத்துக்கு அழைத்து வந்தான்

அந்தப் பாதாள லோகத்தில் மிகவும் அழகான போகவதீ என்கிற நகரத்துக்குச் சென்று, மிகவும் புத்ர ப்ரீதியுள்ள அரசன் குமாரனை அழைத்து வந்தான். அப்பொழுது ஸுமதி தகப்பனாரைப் பார்ப்பதற்காக அந்த:புரத்திலிருந்து

மனைவியுடனும் பணிப் பெண்களுடனும் வந்தான். பிறகு ஶத்ருக்களை அழிக்கும் திறன் கொண்ட அந்த அரசன் குமாரனை நாக கந்நிகையுடனும் தோழிகளுடனும் தேரில் ஏறச் செய்து தன் ஊருக்குப் புறப்பட்டான்.

## கோபம் கொண்ட வாஸுகி போர் புரிய ஆயத்தமாதல்

'உன் பெண்ணை, மருமகனுடன் அந்த:புரத்திலிருந்து ஒரு அரசன் தேரில் ஏற்றிச் செல்கிறான்' என்கிற செய்தியைக் கேட்டு, வாஸுகி மிகவும் கோபம் கொண்டு நாக ஸேனையுடன் சூழ்ந்தவனாகப் புறப்பட்டான். அவன் அந்த ஸுநந்தன் என்கிற அரசனைப் பார்த்து, 'நில்,நில்' என்று கூறினான். 'என் பெண்ணையும் மாப்பிள்ளையையும் ஏற்றிக் கொண்டு நீ எங்கு போகிறாய்' என்றான்.

## ஸுதர்ஶந யந்த்ரத்தோடு இணைந்த கண்ணாடி இருந்ததால் அரசனுக்கு வெற்றி கிட்டியது

ஸுநந்தனும் அந்தக் குரலைக் கேட்டு உத்தமமான தன் தேரைத் திருப்பிக் கொண்டு கண்ணாடியை 'ஶத்ருக்களின் ஸேனையை இப்பொழுதே ஒழித்துக் கட்டு' என்று ப்ரார்த்தித்தான். பிறகு **ப்ரஸ்வாபநம், ஆக்நேயம்** என்கிற இரண்டு அஸ்த்ரங்கள் உடனே வெளி வந்தன. **ப்ரஸ்வாபநம்** நாகர்களுடைய படைக்குள் ப்ரவேஶித்தது. அதனால் அந்த ஸேனை தூக்கம் வந்து படுத்துவிட்டது. **ஆக்நேய** அஸ்த்ரம் அந்த போகவதீ என்கிற நகரத்தைத் தன் தீயினால் எரிக்கத் தொடங்கியது.

## நாகராஜன் ஶரணமடைதல்

அதைக் கண்ட நாகராஜநான வாஸுகி ஸுநந்தனிடம் ஶரணம் அடைந்தான். அரசே! இந்த விஷயமெல்லாம் எங்களுக்குத் தெரியாமல் போயிற்று. ஆகையால் எங்களுடைய செயலை மன்னிக்க வேண்டும். இதெல்லாம் பெண்களால் ஏற்பட்ட பெரிய ஆபத்து என்பதைத் தெரிந்து கொண்டு மன்னிக்க வேண்டும் என்று வேண்டினான். மிகுந்த தேஜஸை உடைய அரசே! இந்த விலை உயர்ந்த ரத்நங்களை

ஏற்றுக் கொள்ள வேண்டும். இந்தப் பெண்ணையும் மற்றுமுள்ள பல நாக கந்நிகைளையும் பெற்றுக் கொண்டு, உத்தமமான அஸ்த்ரங்களை **உபஸம்ஹாரம்** செய்து கொண்டு நீங்கள் போகலாம் என்றான். (**உபஸம்ஹாரம்** என்றால், ப்ரயோகித்த அஸ்த்ரங்களைத் திருப்பி பெற்றுக் கொள்ளுதல்)

**அரசன் தன் பரிவாரங்களுடன் தன் நகரத்துக்குச் சென்றான்**

ஸுநந்தனும் மிகவும் அமைதியுடன் அஸ்த்ரங்களைக் திருப்பி எடுத்துக் கொண்டு தன் குமாரனையும் விலை உயர்ந்த ரத்நங்களுடன், பணிப்பெண்களுடன் உத்தமமான நாக கந்நிகைகளேயும் ஏற்றுக் கொண்டு அரசன் வாஸுகியிடம் விடை பெற்றுக் கொண்டு தன் நகரத்துக்கு வெற்றிகரமாகச் சென்றான்.

**இவ்வாறாகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்**
அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் **ஸுதர்ஶந**
**மஹாயந்த்ரத்துடன் கூடிய ஆஸநம் முதலியவைகளின்**
மஹிமை விளக்கம் என்கிற 48வது அத்யாயம் முற்றிற்று.



# 49வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥

(இதன் விளக்கம் 18 வது அத்யாயத்தல் உள்ளது)

## ஸுதர்ஶந யந்த்ரத்தோடு கூடிய கொடி மரத்தின் மஹியையை விளக்குவதாகத் தெரிவித்தல்

அஹிர்புத்ந்யர்:- நாரதரே! ஸுதர்ஶந மஹா யந்த்ரத்தோடு இணைந்த கொடிமரத்தின் மஹிமையை உள்ளபடி சொல்கிறேன் கேளும்.

## சித்ரஶேகரன் வாழ்ந்த பத்ராவடீ நகரத்தின் வர்ணனை

ஸரஸ்வதீ நதியின் அழகான கரையில் ஆயிரக்கணக்கான தங்கமயமான மாளிகைகளுடன் கூடியதும், பல வகையான போக போக்யங்கள் நிறைந்ததும், தங்கத்தினாலான மதில் சுவர்களோடு கூடியதும், செல்வத்தினால் ஸ்வர்கத்துக்கு நிகரானதும், பூலோகத்தில் வேறு எங்கும் காண இயலாததுமான **பத்ராவடீ** என்கிற பட்டினம் இருந்தது. அதில் **உபரிசரன்** என்பவனின் குமாரன் மிகுந்த பராக்ரமசாலியாகச் சித்ரஶேகரன் என்கிற பெயரோடு அரசன் அநேக வருடங்கள் பூமியை ஆண்டு கொண்டு அந்தப் பட்டினத்தில் வஸித்து வந்தான்.

## அவன் தந்தை உபரிசரன் ஒரு ஸமயம் மல்யுத்தத்தில் ஶங்குகர்ணன் என்கிற அஸுரனை மாய்த்தல்

இவனுடைய தந்தை இந்திரனால் கொடுக்கப்பட்டதும் பல தலைமுறைகளாக இருந்து வருவதுமான உத்தமமான தேரில் ஏறிக் கொண்டு, தேவர்கள் கார்யத்துக்காக ஆகாயத்தில் சென்று கொண்டிருந்த பொழுது வழியில் ஶங்குகர்ணன் என்று மிகவும் பலஶாலியான பயங்கரமான கண்களை

உடைய ஒரு அஸுரன் அந்தத் தேரை நிறுத்தி, அதன் ஒரு நுகத்தடியைப் பிடித்தான். என்னோடு யுத்தம் செய் அல்லது தேரை விட்டு விடு என்று சொன்னான். இவ்வாறு அவன் ·ன்ன பொழுது அரசன் உபசரன் 'அவ்வாறே ஆகட்டும்' ,ன்று கூறி வில்லை எடுத்தான். பிறகு ஒரு நாள் முழுவதும் ,த்தம் நடந்தது. எல்லா அஸ்த்ரங்களையும் ப்ரயோகித்த பிறகு மற்போரில் அந்த அரசன் அஸுரனைக் கொன்றான்.

## அமர்ஷணன் என்கிற ஶங்குகர்ணனின் குமாரன் சித்ர ஶேகரனுடன் போரிடுதல்

முனிவரே! அந்த அஸுரனை ஜயித்த அரசன் சிறிது காலத்தில் மறைந்து போன பொழுது (இறந்த பொழுது) அவனுடைய புத்ரன், சித்ரசேகரனை ஶங்குகர்ணனுடைய குமாரன் அமர்ஷணன் என்பவன் மிகவும் கோபம் கொண்டு கொல்ல விரும்பி அரசனது ஸேனைகளையும் பட்டினத்தையும் அடிக்கடி முற்றுகையிட்டு வந்தான். ஒரு ஸமயம் அமர்ஷணன் கோபம் கொண்டு தன் தகப்பனாரைக் கொன்றவனுடைய குமாரன் சித்ரஸேநனுடன் சண்டையிட பத்ரவாடி நகரத்துக்கு வந்தான்.'' இவனைக் கொன்று இவனுடைய உத்தமமான தேரையும் மற்ற பொருள்களையும் எடுத்துக் கொள்வேன்''என்று சொல்லி பலத்தினால் திமிர் கொண்ட அவன் நகரத்தை முற்றுகையிட்டான்.

## சித்ரஸேநன் அவனுடன் யுத்தம் செய்தல்

அரசனும் பெரிய ஸேனையைத் தயார் செய்து கொண்டு நகரத்திலிருந்து வெளியே வந்தான். பிறகு அரசனுக்கும் துராத்மாவான அந்த அஸுரனுக்கும் போர் மூண்டது. முன்னும் பின்னுமான நடைகளுடனும், ஒருவருக்கொருவர் கூந்தலைப் பிடித்துக் கொண்டும், பயங்கரமாகவும், யானைகளுக்கும், குதிரைகளுக்கும், தேர்களுக்கும், படை வீரர்களுக்கும் இடையே பயங்கரமானதும் தேர்கள் உடைந்து போகும்படியும், ரத்த வெள்ளம் ஓடும்படியும், குடையையும் கொடிக் கம்பத்தை வெட்டியும், தலை போன முண்டங்கள் எழுந்து கூத்தாடும்படியும் உதட்டை கடித்துக்

கொண்டிருக்கும் நிலையில் வெட்டப்பட்ட தலைகள் நிறைந்தும் -

**மூன்று நாட்கள் யுத்தம் செய்தும் வெற்றி இல்லை.**

பார்ப்பவர்களுக்கு மயிர்க் கூச்சல் உண்டு பண்ணும் பெரிய போர் 3 நாட்கள் நடை பெற்றது. அந்தப் போரில் சித்ரஸேகரன் வெற்றி பெறவில்லை.

**களைத்துப் போன இரண்டு ஸேனைகளும் போரிலிருந்து பின் வாங்கினர்**

ஆகையால் இருவருடைய படைகளும் களைப்பினால் பின் வாங்கின. களைத்துப் போன குதிரைகளுடன் கூடிய அவ்விருவரும் கூடத் தம் தம் நகரத்துக்குச் சென்று விட்டனர்.

**17 முறை யுத்தம் செய்தும் வெற்றி கிட்டவில்லை**

சித்ரஸேகரனும் இவனுடன் 17 முறை போரிட்டான். இவ்வாறு சண்டையிட்டும் அவன் ஒன்றில் கூட வெற்றி பெறவில்லை.

**வருந்திய அரசன் கவலையில் ஆழ்ந்தான்**

பிறகு அமர்ஷணன் என்கிற பெரிய அஸுரனை வெல்ல முடியாது என்று நினைத்து எந்த வழியில் ஜயிக்கலாம் என்று சிந்தனையில் ஆழ்ந்தான். ''ஶிவனுடைய அநுக்ரஹம் இல்லாமல் எனக்கு வெற்றி கிடைக்காது. ஆகையால் அவரைத் தவம் செய்து துதிப்பேன்'' என்று தீர்மானித்தான்.

**கைலாஸம் செல்லுதல்**

இவ்வாறு தீர்மானித்து ஆட்சிப் பொறுப்பை மந்திரிகளிடம் ஒப்படைத்தான். பிறகு அரசன் தவம் செய்வதற்காக விருப்பம் போல் செல்லக் கூடிய தேரில் ஏறிக் கொண்டு கைலாஸத்தின் அழகிய உச்சிப் பகுதியில் ஆகாயத்தின் மூலம் சென்றான்.

**ஆகாயத்தில் செல்லும் தேர் நின்றுவிட்டது**

அவன் இவ்வாறு செல்லுகையில் மந்திர மலையில் தேர் நின்று விட்டது. உத்தமமான குதிரைகளைப் பல

வகையில் ஊக்குவித்தும், ஏவியும் கூடத்தேர் நகரவில்லை.

**காரணம் அறியக் கால் நடையாகச் செல்லுகையில் குபேரனைப் பார்க்க நேர்ந்தது.**

எக்காரணத்தினால் என்னுடைய தேர் நகராமல் இருக்கிறது என்று ஆச்சர்யமடைந்த அரசன், தேரிலிருந்து அந்த மலையில் அழகிய உச்சியில் இறங்கினான். இறங்கி மலை உச்சியில் இங்குமங்கும் நடந்தான். அங்கு நதியின் கரையில் ஸாயம் ஸந்த்யாவநத்தைச் செய்து கொண்டு வீற்றிருப்பவரும், உதய ஸூர்யன் போல் விளங்குபவரும், ஒளி வீசும் ஶரீரகாந்தியுடன் கூடியவரும், தேவன் போல் விளங்குபவருமான ஒரு வாலிபனைப் பார்த்தான்.

**அவருடன் உரையாடல்**

நீண்ட தோள்களையுடைய அரசன் அவரை வணங்கி ''நீர் யார்? ஆதி புருஷனாகிய மஹா விஷ்ணுவோ ? தாமரையில் பிறந்த சதுர்முகனா? உமாபதியான ஶிவனா? திக் பாலகர்களுக்குள் ஒருவரா? என்று கேட்டான். இவ்வாறு அரசனால் கேட்கப்பட்ட அவர் கம்பீரமான குரலுடன் பின் வருமாறு கூறினார் - ''நீ யார்? உன் பெயர் என்ன ? சொல். நீ இங்கு வந்த காரணம் என்ன? நீ தனியாக இந்த இடத்துக்கு எப்படி வந்தாய்?'' என்றார்.

**அரசன் அவரிடம் தன் வ்ருத்தாந்தத்தைக் தெரிவித்தல்**

பிறகு உபரிசரனுடைய குமாரனான சித்ரசேகரன் பதில் சொன்னான். நான் சித்ரஶேகரன் என்ற பெயருடைய அரசன். ஒரு பெரிய அஸுரனுடைய முற்றுகையைப் பற்றியும், அவனால் தனக்கு ஏற்பட்ட தொல்லைகளைப் பற்றியும், அவனை வெல்வதற்காக ஶிவனை மகிழ்விக்கும் நோக்கத்துடன் தவம் செய்ய வேண்டுமென்று தேரில் வந்ததையும், தேர் தடை பட்டு நின்றது என்றும் எல்லாவற்றையும் கூறினான்.

**குபேரனுடைய வார்த்தையில் அந்த மலையில் மஹாலக்ஷ்மி வஸிப்பதை அறிந்து கொள்ளுதல்**

அவன் சொன்னதைக் கேட்ட அந்த மஹா புருஷர் தன்னை யக்ஷகர்களுக்குத் தலைவனான குபேரன் என்று அறிமுகம் செய்து கொண்டார். இந்த மலையிலேயே உலகத்தில் உள்ள அனைத்துப் பொருள்களுக்கும் காரணமாக இருக்கும் மஹாலக்ஷ்மி வஸிக்கிறாள். அவளை ஸேவிக்க இங்கு வந்தேன். அவள் தான் எல்லோருக்கும் உத்தமமான கதி. அவள் உத்தரவினால் தான் ஸூர்யனும் சந்த்ரனும் ஆகாயத்தில் ஓய்ச்சல் இன்றிச் சுற்றி வருகிறார்கள். அவளுடைய மஹிமையால் தான் உன்னுடைய தேர் நகராமல் நின்று விட்டது. அந்த மஹாலக்ஷ்மியை ஸேவித்து உன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்'' என்று சொல்லிவிட்டுக் குபேரன் மறைந்தான்.

## அரரசனுக்கு உதவியாகக் குபேரன் தன் ஆட்களை அனுப்புதல்

குபேரனின் உத்தரவின் படி அரசனுக்கு உதவி செய்யும் எண்ணத்துடன் வேறு ஒரு புருஷன் அங்கு வந்தான். அரசனை வணங்கி அவன் சொன்னான். ''நான் ஒரு யக்ஷன். உமக்கு உதவி செய்வதற்காக அவரின் உத்தரவின் படி வந்திருக்கிறேன். நாம் இருவரும் இங்கேயே இரவு தங்கியிருப்போம். பொழுது விடிந்தவுடன் உங்களுக்கு எது தேவையோ, அதைச் செய்வேன். ஸந்தேஹமில்லை'' என்றான். ஒருவர் மேல் ஒருவர் அன்புடன் அங்கு அந்த இரவு தங்கி, மஹாலக்ஷ்மியின் ஸதஸ்ஸில் கந்தர்வர்கள் செய்த ஆடல் பாடல்கள் இவற்றின் ஶப்தத்தைக் கேட்டு, மஹாலக்ஷ்மியைப் பற்றிப் புகழ் பாடல்கள் மூலம் அந்தக் குளக்கரையில் அந்த இரவைக் கழித்தார்கள்.

## லக்ஷ்மி இருப்பிடத்தை அறிய ஆவல்

அரசன் விடியற்காலை எழுந்து காலை ஸந்த்யாவந்தநத்தைச் செய்து முடித்துப் பிறகு மஹாலக்ஷ்மி இந்த மலையில் எங்கு வீற்றிருக்கிறாள்? எந்த வழியாக நாமிருவரும் தேவியின் கோவிலுக்குச் செல்வது? எப்பொழுது தர்ஶநம் கிடைக்கும் என்று கேட்டான்.

### யக்ஷன் சொன்ன பதில்

இங்கிருந்து இரண்டு க்ரோஶம் (மைல், 4880மீட்டர்) தொலைவில் லக்ஷ்மியின் கோயில் உள்ளது. எந்தப் பக்கத்திலிருந்து பாட்டின் ஒலி கேட்கிறதோ, அங்கு சிறிது நேரம் குபேரன் மஹாலக்ஷ்மிக்குப் பூஜை செய்து உடனே சென்று விடுவார். அவர் சென்ற பின் உள்ளே சென்று தேவரீர் புராண (அநாதி) தேவியை ஸேவிக்கலாம் என்று யக்ஷன் சொல்லி,

### லக்ஷ்மியில் கோயிலுக்குச் செல்லுதல்

1 யாமம் (3 மணி நேரம்) சென்ற பின் புறப்படலாமென்று சொன்னான். அரசனும் தன்னுடைய தேரை இந்த இடத்திலேயே இருக்கும் படிச் செய்து விட்டு, அரசன் முன் செல்ல, யக்ஷன் பின் சென்றான்.

### குகையின் அருகில் கோயிலைக் காணுதல்

பிறகு அங்கிருந்து சென்ற பொழுது குகையின் அருகில் கோயில் காணப்பட்டது. அந்த யக்ஷன் குகையில் வாயிலில் வழியைக் காத்துக் கொண்டு நின்று விட்டான்.

### மண்டபத்தில் ப்ரவேஶித்தல்

நவரத்நங்கள் பதிக்கப்பட்ட நான்கு அங்கணங்களைத் தாண்டி, பிறகு மிகவும் அழகிய ரத்நங்களோடு அலங்கரிக்கப்பட்ட ஆஸ்தாந மண்டபத்தை அரசன் கண்டான்.

### மண்டபத்தின் வர்ணனை

நூற்றுக் கணக்கான நவரத்நத் தூண்கள் நிறைந்த மண்டபம் காணப்பட்டது. அநேகம் ஆயிரங்கள் பெரிய ரத்நங்கள் பதித்த ஆஸநத்துடன் விளங்கிற்று. ரத்நங்களால் ஆன மங்கள தீபங்களுடன் விளங்கிய உயரமான நுழை வாயில் காணப்பட்டது. பல கற்பக மரங்கள் நிறைந்ததும், ரத்நமயமான ஆஸநத்துடன் கூடியதும், மந்தார புஷ்பங்களின் வாஸனைகளாலும், கஸ்தூரி வாஸனையாலும் கமழும் உள்

ப்ரதேஶத்தை உடையதும், கம்பீரமான தோற்றத்துடனும், ஸூர்யன் ஒளியை மிஞ்சும் ஒளியை உடையதும், பரம பரிஶுத்தமானதும், எல்லா பக்கங்களிலும் முத்து மாலைகளால் அலங்கரிக்கப்பட்டதும், தங்கத்தினாலான தாமரை மாலைகள் நிறைந்ததும், கொடி மரங்களால் அழகு சேர்க்கப்பட்டதாகவும், அகில் கட்டையிலிருந்து வரும் மிகுந்த, தூபங்களால் நாற்புறமும் மணம் நிறைந்ததாகவும், பச்சைக் கற்பூரம் சேர்த்த குங்குமப்பூக்குழம்புகளால் பூசப்பட்டதாகவும், இங்குமங்கும் உலாவும் பணிப் பெண்களின் சலங்கைகளால் உண்டான 'ஜல் ஜல் என்று அழகான ஶப்தங்களால் நிறைந்ததுமான

**மண்டபத்தின் நடுவில் இருக்கும் நவரத்ந கமலாஸநத்தில் வீற்றிருக்கும் மஹாலக்ஷ்மியைக் கண்டான்**

அங்கு நடுவில் தாமரை ஆஸநத்தின் வீற்றிருந்த ப்ரம்மாநந்தத்தைத் தருவதாகவும், ஸகல வித ஶக்திகள் நிரம்பியவளும், அனைத்து வகைத் திருவாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவளும், பல வகை அலங்காரங்களால் விளங்குபவளும், அழகு அமுதம் கொட்டும் திருமேனியுடன் விளங்குபவளும், சந்த்ர பிம்பம் போன்ற திருமுகம் கொண்டவளும், மிகவும் அழகான வஸ்த்ரங்களைத் தரிப்பவளும், மிகவும் அழகான சந்தந மாலைகள் கொண்டவளான மஹாலக்ஷ்மியைக் கண்டான். நமஸ்கரித்து ஆச்சரியத்தினால் திகைத்து நின்றான்.

**மஹாலக்ஷ்மியின் திருமஞ்ஜந தீர்த்தம் சாப்பிட்டதால் மனத் தெளிவு பெற்று அரசன் தோத்திரம் செய்தல்**

அந்த மஹாலக்ஷ்மியின் திருமஞ்ஜந தீர்த்தத்தைக் கொண்டு வந்து அரசனை தேவி சாப்பிடச் செய்தாள். பிறகு அரசன் அழகிய திருக்கண்களோடு கூடிய அந்த மஹாலக்ஷ்மியைத் துதிக்கலானான்.

## மஹாலக்ஷ்மியே லீலாவிபூதி நித்ய விபூதி இரண்டுக்கும் தலைவி என்கிற விளக்கம்

(மஹா விஷ்ணுவுக்கு ஸ்ரீ வைகுண்டம் என்பது **நித்ய விபூதி** என்றும் இங்குள்ள ஏழு உலகங்களும் **லீலா விபூதி** என்றும் சொல்லப்பட்டுள்ளது. இந்த விஷயம் **புருஷஸூக்தம், பாதோஸ்ய விஸ்வாபூதாநி: த்ரிபாதஸ்ய அம்ருதம் திவி'** என்று சொல்கிறது)

மங்களகரமான மஹாலக்ஷ்மியே! ஸ்ரீவைகுண்டத்தில் ஸுஷும்நா என்ற பெயருள்ள விஶாலமான இடத்தில் வசிப்பவள். நித்ய ஸூரிகளால் சூழப்பட்டவள். உனக்கு **ஜயா** என்று திருநாமம். உன்னை நித்யஸூரிகள் துதிக்கிறார்கள். அடைக்கலம் வந்தவர்களை நீ காப்பாய். உன் புகழ் மிகவும் புனிதனமானது. ஶரணமடைந்த என் மீது அருள் புரிய வேண்டும். உனக்கு **ஸதி** என்று திருநாமம். உனக்குப் பல்லாண்டு வாழ்த்துக்கள். **கௌரி, காயத்ரீ, மார்கி, த்ருவா** என்பதெல்லாம் உன் திரு நாமங்களே. காமதேநு உனக்குப் பணிவிடை செய்கிறது. தேவராஜன் (இந்த்ரன்) உன்னை வணங்குகிறான். **ஸூநீதி** என்பது உன் திருநாமம். பூர்ண சந்த்ரன் போல் குளிர்ச்சியானவள். குமாரி (நித்ய யௌவநமுடையவள்) ஶரணமடைந்த எனக்கு க்ருபை செய்தருள வேண்டும். உன்னை எப்பொழுதும் ஸித்தர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், வித்யாதரர்கள் துதிக்கிறார்கள். **ரமா** என்பது உன் திருநாமம். எம்பெருமான் ராமனின் பத்நி நீ ஆவாய். அனைத்து தேவர்களிலும் நீ சிறந்தவள். அனைத்து தேவ லோகப் பெண்களும் உனக்குப் பணிவிடை செய்கின்றனர். சரணமடைந்த என் மீது அருள் புரிவாயாக.

### மஹாலக்ஷ்மியே கருணையினால் சிபாரிசு செய்பவள்

லக்ஷ்மியே! நீ அளவில்லாத பாபங்களைப் போக்க வல்லவள். தீய குணங்களற்றவள். விஶேஷமான புண்யங்களால் கிடைக்கப் பெறுபவள். ப்ரணவத்தால் சொல்லப்படும் விஷயத்தில் ப்ரகாஶிப்பதாகச் சொல்லப்படுபவள் மஹா விஷ்ணுவின் பத்நி நீ! உனக்கு

நமஸ்காரம். நீயே **ஸித்தோபாயம்**. நீயே **ஸாத்யோபாயம், மந்த்ர ஸ்வரூபிணீ**, தன்னிகரற்றவள். அறிவுக்கு எட்டாத ரஹஸ்யமானவள். எல்லா இஷ்டங்களும் கிடைக்கப் பெற்றவள். **ப்ரணவஸ்வரூபிணீ**. பக்தர்களுக்கு ஸேவை ஸாதிப்பவள். ஞாநிகளால் த்யாநிக்கப்படுபவள். த்யாநமும் நீயே. மங்களகரமானவள். ஶரணமடைந்த எனக்கு மங்களங்களைத் தந்து அருள் புரிய வேண்டும். உலகங்களுக்கெல்லாம் ஆதரவானவள். நல்ல கதியான ஸ்ரீவைகுண்டத்தில் இருப்பவள். வேதாந்த ஞாந ஸ்வரூபிணீ. எம்பெருமானுடன் கொடி போல் இணைந்திருப்பவள். உலகங்களை எப்பொழுதும் நேரில் கடாக்ஷிப்பவள். மங்களங்கள் எல்லாம் புதையல் போல் கிடைக்குமிடம் நீ. ஶரணமடைந்த எனக்கு க்ஷேமத்தைக் கொடுத்தருள்வாய்.

### வேதங்களின் தலைவி

உன் தர்ஶநம் எல்லா பதங்களையும் தரும். எப்பொழுதும் நற்குணங்கள் நிறைந்தவள். ஞாநச் சுடராகிய வேதங்களின் ஶிரஸிலிருப்பவள். உன் மஹிமையின் எல்லை வேதங்களாலும் காண முடியாதது. உன் கடாக்ஷத்துக்கு என்னைப் பாத்திரமாக்கிக் கொள்.

### பார்வதி முதலியவர்களுக்கு ஶக்தியாயிருப்பவள்

**பார்வதி, இந்திராணி, கீர்த்தி, ஸரஸ்வதீ, ஞாநம் ஸ்வாஹா**, என்கிற பல வகை ஶக்தியாக இருப்பவள். உலகமனைத்தையும் தாங்கி நிற்பவள். உன் கடாக்ஷத்துக்கு என்னைப் பாத்திரமாக்கிக் கொள்.

### துதியால் மகிழ்ச்சியுற்ற லக்ஷ்மி அரசனின் விருப்பத்தைக் கேட்கிறாள்

இவ்வாறு அரசனின்; தோத்திரத்தால் மகிழ்ச்சியுற்ற **மஹாலக்ஷ்மி** அரசனைப் பார்த்துக் கூறினாள். உன் விருப்பத்தை நிறைவேற்றுகிறேன். அது என்ன? சொல்

**லக்ஷ்மி ஸுதர்ஶநம் பதித்த கொடிமரம் கொடுத்தல்**

அரசனும் தன் குலத்தைப் பற்றியும், தன்னைப் பற்றியும் பெரிய அஸுரனால் ஏற்பட்ட ஶ்ரமம் பற்றியும் எல்லாவற்றையும் எடுத்துரைத்தான். லக்ஷ்மியும் பயம் வேண்டாம் என்று பதிலுரைத்தாள். நான் இந்த உலகத்துக்கும் எல்லா வகை ஶக்திக்கும் ஆதாரமானவள். ஸுதர்ஶநத்தின் ஶக்தியால் ஶரணமடைந்தவர்களைக் காக்கிறேன். இந்தக் கொடியின் மூலம் பகைவனைக் கொல்வாய் என்று சொல்லிக் கொடியைக் கொடுத்தாள்.

**லக்ஷ்மி கொடுத்த கொடியின் மூலம் பகைவர்களை வென்று நிம்மதியான அரசாட்சியைப் பெற்றான்**

அரசனும் யந்த்ரத்தோடு கூடிய அந்தக் கொடியைப் பெற்றுத் தன் நாட்டுக்குச் சென்றான். மிகவும் பெரிய அஸுரர்கள் நிறைந்த படைகளை அவன் அதன் மூலம் ஜயித்தான். பிறகு சித்ரஶேகரன் அந்த அஸுரனையும் கொன்று இனிதே அரசாட்சி செய்து வந்தான்.

இவ்வாறாகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் ஸுதர்ஶந யந்த்ரம் இணைந்த கொடியின் மஹிமை** என்கிற
49 வது அத்யாயம் முற்றிற்று.



கீர்த்திமாலியின் சரித்திரம் என்கிற

# 50 வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி॥
*(விளக்கம் 18 வது அத்யாயத்தில் உள்ளது)*

## சொல்ல இருக்கும் பொருள்களைப் பற்றிப் பட்டியல்

**அஹிர்புத்ந்யர்:** தேவர்ஷியே! **கீர்த்திமாலி** என்பவன் எந்த முறைப்படி முன்னொரு காலத்தில் ஸ்வர்க லோகத்தை வெற்றி கண்டானோ, அந்த விஷயத்தைப் பற்றிச் சொல்கிறேன் கேளும்.

## பத்ரஶ்ருங்கன் அரசாட்சி புரிதல்

முன்னொரு காலத்தில் **விஶாலம்** என்கிற பட்டினத்தில் நல்ல ஶீலமுடையவனும், மிகவும் தர்ம சிந்தனை - செயல் உடையவனும் ஆகிய பத்ரஶ்ருங்கன் எனும் அரசன் இருந்தான். அவன் ஏழு தீவுகளைக் கொண்ட இந்தப் பெரிய பூமியைத் தன் சிறிய பட்டினம் போல் ஆண்டு வந்தான். அது போல் பத்தாயிரம் வருடங்கள் கழிந்தன.

## அவன் குமாரன் கீர்த்திமாலியின் சிறப்புகள் பற்றி விளக்கம்

அவன் மகன் கீர்த்திமாலி என்பவன் மிகவும் திமிர் கொண்டவனாகவும், ஶௌரனாகவும், தாமரைக் கண்ணனாகவும், மந்மதன் போல் அழகு உடையவனாகவும், உடல் வலிமை பெற்றவனாகவும், தந்நிகரற்றவனாகவும், எல்லா ஶாஸ்த்ரங்களிலும் தேர்ச்சி பெற்றவனாகவும், விநயம் (பணிவு) தெரிந்தவனாகவும், மிகவும் வாரி வழங்குபவனாகவும், வீரம் நிறைந்தவனாகவும், சொன்ன சொல் தவறாதவனாகவும், சண்டைகளில் புறங்காட்டாதவனாகவும், கம்பீரத் தோற்றமுள்ளவனாகவும், செல்வச் செருக்குடையவனாகவும், மேகத்தின் கர்ஜனை போன்ற குரல் வளம் பெற்றவனாகவும், வெற்றியையே விரும்புபவனாகவும், பகைவர்களை எரிப்பவனாகவும், மதம் கொண்ட யானை போல் இந்த உலகம் முழுவதும் உலாவி வந்தான்-

### தகப்பனாருக்குப் பின் அரசாட்சி செய்தல்

இப்படிப்பட்ட குணங்களையுடைய இவனுடைய தகப்பனார் மரணமடைந்தார். தகப்பனார் காலம் சென்ற பின், அழகிய தோற்றமுள்ள இவன் தன் தந்தைதையைப் போலவே இந்த பூலோகத்தை ஆண்டு வந்தான். உலகத்தில் நடக்கும் எல்லாச் செய்திகளையும் ஒற்றர்கள் சிலர் மூலம் அறிந்து வந்தான். தன் நாட்டில் ஏழு வகையான அங்கங்களில் செய்தியைத் தானே அறிந்து வந்தான்(**அங்கங்கள்:** அரசன், அமைச்சர்கள், நண்பர்கள், பொக்கிஷம், நாடு, கோட்டை, படைகள்)

### ஒரு முறை மறைந்து கொண்டு இரவில் சென்ற பொழுது நகரத்துக்கு வெளியில் ஒரு அந்தணனைக் கண்டான்

ஒரு ஸமயம் தனியாகவே வில்லுடன் மக்கள் பயமின்றி இஷ்டப்படிப் பேசும் பேச்சைக் கேட்க, இரவில் வெளிக் கிளம்பி நாற்புரமும் சென்றான். கடை வீதிகளிலும், தெருக்களிலும், நாற்சந்திகளிலும், வீடுகளிலும், நுழைவாயில்கள் அனைத்திலும், கோட்டைகளிலும், குளக்கரைகளிலும், காடுகளிலும், சாவடி, சத்திரம், கூடாரங்கள் இவைகளிலும், கோயில்களிலும், ஆயுதக் கிடங்குகளிலும், புண்யதீர்த்தக் கரைகளிலும், காடுகளிலும், பூங்காக்களிலும், உலாவும் பொழுது, நகரத்தின் வெளியில் ஓர் வஹ்நிமரத்தடியில் உட்கார்ந்திருந்த ஒரு அந்தணனைக் கண்டான். சுடர் விட்டு எரியும் நெருப்பு போல் எரிப்பவனும், உடம்பில் அலங்காரங்களுடன் கூடியவனும், அமைதி உள்ளவனும், **ஸுதர்ஶநத்தை** ஸாக்ஷாத்கரித்தவனும், விருப்பம் அனைத்தும் கிடைக்கப் பெற்றவனும், யோகத்தில் நிலை பெற்றவனும், தீய எண்ணங்கள் அற்றவனும் ஆகிய அவரைப் பயமோ கூச்சமோ இல்லாமல் கண்டான். வணக்கத்துடன் நமஸ்கரித்து அரசன் அவரைப் பின் வருமாறு கேட்டான்-

## அவரை அறியக் கேள்வி

ஸ்வாமிந்! தாங்கள் குற்றமற்றவர் என்று தெரிகிறது. தாங்கள் யார்? எதற்காக இங்கு மரத்தினடியில் உட்கார்ந்து இருக்கிறீர்? எங்கிருந்து வந்தீர்? எல்லாவற்றையும் நான் அறிய விரும்புகிறேன். சொல்லவேண்டும் என்றான்.

### யோக நிலையில் இருந்த அவர் அரசனின் கேள்வியை அறியாமல் மௌநமாக இருந்தார்

இத்தனைக் கேள்விகளை அரசன் கேட்டும் யோக நிலையில் இருந்த அவர், அரசன் சொன்ன விஷயங்களை அறியவில்லை. மீண்டும் மீண்டும் முன்பு பேசியது போலவே அரசன் கேட்டும் அவர் பதில் உரைக்கவில்லை.

### பிடிக்க முயன்ற அரசன் செயலற்றுப் போனான்-

கோபங் கொண்ட அரசன் அவரை வலுவில் பிடித்து உலுக்க முயன்றான். அப்பொழுது அந்த யோகியின் மஹிமையால் அரசன் செயலற்றவனாக ஆகிவிட்டான்.

### திகைத்துப் போன அரசன் துதிகளால் அந்தணனை மகிழ்வித்தான்

தான் செயலற்று இருப்பதை அறிந்து மிகவும் வியப்பு கொண்டான். அந்த முநிவரை நமஸ்காரம் செய்து பல வகையில் தோத்திரங்களால் மகிழ்வித்தான்.

### மகிழ்ச்சியடைந்த அந்தணர் தன் வரலாற்றை விளக்கினார்

மகிழ்ச்சியடைந்த அந்த யோகி அரசனிடம் பின் வருமாறு கூறினார் - **ஸாலக்ராமம்** என்று தன்னிகரற்ற விஷ்ணுவின் ஆலயம் ஒன்று இருக்கிறது. அங்கு **ஸுதர்ஶந** வடிவத்தில் ஜகந்நாயகனான **நாராயணன்** எப்பொழுதும் வாஸம் செய்கிறார். அங்குள்ள அசையும் பொருள்களோ அசையாப் பொருள்களோ, சக்ரத்தின் அடையாள முடையவையாக இருக்கும். அங்கு சென்றாலே போதும், எல்லா உயிரினங்களும், பாபங்கள் நீங்கப் பெற்றவையாக ஆகும். அங்கு ஜீவன்கள் உடலை விட்டுப் பிரிந்து தந்நிகரற்ற மோக்ஷத்தைப் பெறுகிறார்கள். அந்த தேஶத்தில் பிறந்து

பெரியோர்களால் போற்றப்பட்டு ஸுதர்ஶநத்தின் மஹிமையால் செய்ய வேண்டிய உபாயங்கள் அனைத்தையும் நான் செய்து முடித்தேன். அரசனே! இப்பொழுது நான் புஷ்கரம் தீர்த்தத்துக்குச் செல்கிறேன். இரவு வந்து விட்டதால் செல்வங்கள் நிறைந்த உன் நகரத்துக்கு வந்திருக்கிறேன். உன் கோட்டையின் கதவுகள் மூடப்பட்டு இருப்பதைக் கண்டு இந்த வஹ்நிமரத்தின் அடியில் தங்கினேன்.

## இந்தச் செய்தி அறிந்த அரசன் அந்தணரைத் தன் நகரத்துக்கு அழைத்துச் செல்லுதல்

இவ்வாறு செய்தி அறிந்த அரசன் அந்த உத்தம அந்தணரை மர்யாதை செய்து, தன் அழகிய நகரத்துக்கு அதிலும் விஷ்ணுவின் கோயிலுக்கு அழைத்துச் சென்றான். அந்த இரவு எல்லா வகை மர்யாதைகளுடன் அங்கு தங்கியிருந்த அந்த யோகி மறு நாள் காலையில் புஷ்கரத்தை நோக்கிப் புறப்பட்டார்.

## தனக்கு நல்ல விஷயங்களைச் சொல்லும்படி அரசன் வேண்டினான்

அரசனும் காலைக் கடன்களை முடித்திருந்த அந்த அந்தணரை நோக்கிப் பேசலானான். ''ஸ்வாமிந்! ஸாதுக்களின் தர்ஶநம் மிகவும் புனிதமானது. கோரிக்கைகள் அனைத்தையும் தருவது என்று நான் கேட்டிருக்கிறேன். ஆகையால் எனக்கு ஏதாவது நல் வழியைச் சொல்லியருள வேண்டும். இவ்வுலகத்தில் பகைவர் இல்லாத நிம்மதியும் மேலுலகத்தில் நித்யாநந்தத்தையும் நான் பெறுவதற்குத் தாங்கள் கருணையினால் குளிர்ந்த மனம் உடையவராகையால் சொல்லி அருள வேண்டும்'' என்றான்.

## அவர் அரசனுக்கு அங்கங்களோடு கூடிய ஸுதர்ஶந மந்த்ரத்தை உபதேஶித்தார்

நாரதமுநிவரே! பிறகு மகிழ்ச்சியடைந்த அந்த யோகி பக்தியுடன் இருந்த அரசனுக்கு ஆறு எழுத்துக்கள்

கொண்டதும் எல்லாப் பலன்களைத் தரவல்லதுமான ஸுதர்ஶந மந்த்ரத்தை அன்புடன் உபதேசித்தார். மேலும் **ப்ரவர்தகம், நிவர்தகம்** என்கிற இருவகை அஸ்த்ர மந்திரங்கள் எல்லாவற்றையும் ஸுதர்ஶந யந்த்ரத்தோடு கூடிய 50 வகையான அங்கங்களையும் உபதேஶித்து விட்டுத் தன் பயணத்தைத் தொடங்கினார்.

## அரசன் மந்த்ரோபதேஶம் செய்த ஆசார்யனுக்குத் தக்ஷிணை கொடுத்தான்

**நாரதமுநிவரே !** அரசனும் மிகவும் மகிழ்ச்சியடைந்து தக்ஷிணையாகப் பல பொருள்களைக் கொண்டு வந்தான். அநேகம் பஶுக்களையும், தங்கக் காசுகள் ஒரு கோடியும், ரத்நங்கள் நிரம்பிய தங்கப் பாத்ரங்கள் ஏழும், விலை உயர்ந்த பல வகை வஸ்த்ரங்களும், எட்டு க்ராமங்களும், பரம தார்மிகனான அந்த அரசன் குருவுக்கு ஸமர்ப்பித்தான்.

## குரு அவற்றை ஏற்றுக் கொள்ள மறுத்துத் தான் செல்ல வேண்டிய இடத்துக்குச் சென்றார்

அந்த அந்தணரோ தனக்காகக் கொண்டு வரப்பட்ட அந்த தக்ஷிணையை ஏற்க விரும்பவில்லை, ''அரசனே! இந்தப் பொருள்களால் எனக்கு ஆக வேண்டியது ஒன்றுமில்லை. நான் நினைத்தால் எதையும் பெறலாம். ஆகையால் இவற்றை உன் விருப்பப்படி யாருக்காவது கொடு'' என்றார். இதைக் கேட்டு அரசன், ''இதைத் தேவரீர் அவசியம் ஏற்றுக் கொள்ள வேண்டும். இல்லாவிடில் நான் ஸாதகநாக இருக்க முடியாது'' என்றான். அந்த அந்தணர் இதைக் கேட்டு அளவில்லாத வீர பராக்ரமங்கள் நிறைந்த அரசனிடம் கூறிஞர் - ''எனக்குக் கொடுக்க வேண்டிய பொருள்களையெல்லாம் ப்ராம்ஹணர்களுக்குக் கொடு'' என்றார். இவ்வாறு சொல்லி விட்டு அந்த யோகி புறப்பட்டார். அரசனும் அவரைப் பின் தொடர்ந்தான். குருவினால் திரும்பிச் செல்லும்படி ஆணையிடப்பட்ட அரசன் அந்த தநங்களையெல்லாம் ப்ராம்ஹணர்களுக்குக் கொடுத்தான்.

### தர்ம முறையில் அரசாண்டான்

அந்த யோகி சென்றபின் அரசன் அந்த தநங்களை ப்ராம்ஹணர்களுக்குக் கொடுத்து விட்டு இந்தக் கடல் சூழ்ந்த மண்ணுலகை இந்திரன் ஸ்வர்கத்தை ஆண்டது போல் ஆண்டு வந்தான். பொருள்கள் இன்பம் இவற்றையும், தர்மம் மோக்ஷம் இவற்றைப் பிரித்துப் பகலிலும் இரவிலும் காலத்தைக் அநுஸரித்துச் செய்து வந்தான். ஆட்சி ஸம்பந்தமான கார்யங்களில் எதையும் மீறி நடக்கவில்லை. இவ்வாறு மநுதர்மஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட தர்மங்களைச் செய்து கொண்டு, மக்களையும் தர்மத்தை அநுஸரித்துப் பாதுகாப்புச் செய்து மகிழ்வித்தான்.

### மந்த்ரிகளைக் கேட்டறிதல்

ஒரு நாள் அமைச்சர்கள் அனைவரையும் தர்பார் மண்டபத்துக்கு வரவழைத்துக் கேட்டான் - எல்லா தேஶங்களிலும் எல்லா அரசர்களுக்குள்ளும் மக்களிடையேயும் எனக்கு யார் யார் அநுகூலமாக இருக்கிறார்கள், அல்லது யார் யார் எதிராக இருக்கிறார்கள்? இதைச் சொல்லுங்கள். ஒற்றர்களைக் கண்ணாகக் கொண்டு நீங்கள் இந்த எல்லா விஷயங்களையும் அறிந்திருக்கிறீர்கள், என்றான்.

### மந்திரிகளின் பதில்

இவ்வாறு ஆணையிடப்பட்ட எல்லா மந்திரிகளும் கூறலானார்கள்- ''அரசே! பகைவர்களை அழிக்க வல்ல நீங்கள் ஆட்சி செய்து வரும் இந்தக் காலத்தில் ஸூர்யனைக் கண்ட இருள் போல் பகைவர்கள் யாவரும் அழிந்து போயினர், என்றனர்.

### பூமண்டலம் முழுதும் அநுகூலமாக இருப்பதாக விளக்கினர்

அரசே ! பகைவர்கள், நகரங்கள், கடல்கள், சூழ்ந்த பூமண்டலம் இப்பொழுது உங்களுக்கு அடங்கியே இருக்கிறது. அரசனே! தேவலோகத்தில் இருப்பது போல்

உங்களுடைய தர்பார் மண்டபத்திலும் அரசர்கள் கட்டுப்பாட்டில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். மக்களைப் பற்றிக் கேழ்க்க வேண்டுமா?

### தேவர்கள் வஶ்யப் படுவதில்லை

கந்தர்வர்களோ, தேவர்களோ, அஸுரர்களோ, நாகர்களோ யாருமே நாங்கள் எப்படி இருக்கிறோமோ அவர்களும் அவ்வாறு ஸேவை செய்வதில்லை. இனி உங்கள் விருப்பம்'' என்று விண்ணப்பம் செய்து அவர்கள் முடித்தனர்.

### அரசன் அமைச்சர்களிடம் தேவர் முதலியவர்களை வெல்லும் வழி என்ன என்று கேட்கிறான்

அதைக் கேட்டுக் கீர்த்திமாலி, தேவர் முதலியவர்களை வெல்ல வேண்டும் என்கிற விருப்பத்தினால் உணர்ச்சி வஶப்பட்டான். அதனால் மந்திரிகள் அனைவரிடம் பின் வருமாறு கூறினான் இவர்களை நாம் எப்படி வெல்வது? அவர்களோ பலமும் வீர்யமும் மிகுந்தவர்கள். பற்பல வகைகளில் போர் புரியும் திறமை படைத்தவர்கள். கர்வம் கொண்டவர்கள். மாயையால் மறைந்து செயல்படுபவர்கள். நமக்கு ஸமமாகவும், மிகவும் சிறப்புடையவர்களாகவும் இருப்பர். எல்லாவற்றுக்கும் மேலாக வேறு உலகத்தில் வஸிப்பவர்கள். இத்தகையவர் எப்படி நம் வஶமாகக் கூடும் என்பதைச் சொல்லுங்கள். தாமதம் வேண்டாம்'' என்றான்.

### மந்திரிகளின் பதில்

அரசனின் பேச்சைக் கேட்ட அந்த மந்திரிகள் அனைவரும் ஒருவருக்கொருவர் கலந்து யோசித்து ஒரே குரலில் பேசினர். ''இப்பொழுதே புறப்படலாம். போரில் அவர்களைக் கட்டாயம் வெல்வோம்'' என்றனர்.

### நமக்கு நல்ல வலிமை உள்ளது என்பதைத் தெளிவாக்கி அமைச்சர்கள் படையெடுப்புக்கான முயற்சியை இப்பொழுதே செய்வோம் என்றனர்

நம்முடைய நான்கு வகையான ஸேனைகள் மிகவும் வலிமை உள்ளன. அவற்றில் யானைகள் மேருமலை போல்

யாராலும் வெல்ல முடியாதவை. ஒவ்வொன்றுமே ஶத்ருக்களை அழிப்பதற்குப் போதுமானது. இத்தகைய யானைகள் 10 லக்ஷமுள்ளன. பகைவர்களை வெல்பவரே! திமிர் பிடித்த குதிரைகளோ 5 கோடி உள்ளன. அவ்வாறே தேர்கள் முழுமையாக 3 கோடி உள்ளன. நல்ல சிறந்த வீர்யமுள்ள தந்மாநம் நிறைந்தவர்களும், போரில் புறங்காட்டாதவர்களுமான ஶூரர்கள் நான்கு வகை. காலாட் படைகளோ 14 **அக்ஷௌஹிணீ** உள்ளன. (**அக்ஷௌஹிணீ** என்பது தேர்கள் 21,870; குதிரைகள் 65,610; யானைகள் 21,870; காலாட் படை1,09,350 - இது ஒரு **அக்ஷௌஹிணீ** ஆகும்.

அரசே! போரில் நம் கூர்மையான அஸ்த்ரங்கள் கணக்கில் அடங்காதவை. இவையெல்லாம் ஒரு பக்கம், மற்றொரு பக்கம் மிகவும் பலம் கொண்டவர், வலிமையில் சிறந்தவர் தாங்கள் என்று நாங்கள் நினைக்கிறோம். மேலும் அந்த யோகியிடமிருந்து தாங்கள் உத்தமமான அஸ்த்ரங்களைப் பெற்றிருக்கிறீர்கள். இவை எல்லாவற்றுடனும் சூழப்பட்ட, ப்ரளய காலத்தில் எல்லா உலகங்களையும் எரிக்க விரும்பும் ருத்ரன் போன்ற தங்களுக்கு எதிரில் யார் நிற்க முடியும்? எந்த எந்த உலகத்தை ஜயிக்க விருப்பமோ, நீண்ட தோள்களை உடைய அரசே! அங்கெல்லாம் செல்ல எங்களுக்கு உத்தரவிடுங்கள். தாமதம் வேண்டாம். வெற்றி உங்கள் கையில் நிச்சயம்.

**மந்த்ரிகளின் பேச்சினால் அரசன் முதலில் நாக லோகத்தை முற்றுகையிட்டான்**

மந்திரிகள் இவ்வாறு பேசியதைக் கேட்ட மஹா பல ஶாலியான கீர்த்திமாலி மிகவும் மகிழ்ச்சியுற்று, மந்திரிகள் அனைவரையும் வரவழைத்து ''என்னுடன் வரும் அந்த அந்த ஸேனை நாகலோகம் போகட்டும். நாகர்களுடன் இப்பொழுது சண்டையிடட்டும். நானும் மூல பலத்துடனும் வாஹநங்களுடனும் இப்பொழுதே புறப்படுகிறேன்'' என்று சொல்லிவிட்டு, அவர்களுடன் அரசன் புறப்பட்டான்.

### கருடாஸ்த்ரத்தின் மஹிமையால் நாகலோகத்தில் அரசன் வெற்றி கண்டான்

அங்கு அந்த நாகர்களுடன் மயிர்க் கூச்சல் ஏற்படும் படியான போர் நடந்தது. பிறகு விரைவிலேயே கருடனின் அந்த அஸ்த்ரத்தின் மஹிமையால் அரசன் வெற்றி கண்டான். நாகர்களிடமிருந்து ரத்நம் முதலியவற்றை மட்டும் பெற்றுக் கொண்டு அஸுரருடன் போர் புரிய விருப்பம் கொண்டான்.

### அஸுரர்களுடன் யுத்தம்

**நாரதமுநிவரே !** அஸுரர்களுடன் வெகு நாட்கள் போர் நடந்தது. அவர்களுடைய ஸேனைகளை அழித்து மேலான வெற்றியைப் பெற்றான்.

### யக்ஷர்கள் கந்தர்வர்கள் முதலியவர்களை வென்ற பின் தன் நகரத்துக்குத் திரும்பினான்

பிறகு யக்ஷர்களையும் கந்தர்வர்களையும் ஸித்தர்களையும் வித்யாதரர்களையும் எல்லாரையும் போரில் வென்று அவர்களை வலிமை மிக்க அரசன் தன் அடிமைகளாக்கிக் கொண்டு தன் நாடு திரும்பினான்.

### அங்கு தன்னைச் சூழ்ந்திருப்பவர்களுள் தேவர்களைக் காணாமல் இந்திரனுக்குச் செய்தி அனுப்பினான்

பிறகு தர்பார் மண்டபத்தில் வீற்றிருந்து, அரசர்களாலும், கந்தர்வர்களாலும், யக்ஷர்களாலும், அஸுரர்களாலும், நாகர்களாலும் சூழப்பட்டவனாய், சக்ரவர்த்தியான கீர்த்திமாலி அங்கு தேவர்களைக் காணாமையால் **மநோஜவம்** என்ற பெயருடைய கந்தர்வனிடம், பின் வருமாறு கூறினான்-''இப்பொழுதே ஸ்வர்கலோகம் சென்று இந்திரனிடம் நான் சொன்னேன் என்று சொல்- ''ஐராவதம் என்கிற யானையையும், வஜ்ராயுதத்தையையும், கற்பகத் தருவையும், எட்டு அப்ஸரப் பெண்மணிகளையும் எனக்காக உடனே அனுப்பு'' என்று. மநோஜவனும் அரசனுடைய ஆணையைப் புஷ்பமாலையைப் போல் தலையால் ஏற்று அமராவதி நகருக்குச் சென்றான்.

### அங்கு தர்பார் மண்டபத்தில் இந்திரனைக் கண்டான்

அழகியதும் மற்ற நகரங்களுக்கு மேலான உபமாநமாக உள்ள அந்தப் பட்டினத்துக்குள் சென்று அங்கு எட்டு வஸுக்களும், 11 ருத்ரர்களும், 12 ஆதித்யர்களும் சூழ்ந்து இருந்தவனும், அப்ஸரஸ்த்ரீகளால் வணங்கப்பட்டும் விஶ்வாவஸு முதலான ஸித்தர்களால் துதிக்கப்பட்டும், இந்திராணிக்குக் கணவனுமான இந்திரனை தர்பார் மண்டபத்தில் உட்கார்ந்திருக்க அவன் கண்டான். இந்திரன் நாட்யத்தைக் கண்டு ரஸிப்பதில் ஈடுபட்டிருப்பதைக் கண்டு, நாட்யம் முடிந்த பிறகு துதிக்கலானான்.

### இந்திரன் தூதனைக் காணுதல்

தேவர்களுக்கு அதிபதியான இந்திரன் மிகவும் மகிழ்ச்சி அடைந்து மநோஜவனை நோக்கினான்.

### இந்திரனிடம் தூதுவன் அரசனுடைய செய்தியைத் தெரிவித்தான்

இந்திரனுடைய கடாக்ஷத்தினால் தன்னைப் பாக்யஶாலி என்று நினைத்துக் கொண்டு, அந்த மநோஜவன் உடனே அரசனுடைய செய்தியை உள்ளபடியே தெரிவித்தான்- 'தேவர்களுக்கு அதிபதியான அரசே! கீர்த்திமாலி என்கிற புகழ் பெற்ற அரசன் பூலோகத்தில் இருப்பவன் தங்களுக்காக இந்தச் செய்தியைச் சொல்லும்படிக் கட்டளையிட்டான்''.

### தூதுவன் செய்தியை அப்படியே தெரிவித்தல்

''ஸ்வர்கலோகம் தவிர மற்ற எல்லா உலகங்களும் என்னால் ஜயிக்கப்பட்டு விட்டன. தேவாதி தேவனே! இப்பொழுது நான் உன்னைப் பார்க்க விரும்புகிறேன். நான் ஏறுவதற்காகச் சிறந்ததும் யாராலும் தடுக்க முடியாததுமான ஐராவதத்தையும், கற்பக வ்ருக்ஷத்தையும், வஜ்ராயுதத்தையும், எட்டு அப்ஸரப் பெண்களையும் எனக்கு இங்கே அனுப்பி வைக்க வேண்டும். தேவலோகாதிபதியே! இவ்வாறு அரசனால் உத்தரவு இடப்பட்டுள்ளது. இனித் தங்கள் சித்தம்'' என்று சொல்லி முடித்தான்.

### செய்தியைக் கேட்டு வெகுண்ட இந்திரன் தக்க செயல் செய்தான்

பிறகு இந்திரன் தேவர்கள் சூழ்ந்த தர்பார் மண்டபத்தில் சிறிது சிரித்து, அதைக் **கேலி** என்று அறிந்து கம்பீரமான குரலில் ''**வஜ்ரம், ஐராவதம்** என்கிற யானைகள் இரண்டையும் உனக்கு இப்பொழுது அனுப்புகிறேன். இங்கு வந்து மற்றவற்றைப் பெற்றுச் செல்'' என்று சொல்லி வஜ்ராயுதத்தையும் ஐராவதத்தையும் அனுப்பினான்.

### வஜ்ராயுதம் ஐராவதம் இவற்றால் கீர்த்திமாலியின் ஸேனை அழிதல்

இவை இரண்டும் புறப்பட்டுக் கீர்த்திமாலியின் பெரிய பட்டினத்தை அடைந்தன. மஹர்ஷியே! ஐராவதம் அங்கு சென்று வஜ்ராயுதத்தைத் தன் கையில் எடுத்துக் கொண்டு, தான் மறைந்திருந்து அவனுடைய ஸேனையை அழித்தது.

### பீதியடைந்த மக்கள் அரசனிடம் அந்தச் செய்தியைக் கூறினர்

யானைகள், குதிரைகள், காலாட் படைகள் நிறைந்த ஸேனைகள் எல்லாம் அழிக்கப்பட்ட பொழுது பயம் கொண்ட நாட்டு மக்கள் அனைவரும் செய்தியை அரசனுக்குத் தெரிவித்தனர். ''அரசே! ஸாமத்திலிருந்து பிறந்த யானைகள் கொல்லப்பட்டுத் தரையில் கிடக்கின்றன. அவ்வாறே உத்தமமான குதிரைகளும், சூரர்களும் அழகு மிகுந்த வீரர்களும் கொல்லப்பட்டிருக்கின்றனர். காரணம் தெரியவில்லை'' என்றனர் .

### ஸேனைகள் அழிந்ததைக் கேட்டு வருந்திய அரசன் புரோஹிதரிடம் கேட்டான்

இதைக் கேட்டுப் பெரும் துயரத்தில் ஆழ்ந்த மஹாராஜன் புரோஹிதரை வரவழைத்துப் பின் வருமாறு சொன்னான்- ''ப்ராம்ஹணோத்தமரே! யானைகளும், குதிரைகளும், வீரர்களும் காரணம் தெரியாமல் கொல்லப்பட்டிருக்கிறார்கள். அவர்களிடையே நோய் வந்ததாகவும் தென்பட வில்லை. திடீரென்று ஏற்பட்ட

ஜ்வரமாகவும் தெரியவில்லை. எதிரிகளால் ஏவப்பட்ட செயல்களும் இருப்பதாக ஆராய்ந்தும் தெரியவில்லை. இது என்ன என்று யோசிக்க வேண்டும். என் மனம் குழம்புகிறது'' என்றான்.

### புரோஹிதர் தேவர்களின் கோபமே காரணம் என்று கூறுகிறார்

இவ்வாறு அரசன் சொன்னதைக் கேட்டுப் புரோஹிதரும் சிந்திக்கலானார். சிந்தித்து இவ்வாறு கூறினார் - எதிரிகளை மாய்க்க வல்ல அரசே! தேவர்களின் கோபத்தால் வந்த வினை இது என்று நினைக்கிறேன். துயரத்தில் ஆழ்ந்து விட வேண்டாம்'' என்றார்.

### இந்நேரத்தில் மநோஜவன் திரும்பி வந்தான்

இவ்வாறு அவ்விருவரும் சிந்தித்துக் கொண்டிருக்கும் பொழுதே மநோஜவன் அங்கு வந்தான். வணங்கி அரசனருகில் கை குவித்து நின்றான்.

### மநோஜவனை அரசன் கேட்டான்

''மநோஜவனே! நான் தெரிவித்த உத்தமமான நான்கு பொருள்களைக் கொண்டு வந்தாயா? இந்திரன் என்ன சொன்னான்? எல்லாவற்றையும் உடனே சொல்'' என்று அரசன் கேட்டான்.

### மநோஜவன் அரசனிடம் கூறுகிறான்

இவ்வாறு கேட்கப் பட்ட மநோஜவனும் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் கூறினான். தான் அரசன் கூறியதைத் தெரிவித்ததையும், அதனால் இந்திரன் சிரித்ததையும், வஜ்ரத்தையும், ஐராவதத்தையும் அவன் அனுப்பியதையும், அதன் பின் அவன் சொன்ன வார்த்தைகளையும் சொன்னான்.

### அரசன் ஐராவதத்தைக் கட்டுப்படுத்துதல்

இவ்வாறு அவனால் தெரிவிக்கப்பட்ட போது, அரசன் இது ஐராவதத்தின் வேலை தான் என்று தீர்மானித்து, அதற்கு

உடனே செய்யப்பட வேண்டிய பரிஹாரம் பற்றிப் புரோஹிதருடன் ஆலோசித்து, ஐராவதத்தை விரட்டி அடிக்கக் கூடிய உத்தமான வாரணாஸ்த்ரத்தை ஏவினான். அந்த அஸ்த்ரமும் யானை மீது மோதிற்று. அதனால் அந்த யானை செயலற்று நின்று விட்டது.

**இச் செய்தியை அறிந்த இந்திரன் தேவஸைந்யத்தைப் போருக்கு அனுப்பினான்**

ஶக்தி மிகுந்த அஸ்த்ரத்தினால் ஐராவதமும் வஜ்ராயுதமும் செயலற்றுப் போய் விட்ட செய்தியை ஐராவதத்துடன் பின் சென்ற தேவர்கள் தெரிவித்தார்கள். அதைக் கேட்ட இந்திரன் மிகவும் சீற்றமடைந்து மேலும் போருக்குத் தயார் செய்ய முனைந்தான். இந்திரன் பரபரப்புடன் இருப்பதைக் கண்டு தேவர்கள் கலக்கமடைந்தனர். அவனால் அனுப்பப்பட்ட வீரர்கள் அனைவரும் அந்த அரசனின் பட்டினத்துக்குச் சென்றனர். அந்த தேவஸேனை ப்ரளய காலத்தில் கொந்தளிக்கும் கடல் போல் இருந்தது.

**பிறகு தேவஸேனைக்கும் மனித ஸேனைக்கும் கடும் போர் மூண்டது**

இதைக் கண்ட அரசன் உடனே தன் ஸேனைகளுடன் நகரத்திலிருந்து வெளியில் வந்தான். பிறகு தேவஸேனைக்கும் அரசன் ஸேனைக்கும் கடும் போர் மூண்டது.

**தொடங்கிய போரின் வர்ணனை**

இதற்கு முன் கண்டிராத **ஹா ஹா** என்ற கூச்சலுடன் கூடிய பயத்தைத் தரும் யுத்தம் மூண்டது. தேவலோகத்துத் துந்துபி வாத்யத்தின் ஒலிகளாலும், சங்கு, பேரி இவைகளின் ஒலிகளாலும், கர்ஜனைகளாலும், கை தட்டுதலாலும், ஆகாயமே நிரம்பியது. யானைகள் யானைகளுடனும், காலாட்கள் காலாட்களுடனும், தேரில் உள்ளவர்கள் தேரில் உள்ளவர்களுடனும், குதிரைகள் குதிரைகளுடனும் ஒருவருக்கொருவர் போரிட்டனர். அம்புகளாலும், கதை

(உழல்தடி)களாலும், ஶூலங்களாலும், வாள்களாலும், தடிகளாலும், விற்களாலும், ஶக்தி ஆயுதங்களாலும், கத்திகளாலும், ஈட்டிகளாலும், வேல்களாலும், கோடாலிகளாலும், இப்படியாகப் பல வகை ஆயுதங்களைக் கொண்டு அவர்கள் ஒருவருக்கொருவர் அடித்துக் கொண்டனர். சிலர் தலை இழந்தவர்களாகவும், சிலர் எதிரிகளால் மார்பில் வெட்டப் பட்டவர்களாகவும், சிலரது ஆயுதங்கள் துண்டிக்கப்பட்டவையாகவும், சிலர் வெட்டப்பட்ட மார்புடனும், சில யானைகள் துதிக்கை வெட்டப்பட்டவைகளாகவும், சில யானைகள் கத்தியால் பிளக்கப்பட்ட தலைகளுடனும், குதிரைகள் ஈட்டிகளால் மார்பில் வெட்டுண்டவைகளாகவும், காணப்பட்டன. யானைகள், தேரில் பூட்டிய குதிரைகள் இவைகளிலிருந்து பெருகிய ரத்தம் வெள்ளம் போல் பாய்ந்தது. போர்க்களங்கள் முழுதும் எங்கும் வெட்டப்பட்ட ஆயுதங்கள் நிறைந்ததாகக் காணப்பட்டன.

### இந்திரன் ஸேநாதிபதியை ஆணையிடுதல்

இவ்வாறு போர் நடந்து கொண்டிருக்கையில் வெற்றியை விரும்பிய இந்திரன் தேவர்களின் ஸேநாபதிகளை மேலும் விறுவிறுப்பாகச் செயல்படும்படி ஏவினான்.

### தேவஸேநாபதிகளின் தற்கால வெற்றி

அவனால் ஆணையிடப் பட்ட அந்த தேவஸேநாபதிகள் அரசனுடைய ஸேனைகளை விரட்டியடித்து உடனே வெற்றி பெற்றனர். பிறகு அரசன் மிகவும் கோபம் கொண்டான்.

### அரசன் உத்தமமான அஸ்த்ரத்தை ஏவுதல்

தன் ஸேனை அழிந்தவுடன் அரசன் உத்தமமான அஸ்த்ரங்களை ஏவினான். மஹாமுநிவரே ! **ஆக்நேயம்** முதலிய அஸ்த்ரங்கள் ஏவப்பட்டன.

## இந்திரனால் தடுக்கப்பட்டு அரசன் ஸுதர்ஶந விதாநம் அமைத்தல்

கோபங் கொண்ட இந்திரன் பதில் அஸ்த்ரங்களைக் கொண்டு தடுத்தான். பிறகு வருத்தம் கொண்ட கீர்த்திமாலி, யோகி (ப்ராம்ஹணன்) தனக்குக் கொடுத்த விமாநத்தை நினைத்தான். அந்த விமாநமும் ஸுதர்ஶந மஹா யந்திரத்தோடு இணைக்கப்பட்டதும், விதாநத்தோடு கூடியதாகவும் செய்யப்பட்டு அதன் நிழலில் அரசன் உட்கார்ந்தான்.

## அரசன் ஏவிய விஷ்ணு சக்ரத்தால் இந்திரன் ஸேனை பின்வாங்கியது

அரசன் பெரிய அஸ்த்ரங்களை உண்டு பண்ணக் கூடிய உத்தமமான **விஷ்ணு சக்ரத்தை** ஏவினான். அது தன் ஒளியால் ஆகாயம் முழுவதையும் நிரப்புவதாக விளங்கிற்று. அதனுடைய மஹிமையால் தேவர்கள் அனைவரும் விரட்டியடிக்கப்பட்டனர். நாரத முநிவரே ! தேவர்கள் அனைவரும் அதற்குப் பணிந்துச் செயலற்றவர்களாக ஆயினர்.

## இந்திரன் ப்ரயோகித்த அஸ்த்ரங்களும் விஷ்ணுவின் சக்ரத்தில் ஒடுங்கின

பிறகு இந்திரன் கோபம் கொண்டு உத்தமமான பல அஸ்த்ரங்களை ப்ரயோகித்தான். அவையனைத்தும் வெளியில் தோன்றி **விஷ்ணு**வின் சக்ரத்தில் ஒடுங்கின. அனைத்து அஸ்த்ரங்களையும் தோற்றுவிக்க வல்ல அந்த **விஷ்ணு சக்ரத்தில்** விட்டில் பூச்சிகள் தீயில் விழுந்து மடிவது போல் ஆயின. பிறகு இந்திரன் எல்லா ஆயுதங்களையும் மேலும் மேலும் வீசினான். அவை அனைத்தும் ஆறுகள் கடலில் விழுவது போல் **விஷ்ணு**சக்ரத்தில் விழுந்து ஒடுங்கின.

### வஜ்ராயுதத்தாலும் ஒன்றும் செய்ய முடியவில்லை

பிறகு மிகவும் கோபம் கொண்ட இந்திரன் தேவர்களால் விசேஷமாகப் பூஜிக்கப்பட்ட வஜ்ராரயுதத்தை ஏவினான். அதுவும் அந்த **விஷ்ணு சக்ரத்தில்** சென்று மறைந்தது.

### இந்திரன் அரசனுடன் கலந்து பேசினான்

அதைக் கண்ட இந்த்ரன் வியப்புடன் அரசன் அருகில் சென்றான். கீர்த்திமாலியும் எதிரில் விமானத்தில் இருக்கும் இந்த்ரனைக் கண்டு வணங்கி அழகிய சொற்களால் துதி பாடினான். பிறகு மகிழ்ச்சி அடைந்த இந்த்ரன் அரசனிடம் பின் வருமாறு கூறினான். ''முன்பு நீ விடுத்த அஸ்த்ரங்கள் அனைத்தும் பயனற்றுப் போய்விட்டன. இப்பொழுதோ நேர் மாறாக உன் அஸ்த்ரம் விளங்குகிறது. இதற்கு என்ன காரணம் சொல்'' என்றான். அரசனும் ''தேவேந்த்ரா ! **ஸுதர்ஶந மஹாயந்த்ரத்**தோடு இணைக்கப்பட்ட மஹிமையால் எனக்குக் கிடைத்தது இந்த வெற்றி எனத் தெரிந்து கொள் என்றான்.

### அரசனுக்கும் இந்த்ரனுக்கும் தோழமை ஏற்பட்டுத் தங்கள் இடங்களுக்குச் சென்றனர்

மஹாராஜனே ! இனி நம்மிருவரிடையே தோழமை ஏற்படட்டும். என்னுடையது எல்லாம் உனதே. உனது எல்லாம் என்னுடையது என்று சொல்லி இந்த்ரன் தன் ஸேனைகளுடன், ஆயுதங்களுடனும், வாஹநங்களுடனும் ஸ்வர்கம் சென்றான். கீர்த்திமாலியும் மகிழ்ச்சியடைந்து தன் நகரம் சென்றான்.

இவ்வாறாகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யில் கீர்த்திமாலியின்
வரலாறு என்கிற 50வது அத்யாயம் முற்றிற்று.

★ ★ ★

## ப்ரணவம் முதலிய பீஜாக்ஷரங்களின் ஸ்வரூபம் முதலியவற்றின் விளக்கம் என்கிற

# 51வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥

*(விளக்கம் 18ம் அத்யாயத்தில் உள்ளது)*

### ப்ரணவம் முதலிய மந்த்ரங்களின் பொருள் பற்றிக்கேள்வி

**நாரதர்:** சென்றது, வரப் போகிறது அனைத்துக்கும் தலைவரும், **பகன்** கண்ணை அழித்தவருமான ஸ்வாமிந்! ஶங்கரனே! ஸாதகர்களின் நன்மைக்காக, பல வகைத் தோற்றமுடையதும், பல மந்த்ரங்களின் ஸ்வரூபத்தில் உள்ளதும், பல வகை ஶக்திகளோடு கூடியதுமான யந்த்ரம் தேவரீரால் விளக்கப்பட்டது. பல அஸ்த்ரங்கள், ப்ரயோக ஸம்ஹாரங்களோடு கூட விளக்கப்பட்டன. உத்தமமான மஹாபிஷேசநம் என்கிற முறையும் கூறப்பட்டது. ஶ்ரமங்களை நீக்கும் மிகப் பெரிய ஶாந்தியும் சொல்லப்பட்டது. அஸ்த்ரங்களின் சக்தி மந்த்ரங்கள் மூலம் பல வகையாகச் சொல்லப்பட்டது. இதற்கெல்லாம் பல வகைப் பலன்களுடன் கூடியதும், சக்தி மிகுந்தவையும், ஆகிய யந்த்ரங்களே காரணம். ப்ரணவம் முதலிய அந்த மந்த்ரங்கள் தேவரீரால் முன்பு சொல்லப்பட்டன. ஶங்கரரே! அவற்றின் உட் கருத்தைச் சொல்லி அருள வேண்டும். எந்த ஒரு ஞானம் மிகவும் சிறந்தது என்று சொல்லப்படுகிறதோ, ஸகல ஶாஸ்த்ரங்களின் கருத்தாக உள்ளதோ, அந்த ஞானம் எல்லாம் தேவரீர் மனத்தில் அடங்கியுள்ளது. தேவரீர் நித்யராகவும் ஸர்வக்ஞராகவும் உள்ளவர் அன்றோ!

### பதில் தொடக்கம்

**அஹிர்புத்ந்யர்:** நாரதரே! மந்த்ரங்களின் அர்த்தத்தினால் ஏற்படும் மஹிமையை உள்ளபடி சொல்கிறேன், கேளும். இதை அறிவதன் மூலம் மனிதன் எப்பொழுதும் **ஸர்வக்ஞன்**

என்கிற பெருமையைப் பெறுவான் (**ஸர்வக்ஞன்**-எல்லாம் அறிந்தவன்)

## ப்ரணவம் எல்லாவற்றிலும் சிறந்தது

**தாரகம்** என்பதின் பொருள் எல்லா வார்த்தைகளின் ஸாரம் இதுவே என்பதாகும். இதிலிருந்தே எல்லா வார்த்தைகளும் பிறக்கின்றன. இதிலேயே ஒடுங்குகின்றன. இதனால் தோற்றுவிக்கப்படும் வார்த்தைகள் தம்முடைய கருத்தைச் சிறப்பாகத் தெரிவிக்கின்றன.

## மந்த்ரத்தின் மூன்று விதப் பொருள்கள்

மந்த்ரத்துக்கு **ஸ்தூலம், ஸூக்ஷ்மம், பரம்** என்று மூன்று வகைக் கருத்துகள் உண்டு.

## ஸ்தூலம் முதலியவற்றின் பொதுவான பொருள்

**ஸ்தூலம்** உடன் இருக்கும் வார்த்தைகளின் ஏற்படும் கருத்து. **ஸூக்ஷ்மம்** என்பது, இதன் பதங்களைப் பிரிப்பதனால் அறியப்படும் பொருள். **பரம்** என்பது அளவிட முடியாதது என்பது போன்ற கருத்துக்களால் அந்த எழுத்துக்கள் மூலம் அறியப்படுகிறது.

### ஸ்தூலலக்ஷணம்

பதங்களின் சேர்க்கையால் நிகண்டு மூலம் அறியப்படும் ஸம்பந்தங்களைக் கொண்டு அதனதன் சரியான பொருளைச் சொல்வதன் மூலம் பிரிக்க முடியாத நிலை என்கிற புருஷார்த்தம் **ஸம்ஸர்கம்** என்று சொல்லப்படுகிறது.

### ஸூக்ஷ்மலக்ஷணம்

அதன் ஸ்வரூபத்தை யோசிப்பதன் மூலம் எந்தப் பொருள் அடிக்கடி நம்மால் உணரப்படுகிறதோ அது யோகம் என்கிற ஶக்தியால் கிடைக்கின்றது. அதுவே ஞாநிகளால் **ஸூக்ஷ்மம்** என்று பேசப்பட்டது.

### பரலக்ஷணம்

எழுத்துக்களிலிருந்து கிடைக்கும் **அப்ரமேயம்** முதலிய கருத்து, பெரியோர்களால் **பரம்** என்று சொல்லப்பட்டது. இவ்வாறு மூன்று பொருள்களின் தத்வம் கூறப்படுகிறது.

## ப்ரணவத்துக்கு ஸ்தூலமான பொருளைக் காண்பிக்கிறார்

இதற்குள்ளேயே இந்த உலகமெல்லாம் இணைக்கப்பட்டும் அளக்கப்பட்டும் உள்ளது என்பது ஸ்தூலமான பொருள். **ஓ** என்பதாலும் **ம்** என்கிற மகாரத்தாலும், ப்ரணவத்துக்குள்ள இணைப்பாகும். இந்த இரண்டு எழுத்துக்களும் **ஓதம்** என்பதையும், **மிதம்** என்பதையும் காட்டுகின்றன. பகவானைத் தவிர எவையெல்லாம் உள்ளனவோ, அவை **மிதம்** என்று சொல்லப்படுகின்றன. ஶக்தியோடு கூடிய பகவான் இந்த ப்ரணவத்தின் பொருள். அவருடைய ஶக்தி மலர்கிறது என்பது அவர் செய்யப்பட வேண்டும் என்று நினைக்கும் எண்ணமாகும். இதை உனக்கு முன்பே சொல்லியிருக்கிறேன். அவற்றில் ஶுத்தேதர ஸ்ருஷ்டியாகிற **லீலாவிபூதி** என்பதே செய்யப்பட வேண்டியதாக நினைத்த விஷயம். பகவானுடைய தடுக்க முடியாத அந்த ஸங்கல்பம் ஸுதர்ஶநமாகும். கார்யம், காரணம் என்கிற வகையில் உள்ள இந்த உலகமெல்லாம் **மிதம்** என்று கருதப்படுகிறது. நூலில் கோற்கப்பட்ட மணிகள் போலும் அளக்கப்பட்டதுமானது போலும் உள்ளது. அது போல நித்யனான எம்பெருமானிடத்தில் கோற்கப்பட்டதாகவும் அளக்கப் பட்டதாகவும் இவை உள்ளன. காக்கிறார் என்பது உள்ளே புகுந்து இருக்கிறார் என்பதும், புகுதலும் நிறைந்திருத்தலும் தன்னில் ஒடுக்கிக் கொள்வதுமாகும். தேவர்களுக்கு அதிபதியான எம்பெருமானிடம் அளக்கப்பட்டும் புகரப்பட்டும் என்று சொல்வது தண்ணீரில் பூமியின் பரமாணு அடங்கியது என்று சொல்வது போலாகும். மணிகளில் நூல் நுழைந்திருப்பது போல் தேவதேவனான விஷ்ணு, பொருள்களில் நுழைந்து இருக்கிறார். இதுவே ப்ரணவத்தின் ஸ்தூலமான பொருள். இனி ஸூக்ஷ்மார்த்தத்தைச் சொல்கிறேன்.

## ஸூக்ஷ்மார்த்த நிரூபணம்

மூன்று வகை ஶக்திகள், படைத்தலையும், காத்தலையும், அழித்தலையும் செய்கின்றன. இவை

மூன்றுமே முழுமையான பகவானுடைய ஶக்தியில் ஒரு பாகமாகும்.

### ப்ரணவாக்ஷரத்தில் மூன்று வகை ஶக்திகள்

அகார, உகார, மகாரம் என்கிற இந்த மூன்று அக்ஷரங்களின் உருவத்தில் இருப்பவை அற்புதமான ஶக்திகளாகும்.

### ஒவ்வொன்றின் பொருள்

விஶ்வம் என்கிற பெயருடையது அகார ஶக்தி. உகாரத்திலிருந்து கிடைப்பது தேஜஸ் ஶக்தி. மகார ஶக்தி **ப்ராக்ஞம்** எனப்படுகிறது. இவற்றின் ஸ்வரூபத்தைப் பற்றி மேலும் சொல்கிறேன், கேளும்.

### விஶ்வம் என்பது அநிருத்தனின் உருவத்தைக் குறிக்கும்

**விஶ்வம்** என்பது எம்பெருமானுடைய 19 வகை ஶக்திகளைக் குறிக்கும். (நடுவில் யானை முகமும், இரு பக்கங்களிலும் 9+9 மனித முகங்களும்.)

### அநிருத்தனே சில ஸ்தாநங்களில் இருப்பதன் மூலம் சில போகப் பொருள்களை விளக்குகிறார்

பல வகைப் படைப்புகளில் இருக்கும் சக்திகள் போல் விழித்துக் கொண்டு எல்லாவற்றையும் அநுபவிக்கிறது. த்ரவ்யம், குணம், கர்ம (க்ரியை) உருவமான பல வகை ஜாதிகளோடு கூடியதுமான ஸ்தூலமான விஶ்வத்தை உண்டு பண்ணுகிறது.

### ப்ரத்யும்நன், அவர் படைக்கும் பொருள்கள், இடங்கள் இவற்றின் விளக்கம்

**அந்த:கரணம்** என்கிற பெயருடைய ஸூக்ஷ்மமான தத்வம் அதே உலகத்தை உகாரத்திலிருக்கும் தேஜோமயமான நுகர் பொருள்களை உண்டு பண்ணுகிறது.

### ஸங்கர்ஷணன் படைக்கும் பொருள்கள் விளக்கம்

இதே உலகத்தைச் சுருங்க வைத்து **ப்ராக்ஞா** என்கிற ஸுஷுப்தி ஸ்தாநத்தில் பராஶக்தியை உண்டு பண்ணுகிறது.

உகாரத்தில் முன்பு சொல்லப்பட்ட ஸூக்ஷ்மமான ஶக்தி **ஸூக்ஷ்மா, ஸ்வாபிநீ,** மூன்று முகங்களையுடையது. மகாரத்திலிருக்கும் சக்தி **நிரஞ்ஜநா** எனப்படும் ஆநந்தத்தை விளக்கும்.

**அநிருத்தன் ஸ்தூல தேஹத்தின் தேவதை**

**விஶ்வா** என்பது ஸ்தூலமான சரீரத்தை இயக்கிக் கொண்டு செயல்படுகிறது.

**ப்ரத்யும்நன் ஸூக்ஷ்ம தேஹத்தை இயக்கிச் செயல்படுகிறார்**

ஸூக்ஷ்மமான எட்டு வகை ஶரீரங்களுக்குத் தேவதையாக இருந்து ப்ரத்யும்நன் செயல்படுகிறார்.

**ஸங்கர்ஷணனின் செயல்**

**ப்ராக்ஞா** என்பது உத்தமமான ஆநந்தத்திலிருந்து பிறக்கும். இது சரீரத்தில் இருந்து கொண்டு இயங்குகிறது.

**அநிருத்தரின் வெளிப்புறத் தோற்றம்**

உலகத்தின் ஸ்தூல தஶை (மிகப் பெரியது) என்பது வெளியிலிருக்கும் கண், காது முதலிய ப்ரமாணங்களை ஏராளமாகக் கொண்டதாக உள்ளது.

**ப்ரத்யும்நனின் ஸூக்ஷ்ம நிலை**

அதற்கு **ஸூக்ஷ்ம நிலை** என்பது **அந்த:கரணம்** (மநம்) என்கிற இடத்திலிருக்கும்.

**ஸங்கர்ஷணன் ஆநந்தமயன்**

**விஶ்வம்** என்கிற அந்த ஸங்கர்ஷண மூர்த்திக்குப் பரா என்கிற நிலை எப்பொழுதுமே ஆநந்தமாக இருத்தல்.

**ஸ்தூலம் முதலிய மூன்று நிலைகள் அநிருத்தன் முதலிய ஶக்திக்கு ப்ரீதிகள்**

இந்த மூன்று நிலைகளும் மூன்று வகை ஶக்திகளை இயக்கி அநிருத்தன் முதலியவர்களுக்கு போக்யத்தைக் கொடுக்கின்றன. அநிருத்தன் முதலியவர்களை **போக்த்ரு ஶக்தி** என்று நினைத்தல் வேண்டும்.

### வாஸுதேவன் என்கிற நான்காவது ஶக்தி நாதத்தின் பொருளாகும்

மகாரத்திலிருந்து பிறந்ததும் அர்த்த மாத்ரத்தில் இருப்பதுமான எந்த ஒரு ஶக்தி நன்கு புலப்படுகிறதோ, அது உள்ளே இருக்கும் வாஸுதேவ ரூபமான ஶக்தி என்றும், நன்றாகத் தெளிவில்லாத ஶக்தி என்றும் தெரிந்து கொள்ளும்.

### விவரிக்க இயலாத பகவத் ஶக்தி

இரண்டரை மாத்ராகாரமுள்ள அந்த மூன்று ஶக்திகள் ஒடுங்கும் பொழுது எது ப்ரகாஶிக்கிறதோ அதை உச்சாரணத்தில் வராததும் **நிரஞ்ஜந**மான (வாஸனையற்றது) பகவானின் **ஶக்தி** என்று அறிந்து கொள்ளும்.

### நான்கு ஶக்திகளையும் ஒடுக்குவிக்கும் முறை

**ஓம்** என்று தெளிவாக உச்சரித்துக்கொண்டு, **அ** காரம் முதலிய மூன்று எழுத்துக்களையும் வரிசையாக லயிக்கப் பண்ண வேண்டும். நான்கு வகை ஶக்திகளும் அவற்றின் ஒவ்வொன்றின் முன் முன் ஸ்தாநங்களில் ஒடுங்குவதாய்க் கருதப்படுகின்றன.

### அசைவற்ற நிலையான அந்த ஶக்தி ஐந்தாவது நிலையாகும்

எது ஒன்று இல்லை போல் தோன்றுகிறதோ, ஸத்துமில்லாமல், அஸத்துமில்லாமல் இருக்கிறதோ அது எல்லாவற்றையும் விழுங்குவதான ஐந்தாவது நிலையாகும்.

### ப்ரணவாப்யாஸ விஶேஷம்

**ஓம்** என்று நன்றாக உச்சரித்துக் கொண்டு சிறிது சிறிதாக அடங்கிப் போகின்றவனுக்கு, ப்ரகாஶிப்பதும், ப்ரகாஶ மில்லாததுமான அந்த ஶக்தி உள்ளே இயங்கும்.

### ஶக்தியின் லக்ஷ்மி உருவம்

வேறு யாருக்கும் உரியதாக இல்லாத அந்த ஶக்தி விஷ்ணுவைச் சார்ந்திருக்கும் அநாதியான மஹாலக்ஷ்மி ஆகும். கௌரீ என்றும், ஸரஸ்வதீ என்றும், தேநு என்றும்

ஒலிப்பதும் ஒலிக்காததுமான நிலையாகும். முனிவரே ! ஓங்காரத்தைக் கேட்பவனுக்கு இந்த நிலை உள்ளே தானாகவே கிடைக்கும்.

### 'பவத்' நிலையிலுள்ள பகவானிடம் லக்ஷ்மீபாவம் நிலை பெறுதல்

நித்யமாயும், வாஸனையற்றதாயும், ஶுத்தமாகவும், கலைகளோ விகல்பங்களோ இல்லாததுமான **பவிதா**என்கிற விஷ்ணுவிடம் (ப்ரம்மத்தினிடம்) இந்த மஹாலக்ஷ்மி **பாவ** உருவத்துடன் தெளிவாக இருக்கிறாள்.

### புராணங்களில் சொல்லப்பட்ட ப்ரம்மா முதலிய நான்கு நிலைகளுடன் லக்ஷ்மீ ஐந்தாவது நிலை

சதுர்முக ப்ரம்மா, விஷ்ணு, ஶிவன், உருவமோ பெயரோ அற்ற நிலை என்கிற நான்கு நிலைகளுடன் சேர்த்துச் சொல்லப்படுகிற அந்த **லக்ஷ்மி** ஐந்தாவது நிலையாக இருக்கிறாள்.

### பாஶுபத மதத்தில் லக்ஷ்மி

இதே **ஶக்தி** பஶுபதி மதத்தில் **ஈஶா** என்றும், **வித்யா** என்றும், **ஶிவா** என்றும் விளங்குகிறது.

### ஸாங்க்ய யோக மதத்தில் லக்ஷ்மி

**நாரதரே ! வ்யக்தா** என்றும், **அவ்யக்தா** என்றும், **புருஷன்** என்றும், **காலம்** என்றும் நான்கு நிலைகளில் இருப்பதாக ஸாங்க்யத்திலும் யோகத்திலும் இதே **ஶக்தி** கூறப்படுகிறது.

### லக்ஷ்மியுடன் கூடிய பரப்ரம்மமே முக்தர்களால் அடையப்படுகிறது

இந்த ஜீவன் ஐந்தாவது ஶக்தியான மஹாலக்ஷ்மியை பகவானின் ஸமீபத்தில் அடைந்து ஓய்ந்து போகிறானோ, அதுவே தான் பரப்ரம்மம், தேஜஸ், அதுவே விஷ்ணுவின் ஸாயுஜ்யம்.

**சொன்ன விஷயத்தை வேறு வகையில் தெளிவு படுத்துகிறார்**

**அர்த்த** (பாதி) **மாத்ரையிலிருந்து** பிறந்ததும், உத்தமமானதும், பெரிய மணியின் **நாதம்** (ஒலி) போன்றதும், ஆநந்த ஸ்வரூபமானதும், எந்த விதச் சிதைவற்றவளுமான **ஶக்தியை** மனத்துள் ஒருவன் **தன்மயீபாவத்துடன்** அநுபவித்துக் கொண்டிருந்தால், கடைசியில் எந்த **பாவத்தைப்** பெறுகிறானோ அதுவே விஷ்ணுவின் ப்ரகாஶமான உருவம். இவ்வாறாக உமக்கு ப்ரணவத்தின் பொருள் நன்கு விளக்கப்பட்டது.

**வாசகர்கள் கவனிக்க**

இந்த 51வது அத்யாயம் தொடக்கத்திலிருந்து 45 ஶ்லோகங்கள் வரை ப்ரணவத்தின் பொருளைப் பல வகையாக விஸ்தரித்து நாரத முநிவருக்கு **ஶ்ரீ அஹிர்புத்ந்யர்** விளக்கிச் சொல்லி இருக்கிறார்.

**वेदाक्षराणि यावन्ति पठितानि द्विजातिभिः ।**
**तावन्ति हरिनामानि कीर्तितानि न संशयः ॥**

**இதன் பொருள்:-** ப்ராம்ஹணர்கள் சொல்லும் வேதம் முழுவதும் ஶ்ரீ ஹரியின் திருநாமங்களே, இதில் ஸந்தேஹமில்லை. அத்தகைய எம்பெருமானைத்தான் இந்த ப்ரணவமும் சொல்கிறது. இதில் **அ-உ-ம் (அகார, உகார, மகாரம்)** என்றும், **ம்** என்பதற்கு ஜீவன் பொருளென்றும், **அ** என்பதற்கு **ஶ்ரீமந்நாராயணன்** பொருள் என்றும், **உ** என்பது அவதாரணம் அதற்கே என்றும் பொருள் என்றும் கூறி மொத்தத்தில் அனைத்து ஜீவர்களும் நாராயணனுக்கே உரியவர்கள் என்றும் **ஶேஷர், தாஸபூதர்** என்றும் இதில் விளக்கியிருக்கிறார். இக் கருத்தையே விளக்குவதாக **ஶ்ரீமத் ரஹஸ்யத்ரஸாரம்** மூல மந்த்ராதிகாரத்தில் ஒரு ஶ்லோகத்தை எடுத்துக் காட்டியிருக்கிறார். அது பின் வருமாறு-

**अकारार्थो विष्णुः जगदुदयरक्षाप्रलयकृत्**
**मकारार्थो जीवः तदुपकरणं वैष्णवमिदम् ।**

उकारोऽनन्यार्हः नियमयति संबन्धमनयोः
त्रयीसारः त्र्यात्मा प्रणवमिममर्थं समदिशत्॥

மேலே நான் குறிப்பிட்ட இந்த ப்ரணவார்த்தம் மூன்று வேதங்களின் ஸாரம் என்று இந்த ஶ்லோகத்தில் சொல்லப்பட்டது. இதற்கு மேலும் தெளிவு வேண்டுமென்றால் ஸம்ஸ்க்ருதமறிந்த நல்ல பண்டிதர்களை அணுகித் தெரிந்து கொள்ளலாம்.

**இனி 'பரம்' என்பதன் பொருள் விளக்கம்**

**பரம்** என்பதற்கு என்ன பொருள் என்பதை இப்பொழுது சொல்கிறேன், கேளும். இந்த விஷயம் இரண்டு அக்ஷர உருவத்தில் உள்ள ப்ரணவத்தைக் காட்டிக் கொடுக்கும்.

**'அ'கார பதத்தின் பொருள்**

ஐந்து வகைச் செயல்களைச் செய்கின்றது உத்தமமான வைஷ்ணவ ஶக்தி. அதனாலேயே **ப்ரம்மம்** என்பது பல வகை வேறுபாடுகளுடன் கூடியதாகச் செய்யப்படுகிறது. அதாவது எல்லா தேவதைகளுக்கும் மேலான விஷ்ணுவே படைப்பு எல்லாம் செய்து இயக்கி வருகிறார் என்பதைச் சொல்கிறது.

**உகாரத்தின் பொருள்**

தெளிவாகத் தென்படாத ஐந்து செயல்களைச் செய்கிற இந்த வைஷ்ணவ ஶக்தி செயலற்றது போல் விளங்கும். இந்தச் சக்தி, வாஸனைகள் அற்றது. வெளிப்படைத் தோற்றம் இல்லாதது. அசைவற்றது. விஷ்ணுவைச் சார்ந்தது. **பரா** என்பதும் ஆகும். ஸூக்ஷ்மமாக யாராலும் கண்டு கொள்ள முடியாத படி **பாவங்களால்** எப்பொழுதும் ப்ரகாஶிக்கும்படிச் செய்யப்பட்டாலும், அந்த ஶக்தி அசையாத கடல் போல் செயலற்றதாக விளங்கும். எந்த வித மாறுதல்களும், வாஸனையும் இல்லாத ப்ரம்மம். அந்த ஶக்தியோடு சார்ந்ததாகவே இருக்கும் என்றும், எங்கும் வ்யாபித்திருப்பதும், மிகவும் ப்ரகாஶமானதும் ஹ்ருதயாகாஶத்தில் இருப்பதுமாக இந்த ப்ரணவம் விஷ்ணுவைக் குறிப்பிடுகிறது.

**'ஓம்' காரத்தால் பேதமற்ற ப்ரம்மம் விளக்கப்படுகிறது**

இந்த **அ - உ** என்கிற இரண்டு எழுத்துக்களையும் ஒன்றாக இணைத்தல் என்பது, அதனால் **ஓம்** என்கிற **ப்ரணவம்** எந்த வித மாறுதலுமற்ற ப்ரம்மம் ஆகும் என்பதைத் தெரிவிக்கிறது. இந்த எழுத்துக்களின் ஐக்யம் **ஸ்தூல சித், அசித்** விஶிஷ்டமான ப்ரம்மமும், **ஸூக்ஷ்ம சித் அசித்** விஶிஷ்டமான ப்ரம்மமும் ஒன்றே என்பதைக் குறிக்கும். **ப்ரணவம்** என்கிற அக்ஷரமே உலகங்களை அழிக்கும் ஶக்தி எனப்படும்.

**யோகியின் ஸித்தி**

இந்த ப்ரணவ விஷயத்தில் எந்த யோகி கவனத்துடன் இருப்பானோ, அவன் மேலான **ஸமாதி** என்கிற நிலையை அடைவான். இவ்வாறாக ப்ரணவத்திலிருக்கும் மூன்று வகையான நிலைகள் உமக்கு விளக்கப்பட்டன.

**தாரம்,அநுதாரம், இவற்றுக்குப் பொருள்**

**தாரம் அநுதாரம்**– இவற்றுக்கு மூன்று வகைப் பொருள் விளக்கம் சொல்கிறேன், கேளும்.

**தாரத்தின் ஸ்தூலமான அர்த்தம்**

எல்லா பாபங்களையும் போக்க வல்லது என்று தேவர்களாலும் அஸுரர்களாலும் போற்றப்படுவது என்றும் பல வகை ப்ரமாணங்களால் அறியப்படுவது என்கிற பொருளிலும் **ஹ்ரீம்** என்கிற இந்த பீஜாக்ஷரம் வழங்கப்படுகிறது. (குறிப்பு: **ஹ்+ர்+ஈ+ம்** இந்த வரிசைகளால் மேலே குறிப்பிட்ட பொருள்களை உணரலாம்.)

**ஸூக்ஷ்மமான பொருள்**

இவ்வாறாக ஸ்தூலமான பொருள் சொல்லப்பட்டது. இனி ஸூக்ஷ்மத்தைப் பற்றிச் சொல்கிறேன் கேளும். அந்த **ஶக்தி** எங்கும் ப்ராணனாகத் தெளிவாக இருந்தாலும், போதும் என்கிற எண்ணத்தைக் கொள்வதில்லை. எப்பொழுதும் உய்வித்தல் என்கிற ஸ்வரூபத்திலிருக்கும் அந்த **ஶக்தி** எல்லா உலகங்களையும் தோற்றுவிக்கிறது.

## இதற்கு 'பர' என்பதின் பொருள் விளக்கம்

இவ்வாறு உமக்கு ஸூக்ஷ்மப் பொருள் சொல்லப்பட்டது. இப்பொழுது பரம் என்பதைச் சொல்கிறேன் கேளும். **நாராயணன்** என்கிற பெயருடையவரும், **பரமாத்மா** என்று சொல்லப்படுபவரும், தேவர்களுக்கெல்லாம் அதிபதியாகவும் எந்த விஷ்ணு இருக்கிறாரோ, அவரை விட்டுப் பிரியாத தேவியும் அவருடைய செயல்களையே (இயல்புகளையே) தன்னுடைய செயலாகவும் (இயல்பாகவும்) கொண்டவள், ஶக்தியே **மஹாலக்ஷ்மி,** இவள் மாயா என்கிற பெயருடன் அற்புதமான செயல்களுடன் எப்பொழுதும் ஐந்து வகைச் செயல்களைச் செய்து கொண்டிருக்கிறாள் (ஸ்ருஷ்டி, காத்தல் ஒடுக்குதல் (அழித்தல்), மறைந்திருத்தல், அநுக்ரஹித்தல்). விஷ்ணுவின் உருவத்துக்கேற்ற வடிவத்துடன் எங்கும் வ்யாபித்திருக்கும் இவள் அவருடைய கருத்துக்களுக்கேற்பக் கருத்துகளுடன் பின்தொடர்பவளாகவும், அகில உலகங்களுக்கும் ஆதாரமாக இருக்க வேண்டுமென்கிற ஸங்கல்பத்துடன் துடிப்பாகச் செயல்படுபவளாகவும், உலகங்களைப் படைத்தும் கூட இது போதாது என்கிற எண்ணத்தை ஏற்று ஹ்ருதயாகாஶத்தில் இருக்கும் எம்பெருமானுடன் தானும் வ்யாபித்து மேலும் மேலும் செயல்படுகிறாள். **தாரம்** என்பதின் பரமான பொருளை முநிவரே! உமக்கு எடுத்துரைத்தேன்.

## அநுதாரா என்பதின் விளக்கம்

எல்லாக் குற்றங்களையும் (பாபங்களையும்) போக்குகிறாள். தன் நற்குணங்களால் எல்லா உலகங்களையும் காக்கிறாள். எல்லா ஜீவர்களாலும் எப்பொழுதும் ஆஶ்ரயிக்கப்படுகிறாள். பரமபதத்தை உறைவிடமாகக் கொண்டிருக்கிறாள். மஹர்ஷியே ! ஸ்ரீ என்கிற இந்தச் சொல்லின் ஸ்தூலமான பொருள் மேலெழுந்த வாரியாகச் சொன்னேன்.

### ஸூக்ஷ்மப் பொருள்

வெண்மை தாமரை நிகர்த்த உருவமுடையதும், என்றும் அழியாததும், தளர்வில்லாததுமான பரமபதம் உள்ளது. அதில் பல வகையான போகங்களைக் கொடுத்துக் கொண்டு ஸம்ஸாரம் என்கிற கடலை அழிப்பவளும், பலவித அற்புதமான லீலைகளைச் செய்பவளும், க்ஷேமத்தைக் கொடுப்பவளும் ஆகிய அந்த மஹாலக்ஷ்மி எம்பெருமானை ஆஶ்ரயித்திருக்கிறாள்.

### பரார்த்த பொருள்

இவ்வாறு உமக்கு ஸூக்ஷ்மமான பொருள் சொல்லப்பட்டது. இனி **பரம்** என்கிற பொருளைச் சொல்கிறேன், கேளும். மிகவும் ஶாந்தியுடன் கூடியதும், தீய குணங்களற்றதும் கர்ம வாஸனையற்றதும் ஆறு குணங்களுடையதும், அசைவற்றதும், தேவாதிதேவன், **நாராயணன்** என்ற பெயருடைய ப்ரஹ்மம் என்கிற பரம்பொருள் உள்ளது. ஶக்தியானவள் அவரை விட்டு ஒரு போதும் பிரியாதவளும், அவருடைய கார்யங்களையே தன் கார்யங்களாக ஏற்றுக் கொண்டு இருப்பவளும், பல வகையான ஆஶ்சர்யமான விஷயங்களைச் செய்வதால் எப்பொழுதும் ஐந்து கார்யங்களைச் செய்பவளும், விஷ்ணுவின் வடிவத்துக் கேற்ற உருவத்துடன் விளங்குபவளும், பகவானுடைய எல்லா வகையான கருத்துக்களுடன் ஒத்த கருத்துக்களுடையவளும், அனைத்து உலகங்களுக்கும் ஆதாரமாக இருக்க வேண்டும் என்கிற ஸங்கல்பத்துடன் துடிப்பாகச் செயல் படுபவளும், பலவகை உலகங்களை ஸ்ருஷ்டித்தும் இது போதாது என்கிற கருத்துடன் இருப்பவளும், ஹ்ருதயாகாஶத்தில் வஸிக்கும் எம்பெருமானுடன் வ்யாபித்து மேலும் மேலும் செயல்படுகிறாள். இந்த விஷயம் **அநுதாரையின்** பொருளாகும். இது ப்ரணவத்துக்குச் சொன்னது போலவே சொல்லப்பட்டது.

## முன் சொன்ன விஷயங்கள் அனைத்தின் சுருக்கம்

நாரதரே ! எல்லாச் சொற்களின் பொருள்களையும் சுருக்கமாகச் சொல்கிறேன் கேளும். பரமாத்மாவும், என்றைக்கும் உள்ளவனும், ஶக்தியுடன் கூடியவரும், அனைத்து உலகங்களுக்கு இருப்பிடமும், ஆறு குணங்களுடன் மிகவும் விளங்குபவரும், எந்த பகவானைப் பற்றி உமக்குச் சொன்னேனோ, அவருடைய பத்நியும், அவர் கார்யங்களையே தன் கார்யமாக ஏற்றுக் கொண்டு இருப்பவளும், மஹாதேவி என்பவளும், அவரை விட்டுப் பிரியாதவளும், கடலின் அசைவற்ற நிலையில் இருப்பவளும், எல்லா ப்ராணிகளின் உள்ளே ஊடுருவி நிற்பவளும், மிக மிகச் சிறிய தன் அம்ஶத்துடன் அந்த தேவி தானாகவே நமக்கு ஸேவை ஸாதிக்கிறாள். **ஸாத்ய ஸாதக** என்கிற வேறுபாட்டின் மூலம், அடையப்பட வேண்டிய **(பாவ்யா)** ஐஶ்வர்யமாக இருக்கிறாள். **பாவுகம்** என்பது **ஸுதர்ஶநம்** என்கிற திருநாமத்திலுள்ள விஷ்ணுவின் ஸங்கல்பமே முதலாவது **பூதி** எனப்படும். இந்த உலகமாகிற லீலாவிபூதி, சொல், பொருள் என்று இரண்டாக இருக்கும். சொற்களுக்குப் பொருளைக் குறிப்பிடும் ஶக்தியை விளக்குகிறேன். ஸுதர்ஶந மயமான அதன் ஸ்வரூபம் அதன் செயலைக் கொண்டு அறியப்பட வேண்டும். செயல் என்கிற பெயருடைய ஶப்தத்துக்கு எந்த ஶக்தி உண்டோ, அது செயல் வடிவத்தில் இருக்கும் பொழுது **ஸுதர்ஶநம்** என்கிற பெயருடையதாகிறது. ஆகையால் விஷ்ணுவின் ஸங்கல்பம் என்கிற எந்த ஒரு அசைவு (செயல்) உண்டோ அதுவே **ஸுதர்ஶநம்.** எல்லாச் செயல்களும் ஸுதர்ஶந வடிவமான விஷ்ணுவின் ஸங்கல்பமே. எல்லாச் சொற்களும், எல்லாப் பொருள்களும் இரண்டு வகையாகச் செயல்படுகின்றன. குணத்தினாலோ, செயலாலோ வேறு வகை எதுவும் இல்லை. ஆகையால் நம்முடைய வாக்குகள் அந்தப் பரம்பொருள் விஷயத்தில் முழுமையாகச் செயல்படுவதில்லை. **(யதோ வாசோ நிவர்தந்தே** என்கிற உபநிஷத் வாக்யத்தைக் குறிக்கிறது.) இந்த குணம் என்பதும் செயல் என்பதும் இரண்டுமே நமக்கு ப்ரஹ்மத்தைக் காட்டிக்

கொடுக்கின்றன. அந்த இரண்டுமே ஸுதர்ஶநத்தின் வடிவமாய் விஶேஷணமாய் நிற்கின்றன. மந்த்ரங்கள் என்பவை எத்தனை உண்டோ, எந்த அளவு உண்டோ, எவை பரப்ரஹ்மத்தைச் சொல்கின்றனவோ அவை எல்லாம் ஸுதர்ஶநத்தின் மஹிமையாலேயே செயல்படுகின்றன என்று தெரிந்து கொள்ளும். இவ்வாறு வேதம் முதலிய ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட விஷயங்கள் உமக்கு நன்ருகச் சுருக்கமாகச் சொல்லப்பட்டன. இந்த விஷயங்களின் விரிவை ஒவ்வொரு மந்த்ரத்திலும் எடுத்துக் காட்டுகிறேன். வேறு விஷயத்தில் மனதைச் செலுத்தாமல் கேளும்.

இவ்வாருக பாஞ்சராத்ரம் தந்த்ரரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யில் தாராதி
பீஜங்களின் ஸ்வரூபம் என்கிற
51வது அத்யாயம் முற்றிற்று.



## விஷ்ணு முதலிய மந்த்ரங்களின் பொருள் விளக்கம் என்கிற 52-வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத்பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி॥

(விளக்கம் 18-ம் அத்யாயத்தில் உள்ளது).

### விஷ்ணு முதலிய மந்த்ரங்களின் பொருளை விளக்கச் சூளுரை

**அஹிர்புத்ந்யர் :- தாரம், தாரா, அநுதாரா** இவற்றின் ஸ்வரூபம் உமக்கு விளக்கினேன். விஷ்ணு முதலியவர்களுடைய மந்த்ரங்களில் குணம் செயல் என்கிற காரணத்தால் ஏற்படும் **ஸ்தூலம், ஸூக்ஷ்மம் பரம்** என்கிற வகையில் உள்ள பொருள் விளக்கம்.

### நம: என்கிற சொல்லுக்கு ஸ்தூலமான பொருளை விளக்கும் சொல், பொருள்

எல்லோருக்கும் மேலாகிய பரமபுருஷனை நோக்கி ஞாநமுடைய ஒருவனுக்கு ஸ்வயமாகவே ஏற்படும் வணக்கம் என்கிற எந்தச் செயல் உண்டோ அதுவே **நம:** என்பதன் பொருள்.

### உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்கிற வகையில் ஜீவர்கள் இரண்டு வகை

உலகத்தில் உள்ள ஜீவர்கள் உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்று இரண்டு வகைகளாகப் பேசப்படுவார்கள். வேறுவகை இல்லை. காலத்தினாலும், குணங்களாலும் யாரிடம் உயர்வு இருக்கிறதோ, **ஜ்யாயாந்** என்கிற சொல் சிறப்பாக அவனையே குறிக்கும். ஆகையால் மற்ற சேதநர்கள் வேறுபட்டவர்களாய்த் தாழ்ந்தவன் எனப்படுகிறான். இந்த இருவருக்கும் ஏற்படும் உறவு (ஸம்பந்தம்) உடையவன் உடமை ( ஆண்டான் அடிமை) என்கிற வகையில் இருக்கும். தாழ்ந்தவன் என்கிற வரிசையில் எல்லா ஜீவர்களும் அடங்குவர். உயர்ந்தவன் எம்பெருமான் ஒருவனே.

### வணங்குபவர் வணங்கப்படுபடுவர் என்ற உறவு

உடமை ஆகிய ஜீவர்களுக்கு உயர்ந்தவருடன் உள்ள ஸம்பந்தம் வணங்கப்படுபவர் என்றும், வணங்குபவர்கள் என்றும் இருக்கும். இங்கு நமஸ்கரிக்கப் படுபவன் ஸ்வாமி எம்பெருமானே. மற்ற ஜீவர்கள் வணங்குபவர்களே.

### இந்த ஸம்பந்தம் பலனைக் கருதியது அன்று

தாழ்ந்தவன், உயர்ந்தவன் என்கிற நிலை, நமஸ்கரிப்பவன், நமஸ்கரிக்கத்தக்கவன் என்பதாகும். இந்த ஸம்பந்தம் எந்தப் பலனையும் கருதியது அன்று.

### காரணங்களற்று ஏற்படும் தாழ்ந்தவர் மேலானவர் என்கிற ஜ்ஞானம் நமஸ்காரத்துக்குக் காரணம்

இந்த ஜீவன் எவ்விதக் காரணமும் இல்லாமல் எந்த ஒரு கருத்தினால் அந்தப் பெரியவரை நமஸ்கரிக்கிருனோ, அதுதான் நமஸ்காரமாகும். பகவான் (ஸ்ரீ ஹரி) எப்பொழுதும் என்னைவிட மேலானவன் என்றும், நான் எப்பொழுதும் தாழ்ந்தவன் என்றும் எந்த எண்ணம் தோன்றுகிறதோ, அதுவே நமஸ்காரத்துக்குக் காரணமாகும்.

### செயப்பாட்டு வினையை உள்ளடக்கிய என்கிற பொருளில் நம: என்பதற்கு மற்ருெரு வகை விளக்கம்

பகவானை வணங்கும்படிச் செய்கிறது அல்லது நிச்சயம் தலை வணங்கும்படிச் செய்கிறது என்றும் கொள்ளலாம். தாழ்ந்தவன் வணங்கும்பொழுது, அவனுடைய தாழ்மையை நினைத்து மேலானவன், அது அவனை ஸ்வயமாகவே நமஸ்கரிக்கும்படிச் செய்கிறது என்று பொருள் கொள்ளலாம்.

### மனம் வாக்கு காயம் மூன்றும் சேர்ந்து அமைவதே முழுமையான நமஸ்காரம்

நமஸ்காரம் என்று சொல்லிவிட்டு (ஸேவிக்கிறேன் என்று) மநத்தாலும் ஶரீரத்தாலும் எது அமைகிறதோ அதுவே முழுமையான நமஸ்காரம். இதற்கு மாறுபட்டது குறைவுள்ள

நமஸ்காரம் ஆகும். இதற்குகரண பூர்த்தி என்று பெயர். அங்கங்களின் பூர்த்தியை இப்பொழுது சொல்கிறேன், கேளும்.

### வணக்கத்துடன் தன்னை அர்ப்பணிப்பதையும், அதற்கு மாறுபட்டதையும் விவரிக்கிறார்

வணங்குவது என் பாக்யமாகும் என்று உயர்ந்தவனை நோக்கிப் பலனைக் கருதாமல் வணங்குவதே மேலானது- பலனைக் கருதிச் செய்வது மாறுபட்டதாகும்.

### கைமுதல் இல்லாமை, அதற்கு மாறுபட்டது இவற்றின் விளக்கம்

அநாதி காலமாகச் சில வாஸனைகள் (பழக்கம்) பற்றியிருப்பதாலும் இயற்கையாகவே அமைந்த தாழ்மை யாலும், அழுக்குகள் (அஜ்ஞானம்) மண்டியிருப்பதாலும், (ஞானமில்லாமையாலும் என்பதே கார்பண்யமாகும்.) இதன் வெளிப்பாடு இரண்டாவது அங்கமாகும். தான் ஸ்வதந்த்ரன் (யாருக்கும் அடிமையல்லன்) என்கிற எண்ணம் கார்பண்யத்துக்குத் தடையாகும்.

### அசைக்கமுடியாத நம்பிக்கை இதற்குத் தடை இவற்றின் விளக்கம்

பகவான் தான் உயர்ந்த தெய்வமாக இருந்தும் ப்ராணிகளிடம் கருணை கொண்டவராகவும், எப்பொழுதும் அருள் புரிவதையே இயல்பாகக் கொண்டிருக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்வது மூன்றாவது அங்கமாகும். நடு நிலையில் இருந்தும் அலக்ஷ்யமாக வினைகளை அநுஸரித்துப் பலன்களைக் கொடுப்பவர் என்கிற எண்ணத்துடன் இருப்பது மூன்றாவதாகச் சொன்னதர்க்குத் தடை.

### என்னைக் காப்பாற்றி அருள வேண்டும் என்கிற ப்ரார்த்தனை, அதற்குத் தடை இவற்றின் விளக்கம்

இவ்வளவு பெருமை உடையவராக இருந்தும் பகவான் பக்தியில்லாதவனாகில் காப்பாற்ற முடியாது. ஆகையால்

ஶக்தியுடையவனே என்று தெளிந்து காப்பாற்ற வேண்டும் என்று ப்ரார்த்திக்க வேண்டும். இது நான்காவது அங்கம். இதற்குத் தடை எது என்றால் இவனிடம் எந்த குணமும் இல்லை என்பதால் அலக்ஷ்யப் போக்கில் இருப்பது ஆகும்.

### எதிரிடையாகச் செயல்படுதல் என்பதை விலக்குதல்-அதற்குத் தடை பற்றிய விளக்கம்

தன்னை ஸ்வதந்த்ரன் என்று நினைக்காமல் இருத்தலே எதிரிடையாகச் செயல்படுதலை விலக்குதல், ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட கட்டளைகளை மீறி நடப்பதைத் தவிர்த்தல் இவை ஐந்தாவது அங்கம். ஶாஸ்த்ரங்களில் எவை தடை செய்யப்பட்டுள்ளனவோ அவற்றைக் கைக்கொள்ளுதல்-இது தடை எனப்படும்.

### அநுகூலனாகவே இருப்பேன் என்று தீர்மானித்தல், இதற்குத் தடை பற்றி விளக்கம்

உலகில் உள்ள அசையும் பொருள், அசையாப் பொருள் அனைத்தும் பகவானின் ஶரீரம். ஆகையால் யாருக்கும் நன்மையே நான் செய்ய வேண்டும் என்ற தீர்மானம் ஆறுவது அங்கம். இந்த எண்ணத்தை விலக்கிவிடுதல் இதற்குத் தடை.

### இங்கு சொன்ன விஷயங்களின் திரட்டு

அங்கங்கள் உபாங்கங்கள் இவற்றோடு கூடிய நமஸ்காரம் என்பது பற்றியும் உமக்குச் சொன்னேன். இது **ஸ்தூலம்** (மேலெழுந்தவாரியான பொருள்). **ஸூக்ஷ்**மமான பொருள் சொல்கிறேன், கேளும்.

### ‘ம’ என்பதின் அஹங்கார மமகார·விளக்கம்

இந்த ஜீவனுக்கு எப்பொழுது தன்னைப் பற்றியும், தன்னைச் சார்ந்த பொருள்கள் பற்றியும் என்னுடையது என்கிற எண்ணம் ஏற்படுகிறதோ, **மம** என்கிற சொல் அந்த இடத்தைச் குறிப்பிடுகிறது.

## நம: என்கிற சொல் அஹங்காரத்தையும் மமகாரத்தையும் தவிர்க்கும் சொல்

அநாதி காலமாக ஏற்பட்ட வாஸனையினால் உண்டான பொய்யான ஜ்ஞாநத்தை அடிப்படையாகக் கொண்டு **நான், எனது** என்கிற ஸ்வதந்த்ர மனப்பான்மை இந்த **நம:** என்கிற சொல்லினால் **மே ந** (என்னுடையது அல்ல) என்கிற ஜ்ஞாநத்தால் விலக்கப் படுகிறது.

## மேலும் விளக்கம்

நான் ஸ்வதந்த்ரன் அல்லன் என்று இந்தச் சொல் விளக்குகிறது. ஶரீரம் முதலியவைகள் கூட பகவானுக்கே உரியன. இவ்வாறு ஏற்படும் ஜ்ஞானத்தினால் என்னுடையது என்கிற எண்ணமெல்லாம் தவிர்க்கப்படும். அநாதி காலமாக ஏற்பட்ட பலவகையான ஸுகம், போகம் இவற்றால் நம் மனம் அழுத்தமாக **நான் ஸ்வதந்த்ரன்** என்றும், **இது என்னுடையது** என்றும் பூசப்பட்டிருக்கிறது. இது **விஷ்ணுவே ஆத்மா** என்கிற பொருளைக் குறிக்கின்ற **நம:** என்கிற சொல்லால் நமஸ்காரம் செய்பவனால் தன்னிடமிருந்து விலக்கப்படுகிறது. இவ்வாறு ஸூக்ஷ்மார்த்தம் உமக்குச் சொன்னேன். மேலும் சொல்கிறேன், கேளும்.

## நம: ஶப்தத்துக்குப் பரமான அர்த்தம்

**ந** என்பதற்கு **வழி** என்பதும் **ம:** என்பதற்கு **முக்யமான** என்பதும் பொருளாகும். **விஸர்கம் (:) பரமபுருஷனைக்** குறிப்பதாகும். இப்பொழுது இதன் பொருள் விளக்கம் கூறுகிறேன். அநாதியாகவும், ஶக்தியுடன் கூடியவரும், **பரம புருஷ**னாகவும் உள்ள பகவான் எவரோ, அவரை அடைய முக்யமான வழியை **நமநம்** என்பது குறிக்கிறது. இவ்வாறு **நம:** என்பதற்கு மூன்றுவிதமான பொருள் விளக்கம் கூறப்பட்டது.

## விஷ்ணுமந்த்ரத்தின் ஸ்தூலமான பொருள்

**விஷ்ணு, நாராயண** என்பது போன்ற சொற்களுக்கு இப்பொழுது பொருள் சொல்கிறேன், கேளும். தன்னைத் தாழ்ந்தவன் என்று சொல்லிக் கொண்டு அவனிடம்

ஸமர்ப்பித்தல் என்பது விஷ்ணு முதலிய வார்த்தைகளில் நான்காம் வேற்றுமை **ஸம்ப்ரதாநம்** என்கிற பொருளில் உள்ளது. **(குறிப்பு** :- தாளத்துக்கு யார் உத்தேஶ்யரோ அவர் **ஸம்ப்ரதாநம்** என்று **பாணி**நியால் கூறப்பட்டது- **சதுர்த்தீ — ஸம்பரதாநே)**. இந்த ஆத்மா தாழ்ந்தவன் அன்றோ ! இந்தப் பொருள் தேவரீரால் காப்பாற்றப்பட வேண்டும் என்று ஸமர்ப்பிக்கப்படுகிறது. இது யாருக்கு? என்ற கேள்விக்கு விஷ்ணுவுக்கு என்று சொல்லப்படுகிறது. **க்ரியை, காரகம்** இவற்றின் சேர்க்கையால் கிடைத்த ஸ்தூலமான பொருள் உமக்குச் சொல்லப்பட்டது.

## விஷ்ணு மந்த்ரத்திற்கு ஸூக்ஷ்மமான பொருள்

**ப்ராதிபதிகத்தி**ன் நோக்கில் கிடைப்பது ஸூக்ஷ்மமான பொருளாகும். அதைச் சொல்கிறேன் - **(குறிப்பு :** எந்தப் பெயர்ச் சொல்லிலும் ஒரு விகுதி சேர்க்கப்படுகிறது. **ராமன், ராமனைப்** போன்ற சொற்களில் பின்னால் வருவது விகுதி. முன்னால் உள்ளது பகுதி. பகுதியே **ப்ராதிபதிகம்** எனப்படும்). ஊடுருவி இருத்தல், ப்ரகாஶம், உள்ளே புக விருப்பம், அங்கங்கே உள்ள பயனிலை (Root) இவற்றிலிருந்து **பரமாத்மா** என்கிற விஷ்ணுவே மேலான தெய்வம் என்பதைக் குறிப்பதாகும்.

## ஊடுருவல் இயல்பின் விளக்கம்

இந்த உலகத்தையெல்லாம் தேசத்தினாலும், காலத்தினாலும் தன் உருவத்தால் வ்யாபித்திருக்கிறார் என்கிற பொருள் **விச்** என்கிற வினைச் சொல்லால் குறிக்கப்படுகிறது. **(விஷ்ணு** என்கிற சொல் **விச்** என்கிற வினைச் சொல்லிலிருந்து பிறந்து **ணு** என்கிற விகுதியும், **ஷ** என்றும் வருவதால் **விஷ்ணு** என்கிற சொல் அமைகிறது என்பதை விளக்குகிறார்).

## ப்ரகாசம் என்பதின் விளக்கம்

காந்தி என்பது குணங்களின் சிறப்பு. **ஜ்ஞாநம், ஶக்தி, பலம், ஐஶ்வர்யம், வீர்யம், தேஜஸ்** என்கிற ஆறு குணங்களின் சிறப்பைக் குறிக்கும் சொல். இவை எல்லாம் யாரிடம் மிகவும்

அதிகமாக உள்ளனவோ, அவர் **காந்தர்** எனப்படுகிறார். ஜீவன்கள் அனைவரும் **அகாந்தர்கள்.** அந்தப் **புருஷோத்தமன்** ஒருவனே **காந்தன்** (மிகவும் சிறந்த ஆறு குணங்களோடு கூடியவன். இதே பொருளைக் குறிப்பதுதான் **பகவான்** என்ற சொல் ஆகும்). **வச்** என்று சொல்கிற பயனிலையிலிருந்து கிடைக்கும் பொருளே **காந்தி** எனப்படும்.

## உள்ளே புகுதல் என்பதின் விளக்கம்

சேதநம், அசேதநம் எல்லாம் தாமாகவே மிகவும் பெரிய எந்த பகவானுக்குள் உள்ளே புகுகின்றனவோ, எவன் அணுவுக்குள் அணுவாக இருந்து அணுவுக்குள் புகுகின்றானோ, அவனே ஜ்ஞாநிகளால் **பரன்** என்று சொல்லப்படுகிறான். **விச்** என்கிற வினைச் சொல் இதைக் குறிக்கிறது.

## விருப்பம் என்பதின் விளக்கம்

எவன் எல்லா ஜீவன்களாலும் தங்களுக்கு **ஆத்மா** என்று விரும்பப்படுகிறானோ, அவனே ஜ்ஞாநிகளால் **இஷ்** என்ற வினைச் சொல் குறிக்கும் **பரன்** எனப்படுகிறான்.

## விஷ்ணு ஶப்தத்தில் ஒவ்வொரு எழுத்தின் பொருள்

இந்த ஸகல உலகமும் யாரிடமிருந்து பிறக்கின்றதோ, யாரிடம் ஒடுங்குகின்றதோ, ஜ்ஞாநிகளால் நான்கு வகை புருஷார்த்தங்கள் யாரிடமிருந்து கிடைக்கப் பெறுகின்றனவோ, அவர் தான் **விஷ்ணு. வி, ஸ், ஸ்னு** இவற்றின் சேர்க்கையால் **விஷ்ணு** என்று ஏற்படுகிறது. இவ்வாறு உமக்கு **விஷ்ணு** என்கிற சொல்லின் ஸூக்ஷ்மப் பொருள் சொல்லப்பட்டது.

## 'பரம்' என்கிற பொருளின் விளக்கம்

எழுத்துக்களிலிருந்து கிடைக்கும் பொருள் **பரம்.** அதன் உண்மையைக் கேளும். ஸகல பொருள்களையும், அம்ருதம் போல் ஆக்க வல்லவன், மூன்று ஜ்யோதிகளையும் ஊக்குவிப்பவன், அபயம் கொடுப்பவன் என்கிற பொருள்

**பரம்** அர்த்தமாகும். இவ்வாறு விஷ்ணுவைப் பற்றிய மந்த்ரத்தில் மூன்று வகைக் கருத்துகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

### நாராயண மந்த்ரத்தின் ஸூக்ஷ்மமான பொருள்

நாரத முனிவரே ! நாராயண ஶப்தத்தில் இந்த மூன்று வகையான பிரிவினைகளைச் சொல்கிறேன் கேளும். **க்ரியாபதம், காரகம்** இவற்றினால் கிடைக்கும் பொருள் முன்பே மேலெழுந்த வாரியாகச் சொல்லப்பட்டது **ப்ராதிபதிகத்தி**லிருந்து கிடைக்கும் பொருள் ஸூக்ஷ்மமாகும். இதை இப்பொழுது விளக்குகிறேன். **நான்** என்பதற்கு அந்தப் **புருஷோத்தமன்** என்பது பொருள். அவருடன் தொடர்பு உள்ளவை அனைத்தும் **நாரா:** எனப்படும். ஸகல வகையான ஜ்ஞாநத்தையும் கொடுக்கிறான்; எல்லாவகை **அஜ்ஞாநத்**தைப் போக்குகிறான் அவன். எங்கும் பாதிக்கப்படாதவர் என்பதால் **நா** என்கிற சொல் அந்த அநாதியான **விஷ்ணு**வைக் குறிக்கும். அந்த நரனோடு ஸம்பந்தமுடைய உயிரினங்களும், ஜடப் பொருள்களும் **நாரா:** என்று சொல்லப்படுகின்றன. அது (என்ன ஸம்பந்தம் என்றால்) அவரால் காக்கப்படுவதாலும், தாங்கப்பட்டிருப்பதாலும், வளர்க்கப்படுவதாலும், அவருடைய ஆணைக்கு உட்பட்டிருப்பதாலும், படைக்கப்படுவதாலும், அவருடைய வ்யாப்தியால் ஒடுக்கப்படுவதாலும் (லயம்) அவருடன் நமக்கு ஸம்பந்தம் ஸமஸ்தமான ஜீவர்களையும் சென்று அடைகிறார் என்றும், அவ்வாறே ஜீவன்களைச் செயல்படும்படிச் செய்வதாலும், ஜீவர்கள் எல்லோரும் இவருக்கு வாஸஸ்தாநம் என்பது, அதன் அவயவார்த்தத்தின் மூலம் (definition) கிடைக்கும் பொருள். **நாராணாம் அயநம்** (வாஸஸ்தாநம்) என்னும் இவருக்கு ஜீவர்கள் இருப்பிடம் என்றும் இரண்டு வகையில் பொருள் இந்தச் சொல்லில் அடங்கியுள்ளது. அந்த ஆத்மாக்களுக்கு எல்லாம் உத்தமமான கதியாக இருக்கிறார் என்கிற பொருளும் இதிலிருந்து கிடைக்கிறது. **நாரா:** என்கிற சொல்லுக்கு ஜலம் என்ற பொருளும் உண்டு. அந்த ஜலமும் இவருக்கு வாஸஸ்தாநம் என்கிற முறையில் **நாராயண** என்கிற

சொல் காரணங்களால் நிரூபிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு ஸூக்ஷ்மார்த்தம் சொல்லப்பட்டுள்ளது. எழுத்துக்களைக் கொண்டு வேறு பொருளையும் கூறுகிறேன், கேளும்.

## 'பரம்' அர்த்த வர்ணனை

தடையில்லாத ஸுதர்ஶநத்தின் வடிவில் இருப்பவர் என்றும் அனைத்து வகைப் பாபங்களையும் எரிக்க வல்லவரும், எங்கும் வ்யாபித்திருப்பவரும், ஸாதுக்களைக் காப்பவருமான அவர் எல்லா ஶாஸ்த்ரங்களிலும் புகழப்பட்டிருக்கிறார். எப்பொழுதும் ஆநந்தமயமான மார்கமாகவும், அனைத்து ஜீவன்களுக்கும் உத்தமமான கதியாகவும் இருக்கிறார் என்கிற பரமமான பொருள் **வாஸுதேவ** ஶப்தத்தில் இருப்பதைக் கண்டு கொள்ளவும்.

## வாஸுதேவ மந்த்ரத்துக்கு ஸூக்ஷ்மமான பொருள்

இதுவரை சொன்ன ஸ்தூலப் பொருள் **தாது** (வினை) **காரகம்** இவைகள் மூலம் சொன்னேன். **வாஸுதேவ** மந்த்ரத்தில் ஒவ்வொரு சொல்லுக்கும் ஸூக்ஷ்மமான அர்த்தம் உள்ளது. பகவான் என்கிற சொல் மொத்தத்தில் பெருமதிப்புக்குள்ளவன் என்று பொருள் படும்.

## 'ப' என்பதின் விளக்கம்

எல்லா உலகங்களையும் தாங்குகிறார். அவற்றை எப்பொழுதும் காக்கிறார். தன் மூலம் அவற்றைப் போஷிக்கிறார். **ப** என்ற எழுத்து இந்த மூன்று கார்யங்களைக் குறிக்கும் ஸூக்ஷ்மமான பொருளைச் சொல்கிறது.

## 'க' எழுத்து விளக்கம்

எல்லா சொற்களாலும் இவரே குறிப்பிடப்படுகிறார். நித்ய ஸூரிகளால் சூழப்பட்டிருக்கிறார். எல்லா விஷயங்களையும் எக்காலத்திலும் தானாகவே தெரிந்து கொள்கிறார். எல்லா உலகங்களிலும் வ்யாபித்து இருக்கிறார். எல்லாப் பொருள்களையும் நடத்தித் தருகிறார் என்று, நாரதரே! க என்கிற எழுத்தின் பொருள் சொல்லப்படுகிறது.

**'மதுப்' என்பதின் விகுதியின் (வான்) விளக்கம்**

உலகங்களை எல்லாம் தன் உடமையாகக் கருதுகிறார். அவற்றை இயக்குபவராக இருக்கிறார். ஜீவர்களுடைய எல்லா விருப்பங்களை வளர்க்கிறார் என்கிற காரணத்தால் **வத** என்கிற சொல்லில் பொருள் கிடைக்கிறது.

**'வாஸு' என்கிற சொல்லின் விளக்கம்**

**ஜ்ஞாநாநந்த,** அமல வடிவமான தன் மூலம் எல்லா வற்றையும் மூடுகிறார். இது நெருப்பினால் வ்யாபிக்கப்பட்ட எரிபொருள்கள் போல் நெருப்பாகவே (தணல்) எப்படிக் காட்சி தருகிறதோ, அப்படி பகவத் ஸ்வரூபமாக இருக்கும். இவ்வாறு அவரால் வ்யாபிக்கப்பட்ட உலகம் **வாஸுதேவ**மயமாகவே இருக்கும். இந்த உலகம் எந்தக் காரணத்தால் இவருக்குள் வாழ்கிறதோ, எந்த உலகத்துக்குள் இவர் வஸிக்கிறாரோ என்கிற பொருளைக் கொண்டு **வாஸு** என்கிற சொல் அமைந்திருக்கிறது. **வா** என்பதற்கு ஊடுருவிச் செல்பவர் என்று பொருள். நூல் எப்படி ஊடுருவிச் செல்கிறதோ, அவ்வாறே இவர் ஊடுருவி வ்யாபித்திருக்கிறார். இதை **வா** என்கிற எழுத்து குறிக்கிறது. எல்லா விருப்பங்களையும் வழங்குகிறார் என்றும், இயக்குகிறார் **(ஸௌ)** என்றும், யாகங்களில் போற்றப்படுபவர் என்றும் **ஸு** என்பதின் பொருள் சொல்லப்படுகிறது.

**'தேவ' ஶப்தத்தின் விளக்கம்**

ஸ்வயமாகவே ப்ரகாஶிக்கிறார். படைத்தல் முதலிய செய்கைகளால் தானே விளையாடி மகிழ்கிறார். தேவர்களால் எப்பொழுதும் போற்றப்படுகிறார் என்று **தேவ** என்கிற சொல்லின் பொருள் சொல்லப்படுகிறது. எல்லாவகை விருப்பங்களைக் கொடுப்பவர் என்றும் எல்லா ஆத்மாக்களையும் தூய்மைப்படுத்துகிறார் என்றும், எல்லா பஞ்ச பூதங்களையும் காப்பவர் என்றும் **தே** என்கிற எழுத்து பொருள்படும். எல்லோராலும் எப்பொழுதும் பஜநம் செய்யப்படுகிறார் **(த்யாநம்).** எல்லா ஆத்மாக்களைத்

தாங்குபவர் (கொண்டு செல்பவர்) என்று **வ** என்கிற எழுத்தின் ஸூக்ஷ்மமான பொருள் விளக்கப்பட்டது.

## பரமார்த்தம் சொல்லுமிடம்
## 'ப' எழுத்தின் பொருள் விளக்கம்

பரமமான அர்த்தம் அக்ஷரங்களிலிருந்து கிடைக்கும். அதன் தன்மையைச் சொல்கிறேன், கேளும். **காரணம் கார்யம்** என்கிற இடத்தில் **காரணம்** முன் நிலை என்றும் **உபாதாநம்** என்றும் சொல்லப்படுகிறது. **கார்யம்** பின் நிலை என்று சொல்லப்படுகிறது. **வாஸுதேவனான** பரப்ரஹ்மமே உலகங்களுக்கு **உபாதாந காரணம்** என்பது **ப** என்கிற எழுத்தின் விளக்கம்.

## 'க' எழுத்தின் விளக்கம்

பூமி தேவிக்கு நல்ல ஶாஸ்த்ரார்த்தங்களை உபதேஶிக்கிறார் என்றும், **கோவிந்தன்** என்ற பெயருடையவனான **ஸங்கர்ஷணன்,** முநிவரே ! **க** என்ற எழுத்தால் கூறப்படுகிறார்.

## 'வ' காரத்தின் பொருள்

வேதங்களில்சொல்லப்பட்ட கர்மாக்கள் இரண்டு வகைகளையும், கொண்ட உலகத்தை வருணனாக இருந்து கொண்டு செய்கிறார் என்பது **வ** என்கிற எழுத்தால் சொல்லப்படுகிறது.

## 'த்' என்பதின் பொருள்

எவை எல்லாம் படைக்கப்படுகின்றனவோ, அழிக்கப்படுகின்றனவோ, அவை **ஸ்ரக்தரம்** என்று சொல்லப்படுகிறது. அந்த இரண்டு நிலைகளையும் கொண்ட உலகத்தை எம்பெருமான் தன் நாபிக்குள் வைத்திருக்கிறார், காப்பாற்றுகிறார். ஆகையால் **ஸ்ரக்தரா** என்று இங்கு **அநிருத்தன்** சொல்லப்படுகிறான். இவ்வாறாக நான்கு அக்ஷரங்கள் மூலம் நான்கு வகை வ்யூஹாவதாரம் விளக்கப்பட்டுள்ளது.

### 'வா' என்கிற எழுத்தின் பொருள்

**வ** என்பதால் அம்ருதத்துக்கு ஆதாரமான **வாஸுதேவன்** சொல்லப்படுகிறுன். **ஆ** என்பதால் ஆதி தேவனான **ஸங்கர்ஷணன்** சொல்லப்பட்டிருக்கிறுன். எந்த பகவான் மோக்ஷத்துக்குக் காரணமாகவும் அநாதியாகவும் இருக்கிருரோ அவர் **ஸங்கர்ஷணன்** என்று **வா** என்பதின் பொருள்.

### 'ஸு' என்கிற எழுத்தின் விளக்கம்

ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் இந்த உலகத்தையும், அவைகளுக்கு உகந்த கர்மங்களேயும் அநாதியான பகவான் படைத்தார். அதனால் **ப்ரத்யும்நன், ஸோமன்** என்று சொல்லப்படுகிருர். ஒடுங்கல் நிலையை விட்டு வெளிவருவதும் தோன்றுவதும் (நாம ரூபங்கள்)- இவைகள் ஸங்கர்ஷணனேக் குறிப்பதாகக் கூறப்படுகிறது. **ஸங்கர்ஷணன்** என்கிற அவதாரத்தில் பகவானின் முழுமையான வெளிப்பாடு அமைகிறதன்றோ? எவர் வாஸுதேவ ஸ்வரூபியோ அவரே **ஸங்கர்ஷணன்** ஆகும். ப்ரத்யும்நனும் அவரே என்று **ஸு** எழுத்தின் பொருள் அமைகிறது.

### 'தே' எழுத்தின் பொருள்

பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் எம்பெருமானால் ஆகாஶம் படைக்கப்பட்டது. ஶரீரம் (ப்ரக்ருதி) ஆத்மா இரண்டுக்கும் வளர்ச்சிக்காக நாபீகமலத்துள் அடைக்கலம் கொடுக்கப்பட்டது என்பது **த** எழுத்தின் பொருள். அவரே **அநிருத்தன். ஏ** என்பதால் உலகத்துக்குக் காரணமான **ப்ரத்யும்நன் சொல்லப்படுகிறுன். ஸங்கர்ஷண** ஸ்வரூபத்தில் இருப்பவரே, **ப்ரத்யும்நன். அநிருத்தரும்** அவரே என்று **தே** என்பதன் பொருளாக விளக்கப்பட்டது.

### 'வ' எழுத்தின் பொருள்

இவ்வாறு மூன்று எழுத்துக்களால் **ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன்** இவர்கள் **வாஸுதேவ**ரிடமே அடைக்கலம் என்று சொல்லப்பட்டது. **வ** என்பதனால் மீண்டும் லயிப்பது சொல்லப்பட்டது. இவ்வாறு **வாஸுதேவ**

என்கிற திருநாமத்தில் மேலான பொருள் கூறப்பட்டது. ஜிதந்தா ஸ்தோத்ரத்தில் எல்லாவற்றையும் சொல்கிறேன், கேளும்.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸிம்ஹிதையில்** விஷ்ணு முதலிய
மந்த்ரங்களின் பொருள் விளக்கம் என்கிற
52வது அத்யாயம் முற்றிற்று.



### ஜிதந்தா மந்த்ரத்தின் பொருள் விளக்கம் என்கிற

## 53வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம் ।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥
*(விளக்கம் 18வது அத்யாயத்தில் உள்ளது)*

**மந்த்ரத்தில் அடங்கிய ஜி என்கிற வினைச் சொல், ப்ரகாஶம் தடையில்லாமை என்பவை நாம் செய்யும் நமஸ்காரத்துக்குக் காரணம்**

**அஹிர்புத்ந்யர்:- ப்ரகாஶம்** என்பதும் தடையில்லாமை என்பதும் **ஜி** என்கிற வினைச் சொல்லின் பொருளாகும். நமஸ்காரம் செய்பவனுடைய வணக்கம் (ப்ரணாமம்) என்கிற கார்யத்துக்கும் இவ்விரண்டும் காரணங்களாகின்றன.

**அவைகளின் ஞாநம் முதலிய ஆறு குணங்கள் உத்பத்திஸ்தாநம்**

அவ்விரண்டும் **(ப்ரகாஶம்,** தடையில்லாமை) ஞாநம், சக்தி முதலிய ஆறு குணங்கள் மூலம் பிறக்கின்றன. **ஞாநம், ஶக்தி, பலம், ஐஶ்வர்யம், வீர்யம், தேஜஸ்** இவற்றுக்குக் கடல் போன்ற பகவானே உலகத்துக்கு ஆத்மாவாக இருப்பதால் நமஸ்கரிக்கத் தக்கவர் என்று விளக்கப்படுகின்றன.

**புண்டரீகாக்ஷன் என்ற சொல்லின் பொருள்**

இதுவே **புண்டரீகாக்ஷன்** என்கிற சொல்லாலும் ஸூத்ரம் போல் சுருக்கமாகக் கூறப்பட்டது. ஆசையாலும் கோபத்தாலும் தூண்டப்பட்டவன் கண் மூலமாகவே புரிந்து கொள்ளப்படுகிறானல்லவா? இந்த பகவான் **அவாப்த ஸமஸ்தகாமன்** (எல்லாம் கிடைக்கப் பெற்றவன்). அதனால் அவற்றுக்கான கார்யங்களைச் செய்வதில்லை. முகத்தில் காமம் கோபம் இவற்றின் தோற்றம் இல்லாமையால் இவர் மலர்ந்த முகத்தோடு இருக்கிறார் என்பது **புண்டரீகாக்ஷன்** எனப்படும். காமம் போன்ற தீமைகள் இல்லாமலிருப்பதும் நற்குணங்கள் அனைத்தும் நிறைந்திருப்பதும் **புண்டரீகாக்ஷன்**

என்கிற சொல்லில் எம்பெருமானைப் பற்றி விளக்கப்படுகிறது.

## வாஸுதேவன் என்கிற வ்யூஹத்தின் முதலாவது மூர்த்தியின் விளக்கம்

**புண்டரீகாக்ஷன்** என்கிற சொல் நான்கு வ்யூஹங்களில் முதலாவதான வாஸுதேவனைக் குறிக்கும். இதே காரணத்தால் புண்டரீகாக்ஷனைப் பார்த்து, தன் நிலையையும் பார்த்துச் சதுர்முக ப்ரம்ஹன் நமஸ்காரம் செய்து **ஜிதம் தே** என்ற ஸ்தோத்திரத்தால் துதித்தார். இவ்வாறு வார்த்தைகளைத் தொடர்பு கொண்டு ஸ்தூலமான பொருள் சொல்லப்பட்டது. நாரத! ஸூக்ஷ்மமான பொருள் சொல்கிறேன், கேளும்.

## புண்டரீகாக்ஷன் என்கிற ஶப்தத்தால் பகவான் காலத்தினால் வரும் மாறுபாடுகளுக்கு உட்படாதவர் என்று விளக்கம்

**புண்டரீகம் 'காலம்'** என்கிற பெயருடைய புரம் ஆகும். அதை இவர்தானே ஜீரணிக்கிறார் (வஶப்படாதவர்). அதனால் எந்த விதச் சிதைவுமின்றி வெளிப்பட்டிருப்பதால், அந்தக் காலத்தால் எந்த மாறுபாட்டையும் உண்டு பண்ணப் படாதவராக இருக்கிறார். அதனால் **புண்டரீகாக்ஷன்** என்ற பெயர் பெற்றிருக்கிறார்.

## காலம் மூன்று வகை என்று கூறி அவ்விஷயத்தை விளக்குகிறார்

**ஸ்தூலம், ஸூக்ஷ்மம், பரம்** என்று காலம் மூன்று வகைப்படும். **பரப்ரம்மம்** என்று சொல்லப்பட்ட வாஸுதேவன் என்கிற பரமாத்மாவிடத்தில் இது செல்லு படியாகாது. **லவம்** (மணித்துளி) முதலிய காலம் ஸ்தூலமானது. தத்வங்களை விளக்க ஸூக்ஷ்மமாகப் பயன்படும். வ்யூஹங்களுடைய செயல்களில் வ்யாபித்திருக்கும் காலம் என்கிற பரதத்வம் விளக்கப்பட்டது.

## மூன்று வ்யூஹங்களிலிருந்து பரவாஸுதேவன் மாறுபட்டிருப்பதை விளக்குகிறார்

காலம் என்கிற தத்துவத்தால் மூன்று வ்யூஹங்களுக்கு எப்பொழுதும் தூண்டுதல் ஏற்படுகிறது. ஆனால் ஷாட்குண்ய பரிபூர்ணனான வாஸுதேவன் வ்யூஹங்களாலும் கூடக் காலத்துக்கு உட்பட முடியாது. மூன்று வ்யூஹங்களை வைத்தே மூன்று காலங்களை விளக்க வேண்டியது. காலத்தினாலும் அளக்க முடியாத இந்த வாஸுதேவன் அளவிட முடியாத தேஜஸ் உள்ளவர் என்று சொல்லப்படுகிறார்.

## புண்டரீகாக்ஷ ஶப்தம் நித்ய விபூதியைக் குறிக்கும்

தாமரை வடிவத்தில் உள்ள **பரமபதம்** அழிவில்லாததும் சிதைவு இல்லாததுமாக உள்ளது. அந்த இடத்தில் எப்பொழுதும் இருப்பதால் **புண்டரீகாக்ஷன்** எனப்படுகிறான்.

## அந்தப் பரவாஸுதேவனே தன் மஹிமையில் எப்பொழுதும் நிலைத்திருப்பவர்

**புண்டரீகம்** என்கிற **பரமபதம்** திவ்யமாகவே எப்பொழுதும் பெருமையுடன் விளங்குகிறது. இவருடைய விபூதியான அந்த வைகுண்டத்தில் இருப்பவராகையால் **புண்டரீகாக்ஷர்** என்று கூறப்படுகிறார். ஆகையால் **வாஸுதேவ**னே **புண்டரீகாக்ஷன்** என்கிற பெயரால் சொல்லப்படுகிறார். இப்பொழுது சொன்னது **புண்டரீகாக்ஷன்** என்கிற திரு நாமத்தின் ஸூக்ஷ்மார்த்தமாகும்.

## பரமமான அர்த்த விளக்கம்

**புண்டரீகாக்ஷன்** என்கிற சொல்லுக்கு மேலான பொருளைச் சொல்கிறேன், கேளும்.

## 'ப' எழுத்தின் பொருள்

பகவான் நாராயணன் காமம் முதலிய தீய குணங்கள் அற்றவர். மிகவும் பரிஶுத்தமானவர்.

## 'உ' எழுத்தின் பொருள்

அவருடைய ஸ்வரூபம் அநாதியாக ஏற்பட்டமையால் அவர் **உத்தமன், உதயன்** என்றும் சொல்லப்படுகிறார்.

## 'ண' எழுத்தின் பொருள்

மற்ற மூன்று வ்யூஹங்களுக்கும் மேலாக இருப்பதனால் **ப்ரதாநம்,** என்று சொல்லப்படுகிறது.

## 'ட' என்பதின் பொருள்

ஶுத்தமான மார்கம், அஶுத்தமான மார்கம் (**ஶுத்த ஸ்ருஷ்டி, ஶுத்தேதர ஸ்ருஷ்டி** என்று முன்பு சொல்லப்பட்டதை நினைவு கொள்க) இரண்டிலும் தொடர்பு கொள்வதால் **அகண்ட விக்ரமன்** என்று கருதப்படுகிறார்.

## 'ரீ' என்பதின் விளக்கம்

**ஸங்கர்ஷணன்** முதலாக பூமி வரையில் உள்ள உலகத்துப் பொருள்கள் அனைத்தையும் இவர் உள்ளும் புறமுமாக வ்யாபித்து இருந்துத் தாங்குகிறார்.

## 'தா' என்பதின் விளக்கம்

இவருக்கு எந்த விதமான அபேக்ஷையும் (தேவையும்) இல்லாமையால் **ஆநந்தா** எனும் மூலப் ப்ரக்ருதியும் தானாகவே இருக்கிறார்.

## 'க்ஷ' எழுத்தின் விளக்கம்

ஜீவன்களும் ஜடப் பொருள்களும் சேர்ந்து ஶுத்தமாகவும் அஶுத்தமாகவும் இந்த உலகத்துக்கு இவர் கடைசி எல்லையாக இருக்கிறார். ஆகையால் **வர்காந்தம்** (அக்ஷரம் கடைசி எழுத்து **க்ஷ) போல் இருக்கிறார்.**

## புண்டரீகாக்ஷன் என்கிற சொல்லின் பொருளை எத்தனை காலமானாலும் முழுமையாகச் சொல்ல இயலாது

இவ்வாறாக அக்ஷரங்களைக் கொண்டு உத்தமமான பொருள் விளக்கப்பட்டது. லக்ஷக் கணக்கான வருடங்கள்

சொன்னாலும் இதன் பொருள் முழுமையாகச் சொல்ல இயலாது.

**மந்த்ரத்தின் இரண்டாவது பாதத்தின் பொருள் விளக்கம்**

**விஶ்வபாவந** என்கிற இந்தத் திரு நாமம் **ஸங்கர்ஷணன்** என்கிற வ்யூஹத்தின் பெருமையை விளக்குகிறது. **க்ரியாபதம்** (verb) **காரகங்கள்** இவற்றின் ஸம்பந்தத்தினால் கிடைக்கும் பொருள் சொல்லப்பட்டது.

**ஸூக்ஷ்மார்த்தத்தின் விளக்கம்**

இப்பொழுது ஸூக்ஷ்மமான பொருளைச் சொல்கிறேன்.

**விஶ்வபாவந என்கிற சொல் ஸர்வகாரணம் என்பதைக் குறிக்கும்**

**சித், அசித்,**(ஜீவன், ஜடம்) நிறைந்த இந்த உலகத்தை **வாஸுதேவன் ப்ரத்யும்நன்** மூலம் படைத்து இயக்குவதால் **விஶ்வபாவநர்** ஆகிறார்.

**காரணமாகையால் எல்லாம் அறிந்தவர்**

உலகத்துக்கு உருவமும் கொடுத்துப் படைக்கிறார். அவற்றின் தன்மையை நன்றாக அறிந்திருக்கிறார். இதனால் **வ்யாகரணம்** அறிந்தவர்களால் இவர் **விஶ்வபாவநர்** என்று அழைக்கப்படுகிறார்.

**ஸங்கர்ஷணனைக் குறிக்கும் சொல்**

உலகத்தை எப்பொழுதும் தாங்கிக் கொண்டிருக்கும் இவர் மூலமாக இந்த உலகம் தோன்றுவதால், பலஶாலியான **பலதேவன் விஶ்வபாவநர்** என்பதால் சொல்லப்படுகிறார்.

**எல்லாவற்றுக்கும் அதிபதி (ஸ்வாமி)யாக இருக்கிறார்**

இந்த உலகம் (ப்ரளய காலத்தில் ஒடுங்கி இருந்ததால்) தலைவனற்றதாக இருந்தது. அதை இவர் படைத்ததால் தலைவன் (ஸ்வாமி) எனப்படுகிறார். அதை ஸ்வாமியாக இருந்து கடாக்ஷித்ததனால் **விஶ்வபாவநர்** எனப்படுகிறார்.

## எல்லாவற்றுக்கும் ஆதாரத்தைச் சொல்கிறது

உலகம் தோன்றுவதற்கு விஶாலமான ஆதாரமாகத் தானே இருந்ததனால் **விஶ்வபாவநர்** ஆகிறார். திலகத்தின் மேலுள்ள சுருண்ட கூந்தல் போல் இவர் மீது நிலைத்திருக்கிறது. மிகப் பெரிய ஆதாரமாக இருப்பதால் தான் **விஶாலாக்ஷன்** எனப்படுகிறார். அந்த உலகத்தைத் தாங்குவதால் விஶ்வமாக இருக்கிறார். **விஶ்வபாவநன்** என்று சொல்லப்படுகிறார். இவ்வாறு **விஶ்வபாவந** என்கிற சொல்லுக்கு ஸூக்ஷ்மமான பொருள் சொல்லப்பட்டது.

### பரமமான பொருள்

உத்தமமான பொருளைச் சொல்கிறேன், கேளும்.

### 'வி'என்பதன் பொருள்

அம்ருதத்துக்காக ஆதாரமாகிய **பரவாஸுதேவன், வ்யூஹவாஸுதேவன்** முதலிய உருவமாகத் தோன்றி யிருக்கிறார்.

### ' ச்' என்பதன் பொருள்

ஸகல ப்ராணிகளுக்கும் நல்ல ஞானத்தை உபதேஶித்ததால் ஶங்கர் எனப்படுகிறது.

### இரண்டாவதாக உள்ள 'வ' என்பதின் பொருள்

பகல்களுக்கும் மேலான பகலாக இவர் இருக்கிறார். ஆகையால் **வராஹர்** எனப்படுகிறார். **அஹ:** என்பது **வாஸுதேவனின்** அவதாரமான **ஸங்கர்ஷணனைக்** குறிக்கும்.

### 'பா' என்பதன் பொருள்

ஸகல ஜீவர்களுக்கும் ஸித்தியைக் கொடுக்கிறார். தேவர்களுக்கெல்லாம் மூல காரணமாக இருக்கிறார்.

### ப என்பதில் தொக்கி நிற்கும் ஸித்திப்ரதன் என்பதின் விளக்கம்

பல வகை நல்ல ஶாஸ்த்ரங்கள் (ஸாத்விக ஶாஸ்த்ரங்கள்) தெரிவிக்கும் ஶுத்தமான கர்மாக்களைக்

கொடுத்து உதவி, ஜீவர்களுக்கு ஸித்தியைக் கொடுக்கிறார் என்பதாலும் **ஸித்தித:** எனப்படுகிறார்.

### ஆ என்பதில் தொக்கி நிற்கும் ஆதித்வம் தேவத்வம் இவற்றின் விளக்கம்

சதுர் வ்யூஹங்களோடு கூடிய **லீலா விபூதி**யைச் சேர்ந்த அனைத்துக்கும் அந்த விஷ்ணுவே ஆதியில் இருப்பவர். ஆதியாகவும் இருக்கிறார். நன்கு ப்ரகாஶமாக லீலைகளும் செய்கிறார் என்பதால் அவர் **ஆதி தேவர்** எனப்படுகிறார்.

### மூன்றாவது 'வ'வுக்கும் 'ந'வுக்கும் பொருள் விளக்கம்

இருள் அனைத்தையும் மறைக்கிறார். அக்ஷரம் என்று சொல்லப்பட்ட பரமபதத்தை நமக்குக் காட்டியருள்கிறார். அவர் **வருணர்** என்றும் அளவிட முடியாத (பெருமையை உடைய) ஸ்ரீவைகுண்டத்தில் இருப்பவர் என்றும் கூறப்படும் அந்த விஷ்ணுவே **மார்கம்** (உபாயம்) என்று ஞாநிகளால் சொல்லப்படுகிறார். இவ்வாறு **விஶ்வபாவந** என்கிற சொல்லுக்கு எழுத்துக்களைக் கொண்டு மேலான பொருள் கிடைக்கப் பெற்றது.

### மந்திரத்தின் மூன்றாவது பாதத்திலுள்ள ஸ்தூலமான பொருள் முன்பே விளக்கப்பட்டது என்கிறார்

இப்பொழுது **ஹ்ருஷீகேஶன்** என்கிற சொல்லின் பொருளைக் கூறுகிறேன் கேளும். வினைச் சொல், காரகம் இவைகளின் ஸம்பந்தம் இவற்றால் கிடைக்கும் பொருளை முன்பே சொன்னேன்.

### ஸூக்ஷ்மமான பொருள் விளக்கம்

**ப்ராதிபதிகத்தின்** பொருள் எதுவோ அதுவே ஸூக்ஷ்மப் பொருள். அதைச் சொல்கிறேன், கேளும். **(குறிப்பு; ப்ராதிபதிகம்** என்பது ஒரு பெயர்ச் சொல்லோ வினைச் சொல்லோ் வேறு எந்த விகுதியுடன் சேராமல் இருப்பது. (உ-ம்) **ராம, க்ருஷ்ண, வ்ருக்ஷ** என்பவை. ராம: **க்ருஷ்ண: வ்ருக்ஷ:** என்பவை அல்ல.)

## ஞானம், தேஜஸ் பரத்வம் இவைகளின் விளக்கம்

வேதம் என்கிற வித்யைக்கு இருட்டாகவும், பகைவனாகவும் இருந்த மது என்கிற அஸுரனை ஸம்ஹாரம் செய்து அதை (வேதத்தை) பகவான் மீண்டும் கொடுத்தார். ஸாதுக்களைப் பற்றியும், ஸத்வ குணம் பற்றியும் விளக்கும் வேத வித்யையை ப்ரகாஶம் அடையச் செய்தார். இந்தக் கருத்திலேயே **ஹ்ருஷீகேஶன்** என்கிற திருநாமம் ஈஶனுக்கு ஏற்பட்டது என்று ஞானிகளால் சொல்லப்படுகிறது.

## வித்யையை ஶுத்தமாக்கியும் மகிழ்விக்கும் ப்ரத்யும்நனைக் குறிக்கிறது

இதன் விளக்கம் வித்யையை ஶுத்தமாக்கி ஈஶனாகிய விஷ்ணு ப்ரம்ஹதேவனை மகிழ்வித்தார் என்பதால் **ஹ்ருஷீகேஶன்** என்கிற நிலை வ்யூஹத்தில் நான்காவதாகப் பரமாத்மாவுக்குச் சொல்லப்பட்டது.

## ஞானேந்த்ரியத்தை இயக்குகிறது

ஞானேந்த்ரியம் ஐந்து இந்த்ரியங்களில் ஒன்று. இதைப் பரமாத்மா உள்ளே இருந்து இயக்குகிறார். இது **ப்ரத்யும்நன்** என்கிற வ்யூஹத்தின் **ஹ்ருஷீகேஶன்** எனப்படுகிறார்.

## உலகத்தின் உருவம் விளக்கம்

**ஹ்ருஷீகா:** என்பதற்கு ஶப்தம், ஸ்பர்ஶம் முதலிய உலகில் உள்ள விஷயங்கள் என்பது பொருள். இவை **ப்ரக்ருதி** என்றும், **ப்ராக்ருதம்** என்றும் சொல்லப்படுகின்றன. இவை உலகத்தில் உள்ள ஜீவர்களை மகிழ்விக்கின்றன அன்றோ! அவற்றுக்கெல்லாம் ஈஶன் என்கிற பொருளில் இது அமைந்திருக்கிறது. இவர் உலகத்தின் உருவத்தில் இருக்கிறார். உலகம் விஷ்ணுமயமாகவும் உள்ளது.

## ஸ்ருஷ்டி முதலிய விளையாட்டில் மகிழ்ச்சியடைதல்

ஈஶனாகிய பகவான் உலகத்தைப் படைத்தல் என்கிற லீலையால் மிகவும் மகிழ்ச்சியடைகிறார். இந்தப் பொருளிலும் **ஹ்ருஷீகேஶன்** என்கிற சொல் அமைந்துள்ளது. அவரே உயர்ந்த தெய்வம் என்பதும் தெளிவாகிறது.

### ஐஶ்வர்யம் வீர்யம் இவற்றின் இருப்பிடம்

விளையாட்டுக்கான பொருள் உருவத்தில் இருக்கும் தன் விகாரமற்ற நிலையினால் மகிழ்ச்சியடைகிறார். படைத்தல் முதலிய கார்யங்களில் ஸ்வதந்த்ரமாக இருப்பதால் ஈஶனாகவும் இருக்கிறார் என்கிற பொருளும் சொல்லலாம். இதனால் **ஐஶ்வர்யம் வீர்யம்** என்கிற இரண்டு குணங்கள் இந்த **ப்ரத்யும்ந**னுக்கு மிகுதியாக இருப்பதால் **ஹ்ருஷீகேஶன்** என்கிற பெயர் கிடைக்கிறது.

### எல்லா சேதநங்களுக்கும் ஈஶன்

**ஹ்ருஷீ** என்றால் ஞாநம் என்பது பொருள். நடமாடும் ஜீவர்களே **ஹ்ருஷீகர்** எனப்படுவர். அவர்களுக்கு எல்லாம் **ஈஶன்** என்கிற பொருளும் கொள்ளலாம். இவ்வாறு **ப்ராதிபதிகத்தில்** கிடைக்கும் ஸூக்ஷ்மமான பொருள் கிடைக்கப்பட்டது.

### மேலான பொருள் விளக்கம்

இப்பொழுது எழுத்துக்களைக் கொண்டு கிடைக்கும் உயர்ந்த பொருளைச் சொல்கிறேன் கேளும்.

### 'ஹ' என்பதின் விளக்கம்

எல்லா ஜீவர்களையும் சுத்தமான **ஸத்தர்மாசாரன்** என்கிற வகையில் ப்ராணன் உள்ளவர்களாகச் செய்கிறார்.

### 'ரு' என்பதின் பொருள்

இந்த எம்பெருமான் **ஸத்யம்** என்றும், **ஸத்** என்றும் **த்யத்** என்றும் உருவங்களோடு தோன்றுகிறார் என்பதாலும் ரு என்பது பகவானையே குறிக்கும்.

### 'ஷீ' என்பதன் பொருள்

வியக்கத் தக்க வகையில் மாயையைக் கொண்டு ஆகாயத்தில் ஸூர்யனை இவர் தாங்குகிறார்.

மிகவும் பெரிய உருவத்தில் உள்ளதும், உலகத்துக்கெல்லாம் காரணமும், **தமஸ்** எனும் உருவத்தில் இருப்பதுமான பொருளை மாயையால் தாங்குகிறார்.

**'ஶ' என்பதின் பொருள்**

**அப்ரமேயம்** என்கிற ஸ்ரீவைகுண்டத்தில் மாயையை அடக்கி ஆளுகிறார். இவ்வாறாக எழுத்துக்களைக் கொண்டு கிடைக்கும் பொருள் **நாரத முனிவரே !** மூன்று வகையாக **ஹ்ருஷீகேஶன்** என்பதற்குச் சொல்லப்பட்டன.

**மந்த்ரத்தின் நான்காவது பாதத்தின் ஸ்தூலமான பொருள்**

**மஹாபுருஷ பூர்வஜ** என்கிற சொல்லில் உள்ள மூன்று வகைப் பொருள்களைச் சொல்கிறேன் கேளும். **ஜிதம் தே** என்பதைச் சேர்த்துக் கொண்டு அல்லது **ஜய** என்பதைச் சேர்த்துக் கொண்டு **நமஸ்தேऽஸ்து** என்பதைச் சேர்த்தும் முழுமையான வாக்யமாக அமைத்துக் கொள்ளலாம். எப்பொழுதும் உலகங்களுக்குத் தலைவனாகவும், உயிருள்ள பொருள்கள், உயிரற்ற பொருள்கள் **(சித், அசித்)** இந்த ஸ்வரூபத்தில் இருப்பவருமான **அநிருத்தன்** என்கிற திவ்ய மூர்த்தி விஷயத்தில் இந்த **ஜய** என்கிற சொல் நமஸ்காரத்தைக் குறிப்பதாக உபயோகிக்கப்பட்டிருக்கிறது. **ஜிதம் தே** என்கிற இந்த வாக்யம் ஆண்டவன், அடிமை **(ஶேஷி ஶேஷன்)** என்கிற ஸம்பந்தத்தைக் குறிப்பதாகும். **நமஸ்காரம்** என்பது பக்கத்தில் இருப்பவனுக்குச் செய்யப்படுவது. எல்லாவற்றையும் விட மேலே இருக்கக் கூடிய பகவானிடத்தில் எப்படிப் பொருந்தும்? **ஶேஷத்வாநுஸந்தாநம்** என்று சொன்னபடி மிகவும் உயரத்திலிருப்பவர் எந்த உருவத்தில் அருகில் வருவாரோ, அந்த உருவம் இரண்டாவதான **அநிருத்தனும்** மூன்றாவதான **ப்ரத்யும்நனும்** ஆவார்கள். ஆறு குணங்களோடு கூடிய **அநிருத்தன்** இரண்டு வகையில் உலகங்களுக்கு நன்மை செய்கிறார் என்கிற இந்தக் கருத்தைக் காட்டுவதற்காக அங்கு (ஶ்லோகத்தில்) **ஜய நம:** என்று சொல்லப்பட வேண்டும்.

வினைச் சொல், **காரகங்கள்** இவற்றால் கிடைக்கும் ஸ்தூலமான பொருள் இவ்வாறு விளக்கப்பட்டது.

**ஸூக்ஷ்மமான பொருள் விளக்கம்**

**ப்ராதிபதிகத்தில்** கிடைக்கும் ஸூக்ஷ்மத்தைச் சொல்கிறேன் கேளும்.

**'ம'என்பதின் பொருள்**

இந்த ஶரீரம், அதற்குள்ளே இருக்கும் ஜீவன், இவர்களுடைய உருவத்திலிருக்கும் பகவானைப் பொருள்கள் பலவாறு அளக்கின்றன.

**'ஹா'என்பதின் பொருள்**

அத்தனைப் பொருள்களையும் விடுகிறார் என்றும், அவற்றின் உள்ளே **அந்தராத்மா**வாக வ்யாபித்திருக்கிறார் என்ற பொருளைக் குறிக்கிறது.

**'மஹா'என்று மொத்தத்தின் பொருள்**

அந்த எல்லாவற்றையும் உயிர் கொடுத்து இயங்கச் செய்கிறார். இத்தகைய பொருள்களில் கொண்டாடப் படுகிறார்.ப்ரம்மா ருத்ரன் போன்ற மஹான்களை விடப் பெரிய **மஹான்** என்கிற பொருளிலும் **மஹா** என்கிற சொல் அமைந்திருக்கிறது.

**'பு'என்கிற எழுத்தின் விளக்கம்**

பொருள்கள் என்கிற வடிவம் வரும் வரை காத்தலைச் செய்கிறார். அடிக்கடி அவதரிக்கிறார் என்று பொருள்.

**'ரு'என்பதின் விளக்கம்**

பல வகை விஷயங்களைக் கொண்ட ஶாஸ்த்ரங்களை உபதேஶிக்கிறார் என்றும், அந்தந்தப் பொருள்களின் பெயரால் அழைக்கப்படுகிறார். பூஜைகளைச் செய்கிறார். அவ்வாறே அவைகளைப் பெறுகிறார் என்றும், நம்மால் துதிக்கப்பட்டால் கோரிய பலன்களைக் கொடுக்கிறார் என்றும் பேசப்படுகிறது.

## 'ஷ'என்பதின் விளக்கம்

பாபங்களைப் போக்கடிக்கிறார். இவர் மக்களால் பல வகையாகப் பஜனை செய்யப்படுகிறார்.

## 'புருஷ' என்கிற முழுச் சொல்லின் பொருள்

படைத்தல் என்கிற கார்யம் முடிந்த பின் ஶரீரத்தில் ப்ரவேஶிக்கிறார். பலராலும் எப்பொழுதும் ஸேவிக்கப்படுகிறார். ஶரீரத்துள் அந்தராத்மாவாக இருக்கிறார். ஶரீரத்தைப் படைக்கிறார். பல வகைப் பூதங்களின் (பொருள்களில்) அமர்ந்திருக்கிறார்.

## 'பூர்' என்பதின் விளக்கம்

இந்த உலகத்தில் உள்ள சேதநர்களையெல்லாம் கரையேற்றுகிறார். எல்லாவகை இருளையும் போக்குகிறார்.

## 'வ' 'ஜ'என்பதின் விளக்கம்

ஆஶ்ரயித்தவர்கள் அனைவரையும் ரக்ஷிக்கிறார். இருள் சூழ்ந்த இந்த உலகத்தைக் காப்பாற்றுகிறார். பகவானை வெறுப்பவர்களை, இல்லையென்பவர்களை நிச்சயமாக க்ரூரமான பிறவிகளில் தள்ளுகிறார் (பிறக்க வைக்கிறார்).

## 'பூர்வஜ' என்பதின் மொத்தமான பொருள்

தான் ஆதியாகவும், புராண புருஷனுமாகவும், இருந்தும் பல வகையான உருவங்களை எடுத்து அவதரிக்கிறார் என்றும், எல்லா தேவர்களுக்கும் முன்பு இருப்பவரும் இந்த பகவானுடைய திருமேனியிலிருந்து **அஜன்** என்கிற நான்முகன் பிறந்தான் என்றும் இவருடைய முதல் புத்திரன் **அஜன்** என்ற பெயரில் **பிரமன்** முதலில் படைக்கப்பட்டான் என்று பொருள் கொள்ளப்படுகிறது. ஆதியில் யாசித்தவர்கள் என்ற காரணத்தால் ஜீவர்கள் **பூர்வா:** என்று சொல்லப்படுகிறார்கள். அத்தகைய **பூர்வர்**களைத் தானும் உள்ளே புகுந்து பிறக்கும்படிச் செய்கிறான்.

### 'மஹா புருஷ' என்பதின் விளக்கம்

எல்லா உலகங்களையும் படைக்கும் வேலையில் **மஹத்வமும்** (மஹிமை), வேறு தேவையும் இல்லாமல் இருப்பதும், ஜீவன்களுடன் சேர்ந்திருப்பதும், இவருக்கு மஹாபுருஷன் என்கிற நிலைக்குக் காரணமாகிறது. இதுவே ஆறு குணங்களில் ஒன்றான தேஜஸ் என்பதாகும். அதுவே **ஶக்தி** எனப்படுகிறது. ஆகையால் **அநிருத்தன்** நிலையும் **பகவான்** என்கிற நிலையும் இதுவே. ரக்ஷணம் (காத்தல்) படைத்தல், ஒடுங்குதல், ஆபத்திலிருந்து காத்தல் இவற்றுக்குக் காரணம் இதுவே. இவ்வாறு சொற்களிலிருந்து கிடைக்கும் ஸூக்ஷ்மமான பொருள் உமக்கு விளக்கப்பட்டது.

### பரமான பொருள் விளக்கம்

இப்பொழுது எழுத்துக்கள் மூலம் கிடைக்கும் மேலான பொருளைச் சொல்கிறேன், கேளும்.

### 'ம' எழுத்தின் விளக்கம்

எல்லா துஷ்டர்களையும் அழிப்பவர். அளவிட முடியாத பலம் பொருந்தியவர்.

### 'ஹா' என்பதின் விளக்கம்

எப்பொழுதும் பகைவர்களுக்கும் நன்மை செய்பவர். எல்லா ப்ராணிகளையும் காப்பவர். நல்ல கார்யங்கள் செய்பவர்களுக்குத் தெளிவான மார்கமாக இருக்கிறார். மூன்று வேதங்களில் சொல்லப்படும் யாகம் முதலிய கார்யங்களால் அவதரிப்பவர்.

### 'பு' எழுத்தின் பொருள்

தன் நாபியிலிருந்து தாமரையைப் படைத்தும், பாற்கடலில் படுத்தும், பெரிய உலகங்களைப் படைத்தவர்.

### 'ர்' எழுத்தின் பொருள்

அனைத்து உலகங்களுக்கும் ஆதாரம், பல வகைச் செயல்களின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் செய்பவர்.

## 'ஷ' 'ப' எழுத்தின் விளக்கம்

ப்வேத த்வீபத்தில் ந்ருஸிம்ஹன் வடிவத்தில் இருந்து கொண்டு, ஹவிர் பாகங்களை ஏற்றுக் கொள்ளும் தேவர்களுக்கு அக்நி வடிவத்தில் இருப்பவரும், எல்லா தேவர்களுக்கும் **பக்தியை** (ஒளி) கொடுப்பவரும், ஸாதுக்களுக்கு உத்தமமான புனிதனாகவும் ஆவார்.

## 'ஊ' வின் விளக்கம்

பலவகை ஜ்ஞாநங்களுக்கும், செயல்களை நிறைவேற்றுவதற்கு ஆதாரமாவார்.

## 'ர்' எழுத்தின் விளக்கம்

மிகுந்த பலம் உடையவரும், எல்லா உலகங்களுக்கும் தலைவரும் கல்பத்தின் முடிவில் காலத்தையும் ஒடுக்கக் கூடியவர்.

## 'வ', 'ஜ' எழுத்தின் விளக்கம்

பூமியை மேலுக்குத் தூக்கி வரும்பொழுது, வராஹ உருவமாக இருந்தவர். ஸாதுக்களுக்குப் பிறவியை ஒழிப்பவர். தேவர்களாலும், அஸுரர் முதலியவர்களாலும் ஜயிக்க முடியாதவர். அதனால் **மஹாபுருஷ பூர்வஜர்** என்று சொன்னதாயிற்று. இவ்வாறு **மஹாபுருஷ பூர்வஜ** என்பதற்கு எழுத்துக்களை ஆதாரமாகக் கொண்டு விளக்கம் சொல்லப்பட்டது.

## மந்த்ரத்தின் தாத்பர்யம்

**ஜிதந்தே** என்று தொடங்கும் இந்தப் பெரிய மந்த்ரம் பலவாறாகப் பெரிய விஷயங்களைக் கொண்டது. சக்ரத்தின் உருவத்தில் இருப்பவரும் பலவித அவதாரங்கள் செய்த அநாதியான அந்த பகவான் **விஷ்ணுவை** இது குறிக்கிறது.

இவ்வாறுகப் பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் ஜிதந்தா** என்கிற
மந்த்ரத்தின் விளக்கம் என்னும் 53வது அத்யாயம்
முற்றிற்று.

**நரஸிம்ஹனைப் பற்றி அநுஷ்டுப் சந்தஸ்ஸில் அமைந்த மந்த்ரத்திற்கு விளக்கம் என்னும்**

# 54வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம் ।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥
*(விளக்கம் 18வது அத்யாயத்தில் உள்ளது)*

**7 ஶ்லோகங்களால் மந்த்ரத்தின் மஹிமை விளக்கம்**

**அஹிர்புத்ந்யர்** :- நாரத முநிவரே ! இவ்வாறு **ஜிதந்தே** என்று தொடங்கும் பெரிய மந்த்ரம் சுருக்கமாக உமக்குச் சொல்லப்பட்டது. இப்பொழுது **நரஸிம்ஹன்** விஷயமாக மந்த்ரத்தை உள்ளபடி சொல்கிறேன், கேளும்.

**இவ்வுலகிலும் மேலுலகிலும் பலன் தரக் கூடியது**

இந்த **ஸ்ரீ நரஸிம்ஹனைப்** பற்றிய பெரிய மந்த்ரம் யாவருக்கும் ஆச்சர்யத்தைத் தருவதாகும். மேலும் தேவலோகத்திலும், ஆகாயத்திலும், பூமியிலும் கிடைக்கக் கூடிய ஸுகபோகங்களைத் தரவல்லதாகும். **ஆத்யாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதி தைவிகம்** என்கிற மூன்று வகையான ஆபத்துக்களை விலக்க வல்லது (மூன்றுவகை ஆபத்துக்கள் :- **ஆத்யாத்மிகம்** - ஶரீரத்தில் ஏற்படும் பல வகைத் தொல்லைகள்; **ஆதி பௌதிகம்** - இடி, பெருவெள்ளம், காற்று, தீ, பூகம்பம் முதலியவைகளால் வரும் தொல்லைகள்; **ஆதி தைவிகம்** - மனிதர், உறவினர், நண்பர் இவர்களால் அகாலத்தில் ஏற்படும் தொல்லைகள்) அவ்வாறு அரக்கர், அஸுரர், தாநவர் இவர்களை அழிக்கவல்லது.

**ஸாங்க்யம், யோகம், பாஞ்ச ராத்ரம், வேதாந்தம் பாஶுபதம் முதலியவைகளால் ஏற்கத்தக்கது.**

ஸாங்க்யர்களுடைய மேலான ஜ்ஞாநமும், இவராலேயே கிடைக்கக் கூடியது. மேலும் இதுவே மனதை அடக்கி **அஷ்டாங்க யோகம்** செய்பவர்களுக்கு மேலுக்கு

ஏறும் படியாகும். பாஞ்சராத்ர ஸித்தாந்தத்தைக் கடைபிடிக்கும் ஜ்ஞாநிகளுக்கு இதுவே பெரிய ஸாதநமாகும். இதுவே மூன்று வேதங்களுக்கும் ஸூக்ஷ்மமான உட்பொருளாகும். மேலும் இதுவே பாஶுபத மதத்துக்கு (பஶுபதியால் ஏற்படுத்தப்பட்டது) அடிப்படை.

### ஸங்கர்ஷணன் இந்த மந்த்ரத்தை ஜபித்தல்

**ஸங்கர்ஷணன்** என்கிற மூர்த்தியும் இந்த உலகமெல்லாம் படைக்கப்பட்ட பிறகு எல்லா ஜீவன்களுக்கும் நன்மைக்காக ஜ்ஞாநத்தைக் கொடுக்கவல்ல இந்த உத்தம மந்த்ரத்தை ஜபித்தார்.

### ப்ரஹ்மன், ருத்ரன் முதலியவர்களும் இந்த மந்த்ரம் பெறுதல்

நான்முக ப்ரஹ்மனும் கடுமையான தவம் செய்து ஸங்கர்ஷணனிடமிருந்து இந்த மந்த்ரத்தை உபதேசம் பெற்றார். நானும் அந்த ப்ரஹ்மனிடமிருந்து உபதேஶம் பெற்றேன். என்னிடமிருந்து தேவர்ஷிகள் பலர் உபதேஶம் பெற்றனர்.

### ஶேஷத்வ ஜ்ஞாநத்துடன் தன்னையும் தன்னைச் சேர்ந்தவர்களையும் பகவானிடம் ஸமர்ப்பித்தல் என்கிற விளக்கம்

**நமநம், நதி, நீசிபாவம்** இவை வணக்கத்தைக்குறிக்கும் சொற்களாகும். **ஶேஷத்வம்** என்பது எம்பெருமானைப் பற்றித் தன்னைத் தாழ்ந்தவன் என்று நினைத்தல்; **நமாமி** என்கிற சொல்லைச் சொல்லிக் கொண்டு தன்னிடத்தில் ஶேஷத்வத்தை (தாஸ்யம்- அடிமைத்தனம்) நினைத்து மந்த்ரத்தை அறிந்தவர் தன்னையும் தன்னைச் சார்ந்தவர்களையும் அவரிடம் ஸமர்ப்பிப்பார்.

### மந்த்ரங்களில் உள்ள உக்ரம் முதலிய பதங்களால் ரௌத்ரம் முதலிய ரஸங்கள் தெரிவிக்கப்படுதல்

மிகவும் கடுமையான கோபம் என்பதால் **ரௌத்ரரஸம் உக்ரம்** என்று சொல்லப்படுகிறது. மிகவும் அதிகமான உத்ஸாஹத்திலிருந்து **வீரரஸம் வீரம்** என்று குறிக்கப்படுகிறது.

மஹாவிஷ்ணு முதலிய நான்கு சொற்களால் **அத்புத ரஸ**மும், மிகுந்த பயத்தைக் கொடுக்கக் கூடிய தோற்றத்தால் **பயாநக ரஸமும்**, முனிவரே ! மந்த்ரத்திலுள்ள **பத்ர** என்கிற சொல் **ஶ்ருங்கார ரஸத்தை**யும் குறிக்கிறது. **ம்ருத்யு ம்ருத்யு** என்கிற சொற்கள் **அத்புதரஸத்தையும், பயாநகரஸத்தை**யும் குறிக்கும்.

### அஹம் என்பதால் ஶேஷத்வம்

இங்குள்ள **அஹம்** என்கிற சொல் பாகவதன் என்கிற வகையில் தன்னைக் குறிக்கும்.

### உக்ரம் முதலிய பதங்களால் குறிக்கப்பட்ட ரௌத்ரம் முதலிய ரஸங்கள் விஷ்ணுவைச் சார்ந்தவை என்பதின் விளக்கம்

ஹிரண்யகஶிபுவின் பகைவன் என்ற நோக்கில் **உக்ரன்** ஆகிறார். தேவர்களின் நோக்கில் **வீரன்** ஆகிறார். **மஹாவிஷ்ணு, ஜ்வலன், ஸர்வதோமுக:** என்கிற சொற்கள் **ந்ருஸிம்ஹன்** என்பதும், யோகிகள், ஸித்தர்கள் இவர்கள் நோக்கில் ஆகிறார். **பீஷணன்** என்று தாழ்ந்த அரக்கர் நோக்கில் ஆகிறார். ஆநந்தத்துடன் கூடிய கடைக்கண்களையுடைய மஹாலக்ஷ்மியின் நோக்கில் **பத்ரன்** என்ற தோற்றம் அளிக்கிறது. ருஷிகளின் பார்வையில் பயம், ஆச்சர்யம் கலந்திருப்பதால் **ம்ருத்யும்ருத்யு** ஆகிறார். வினைச் சொல், காரகங்கள் இவைகளின் ஸம்பந்தம் இவற்றால் கிடைக்கும் ஸ்தூலமான பொருள் சொல்லப்பட்டது.

### ஸூக்ஷ்மமான பொருள்

**ப்ராதிபதிகத்தால்** கிடைக்கும் ஸூக்ஷ்மமான பொருளை இப்பொழுது சொல்கிறேன், கேளும்.

### 'உக்ர' என்பதின் பொருள்

எல்லா உலகங்களையும் தன் உள்ளிருந்து தோற்றுவிக்கிறார். தோற்றுவிக்கப்பட்டவற்றை, **தானே** விழுங்குகிறார். இது **உக்ர** என்பதன் பொருள்.

ஒன்பது வகை ரஸங்களையும் தோற்றுவிக்கிறார். பல விதங்களில் களிப்பூட்டுகிறார் என்று வீர என்பதின் பொருளாகும்.

## 'மஹா'' என்பதால் மூன்று வகைகளில் அளவிடமுடியாத தன்மை

**காலம், தேஶம், வஸ்து** இவற்றால் அளவிடமுடியாத தன்மை **மஹான்** எனப்படும்.

## மஹான் என்பதற்கு ஒன்பது வகை விளக்கம்

எல்லோராலும் போற்றப்படுகிறார். ப்ரளயத்தில் ஒடுங்கியிருந்த ஜீவராஶிகளை வெளிப்படுத்துகிறார். விதவிதமான உருவங்களை எடுக்கிறார். ஸ்ருஷ்டிக்கிறார். எல்லாவற்றையும் உணர்ந்திருக்கிறார். அவதாரங்களில் தன் ஸ்வரூப லக்ஷணங்களை த்யாகம் செய்கிறார். மஹாலக்ஷ்மியைத் தன் மார்பில் வைத்திருக்கிறார். இத்தனைப் பொருள்களாலும் அவர் மஹான் ஆகிறார். உலகம் இவருக்குள் அடங்கியிருக்கிறது. இவர் உலகத்தை ஒருபோதும் விடுவதில்லை.

## சொன்னவற்றின் விளக்கம்

**பரமபதம்** என்கிற ஸ்ரீவைகுண்டத்தில் நித்யர்களாலும், முக்தர்களாலும் போற்றப்படுகிறார் **(ஸதா பஶ்யந்தி ஸூரய:)** இவர் பக்தர்களின் விருப்பங்களைக் கொடுத்து அருள்கிறார். அவதாரங்களில் தன் லீலைகளால் வியக்க வைக்கிறார். ஸ்ருஷ்டியில் ஜலத்தில் தன்னைப் புக வைக்கிறார். அதை அண்டமாகப் பரிணமிக்கச் செய்கிறார். எப்பொழுதும் யோகத்தில் இருப்பதால் ஜ்ஞாந ஸ்வரூபமான தன் மூலம் எல்லாவற்றையும் தெரிந்து கொள்கிறார். உலகத்தில் உள்ள பொருள்கள் அனைத்துக்கும் உள்ள ஆறுவகை பாவ விகாரங்கள் இவருக்குக் கிடையாது (குறிப்பு :- (1) **அஸ்தி, (2) ஜாயதே, (3) வர்ததே, (4) உபசியதே, (5) அபசியதே, (6) நஶ்யதி**-இவை பகவானுக்குக் கிடையாது) '**மா**' என்பது

**லக்ஷ்மி. மஹாதேவி** என்பது திருநாமம். இவளை ஏற்றுக் கொள்கிறார். எப்பொழுதும் ஒருவரோடு ஒருவர் சேர்ந்தே இருப்பதால் அந்தத் திவ்ய தம்பதிகள் **மஹான்.** இந்த உலகமெல்லாம் ஒரு பானைக்குள் நிரப்பப்பட்ட இலந்தம் பழம் போல் இவருக்குள் அடங்கிக் கிடக்கின்றன. இவர் ஒரு போதும் நம் தேஹத்தை விட்டு வெளியேறுவதில்லை. அதனாலும் **மஹான்!**

### விஷ்ணு என்கிற சொல்லின் விளக்கம்

உலகம் எல்லாம் இவருக்குள் இருந்து உருவம் பெறுகிறது. **ஸத் அஸத்** என்று சொல்லப்படுகிறது. பலவகையான போக்ய வஸ்துக்களை (நுகர் பொருள்கள்) படைக்கிறார். அதை ஜீவன்களுக்குக் கொடுக்கிறார், உருவெடுத்த எல்லா ஜீவன்கள் மூலம் உள்ளிருந்து வரும் ஒளியைச் செய்கிறார். சொல், பொருள் இவற்றின் உண்மை நிலையை அறிந்த ஜ்ஞாநிகள் பகவான் **விஷ்ணு** என்கிற திருநாமத்தை இவ்வாறாக விளக்குகிறார்கள்.

### 'மஹாவிஷ்ணு' என்பதின் திரண்ட பொருள்

மஹானாக இருந்தும் இவர் இந்த உலகில் வந்து அவதரிக்கிறார் என்பதால் ஜ்ஞாநிகள் இந்த பகவானை **மஹாவிஷ்ணு** என்று சொல்கிறார்கள்.

### 'ஜ்வலத்' என்பதன் பொருள்

யோகிகளின் மனத்தில் எப்பொழுதும் ஜ்வலிக்கிறார். நித்ய ஸூரிகள் வஸிக்கும் பரமபதத்திலும் ஜ்வலிக்கிறார். அந்தணர்கள் செய்யும் வேள்விகளிலும் ஜ்வலிக்கிறார். ஸூர்யன், சந்த்ரன், அக்நி இவற்றுள் புகுந்து ஜ்வலிக்கிறார். இவ்வுலகத்தில், தான் பிறந்தும், தான் ஜ்வலிக்கிறார். இந்த உலகங்களை விழுங்கியும், தான் ஜ்ஞாந ஸ்வரூபமாகவே இருந்து ஜ்வலிக்கிறார். பக்தர்களின் பாபங்களைப் போக்கவல்ல ஸங்கல்பம் உடையவர் என்று சொல்வர்.

## 'ஸர்வதோமுக' என்பதின் விளக்கம்

முகம் என்றால் **ஶக்தி** என்று பொருள். அந்த ஶக்தி இவருக்கு எல்லா திஶைகளிலும் இருக்கிறது என்பதால் அந்த அநாதியும் ஸர்வ ஶக்தியுமான பகவானை **ஸர்வதோமுக** என்று சொல்கிறார்கள்.

## 'ந்ருஸிம்ஹ' ஶப்தத்தின் பொருள்

ஜீவர்களின் பாபங்களைப் போக்குகிறார். அழிக்கிறார் என்பதால் **ந்ருஸிம்ஹ** என்று பெயர்.

## 'பீஷண' என்பதின் பொருள்

துஷ்டர்களுக்குப் பயத்தைக் கொடுக்கிறார். அதனால் **பீஷண** எனப்படுகிறார்.

## 'பத்ர' என்பதின் பொருள்

ஸூர்யனுக்கு ஒளியைத் தருகிறார். ஸாதுக்களின் மனதை உருகச் செய்கிறார். மூன்று வகை ஆபத்துக்கள் நிறைந்த இந்தப் பிறவிப் பெருங்கடலை உருக வைக்கிறார்.

## 'ம்ருத்யு ம்ருத்யு' என்பதன் பொருள்

**ம்ருத்யு** என்பது அஜ்ஞானம். **ம்ருத்யு** என்பதற்கு யமன் என்பதும் பொருள். ஸம்ஸாரத்துக்கும் **ம்ருத்யு** என்று பெயர். இவற்றையெல்லாம் அழிப்பதால் பகவானுக்கு **ம்ருத்யு ம்ருத்யு** என்கிற திருநாமம்.

## முதலில் வரும் ம்ருத்யுவுக்கு மூன்று வகைப் பொருள்

மனிதன் தன் அறிவை இழக்கிறான் என்பதால் **ம்ருத்யு** என்பதற்கு **அஜ்ஞானம்** என்ற பொருள். மரணத்தை ப்ராணிகளுக்குக் கொடுப்பதும் **ம்ருத்யு** என்கிற சொல்லுக்குப் பொருளாக அமைந்துள்ளது. பிறத்தல் இறத்தல் உருவத்தால் ம்ருத்யுவுக்கு **ஸம்ஸாரம்** என்று பெயர்.

## 'ம்ருத்யு' என்கிற இரண்டாவது சொல்லுக்குப் பொருள்

இரண்டாவதாக வரும் **ம்ருத்யு** என்கிற சொல்லுக்கு முன் சொன்ன மூன்று தீமைகளையும் அழிப்பவர் என்று பொருள்.

## 'அஹம்' என்பதற்கு நான்கு வகைப் பொருள்

**அம்** என்கிற விஷ்ணு விடத்தில் போய்ச் சேர்கிறுன் என்பதால் **அஹம்** என்ற சொல் அமைந்துள்ளது. இந்த ஜீவன் முழுமையான ஆநந்த வடிவம். மேலும் ஜ்ஞாநம் ஶக்தி முதலியவைகள் எப்பொழுதும் நிரம்பியவனாக இருக்கிறுன். பகல் இரவு போன்ற காலத்தால் எல்லோராலும் அளக்க முடியாதவன். பகலில் அடங்குகிறுன். (ஸ்ரீ வைகுண்டத்தில் இருப்பதற்குத் தகுதி பெற்றவன்) என்று **அஹம்** என்பதற்குப் பொருளாகும். **அஹ:** என்பதற்கு **ஸங்கர்ஷணன்** என்பது பொருள். அவனுக்குள் எல்லா ஜீவர்களும் ஒடுங்குகிறுர்கள்.

## ஸாங்க்ய மதப்படிப் பொருளடக்கம்

**உக்ர, பீஷண** என்கிற இரண்டு சொற்களால் **அவ்யக்தம் ப்ரக்ருதி** உருவத்தில் நிலே சொல்லப்பட்டது. ஏனெனில் அந்த ப்ரக்ருதி உக்ரமாகவும் மிகவும் பயங்கரமாகவும் இருக்கிறது. ஆகையால் அந்த ப்ரக்ருதி பகவானின் உருவமாகவே இருக்கிறது. **ஜ்வலந்தம்** என்பதால் பகவானின் ஜீவ ஸ்வரூபம் சொல்லப்பட்டது. **அறிவு ஜ்வாலே** (ஒளி) என்பதைக் குறிக்கும். அதைக் கொடுப்பவர் ஆகையால் **ஜ்வலன்** எனப்படுகிறுர். இவருடைய ஜ்ஞாநமும் செயலும் ஒரு போதும் ஓய்ந்ததில்லே என்பதால் **ஜ்வலன்** எனப்படுகிறார். எல்லா கால தேஶங்களிலும் ப்ரக்ருதியைப் பார்த்து அதிலிருக்கும் தீமைகளேக் கண்டும் அந்த ப்ரக்ருதியின் மீது பல வகையிலும் வெறுப்பு கொண்டவனாக எப்பொழுது பரமபுருஷனான விஷ்ணுவைத்தெரிந்து கொள்கிறுனோ அப்பொழுது ஜ்ஞாநியாக அந்த ஜீவன் ஜ்ஞாநமும் செயலும் பூர்த்தி பெறுகிறது. ஆகையால் **ப்ரக்ருதி**யில் அழுந்திக்கிடப்பவன் - நல்ல ஜ்ஞாநமுடையவன் என்று எவன் சொல்லப்படுகிறுனோ, ஸம்ஸாரத்திலிருக்கும் அந்த ஜீவனும் **ஜ்வலன்** என்று சொல்லப்படுகிறுன். அவன் பகவான் எனப்படுகிறுன்.

## 'வீர' ஶப்தத்தின் தாத்பர்ய விளக்கம்

அறிவுடைய ஜீவர்கள், ஜடப் பொருள்கள், நிறைந்த இந்த உலகத்தைப் பல வகையில் செயல்படச் செய்கிறான் என்பதனால் பகவானுடைய ஶரீரமான காலத்துக்கும் **வீர** என்கிற பெயர் பொருத்தமாகும்.

## மஹாவிஷ்ணு என்பதின் கருத்து விளக்கம்

ஆகையால் ப்ரக்ருதி, காலம், ஜீவன் என்கிற மூன்று தத்வங்களிலும் வ்யாபித்து இருப்பது விஷ்ணு என்கிற சொல்லால் கூறப்படுகிறது. எங்கும் வ்யாபித்திருந்தும் அவற்றில் பற்றில்லாமை என்பதும், அந்த மூன்று தத்வங்களைக் காட்டிலும் மேன்மை என்பதும், மஹத்திலும் மஹான் என்பதும், யாவராலும் பூஜிக்கத் தக்கவர் என்பதும் **மஹா** என்கிற சொல்லிலிருந்து ஜ்வலிக்கும் கருத்து.

## 'ஸர்வதோமுக' என்பதின் விளக்கம்

**ஸர்வதோமுக** என்கிற சொல்லால் பகவான் எப்பொழுதும் **ஸர்வஶக்தி** என்பது சொல்லப்படுகிறது. பகவானுக்கு எல்லாம் அறிந்திருக்கும் நிலையும் எல்லாவற்றையும் படைக்கும் ஶக்தியும் சொல்லப்படுகிறது.

## 'பத்ர' என்கிற சொல்லின் கருத்து

**பத்ர** என்கிற சொல்லால் பகவான் எப்பொழுதும் தீமை ஸம்பந்தம் இல்லாதவர் என்கிற கருத்து கிடைக்கிறது.

## 'ந்ருஸிம்ஹ' சொல்லின் விளக்கம்

இவ்வாறு **ந்ருஸிம்ஹ** என்கிற சொல்லால் புருஷோத்தமன் என்கிற நிலை சொல்லப்படுகிறது.

## 'ம்ருத்யு ம்ருத்யு' என்பதின் கருத்து

**ம்ருத்யு ம்ருத்யு** என்கிற சொல்லால் மோக்ஷத்தைத் தருபவன் என்கிற கருத்து கிடைக்கிறது.

**'அஹம்' என்பதின் விளக்கம்**

ஜ்ஞாநத்தால் பல காலத்துக்குப் பின் எந்த **ஸித்தி** (நிலை) கிடைக்கிறது என்பதும், ப்ரக்ருதியைக் காட்டிலும் மேலானவன் என்பதும், **அஹம்** என்கிற சொல்லால் கிடைக்கும் கருத்து. 'துன்புறுத்துகிறுன், போகிறுன்' முதலான **ப்ரக்ருதி** ஸம்பந்தச் செயல்களைச் செய்பவன் என்பதை **அஹம்** என்கிற சொல் குறிக்கும். அதற்கு மாறுபட்டவன் என்பதால் **அஹம்** ஜீவனைக் குறிக்கும். நிருபாதிகமான, ஜ்ஞாந வடிவாக இருக்கும் இந்த ஜீவன் ப்ராணனும் ஶரீரமும் வீழ்ந்த பிறகும் இருக்கிறுன். அத்தகைய ஜீவன் எந்தக் காரணமும் (வ்யாஜம்) இல்லாமல் **அஹம்** என்கிற பெயரைப் பெறுகிறுன் (பொருளாகிறுன்).

**குறிப்பு :-** மனிதர்களாகிய நாம் நடக்கிறோம், படுக்கிறோம், படிக்கிறோம், தூங்குகிறோம். இந்தச் செயல்கள் தேஹத்தின் மூலம் செய்யப்படுகின்றன. இந்தச் சொற்கள் தேஹத்தின் மூலம் கிடைக்கின்றன. அதனால் ஜீவனுக்கு ஶரீரம் **உபாதி** (வ்யாஜம்) எனப்படுகிறது.

**'நமாமி' என்பதின் கருத்து**

இவ்வாறு ஜ்ஞாநத்தின் மூலம் தன்னைத் தெரிந்து கொண்டு ஜீவன் வணங்குகிறான். நதிகள் கடலில் போய்க் கலந்து விடுவது போல் எம்பெருமானிடம் ஆழ்ந்து விடுவது **நமஸ்காரம்** எனப்படுகிறது. இவ்வாறு உமக்கு ஸாங்க்ய மதத்தில் இருக்கும் ஸூக்ஷ்மமான மந்த்ரத்தின் பொருளை விளக்கினேன். ஆகையால் **ஸாங்க்ய மத தத்வ**த்தை அறிந்தவர்கள் **புருஷோத்தம**னான எம்பெருமானிடம் புகுந்து விடுகிறுர்கள். யோக மார்கத்தில் சொல்லப்பட்ட இந்த மந்த்ரத்தின் பொருளைச் சொல்கிறேன், கேளும்.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யில்
ந்ருஸிம்ஹ அநுஷ்டுப் விவரணம் என்கிற
54வது அத்யாயம் முற்றிற்று.

★ ★ ★

நாஸிம்ஹ விஷயமான அனுஷ்டுப் மந்த்ரத்தின் விளக்கம் என்கிற

# 55வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥

(இதன் விளக்கம் 18ம் அத்யாயத்தில் உள்ளது)

## யோக மதத்தை அநுஸரித்து மந்த்ரத்தின் பொருள் விளக்கம்

**அஹிர்புத்ந்யர்:-** இந்த மந்த்ரத்தைப் பற்றி ஞாநிகளான யோக மார்கத்தைச் சேர்ந்தவர்கள் எப்படி விளக்கியிருக்கிறார்கள் என்கிற வகையில், நான் விளக்கம் தருகிறேன், முநிவரே! கேளும்.

### 'உக்ர'என்பதின் பொருள்

**உத்கத: க்ருத்த:** என்று பிரிக்கலாம். காரணம் இவர் புலன்களை அடக்கியிருப்பது தான்.

### 'வீர'என்பதின் பொருள்

**'ஈரா:'**என்கிற நம் உடலுக்குள் இருக்கும் ஐந்து வகையான காற்றுகள் எப்பொழுதும் பரவி உள்ளன. அவை இவரால் அடக்கப்பட்டுள்ளன. இவர் **தந்த்ரம், ஶாஸ்த்ரம்** இவைகளின் பொருள்களைக் கரை கண்ட யோக மார்கத்தில் உள்ளவர்களால் **வீரர்** என்று சொல்லப்படுகிறார்.

### 'ஜ்வலந்' என்பதன் பொருள்

புலன்களை அடக்கியவராகவும், ப்ராணனை அடக்கியவராகவும், ஶரீரத்துக்குள் எல்லா இடங்களிலும் ஒளி வீச இருக்கிறாரோ, புலன்களின் மாறுபாட்டால் ஏற்படும் தடையின்றி எல்லா இடங்களிலும் பரவி இருக்கும், மஹாபுருஷன் **'ஜ்வலந்'** எனப்படுகிறார்.

### 'ஸர்வதோமுக' என்பதின் பொருள்

எல்லாவற்றையும் அறிந்த ஹரியே **ஸர்வதோமுகர்** என்று சொல்லப்படுகிறார்.

## 'பீஷண' என்பதின் பொருள்

*'பா'* என்பது நல்ல அறிவைக் குறிக்கும். அந்த அறிவின் தூண்டுதல் **ஈஷணம்** எனப்படும். **பேஷணம்** என்று கூறப்பட வேண்டிய சொல் **பீஷணம்** என்று உலகத்தைப் படைத்த பகவானே இந்தச் சொல்லின் பொருள்.

## மஹாவிஷ்ணு, ந்ருஸிம்ஹ, பத்ர, ம்ருத்யு ம்ருத்யு என்பதின் கருத்து

**மஹாவிஷ்ணு, ந்ருஸிம்ஹ, பத்ர, ம்ருத்யு ம்ருத்யு** என்கிற சொற்களின் பொருள் முன்பு சொன்னது போலவே கொள்ள வேண்டும்.

## திரண்ட பொருளின் விளக்கம்

புலன்களையும், ப்ராணவாயுவையும் அடக்கியவரும், ஜீவனைப் போன்ற உருவத்துடன் பர்யங்க யோகாஸநத்தில் அமர்ந்திருப்பவரும், எங்கும் வ்யாபித்திருப்பவரும், எல்லோராலும் பூஜிக்கத் தக்கவரும், நம் புத்தியை நல் வழியில் செல்லத் துணை புரிபவரும், ஸம்ஸாரத்திலிருந்து விடுவிப்பவருமான எவரைப் புருஷோத்தமன் என்று சொல்வார்களோ அப்படிப்பட்ட பகவானை நான் நமஸ்கரிக்கிறேன் என்பது யோக மதத்தின் ஸித்தாந்தம்.

## பஶுபதி மதத்தை அநுஸரித்து மந்த்ரத்தின் பொருள் விளக்கம்

**உக்ரந்** என்கிற சொல்லால் கடுமையான வ்ரதங்களால் மகிழ்விக்கத் தக்கவர் என்கிற பொருள் கூறப்படுகிறது.

## 'வீர' ஶப்தத்தின் பொருள்

அத்தகைய கடுமையான வ்ரதங்களை நிறைவேற்றத் துணையாக இருப்பவர், நமஸ்கரிக்கத் தக்கவர் என்று வீர ஶப்தத்தால் சொல்லப்படுகிறது.

## 'ஸர்வதோமுக' என்பதின் விளக்கம்

**காமம், க்ரோதம், லோபம்** என்கிற மூன்று வகையான மலங்கள் ஒரு போதுமே வராது. அதனால் **ஸர்வதோமுக** என்கிற சொல் கூறப்படுகிறது.

### 'ஜ்வலந்' ஶப்தத்தின் பொருள்

ஆதியாக உள்ள இந்த பகவான் **ஞாநகநன்** என்கிற பொருளை **ஜ்வலந்** என்கிற சொல் குறிக்கிறது.

### 'பீஷண' ஶப்தத்தின் விளக்கம்

**'பீ'** என்பது **அர்த்த பஞ்சகம்** என்று பொருள் படும். அத்தகைய பாபத்தை விலங்குகள் கூட இல்லாமல் போக்குகிறார் என்கிற பொருளை **பீஷண** என்பது குறிக்கிறது.

### ம்ருத்யு ம்ருத்யு ஶப்தத்தின் பொருள்

பகவான் மங்களத்தைத் தருபவன் என்கிற பொருளை **ம்ருத்யு ம்ருத்யு** என்கிற சொல் காட்டுகிறது.

### மற்ற சொற்களின் பொருள்கள் முன்பு கூறப்பட்டன போன்றதே

**மஹாவிஷ்ணு ந்ருஸிம்ஹ** என்கிற சொற்களின் பொருள் முன்பு சொல்லப்பட்டவையே.

### திரண்ட பொருளின் விளக்கம்

கடுமையான வ்ரதங்களை விரும்புபவர்; அத்தகைய வ்ரதத்தை ஏற்றவர்களால் பூஜிக்கப்பட்டவர். மூன்று வகை அழுக்கு ஒரு பொழுதும் இல்லாதவர். பாபங்களை அறுப்பவர். மங்களகரமானவர் என்று இப்படிப்பட்ட மஹான், புருஷோத்தமன், விஷ்ணு என்று கூறுகிறார்கள். இப்படிப்பட்ட விஷ்ணுவை வணங்குகிறேன் என்ற பொருள் பஶுபதி மதத்தில் கூறப்பட்டது.

### வேதாந்த மதத்தின் கருத்து முன்பே கூறப்பட்டது என்கிறார்

மூன்று வேதங்களிலும், வேதாந்தங்களிலும் கூறப்பட்ட பொருள் முன்பே விளக்கப்பட்டது.

### ஸாத்வதமதத்தில் மந்த்ரத்தின் பொருள் விளக்கம்

ஸாத்வதமதத்தில் கூறப்பட்ட பொருளை மிகக் கவனத்துடன் கேளும்.

## 'உக்ர' என்கிற சொல்லுக்கு ஸங்கர்ஷணன் என்று பொருள்

குற்றமற்ற ஶாஸ்த்ரத்தை வெளிப்படுத்துகிறார். வெளிப்படுத்திய பின் பக்தர்களை மகிழ்விக்கிறார். கடைசியில் அந்த ஶாஸ்த்ரங்களை விழுங்கி விடுகிறார். இந்தப் பொருளில் **'உக்ர'** என்கிற சொல் **ஸங்கர்ஷணனைக்** கூறுகிறது.

## 'வீர' என்பது ப்ரத்யும்நனின் வ்யூஹத்தைக் குறிக்கும்

ரஜோகுண, தமோகுணங்களை விலக்கி மூன்று வேதங்களை ப்ரசாரம் செய்கிறார். அந்த வித்யையை ஶக்தி மிகுந்ததாகச் செய்கிறார் என்று **வைத்ய மாநவ** என்கிற சொற்கள் தெரிவிக்கின்றன. நம்மிடத்தில் உள்ள தமோகுணமாகிற **மது** என்கிற அரக்கனை அழிப்பதால் ஜீவாத்மாக்களை வீரர்கள் ஆக்குகிறார். ஶாஸ்த்ரங்களில் கூறப்பட்ட நற்கார்யங்கள் செய்வதற்குத் துணை புரிகிறார். ஆகையால் ஆதியாகிய **ப்ரத்யும்நன்** என்கிற புருஷோத்தமனை **'வீர'** என்கிற சொல் குறிக்கும்.

## மஹா விஷ்ணு என்கிற சொல் அநிருத்தன் என்கிற வ்யூஹத்தைக் குறிக்கும்

**அநிருத்தன்** என்கிற இவர் தன் க்ரியைகளால் மஹான் ஆகிறார். **வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன்** என்கிற மூன்று வ்யூஹ மூர்த்திகளும் ஒன்று, மூன்று, நான்கு இப்படிக் குறுகிய செயல்களால் அவர்கள் குறைந்தவர்கள் ஆகிறார்கள். செயல்கள் குறைவாக இருப்பதால் அவர்கள் ஶக்தியும் குறுகியதே. **அநிருத்தனி**டத்திலோ செயல்கள் கணக்கிலடங்காதவை என்று கூறப்பட்டுள்ளன. படைத்தல், காத்தல் முதலிய செயல்கள் அளவிட முடியாதவை. அவற்றைச் செய்யும் ஶக்தி எங்கும் நிறைந்து விஷ்ணு என்கிற பெயரால் குறிக்கப்படுகிறது. அது தங்கு தடையற்றது. இது நான்காவது வ்யூஹ பேதத்தில் இருக்கும் விஷ்ணு ஶக்தியே. ஆகையால் இந்த **அநிருத்தன்** மஹா விஷ்ணுவே என்று ஞாநிகளால் சொல்லப்படுகிறார்.

**'ஜ்வலந்' என்பது ராமக்ருஷ்ண அவதாரங்களைக் குறிக்கும்**

விரித்தல் என்று **ஜ்வலநம்** (மலர்ச்சி) என்பதற்குப் பொருள், பகவான் ப்ரம்மாண்டத்தில் உள்ளிருந்து அவதரிக்கிறார் என்று சொல்லப்படுகிறது. அவ்வாறு எப்பொழுதும் எம்பெருமானையே த்யாநித்துக் கொண்டிருக்கும் ஞாநிகள் சொல்கிறார்கள்.

**'ஸர்வதோமுக' என்கிற சொல் அவதாரங்களிலும் எளிமையின் எல்லையாகிற பல வகையான அவதாரங்களைக் குறிக்கும்**

**ஸர்வதோமுக** என்கிற சொல்லால் மீன், ஆமை, வராஹம்,போன்ற பல பிறவிகளில் அவதரித்ததைச் சொல்லும்.

**'பத்ர' என்கிற சொல் அவதாரங்களில் தீய குணங்கள் இல்லாமையைக் குறிக்கும்**

அந்த அவதாரங்களும் கூடத் தன்னுடைய ஸ்வபாவமான ஷாட்குண்யங்கள் நிறைந்தே இருக்கும் என்பதை **'பத்ர'** என்பது குறிக்கும்.

**'பீஷண' என்பது மோக்ஷத்தைக் கொடுப்பவர் என்பதைக் குறிக்கும்**

ஸம்ஸாரத்தில் நமக்கு ஏற்பட்டிருக்கும் பந்தத்தை அழித்தல் என்பதை **பீஷண** என்கிற சொல் குறிக்கும். அந்த நிலை பகவத் விஷயங்களைக் கொண்ட ஞாநத்தால் மட்டுமே கிடைக்கத் தக்கது.

**'ம்ருத்யு ம்ருத்யு' என்கிற சொல்லுக்குத்தீமையால் அணுக முடியாதவர் என்பது பொருள்**

**பரப்ரம்மம்** எப்பொழுதுமே தீய குணங்களால் நெருங்க முடியாத ஒன்று. இது அவருக்கு ஏறிட்டுக் கொண்டது அல்ல. இயல்பாகவே உள்ளது என்று பொருள்.

## 'ந்ருஸிம்ஹ' என்ற சொல் இரண்டு வகையில் வ்யாபித்திருப்பதைக் குறிக்கும்

பகவான் எல்லா ஆத்மாக்களிலும் உள்ளேயும் வெளியேயும் வ்யாபித்திருக்கிறார் என்பது புருஷோத்தமத்வம் ஆகிறது. இது இந்த விஷயத்தையே குறிக்கும். **ப்ரத்யும்நன் அநிருத்தன்** என்கிற உருவங்களைப் பிரித்துக்கொண்டு மூன்று வடிவமாகக் காட்சி அளிக்கிறார். அந்த மூர்த்திகளை ஆப்ரயித்தவர்களின் கார்யங்களுக்காக எந்த பகவான் ஸர்வதோமுகராக இருக்கிறாரோ பல வகையான ராமக்ருஷ்ணாதி உருவங்களுடன் ஸம்ஸாரத்துக்குள்ளே அவர் ஜ்வலிக்கிறார். இவ்வாறு ஜ்வலிப்பவர் **பத்ரன்** என்றும், **பத்ரதரன்** என்றும் ஆகிறார். இவ்வாறு பகவானுடைய நிலைகளைப் பற்றி நாம் அறிந்து கொண்டாலே போதும். நம்முடைய பிறப்பு- இறப்பு என்கிற ஸம்ஸாரத்தை அழித்து அருள்வார். ஆகையால் **பீஷண:** என்கிற திருநாமம் அமைந்தது. **ம்ருத்யு** என்கிற யமன் (நம்மைப் போல்) வெறுக்கத்தக்க பாஞ்ச பௌதிகமான ஶரீரத்துடன் கூடியவன். அவனுக்கு இவர் **ம்ருத்யு**. ஆகையால் **ம்ருத்யு ம்ருத்யு** என்கிற திருநாமம். மனிதர்களால் வ்யூஹாவதாரம் விபவாவதாரம் பற்றிய ஞானத்தினால் எளிதில் அடையக் கூடியவர். இந்த உலகத்தை உள்ளும் புறமும் வ்யாபித்துப் புருஷோத்தமனாக இருக்கிறார். இப்படிப்பட்ட ந்ருஸிம்ஹனை நான் எனக்கு ஆத்மாவாகப் புலன்கள் மூலம் த்யாநிக்கிறேன். இவ்வாறு ஸாத்வத மதத்தில் சொல்லப்பட்ட கருத்து சுருக்கமாக உமக்கு விளக்கப்பட்டது. ஸூக்ஷ்மமானதும் பல வகையாகவும் பரம் என்கிறதாகவும் உள்ள பொருளை இப்பொழுது சொல்கிறேன், கேளும்.

## 'உக்ர' என்பதற்கு ஸங்கர்ஷணன் என்பது பொருள்

எல்லா உலகங்களுக்கும் ஆதாரமாகவும், ஸம்ஸாரம் என்கிற நோயைப் போக்குபவராகவும், தங்கு தடையில்லாதவருமான **ஸங்கர்ஷணன்** என்ற பெயருடன் விஷ்ணுவின் அவதாரமாக உள்ளது. விஷ்ணுவின் முதல்

அவதாரமான இந்த **ஸங்கர்ஷணமே உக்ர** என்பதால் சொல்லப்படுகிறது.

## இதன் விளக்கம்

இந்த அவதாரத்தில் உலகமெல்லாம் திலகத்தின் மேலிருக்கும் **அலகம்** போல் ப்ரகாஶிக்கிறது. மேலும் இவர் எதனால் உத்தமமான ஶாஸ்த்ரங்களை உபதேஶித்து ஸம்ஸாரத்தைப் போக்கடிக்கிறாரோ, தடுக்க முடியாதவர் என்கிற பொருளில் **உத்தமர்** என்றும், இத்தகைய விஷ்ணுவின் அவதாரம் என்று **ஜ்வலந்** என்றும் அமைந்தது. அதனால் **ஸங்கர்ஷணன்** என்கிற ஸர்வ ஶக்தியான தேவன் **உக்ர** என்கிற சொல்லின் பொருளாகிறார்.

## 'வீர' என்கிற சொல் ப்ரத்யும்ந மூர்த்தியைக் குறிக்கும்

ஸ்ரீ வைகுண்டத்து நாயகன், மாயை என்கிற ப்ரக்ருதியைத் தன் வஶத்தில் வைத்திருப்பவன், நெருப்புபோல் இருப்பவர், தாமரைக் கண்ணனாகிய **ப்ரத்யும்நன் வீர** என்கிற சொல்லுக்குப் பொருளாகிறார்.

## இதன் விளக்கம்

அம்ருதம் என்பது பகவானுடைய தர்மம் (குணம்) (இதுவே **ஷாட்குண்யம்**). அவற்றை எப்பொழுதும் கொண்டிருப்பவர் இவர்.

## திரண்ட பொருள்

**ப்ரத்யும்நன் ஷாட்குண்ய** பூர்ணராய் வேதத்தில் சொல்லப்பட்ட நல்ல தர்மங்களுக்குத் தேவதை. தன் விசித்ர ஶக்தியால் மாயை என்றும், ஞாநம் என்றும், வித்யைகள் என்றும் உபதேசிக்கிறார். அஞ்ஞாந வடிவில் இருக்கும் வித்யையில் உள்ள தோஷத்தை இவர் நெருப்பு போல் எரிக்கிறார். ஆகையால் **ப்ரத்யும்நன் வீர** என்கிற சொல்லால் குறிக்கப்படுகிறார்.

**மஹா விஷ்ணு என்கிற சொல் அநிருத்தனைக் குறிக்கும்**

காலம், ப்ரதாநம், (ப்ரக்ருதி) இரண்டுக்கும் ஆதாரம். எப்பொழுதும் ப்ராணனாக இருக்கிறார். அவற்றை எப்பொழுதும் காத்து வருகிறார். செயல்களை விவரிக்கிறார். அவரவர்கள் ஆயுளைக் கருதி முறைப்படி மனிதர்கள் என்ற கர்ப்பத்தை வளர்த்து வருகிறார். இவரே இந்த உலகத்தில் அக்நி வடிவத்தில் ஸூர்யனாக, தானே ஆகிறார். தன்னை த்யாநம் செய்பவர்களுக்கு அபயம் கொடுப்பதாகவும், இந்த உலகத்தைத் தடையின்றி வைகுண்டம் போல் ஆள்கிறார். மேலும் தான் ஸாக்ஷியாகவும் அநுமதிக்கவும் செய்கிறார். இவ்வாறு **மஹாவிஷ்ணு** என்கிற திருநாமம் அமைந்தது.

**இதன் விளக்கம்**

தன்னுடைய நாபியில் ஏற்பட்ட தாமரைப்பூவைக் காலம் என்கிற உருவத்தோடு தரிக்கிறார். திரு **உதர**(வயிறு)த்துக்குள் இருக்கும் ஜீவன்களையும், அதனுள் இருக்கும் அவ்யக்தத்தையும் தரிக்கிறார். அந்த பகவான் காலம் என்றும், ப்ரதாநம் என்றும் ஒன்று போல் சொல்லப்படுகிறார். ஞாநம், காலம், ஜீவன் மூன்றையும் சில காலங்களில் உயிர் கொடுத்துச் செயல் படச் செய்கிறார் என்று ப்ராணன் என்கிற சொல்லால் குறிப்பிடப்படுகிறார். ரக்ஷகன் என்கிற பெயருடன் இவரே ரக்ஷணத்தைச் செய்கிறார். செயல்கள் என்பது கதிகள் என்று சொல்லப்படுகின்றன. அவற்றைச் செயல் படுத்தும் நோக்கத்துடன் வெளிப்படுத்துகிறார். இதனுல் இவர் **வருணன்** எனும் சொல்லால் குறிக்கப்படுகிறுர். இதுவே திருநாமத்துக்கு இணங்கத் தடையில்லாத நிலை. **(குறிப்பு: அநிருத்த** என்கிற சொல்லுக்குத் தடையில்லாதவர் என்று பொருள்). காலத்தில் உள்ள வித்யையில் கர்பமாக இருக்கும் கீழே சொன்னபடி ஒன்பது வகை ஸ்வரூபத்தோடு கூடிய **ந்ருஸிம்ஹனை** ஆத்மாவாகக் கொண்ட ஜீவனைப் பல கோடி வருடங்கள் வளர்ப்பவரும் இவரே. அதனால் இவருக்கு **இத்தார்ண:** என்று திருநாமம். அக்நி, ஸூர்யன் முதலியவற்றில்

வேதங்களில் அடங்கிய தேவன் என்கிற திருநாமத்தில் இருந்து கொண்டு அந்த அந்த தேவதைக்குள் ப்ரவேஶித்து(அந்தர்யாமி) அந்த அந்தப் பெயரைத் தாங்கிக் கொண்டு இருக்கிறார். இதனால் **அக்நி- பாஸ்கரன்** என்ற சொற்களால் **அநிருத்த** பகவான் சொல்லப்படுகிறார். காலம் முதல் பூமி வரை உள்ள உயிருள்ளவை, உயிரற்றவைகளின் வடிவத்தில் உள்ள **புவந** என்கிற சொல்லால் கூறப்பட்ட உலகங்களைப் பல வகை அங்கங்களோடு துஷ்டர்களை அழித்து எப்பொழுதும் பாதுகாப்புக் கொடுக்கிறார். ஆகையால் **புவநாபயத:** எனப்படுகிறார். அவர் பல வகைச் செயல்களைச் செய்யத் தொடங்கும் போது தடையின்றி இருக்கிறார். மேலும் எல்லாப் பொருள்களுக்குள்ளும் ப்ரவேஶித்து ஸாக்ஷியாக இருந்து அவைகளை அடக்கி ஆள்கிறார். **அநிருத்த** பகவானே **அபயதன், வைகுண்டன், ஶாஸ்தா** என்கிற சொற்களால் கூறப்படுகிறார். இவ்வாறு **உக்ர** முதலிய மூன்று சொற்களால் வ்யூஹ மூர்த்திகள் சொல்லப்பட்டனர். **ஜ்வலந்** முதலிய சொற்களால் சொல்லப்படும் பொருளாக இவர் இருப்பதால் **பரம்** என்று பேசப்படுகிறார்.

இவ்வாறாகப் பாஞ்சராத்ரம், தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர் புத்ந்ய ஸம்ஹிதையில்** நாரஸிம்ஹ
அநுஷ்டுப் மந்த்ரார்த்த நிரூபணம் என்கிற
55வது அத்யாயம் முற்றிற்று.



**நாரஸிம்ஹ அநுஷ்டுப் மந்த்ரத்தின் விளக்கம் என்கிற**

# 56வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥

*(விளக்கம் 18ம் அத்யாயத்தில் உள்ளது)*

## ஜ்வலத் முதலிய சொற்கள் பத்மநாபன் முதலிய 39 அவதாரங்களைக் குறிக்கின்றன என்பதின் விளக்கம்

**அஹிர்புத்ந்யர் — ஜ்வலத்** முதலிய சொற்களால் விவரிக்கப்பட்ட விபுவான விஷ்ணு தேவதா சக்ரமே ந்ருஸிம்ஹ மந்த்ரத்தில் உள்ள பல சொற்களால் குறிக்கப்படுகிறது என்பதைச் சொல்கிறேன், கேளும்.

### 'ஜ' எழுத்தின் பொருள்

விஷ்ணுவின் அவதாரமான பெரிய மஹிமையோடு கூடிய **பத்மநாபன்** எங்கும் எக்காலத்திலும் யாராலும் ஜயிக்கப்பட்டவர் அல்ல, என்கிற விஷயம் **அஜிதார்ண** என்கிற சொல்லால் குறிக்கப்படுகிறது.

### 'வ' என்பது அம்ருத பீஜமாகையால் அம்ருதாதாரன் என்னும் திருநாமம் கொண்ட 20வது அவதாரம் குறிக்கப்படுகிறது

அம்ருத பீஜமான **'வ'** காரத்தினால் கவர்ச்சியான திருமேனியுடையவராகச் சொல்லப்படுகிறார்.

### 'வ' பிறகு 'அ' இவற்றால் ப்ரளய காலத்தில் திருப்பாற் கடலில் பள்ளிகொண்ட 14வது அவதாரம்

அ காரத்தால் கடலில் பள்ளி கொண்டிருக்கும் அளவிட முடியாத வடிவங்கள் குணங்களையுடையவராய்க் குறிக்கப்படுகிறார்.

### 'ல' என்பதால் ஶக்தியோடு கூடிய 4வது அவதாரம்

பூமிக்கு அதிபதியான ஶக்திக்கு நாயகன் எம்பெருமான் விஷ்ணுவின் பூமி என்கிற ஶக்தி ல என்பதால் குறிக்கப்படுகிறது.

### 'ல'வினால் ஹரி க்ருஷ்ணன் குறிப்பு

ல் + அ இதனால் தந்நிகரற்ற ஜ்ஞாநியான **ஹரி** சொல்லப்படுகிறார். **விபுத** என்பதால் ஜீவர்களுக்கு அதிபதி க்ருஷ்ணனும், விஷ்ணுவும் சொல்லப்படுகிறார்கள்.

### 'ன்' என்பதால் தர்மம் என்னும் திருநாமத்தோடு கூடிய 12வது அவதாரம்

ஸ்வர்கத்துக்கும் மோக்ஷத்துக்கும் உபாயமாகவும். ஸநாதநமான தர்மமாகவும் **தரேஶன்** என்கிற தேவனுடன் கூடிய அந்த தேவன் **ன்** என்பதால் கூறப்படுகிறார்.

### 'த்' என்பதால் அநந்தன் என்கிற 3வது அவதாரம்

**பலராமன்** (பனை மரத்தை அடையாளமாக உடைய) **அநந்தன்** என்று சொல்லப்பட்டவராய், அவரே பூமியைத் தாங்குகிறவராய் **பனைமரம்** என்கிற அடையாளத்தால் சொல்லப்படுகிறார்.

### வேறு பெயரைக் கொண்டு கூர்மம் வித்யை என்னும் 15வது 6வது அவதாரம்

உலகங்கள் மாலை என்று சொல்லப்படுகின்றன. அதைத் தரிப்பதால் **கூர்மம்** என்று சொல்லப்படுகிறார். ஜ்ஞாநிகளால் **வித்யா** என்பது சொல்லப்படுகிறது. அந்த வித்யைக்கு அதிபதி **விராட்** என்கிற வைராஜன். **வைராஜன் ஸ்ரக்தரன்** என்று அந்த இரண்டு தேவதைகள் கூறப்படுகின்றன.

### 'அ', 'ம்' என்கிற இரண்டின் மூலம் காலநேமிக்நன் என்கிற 22வது அவதாரம்

அப்ரமேயனான எம்பெருமானால் வெளிப்படுத்தப் பட்ட **காலம்** என்பதைக் கொண்டு **காலநேமிக்நன்** என்று

எம்பெருமான் சொல்லப்படுகிறுன். அவர் **காலம்** என்கிற வடிவத்தில் ஸாதாரண மக்களால் அடைய முடியாதவர்.

**ஸர்வதோமுக என்பதில் 'ஸ' என்பதால்**
**பீயூஷஹரணன் என்கிற 18வது அவதாரம்**

**ஸ்** என்பது அம்ருதத்தைக் கொண்டு வந்தவரும் அப்ரமேயமான ஶக்தியோடு கூடியவரும். தாமரைக் கண்ணனுமான எம்பெருமானேச் சொல்கிறது.

**அதே எழுத்தால் ஶ்ரீபதி என்கிற 19வது அவதாரம்**

அப்ரமேயமான எம்பெருமானால் மூன்றடிகளால் முழுமையாக அளிக்கப்பட்ட அநாதியான த்ருப்தி என்று சொல்லப்பட்டது. அடுத்து வரும் **அ** தேவர்களுக்கு அதிபதியான லக்ஷ்மீபதியைச் சொல்கிறது. அப்படிப்பட்ட **மஹாலக்ஷ்மி த்ருப்தி** என்று சொல்லப்படுகிறாள்.

**(ர்வ) என்பதால் வராஹம் என்கிற 16வது அவதாரம்**

**வ், ர்** என்ற எழுத்துக்களால் ஸகல உலகங்களுக்கும் ஆதாரமான **வராஹ மூர்த்தி** குறிப்பிடப்படுகிறது. அப்ரமேயனோடு கூடிய **(வ் ர்)** (வருண தேவதையைக் குறிக்கும்) என்ற எழுத்தால் **பாதாள ஶாயி** என்கிற 39வது அவதாரம் சொல்லப்படுகிறது.

**'த' என்பதால் வாகீஶ்வரன் என்கிற 13வது அவதாரம்**

**ஸ்ரக்** என்றால் **வாக்** என்றும் சொல்லப்படுகிறது. அது உலகத்தைக் கொடுக்கிறது, தாங்குகிறது. ஆகையால் **ஸ்ரக்தர** என்பதால் **ஹயக்ரீவர்** சொல்லப்படுகிறுர்.

**(த் + ஓ) என்பது த்ரிவிக்ரமன் என்கிற 20வது அவதாரம்**

**ஓத:** என்பது பகவான் விஷ்ணு. ஏனெனில் லீலே செய்கிற தன் உருவத்தால் உலகத்தை இணேக்கிறுர். உலகங்களே உருவமாகக் கொண்ட அந்த பகவான் **ஓத** என்பதால் குறிக்கப்படுகிறுர்.

## 'ம' ஓடு கூடிய 'உ' (மு) படவாமுகாக்நி என்கிற 11வது அவதாரம்

ஓ வுடன் கூடிய **ம** குதிரை முகத்தோடு இருக்கும் கடல் நடுவில் உள்ள **படவா முகாக்நி**யைக் குறிக்கும்.

### இதன் விளக்கம்

**ஓதநம்** என்பது ஜலத்தைக் குறிக்கும். ஏனெனில் அதுவே உணவுகளை உற்பத்தி செய்கிறது. அந்த ஜலத்தைக் குடிப்பதன் மூலம் அந்த படவாக்நிக்கு **ஓதந மர்தந:** என்று பெயர்.

## 'முக' (ம் + உ + க) என்பது வாமந உருவத்தில் தோன்றிய 29வது அவதாரம்

எந்த வர்ணாஶ்ரமத்தில் எவர் சிறிய உருவம் கொண்டிருந்தாரோ கட்டுக் கடங்காத புகழ் பெற்றிருந்த மஹாபலியை அடக்கியவருமான, அந்தச் சக்ரவர்த்தியிடம் மூன்று அடி மண் யாசித்தவருமான அந்த வாமந மூர்த்தியைக் க என்ற எழுத்து சொல்கிறது.

### அதன் விளக்கம்

அளவற்றதான புகழ் வளர்த்தலை அந்த **வாமநர்** தானே அடக்கினார்.

## 'க' என்பதற்கு வெறொரு பொருள் மூலம் வேதவித் என்கிற 37வது அவதாரம்

வேதத்துக்கு ஆத்மாவாக இருக்கிறது ஓம். அதே ஒரு எழுத்து வேதத்தை அறிந்த ஹரியைச் சொல்லும்.

## 'ந்ருஸிம்ஹ' என்பதில் இருக்கும் 'ந்' என்பது 31-32 அவதாரமான நரநாராயணன்

நரனையும் நாராயணனையும் குறிக்கும் **ந** என்பதிலிருந்து **நரன் நாராயணன்** என்கிற 31வது, 32வது அவதாரம் குறிக்கப்படுகிறது.

**'ரு' என்பது பாரிஜாத ஹரணன் என்கிற 33வது அவதாரம்**

**ஸத்யா (ஸத்ய பாமா)** யாரைச் சார்ந்திருக்கிறாளோ அப்படிப்பட்ட அந்த பகவான் **ஸத்யன்.** அவர் பாரிஜாதத்தைப் பூமிக்குக் கொண்டு வந்தார். மடியில் **ஸத்யாவை** வைத்துக் கொண்டிருக்கும் அவர் இந்த எழுத்தால் குறிப்பிடப்படுகிறார்.

**'ம்', 'நំ', 'ரு', 'ஸி' என்கிற நான்கும் ராஹுஜித் என்கிற 21வது அவதாரம்**

வாமநனுக்கு அடுத்த அவதாரம் மிகவும் பெரியவனாக வளர்ந்து ஆகாயத்தையும் பூமியையும் அளந்தார். ம் என்பது **மர்தந:.** ஸ் என்பது **ஸஹித** என்பதால் வழியில் அங்குசமாக, அதற்கும் மேலுள்ள **ஸோம** என்கிற நான்கு எழுத்துக்களும் **ராஹுஜித்** என்கிற அவதாரத்தைச் சொல்கின்றன.

**'இ' என்பது 'பரசுராம்' 'ராம' என்கிற 35, 36வது அவதாரங்கள்**

ராம என்பதால் **பரசுராமன் ஸ்ரீ ராமன்** சொல்லப்படுகிறார்.

**'ங' என்பதால் க்ரோடாத்மா என்கிற 10வது அவதாரம்**

**ஏகதம்ஷ்ட்ரம்** என்கிற பகவான் **க்ரோடாத்மா** எனச் சொல்லப்படுகிறார்.

**'ஹ' என்பது விஹங்கம் என்கிற 9வது அவதாரம்**

**ஜநார்தநன்,** ஹம்ஸ உருவத்துடன் எப்பொழுது ஸூர்யனுடனே வருகிறாரோ, அப்படிப்பட்ட தேவராஜன் **விஹங்க** என்கிற திருநாமம் கொண்டவராகக் குறிக்கப்படுகிறார்.

**ப்ரத்யயத்தின் பாகமாகிய 'ம'வுக்குக் கல்கியின் 38வது அவதாரம்**

கலியுகத்தின் முடிவில் பாபிகளை (திருடர்களை)க் **கல்கி** என்கிற திருநாமத்துடன் எவர் அழிக்கிறாரோ, **ஸி** அடுத்து

உள்ள **(ஸிம்ஹவில்)**ம் என்பதால் கல்கி சொல்லப்படுகிறது. (குறிப்பு :- கல்க என்பதற்கு வெள்ளைக் குதிரை என்று பொருள். அதில் ஏறி வருவதால் கல்கி எனப்படுகிறார்).

**'பீஷண' என்பதில் 'ப' என்பதற்கு 'த்ருவன்' என்னும் 2-வது அவதாரம்**

முனிவரே ! **த்ருவ** என்பதால் **த்ருவன்** என்கிற பகவான் குறிப்பிடப்படுகிறார்.

**'ஈ' என்பதற்கு 'ந்யக்ரோதஶாயீ' (ஆலிலை மேல் பள்ளி கொண்டவர்) என்கிற 27வது அவதாரம்**

மாயையான உருவத்தை ஏற்று அழகான ஆல இலைமேல் அழகிய வடிவத்துடன் எவர் பள்ளிகொண்டு இருக்கிறாரோ அவர் **மாயா** எனப்படும் **ஈ** என்பதால் சொல்லப்படுகிறார்.

**'ஷ' என்பது நரஸிம்ஹ என்கிற பொருளில் 17வது அவதாரம்**

தேவர்களுக்கு அதிபதியான ந்ருஸிம்ஹன், **'ந்ருஸிம்ஹ'(ஷ)** என்பதால் கூறப்படுகிறார். **'ண' என்பது மதுஸூதநன் என்கிற திருநாமம் கொண்ட 5வது அவதாரம்**

எந்த பகவான் முன்பு ப்ரஹ்மாவுக்கு முக்யமான எதிரியாக இருந்த **மது** என்கிற அஸுரனைத் தன் புஜ பலத்தைக் கொண்டு அழித்து ப்ரஹ்மனுக்கு அபயம் கொடுத்தாரோ, அப்படிப்பட்ட அந்த பகவான் **மதுஸூதநன் ண** என்கிற எழுத்தால் சொல்லப்படுகிறார் **(குறிப்பு** :- இங்கு தன் புஜபலத்தினால் அழித்தார் என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் முன்பு விளக்கமாகச் சொன்ன இடத்தில் **'நீ அபஹரித்துக் கொண்ட வேதங்களைச் சதுர்முகனுக்குக் கொடுத்துவிடு'** என்று சொன்னவுடன் அவன் அதை மறுத்து **நானே உலகங்களைப் படைக்கிறேன்** என்று சொன்னதால் அடுத்த க்ஷணமே சக்ராயுதத்தினால் அவனை அழித்தார் என்று சொல்லப்பட்டதால் இங்கு தன் புஜபலம் என்பது சக்ராயுதத்தைச் சொல்வதாகக் கொள்ள வேண்டும்.

**'பத்ர' என்பது மூன்று அவதாரங்களைக் குறிக்கிறது. இதில் 'ப' என்பது கபிலர் என்கிற 7வது அவதாரம்**

எந்த பகவான் ஜ்ஞாநமயமான உத்தமமான ஸித்தியைக் கொடுக்கிறாரோ, **கபிலன்** என்கிற திருநாமம் உடைய அந்த பகவான் **ப** என்பதால் குறிக்கப்படுகிறார்.

**'த்' என்பதால் தத்தாத்ரேயன் என்கிற 26வது அவதாரம்**

இங்கு **த்** என்பதால் **தத்தாத்ரேயன்** சொல்லப்படுகிறார்.

**'ர' என்கிற எழுத்து ஶாந்தாத்வா என்கிற திருநாமம் உடைய 25-வது அவதாரம்**

தீமைகளுக்கும் காலத்துக்கும் தீ போன்றவர். ஆகையால் இந்த எழுத்தினால் **ஶாந்தாத்வா** என்கிற 25-வது அவதாரம் குறிக்கப்படுகிறது. (ரம் என்பது அக்நி பீஜம். இவர் தீமைக்குத் தீ போன்றவர் என்பதால் குறிப்பிடப்படுகிறது.)

**ம்ருத்யு ம்ருத்யு இரண்டு அவதாரங்களின் பொருள் முதல் ம்ருத்யு ஏகஶ்ருங்கதநு என்கிற 28வது அவதாரம்**

காலன் என்கிற யமன், காலம் என்கிற தத்வமாக இருக்கிறார். ப்ரதாநம் என்பது மூலப்ரக்ருதியைக் குறிக்கும் **ருததாமா** என்கிற பகவான் அந்தக் காலத்தில் இருக்கிறார். அவரே விராட் புருஷன். ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைஶ்ய, ஶூத்ர என்கிற நான்கு மாநவ உருவத்தில் இருக்கிறார். இந்த உலகத்தைத் தன் ஶரீரத்தில் தாங்கிக் கொண்டு **சங்க** என்கிற பகவான் **மீநம்** என்று சொல்லப்படுகிறார். ஏக **ஶ்ருங்கதநு** என்கிறவராக **ம்ருத்யு** என்பதின் எழுத்துக்களால் குறிக்கப்படுகிறார்.

**இரண்டாவது ம்ருத்யு 'லோகநாத' என்கிற 24வது அவதாரம்**

மிகவும் மூலகாரணமாகவும், ஸத்யத்தின் உருவமாகவும் உலகங்களை விளங்க வைப்பவராய் **வைராஜன்** என்றும் முன்பு சொன்னது போல் நான்கு வகை மாநவ தம்பதி உருவத்தை

எடுத்துக் கொண்டு உலகத்துக்கெல்லாம் தலைவனாகவும், இயக்குபவனாகவும் ஆகிய லோகநாதன் முன் சொன்ன உலகத்திலிருந்து மாறுபட்டவராய் **ம்ருத்யு** என்கிற இரண்டாவது சொல்லால் கூறப்படுகிறார். இவ்வாறு இந்த ந்ருஸிம்ஹ **மந்த்ரத்தில்** எழுத்துக்களைக் கொண்டு அறியப்படும் மேலான பொருள் உமக்குச் சொல்லப்பட்டது.

**இந்த அத்யாயத்தின் இனி வரும் பாகத்தால்**
**மந்த்ரத்தின் வேறு ஒரு மஹிமை கூறப்படுகிறது**

மஹர்ஷியே ! மீண்டும் இந்த மந்த்ரத்தின் மஹிமையைச் சொல்கிறேன். இது மிகவும் ஸூக்ஷ்மம். ஆகையால் மூலம் மட்டும் எழுதப்படுகிறது. தேவை உள்ளவர்கள் பண்டிதர்களைக் கொண்டு விளக்கம் பெறலாம்.

शृणु मन्त्रस्य माहात्म्यं भूयोऽपि मुनिसत्तम ! ॥

पादशः प्रतिलोमोऽयं वैकुण्ठास्त्रं निगद्यते।
अक्षरप्रतिलोमोऽयं स्मृतं नारायणास्त्रकम्॥

स्वराणां प्रतिलोमो यः संहिताशब्दरूपवान्।
नारसिंहमहास्त्रं तन्नख क्रकचसंज्ञितम्॥

प्रमित्यपेतो वरुणः कालपावक संस्थितः।
अप्रमेयः पुनस्तादृक् तृतीयाक्षरमीरितम्॥

सूक्ष्मस्थः प्रथमः सूक्ष्मः संस्थितः कालपावकः।
वरुणः सूक्ष्मयोर्द्वन्द्वं सप्तमाक्षरमीरितम्॥

सूक्ष्मस्थो गोपनः पश्चाद्वरुणो भुवनाश्रयः।
वरजादार इत्येतन्नारसिंहास्त्रमीरितम्॥

नवाक्षरमिदं श्रेष्ठं तत्र यत् प्रतिलोमजम्।
अस्त्रमक्षरशस्तत्तु नारसिंहं महादिकम्॥

तत्र स्वरप्रातिलोम्यादस्त्रं त्वतिमहादिकम्।
व्यापकः सामृताधारो गोपनो द्व्यक्षरं नु तत्॥

तत्र स्वरप्रातिलोम्ये गोपनो गोपनः सताम्।
सर्वत्र प्रातिलोम्येन यद्यदस्त्रमुदीरितम्।

तत्र तत्राऽऽनुलोम्येन तत्तच्छान्तिरुदीरिता॥

இவ்வாறாகப் பாஞ்சராத்ரம் தந்த்ரரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** நாரஸிம்ஹ
அநுஷ்டுப் மந்த்ரத்தின் பொருள் விவரம் என்கிற
56வது அத்யாயம் முற்றிற்று.



## ஜ்யோதி: சக்ரம் என்கிற மந்த்ரத்தின் பொருள் விளக்கம் என்னும்

# 57வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி॥

## காயத்ரியின் பொருள் விளக்கத்தில் 'தத்' என்கிற சொல் பகவானின் ஸங்கல்ப வடிவமான ஸுதர்ஶநத்தைக் குறிக்கும்

**அஹிர்புத்ந்யர் :-** ஸூர்யன், சந்த்ரன், அக்நி என்று எந்த மூன்று ஜ்யோதிகள் சொல்லப்பட்டனவோ, ஸூர்யன் ஸம்பந்தப்பட்டதாகச் சொல்லப்பட்டதோ, அது **ஸாவித்ரீ** என்று கூறப்படுகிறது. (ஸூர்யனுக்கு **ஸவிதா** என்பது பெயர். அதைப் பற்றிய மந்த்ரம் **ஸாவித்ரீ**) அதற்கு இப்பொழுது விளக்கம் கொடுக்கிறேன், கேளும். எம்பெருமானுடைய ஸங்கல்பம் **ஸுதர்ஶநம்** என்கிற திருநாமம் கொண்டு விளங்குகிறது என்று சொல்லப்பட்டது. விஷ்ணுவினுடைய ஆறு குணங்களில் இரண்டாவதான **மஹாஶக்தி** என்பதின் ஒரு ஆட்சி, அந்த மஹா ஶக்தியின் கோடியில் ஒரு பாகமாகிய ஶுத்த ஸ்ருஷ்டி என்றும் ஶுத்தமல்லாத ஸ்ருஷ்டி என்றும் அவதாரங்களின் மூலம் படைக்கிறது. மேலும் பரவச் செய்கிறது. மஹா ப்ரளய காலத்தில் அந்தப் பொருள்களை மீண்டும் **தமஸ்** என்கிற ப்ரக்ருதியிலேயே ஒடுக்குகிறது. அந்த இடத்திலேயே பகவானின் விபூதியின் பாகத்தில் தாரகம் என்கிற பெயருடன் ஒடுங்கி நிற்கிறது. மறுபடியும் புலன்கள் என்கிற பெயருடன் மீண்டும் பல வகைப் பொருள்களாகத் தோற்றமளிக்கிறது. ஆகையால் **தத்** என்கிற சொல் விஷ்ணுவின் உத்தமமான ஸங்கல்பம் என்று சொல்லப்படுகிறது.

**ஸவித்ரு என்கிற சொல் உலகங்களுக்குக் காரணமானவரும் மோக்ஷம் தருதல் முதலிய குணங்களோடு கூடிய பகவானைக் குறிக்கிறது**

எல்லாவிதமான செயல்களையும் செய்கிறார். எல்லா உலகங்களையும் தோற்றுவிக்கிறார். பூலோகத்திலும் ஸ்வர்கத்திலும் ஏற்படும் ஶ்ரமங்களிலிருந்து காப்பதாலும் பலி சக்ரவர்த்தியிடம் தானம் கேட்டுப் பெற்று அதன் மூலம் காத்தலாலும், பூலோகத்தில் அவதரித்துப் பல இடங்களில் பரவிக் காத்தலாலும் இஹலோகத்தில் ஸுக போகங்களையும், மோக்ஷத்தையும் தருவதாலும் இவ்வாறு ஆறு காரணங்களால் எல்லோரும் விரும்பத்தக்கவரான விஷ்ணுவே **ஸவிதா** என்பதற்குப் பொருள்.

**'வரேண்ய' என்கிற சொல் உபாஸிக்கத் தக்கவர் என்று குறிக்கும்**

**உத்தமர்களால் அடைவிக்கப்படும் இடம் என்றும், வரா:** என்றால் புகழ் பெற்றவர்கள் என்றும், அனைவராலும் விரும்பத்தக்கவர்கள் என்றும், உத்தமமானவர்கள் என்றும், கூறப்படும் பரமபதத்தைக் குறிக்கிறது. அதையே நமக்குத் தந்து அருள்கிறார் என்கிற பொருள் **வரேண்ய** என்கிற சொல்லால் கிடைக்கிறது.

**'பர்க:' என்கிற சொல் 'தத்' என்கிற சொல்லால் விவரிக்கப்பட்ட ஸ்ரீ ஸுதர்ஶநத்தின் குணங்களைக் குறிக்கிறது**

**பர்க** என்றால் தேஜஸ் என்பது பொருள். எல்லாவற்றையும் படைப்பதால் அவருக்கு அந்தப் பெருமை என்கிற பொருளும் கிடைக்கிறது. எல்லா உலகங்களையும் தாங்குகிறார். அதிபர்கள் என்பவர்களை (இந்த்ராதி தேவர்கள்) போஷிக்கிறார். படைத்த இந்த உலகத்தை மகிழ்விக்கிறார். கோரிய பலன்களைத் தருகிறார். இவற்றை எல்லாம் ஒரு காலத்தில் லயிக்கும்படிச் செய்கிறார். ஜீவன்களுக்கு ஏற்படும் எல்லா பந்தங்களையும் போக்குகிறார்.

எல்லாத் தீமைகளையும் விரட்டுகிறார். காலங்களைக் கடத்தி வைக்கிறார். இக்காரணங்களால் விஷ்ணுவின் அற்புதமான ஸங்கல்ப உருவமாக ஸுதர்ஶநமே **பர்க** என்ற சொல்லுக்குப் பொருளாகச் சொல்வர்.

**'தேவ' என்கிற சொல் வெளிச்சம் தருதல் முதலிய குணங்களோடு கூடிய பரமாத்மாவைக் குறிக்கும்**

எல்லா உலகங்களையும் விளங்கவைக்கிறார். தானும் எப்பொழுதும் ஒளி மிக்கவராய்க் காட்சி தருகிறார். எல்லாவகை அஜ்ஞாநத்தையும் எல்லா உலகங்களையும் ஶுத்தப்படுத்துகிறார். ஆகையால் இந்த அனைத்து உலகங்களும் நூலில் மணிகள் கோற்கப்பட்டது போல் அந்த பகவானிடம் கோற்கப்பட்டுள்ளன. **இ** என்பதற்குத் தூண்டுகிறார் என்றும் புகழத்தக்கவர் என்றும் பொருள். ஆகாயம் முழுவதையும் படைத்தவர் என்கிற காரணங்களால் இந்த **தேவ** என்கிற சொல்லால் பரமாத்மாவான **விஷ்ணு**வே கூறப்படுகிறார்.

**'தீமஹி' என்கிற சொல் உபாஸநம் என்று சொல்லப்படும் பக்தி வடிவமான ஜ்ஞாநத்தைக் குறிக்கும்**

**தீமஹி** என்கிற சொல்லில் உள்ள **தீ** என்பது ஜ்ஞாநத்தையும், **ம** என்பது த்யாநத்தையும் குறிக்கிறது.

**மூன்றாவது பாதத்துக்குத் திரண்ட பொருள்**

**திய:** என்பதற்கு நாம் தெரிந்து செய்யும் செயல்கள் என்று பொருள். **ப்ரசோதயாத்** என்பதற்குச் செய்வித்தல்-தூண்டுதல் என்று பொருள். **ய:** என்பதற்கு எந்த பகவான் ஸகல ஶக்தி நிரம்பிய **ஸவிதா** என்று சொல்லப்பட்டாரோ அவர் ஜ்ஞாந வடிவமான தேவன் என்பதாகும். எவர் எல்லாவற்றையும் அறிந்து உலகத்தை நடத்தி வைக்கிறாரோ, அவரைக் குறிக்கும். அப்படிப்பட்ட பகவான் பலவகையான ஜ்ஞாநங்களை நமக்குத் தந்து உதவ வேண்டுமென்று பொருள். இப்படிப்பட்ட தேவனுடைய படைத்தல், காத்தல், ஒடுக்குதல், ஆபத்திலிருந்து காத்தல் முதலிய செயல்களுக்குக்

காரணமாயிருப்பதும், அழிவு இல்லாததுமான **ஸுதர்ஶநம்** என்கிற **பர்க:** என்பது பொருள். நாம் த்யாநம் செய்வோமாக என்பது திரண்ட பொருள். ஜபிப்பவனைக் காப்பாற்றுகின்ற **காயத்ரி**யின் பொருள் என்று இவ்வாறு சொன்னபடி கொள்ள வேண்டும்.

## காயத்ரியின் மஹிமையின் சுருக்கம்

இரண்டு ஸந்திகளிலும் பக்தி ஶ்ரத்தையுடன் கூடியவன் (ஜபம் செய்பவன்) உத்தமமான **ப்ராஹ்மண்யத்தைப்** பெறுவான். 1. **ப்ராஹ்மண்யம்** என்பது ஸந்த்யாவந்தநம் முதலிய தனக்கு இட்ட கட்டளைகளை முறையாகச் செய்பவனுக்கு ஏற்படும் ஒருவகை ஶாந்தி, தேஜஸ் முதலிய குணங்கள். 2. (இரண்டு ஸந்த்யைகள் என்று சொன்ன இடத்தில் மாத்யாந்நிகமும் அடங்கி உள்ளதாகக் கொள்ள வேண்டும்). வீட்டுக்கு வெளியில் ஆயிரம்முறை இந்த **காயத்ரீ** ஜபம் செய்யப்பட்டால் அந்த ஶ்ரோத்ரியனுடைய ஸகல பாபங்களையும் மஹா பாபங்களையும் ஒரு மாத காலத்தில் நீக்கிக் காப்பாற்றும். (ஸந்த்யாவந்தநம் மழை காலம் தவிர வீட்டுக்கு வெளியிலேயே செய்ய வேண்டும். **ஸூர்யஶ்ச மா மந்யுஶ்ச, ஆப: புநந்து, அக்நிஶ்ச மா மந்யுஶ்ச** என்கிற மந்த்ரங்களில் சொல்லப்பட்டுள்ள பாபங்களே இங்கு குறிக்கப்பட்டுள்ளன) ப்ரணவத்தோடு கூடிய **பூ: புவ: ஸுவ:** என்கிற மூன்றும், **ஓம் பூ: புவ: ஸுவ: மஹ: ஜந: தப: ஸத்யம்** என்கிற மஹாஸப்த வ்யாஹ்ருதிகளும் மூன்று வாக்யங்களாக அமைந்த இவை அனைத்தும் சேர்ந்து மிகவும் புனிதத் தன்மை வாய்ந்தவை.

## மூன்று வ்யாஹ்ருதிகளின் ஸ்வரூபத்தை விளக்குவதன் மூலம் காய்த்ரியின் பொருள் விளக்கம்

விஷ்ணுவின் உத்தமமான ஶக்தி என்பது எல்லாப் பொருள்களாகவும் அமைந்துள்ளது. அது **பூ:** என்பது சொல்லப்படுகிறது. இதுவே பூமியாக மாறிற்று. பூமியாக இருக்கும் ஶக்தியை அடிப்படையாகக் கொண்டு இந்த உலகத்திலுள்ள பொருள்களைக் காப்பாற்றிக் கொண்டிருக்கும்

மிகப் பெரிய ஶக்தி **புவ:** என்று கூறப்படுகிறது. ஸாதுக்களுக்கு எப்பொழுதும் இவ்வுலகத்தில் ஸுக போகங்கள், மோக்ஷம் என்கிற விருப்பங்களைத் தருவதாய்ப் பெரியோர்களால் **ஸுவ:** என்று பொருள் சொல்லப்பட்டது. இந்தக் காரணங்களால் **வ்யாஹ்ருதி** சொல்லாக மாறிற்று.

### காயத்ரியில் மறைந்திருக்கும் 'ப்ரஹ்ம ஶிரஸ்' முதலிய அஸ்த்ரங்களின் குறிப்பு

**காயத்ரி**யின் பாதங்களில் **தத்** என்கிற ருக்கைத் தலை கீழாகப் படித்தால் **ப்ரஹ்ம தண்டாஸ்த்ரம்** விளங்கும். **ப்ரஹ்ம ஶிரஸ்** என்கிற அஸ்த்ரத்தைப் பற்றிப் பதம் மூலம் இப்பொழுது சொல்கிறேன். அதில் உள்ள ஸ்வரங்களை (உயிரெழுத்து) தலை கீழாகப் படித்தால் எழுத்துக்கள் ப்ரஹ்மாஸ்த்ரமாக அமையும். அது எல்லா அஸ்த்ரங்களையும் அழிக்கக் கூடிய **ஸுப்ரஹ்மாஸ்த்ரம்** எனப்படும், அதன் ருக்குகள் பின் வருமாறு-

आनन्दो वरुणः तद्वान् वरुणः स चतुर्गतिः।
साप्रमेयस्तृतीयः स्याच्छन्दस्थो व्यापकस्तथा।
सानन्दो वरुणश्चैव साप्रमेयश्चतुर्गतिः॥
शाङ्गद्वयं सदा देवमन्त्रं सप्ताक्षरं परम्।
अतिब्राह्मं समुद्दिष्टं अस्य स्वरविलोमजम्।
आनन्दः केवलस्तत्तु दिव्यमेकाक्षरं स्मृतम्।
तादित्यृचोऽस्याः सावित्र्या इयती दर्शिता भिदा॥

### 'ஜாதவேதஸ' என்கிற த்ருஷ்டுப் பொருளைக் குறிக்கும் சொல்லுக்கும் பொருள்

**ஜாத வேதஸ:** என்று தொடங்கும் த்ருஷ்டுப் சந்தஸ்ஸுக்குப் பொருள் சொல்கிறேன். **ஜாத** என்பதிலிருந்து உண்டாவதை எவன் ஒவ்வொரு பொருளிலும் முழுமையாக அறிகிறானோ அவனுக்குத் தத்வஜ்ஞானம் இயற்கையாகவே

உண்டாகிறது. **வேத:** என்பதற்கு ஆநந்தம், வெளிப்பாடு உருவத்தில் உள்ள ஶக்தி என்று பொருள். இது யாருக்கு எப்பொழுதும் தோன்றுகிறதோ, அது உலகத்துக்கெல்லாம் கதியாகும். **வேத:** என்பது பரிஶீலநையைக்குறிக்கும். பரிஶீலநை என்பது பலவிதமான செயல். இந்தப் பரிஶீலநைச் செயல் யாருக்கு ஏற்படுகிறதோ (அது விஷ்ணுவின் எல்லாவற்றையும் படைக்கும் நிலையாகும்.)அந்தப் புருஷோத்தமன் எல்லாவற்றையும் அறிந்தவர். எல்லாவகை ஶக்திகளையும் உடையவர். எல்லாவற்றையும் படைப்பவர். இவ்வாறு **ஜாதவேதா:** என்பதால் பொருள் கூறப்பட்டது. ஜீவாத்மா **ஸாம:** என்று கூறப்படுகிறார். இந்த ஜீவாத்மா அஜ்ஞாநத்தின் காரணமாகப் பற்பல பிறவிகளில் பிறந்து எப்பொழுதும் மாறி மாறிப் பிறக்கிறான்.

### ஸுநவாம என்பதால் பகவானிடம் அடிமையாக இருக்கும் தகுதியைக் கொடுக்கவல்லது

இங்கு **ஸுநவாம** என்கிற சொல்லால் ஜீவனுக்கு அடிமையாக இருக்கும் தகுதியைக் கொடுத்தல் என்று சொல்லப்படுகிறது.

### 'ஸோம' என்கிற சொல்லில் உள்ள பொருள் விளக்கம்

ஸ்வரஸமான **ஸுநோதி** என்பதிலிருந்து உண்டானதால் **ஸோம** என்னும் சொல்லுடைய பிரித்த நிலைக்குக் காரணம். சாறாக மாறிய ஸோமலதையைக் கொண்டு யாகம் செய்யப்படுவதாகச் சொல்லப்படுகிறது. இந்த உவமையை உள்ளடக்கி இருப்பதால் ஜீவன் அடிமையாக இருக்கும் தன்மை ப்ரார்த்திக்கப்படுகிறது.

### உவமையில் சொல்லப்பட்ட பொருளுக்கு ஜீவன் விஷயத்தில் பொருத்திக் காட்டுதல்

யாகத்தில் அக்நியில் ஸோமரஸத்தை எப்படி ஹோமம் செய்கிறார்களோ அப்படித் தன்னைப் பகவானிடம் ஸமர்ப்பிக்க விரும்பும் ஜ்ஞாநி ஒற்றுமை - வேற்றுமை இவைகளின்

காரணங்களால் உண்டான நல்ல ஜ்ஞாநத்தின் மூலம் உடல் புலன்கள், மநம், ப்ராணன், அறிவு, குணங்கள் இவைகளிலிருந்து மாறுபட்டவனாகப் புரிந்து கொள்கிறுன். இவ்வாறு பிரித்து அறியப்பட்ட ஆத்மாவைப் பரமாத்மாவுக்கு ஸமர்ப்பித்து அவரிடமே இருந்து கொண்டும், அவரையே நினைத்துக் கொண்டும் தானே இந்த ஜீவன் பக்தி ரூபமான ஜ்ஞாநத்தை அடைய விரும்புகிறுன்.

### முதல் பாதத்தில் 'நம:' பொருளே சொல்லப்பட்டது

இப்பொழுது சொன்னது வேறு ஒரு வகையில் நம: என்பதன் பொருளே.

### இரண்டாவது பாகத்தில் எம்பெருமானை அடையத் தடையாக உள்ள ப்ரக்ருதி ஸம்பந்தத்தைப் போக்கி அருள்பவனும் பகவானே என்று கூறுதல்

இரண்டாவது பாதத்துக்குப் பொருள் சொல்கிறேன், கேளும். **அராதீயத:** என்பது பகைவனைப் போல் செயல்படுவதனால் தடையாக உள்ள நம் ஶரீரம் சொல்லப்படுகிறது. அந்தக் தடை **(பந்த:)** அநாதி காலமாக ஏற்பட்ட அஜ்ஞாநத்தால் பிறந்தது. ஶரீரத்தால் ஏற்படும் குணங்களில் (ஶப்தம் முதல்) உண்டான பற்றுதல் **வேத:** என்பதால் சொல்லப்படுகிறது. ஹோமம் செய்யப்பட்ட ஸோமரஸத்தை ஏற்றுக் கொள்வதற்கு அந்த அநாதியான பகவான் இந்தத் தடைகளை எல்லாம் அழித்து அருளட்டும்.

### பின் பகுதியில் முன் சொன்ன கருத்தையே உதாரணம் காட்டி விளக்குகிறுர்

அந்த பகவான் குணங்களின் சேர்க்கையால் வரும் பற்றுதல் என்கிற உருவத்திலிருக்கும் இந்த **ஸத்தா** என்பதை மிகவும் கட்டி வைத்திருந்து எல்லா மட்டரகமான **(ஹேய -** விலக்கத்தக்க) தத்வங்கள் என்கிற ஆபத்துக்களிலிருந்து நம்மைக் கரையேற்றுகிறுர்.

### பின் பாதியில் உள்ள அக்நி என்கிற சொல் பரம புருஷனையே குறிக்கிறது

இந்த இடத்திலும் முன் சொன்ன **ஜாதவேதஸ்** என்பவரே **அக்நி** என்கிற சொல்லால் குறிக்கப்படுகிறார். தன் ஸமீபத்தில் **ஶரணம்** என்று வந்த எல்லா உலகத்து மக்களையும் ஏற்றுத் தன்னிடம் சேர்ப்பித்துக் கொள்கிறார் என்பதே **அக்நி** என்கிற சொல்லின் பொருள். தன்னிடம் தன் ஆத்மாவை ஸமர்ப்பித்த ஜீவனைத் தன் பரமபதத்துக்கு அழைத்துச் செல்கிறார் என்பதே இதன் பொருள். **ஜாதவேதா:** என்கிற எம்பெருமான் நம் எல்லோரையும், எல்லா உலகங்களையும் கரையேற்றி வைக்கிறார்.

### த்ருஷ்டாந்தமாக அமைந்துள்ள நான்காவது பாதத்தின் பொருள் விளக்கம்

இங்கு **நாவா** என்பது படகு போன்றது என்கிற த்ருஷ்டாந்தம் ஆகிறது. **ஸிந்து** என்பது ஸம்ஸாரமாகிய கடல் என்று பொருள். படகில் உட்கார்ந்திருக்கும் மக்களைப் படகோட்டியான எம்பெருமான் கரையேற்றுவான். **துரிதம்** (பாபம்) என்பது காற்று, மழை முதலியவற்றால் ஏற்படும் தீமைகளை என்று சொல்லப்பட்டது. **அதி** என்பதின் பின் வருகிற **துரிதா** என்கிற சொல் **துரிதாநி** என்கிற பொருளைக்குறிக்கும். ஒரு படகோட்டி, காற்று, மழை இடையூறுகள் இவற்றால் ஏற்படும் ஶ்ரமங்கள் இவற்றை நீக்கிப் படகிலிருப்பவர்களை எப்படிக் கரை ஏற்றுகிறானோ அப்படி பகவானும் செய்கிறார் என்பது கருத்து.

### இதன் பொருளை பகவான் விஷயத்தில் பொருத்திக் காட்டுகிறார்

இவ்விதமே **ஜாதவேதா:**, **அக்நி** என்கிற **ஹரி**, தானே மோக்ஷத்துக்குத் தடையாக உள்ள பாபம் என்று சொல்லப்படும் நம் தொல்லைகளை நீக்கி அருளி, மோக்ஷத்துக்கு உபாயமாக (மார்கமாக) உள்ள ஶரணாகதி போன்ற நிலைக்கு நம்மைக் கரையேற்றி வைக்கிறார். இங்குப் படகின் மூலம் என்று சொல்லப்பட்ட த்ருஷ்டாந்தத்தினால் மனிதனால்

செய்யப்பட வேண்டிய உபாயத்தைச் சொல்கிறது. மற்றவை படகோட்டியான **பகவானின்** கையில்.

## இந்த மந்த்ரத்தில் மறைந்திருக்கும் அக்நி அஸ்த்ரம் முதலியவற்றின் உருவத்தின் விளக்கம்

கடைசியில் உள்ள **அக்நி** என்பது அக்நி **அஸ்த்ரத்தைக்** குறிக்கிறது. பாதம் மூலமாக **ஜாதவேதஸ்** என்பதில் இருப்பதையும் எழுத்துக்கள் மூலமாக **ஆக்நேய**மும் விவரிக்கப்படுகிறது. உயிரெழுத்துக்கள் தலை கீழாக **அத்யாக்நேயாஸ்த்ரம்** சொல்லப்படுகிறது. **அப்ரமேயத்து**டன் கூடியவர் **சதுர்கதி.** செயல்களை வெளிப்படுத்தும் பகவான் **சதுர்கதி.**

(இங்கு மூலத்தை அப்படியே எழுதுகிறோம்).

**सूक्ष्मद्वयं साप्रमेयं साप्रमेयश्चतुर्गतिः ।**
**चतुर्गतिः साप्रमेयो वराहः शङ्ख एव च ॥**

**अप्रमेयश्च पिण्डस्थं त्रयमेकीकृतं स्मरेत् ।**
**चतुर्गतिः साप्रमेयः सादिदेवश्चतुर्गतिः ॥**

இதுவரை சொன்னது மந்த்ரத்தின் பிற்பகுதியில் தலைகீழாகக் கிடைக்கும் பொருள். இனி முற்பகுதியில் உள்ள பொருளைக் கேளும்-

**आनन्दः केवलः सूक्ष्मद्वययुक् चाऽप्रमेयतः ।**
**चतुर्गतिः साप्रमेयो वराहः शङ्ख एव च ।**

**अप्रमेयश्च पिण्डस्थं त्रयमेकीकृतं स्मरेत् ।**
**चतुर्गतिः सादिदेवः सानन्दो वरुणस्तथा ॥**

**சதுர்கதி** என்பது **ஸாதிதேவ** என்பதாக முன் பகுதியில் தோன்றுகிறது.

**हनद्वयं वर्म सास्त्रमग्निजाया तथान्ततः ।**

உயிரெழுத்துக்கள் தலைகீழாக இருந்து 15 அக்ஷரங்களைக் குறிக்கிறது.

**हनाद्यष्टाक्षरं चान्ते यः स्वरः प्रतिलोमजः ।**
**त्र्यक्षरः स तु विज्ञेयः द्विवर्णश्चोर्ध्वभाग्भवेत् ॥**

முன் பாதியில் உள்ள ஓரெழுத்து பற்றிச் சொல்கிறேன், கேளும். **அப்ரமேயர்** ஆநந்தத்தோடு கூடியவராய் **வர்ண** என்று இரண்டு அக்ஷரம் கொண்ட மந்த்ரம்.

**आनन्दः एकः पूर्वार्धे संहत्या यत् त्रिवर्णकम् ।**

அதன் தலைகீழ் வாசகம் கேவலம் ஆநந்தம் எனப்படும். தலை கீழாக வரும் இவ்விரண்டும் எல்லாவற்றுக்கும் ஶாந்தியாகவும் ஸ்வஸ்தி வாசகமாகவும் அமையும். இவ்வாறு சொன்ன விஷயம் **த்ருஷ்டுப்** என்று **(ஜாதவேதா:)** என்கிற முறை சுருக்கமாக உமக்குச் சொன்னேன்.

**'த்ரயம்பகம் யஜாமஹே' என்கிற அநுஷ்டுப் மந்த்ரத்தில் உள்ள 'த்ரயம்பக' என்கிற சொல்லுக்கு ஜ்ஞாந ஶக்தி க்ரியையோடு கூடிய எம்பெருமானே பொருள் என்று விளக்குகிறார்.**

இப்பொழுது நீர் ஆநுஷ்டுபத்துக்கு மேலான புனிதமான விளக்கத்தைச் சொல்கிறேன் கேளும். **இச்சை** (ஸங்கல்பம்) **ஜ்ஞாநம், க்ரியா** என்பவை இந்த உலகங்களுக்கு மூன்று வகைத் தாயார்கள் ஆகும். உலகத்தைப் படைக்கக் காரணமாகவும் மிகுந்த பலம் கொண்டவர்களாக இருக்கும் இந்த மூன்று தாய்மார்களும் யாரிடம் இருக்கிறார்களோ அப்படிப்பட்டவரே **ஜ்ஞாநம், ஶக்தி, க்ரியை** இவைகளோடு கூடியவர் **த்ரயம்பக** என்ற சொல்லுக்குப் பொருளாகும்.

**'யஜாமஹே' என்ற சொல்லின் பொருள் விளக்கம்**

**யஜ** என்கிற சொல்லுக்கு ஒரு தெய்வத்தைக் குறித்து த்ரவ்யங்களை அக்நியில் சேர்ப்பது என்பதே பொருள்.

## 'ஸுகந்திம்' என்கிற சொல்லுக்கு விளக்கம்

யாருக்கு நல்ல மணம் உள்ளதோ அவரே ஸுகந்தி எனப்படுகிறுர். அனைத்துமாக இருக்கும் தன் புனிதத் தன்மையை (ஶுபத் தன்மையை)க் காட்டுவதால் ஸுகந்தி என்கிற பெயரால் குறிக்கப்படுகிறுர். எவர் தன்னுடைய தேஜஸ்ஸால் எல்லா தத்வங்களையும் மணமுள்ளவைகளாகச் செய்கிறாரோ, எவர் தன் அநுக்ரஹத்தின் மூலம் எல்லா ஜீவர்களையும் தன்னைப் போன்ற உருவமுடையவர்களாகச் செய்கிறுரோ, எந்த பகவானுடைய ஆட்சிக்குட் பட்டவையாம் பஞ்சபூதங்களும் அவற்றின் குணமான மணம் ரஸம் போன்றவைகளும் புனிதமாக இருக்கின்றனவோ, அப்படிப்பட்ட அவர் அனைத்தையும் அறிந்தவராய், ஜ்ஞாந ஸ்வரூபியாய், அனைத்தையும் அடக்கி ஆள்பவராய் ஸுகந்தி என்று சொல்லப்படுகிறுர்.

## 'புஷ்டிவர்தந' சொல்லின் பொருள்

ஸத், அஸத் எனப்படும் மஹிமையே புஷ்டி எனப்படுகிறது. அது விஷ்ணுவினுடைய ஶக்தி ஸ்வரூபம். அந்த பகவானே அதை வளர்க்கிறுர். தன்னுடைய ஸங்கல்பத்தால் படைத்தும் பற்பல உருவங்களாகப் பரவச் செய்தும் அவற்றைத் தாங்கியும் இயங்கச் செய்தும் பிறகு அதை ஒடுக்கிக் கொள்கிறுர். இக்காரணத்தினால் ஷாட்குண்யம் நிரம்பிய விஷ்ணுவே புஷ்டி வர்த்தநன் என்று சொல்லப்படுகிறுர்.

## வாக்யங்களின் பொருள் கூறும் வாயிலாகப் பகவானிடம் தன் ஆத்மாவாகிற ஹவிஸ்ஸை ஸமர்ப்பித்தல் என்பதை முன் பாதி விளக்குகிறது

இச்சா ஶக்தி, ஜ்ஞாந ஶக்தி, க்ரியா ஶக்தி ஸ்வரூபமாக ஶோபநம் என்கிற திருநாமம் உள்ளவரும், யாவராலும் விரும்பப்படுபவரும், அனைத்தும் தனக்கு ஶரீரமாக இருப்பதால் தன் ஆட்சியை விளக்குபவரும், பரிஶுத்த ராகவும், ஜ்ஞாந ஸ்வரூபராகவும், பரம் பொருளுமான, அனைத்து உலகங்களுக்கு அதிபதியும், தாமரைக் கண்ணனும்,

புருஷன் என்று சொல்லப்பட்டவருமான தன் தேவதையைக் குறித்துத் தன் ஆத்மாஎன்கிற ஒரு மேலான த்ரவ்யத்தை ஸமர்ப்பிக்கிறேம் என்பது முதல் பாதியில் **யஜாமஹே** என்பதின் பொருள்.

**பின் பாதியின் பொருள் விளக்கம்**

இங்குள்ள **ம்ருத்யு** என்கிற சொல்லுக்கு விளக்கம் **ம்ருத்யு ம்ருத்யு** என்கிற இடத்தில் முன்பே சொல்லப்பட்டது. இனி **பரமாத்மா** என்கிற தேவதையிடத்தில் தன் ஆத்மாவையும், தன்னைச்சார்ந்தவைகளையும் ஸமர்ப்பிப்பவன், பல வகைத் துன்பங்கள் என்கிற **ஸம்ஸாரம்** என்னும் நிலையிலிருந்து, சுரைக்காய் நன்றாக முதிர்ந்த பிறகு எவ்வாறு காம்பிலிருந்து ஶ்ரமமின்றி விடுபடுகிறதோ அது போல் நானும் விடுபடுவேனாக என்று ப்ரார்த்திக்கிறேன். இப்பொழுது செய்த இந்த **ஆத்மஸமர்பண**மாகிற **ஸந்யாஸத்தில்** நான் உறுதியாக இருக்க வேண்டும் என்றும், **மாம்ऽருதாத்** என்று ப்ரார்த்திக்கிறான். **அம்ருதம்** என்கிற ப்ரஹ்மத்தின் மூலம் நான் என்னை யாருக்கு ஸமர்பித்தேனோ, அந்த பகவானிடமிருந்து ஒரு போதும் விலகாமலிருக்க வேண்டும். எனக்கு ஶாஶ்வதமான க்ஷேமம் உண்டாக வேண்டும் என்றும் ப்ரார்த்திக்கிறேன்.

**ஶரணுகதி செய்பவனுக்கு ப்ரஹ்மத்தைப் போலவே ஸகல குணங்களும் ஏற்படுகின்றன என்கிற பொருள் மந்த்ரத்தில் தொக்கி நிற்கிறது என்கிற விளக்கம்**

இவ்வாறு சொன்ன பொருள்கள் எல்லாம் அந்த ஆநுஷ்டுபத்தில் அடங்கியுள்ள பொருள்களே. அதாவது மங்களகரமான **ப்ரஹ்ம ஸாயுஜ்யம்** என்பதே அது. முன்பு காட்டிய **(காயத்ரீ, ஜாதவேதஸ், ஸுநவாம, த்ரயம்பகம் யஜாமஹே)** மூன்று ஜோதிகள் என்று சொல்லப்பட்டன.

**இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம் அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் ஜ்யோதிஶ்சக்ர மந்த்ரார்த்த நிரூபணம்** என்கிற 57வது அத்யாயம் முற்றிற்று.

பஞ்ச ஹோத்ரு மந்த்ரத்தின் பொருள் விளக்கம் என்கிற

# 58வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி॥
(விளக்கம் 18வது அத்யாயத்தில் உள்ளது)

**அஹிர்புத்ந்யர், தஶஹோதா, சதுர்ஹோதா, பஞ்சஹோதா, ஷட்ஹோதா, ஸப்தஹோதா** என்ற முன்பு 5 வாக்யங்கள் (23வது அத்யாயத்தில்) சொல்லப்பட்டன. உலகத்தைப் படைக்க வேண்டும் என்று விரும்பிய **விஷ்ணுவுக்கு** ஸங்கல்பம் என்கிற தவம் சொல்லப்பட்டுள்ளது. அதுவே இந்த ஐந்து ஹோதாக்களால் யாகம் என்று உருவகப்படுத்தி ஸங்கல்பம் என்று சொல்லப்பட்டுள்ளது.

**வாசகர்கள் கவனிக்க**
**மந்த்ரங்கள் பற்றிச் சில முக்யமான விஷயங்கள்**

**மந்த்ரம்** என்பதைப் பெரியோர்கள் **அஷட்கர்ணம்** என்று சொன்னார்கள். உபதேஶம் செய்யும் ஆசார்யன், கேட்கும் ஶிஷ்யன் இவர்களின் நான்கு காதுகளுக்கு மட்டுமே இருக்க வேண்டும். ஆறு காதுகள் ஸம்பந்தப் படக் கூடாது என்று கண்டிப்பாகச் சொன்னார்கள். ஸ்வாமி ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் இதைப் பற்றிச் சொல்லும் பொழுது "गुरुं प्रकाशयेत् धीमान् मन्त्रं यत्नेन गोपयेत्। अप्रकाश प्रकाशाभ्यां क्षीयेते संपदायुषी ॥" என்றார். இதன் பொருள்:- நல்ல புத்திஶாலியான ஶிஷ்யன் தன் ஆசார்யனைப் பற்றிப் பல இடங்களில் பலவாறாகப் புகழ்ந்து பேச வேண்டும். இவ்வாறே மந்த்ரங்களைக் கண்டிப்பாக மறைத்தே வைத்திருக்க வேண்டும். இப்படியல்லாமல் ஆசார்யன் புகழ் பாடாமலும், மந்த்ரங்களை வெளிப்படையாகச் சொல்வதைச் செய்தால் செல்வமும் ஆயுளும் குறைந்து போகும் என்றார். அந்த வகையைப் பின் பற்றியே **ஸ்ரீஅஹிர்புத்ந்யர்** 53வது அத்யாயம் தொடங்கி மந்த்ரங்களை நேர் முகமாகச் சொல்லாமல்

முதலில் **விஷ்ணு** என்றும், பிறகு **ஜிதந்தே** என்றும் பல மந்த்ரங்களைப் பதம் பதமாகவும் எழுத்து எழுத்தாகவும் விளக்கம் சொல்லி **ஸ்ரீ ந்ருஸிம்ஹ ஆநுஷ்டுப மந்த்ர**த்தையும் இவ்வகையிலேயே தனித் தனிப் பதங்களாகவும், எழுத்து எழுத்தாகவும் பிரித்துப் பொருள் கூறினார்.

**இங்கு ஒரு விஷயம் முக்கியமாகக் கவனிக்க வேண்டும்**

இந்த **ந்ருஸிம்ஹ ஆநுஷ்டுப மந்த்ரம்** 9 வார்த்தைகள் கொண்டது. கடைசியில் **நமாம்யஹம்** என்று முடிக்கிறார். இதில் மற்றொரு ரஸம் உள்ளது. 9 பதங்கள் கொண்ட இந்த மந்த்ரத்தை 54வது அத்யாயத்தில் வைத்தார் பாருங்கள். 5ம் 4ம் கூட்டினால் 9 ஆகிறது. இதை அவர் தெரிந்தே செய்திருக்கிறார். மேலும் இங்குள்ள மற்றொரு விஷயமும் கவனத்தில் கொள்ள வேண்டும். **ஸ்ரீ அஹிர் புத்ந்யர்** 54வது அத்யாயத்தில் உள்ள விஷயங்களை விசாரித்தார் என்பது இல்லை. 9 என்கிற எண் 18, 27,36,45 முதலிய அத்யாயங்கள் எண்களில் வருகிறது. ஆனால் மந்த்ரத்தின் முதல் பாதியில் 5 திருநாமங்களும், இரண்டாவது பாதியில் 4 திருநாமங்களும் உள்ளன. ஆகையால் 54வது அத்யாயத்தைத் தெரிந்தே தேர்ந்தெடுத்தார் என்று நினைக்கும் வகையில் பொருத்தம் உள்ளது. ஸர்வக்ஞரன்றோ அவர்!

இதே மந்த்ரத்துக்குப் பல மதத்தினர் எப்படிப் பொருள் கூறுகிறார்கள் என்றும் சொன்னார். ஸாங்க்யர்கள், ஸாத்வதர்கள், வைதிகர்கள், பஶுபதி மதத்தினர் என்று பலரும் கூறும் விஷயத்தையும் எடுத்துச் சொன்னார். மற்ற எல்லா மந்த்ரங்களைக் காட்டிலும் இந்த **ந்ருஸிம்ஹ ஆநுஷ்டுப மந்த்ரம்** மிகவும் ஶக்தி வாய்ந்தது. ஒரு நல்ல ஆசார்யன் மூலம் உபதேஶம் பெற்று, ருஷி,சந்தஸ், தேவதை, த்யாநஶ்லோகம் இவற்றைச் சொல்லிக் காலையில் ஸந்த்யாவந்தநத்துக்குப் பிறகு கவனம் சிதறாமல் அதிலேயே மனதை வைத்து, **திஶஶ்ச அநவலோகயந்** என்கிறபடி (வேறு எதையும் பார்க்காமல்) ஜபம் செய்து வந்தால் நோய் நொடிகள் வராது. வேறு வகையான ஆபத்து எதுவும் வராது என்பது

திண்ணம். இதனுடைய த்யாந ஶ்லோகத்தை மட்டும் உங்களுக்காக எழுதுகிறேன்-

सत्यज्ञानसुखस्वरूपममलं क्षीराब्धिमध्यस्थितं
स्वाङ्गारूढरमाप्रसन्नवदनं भूषासहस्रोज्ज्वलम्।
त्र्यक्षं चक्रपिनाकसाभयकरान् बिभ्राणमर्कच्छविं
छत्रीभूतफणीन्द्रमिन्दुवदनं लक्ष्मीनृसिंहं भजे॥

**குறிப்பு:** ஸம்ஸ்க்ருதம் தெரியாதவர்கள் இந்த ஶ்லோகத்தைத் தமிழில் எழுதித்தரச் சொல்லிப் படிக்க வேண்டாம். தெரிந்தவர் சொல்ல அந்த உச்சரிப்பைச் சரியாகச் சொல்லி நாலைந்து திநங்கள் சொல்லிக் கொண்டால் சரியான உச்சரிப்பு வந்து விடும். **இதைக் கண்டிப்பாகக் கடைபிடிக்க வேண்டும்.**

## இனி 58வது அத்யாயம் பற்றி ஒரு விளக்கம்

தைத்திரீயோபநிஷத்தின் முடிவில் **தஸ்யைவம் விதுஷோ யக்ஞஸ்ய** என்று ஒரு பெரிய அநுவாகம் சுமார் 20 வரிகள் கொண்டதாக உள்ளது. அதில் கூறப்பட்டுள்ள விஷயத்தை உங்களுக்கு இங்கு விளக்கிக் கூற விரும்புகிறேன்.

வைதிக ஸம்ப்ரதாயத்தில் ஊக்கமுள்ள ஒரு ஜ்ஞாநி காலை முதல் இரவு படுக்கப் போகும் வரை பஞ்சகால பராயணராய் (அதாவது 1. **அபிகமநம்,** 2. **உபாதாநம்,** 3. **இஜ்யை,** 4. **ஸ்வாத்யாயம்,** 5. **யோகம்** என்கிற வகையில்) அந்தந்த காலத்துக்குக் கார்யங்களைச் செய்து கொண்டு இருந்தால் அவருடைய அந்த நித்ய கர்மாநுஷ்டாநமே ஒரு யாகம் போல் அமையும் என்று பொதுவாகக் கூறுகிறது.

யாகத்தில் பற்பல விஷயங்கள் உண்டு. முதலில் ஸங்கல்பம் செய்து கொண்டு, தீக்ஷை எடுத்துக் கொள்ள வேண்டும். யாகத்தில் அக்நி சேர்க்குமிடத்துக்கு **வேதி** என்று பெயர். அவற்றுக்கு நாற்புறமும் தர்ப்பங்கள் சேர்க்க வேண்டும். ப்ரம்மா என்று ஒருவரை நியமிக்க வேண்டும். யாகத்திலும் **ஸ்ருத்யா காலம்** என்ற பெயருடன் ஓய்வெடுத்துக்

கொள்ளும் நேரமும் உண்டு. ஹோமத்துக்கு நெய் வேண்டும். அதை எடுத்து அக்நியில் சேர்க்க **ஸ்ருக்** என்றும் **ஸ்ருவம்** என்றும் மரத்தால் செய்த இரண்டு கரண்டிகள் உண்டு. **ஆக்நீத்ரன்** என்று ஒருவர் இருக்க வேண்டும். அக்நி அணையாமல் பார்த்துக் கொள்வது தான் இவர் வேலை. **அஸ்வாகாரர்** என்று ஒருவர், **அத்வர்யு** என்பவர் முக்யமானவர். **ஹோதாக்கள்** என்று பலர் உண்டு. இவர்களுக்கெல்லாம் தக்கபடி தக்ஷிணை தர வேண்டும். கடைசியில் **அவப்ருதம்** என்பது ஒரு ஸ்நாநம். அதாவது யாகத்தின் இறுதியில் புனிதமான ஸ்நாநம்.

இந்த விஷயங்களையெல்லாம் ஒவ்வொன்றாக எடுத்துப் **பஞ்சகால பராயண**னான ஒரு ஜ்ஞாநியிடம் 'இந்த ஸ்தாநத்தில் இது அமைகிறது' என்று விளக்குகிறது.

உதாரணத்துக்கு இரண்டு சொல்கிறேன். ஜ்ஞாநியின் ஆத்மாவே யாகம் செய்யும் யஜமாநன் என்றும், அவர் கர்மாக்களை எந்த ஶ்ரத்தையுடன் செய்கிறாரோ அந்த ஶ்ரத்தையே யஜமாநனின் பத்நி போலாகும் என்று உருவகப் படுத்திக் காட்டுகிறது. கடைசியில் **யத் மரணம் ததவப்ருத; அவருடைய ப்ராணன் பிரிகிறதே** அது தான் **அவப்ருத ஸ்நாநம்** என்று சொல்லி முடிக்கிறது உபநிஷத்.

இது போலவே எம்பெருமான் **ஸ்ரீவிஷ்ணு** இந்த உலகங்களையெல்லாம் பல யுகங்கள் தன்னுள்ளே அடக்கி வைத்திருந்துப் பிறகு அவற்றை மீண்டும் ஸ்ருஷ்டி செய்ய வேண்டுமென்று நினைக்கிறார். இதை வேதம் **'सोऽकामयत, बहु स्यां प्रजायेय इति'** என்று சொல்கிறது. அந்த பகவான் **'நான் ப்ரக்ருதியின் உதவியைக் கொண்டுப் பல பொருள்களாகப் பிறக்க வேண்டும்'** என்று நினைத்தார் என்பது பொருள். இதே போல் மற்றொரு இடத்தில் **''हन्त इमाः त्रिस्रो देवताःअनेन जीवेन आत्मना अनुप्रविश्य नाम रूपे व्याकरवाणि''** என்று வாக்யமுள்ளது. இதன் பொருள்: பகவான் நினைக்கிறார். **ப்ருத்வீ (பூமி) ஜலம் தேஜஸ் (அக்நி) என்கிற மூன்று பொருள்களுக்குள்ளே இந்த**

ஜீவனுடன் கூட நானும் சேர்ந்து புகுந்து உருவங்களைக் கொடுத்தும் அவற்றுக்குப் பெயர்களை வைத்தும் படைக்கிறேன் என்பதே. இதற்கு நாமரூப வ்யாகரணம் என்பது பெயர். அதாவது ஒரு மனிதனையோ, பஶு பக்ஷியையோ, மரம், செடி, கொடி, மலை இவற்றையோ படைத்து அவற்றுக்குப் பெயர் சூட்ட வேண்டுமென்று நினைத்தாராம். இப்படிச் சொல்லிவிட்டு மீண்டும் வேதம் சொல்கிறது- सच्चत्यच्चा भवत् । निरुक्तं चाऽनिरुक्तञ्च । निलयनञ्चाऽनिलयनञ्च । विज्ञानञ्चाऽविज्ञानञ्च । सत्यञ्चाऽनृतञ्च सत्यमभवत् ॥ என்று முடிக்கிறது வேதம்.

**பக்தி என்பது என்ன**

இதைக் கொஞ்சம் ஆராய்வது நல்லதென்று நினைக்கிறேன். பக்தியில்லாதவர் யாரும் மந்த்ரத்தைப் பற்றியே யோசிக்க முடியாது. ஆனாலும் அதிலுள்ள நுணுக்கங்கள் பற்றி எல்லோரும் தெரிந்து கொள்வது நலம்.

श्रवणं कीर्तनं विष्णोः स्मरणं पादसेवनम् ।
अर्चनं वन्दनं दास्यं सख्यं आत्मनिवेदनम् ॥

இது **நாரத ஸம்ஹிதையில்** உள்ளது என நினைக்கிறேன். பக்தி 9 வகை என்று கூறப்பட்டுள்ளது. 9 பதங்களோடு கூடிய **ஸ்ரீ ந்ருஸிம்ஹ ஆநுஷ்டுப** மந்த்ரத்தை ஆராய்ந்து பார்க்குமிடத்தில் இந்த 9 வகை பக்தி பற்றி நினைவுக்கு வந்தது.

1. श्रवणं - **ஸ்ரீமத் ராமாயணம், ஸ்ரீமத் பாகவதம், ஸ்ரீ பகவத் கீதை** போன்றவற்றை மூலம் மட்டுமன்றி விஷயங்களையும் பிறர் சொல்லக் கேட்க வேண்டியது.

2. कीर्तनं -இதை **திவ்ய நாம ஸங்கீர்த்தநம்** என்று கும்பலாக ஒன்று சேர்ந்துத் தாளம், ஸங்கீதம் இவற்றுடன் உத்ஸாஹமாக கோஷிப்பதும் இதில் அடங்கும். ஒருவர் மட்டும் தனியாக இருந்து **ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்** போன்றவற்றைப் பாராயணம் செய்வது கூடக் **கீர்த்தநம்** தான்.

3. **स्मरणं** - உட்கார்ந்த இடத்திலும், படுத்த நிலையிலும், நடந்து செல்லும் போதும் எப்பொழுதும் பகவானை மனத்தால் நினைத்தல் **ஸ்மரணம்** எனப்படும். இதை **த்யாநம்** என்றும் சொல்லலாம். நம் போன்றவருக்கு இந்த த்யாநம் விட்டு விட்டுத் தான் அமையும். ஶுகாசார்யரைப் போல் எப்பொழுதும் த்யாநித்தல் யோக நிலை.

4. **पादसेवनं** - நம் அகத்தில் விக்ரஹ வடிவமாகவோ, ஸாலக்ராம வடிவமாகவோ, இருக்கும் எம்பெருமானை ஸேவித்தல். கோயில்களில் ஸேவை ஸாதிக்கும் எம்பெருமானின் திருமேனியை ஸேவித்தலும் இதில் அடங்கும்.

5. **अर्चनं**- **அஷ்டோத்தர ஶதம்**, குறைந்த பக்ஷம் 108, அவஸரமானால் 10 திரு நாமங்களைச் சொல்லுதல், துளஸி, புஷ்பம் போன்றவற்றால் அர்சனை செய்தல் இந்த வகையைச் சேரும்.

6. **वन्दनं**- கீழே தண்டாகாரமாகப் படுத்து எட்டு அங்கங்கள் பூமியில் படும்படி ஸேவிப்பது **ஸாஷ்டாங்க நமஸ்காரம்** எனப்படும். இதுவே **வந்தந**மாகும்.

7. **दास्यं** இது பற்றிச் சிறிது விரிவாகவே சொல்ல வேண்டும். இந்தச் சொல் **தாஸன்** என்கிற சொல்லிலிருந்து பிறந்ததாகும். அடிமை என்கிற பொருளையும் குறிக்கும். இதை மற்றொரு வகையில் சொல்வதானால் **ஶேஷத்வம்** என்று சொல்லலாம். இது பற்றி நான் முன்பே ஓரிரு இடங்களில் சொல்லி விளக்கியிருக்கிறேன். ஆயினும் இங்கு விரிவாகப் பரிஶீலனை செய்வது எல்லோருக்கும் பயன் தரும்.

பகவானை **ஶேஷி** என்பர். **ஸர்வஶேஷி** என்றும் சொல்வது உண்டு. இந்த உலகம் அனைத்துக்கும் அவர் சொந்தக்காரர், ஸ்வாமி, யஜமாநன் என்பது பொருள். ஜீவர்களாகிய நாமும், மற்ற உயிரினங்களும், கல், மரம், கடல்

போன்றவைகளும், எல்லாமே பகவானுக்கு சேஷம் தான். அவரது சொத்து உடமை என்பது பொருள். ஆனால் அந்த சேஷத்வமே ஜீவன்கள் விஷயத்தில் **தாஸ்யம்** என்று சொல்லப்படுகிறது. **நாம் பகவானுடைய உடமை** என்கிற எண்ணம் ஜீவர்களுக்கு மட்டுமே ஏற்படமுடியும். ஆகவே சேஷத்வம் என்பது அடிமை என்கிற வகையில் அமைகிறது. எப்பொழுதும் நமக்குப் பகவானைப் பற்றி சேஷத்வஜ்ஞாநம் இருந்து கொண்டே இருத்தல் வேண்டும்.

இந்த **தாஸ்யம்** என்பது பல வகையில் அமையும். பெருமாளுக்காகப் புஷ்பம் துளஸி இவற்றைச் சேகரித்து வருதல், கல்லில் சந்தநம் அரைத்தல், திருமடப் பள்ளியில் பெருமாளுக்கு ப்ரஸாதங்கள் செய்தல், திருமஞ்ஜநத்துக்கு நல்ல தீர்த்தம் கொண்டு வருதல், சாமரம் வீசுதல், உத்ஸவ காலங்களில் வீதிப் புறப்பாட்டில் வாஹநத்தில் இருபுறமும் இருந்து இருவர் விரித்த குடையைத் தாங்கிப் பிடித்தல், முதலியவை (இது காஞ்சியில் விசேஷமானது) இந்த வகையைச் சேரும். **நடை, வடை, குடை, முடி** என்று நம் ஸம்ப்ரதாயத்தில் சொல்வதுண்டு. ஸ்ரீரங்கத்தில் நடை அழகு. அந்த அழகைப் பல காலம் அங்கிருந்து ஸேவித்தவரே அறிவர். பெருமாளுக்கு இரவு பர்யங்காஸநத்தில் பால் அமுது செய்விக்க வேண்டுமென்று சிலர் அதை உகந்து செய்வர். இந்த இடத்தில் ஒரு விஷயம்- ஸ்ரீ காஞ்சி தேவராஜப் பெருமாள் ஸந்நிதியில் சுமார் 700 ஆண்டுகளுக்கு முன் நடாதூர் வாத்ஸ்ய வரதாசார்யர் என்கிற ஒரு மஹான் எழுந்தருளியிருந்து, அந்த வித வித அமுது செய்யப்படும் க்ஷீரத்தை, தான் பாத்திரத்தைத் தொட்டுப் பார்த்து அதிகச் சூடாக இல்லாமலும், சூடே இல்லாமல் இருப்பதும் சரியன்று என்று எண்ணி அளவான சூட்டுடனும், குழந்தைகளுக்கு ஊட்டுவது போல் எண்ணி ஸமர்ப்பிக்கச் சொல்வாராம். அதனால் இவருடைய பக்தியை மெச்சி **இவர் என்னுடைய அம்மாளோ!** என்று பெருமான் உகந்து அநுக்ரஹித்தார் என்பதனால் இந்த ஸ்வாமிக்கு **நடாதூர் அம்மாள்** என்கிற திருநாமம் அமைந்தது எனப் பெரியோர் சொல்வர். இப்படி எல்லாம் **தாஸ்யம்** அமையும்.

8. **सख्यं**- இதற்குத் தோழமை, நேசம், நட்பு என்று பொருள். **ஸகா** என்கிற ஸம்ஸ்க்ருதச் சொல் மாறி **ஸக்யம்** என்கிற உருவத்தை பெற்றது. இதையும் சற்று விரிவாக அநுபவித்தல் தகும். (1) ஸ்ரீ ராமாவ்தாரத்தில் ராமனுக்கு ஸுக்ரீவன் நண்பனானான். ஸீதையைத் தேடும் விஷயத்தில் இப்படிப்பட்ட ஒருவன் நமக்குக் கிடைக்க வேண்டும் என்று நினைத்திருந்த சக்ரவர்த்தித் திருமகனுக்கு ஸூர்ய புத்ரனான ஸுக்ரீவன் கிடைத்தான். ராமனும் ஸுக்ரீவனும் அக்நி மூட்டி அக்நி ஸாக்ஷியாக நட்பு செய்து கொண்டனர் என்று **ஸ்ரீ வால்மீகி** கூறுகிறார்.

(2) ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில் அர்ஜுநன் க்ருஷ்ணனுக்குத் தோழனாக அமைந்தான். பாண்டவர்கள் ஐவரில் இவனுக்குத்தான் அந்த பாக்யம் கிடைத்தது.

ஸக்யத்தைப் பற்றிப் பேசும் பொழுது அதற்கு ஆறு வகை நிலை இருக்க வேண்டுமென்று பெரியோர் இலக்கணமிட்டனர்.

ददाति प्रतिगृह्णाति गुह्यं आख्याति पृच्छति।
भुङ्क्ते भोजयते चैव षड्विधं मित्रलक्षणम्॥

**இதன் கருத்து** (1) தேவைப்படும் பொழுது நண்பனுக்கு எது தேவையோ அதைக் கொடுக்க வேண்டும். (2) அதே போல் தனக்குத் தேவையான பொழுது எதையும் கேட்டுப் பெற்றுக் கொள்ள வேண்டும். (3) சில ரஹஸ்யமான விஷயங்களை நண்பனிடம் மட்டும் சொல்ல வேண்டும். (4) அதே போல் அவன் சொல்லும் ரஹஸ்யத்தைக் கேட்டறிந்து பறை சாற்றாமல் மனத்தில் வைத்திருக்க வேண்டும். (5) தேவைப்படும் பொழுது ஸங்கோசமில்லாமல் நண்பன் வீட்டில் சாப்பிடுதல் (6) அதே போல் நண்பன் நம் வீட்டில் சாப்பிட விரும்பினால் மகிழ்ச்சியுடன் உபசரித்தல் தகும். இந்த 6ம் நல்ல இலக்கணமாகும் - இப்படிப்பட்ட தோழமையைப் பெருமாளிடத்தில் சிற்சில ஸமயங்களில் வைத்து உரிமையுடன் தனிமையிலோ, கோயில்களிலோ

கூடப் பலர் சொல்வர் 'என்னப்பனே ! என்னைக் கைவிட்டு விட்டாயா!' என்பர். 'உன்னைத் தானே நான் நம்பியிருந்தேன்' எனப் புலம்புவர்.

9. आत्मनिवेदनं - இந்த ஒரு செயல் மட்டும் மிக மிக முக்யமானதும், கடமையானதுமாகும். இதைப் பக்தி யோகத்தில் **ஸமாதி** என்று சொல்லப்பட்ட நிலைக்கு ஒப்பாகச் சொல்லலாம். இந்த **ஆத்ம நிவேதநம்** என்பதை **ஶரணாகதி** என்றும், **ப்ரபத்தி** என்றும், **ந்யாஸம்** என்றும், **பரஸமர்ப்பணம்** என்றும் பற்பல பெயர்களிட்டுப் பெரியோர் விளக்கியிருக்கின்றனர். இந்த **ஶரணாகதி** விஷயத்தில் ஸ்வாமி தேஶிகன் மிகவும் ஸூக்ஷ்மமாக ஆராய்ச்சி செய்து நமக்கெல்லாம் நல்ல தெளிவை ஏற்படுத்தியிருக்கிறார். அதைப் பற்றி இங்கு விளக்குவது மிகவும் பொருத்தமுடையதாகும்-

**प्रपन्नादन्येषां न दिशति मुकुन्दो निजपदं**
**प्रपन्नश्च द्वेधा सुचरितपरीपाकभिदया।**
**विलम्बेन प्राप्तिः भजनसुखं एकस्य विपुलं**
**परस्य आशु प्राप्तिः परिमितरसा जीवितदशा॥**

இது மிக அற்புதமான விளக்கம். யாவரும் தெரிந்து கொள்வது நலம். சுருக்கமாகச் சொன்னால் பக்தியோகம் செய்பவனையும் **ப்ரபந்நன்** எனச் சொல்லலாம். நம்மைப் போன்று **ப்ரபத்தி** செய்தவர்களையும் **பக்தன்** எனச் சொல்லலாம். இங்கு சற்று விளக்கம் தேவை-

**பக்தியோகம்** செய்யத் தகுதி உடையவர் அதைத் தொடங்கும் போது 'அப்பனே! இந்த பக்தி யோகத்தை நீ தான் பூர்த்தி செய்து வைக்க வேண்டும்' என்று பகவானிடம் ஶரணாகதி செய்ய வேண்டுமாம். ஆகையால் அவரை ப்ரபந்நன் என்றும் சொல்லலாம் என்கிறார். அடுத்ததாக **கர்மஜ்ஞாந பக்தி** எதிலும் தகுதியற்ற நம் போன்றவருக்கு

**ஶரணாகதி** ஒன்று தான் எளிய உபாயம். இதில் **மஹா விஶ்வாஸம்** என்பது தான் முக்யமான அங்கம். பகவான் நம்மைக் கட்டாயம் காப்பாற்றுவார் என்கிற அசைக்க முடியாத திடமான நம்பிக்கை இருத்தல் வேண்டும். இப்படிப்பட்ட நமக்கும் பெருமாளிடம் பக்தி இருக்கத்தானே செய்கிறது? பக்தி இல்லாமலா கோயிலுக்குப் போகிறோம்? ராமாயணம் கேட்கிறோம்? இதைப் ப்ரேம பக்தி என்பர். ஆகையால் **ப்ரபந்ந**னையும் பக்தன் என்று சொல்லலாம். பக்தி யோகம் செய்பவனையும் **ப்ரபந்நன்** எனச் சொல்லலாம் என்றார். ஆனால் இருவரிடையே உள்ள வேற்றுமை தான் என்ன? எனில் பக்தி யோகத்தில் இறங்கியவனுக்கு ஒரு பிறவியிலேயே மோக்ஷம் கிடைக்கும் என்பதில்லை. பல பிறவிகளில் தொடர்ந்து **பரமபதம்** செல்வான். ஆனால் இவனுடைய ஜீவித தஶையில் எம்பெருமானை த்யாநித்த ஸுகம் அதிகம் என்பதை ஸ்வாமி காட்டுகிறார். **பஜநஸுகம் ஏகஸ்ய விபுலம்** என்று. நம் போன்றவர்களுக்கு இந்த ஸுகம் கிடையாது. இது தெரிந்த விஷயமே. **ஏதத் தேஹாவஸாநே மாம் த்வத்பாதம் ப்ராபய ஸ்வயம்** இந்தப் பிறவி நீங்கியவுடன் அப்பனே ! என்னையும் என்னைச் சார்ந்தவர்களையும் உன் திருவடிக்கு அழைத்துக் கொள்ள வேண்டும் என்று ப்ரார்த்திக்கிறோம். இதுவே வேற்றுமை என்றார்.

இனி **ஆத்ம நிவேதநம்** என்பதைப் பற்றிச் சுருக்கமாகவே சொல்லலாம். இதைப்பற்றி **ஸ்ரீ அஹிர்புத்ந்யர்** முன் பாகத்தில் **ப்ரக்ருதி வியுக்த**மான ஆத்மாவை ஸமர்ப்பிக்க வேண்டும் என்று ஒரிடத்தில் கூறியுள்ளார். 58வது அத்யாயத்திலும் **நமாம்யஹம்** என்கிற இடத்தில் **ஆத்ம ஸமர்பணமே** என்கிற சொல்லால் படிக்கப்படுகிறது என்று விவரித்தார். இந்த ஆத்மா என்கிற பொருள் மிகவும் பரிஶுத்தமான **ஹவிஸ்** என்கிறார். யாகத்தில் ப்ரஸாதம் செய்தாலும், **புரோடாஶம்** என்கிற பெயரால் அடை போல் செய்தாலும் அதை அக்நியில் சேர்ப்பது போல் ஆத்மா என்கிற

ஹவிஸ்ஸை **உம்முடைய** பொருள், உமக்கே **ஸமர்ப்பிக்கிறேன்** என்கிற எண்ணத்துடன் ஸமர்ப்பிக்க வேண்டு மென்கிறார்.

இந்த இடத்தில் ஸ்வாமி தேஶிகன் ஓர்ரு நல்ல விளக்கம் நமக்குத் தந்திருக்கிறார். நாம் அஜ்ஞாநத்தினால் நம்மை ஸ்வதந்த்ரன் என்று நினைத்திருந்தோம். அது ஒரு பொருளைத் திருடியது போலாகும். பகவானுடைய சொத்தை நாம் திருடினோம். **ஆத்மாபஹாரசௌர்யம்** என்று இதற்குப் பெயர். உலகத்தில் திருடன் திருடிச் சென்ற பொருளை எடுத்துக் கொடுப்பது போல் நாம் இந்த **ஆத்ம ஸமர்ப்பணத்தைச்** செய்யலாகாது. **அப்பனே ! உம்முடைய சொத்தை உம்மிடமே கொடுத்தேன்** என்று **ஶேஷத்வாநு ஸந்தாநத்துடன்** ஸமர்ப்பிக்க வேண்டும் என்றார்.

இனி 58 வது அத்யாயத்தைப் பற்றி விளக்குகிறேன். முன்பு நான் तस्यैवं विदुषो यज्ञस्य என்று தொடங்கி ஒரு ஞானியை-ஶரணாகதனை யாகத்தோடு ஒப்பிட்டு வேதம் பேசுவதாக விளக்கினேன். அதே போல இங்கும் **ஸ்ரீ விஷ்ணு** என்பவர் உலகங்களைப் படைக்க விரும்பி, எந்த உருவத்தில் எந்தப் பெயருடன் தான் செல்ல வேண்டும் என்று பற்பல ஸங்கல்பங்கள் பண்ணுவதை இங்கு **அஹிர்புத்ந்யர்** யாகத்தில் உருவம் கொடுத்து, **(1) தஶஹோதா (2) சதுர்ஹோதா (3) பஞ்சஹோதா (4) ஷட்ஹோதா (5) ஸப்தஹோதா** என்று ஐந்து வகையில் உருவகப்படுத்தி அழகாகப் பேசியிருக்கிறார். எந்த எந்த ஸங்கங்பம் எந்த எந்த யாகத்தோடு ஒத்திருக்கிறது என்கிற விஷயங்களை விளக்கமாகச் சொல்கிறார் என்பது தான் இந்த அத்யாயத்தின் ஸாரம்.

இனி மூலத்தை மட்டும் **எழுதுகிறோம்.** தேவை உள்ளவர்கள் தக்க பண்டிதர்களைக் கொண்டு மேலும் விளக்கம் பெறலாம்.

*दशहोत्रादिपदविवक्षितमन्त्रविशेषसूचनम्*

चित्तिः स्रुग्दशहोतायमग्निहोत्रस्य कारणम्।
पृथिवीत्यादिको होता चतुर्होता निगद्यते॥ १

दर्शस्य पूर्णमासस्य निदानं स द्वयोरपि।
अग्निर्होता पञ्चहोता चातुर्मास्योद्भवस्तु सः॥ २

सूर्यं ते स च वाग्घोता पशुबन्धस्य कारणम्।
षड्ढोताराविमौ वेदे निर्णीतौ मुनिसत्तमैः॥ ३

महाहविः सप्तहोता ज्योतिष्टोमस्य कारणम्।

*अथ उक्तानां मन्त्राणां अर्थवर्णन प्रतिज्ञा*

अथाऽर्थो दशहोत्रादेर्वर्ण्यते शृणु नारद !॥ ४

*प्रथमं दशहोतृमन्त्रार्थनिरूपणे चित्त्यादिपदार्थप्रदर्शनम्*

चित्तिर्नाम स्मृता बुद्धिर्व्यवसायस्य कारणम्।
अहङ्कारस्तु चित्तं स्यादभिमानस्य कारणम्॥ ५

मनो नामेन्द्रियं हेतुः स सङ्कल्पविकल्पयोः।
वाङ्नाम व्याहृता वाणी एवमस्त्विति रूपिणी॥ ६

अधीतं नाम वाग्वृत्तिर्यदध्ययनमुच्यते।
केतो ज्ञानमिति प्रोक्तमुच्चार्यस्यावधारणम्॥ ७

विज्ञातं यत् तदुच्चार्यमवधारणगोचरम्।
यत् तद्वागिन्द्रियं प्रोक्तं तद्व्यङ्ग्या या सरस्वती॥ ८

सा वाक् तां सुब्रुवन् पाति यः स वाक्पतिरुच्यते।
उच्चारणप्रवृत्तेर्यः प्रयत्नो हेतुरुच्यते॥ ९

स प्राणः साम तत् प्रोक्तं यदुच्चारणसौष्ठवम्।

*दशहोत्रादिसमाख्यानिमित्तप्रदर्शनम्*

दशहोत्रादिहोत्राख्या यागोपकरणाभिधा॥ १०

*क्रियाभूतिविभेदेन भगवच्छक्तेर्द्वैविध्यम्*

एकान्तिनो जगद्विष्णोः कुर्वतः शक्तिशालिनः।
या शक्तिर्वैष्णवी देवी सर्वभावानुगामिनी॥ ११

तदेकांशः क्रिया नाम कृत्योपकरणं हरेः।
तदेकांशो विभूत्याख्यो लक्ष्यतेऽत्र जगत्तया॥ १२

*क्रियायाः सङ्कल्परूपत्वं कृत्योपकरणत्वं च*

सङ्कल्पः प्रोच्यते विष्णोः कृत्योपकरणं क्रिया।

*सङ्कल्पस्य च निश्चयात्मकमित्यादिरूपत्वम्।*

एवमस्त्विति वाक्यान्तः मित्यादिः स च कथ्यते॥ १३

बुद्ध्यहङ्कारमनसां वृत्तिः शब्दे विवक्ष्यते।
त्रिरूपा मितिरुद्दिष्टा ते स्तब्धो......त्र शब्दितम्॥ १४

*चित्यादिवाक्योक्त स्रुगादिपदार्थनिरूपणम्*

बुद्ध्यादिमितिपर्यन्तं वृत्तिमद्वृत्तिरूपकम्।
यज्ञे जगद्विधानाख्ये वितते हरिमेधसः॥ १५

स्रुक्तयाज्यतया चोपवक्तृत्वेनाग्निभावतः।
उपवक्ता स्मृतो ब्रह्मानुज्ञा प्रवचनं स्मृतम्॥ १६

उच्चार्यत्वेन विज्ञातः शब्दोऽग्निरिति कथ्यते।
उच्चार्यं यदाधीतं तद्धर्हिरिति गीयते॥ १७

तस्य हेतुः प्रयत्नो यः प्राणः स हविरुच्यते।
वाग् व्याहृता तु वेदिः स्याद्धर्ता होतेति गीयते ।। १८

उच्चारणस्य साम्यं यत् साम सोऽध्वर्युरुच्यते।

*यथोक्तस्य जगद्विधानाख्यस्य वैष्णवयज्ञस्य ज्ञेयत्वविधिः*

इत्थं जगद्विधानाख्यो दशोपकरणान्वितः।। १९

यो यज्ञो वैष्णवो वृत्तस्तमद्यत्वे विचिन्तयेत्।
वाक्यं समुच्चरन् किंचिल्लौकिकं वैदिकं तु वा।। २०

वैष्णवं भावमासाद्य मन्त्रं चेमं विचिन्तयेत्।

*तात्पर्यार्थनिरूपणमुखेन ग्रहभागस्याऽऽत्महविः*

*समर्पण परत्वस्फुटीकरणम्*

वाचस्पते विधे नामन्निति तस्याऽर्थ उच्यते।। २१

वाङ्नाम वैष्णवी शक्तिः शब्दब्रह्ममयी परा।
वाचस्पतिस्तत्पतिः स्यात् विदधातीति वै विधिः ।। २२

नामयत्यखिलं स्वस्मिन्निति नामाग्निरुच्यते।
विधेम भगवन्नाम प्रह्वीभावापराभिधम्।। २३

त्वं चास्माकं विधेः कुर्या नाम प्रवणचित्तताम्।
एतदेव पुनर्वक्ति मुनिः स्वात्मसमर्पणम्।। २४

*भगवत एवाऽऽत्महविस्समर्पणजन्य*

*फलभागित्वनिरूपणम्*

वाचस्पतिः स पूर्वोक्तः सोमं सोमरसोपमम्।
पिबत्वात्मरसं स्वस्मै मया हुतमिवाध्वरे।। २५

पीत्वा चास्मासु नृम्णं यत् स्वमाधादादधातु तत्।
मननीयं नृभिर्नृम्णं तदनुग्रहरूपकम्॥ २६

*आत्महविस्समर्पणस्य स्वार्थत्वशङ्काव्युदासः*

स्वाहेति स्वात्मसन्यासः स्वाहुतं तद्भवेदिति।

*चतुर्होतृमन्त्रेऽपि पूर्वोक्तस्यैव यज्ञस्य*

*भङ्ग्यन्तरेण विवक्षितत्व निरूपणम्*

अयमेव च यज्ञोऽत्र चतुर्होतृतयेष्यते॥ २७

*पृथिवीद्युरुद्रशब्दानां प्रकृतिपुरुषकालपरत्वप्रदर्शनम्*

जगत्प्रथनरूपा सा पृथिवी प्रकृतिः स्मृता।
पुरुषो द्यौरिति प्रोक्तः द्योतते स स्वया चिता॥ २८

रुणद्धि प्रलये तौ द्वौ द्रावयत्युदयेऽपि च।
रुद्र इत्युदितः कालः संयोजकवियोजकः॥ २९

*बृहस्पति शब्दस्य श्रियःपतित्व-*

*पुरस्कारेण भगवत्परत्वम्*

बृहत् सा शक्तिरुद्दिष्टा यतो बृंहयतेऽखिलम्।
बृहस्पतिः पतिस्तस्याः देवदेवो जनार्दनः॥ ३०

*ग्रहभागार्थनिरूपणे वाचोवीर्यशब्दस्य*

*भगवत्कर्तृकसृष्ट्युद्यमपरत्व प्रदर्शनम्*

वाचो वीर्यं भवेत् प्राणो विष्णोः सृष्ट्युद्यमः परः।

*संभृततमशब्देन सृष्ट्युद्यमस्य*

*सर्वार्थविषयकत्वविवक्षा*

तत्संभृततमं चैव सर्वार्थविषयत्वतः ॥ ३१

*पूर्वोक्तस्य प्राणस्यैवात्रापि हविष्ट्वविवक्षा*

प्राणो हविरिति न्यायात् प्राणो हविरिहेष्यते ।

*मन्त्रशेषस्य दास्यमहारसरूपसुखप्रार्थनापरत्वप्रदर्शनम्*

आयक्ष्यक्षे पूज्यसेऽद्य यस्त्वं वाचस्पतिः स्वयम् ॥ ३२

अतोऽस्मै यजमानाय वार्यं वर्यं सुवः सुखम् ।
आकस्त्वमाकुरुष्वाद्य सोमं पिबति पूर्ववत् ॥ ३३

*मन्त्रचरमवाक्यस्य प्रतिबन्धनिवृत्ति*

*प्रार्थना परत्वम्*

इरां ददतमिन्द्रं मामिन्द्रियाऽऽयाद्यशक्तये ।
ब्रह्मासिहेतुभूतायै स योग्यं जनयत्वजः ॥ ३४

*पञ्चहोतृमन्त्रार्थनिरूपणम्*

चतुर्होतायमुद्दिष्टः पञ्चहोता निगद्यते ।
अग्निर्निरुदितः पूर्वं स होता परिगीयते ॥ ३५

ज्ञान प्राणावश्विनौ द्वावश्नुवाते यतो जगत् ।
अध्वर्युः प्रतिप्रस्थाता द्वावध्वर्यू प्रकीर्तितौ ॥ ३६

त्वष्टा संकल्प उद्दिष्टस्त्वष्टृकार्यं यतोऽखिलम् ।
मित्रो मैत्री समुद्दिष्टा करुणा हरिमेधसः ॥ ३७

*ग्रह भागस्यात्मयाऽऽगसाधनत्वेन विनियोगः*

सोम इत्यादिमन्त्रोऽयं यजने तस्य शिष्यते ।

*तत्र षष्ठ्यन्तयोः प्रथमान्तयोश्च सोमशुक्रपदयोरर्थविवेकः*

षष्ठ्यन्तौ सोमशुक्रौ द्वौ लतासाराभिधायिनौ॥ ३८
इतरावात्मवचनौ पुरोगा हेतुरुच्यते।

*प्रथमान्तसोमपदविवक्षितस्य जीवस्य षष्ठ्यन्त सोमपदविवक्षितात् लतासारादुत्तमत्वम्*

जीवः सोमस्य सोमोऽयं पुरोगाः सोमतोऽपि यत्॥ ३९
सोमो ह्यभिषुतो यादृक् प्रीणयेत् पुरुषोत्तमम्।
आत्मयागहुतो जीवो न तादृक् किं त्वतोऽधिकः॥ ४०

*तदुपपादनम्*

मर्त्यो ह्यभिषुतः सोमः यस्त्वमर्त्यो हि चिन्मयः।

*शुक्रशब्दस्य जीवपरत्वे प्रवृत्तिनिमित्तप्रदर्शनम्*

शुक्र इत्यतिसारत्वाज्जगद्बीजतयापि च॥ ४१
आख्या जीवस्य तत्रापि योजनैषा पुरोदिता।

*इन्द्रशब्देन भगवतः संबोधनम्*

इन्द्रेत्यपि च संबोधो देवस्य हरिमेधसः॥ ४२

*वातापिशब्दस्य व्याप्तिपूर्वकभगवन्निष्ट-क्रियाशक्तिवैशिष्ट्यपरत्वम्*

वातापीत्युच्यते व्यापी वातेन क्रियया स्वया। ४३
जगद्धातुः क्रिया सृष्टिरतर्क्या व्याप्तिपूर्विका॥
तस्या अविषयो नास्ति भावः कोऽपि कथञ्चन।

*हवनश्रुत्पदस्य स्वविषयकाह्वानश्रवण-*

*रसिकत्वपरत्वम्*

हवनश्रुत् समाख्यातः शृण्वन्नाह्वानमादरात् ।। ४४

*श्राता इत्यादिवाक्यद्वयस्य तात्पर्यार्थ निरूपणमुखेन*
*सर्वेष्वप्यात्मसु भगवद्गुण कृतदास्य प्रतिपादकत्व प्रदर्शनम्*

हे इन्द्र! परमेशान! कर्तस्ते हवनश्रुतः ।
श्राताः श्रिताः गुणैः सोमा आत्मनस्त इमे वयम् ।। ४५

स्वाहा स्वाहुतमस्त्वेतत् तदिदं परमं हविः ।

*अथ षड्ढोतृ मन्त्रार्थ निरूपणम्*

उद्दिष्टः पञ्चहोताऽयं षड्ढोताऽद्य निगद्यते ।। ४६

यजमानं पशुं भूतं वक्यात्मानं हविष्कृतम् ।
देहेन्द्रियैः समं विष्णुं प्रासाद्य सहविष्कृतम् ।। ४७

सूते च रमते चैव यजते चैव कथ्यते ।
सूर्यो विष्णुं विशत्वेनं चक्षुर्विज्ञानकारणम् । ४८

वातो गतिमतः संज्ञा गतिर्व्याप्ति रुदीरिता ।
द्योतमानस्तथा स द्यौर्देवो विज्ञानसारथिः ।। ४९

अन्तः समीक्षमाणः सन्नन्तरिक्षमुदीर्यते ।
सर्वान् संगमयन् प्राणैर्यज्ञ इज्यतयापि च ।। ५०

पृथिवी वैष्णवी शक्तिः प्रथमाना स्वतेजसा ।
पञ्चात्मावयवः प्राणः पृष्ठं मूर्धाङ्गमुच्यते ।। ५१

आत्मान्तःकरणं प्रोक्तमनाद्यन्तस्थितानि च ।
शरीराण्यथ बाह्याङ्गान्यथो ग्रह उदीर्यते ।। ५२

वाचस्पतिः समुद्दिष्टः शक्तिर्वाग् वैष्णवी क्रिया।
सैव प्रोक्ता जुहूः प्राणो होत्राहुतिरुदीर्यते ॥ ५३

नानादेहादिरूपेण वृद्धा देवा उदीरिताः।
एरयस्व प्रेरयस्व प्रेरणं त्वेरणं मतम् ॥ ५४

*अपरस्य षड्ढोतृमन्त्रस्यार्थनिरूपणम्*

अथापरस्य षड्ढोतुर्निर्णयं शृणु नारद !।
दीक्षा मानससङ्कल्पो वागवस्था तु वाक् स्मृता ॥ ५५

आपो दयार्द्रता विष्णोर्मन इच्छा निगद्यते।
तपो विज्ञानमुद्दिष्टं पोता त्वभिगरो मतः ॥ ५६

*सप्तहोतृमन्त्रार्थ निरूपणम्*

महाहविरिति प्रोक्तः सप्तहोता मनीषिभिः।
मनो हविरिति प्रोक्तं मनो हविरिहोच्यते ॥ ५७

महाविषयता तस्य महत्त्वं परिगीयते।
यत्नो हविरिति प्रोक्तं प्राणो हविरिहोच्यते ॥ ५८

सत्यता त्वविपर्यासः संततोद्युक्तता तथा।
पाजस्तेज इह प्रोक्तो नित्यताच्युतताऽस्य तु ॥ ५९

मनो मतिरिह प्रोक्ता तस्याः पूर्ववदच्युतिः।
अनाधृष्याऽप्रघृष्यौ च शक्त्यैश्वर्यनिरूपकौ ॥ ६०

पोता च मैत्रावरुणः स्मृतावभिगराविह।
अनायासविषयत्वादयास्य इति वर्ण्यते ॥ ६१

*ग्रहभागार्थनिरूपणम्*

हरति स्वीकरोतीह पूजां हृदिति वर्ण्यते।
दैव्यस्तन्तुरिति प्रोक्ता शिष्याचार्यपरम्परा। ६२

मनुष्यस्तन्तुरित्युक्ता सत्सन्तानसमृद्धिता।
द्यावापृथिव्यौ पितरौ पितरौ श्रीतदीश्वरौ।
व्याख्यातो होतृवर्गोऽयमिति ते लेशतो मुने ! ॥ ६३

இங்கே **தந்து** என்று சொல்லப்பட்டது மனிதனைப் பற்றியும் நல்ல ஸந்ததிகள் நிறைந்திருத்தலைப் பற்றியுமேயாகும். ஆகாயமும், பூமியும் தகப்பனாரும், தாயாரும் ஆவார்கள். அதே போல் மஹாலக்ஷ்மியும் அவள் நாயகன் விஷ்ணுவும் (உலகங்களுக்கெல்லாம்) பெற்றோர் ஆவர். முநிவரே ! மேலே சொல்லப்பட்ட பல **ஹோதாக்கள்** பற்றி உமக்குச் சுருக்கமாக விளக்கப்பட்டது.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ர ரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** ஐந்து ஹோதாக்களின்
மந்த்ரங்கள் விளக்கம் என்று
58வது அத்யாயம் முற்றிற்று.



## புருஷஸூக்தம் ஸ்ரீ ஸூக்தம் வாராஹ மந்த்ரம் இவைகளைப் பற்றி விளக்கம் என்கிற

# 59வது அத்யாயம்

★ ★ ★

த்யாதம் ஸக்ருத் பவாநேககோட்யகௌகம் ஹரத்யரம்।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி॥

*(விளக்கம் 18வது அத்யாயத்தில் உள்ளது)*

### ப்ரஹ்ம சக்ரத்துக்குட்பட்ட ஸம்பாரங்கள் (பொருள்கள்) முதலிய மந்த்ரங்களின் பொருள் விளக்கத்தில் காரணம் பற்றிக் கூறுதல்

**அஹிர்புத்ந்யர் :—** தேவைப்படும் பொருள்கள், தேவ பத்நிகள், தக்ஷிணை, ஹ்ருதயங்கள், ருத்ரர்கள், ப்ரஹ்மாக்கள் என்கிற விஷயங்கள் பற்றி விரிவாகச் சொல்கிறேன்.

**புருஷஸூக்தம், ஸ்ரீஸூக்தம்** இவற்றின் பொருளை விளக்குவதற்கு உலகத்தின் நன்மைக்காகப் பரமபுருஷனான விஷ்ணுவினிடமிருந்தும் மஹாலக்ஷ்மியிடமிருந்தும் அந்த ஸூக்தங்களிரண்டும் வெளிவந்தன

முன்னொரு காலத்தில் **புருஷஸூக்தம்** என்பது பரம**புருஷ**னிடமிருந்து வெளி வந்தது. உலகத்தின் நன்மைக்காக **மஹாலக்ஷ்மி**யிடமிருந்து **ஸ்ரீ ஸூக்தம்** தோன்றிற்று.

### புருஷஸூக்தத்தில் உள்ள ருக் விஷயத்தில் கருத்து வேற்றுமை உள்ளது என்கிறார்

அந்தப் **புருஷஸூக்தம்** பல மாறுபட்ட பாடங்களோடு கூடியது என்ற சொல்லப்படுகிறது. சிலர் நான்கு ருக்குகள் என்றும், மற்றும் சிலர் 5,6,7 என்றும், சிலர் 16 ருக்குகள் என்றும், 18 என்று வேறு சிலரும் இந்தப் **புருஷ ஸூக்தத்தை** ஒவ்வொரு ஶாகையில் ஒவ்வொரு விதமாகச் சொல்லி வருகிறார்கள்.

**புருஷ ஸூக்தத்தில் சொல்லப்பட்ட அப்ரமேயரைப் பற்றி விளக்கம்**

இந்த ஸூக்தத்தில் அனைத்து உலகங்களின் பிறப்புக்குக் காரணமும், ஸ்வர்கம் மோக்ஷம் இவற்றைத் தருவதும், **பரமபுருஷனாகிய விஷ்ணுவைக்** குறித்து ஒரு மனிதன் செய்யும் யாகம் சொல்லப்பட்டிருக்கிறது.

**வாஸுதேவன் முதலிய நான்கு வகை உருவங்கள் பற்றி விளக்கம்**

அவற்றில் முதல் நான்கு ருக்குகளில் பகவான் **வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன்** என்கிற உருவங்கள் விளக்கப்படுகின்றன.

**முதல் மந்த்ரத்தில் லக்ஷ்மீபதி விளக்கம்**

அவற்றில் **புண்டரீகாக்ஷன்** என்றும், **பரமாத்மா** என்றும் எப்பொழுதும் உள்ளவர் என்றும், எவர் சொல்லப்படுகிறாரோ, மேலும் உலகங்களுக்குக் காரணம் என்றும், பகவானின் விருப்பத்துக்கு ஏற்ற செயல்களையும் உருவத்தையும் எடுத்துக் கொள்பவள் என்று எந்த **மஹாலக்ஷ்மி** சொல்லப்படுகிறாளோ அவளுடைய பதியான **வாஸுதேவன்** முதல் ருக்கினால் விளக்கப்படுகிறார்.

**மந்த்ரத்தில் ஒவ்வொரு பதத்துக்கும் பொருள் விளக்கம் செய்ய 'ஸஹஸ்ர ஶீர்ஷா' என்கிற சொல்லுக்கு விளக்கம்**

எந்த பகவானுடன் இணைந்த கருத்தை உடையவளாகவும், ஆறு குணங்கள் நிரம்பிய திருமேனியுடன் கூடியவளாயும், **ஸ்ரீ** என்கிற உத்தமமான ஶக்தியாயும் இருந்து கொண்டு **லக்ஷ்மீ** எவருடன் விட்டுப் பிரியாமல் உடன் செல்பவளாயும் இருக்கிறாளோ, அந்த பகவான் பற்றுதல் இல்லாதவனாயும், பற்றுதல் உடையவனாகவும் இருந்து கொண்டு எல்லா உலகங்களுக்கும் ஆதாரமாக இருக்கிறாரோ, அவரே **ஸஹஸ்ரஶீர்ஷா** என்று இதில் புகழப் படுகிறார்.

### புருஷ என்கிற சொல் அவாப்த ஸமஸ்தகாமன் என்கிற பொருளைக் கூறுகிறது

அவர் எல்லாம் நிறைந்தவராகையால் எப்பொழுதும் புருஷர். இது நிறைந்திருத்தலைக் கூறும் ப்ரு என்கிற தாதுவிலிருந்து பிறந்தது.

### ஸஹஸ்ராக்ஷ: என்பதன் பொருள்

இங்குள்ள **அக்ஷ** என்கிற சொல் அஶ்நோதி என்பதிலிருந்தும், **அஶ்நாதி** என்பதிலிருந்தும் பிறந்தது. அல்லது **அஜ்** என்பதிலிருந்தும் **அஞ்ச்** என்பதிலிருந்தும் பிறந்ததாகச் சொல்லலாம். எந்த பகவான் ப்ரக்ருதியோடு சேர்ந்திருந்து உலகமனைத்தையும் படைக்க வல்லவனாய் இருக்கிறனோ அந்தப் புருஷனே இங்கே குறிப்பிடப்படுகிறான்.

### 'ஸஹஸ்ரபாத்' என்பதின் பொருள்

இங்கு **பாத்** என்கிற சொல் பரிணாமத்தைக்கூறும் **பத்** என்கிற தாதுவிலிருந்து பிறந்ததாகும்.

### ப்ரக்ருதியும் புருஷனும் (மூலப்ரக்ருதி, ஜீவன்) 'ஸஹஸ்ர' என்கிற சொல் பிறப்பதற்குக் காரணமானவர்கள்

ஆறு குணங்களின் மத்தியில் எந்த ஶக்தி உள்ளதோ, அது **ஹஸ்ர** என்கிற சொல்லால் குறிப்பிடப்படுகிறது. ப்ரதாநம் என்கிற மூலப்ரக்ருதியும், ஜீவனும் அந்த ஶக்தியை ஸ்ருஷ்டியும் எப்பொழுதும் ஆஶ்ரயித்தவை. இவ்வாறே ப்ரளயகாலத்திலும் ஜீவனும் ப்ரக்ருதியும் அந்த ஶக்தியில் அடங்கிக் கிடப்பவை. இதனாலேயே இந்த இரண்டு பேரும் ஸஹஸ்ரௌ என்று குறிக்கப்படுகிறார்கள்.

### வாஸுதேவனே ப்ரக்ருதி புருஷன் ஸஹஸ்ர புருஷவ்யக்தர், ஸஹஸ்ராக்ஷ:, ஸஹஸ்ரபாத் எனப்படுகிறார். பிற்பாதியின் கருத்து

பலவகையான உருவங்களோடு கூடிய பகவானுடைய நிலை **ஸ பூமிம் விஶ்வதோ வ்ருத்வா** என்பதால்

சொல்லப்படுகிறது. அவர் உலகத்துக்கெல்லாம் மேலாக நிற்கிறுர். தயிராக மாறும் பொழுது பாலின் தன்மை கட்டாயம் விளங்குவது போல் எந்தப் பொருளிலும் காரணத்தின் தன்மை விளங்கும். சிற்சில இடங்களில் நல்ல கார்யங்களில் பிறக்கும் பொருள்களில் இருக்கும் தன்மை காரணத்தைக் குறிப்பதாகவும் இருக்கும். தேனீக்கள் கட்டும் கூட்டில் எவ்வாறு மாறுபாடுகள் தெரிகின்றனவோ, அதே போல் பகவான் படைத்த பொருள்களிலும் அடுத்த படைப்பிலும் கார்ய காரணங்களின் தன்மையைத் தெரிந்து கொள்ளலாம். இந்த ஶுத்த ஸ்ருஷ்டியும், ஶுத்தமல்லாத படைப்புகளும் எல்லாமே பகவானுடைய ஶரீரத்திலேயே பிறந்தவை என்கிற பொருள் **ஸ பூமிம்** என்பதால் குறிக்கப்படுகிறது. ஜகத்துக்குக் காரணமாய் இருக்கும் பூமி என்பதால் பூமி ஶக்தி எனப்படுகிறது. ஶுத்த ஸ்ருஷ்டி, ஶுத்தமல்லாத ஸ்ருஷ்டி என்கிற பிரிவுகளுடன் எது **காலம், புருஷன் ப்ரக்ருதி** இவற்றின் நிலையிலிருக்கிறதோ, அது **பகவான்** ஆகும். இந்த பூமியை எல்லா இடங்களிலும் சூழ்ந்து தாங்கிக் கொண்டு நிற்கிறுர். ஸ்ருஷ்டியிலும் ப்ரளயத்திலும் தன் ஸங்கல்ப வடிவமாகவே இருக்கிற உருவத்தோடு பூமிக்கு மேலாகவே எப்பொழுதும் இருக்கிறுர். மேலும் 10 அங்குலங்களுக்கு மேலாகவே இருக்கிறுர். இங்கு **தஶாங்குலம்** என்பதால் காரணமான பொருள் **அநந்தம்** (எல்லையற்றது) எனக் குறிப்பிடப்படுகிறது.

**இரண்டாவது மந்த்ரம் இரண்டாவது வ்யூஹமாக உள்ள ஸங்கர்ஷணனைக் குறிக்கும்.**

இனி உலகங்களுக்குக் காரணமான **ஸங்கர்ஷணன்** என்கிற மூர்த்தியைப் பற்றி விளக்குகிறேன். சென்றது, இருப்பது ஆகிற இந்த உலகம் இவையெல்லாம் ஆதியில் (ஸ்ருஷ்டி காலத்தில்) படைக்க வேண்டும் என்கிற ஸங்கல்ப வடிவத்தில் புருஷனாகவே இருந்தது.

### மந்த்ரத்தில் இருக்கும் 'புருஷ' என்கிற சொல் ஸங்கர்ஷணனையே குறிக்கும் என்கிறார்

நல்ல மிகப் பெரிய ஜ்ஞாநத்தோடு சேர்ந்திருப்பதால் **புருஷ:** என்கிற சொல் அமைந்திருக்கிறது. அதனால் **ஸங்கர்ஷணன்** என்கிற வ்யூஹமே சொல்லப்படுகிறது.

### பின் பகுதியினால் ஸங்கர்ஷணன் ஜ்ஞாநத்தை உபதேஶிக்கும் காரணத்தின் அடிப்படையில் வந்த மோக்ஷத்தைத் தரவல்லவன் என்கிற விஷயம் சொல்லப்படுகிறது

**சித்-அசித்** நிறைந்த இந்த உலகத்தைத் திலகத்தின் மேலிருக்கும் உச்சி மயிர் போல் தாங்கிக் கொண்டிருப்பவராக **ஸங்கர்ஷணன்** அவதரித்தார் என்கிற காரணத்தாலும் இவ்வாறு கூறப்படுகிறார். **உதாம்ருதத்வஸ்யேஶாந:** என்பதற்குப் பொருள் கூறுகிறேன் - அநுபவிக்கப்படும் பொருளாக இருக்கும் ப்ரக்ருதியும் அதிலிருந்து பிறந்த பொருள்களுமாகச் சேர்ந்து உருவான **அந்நம்** என்கிற போக்யப் பொருள் மூலம் சித் ஸ்வரூபமாக உள்ள ஜீவாத்மா காலத்தோடு கலந்த பற்பல உருவங்களையுடைய **அசித்** என்கிற பாகத்தினால் அநுபவிக்கிறான். எந்த ஜீவன் தனக்கு ஸம்பந்தம் இல்லாமலிருந்தும் கூட முற்பிறவிகளில் ஏற்பட்ட பற்றுதல் காரணமாக, இவனுக்கே நல்ல குணங்களின் ஸம்பந்தம் ஏற்பட்டதால் பலவகை பந்தங்கள் நீங்கியபோதும் ஶுத்தமான ஸ்வரூபம் தோன்றியவுடன் மோக்ஷம் என்கிற அம்ருதத்வமாகிற நிலைக்குச் சொந்தக்காரனாகிறான். இது **ஸங்கர்ஷணன்** என்கிற **ஈஶ்வரன்** (பகவான்) ஜ்ஞாநத்தை உபதேஶிப்பதால் ஏற்படுகிறது.

### மூன்றாவது மந்த்ரம் ப்ரத்யும்நன் எனும் மூன்றாவது வ்யூஹத்தைக் குறிக்கும்

மூன்றாவது ருக்கினால் பிறப்பு, இறப்பு என்கிற ஸம்ஸாரமாகிற நெருப்பினால் வாடிய ஜீவர்களை அநுக்ரஹம் செய்ய எண்ணியதால் **ஸங்கர்ஷணன்** என்கிற உருவத்தில் தோன்றிய **விஷ்ணுவே** சொல்லப்படுகிறார். **ஸங்கர்ஷணன்**

என்கிற வடிவத்திலிருக்கும் விஷ்ணுவின் மஹிமை இவ்வளவு தானா? (இன்னுமிருக்கிறது என்று கருத்து !). முதன்முதலாக ஏற்பட்ட ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலிருக்கும் எந்த உலகத்தை இவர் தாங்குகிறாரோ, இதைவிட மிகவும் மஹத்வம் பொருந்திய புருஷன் **ப்ரத்யும்நன்** என்பவர் இந்த விஷயத்தில் மேலும் உதவி புரிகிறார்.

### புருஷன் என்பதால் ப்ரத்யும்நனுக்குப் பெருமை

ப்ரக்ருதி **புருஷன்** வடிவத்தில் இருக்கும் நிலையை புரு என்பது. அதைப் படைக்கிறார் என்பதால், உலகத்துக்கு உதவியாக இருக்கும் பலவகைச் செயல்கள் மூலம் அவருக்குப் பெருமை சொல்லப்பட்டுள்ளது.

### நான்காவது மந்த்ரம் அநிருத்தன்

**த்ரிபாதூர்த்வம் உதைத்** என்கிற மந்த்ரத்தின் மூன்றுவது ருக்கினாலே அளவிடமுடியாத விருப்பங்களோடு கூடிய அந்த அநிருத்த வடிவமான பகவான் சொல்லப்படுகிறார்.

### மந்த்ரத்திலிருக்கும் 'புருஷ' என்கிற சொல் அநிருத்தனைக் குறிக்கும் என்கிறார்

எல்லா ஜீவர்களையும் கார்யங்கள் செய்யும்படித் தூண்டுபவராய் இவர் முன்னாலிருந்தே தொடங்கி வருகிறார் என்றும், செய்யும் கார்யங்கள் மூலம் பூஜிக்கப்பட்டவராய் இந்த பகவான் ஜீவர்களுக்குப் பலன்களையும் கொடுக்கிறார் என்றும் இங்கு **புருஷ** என்கிற சொல் **அநிருத்தனை**யே சொல்கிறது. **பரமபதம்** என்னும் பட்டணத்தில் இருக்கும் இவர் **புரீ** என்கிற திருநாமத்துடன் அந்தப் பரமபதத்திலிருந்து வெளியில் வந்து தோன்றினார். இந்த உருவத்தில் பகவான் அநிருத்தனால் விஷயங்கள் பற்றப்படவில்லை என்பது பொருள் (**அநிருத்தன்** என்கிற நான்காவது வ்யூஹத்தில் பகவான் நம்முடன் எப்பொழுதும் இருந்து கொண்டு எல்லாச் செயல்களையும் செய்வதற்கு உதவினாலும், நமக்கு உலகப் பற்றுதல் இருப்பது போல் அவருக்குப் பற்றுதல் இல்லை என்பது கருத்து.) நான்கில் ஒரு அம்சம் இந்த உலகத்தில்

**சேதநன் அசேதநன்** என்கிற உருவில் மாறியது. ஒவ்வொரு வேலையிலும் ஈடுபடச் செய்ய விரும்பி அவர் நமக்குள்ளே **அந்தர்யாமி** என்கிற பெயருடன் இருக்கிறார். **ததோ விஶ்வம் வ்யக்ராமத்** என்கிற விஷயத்தையே விளக்கினார். உலகத்தைச் சுற்றிலும் பரவி இருந்து உள்ளேயும் புகுந்திருக்கிறார். **ஸாஶந அநஶநே அபி** என்பதால் சேதநமும் அசேதநமும் குறிக்கப்படுகின்றன. இதனால் **விராட்** என்று பெயர் பெற்றிருக்கிறார். **விராட்** என்கிற சொல் **வித்யை** என்கிற மற்றொரு பெயராலும் குறிக்கப்படுகிறது. உலகத்தின் உருவத்திலிருக்கும் நான்காவது வ்யூஹம் **அநிருத்தன், ஹிரண்யகர்பன்** என்றும், **பூருஷன்** என்றும் சொல்லப்படுகிறார். மற்ற விஷயங்களெல்லாம் உலகத்தின் பார்வையிலிருந்தே தெரிந்து கொள்ளக் கூடியது. இவ்வாறாக இந்த ஸூக்தம் விளக்கப்பட்டது.

### வேறு ஶாஸ்த்ரங்களில் விரிவாகச் சொல்லப்பட்ட ஶ்ரீ ஸூக்தம் இங்கு சுருக்கமாக விளக்கப்படுகிறது

**ஹிரண்யவர்ணாம்** என்கிற **ஶ்ரீ ஸூக்தத்துக்கு** வேறு ஶாஸ்த்ரங்களில் மிகவும் விரிவாகப் பொருள் கூறப்பட்டுள்ளது. **வர்ண** என்பது திருமேனியைச் சொல்லும். அது மேலான, உத்தமமான என்கிற பொருளையும் தரும். இந்தப் பிராட்டியின் நிலை நம் போன்றவர்களுக்குக் கண்ணுக்கு அழகாகவும், நன்மை பயப்பதாகவும் உள்ளது என்பது தெரிந்த கருத்து. உத்தமமான **அம்ருதா** என்று சொல்லப்படும் ஶக்தியான அந்த தேவி இங்கு சொல்லப்பட்ட வடிவத்துடன் இருக்கிறாள். பரப்ரஹ்மம் என்கிற சொல்லுக்குப் பொருளாகிய விஷ்ணுவும் **ஶ்ரீ** என்கிற **மஹாலக்ஷ்மி**யும் சேர்ந்த தம்பதியே, நமக்கு விஷயமாவார்கள். ஆதியில் பழையகாலத்திலும் ஒருவரோடு ஒருவர் சேர்ந்தே இருந்ததாலும், ஒருவரைச் சொன்னால் மற்றவரையும் சொன்னதாக எடுத்துக் கொள்ளவேண்டும்.

## இரண்டு ஸூக்தங்களால் ஸ்தோத்ரம் செய்தால் மோக்ஷம் நிஶ்சயம்

ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட கட்டுப்பாடுகளுடன் கூடியவனுய், ஆஹாரத்தில் கட்டுப்பாடு உள்ளவனுய், புலன்களை அடக்கியவனாய், மிகவும் பக்தியுடன் இருந்து கொண்டு இரண்டு ஸூக்தங்களாலும் ஸ்தோத்ரம் செய்தால் வேதங்களில் கூறப்பட்ட **விஷ்ணு**வினுடைய பரமபதத்துக்குப் போய்ச் சேருவான்.

## வராஹ மந்த்ரத்தின் பொதுப்படையான பொருளை உலக வழக்கின் மூலம் தெரிந்து கொள்ளலாம்

**அநுஷ்டுபை** விடப் பெரிதாக உள்ள **வாராஹம்** என்கிற மந்த்ரம், அதனுடைய வழக்கத்திலுள்ள ஒருவகை விளக்கம், இவை உமக்குத் தெரிந்ததே.

## அதற்குச் சுருக்கமாக நுண் பொருள் விளக்கம்

இதற்குப் பதம் பதமாகக் கூறப்படும் பொருளைச் சொல்கிறேன், கேளும். ஆதி காலத்தில் தண்ணீரில் அழுந்திய பூமியை மேலுக்குக் கொண்டு வர முயன்ற வராஹாவதாரம் எடுத்த பகவான் விஷ்ணுவினுடைய வராஹ உருவும் அநாதியானது. இந்த உலகம் இரவு என்று சொல்லப்படுகிறது. மோக்ஷம் என்பது பகலாகும். சிறந்த பகல் என்று விளக்கியிருப்பதால் வராஹவடிவமாக பகவான் குறிப்பிடப்படுகிறுர்.

## அதற்கும் மேலான பொருள் விளக்கம்

எல்லா உலகங்களுக்கும் ஆதாரமாகவும், எப்பொழுதும் அவற்றைக் காப்பவராகவும், ஜ்ஞாநங்களுக்கும் ஆதாரமாகவும், அரக்கர்கள் அஸுரர்கள் இவர்களுக்குக் காட்டுத் தீ போன்றவரும், எல்லா உலகங்களையும் தூய்மைப் படுத்துபவரும், அளவிட முடியாதவரும், அநாதியானவரும் ஆகிய பகவான் பரமாத்மா வராஹ உருவத்தைத் தரித்தார். அதனால் அவரே மிகவும் மேலானவர் என்று

சொல்லப்படுகிறார். இப்பொழுது நான் சொன்னது கோடி காட்டியதான விளக்கம். மேறு மந்த்ரங்களுக்கும் இவ்வாறே பொருள் கூற வேண்டும். இதே வழியில் மற்ற மந்த்ரங்களின் விளக்கத்தையும், ஸூக்ஷ்ம பரார்த்தங்களேயும் நீர் விளக்கிக் கொள்ளவும்.

### சுருக்கமாக ஸுதர்ஶநத்தின் பொருள் விளக்கம்

ஸுதர்ஶநத்தின் செயல்பாடு பற்றி மேலும் சுருக்கமாகச் சொல்கிறேன், கேளும். கண்களே மூடியிருந்தாலும், திறந்திருந்தாலும், சென்றாலும், அசைவற்றிருந்தாலும், தேவலோகத்தில் இருந்தாலும், ப்ரக்ருதி ஸம்பந்தத்துடன் இங்கு இருந்தாலும், ஸூக்ஷ்மமாக இருந்தாலும், பெரிய உருவத்தில் இருந்தாலும், குட்டையாய் இருப்பதும், நீளமாக இருப்பதும், வேலேக்காரர்களாய் இருப்பதும் ஆட்சி செய்பவர்களாக இருப்பதும், அறிவுடனும் அறிவு இல்லாமல் இருப்பதும், இன்பமானாலும் துன்பமானாலும் இவ்வாறாக இரட்டை இரட்டையாக எந்த எந்தப் பொருள்கள் படைக்கப்பட்டுள்ளனவோ, இவை எல்லாம் **ஸுதர்ஶநத்தி**னுடைய செயல்பாடு என்று தெரிந்து கொள்ளவும்.

### இனி ஸம்ஹிதையின் பொருள் சுருக்கம்

பகவான் (விஷ்ணு) உருவத்தைக் கொண்டும், குணங்களாலும் பெருமைகளாலும் சுருக்கமாகச் சொல்லப்பட்டார். அவருடைய **ஶக்தி** என்பது **தத் தர்ம தர்மிணீ** (எல்லா வகையிலும் அவருக்கு ஏற்றவர்) என்று விளக்கியிருக்கிறேன். அவளுடைய (ஶக்தியினுடைய) மிகவும் மலர்ந்த திருக்கண்களின் கடாக்ஷமே இந்த உலகங்களுக்கு ஏற்படும் பெருமை- ஆநந்தம் என்று நீர் கருத வேண்டும் என்றும் சொன்னேன். அதே மஹாலக்ஷ்மிக்கு ஶுத்தமான உருவமென்றும், ஶுத்தமல்லாத உருவமென்றும் இருவகைத் தோற்றம் (வெளிப்பாடு) விளக்கி இருக்கிறேன். இந்த **மஹாலக்ஷ்மி** பற்றியும் உள்ளபடி விளக்கி இருக்கிறேன்.

உபாஸிப்பவராக இருப்பவரும், **விஷ்ணு**வின் ஸங்கல்ப வடிவத்தில் உள்ளவரும், **ஸுதர்ஶநன்** என்ற மற்ெருரு பெயருடன் விளங்குகிருர் என்று சொன்னேன். எல்லா இடங்களிலும், எல்லா காலம் முதலியவற்றிலும் **ஸுதர்ஶநம்** ஊடுருவி இருத்தலைப் பற்றி உள்ளபடி விளக்கினேன். ப்ராணனுடைய செயல், பலம், தேஜஸ், மனத்தினுடைய செயல், புகழ் இவையெல்லாம் விஷ்ணுவின் ஸங்கல்பமே. அந்த பகவானின் தங்கு தடையற்ற யோகமும், யோக ஸ்வரூபமும், பிறருக்கு யோகத்தை அருள்பவராக இருக்கிருர். இப்படிப்பட்ட புகழ் மிகுந்த திருநாமங்களால் ஒவ்வொரு அக்ஷரத்திலும் ஆழ்ந்து சிந்தித்த பெரியோர்களால் ஒவ்வொரு ஶாஸ்த்ரத்திலும் மஹாவிஷ்ணுவின் **க்ரியா ஶக்தி** சொல்லப்பட்டுள்ளது. அந்த விஷ்ணுவின் க்ரியா ஶக்தியின் காரணமாக இருக்கும் நிலையும், ஆதாரமாக இருக்கும் நிலையும் ப்ரமாண (authority) மாக இருக்கும் நிலையும் அதற்குப் பொருளாக இருக்கும் நிலையும், அந்தந்த கார்யங்களைச் செய்யத் தகுதி உடையவர்களாக இருக்கும் நிலையும், வெளிப்படையாகத் தெரியாத உருவத்துடன் விதியின் கட்டளையாக இருக்கும் நிலையும், நடுத்தரமான நிலையும், மந்த்ரம் யந்த்ரம் இரண்டுமாக இருக்கும் நிலையும், அஸ்த்ரங்கள் ஶஸ்த்ரங்கள் இவைகளின் ஸ்வரூபத்தில் இருக்கும் ஒளிமிக்க நிலையும், உத்தமமான **ஸுதர்ஶநத்**தின் மற்ற மற்ற உருவங்களும் மிகப் பெரிய விஶ்வரூப நிலையும், அரசர்களுக்கு ஏற்படும் எல்லா வெற்றிகளும், பூமியிலும் ஆகாயத்திலும் ஏற்படும் வெற்றிகளும், அனைத்து யோக முறைகளும், **ஆத்ம ஸமர்பணம்** என்கிற யோக முறையும், பலவகைத் தொல்லைகளுக்கு ஶாந்தி முறையும் ஸம்பந்தமான பற்பல கட்டுப்பாடுகளும், ப்ரஹ்மாஸ்த்ரம் முதலியவற்றின் ஸ்ரூபமும், அவற்றுக்குத் தக்க மந்த்ரங்களின் முறையும், மஹாபிஷேகம் செய்யும் முறையும், அஸ்த்ரங்கள் ஸம்பந்தமான யோக முறையும், **த்வயம்** முதலிய மந்த்ர யோகங்களும் அவற்றுடன் ஸம்பந்தப்பட்ட சரித்ரங்களும், உத்தமமான மந்த்ரங்களின் **ஸ்தூல, ஸுக்ஷ்ம,** பர என்கிற பொருள்களும் இவ்வாறாக நாரத முநிவரே ! எல்லா

விஷயங்களும் உமக்கு விளக்கப்பட்டன. இந்தத் தத்வங்களை மனதில் பதிய வைத்துக் கொண்டு ஶாந்தியுடனும், ரோகங்களற்றவராகவும் இருப்பீராக. நாரத மஹர்ஷியே! உம் மனதிலிருந்த ஸந்தேஹங்கள் அனைத்தும் தீர்க்கப்பட்டன. **ஸுதர்ஶந** பகவானின் ஸகலச் செயல்பாடுகளும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளக்கப்பட்டன. கண்ணாடி போன்ற விளக்கங்களாலும் எல்லா குணங்களாலும், அனைத்து மஹிமைகளாலும் பல ஶாஸ்த்ரங்களைத் தன்னுள் கொண்டிருப்பதாக இந்த **ஸம்ஹிதை** சொல்லப்பட்டது.

## இந்த ஸம்ஹிதையின் பொருள்களைத் தெரிவிக்கத் தகுதியற்ற மக்களைப் பற்றி விவரம்

**பாஞ்சராத்ர** ஆகமத்தைத் தன்னுள் அடக்கியதும் **ஸாங்க்ய யோகம்** முதலியவற்றுடன் கூடியதாயும் உள்ள இந்த **ஸம்ஹிதை** மிகவும் ரஹஸ்யமானது. மிகவும் உத்தமமானது. **வாஸுதேவனி**டம் பக்தி இல்லாதவனுக்கு ஒரு போதும் இதை நீர் தெரிவிக்கக் கூடாது. நாஸ்திகனுக்கும், ஶாஸ்த்ரக் கட்டுப்பாடுகளை மீறுபவனுக்கும், நன்றி கெட்டவனுக்கும், பொய் பேசுபவனுக்கும், வேதாத்யயநம் யாகங்கள் செய்யாதவனுக்கும், தெய்வத்தையும் ப்ராம்மணர்களை நிந்திப்பவர்களுக்கும், ப்ரஹ்மசர்ய வ்ரதத்திலிருந்து தவறியவனுக்கும், ஐந்துவகை யஜ்ஞங்கள் செய்யாதவனுக்கும், வேதங்களைத் தூற்றுபவனுக்கும், மந்த்ரங்களைக் கைவிட்ட ப்ராஹ்மணனுக்கும் நீர் இதைச் சொல்லக் கூடாது.

## தகுதியுள்ளவர்களின் பட்டியல்

**வேதம்** என்கிற வித்யையை குருகுலவாஸம் செய்து, கற்று, அநுமதி பெற்றவனும், எல்லா ஶாஸ்த்ரங்களும் கற்றவனும், க்ருஹஸ்தனாக உள்ளவனும், ப்ரம்மசாரியும், நன்முக ஆசார்யனிடத்திலும், வேத பாடங்களிலும் நல்ல முறையில் ஈடுபட்டவனும், காட்டிலிருந்து கொண்டு **வாநப்ரஸ்தம்** என்கிற மூன்றாவது ஆஶ்ரமத்தை நடத்தி வருபவனும் தத்வங்களை எல்லாம் அறிந்தவர்களுள் மிகவும்

சிறந்த ஸந்யாஸியாக இருப்பவனும், பகவான் **விஷ்ணு**விடம் மநோ-வாக்-காயங்களால் பக்தி செய்பவனும், **பாஞ்சராத்ர**த்தில் சொல்லப்பட்ட அநுஷ்டாநங்களை ப்ரீதியுடன் திநமும் செய்பவனும், வேதத்தில் எப்பொழுதும் ஆழ்ந்த அறிவுடையவனும் ஆகியவனுக்கு ஸகல உபநிஷத்தின் பொருள்களை விளக்குகிற இது சொல்லத்தகும்.

**மங்கள ஶ்லோகம் செய்யும் போக்கில் இந்த க்ரந்தத்தில் சொல்லப்பட்ட விஷயங்களை மீண்டும் கூறி இந்த ஶாஸ்த்ரத்தை நிறைவு செய்கிறார்**

அனைத்து உலகங்களையும் படைத்தும், காத்தும் விழுங்கியும் செயல்படும் **ஸுதர்ஶநர்** என்கிற திருநாமம் உடைய **க்ரியா ஶக்தி**க்கு நமஸ்காரம்.

***நாரதர் :-*** அஞ்ஞாநம் என்கிற இருளைப் போக்குவதற்கு ஸூர்யன் போலிருப்பரும், ப்ராணிகளுக்கு நன்மையைச் செய்பவரும், ஆதிகாரணபூதரும், ஶாந்தியே வடிவமாக உள்ளவருமான **தேஜஸ்ஸு**க்கு **(விஷ்ணு**வுக்கு) நமஸ்காரம்.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ரரஹஸ்யம்
**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் புருஷஸூக்த,**
**ஸ்ரீஸூக்த, வராஹமந்த்ர** விளக்கம் என்கிற
59வது அத்யாயம் முற்றிற்று.



ஶாஸ்த்ரத்தின் பெருமை விளக்கம் என்கிற

## 60வது அத்யாயம்

த்யாதம் ஸக்ருத் பவாநேக கோட்யகௌகம் ஹரத்யரம் ।
ஸுதர்ஶநஸ்ய தத் திவ்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி ॥

**பரத்வாஜரை நோக்கி துர்வாஸர் ஶாஸ்த்ரத்தில் சொன்ன விஷயத்தைத் திருப்பிச் சொல்லும் வகையில் நமக்குத் தேவையான எல்லா விஷயங்களேயும் இந்த ஶாஸ்த்ரம் சொல்லுகிறது என்று இதன் மஹிமையைக் கூறுகிறுர்**

**துர்வாஸர் :—** இவ்வாருக நாரதரால் கேட்கப்பட்ட **ஶங்கரன்** அவருக்கு ஆதி காலத்தில் எல்லா அறிவுகளிலும் மிகச் சிறந்த **பகவானைப்** பற்றிய ஜ்ஞாநம் என்கிற ரஹஸ்யத்தைச் சொன்னார். இதில் ஸகல ப்ராணிகளுக்கும் படைத்தல், காத்தல், அழித்தல் இவற்றைச் செய்பவரான **விஷ்ணு,** அவருடைய உருவம், குணங்கள், பெருமை இவற்றுடன் விளக்கப்படுகிறுர்.

### முக்யமாக பகவானின் ஶக்தியாக லக்ஷ்மியின் உருவ விளக்கம்

மேலும் இந்த நூலில் **ஶக்தி**யென்று எல்லோராலும் பேசப்படுபவளும் **விஷ்ணு**வின் செயல்களுக்கெல்லாம் ஏற்ற செயல்களேச் செய்து வருபவளும், சந்த்ரனுக்கு நிலவு போல் **பாவ அபாவப்** பொருள்களில் ஊடுருவி நிற்பவளும், அவருடன் இணேந்து இருப்பவளும், தனித்த உருவம் கொண்டவளாக இருப்பவளும், **ஜ்ஞாநம் ஆநந்தம்** இவற்றை ஸ்வரூபமாக உள்ளவளும், **மஹா வைபவம்** கொண்ட திருமேனியுடையவளும், விகாரமற்றவளும் (ஒரு போதும் திருமேனியில் சிதைவு இல்லாதவளும்) எந்தவிதக் கர்ம வாஸனேயற்றவளும், தாமரை இலேயில் நீர் போல் எதிலும் பற்றில்லாமலும், பற்றுள்ளவள் போல் தோற்றம் அளிப்பவளும், **ஸத்** என்கிற பெயர் உள்ளவளும், எல்லாம் நிறைந்தவளும், நிறைவு அற்றவளும், நேர்மை தருபவளும், பகவானே ஒரு போதும் விட்டுப் பிரியாதவளும், ஸ்ருஷ்டியில்

பொருள்களில் வேறுபாட்டைச் செய்பவளும், ஆறுவகை ஸித்தாந்தங்களில் உள்ள பொருள்களின் வடிவத்தில் உள்ளவளும், 6 மார்கங்களில் உள்ள பொருள்களிலிருந்து மாறுபட்டவள் **(குறிப்பு :-** ஆறுவகை உருவங்கள் - (i) **வார்ண: பரா, பஶ்யந்தீ, மத்யமா வைகரீ** என்கிற நான்குவகை உருவங்களுடன் முதலில் தோன்றுகிருள். (ii) **கலாமய: - ஜ்ஞாநம், ஶக்தி, பலம், தேஜஸ், ஐஶ்வர்யம், வீர்யம்** இந்தக் காரணங்களுடன் நிரம்பியவளாகத் தோன்றுகிருள். (iii) **தாத்விக:- வாஸுதேவ, ஸங்கர்ஷண, ப்ரத்யும்ந, அநிருத்த** என்கிற நான்கு வ்யூஹங்களிலும் இணைந்திருக்கிறாள், (iv) **மாந்த்ரிக:-** முதலில் சொன்ன **வார்ணிக** என்கிற மார்கத்தின் மூலம் மந்த்ர உருவத்திலிருக்கிருள். (v) **பாதிக:** உபாஸகர்கள் த்யாநம் செய்ய ஏற்றவாறு சிற்சில உருவங்களை எடுத்துக் கொள்கிருள். (vi) **பௌவந:-** உலகத்திலிருக்கும் **சித் அசித்** எல்லாப் பொருள்களிலும் உள்ளே புகுந்து அந்தர்யாமியாகவும் இருக்கிருள். இவையே ஆறு உருவங்கள்). கண்களை இமைத்தலும் இமை மூடுவது போன்றவளும், **பாவ, அபாவப்** பொருள்களில் ஊடுருவி இருப்பவளும் - இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த **மஹாலக்ஷ்மி** இந்த நூலில் விளக்கப்படுகிருள். உலகத்தின் வடிவத்தில் உள்ள **விஷ்ணு**வின் ஶக்தி எனப்படுபவள். **ஶுத்த ஸ்ருஷ்டியிலும், ஶுத்தமற்ற ஸ்ருஷ்டியிலும் (ப்ரக்ருதியுடன் கூடியதும்)** ஊடுருவி நிற்பவள். எல்லோரும் ப்ரார்த்திக்கும் **அஷ்டைஶ்வர்யா** என்று விளக்கப்படுகிருள்.

## பகவானின் க்ரியா ஶக்தியாக உள்ள ஸுதர்ஶநத்தின் ஸ்வரூப விளக்கம்

எல்லோராலும் பற்பல வகையில் ப்ரார்த்திக்கப்படுபவளும், **ஸுதர்ஶநம்** என்கிற மற்றொரு பெயருடன் கூடியவளும், உலகங்களைப் படைக்கும் பகவானுடைய ஸங்கல்ப வடிவமான தாமரை போன்றவளான லக்ஷ்மி இங்கு விளக்கப்படுகிருள். இதே நூலில் **க்ரியா ஶக்தியான மஹாலக்ஷ்மி**யே உலகங்களுக்குக் காரணம் என்று விளக்கப்பட்டுள்ளது. உருவத்துடனும்,

உருவமற்றவளாகவும் இருப்பாள். ஶுத்தமான ஸ்ருஷ்டியிலும், ஶுத்தமற்ற ஸ்ருஷ்டியிலும் இருப்பாள். **க்ரியா** உருவத்திலிருக்கும் விஷ்ணு ஶக்தியின் எல்லா விஷயங்களும் இந்நூலில் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளன. மேலும் இந்நூலில் மூன்று வகைப்பட்ட ப்ரமாண வடிவங்கள் சொல்லப்பட்டன. பலவகை அஸ்த்ரங்களும், பலவகை ஶஸ்த்ரங்களும், பலவகை ஶாஸ்த்ரங்களும் இவைகளின் தனித் தன்மையும் விளக்கப்பட்டன. மேலும் இதே **ஶக்தி** நான்கு வகை புருஷார்த்தங்களின் உருவமும், அவற்றைப் பெறுவதற்குக் தகுதியானவர்கள் பற்றியும், பேசப்பட்டன. உலகங்களைக் காக்கும் நிலையும், மந்த்ரங்கள், யந்த்ரங்கள் இவற்றின் விரிவுடன் பொருள்களின் தன்மையும் விளக்கப்பட்டுள்ளன. இவ்வாறாக **ஸுதர்ஶநத்**தின் ஸ்வரூபம் இந்த நூலில் சொல்லப்பட்டுள்ளது. பலவகைப்பட்ட திருமேனிகளோடு விளங்கும் **சதுர்வ்யூஹம்** போன்ற பல வ்யூஹங்களும் ஸுதர்ஶநத்தின் மிகப் பெருமை வாய்ந்த ஸ்வரூபமும் இந்த நூலில் விளக்கப்பட்டுள்ளன. உலகத்தைக் காத்தல், அழித்தல், படைத்தல் என்கிற மிக மிகப் பெருமை வாய்ந்த ஸுதர்ஶநத்தின் அங்கத்திலிருந்து பிறந்த அஸ்த்ரங்களின் கூட்டம் முழுமையாக இங்கு விளக்கப்பட்டது. இந்த நூலில் மந்த்ரங்களின் ஸ்வரூபம், அவற்றில் உள்ள சொற்கள், செயல்பாடு இவற்றுடன் மிகவும் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளன.

### ஸாங்க்யமதம், யோகமதம் முதலிய ஸித்தாந்தங்களை விளக்கும் பெருமையைக் கூறுகிறார்

இந்த நூலில் ஸாங்க்யமதமும், யோகமதமும் முழுமையாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. பலவகை மந்த்ரங்களின் செயல்பாடுகளும், மந்த்ரங்களும், இவைகளின் செயல் முறைகளும் பல சரித்ரங்களை விரிவாகச் சொல்லி, பல வகை ஸித்திகள் பற்றியும் இங்கு பேசப்பட்டுள்ளது. எல்லாச் செயல்களிலும் மிகச் சிறந்த **ஆத்ம ஸமர்பணம்** என்கிற முறையும் இங்கு விளக்கப்பட்டுள்ளது. பலவகையான

மந்த்ரங்களுடைய பொருள்களும் **ஸ்தூலம், ஸூக்ஷ்மம், பரம்** என்கிற வகையில் விரிவாக, விளக்கமாக விஷ்ணுவின் ஸங்கல்பத்தினால் உகந்தவைகளாகவும் இந்த நூலில் விளக்கப்பட்டுள்ளன.

## இந்த ஶாஸ்த்ரத்தைக் கற்கத் தகுதியுள்ளவர்கள் பற்றி

**அஹிர்புத்ந்ய**ரால் சொல்லப்பட்ட இந்த **ஸம்ஹிதை** புலன்களின் அடக்கமுள்ளவனாலும், மன அடக்கம் அடக்கமுள்ளவனாலும், குருவினிடம் முறைப்படி ப்ரார்த்தித்து விநயத்துடன் இருப்பவனால் கற்கத் தகும்.

## தகுதியற்றவர்கள் யார்

வேதங்கள் கற்காதவனுக்கும், ஸம்ஸ்க்ருதத்தில் அடிப்படை ஜ்ஞாநம் இல்லாதவனுக்கும், அதிகாலையில் ஸ்நாநம் செய்யாதவனுக்கும், பிடிவாதம் போன்ற துர்குணம் உடையவனுக்கும், குலத்தினாலோ வேறு வகையாலோ கர்வம் கொண்டவர்களுக்கும், மனதில் தூய்மை இல்லாமல் பெருமைக்காகவும் வேறு சில தந்த்ரங்களுக்காகவும் கற்க வருபவனுக்கும், குருவின் அருகில் இருந்து ஸேவை செய்யாதவனுக்கும், ஒரு வருடமாவது முழுமையாக இருந்து கேட்காதவனுக்கும், நன்றி கெட்டவனுக்கும், பொறாமை என்கிற தீயகுணம் உள்ளவனுக்கும் ஒரு போதும் இந்நூல் கற்பிக்கலாகாது.

## கற்கத் தகுதியுள்ளவர்கள்

நல்ல குலத்தில் பிறந்தவனுக்கும், ஶிஷ்யனுக்கு வேண்டிய நற்குணங்கள் நிரம்பியவனுக்கும், தேவைப்படுமானால் தன் பொருள்கள் அனைத்தையும் உயிரையும் கூடக் கொடுக்கத் தயாராக இருப்பவனுக்கும், ரஹஸ்யங்களை ஒருபோதும் வெளிப்படுத்தாமல் இருப்பவனுக்கும், ஶாஸ்த்ரங்களின் ஸித்தாந்தத்தைத் திறமையுடன் நிலைநாட்டும் ஶக்தி உடையவனுக்கும், **ஊஹம், அபோஹம்** இவற்றில் தேர்ச்சி உள்ளவனுக்கும் (ஶாஸ்த்ரங்களில் சில விஷயங்கள் சொல்லப்படாமல் இருக்கும். அவற்றை வேறு இடங்களிலிருந்து எடுத்துக்

கொள்ள வேண்டும். இது **ஊஹம்** எனப்படும் (अनुक्तं अन्यतो ग्राह्यम्). சொல்லப்பட்ட விஷயங்களைக் காலதேஶங்களை அநுஸரித்து விலக்குவது **அபோஹம்** எனப்படும்). மந்த்ரங்களில் தேர்ச்சி பெற்றவர்களால் நன்கு **ஜாதகர்மா, நாமகரணம், அந்ந ப்ராஶநம், சௌளம், உபநயநம், வேதாத்யயநம்** இந்த ஸம்ஸ்காரங்கள் பெற்றவனுக்கும், மேலும் **ப்ராஹ்மணன், க்ஷத்ரியன், வைஶ்யன்** என்கிற மூன்று வர்ணங்களைச் சேர்ந்தவருக்கும், எப்பொழுதும் வேதாந்த விசாரத்திலேயே ஈடுபட்டவருக்கும் இந்த **ஸம்ஹிதை** உபதேஶிக்கப்படலாம்.

### ஶாஸ்த்ரத்தின் மஹிமைபற்றி நிறைவு

இந்த உத்தமமான **ஸம்ஹிதை** *60* அத்யாயங்கள் கொண்டதாகும். ஒரு மனிதன் இதைக் கற்றறிந்தால் எல்லாம் தெரிந்தவன் என்கிற புகழ் பெறமுடியம். இதற்கு முன்பு இருந்த மேலான ஸம்ஹிதையும் *(240* அத்யாயங்கள்) நடுவில் வந்த ஸம்ஹிதையும் *(120* அத்யாயங்கள்) அவற்றில் உள்ள விஷயங்கள் அனைத்தும் இதில் சுருக்கமாகக் காட்டப்பட்டுள்ளன.

### நூலின் நிறைவு

**அஹிர்புத்ந்ய**ருக்கும் மிகுந்த காந்தியுடைய **நாரத**ருக்கும் **விஷ்ணு**வின் ஸங்கல்பத்தின் உருவம் பெற்ற **ஸுதர்ஶந**ருக்கும் நமஸ்காரம்.

இவ்வாறு பாஞ்சராத்ரம் தந்த்ரரஹஸ்யம்

**அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை**யில் ஶாஸ்த்ரத்தின்

வைபவம் பற்றி 60வது அத்யாயம்

முற்றிற்று.

இந்த ஸம்ஹிதையில் உள்ள ஶ்லோகங்கள்
ஆரம்பம் முதல் மொத்த எண் - 3,880

★ ★ ★

## நிறைவுப் பகுதி

ஸ்ரீ வ்யாஸருடைய தகப்பனாரான ஸ்ரீ பராஶரர் **ஸ்ரீ விஷ்ணு புராணம்** எழுதினார். கடைசியாக உலகத்தாருக்கு நன்மையைக் கருதி ஒரு ஶ்லோகத்தினால் மங்களாஶாஸநம் செய்கிறார். அது பின் வருமாறு :-

इति विविधमजस्य यस्य रूपं
प्रकृतिपरात्ममयं सनातनस्य ।
प्रदिशतु भगवान् अशेषपुंसां
हरिरपजन्मजरादिकां स सिद्धिम् ।।

இங்கு எம்பெருமானை **அஜன்** என்று இவர் குறிப்பிடுகிறார். இங்கு பகவான் கீதையில் சொன்ன விஷயத்தை நாம் நினைக்க வேண்டும். **அஜோபி ஸந் அவ்யயாத்மா பூதாநாம் ஈஶ்வரோபி ஸந் । ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாமி ஆத்மமாயயா** ।।(4.6) என்றார். அர்ஜுநன் கேட்ட கேள்விக்குப் பதில் கூறும் வகையில் இந்த ஶ்லோகம் அமைந்துள்ளது. **அஜன்** என்றால் பிறப்பில்லாதவன் என்பது பொருள். ஆயினும் பகவான் இவ்வுலகில் வந்து பிறக்கிறான். **அஜாயமாநோ பஹுதா விஜாயதே** என்கிற வேத வாக்யத்தை ஒத்திருக்கிறது இந்த கீதா வாக்யம். 'நான் பிறப்பில்லாதவன் தான்- ஆயினும் **பரித்ராணாய ஸாதூநாம்** என்கிறபடி **ஸாதுக்களைக் காப்பதற்காகவும், பாபிகளை அழிப்பதற்காகவும், தர்மத்தை நிலை நாட்டவும், நான் ஒவ்வொரு யுகத்திலும் பூமியில் வந்து பிறக்கிறேன்'** என்று கண்ணன் கூறிய விஷயத்தையே அவர் பிறப்பு எந்த வகையில் அமைகிறது என்பதற்கு விளக்கமாக இந்த ஶ்லோகம் **அஜோபி ஸந்** என்று அமைந்துள்ளது. **''நான் பிறப்பில்லாதவன். என்னுடைய உருவத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படாது. ஆயினும் ப்ரக்ருதியைத் துணையாகக் கொண்டு என் ஸாமர்த்யம் என்கிற விசித்ரமான ஶக்தியால் பூமியில் வந்து பிறக்கிறேன்''** என்றார். இது இந்த **விஷ்ணு புராண** ஶ்லோகத்தில் விளக்கப்படுகிறது.

புராணங்களுக்கு ஒரு லக்ஷணம் உண்டு-

**ஸர்கஶ்ச ப்ரதிஸர்கஶ்ச வம்ஶோ மந்வந்தராணி ச ।**
**வம்ஶாநுசரிதம் சேதி புராணம் பஞ்சலக்ஷணம் ॥**

என்றார்கள்.

எந்தப் புராணமானாலும் அதில் (1) முதல் ஸ்ருஷ்டி சொல்லப்பட வேண்டும். (2) பிறகு **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** சொன்னபடி மாநவ மாநவ தம்பதிகள் தொடங்கி ஶுத்தமான ஸ்ருஷ்டி சொல்லப்பட வேண்டும். (3) பல அரசர்களுடைய வம்ஶ பரம்பரை சொல்லப்பட வேண்டும். (4) மந்வந்தரம் என்பது பல யுகங்கள் கொண்ட கால கட்டம். இதுவும் சொல்லப்பட வேண்டும். (5) முன் சொன்ன வம்ஶத்தின் ஸந்ததிகள் பற்றிச் சொல்லப்பட வேண்டும்.

இந்த வகையில் ஸ்ரீ பராஶரர் ப்ரளயத்துக்குப் பின் பகவானுடைய ஸங்கல்பத்தினால் வாஸுதேவ வ்யூஹம் அமைந்து பஞ்ச பூதங்கள் மற்றுமுள்ள ஸூர்யன் சந்த்ரன் முதலியவை எல்லாம் படைக்கப்பட்டன. இந்த எல்லாவற்றையும் எம்பெருமான் ஊடுருவி நின்று ஊக்குவிக்கிறான் என்று சொன்னதால் **இதி விவிதம் அஜஸ்ய யஸ்ய ரூபம்** என்கிறது. எந்த ஸநாதநமான பகவான் இந்த அனைத்துப் பொருள்கள் வடிவத்தில் **ப்ரக்ருதியும், பரனும், ஜீவாத்மாவும்** அடங்கியதாக இந்த உலகம் இருக்கிறது என்று சொன்னாரோ, அப்படிப்பட்ட பகவான் ஹரி **'அனைத்து ஜீவன்களுக்கும் ஓய்வு, மூப்பு, பிறப்பு, இறப்பு பிணி வீயுமாறு செய்வான் திருவேங்கடத்தான்'** என்று ஆழ்வார் கூறியது போலப் பிறப்பு, கிழத்தனம், நோய், மரணம் இவை இல்லாத பரிபூர்ண ப்ரஹ்மாநுபவம் என்கிற நிறைந்த செல்வத்தைத் தர வேண்டும் என்று பராஶரர் ப்ரார்த்திக்கிறார்.

ஆக ஸ்ரீ ஸுதர்ஶநன் வடிவில் விஷ்ணுவும் மஹாலக்ஷ்மியும் எல்லாப் பொருள்களிலும் நிறைந்திருந்து எல்லா ஜீவராஶிகளையும் நடத்திச் செல்கிறார் என்று இந்த **அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில்** சொல்லப்பட்ட விஷயம்

ஸ்ரீ பராஶரராலும் கூறப்படுகிறது. நமக்கெல்லாம் ஆத்ம ஸமர்பணம் என்கிற ஶரணாகதி மூலமாக ஶாஶ்வதமான ஆநந்தம் கிடைக்க வேண்டும் என்பதை நானும் ப்ரார்த்தித்து இந்த மொழி பெயர்ப்பை நிறைவு செய்கிறேன்.

|| शुभमस्तु || ஶுபமஸ்து

அவாவறச்சூழ் அரியை அயனை அரனை அலற்றி
அவாவற்று வீடு பெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன
அவாவிலந்தாதிகளால் இவையாயிரமும் முடிந்த
அவாவிலந்தாதி இப்பத்து அறிந்தார் பிறந்தார் உயர்ந்தே.

ஸ்ரீ நம்மாழ்வார் திருவடிகளே ஶரணம்

